உ

செந்திலாண்டவன் துணை

# திருஞானசம்பந்த சுவாமிகள்

# தேவாரம்

[ தலமுறை ]



ஸ்ரீ காசி மடம் :: திருப்பனந்தாள்

1950

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடு

உ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிச் செய்த

# தேவாரப் பதிகங்கள்

[தல முறை]

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம்
20-வது பட்டத்தில் எழுந்தருளியிருக்கும்
**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்**
அவர்களுடைய திருவுள்ளப்படி

திருச்சிராப்பள்ளி, பொன்னையா உயர்நிலைப்பள்ளி
தலைமைத் தமிழாசிரியர்
**வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்**
எழுதிய குறிப்புரை முதலியவற்றுடன்
வெளியிடப்பெற்றது

[விரோதி ஆண்டு மாசித் திங்கள்]

  [பிப்ரவரி 1950

## ஞானத் தமிழ்

பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனும் தோல்தோணி கண்டீர்—நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்.

—நம்பியாண்டார் நம்பி.

# முன்னுரை

சொற்கோவுந் தோணிபுரத்தோன்றலுநஞ் சுந்தரனுஞ்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீ(று)எங்கே? மாமறைநூல் தான்எங்கே?
எந்தைபிரான் ஐந்தெழுத்(து) எங்கே?

—சிவானந்தமாலை.

இந் நிலவுலகிலுள்ள பலவகைச் சமயங்களில் சைவ சமயமே மிகப் பழமையும் பெருமையும் உடையதாகும். இச் சைவ சமயத்தின் உயர் நிலையை விளக்குவன சைவத் திருமுறைகளாம். மக்கள், சைவ சமயத்தின் மேன்மையை யுணர்ந்து சிவநெறியாம் செந்நெறியில் ஒழுக வேண்டுமானால், அவர்களிடையே சைவத் திருமுறைகள் நன்கு பரவி ஒளி வீசவேண்டும். இவ்வாறு பரவ, சைவத் திருமுறைகளை மக்கள் எளிதில் பெறும்படி செய்வது சமயத் துறையில் தலைமை பூண்டாரது தலைமையான கடமையாம். இவ் வகையில் ஸ்ரீ காசிமடம் செய்யும் தொண்டு சைவ உலகம் நன்கறிந்ததும் மிகவும் போற்றற்குரியதுமாகும்.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டு. அவற்றுள், திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம் 1, 2, 3-ஆம் திருமுறைகளாக அடங்கியுள்ளது. திருஞானசம்பந்தர் பிள்ளைப் பருவத்திலேயே ஞானப் பாலுண்டு இறைவன் திருவருள் பெற்ற பெரியாராவர். இவருடைய தேவாரம் பல பதிப்புக்கள் பெற்றுப் பல்லாயிரம் மக்களிடையே பரவியுள்ளது; ஆயினும், சைவ நன் மக்கள் மேலும் எளிதில் பெற்றுப் பயனடையுமாறு இவ் வெளியீடு வெளிவருகிறது.

சைவத்தையும் தமிழையும் தம் இரு கண்கள்போலக் கருதி வளர்த்து வருபவர்களும், மாரிபோல வரையா வள்ளன்மையுடன் விளங்குபவர்களும், திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, பல்லாண்டு முதலிய திருமுறைகள் வெளிவந்து மக்களிடையே பரவ, திருவுளங் கொண்டவர்களும், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் இருபதாம் பட்டத்தில் அருளாட்சியோடு எழுந்தருளியிருப்பவர்களுமாகிய

ஸ்ரீ - ல - ஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருவுள்ளக் கருத்துக் கிணங்க இத் திருஞானசம்பந்தர் தேவாரம் வெளிவரலாயிற்று.

இத் தேவாரப் பதிப்பு, தலமுறைப்படி அமைந்துள்ளது; இன்றியமையாத குறிப்புரை, பாடபேதம் முதலியவற்றுடன் கூடியது; சிவத்தல யாத்திரை செய்வோர் தலங்கள் தோறும் சென்று இறைவனை வாயாரப் புகழ்ந்து பாடி வணங்குதற்கு ஏற்றவகையில் அமைந்திருக்கிறது; திருஞானசம்பந்தரின் வரலாற்றுக் குறிப்புடன் மிளிர்கின்றது.

இத் தேவாரப் பதிப்பு நன் முறையில் வெளியிடுவதற் கேற்ற வகையில் தம்மிடமிருந்த அருங் குறிப்புக்களைக் கொடுத்து உதவிய திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை மௌன மடம் கட்டளை விசாரணை வித்துவான் ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகள் அவர்கட்கும், திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரித் தலைமை ஆசிரியர் உயர்திரு. வித்துவான் கே. எம். வேங்கடராமையா, M.A., B.O.L. அவர்கட்கும், இப் பதிப்பு அச்சாகி வருங்கால் உடனிருந்து ஒப்பு நோக்குதற்கு உதவிபுரிந்த என் உழுவலன்பர் திருச்சி பொன்னையா உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர் வித்துவான் கோ. இரத்தினம் பிள்ளை அவர்கட்கும் என் நன்றி என்றும் உரியதாகும்.

தமிழகம் சிவ நெறியில் சிறப்புற்று விளங்க ஸ்ரீ - ல - ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் செய்து வரும் பல்வகைப் பேரறக் கட்டளைகளுடன் இத் தேவாரத் திருமுறையும் வெளி வந்துலவும் பேரறத்தைச் செய்தருளியது சைவ உலகம் செய்துள்ள பெரும் புண்ணியமேயாகும். இச் சைவ சமயத் தொண்டில் அடியேனை ஒரு பொருளாக மதித்து ஈடுபடுத்திய ஸ்ரீ - ல - ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் பொன்னார் திருவடிகட்கு அடியேன் வணக்கம் எழுமையும் உரியதாகும்.

வரகநகர்
திருச்சிராப்பள்ளி
15—2—'50.

இங்ஙனம்
தி. பட்டுச்சாமி ஓதுவார்

செந்திலாண்டவன் துணை

# உள்ளுறை

[தலப் பெயர்கள் முன் 'திரு' என்பதைக் கூட்டிக்கொள்க]


| சிவத்தலம் | பக்கம் | சிவத்தலம் | பக்கம் |
|---|---|---|---|
| அகத்தியான் பள்ளி | ... 514 | இடும்பாவனம் | ... 479 |
| அச்சிறுபாக்கம் | ... 671 | இடைச்சுரம் | ... 667 |
| அண்ணாமலை | ... 617 | இடைமருதூர் | ... 290 |
| அதிகை வீரட்டானம் | ... 585 | இந்திரநீலபருப்பதம் | ... 683 |
| அம்பர்ப்பெருந் திருக்கோயில் | ... 353 | இராமனதீச்சுரம் | ... 419 |
| அம்பர் மாகாளம் | ... 355 | இராமேச்சுரம் | ... 550 |
| அரசிலி | ... 675 | இரும்பூளை | ... 461 |
| அரதைப் பெரும்பாழி | ... 463 | இரும்பை மாகாளம் | ... 677 |
| அரிசிற்கரைப் புத்தூர் | ... 399 | இலம்பையங் கோட்டூர் | ... 642 |
| அவளிவணல்லூர் | ... 465 | இன்னம்பர் | ... 194 |
| அழுந்தூர் | ... 312 | ஈங்கோய்மலை | ... 242 |
| அறையணிநல்லூர் | ... 602 | உசாத்தானம் | ... 477 |
| அனேகதங்காவதம் | ... 685 | ஊறல் | ... 640 |
| அன்பிலாலந்துறை | ... 227 | எருக்கத்தம்புலியூர் | ... 581 |
| அன்னியூர் | ... 165 | ஏடகம் | ... 543 |
| ஆக்கூர்த்தான்தோன்றி மாடம் | 329 | ஐயாறு | ... 205 |
| ஆடானை | ... 554 | ஒற்றியூர் | ... 656 |
| ஆப்பனூர் | ... 531 | ஓத்தூர் | ... 633 |
| ஆமாத்தூர் | ... 612 | ஓமாம்புலியூர் | ... 172 |
| ஆரூர் | ... 441 | கச்சியேகம்பம் | ... 621 |
| ஆலங்காடு | ... 647 | கச்சி நெறிக்காரைகாடு | ... 627 |
| ஆலவாய் | ... 521 | கடம்பூர் | ... 179 |
| ஆவடுதுறை | ... 307 | கடவூர் வீரட்டம் | ... 331 |
| ஆவூர்ப்பசுபதீச்சரம் | ... 274 | கடவூர் மயானம் | ... 333 |
| ஆனைக்கா | ... 232 | கடிக்குளம் | ... 481 |
| | | கடைமுடி | ... 157 |
| | | கண்டியூர் வீரட்டம் | ... 255 |

| சிவத்தலம் | பக்கம் |
|---|---|
| கண்ணார் கோயில் | ... 155 |
| கயிலாயம் | ... 688 |
| கரவீரம் | ... 451 |
| கருகாவூர் | ... 267 |
| கருக்குடி | ... 406 |
| கருப்பறியலூர் | ... 166 |
| கருவூரானிலை | ... 575 |
| கலிக்காமூர் | ... 18 |
| கழிப்பாலை | ... 9 |
| கழுக்குன்றம் | ... 669 |
| களர் | ... 472 |
| கள்ளில் | ... 650 |
| கற்குடி | ... 246 |
| காட்டுப்பள்ளி-கீழை | ... 30 |
| காட்டுப்பள்ளி-மேலை | ... 253 |
| காவிரிப்பூம்பட்டினத்துத் திருப்பல்லவனீச்சரம் | ... 23 |
| காளத்தி | ... 652 |
| காரையில் | ... 496 |
| கானப்பேர் | ... 556 |
| கானூர் | ... 225 |
| கீழ்வேளூர் | ... 436 |
| குடந்தைக் காரோணம் | ... 285 |
| குடமூக்கு | ... 283 |
| குடவாயில் | ... 454 |
| குரங்கணின் முட்டம் | ... 629 |
| குரங்காடுதுறை-வட | ... 201 |
| குரங்காடுதுறை-தென் | ... 300 |
| குருகாவூர் வெள்ளடை | ... 32 |
| குற்றாலம் | ... 562 |
| குறும்பலா | ... 564 |
| கேதாரம் | ... 687 |
| கேதீச்சுரம் | ... 518 |
| கைச்சினம் | ... 501 |
| கொடிமாடச் செங்குன்றூர் | 571 |
| கொடுங்குன்றம் | ... 545 |
| கொள்ளம்பூதூர் | ... 488 |
| கொள்ளிக்காடு | ... 490 |
| கோகரணம் | ... 679 |
| கோடிகா | ... 183 |
| கோட்டாறு | ... 349 |
| கோட்டூர் | ... 484 |
| கோணமலை | ... 516 |
| கோயில் | ... 1 |
| கோலக்கா | ... 151 |
| கோவலூர் வீரட்டம் | ... 600 |
| கோழம்பம் | ... 305 |
| கோளிலி | ... 503 |
| சக்கரப்பள்ளி | ... 265 |
| சாத்தமங்கை | ... 428 |
| சாய்க்காடு | ... 19 |
| சிக்கல் | ... 434 |
| சிராப்பள்ளி | ... 249 |
| சிவபுரம் | ... 401 |
| சிறுகுடி | ... 366 |
| சிற்றேமம் | ... 475 |
| செங்காட்டங்குடி | ... 421 |
| செம்பொன்பள்ளி | ... 321 |
| சேய்ஞலூர் | ... 188 |
| சேறை | ... 458 |
| சோபுரம் | ... 583 |
| சோற்றுத்துறை | ... 257 |
| தண்டலை நீணெறி | ... 483 |
| தருமபுரம் | ... 338 |
| தலைச்சங்காடு | ... 327 |
| திருந்து தேவன்குடி | ... 190 |
| திலதைப்பதி | ... 362 |
| துருத்தி | ... 310 |
| தூங்கானைமாடம் | ... 579 |
| தெங்கூர் | ... 492 |
| தெளிச்சேரி | ... 336 |
| தென்குடித்திட்டை | ... 261 |
| தேவூர் | ... 437 |
| நணா | ... 568 |
| நல்லம் | ... 304 |

| சிவத்தலம் | பக்கம் |
|---|---|
| நல்லூர் | ... 269 |
| நல்லூர்ப்பெருமணம் | ... 12 |
| நள்ளாறு | ... 341 |
| நறையூர்ச்சித்தீச்சரம் | ... 393 |
| நனிபள்ளி | ... 323 |
| நாகேச்சரம் | ... 287 |
| நாகைக்காரோணம் | ... 430 |
| நாரையூர் | ... 174 |
| நாலூர்மயானம் | ... 459 |
| நின்றியூர் | ... 158 |
| நெடுங்களம் | ... 251 |
| நெய்த்தானம் | ... 214 |
| நெல்லிக்கா | ... 494 |
| நெல்வாயில் | ... 7 |
| நெல்வாயிலரத்துறை | ... 577 |
| நெல்வெண்ணெய் | ... 598 |
| நெல்வேலி | ... 566 |
| பட்டீச்சுரம் | ... 276 |
| பந்தணைநல்லூர் | ... 181 |
| பரங்குன்றம் | ... 541 |
| பராய்த்துறை | ... 244 |
| பருதிநியமம் | ... 467 |
| பருப்பதம் | ... 681 |
| பழனம் | ... 203 |
| பழுவூர் | ... 223 |
| பறியலூர் வீரட்டம் | ... 319 |
| பனந்தாள் | ... 186 |
| பனையூர் | ... 409 |
| பாசூர் | ... 649 |
| பாச்சிலாச்சிராமம் | ... 240 |
| பாண்டிக் கொடுமுடி | ... 573 |
| பாதாளீச்சுரம் | ... 471 |
| பாதிரிப்புலியூர் | ... 608 |
| பாம்புரம் | ... 364 |
| பாற்றுறை | ... 230 |
| பிரமபுரம் | ... 33 |
| வேணுபுரம் | ... 42 |
| புகலி | ... 46 |

| சிவத்தலம் | பக்கம் |
|---|---|
| வெங்குரு | ... 62 |
| தோணிபுரம் | ... 66 |
| பூந்தராய் | ... 70 |
| சிரபுரம் | ... 77 |
| புறவம் | ... 83 |
| சண்பைநகர் | ... 88 |
| சீகாழி | ... 91 |
| கொச்சைவயம் | ... 112 |
| கழுமலம் | ... 117 |
| பல்பெயர்ப்பத்து | ... 128 |
| புகலூர் | ... 413 |
| புகலூர் வர்த்தமானீச்சுரம் | 417 |
| புத்தூர் | ... 546 |
| புள்ளமங்கை | ... 263 |
| புள்ளிருக்குவேளூர் | ... 153 |
| புறம்பயம் | ... 196 |
| புறவார் பனங்காட்டூர் | ... 610 |
| புனவாயில் | ... 548 |
| புன்கூர் | ... 160 |
| பூவணம் | ... 558 |
| பெரும்புலியூர் | ... 216 |
| பெருவேளூர் | ... 452 |
| பேணுபெருந்துறை | ... 391 |
| பைஞ்ஞீலி | ... 238 |
| மங்கலக்குடி | ... 185 |
| மணஞ்சேரி | ... 164 |
| மயிலாடுதுறை | ... 314 |
| மயிலாப்பூர் | ... 661 |
| மயேந்திரப்பள்ளி | ... 14 |
| மருகல் | ... 424 |
| மழபாடி | ... 218 |
| மறைக்காடு | ... 507 |
| மாகறல் | ... 631 |
| மாணிக்குழி | ... 606 |
| மாந்துறை | ... 228 |
| மாற்பேறு | ... 632 |
| மீயச்சூர் | ... 360 |
| முதுகுன்றம் | ... 587 |

| சிவத்தலம் | பக்கம் |
|---|---|
| முல்லைவாயில் (தென்) | ... 15 |
| மூக்கீச்சரம் | ... 248 |
| வக்கரை | ... 673 |
| வடுகூர் | ... 604 |
| வலஞ்சுழி | ... 278 |
| வலம்புரம் | ... 325 |
| வலிதாயம் | ... 658 |
| வலிவலம் | ... 498 |
| வல்லம் | ... 635 |
| வாஞ்சியம் | ... 407 |
| வாய்மூர் | ... 505 |
| வாழ்கொளிபுத்தூர் | ... 168 |
| வான்மியூர் | ... 663 |
| விசயமங்கை | ... 198 |
| வியலூர் | ... 192 |
| விளநகர் | ... 317 |
| விளமர் | ... 449 |
| விற்குடி வீரட்டம் | ... 411 |
| விற்கோலம் | ... 645 |
| வீழிமிழலை | ... 368 |
| வெண்காடு | ... 25 |
| வெண்டுறை | ... 486 |
| வெண்ணியூர் | ... 469 |
| வேட்களம் | ... 5 |
| வேட்டக்குடி | ... 334 |
| வேதிகுடி | ... 259 |
| வேள்விக்குடி | ... 163 |
| வேற்காடு | ... 659 |
| வைகல்-மாடக் கோயில் | ... 302 |
| வைகாவூர் | ... 199 |
| வெள்ளிப்பாட்டு | ... 706 |
| புதிய பதிகம் | ... 707 |

1. சோழநாட்டுத் தலங்கள்
   காவிரிக்கு வடகரை ... 1
   காவிரிக்குத் தென்கரை ... 224
2. ஈழநாட்டுத் தலங்கள் ... 516
3. பாண்டிநாட்டுத் தலங்கள் ... 521
4. கொங்குநாட்டுத் தலங்கள் ... 538
5. நடுநாட்டுத் தலங்கள் ... 577
6. தொண்டைநாட்டுத் தலங்கள் ... 621
7. துளுவநாட்டுத் தலம் ... 679
8. வடநாட்டுத் தலங்கள் ... 681
9. பொதுப் பதிகங்கள் ... 692

உ

செந்திலாண்டவன் துணை

# திருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறு

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்"

—திருத்தொண்டர் புராணம்.

உலகில் தோன்றிய உயிர்கள் யாவும் துன்பம் நீங்கி இன்பம் பெற விரும்புதல் இயற்கை. அவ்வுயிர்கள் பெறுதற்கரிய மானிடப்பிறவி எடுத்ததன் பயன் பேரின்பப் பெருவாழ்வு பெறுதலாகும். அப்பேரின்பத்தைக் கருதி இறைவனையடைய அடியார்கள் மேற்கொண்ட மார்க்கங்கள் நான்கு. அவற்றுள், நம் சைவசமயாசாரியர் நால்வருள் ஒருவராகிய திருஞான சம்பந்த சுவாமிகள் சற்புத்திர மார்க்கத்தை மேற்கொண்டொழுகி இறைவனைக்கண்டு, பேரின்ப ஞானஒளியில் திளைத்த பெருஞ் செல்வர் ஆவர்.

திருஞானசம்பந்த சுவாமிகள் சோழ நாட்டினில் பன்னிரு திருநாமங்களோடு திகழ்கின்ற சீகாழிப் பதியில் அந்தணர் மரபில் கௌணியர் கோத்திரத்தில் சிவபாதவிருதயரும் பகவதி அம்மையாரும் செய்த நற்றவத்தால் உலகத்தில் ஆன்மாக்கள் சிவஞானம் பெற்றுய்ய ஓர் ஆதிரை நன்னாளில் திருவவதாரஞ் செய்தருளினர். குழந்தை செல்வமாக வளர்ந்து மூன்றாம் ஆண்டு எய்தியது. அப்பொழுது ஒருநாள் தந்தையார் நீராடும் பொருட்டுத் திருக்குளத்திற்குச் செல்லுங்கால் குழந்தையும் உடன் வருவதாகப் பிடிவாதமாய் அழுதது. தந்தையார் குழந்தையை அழைத்துச் சென்று குளக்கரையில் இருத்திக் குளத்தில் இறங்கி நீராடினர். அப்போது தம் தந்தையாரைக் காணாத குழந்தை, நாற்றிசையும் நோக்கி அழுது, கடைசியாகத்

தோணியப்பர் திருக்கோயிலின் சிகரம் நோக்கி, 'அம்மே அப்பா' என அழைத்து அழத்தொடங்கியது. உடனே தோணியப்பர் அம்மையாரோடு இடபவாகனத்தில் எழுந்தருளி, குழந்தையின் முன் தோன்றி, 'திருமுலைப் பாலுடன் சிவஞான இன்னமுதையுங் குழைத்துப் பொற்கிண்ணத்தில் ஊட்டிடுக' என, அம்மையாருக்குப் பணிக்க, அம்மையாரும் அவ்வாறே அருளினர். பின்னர், சிவபெருமான் உமாதேவியோடு மறைந்தருளினர். குழந்தையார் ஞானப்பாலை உண்டவுடன் எண்ணரிய ஞானமும் எய்தப் பெற்று இனிது விளங்கினர்.

சிவபாத விருதயர் நீராடி நியமங்களை முடித்துக் கரையேறியதும் பாலருவாயராய் நின்ற பாலகனைக் கண்டு, 'உனக்குப் பாலூட்டியவர் யார்?' என்ச் சினந்து, ஒரு சிறு கோல் கொண்டு அதட்டிக் கேட்டனர். அவ்வளவில் குழந்தை, தமக்குப் பால் கொடுத்தவர் அம்மையப்பரே என்பதைச் சுட்டிக் காட்டித் தாம் கண்ட திருக்கோலத்தை அறிவுறுத்தி, "தோடுடைய செவியன்" என்ற திருப்பதிகத்தைப் பாடியருள, சிவபாதவிருதயர் அளவற்ற ஆனந்தமுற்றனர். அதுகேட்ட யாவரும் அற்புதம் அற்புதம் என்று குழந்தையைச் சூழ, சிறுவர் கோயிலை அடைந்து இறைவனை வணங்கினர். பின்னர், தந்தையார் அன்பு மேலீட்டினால் அவரைத் தோள்மீது வைத்துக்கொண்டு ஊர்வலமாக இல்லத்தை அடைந்தார். அம்மையப்பரால் ஆட்கொள்ளப்பட்டமையின் ஆளுடைய பிள்ளையார் எனவும், சிவஞான சம்பந்தம் பெற்றமையின் திருஞானசம்பந்தர் எனவும் அவர் பெயர் பெற்றார்.

ஆளுடைய பிள்ளையார் மற்றொருநாள் திருக்கோலக்கா என்னும் திருப்பதியை அடைந்து வலம்வந்து கையினால் தாளமிட்டு 'மடையில் வாளை' என்ற பதிகம் பாடுகையில் சிவபெருமான் திருவருளால் பஞ்சாட்சரம் வரையப்பெற்ற பொற்றாளம் திருக்கரத்தே வர, அதுகண்டு பிள்ளையார் திருவருளை வியந்து, அத்திருப்பதிகத்தைப் பாடி முடித்தார். ஞானசம்பந்தப் பெருந்தகையார் ஞானப்பாலுண்டு பொற்றாளம் பெற்ற செய்தி சோழநாடெங்கும் பரவ, மக்கள் திரள்திரளாக வந்து சுவாமிகளைத்

தரிசித்துத் தங்கள் தங்கள் திருப்பதிகட்கு எழுந்தருளுமாறு வேண்டினர். அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கிய பிள்ளையார் தம் தந்தையார் தோளில் இவர்ந்து சென்று, முதற்கண் தம் தாயின் பிறப்பிடமாகிய திருநனிபள்ளியைத் தரிசித்தனர். பின்னர், பலதலங்களையும் தரிசித்துக்கொண்டு சீகாழிப்பதியை அடைந்தார்.

சிதம்பரத்தையடுத்த திருஎருக்கத்தம்புலியூரில் வாழ்ந்து வந்த திருநீலகண்டப் பெரும்பாணரும், அவர் மனைவி மதங்க சூளாமணியும் சீகாழிப்பதி வந்து திருஞானசம்பந்தரை வணங்கிப்பாட, அவர் மகிழ்ந்து, தாம் பாடும் பதிகங்களை யாழில் அமைத்துப் பாடுமாறு பாணர்க்கருள் செய்தனர். பின்னர் சிதம்பரம் முதலிய தலங்கள் பலவற்றையும் தரிசித்துக்கொண்டு திருநெல்வாயிலரத்துறைக்குச் செல்ல விரும்பி, தந்தையார் தோளினின்றும் இறங்கி, திருவடி நோக நடந்து மாறன்பாடிக்கு வரவும், கதிரவன் மறையவே அங்குத் தங்கினர். மறுநாள் சிவபெருமான் கட்டளையின்படி அரத்துறை வாசிகள் திருக்கோயிலில் விள்ங்கிய முத்துச்சிவிகை, குடை, சின்னம், முதலியவற்றை எடுத்துச்சென்று திருஞானசம்பந்தரை வணங்கி அவர்பால் சேர்ப்பித்தார்கள். பிள்ளையாரும் அவற்றை அன்புடன் ஏற்று, 'எந்தை யீசன், என்ற பதிகம் பாடி ஐந்தெழுத்தோதி, சிவிகையில் ஏறியருளினர். அடியார்கள் முத்துக்குடை சின்னங்களைத் தாங்கி நின்றனர். பிறகு, பல தலங்களையுங் கண்டு வணங்கிச் சீகாழிக்கு மீண்டனர்.

பிள்ளையார் உபநயனப் பருவத்தை யடைந்தார்; வேதவிதிப்படி உபநயனச் சடங்கு நடைபெற்றது. அதுபோது ஆங்கு வந்திருந்த வேதியர்க்குள்ள ஐயங்களையெல்லாம் போக்கிச் சகல மந்திரங்களுக்கும் வித்து பஞ்சாட்சரமே என்பதை விளக்கி, 'துஞ்சலுந் துஞ்சலிலாத போழ்தினும்' என்ற பஞ்சாட்சரப் பதிகத்தைப் பாடியருளினர். தம்மைக் காணவேண்டுமென்று சீகாழிக்கு விரும்பிவந்த திருநாவுக்கரசருடன் அன்புற்று அளவளாவிய, பின்பு இருவரும் பிற தலங்களையும் சென்று தரிசித்தனர். பிறகு திருநாவுக்கரசர் பலதலங்களுக்குச்

செல்ல, ஞானசம்பந்தர் திருப்பாச்சிலாச்சிராமத்தை அடையவும் ஆங்கு ஆலயத்துள் முயலகன் நோயினால் துயருற்றுக் கிடந்த கொல்லிமழவன் என்ற அரசனது மகளின் துன்பத்தைக் கண்டிரங்கி, 'துணிவளர் திங்கள்' என்ற பதிகம் ஓதி அவளது நோயை நீக்கினர். அங்கு நின்றும் எழுந்தருளிப் பல தலங்களைத் தரிசித்துக்கொண்டு கொடிமாடச் செங்குன்றூரை அடைந்தார். ஆங்குப் பனியின் கொடுமையால் தம் அடியவர் குழாங்களும், மக்களும் நளிர்சுரத்தால் வருந்துவதைக் கண்டு, 'அவ்வினைக் கிவ்வினை' என்ற பதிகம் பாடி, அந்நோயினைப் போக்கினர். பிறகு, பல தலங்களையும் தரிசித்துவிட்டுத் திருப்பட்டீச்சரத்தை அடைந்தார். அப்போது வெயில் மிகுந்திருந்ததால் அதனைத் தணிக்கும்பொருட்டுச் சிவபெருமான் அளித்த முத்துப் பந்தரைப் பெற்று, ஆலயத்துள் சென்று பதிகம் பாடிப் பின்னர் பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு திருவாவடுதுறையை அடைந்தனர்.

அப்போது சிவபாத விருதயர் யாகஞ் செய்யப் பொன் வேண்டவும் ஞானசம்பந்தர் 'இடரினுந் தளரினும்' என்ற பதிகம் ஓதி, சிவனருளால் ஆயிரம் பொன் பொருந்திய முடிச்சு ஒன்றைப் பலி பீடத்தில் பெற்றுத் தந்தையார்க்கு அளித்து வேள்வியைச் செய்ய விடை கொடுத்து அனுப்பினர். சின்னாட்களுக்குப்பிறகு ஞானசம்பந்தர் தலங்கள் பலவற்றையும் வணங்கினவராய்த் தருமபுரத்தை அடைந்தார். அங்குப் பாணர் விருப்பின்படி 'மாதர் மடப் பிடியும்' என்ற பதிகம் பாட, அவர் அப்பதிகத்தை யாழிலிட்டு வாசிக்க முடியாமல் யாழை உடைக்க ஓங்கினர். உடனே, பிள்ளையார் தடுத்து, இயன்ற வரை வாசிக்கச் செய்தனர். அதன் பின்னர் ஞானசம்பந்தர் திருச்சாத்தமங்கையில் திருநீலநக்கராலும், திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டராலும் உபசரிக்கப்பெற்றுத் திருமருகலை அடைந்தார். அங்கு, ஒரு கன்னியுடன் வழிப் பயணமாக வந்த வணிகன் மகன் ஒருவன் அரவு தீண்டி ஆவி துறந்ததைக் கண்டு இரக்கமுற்று, 'சடையா யெனுமால்' என்னும் பதிகம் பாடி அவ் வணிகனை உயிர்ப்பித்து, அவ்விருவர்க்கும் திருமண முடித்து அனுப்பினர். பின்னர் முருகநாயனாரால்

உபசரிக்கப்பட்டு, திருநாவுக்கரசரைக் கண்டு வணங்கித் திருவாரூர்த் திருவாதிரைச் சிறப்பினை அவர் வாயிலாகக் கேட்டு மகிழ்ந்து, அவருடன் திருவாரூர் முதலிய தலங்களைத் தரிசித்துத் திருக்கடவூர் குங்கிலியக் கலய நாயனரது வழிபாட்டை ஏற்றுத் திருவீழிமிழலையை அடைய, அங்கு இறைவன் காழி நகர் தோணியப்பர்போல் காட்சி அளிக்கக்கண்டு களித்தார்.

அவ்வமயம் மாரி வளங்குன்றி பஞ்சமேற்பட, அடியார்கள் யாவரும் பசிப்பிணியால் வருந்தினர். வாகீசரும் ஞானசம்பந்தரும் சிவபெருமானைத் தொழுது படிக்காசு பெற்று அடியார்க்கு அமுது செய்வித்தனர். ஞானசம்பந்தர், தாம் பெற்ற காசுகள் வாசிபெற்று (வட்டம் பெற்று) மாறுவதைக் கண்டு, "வாசி திரவே காசு நல்குவீர்" என்னும் பதிகம் பாடி, நற்காசு பெற்றனர். ஆளுடைய பிள்ளையார் அப்பர்சுவாமிகளுடன் திருமறைக்காடு சென்று வேதங்களால் அடைக்கப்பட்டிருந்த திருக்கதவங்களைத் திருநாவுக்கரசு சுவாமிகளைக் கொண்டு திறப்பித்தும், தாம் "சதுரம் மறை" என்ற பதிகம் பாடி மூடவும் செய்தார். அன்று முதல் அக் கதவு வழக்கம் போல் திறக்கவும் மூடவும் முடிந்தது.

பாண்டி நாட்டு மன்னனாகிய கூன் பாண்டியன் சமண மதத்தைக் கைக்கொண்டிருந்தமையால், அந் நாட்டவரும் சைவ சமயத்தைக் கைநழுவ விட்டனர். அதனைக்கண்டு வருந்திய பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியாரும், அமைச்சர் குலச்சிறையாரும் சுவாமிகளின் பெருமைகளைக் கேள்வியுற்றுச் சமண இருளைப் போக்கிச் சைவ ஒளியைப் பரவச் செய்து எம்மையாட்கொள்ள வேண்டுமென்று சில அடியார்களை அனுப்பினார்கள். அவர்களும் ஞானசம்பந்தரிடம் சென்று வணங்கி யாவும் விண்ணப்பித்தனர். சுவாமிகள் மதுரை செல்லும் குறிப்பினை அப்பர் சுவாமிகளுக்குத் தெரிவிக்கவும், அவர் 'தாங்களோ சிறுவர்; சமணர்தம் வஞ்சனைக்கோ அளவில; அன்றியும் கோள் நிலையும் சரியல்ல; ஆதலின், தாங்கள் போதல் ஒண்ணாது' என்று வேண்டினர். பிள்ளையார் 'சிவனருளால் எல்லாம் நன்மையாம்' என அவர்க்கு ஆறுதல் கூறி, 'வேயுறு தோளி

பங்கன்' என்ற பதிகம் பாடி, அப்பரிடம் விடைப்பெற்று மறைக்காட்டு மணாளனை வணங்கிப் பாண்டி நாடடைந்தார்.

ஞானசம்பந்தர் வருகையையறிந்த மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் மனமகிழ்ந்து எதிர் சென்று வரவேற்றுப் பணிந்து அவர் ஆசிப் பெற்றனர். பின்னர், பிள்ளையார் சொக்க லிங்கப் பெருமானைத் தரிசித்து ஒரு திருமடத்தில் அடியார் குழாத்துடன் தங்கியருளினார்.

அன்றிரவு சமணர்கள் ஒருங்கு கூடி, 'கண்டு முட்டு', 'கேட்டு முட்டு' எனக் கூறி, அரசனோடு ஆலோசித்து முடிவில் ஞானசம்பந்தர் தங்கியிருந்த திருமடத்தில் வஞ்சனையால் தீ இட்டனர். இதனை யறிந்த சுவாமிகள் 'செய்யனே திரு ஆலவாய்' என்ற பதிகம் பாடவும் மடத்தில் பற்றிய தீ தணிந்து வெப்பு நோயாக மாறி, பாண்டியனைப்போய்ப் பற்றி வருத்தத் தொடங்கிற்று.

வெப்பு நோயினால் பீடிக்கப்பட்ட பாண்டியன், சமணர்கள் செய்த மந்திர மருந்துகளினால் நோய்தீரப் பெறாது மிகுதலை யுணர்ந்து, அரசியாரும் மந்திரியாரும் வேண்டிக்கொண்டதற்கு இணங்கி, 'யான் உற்ற நோயை நீக்கி வென்றவர் பக்கம் சார்வன்' எனப்பகன்று ஞானசம்பந்தரை அழைத்து வரும்படி கட்டளையிட்டனன். உடனே மந்திரியார் திருமடம் சென்று ஆளுடைய பிள்ளையாரை அழைத்து வர, அரசனும் அவரைக் கைக்கூப்பி வணங்கித் தன் தலைப்பக்கம் ஒரு பீடத்தமர்த்தி னான். அரசன் சுவாமிகளைத் 'தாங்கள் எவ்வூர்' என வினவ, சுவாமிகள் 'பிரமனூர் வேணுபுரம்' என்ற பதிகம் ஓதி, சீகாழியின் பன்னிரு பெயர்களையும் தெரிவித்தனர். அப்போது சமணர்கள் பதறியரற்றுவதைக்கண்ட மங்கையர்க்கரசியார், சமணர்கள் சுவாமிகளை ஏதேனும் செய்துவிடுவார்களோ என்று அஞ்சியபோது, பிள்ளையார், 'மானினேர் விழி' என்ற பதிகம் பாடி அரசியாரைத் தேற்றினார்.

பின்னர் அரசன், 'யான் உற்ற வெப்பு நோயைத் தீர்த்தார் வாதில் வென்றவர் ஆவர்' என்று செப்ப, சமணர்கள் பீலியினால் தடவலும் அந்நோய் மிக அதிகரித்தது. மன்னன், நோய்

பொறுக்காமல் புகலி வேந்தரை வேண்ட, அவர் ஆலவாய் அண்ணலை நினைத்து 'மந்திரமாவது நீறு' என்ற பதிகம்பாடித் திருநீறு சாத்தவும் வெப்பு நோய் தீர்ந்து ஒழிந்தது. அரசனும் ஆளுடைய பிள்ளையின் அடிமிசை வீழ்ந்து, 'உய்ந்தேன் உய்ந் தேன்' என்று உவகை பூத்தனன். பிறகு சமணர்கள் சுவாமி களைக் கனல் வாதத்திற்கு அழைத்தனர். சுவாமிகளும் 'போக மார்த்தபூண்முலை' என்னும் திருநள்ளாற்றுப் பதிக ஏட்டை எடுத்து, 'தளிர் இளவளரொளி' என்ற பதிகம் பாடித் தீயில் இட்டனர். சமணர்கள் ஏடு கரிந்தது: சுவாமிகள் ஏடோ பச்சையாய் விளங்கிற்று. பின்னர், சமணர்கள் சுவாமிகளைப் புனல் வாதத்திற்கு அழைத்து 'அத்தி நாத்தி' என்றெழுதிய ஏட்டை வைகையில் விட்டனர். சுவாமிகளோ 'வாழ்க அந் தணர்' என்ற பதிகம் எழுதப்பெற்ற ஏட்டை இட்டனர். சமணர்கள் விட்ட ஏடு கடல் நோக்கிச் சென்றது; சுவாமி களுடைய ஏடு எதிர்த்துச் சென்றது. குலச்சிறை நாயனர் அதனை எடுத்துக் குதிரைமேல் விரைந்துசென்றனர். பிள்ளை யார் அவ்வேடு நிற்கும் பொருட்டு, 'வன்னியும் மத்தமும்' என்ற பதிகம் பாட ஏடு நின்றது. அவ்வேடு நிற்ற இடமே திருவே டகம் ஆயிற்று. அவ் வேட்டில் 'வேந்தனும் ஓங்குக' என்று அருளினமையால் அரசனது கூனும் நிமிர்ந்தது.

பாண்டியன் சைவத்தை மேற்கொண்டான். தம் முடிபிற் கேற்ப எண்ணாயிரம் சமணரும் கழுவிலேறினர். பாண்டிய நாடு திருநீற்றின் விளக்கத்தால் சமண் இருள் நீங்கப்பெற்று மிளிர்ந்தது. பிறகு திருஞானசம்பந்தர் பாண்டி நாட்டுப் பதி கள் பலவற்றையும் தரிசித்துச் சோழநாடு போந்து, திருக் கொள்ளம்பூதூரில் 'கொட்டமே கமழும்' என்னும் பதிகம் பாடி ஆற்றுவெள்ளத்தில் ஓடத்தைச் செலுத்தி அக்கரை சென்று இறைவனை வணங்கி வழிபட்டு, பௌத்தர்கள் இருக் கும் போதிமங்கை என்னும் ஊரை அடைந்தார்.

புத்தநந்தி ஞானசம்பந்தர் வரும் ஆரவாரங்களைக் கண்டும் கேட்டும் பொறுது தடுத்து, 'எம்மை வென்றன்றோ வெற்றிச் சின்னம் ஊதவேண்டும்' என்றனன். அதனைக்கண்டு சுவாமி

களின் தேவாரத் திருமுறையினை அவ்வப்போது ஏட்டில் எழுதும் அடியவர்* சீறி, 'புத்தர் சமண் கழுக்கையர்' என்ற திருப்பாட்டை எடுத்து ஓதி, 'இவன் தலையில் இடிவிழுக' என்று கூற, இடிவிழுந்து புத்தநந்தி இறந்தனன். பின்னர் பல தலங்களையும் தரிசித்து அப்பரைக் காணும்பொருட்டுத் திருப்பூந்துருத்தியை அடைந்தார். அப்போது அப்பர் சுவாமிகள் ஒருவரும் காணாதபடி ஆளுடையபிள்ளையாரின் முத்துச்சிவிகையைத் தாங்கிவந்தார். சுவாமிகள், 'அப்பர் எங்கே?' என வினவ, அப்பர் சுவாமிகளும் 'தங்கள் முத்துச் சிவிகையைத் தாங்கும் பேறுபெற்று இங்குற்றேன்' என்றார். உடனே இருவரும் வணங்கி அளவளாவினர்.

பிறகு ஞானசம்பந்தர் சோழநாட்டுத் தலங்களையும், நடுநாட்டுத் தலங்களையும் தரிசித்துக்கொண்டு, தொண்டைநாட்டுத் தலங்களைக் காண விரும்பிச் சென்றனர். சுவாமிகள் திருவோத்தூரை அடைந்தபோது ஒரு சிவனடியாரது வேண்டுகோளுக்கு இணங்கி ஆண் பனைமரங்களை, 'பூத்தேர்ந்தாயன' என்ற பதிகம் பாடிப் பெண் பனைகளாக்கினார். பின் காளத்தி முதலிய பல தலங்களைத் தரிசித்து, வடநாட்டுத் தலங்களை மனத்தால் நினைத்துப் பதிகம் பாடித் திருவொற்றியூர் அடைந்தார். அச்சமயம் திருமயிலாப்பூர் சிவநேசர் என்னும் அடியவர், சுவாமிகளின் வரவையறிந்து ஆங்குச் சென்று தரிசித்து அரவு கடித்திறந்த தம் மகள் பூம்பாவையின் நிகழ்ச்சிகளைக் கூறித் திருமயிலாப்பூருக்கு வரும்படி வேண்டிக்கொண்டார். சுவாமிகளும் திருமயிலாப்பூருக்கு எழுந்தருளி, கபாலீசுவரர் திருமுன் நின்று சிவநேசர் சேமித்து வைத்திருந்த எலும்புக் குடத்தைக் கொண்டுவரச் செய்து 'மட்டிட்ட புன்னை' என்ற பதிகம் பாடவும், 'கோற்றொடிச் செங்கை தோன்றிடக் குடமுடைந்து' உருப்பெற்று அங்கம் பூம்பாவை வெளித்தோன்றினள். இவ்வதிசயத்தை அனைவரும் கண்டு பெருவியப்பு அடைந்தனர். பூம்பாவையை மணந்துகொள்ளும்படி சிவநேசர் சுவாமிகளை

*இவரை, சுவாமிகளின் நல்லம்மானாகிய சம்பந்த சரணாலயர் என்று கூறுவர்.

வேண்ட. அவர் தக்க காரணங்கூறி மறுத்தனர். பூம்பாவை பின்பு கன்னிமாடத்திலிருந்து சிவப்பேறு பெற்றனள்.

திருஞானசம்பந்தர் அங்கு நின்றும் புறப்பட்டுப் பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு சீகாழியை அடைந்தனர். அங்குப் பெற்றோரும் சுற்றத்தாரும் சுவாமிகளைத் திருமணஞ் செய்துகொள்ளுமாறு வேண்டினர். பிள்ளையார் முதலில் மறுக்க, அவர்கள் மீண்டும் வற்புறுத்தி வேண்டவும் ஒருவாறு இசைந்தனர். திருநல்லூர்ப் பெருமணத்தில் (ஆச்சாபுரம்) வாழும் நம்பாண்டார் நம்பிகளின் திருமகளை மணம் பேசி முடித்தார்கள். திருமண நிகழ்ச்சிகள் அவ்வூரிலேயே நடக்க ஏற்பாடுகளாயின. திருநீலநக்க நாயனர் வேத விதிப்படி திருமணச் சடங்குகளை நிகழ்த்தினர். காழிப் பெருமான் மாங்கிலியதாரணம் செய்து பொரியிட்டுக் காதலியைக் கைப்பற்றி அக்கினியை வலம் வருபவர், "இந்த இல்லொழுக்கம் வந்து சூழ்ந்ததே இவள் தன்னோடும் அந்தமில் சிவன் தாள் சேர்வன்" என்ற ஆதரவு பொங்க, சுற்றத்தாரும் மற்றவரும் புடைசூழத் திருக்கோயிலை அடைந்து, 'கல்லூர்ப் பெருமணம்' என்ற பதிகத்தை ஓதினர். சிவபெருமான், "காதலியும் நீவிரும் திருமணங்காண வந்தாரனைவரும் நம்பாற் சோதியிற் கலமின்" என்று அருள் புரிய, உடனே, சோதி தோன்றிற்று. சுவாமிகள் 'காதலாகிக் கசிந்து' என்ற பஞ்சாக்கரப் பதிகத்தை ஓதி அனைவரையும் சோதியிற் புகுமாறு பணித்து, எல்லோரும் சோதியிற் புகுந்த பின்னர், காதலியைக் கைப்பற்றி வலம் வந்து வணங்கி ஒரு வைகாசி மூல நன்னளில் அந்தமில் இன்பத்து அழிவில் வீடாகிய சிவசோதியுள் கலந்தருளினர்.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் சந்தித்து இறைபணியில் நின்றனர் என்று வரலாறு கூறுகின்றது. திருநாவுக்கரசர் மகேந்திரவர்மன் காலத்திலும் அவன் மகன் நரசிம்மவர்மன் காலத்திலும் இருந்தவராவர். மகேந்திரவர்மன் காலம் கி. பி. 615-630; நரசிம்மவர்மன் காலம் கி. பி. 630-668. ஆதலால், திருஞானசம்பந்தர் காலம் கி. பி. ஏழாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் இருந்தவர் என்பது துணிபாம்.

*

---

சிவமயம்

# தேவாரப் பண்கள்

---

திருஞானசம்பந்தர் திருக்கழுமலம்—"பந்தத்தால்" என்னும் திருப்பதிகக் கடைக்காப்பில்†, "ஏழேயேழே நாலே மூன்றியலிசை" என்று கூறுவதால், தேவாரப்பண்கள் இருபத்தொன்று$ என்று பெறப்படுகின்றன. இத் தொகைப்படியே தொன்றுதொட்டுச் சைவாதீனங்களில் சம்பிரதாய முறைப்படி ஓதும பழக்கத்தைக் கொண் டுள்ளனர்.

தேவாரப்பண்கள் 24-என்றும், 27-என்றும் பிரித் துக் கூறுவாருமுளர்.

**1.** புறநீர்மை, **2.** காந்தாரம்; பியந்தைக் காந்தாரம், **3.** கௌசிகம், **4.** இந்தளம்; திருக்குறுந்தொகை, **5.** தக்கேசி, **6.** நட்டராகம்; சாதாரி, **7.** நட்டபாடை, **8.** பழம் பஞ்சுரம், **9.** காந்தார பஞ்சமம், **10.** பஞ்சமம் - இப் பத்து வரிசைகளில் உள்ளவை பகற்காலத்தில் ஓதும் பகற் பண்களாம்.

இப்பண்களைப் பகல் மூன்று நாழிகையிலிருந்து மும் மூன்று நாழிகையாக ஒவ்வொருவகைக்கும் முறையே மேலேற்றி ஓதுதல் இவற்றின் காலவரையறை ஆகும்.

**1.** தக்கராகம், **2.** பழந்தக்கராகம், **3.** சீகாமரம், **4.** கொல்லி, கொல்லிக்கௌவாணம், திருநேரிசை, திரு

---

† கடைக்காப்பு - திருப்பதிகங்கள்தோறும் இறுதியில் வரும் பாடல்; திரு - அழகு; மேன்மை. கடை-இறுதி; காப்பு-காத்தல். காத்தற்பயன் கூறும செய்யுள் காப்பு ஆகும். கடைக்காப்பில் தத தம் பெயரையும பதிகப் பயனையும் கூறுவர். $ 'ஈரிரு பண்ணு மெழுமூன்று திறனு - மாகின்றன விவை' என்ற இசையிலக்கணச் சூத்திரத்தை அனுசரித்து, பாலை, குறிஞ்சி, மருதம், செவவழி என்னும் நாற்பண்ணும் இருபத்தொன்ருகின்றன என்ருர் போலும்.

விருத்தம், 5. வியாழக்குறிஞ்சி, 6. மேகராகக்குறிஞ்சி, 7. குறிஞ்சி, 8. அந்தாளிக்குறிஞ்சி—இந்த எட்டு வரிசைகளில் உள்ளவை இராக்காலத்தில் ஓதும் இராப்பண்களாம்.

இப்பண்களை இரவு மூன்றே முக்கால் நாழிகையிலிருந்து மூன்றே முக்கால் மூன்றே முக்கால் நாழிகையாக ஒவ்வொரு வகைக்கும் முறையே மேலேற்றி ஓதுதல் இவற்றின் காலவரையறை ஆகும்.

1. செவ்வழி, 2. செந்துருத்தி, 3. திருத்தாண்டகம்—இம்மூன்று வரிசைகளில் உள்ளவை பகல், இரவு எக்காலமும் பொதுவாக ஓதும் பொதுப்பண்களாம். இவற்றிற்குக் காலவரையறை இல்லை.

தற்போது செவ்வழிப்பண் அமைந்த திருப்பதிகங்கள் ஞானசம்பந்தர் ஒருவரே பாடியருளிய மட்டிலுள்ளன. செந்துருத்திப்பண் அமைந்த திருப்பதிகம் சுந்தரர் ஒருவரே பாடியருளிய மட்டிலுள்ளன. திருநேரிசை, திருவிருத்தம் திருக்குறுந்தொகை, திருத்தாண்டகம் ஆகிய இவை அமைந்த திருப்பதிகங்கள் திருநாவுக்கரசர் ஒருவரே பாடியருளிய மட்டிலுள்ளன.

நாலடி, ஈரடி, திருமுக்கால், திருவிராகம், திருவிருக்குக் குறள், யாழ்மூரி, திருத்தாளச்சதி, திருவியமகம் முதலியனவாகச் சொல்லப்படுபவை எல்லாம் பண்ணால் வந்த பெயர்கள் அல்லவாம். திருவிராகம் என்பது இந்தளம், சாதாரி, நட்டபாடை முதலியன பண் அமைந்த திருப்பதிகங்களிலே சில முடுகிசையாய் உள்ளவற்றிற்குப் பெயராகி வருவதாம்.

பகற்பண் பத்தும், இராப்பண் எட்டும், பொதுப் பண் மூன்றும் ஆக இருபத்தொன்று தேவாரப் பண்களாம்.

---

உ

செந்திலாண்டவன் துணை

## திருஞானசம்பந்தர் தேவாரத்தில் அமையப்பெற்றுள்ள

திருமுறை 1—3 ; பண்—22 ; பதிகம்—383.

| முதல் திருமுறை | | இரண்டாம் திருமுறை | | மூன்றும் திருமுறை | |
|---|---|---|---|---|---|
| பண்—பதிகம் | | பண்—பதிகம் | | பண்—பதிகம் | |
| 1. நட்டபாடை | 22 | 1. இந்தளம் | 59 | 1. காந்தாரபஞ்சமம் | 23 |
| 2. தக்கராகம் | 24 | 2. சீகாமரம் | 14 | 2. கொல்லி | 18 |
| 3. பழந்தக்க ராகம் | 16 | 3. காந்தாரம் | 29 | 3. கொல்லிக்கௌவாணம் | 1 |
| 4. தக்கேசி | 12 | 4. பியந்தைக்காந்தாரம் | 14 | 4. கௌசிகம் | 13 |
| 5. குறிஞ்சி | 29 | 5. நட்டராகம் | 16 | 5. பஞ்சமம் | 11 |
| 6. வியாழக்குறிஞ்சி | 25 | 6. செவ்வழி | 10 | 6. சாதாரி | 33 |
| 7. மேகராகக்குறிஞ்சி | 7 | | 122 | 7. பழம்பஞ்சுரம் | 18 |
| யாழ்மூரி | 1 | | | 8. புறநீர்மை | 6 |
| | 136 | | | 9. அந்தாளிக்குறிஞ்சி | 2 |
| | | | | | 125 |

திருஞானசம்பந்தர் பாடல்பெற்ற சிவத் தலங்கள்—219.

உ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்த சுவாமிகள்
அருளிச்செய்த

# தேவாரப் பதிகங்கள்

## தலமுறை

### சோழநாட்டில் காவிரிக்கு வடகரையில் உள்ள தலங்கள்

### 1. கோயில்*

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார்** வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
முற்றா வெண்டிங்கள் முதல்வன் பாதமே
பற்றா நின்றாரைப் பற்றா பாவமே. 1

பறப்பை‡ப் படுத்தெங்கும் பசு$வேட் டெரியோம்புஞ்
சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
பிறப்பில் பெருமானைப் பின்தாழ் சடையானை
மறப்பி லார்கண்டீர் மையல் தீர்வாரே. 2

மையா ரொண்கண்ணார் மாட நெடுவீதிக்
கையாற் பந்தோச்சுங் கழிசூழ் தில்லையுள்
பொய்யா மறைபாடல் புரிந்தா னுலகேத்தச்
செய்யா னுறைகோயில் சிற்றம் பலந்தானே. 3

* கோயில் - சிதம்பரம். ** எரி ஓம்பிக் கலியை வாராமே செற்றார் - தில்லைவாழ் அந்தணர். கலி—துன்பம். ‡ பறப்பை—நெய் விடு பாத்திரம்; வேள்வித்திண்ணையுமாம். $ பசு — யாகப்பசு.

நிறைவெண் கொடிமாட நெற்றி நேர்தீண்டப்
பிறைவந் திறைதாக்கும் பேரம் பலந்§தில்லைச்
சிறைவண் டறையோவாச் சிற்றம் பலமேய
இறைவன் கழலேத்தும் இன்பம் இன்பமே.† 4

செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச்
செல்வ மதிதோயச் செல்வம் உயர்கின்ற
செல்வர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
செல்வன் கழலேத்துஞ் செல்வஞ் செல்வமே.‡ 5

வருமாந் தளிர்மேனி மாதோர் பாகமாந்
திருமாந் தில்லையுட் சிற்றம் பலமேய
கருமா னு*ரியாடைக் கறைசேர் கண்டத்தெம்
பெருமான் கழலல்லாற் பேணா துள்ளமே. 6

அலையார் புனல்சூடி யாகத் தொருபாகம்
மலையான் மகளோடு மகிழ்ந்தான் உலகேத்தச்
சிலையால் எயிலெய்தான் சிற்றம் பலந்தன்னைத்
தலையால் வணங்குவார் தலையா னார்களே. 7

கூர்வாள் அரக்கன்றன் வலியைக் குறைவித்துச்
சீரா லேமல்கு சிற்றம் பலமேய
நீரார் சடையானை நித்த லேத்துவார்
தீரா நோயெல்லாந் தீர்தல் திண்ணமே. 8

கோணா கணையானுங் குளிர்தா மரையானுங்
காணார் கழலேத்தக் கனலாய் ஓங்கினான்
சேணார் வாழ்தில்லைச் சிற்றம் பலம்ஏத்த
மாணா நோயெல்லாம் வாளா மாயுமே. 9

பட்டைத் துவராடைப்$ படிமங் கொண்டாடும்
முட்டை**க் கட்டுரை மொழிவ கேளாதே
சிட்டர் வாழ்தில்லைச் சிற்றம் பலமேய
நட்டப் பெருமானை நாளுந் தொழுவோமே. 10

---

§ பேரம்பலம் - சிதம்பரத்திலுள்ள ஐந்து சபைகளில் ஒன்று. † இவ்வடி இன்பத்துள் இன்பம் இதுவெனப் புகல்கின்றது. ‡ இவ்வடி செல்வத்துள் செல்வம் இதுவெனக் கூறுகின்றது. * கருமான்-யானை. $ துவராடை-செவ்வாடை. ** முட்டை-மூடத்தன்மை.

ஞாலத் துயர்காழி ஞான சம்பந்தன்
சீலத் தார்கொள்கைச் சிற்றம் பலமேய
சூலப் படையானைச் சொன்ன தமிழ்மாலை
கோலத் தாற்பாட வல்லார் நல்லாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரபஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஆடினாய்நறு நெய்யொடுபால்தயிர்
அந்தணர்*பிரி யாதசிற்றம்பலம்
நாடினாயிடமா நறுங்கொன்றை நயந்தவனே
பாடினாய்மறை யோடுபல்கீதமும்
பல்சடைப்பனி கால்கதிர் வெண்திங்கள்
சூடினாயருளாய் சுருங்கஎம** தொல்வினையே 1

கொட்டமேகம ழுங்குழலாளொடு
கூடினாயெரு தேறினாய்நுதல்
பட்டமேபுனைவாய் இசைபாடுவ பாரிடமா
நட்டமேநவில்வாய் மறையோர்தில்லை
நல்லவர்பிரி யாதசிற்றம்பலம்
இட்டமாவுறைவா யிவைமேவிய தென்னைகொலோ. 2

நீலத்தார்கரிய மிடற்றார்நல்ல
நெற்றிமேலுற்ற கண்ணினார்பற்று
சூலத்தார் சுடலைப்பொடிநீறணி வார்சடையார்
சீலத்தார்தொழு தேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற் சேவடிகைதொழக்
கோலத்தாயரு ளாயுன காரணங் கூறுதுமே. 3

கொம்பலைத்தழ கெய்தியநுண்ணிடைக்
கோலவாண்மதி போலமுகத்திரண்
டம்பலைத்தகண் ணாள் முலைமேவிய வார்சடையான்
கம்பலைத்தெழு காமுறுகாளையர்
காதலாற்கழற் சேவடிகைதொழ
அம்பலத்துறை வான் அடியார்க் கடையாவினையே. 4

---

* அந்தணர்-தில்லைவாழந்தணர். ** எம-எம்முடைய.

தொல்லேஆரமு துண்ணநஞ்சுண்டதோர்
தூமணிமிட ருபகுவாயதோர்
பல்லேயார்தலே யிற்பலியேற்றுழல் பண்டரங்கா*
தில்லேயார்தொழு தேத்துசிற்றம்பலஞ்
சேர்தலாற்கழற் சேவடிகைதொழ
இல்லேயாம்வினே தானெரியம்மதி லெய்தவனே. 5

ஆகந்தோயணி கொன்றையாய்அனல்
அங்கையாய்அம ரர்க்கமராஉமை
பாகந்தோய்பகவா** பலியேற்றுழல் பண்டரங்கா
மாகந்தோய்பொழில் மல்குசிற்றம்பலம்
மன்னினுய்மழு வாளினுய்அழல்
நாகந்தோயரையாய் அடியாரை நண்ணுவினேயே. 6

சாதியார்பளிங் கின்னெடுவெள்ளிய
சங்கவார்குழை யாய்திகழப்படும்
வேதியாவிகிர்தா விழவாரணி தில்லேதன்னுள்
ஆதியாய்க்கிட மாயசிற்றம்பலம்
அங்கையால்தொழ வல்லடியார்களே
வாதியாதகலும் நலியாமலி தீவினேயே. 7

வேயினுர்பணேத் தோளியொடாடலே
வேண்டினுய்விகிர் தாஉயிர்கட்கமு
தாயினுய்இடு காட்டெரி யாடலமர்ந்தவனே
தீயினுர்கணேயாற் புரமூன்றெய்த
செம்மையாய்திகழ் கின்றசிற்றம்பலம்
மேயினுய்கழ லேதொழு தெய்துதும்மேலுலகே. 8

தாரினுர்விரி கொன்றையாய்மதி
தாங்குநீள்சடை யாய்தலேவாநல்ல
தேரினுர்மறு கில் திருவாரணி தில்லேதன்னுட்
சீரினுல்வழிபா டொழியாததோர்
செம்மையாலழ காயசிற்றம்பலம்
ஏரினுலமர்ந்தா யுனசேரடி யேத்துதுமே. 9

---

* பண்டரங்கன் - பாண்டரங்கம் என்னும் கூத்தாடிய சிவன்;
** பகவன் – ஐசுவரியம் முதலிய ஆறுகுணங்களேயுடையவன்.

வெற்றரையுழல்வார் துவராடைய
வேடத்தாரவர்கள் உரைகொள்ளன்மின்
மற்றவருலகின் அவலம்அவை மாற்றகில்லார்
கற்றவர்தொழு தேத்துசிற்றம்பலங்
காதலாற்கழற் சேவடிகைதொழ
உற்றவருலகின் உறுதிகொள வல்லவரே. 10

நாறுபூம்பொழில் நண்ணியகாழி*யுள்
நான்மறைவல்ல ஞானசம்பந்தன்
ஊறும்இன்தமிழா லுயர்ந்தாருறை தில்லைதன்னுள்
ஏறுதொல்புக ழேந்துசிற்றம்பலத்
தீசனை இசையாற் சொன்னபத்திவை
கூறுமாறுவல்லார் உயர்ந்தாரொடுங் கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

கனகசபை, சுவாமி - சபா நாயகர்; தேவி - சிவகாமியம்மை.
திருமூலட்டானம், சுவாமி - திருமூலநாதர்; தேவி - உமையம்மை.

---

## 2. திருவேட்களம்

**பண் - தக்கராகம்** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அந்தமும்ஆதியும் ஆகிய அண்ணல் ஆரழல்அங்கை அமர்ந்திலங்க
மந்தமுழவம் இயம்ப மலைமகள் காணநின்றாடிச்
சந்தமிலங்கு நகுதலைகங்கை தண்மதியம் மயலேததும்ப
வெந்தவெண் ணீறுமெய்பூசும் வேட்களநன் னகராரே. 1

சடைதனைத் தாழ்தலும் ஏறமுடித்துச் சங்கவெண்தோடு சரிந்திலங்கப், புடைதனிற் பாரிடஞ்சூழப் போதருமா றிவர்போல்வார், உடைதனில் நால்விரற்† கோவண ஆடை உண்பதும்ஊரிடு பிச்சை வெள்ளை, விடைதனை யூர்திநயந்தார் வேட்கள நன்னகராரே. 2

பூதமும்பல்கண மும்புடைசூழப் பூமியும்விண்ணும் உடன் பொருந்தச், சீதமும்வெம்மையு மாகிச் சீரொடு நின்றவெஞ் செல்வர், ஓதமுங்கானலுஞ் சூழ்தருவேலை உள்ளங்கலந்திசை யாலெழுந்த, வேதமும் வேள்வியும் ஓவாவேட்களநன்னகராரே. 3

---

* காழி - சீகாழிப்பதி. † நால்விரல்-இஃது அகல அமைதி.

அரைபுல்கும் ஐந்தலை யாடலரவம் அமையவெண் கோவணத் தோடசைத்து, வரைபுல்குமார்பி லொராமை வாங்கியணிந் தவர் தாம்,* திரைபுல்குதெண்கடல் தண்கழியோதந் தேனலங்கான லில் வண்டுபண் செய்ய, விரைபுல்கு பைம்பொழில் சூழ்ந்த வேட் களநன்னகராரே. 4

பண்ணுறுவண்டறை கொன்றையலங்கல் பால்புரைநீறு வெண்ணூல்கிடந்த,பெண்ணுறு மார்பினர் பேணார்மும்மதிலெய்த பெருமான், கண்ணுறுநெற்றி கலந்தவெண்திங்கட் கண்ணியர் விண்ணவர் கைதொழுதேத்தும், வெண்ணிறமால்விடை அண் ணல் வேட்கள நன்னகராரே. 5

கறி**வளர்குன்றம்† எடுத்தவன்காதற் கண்கவரைங்கணை யோனுடலம், பொறிவளர் ஆரழலுண்ணப் பொங்கிய பூதபுரா ணர், மறிவளரங்கையர் மங்கையொர்பங்கர் மைஞ்ஞிறமானுரி தோலுடையாடை, வெறிவளர்கொன்றையந் தாரார் வேட்கள நன்னகராரே. 6

மண்பொடிக்கொண்டெரித் தோர்சுடலை மாமலைவேந்தன் மகள்மகிழ, நுண்பொடிச் சேரநின்றாடி நொய்யன செய்யல் உகந்தார், கண்பொடி வெண்டலை யோடுகையேந்திக் காலனைக் காலாற் கடிந்துகந்தார், வெண்பொடிச் சேர்திருமார்பர் வேட்கள நன்னகராரே. 7

ஆழ்தருமால்கடல் நஞ்சினையுண்டார் அமுதமம ரர்க்கருளிச், சூழ்தருபாம்பரை யார்த்துச் சூலமோடொண் மழுவேந்தித், தாழ்தருபுன்சடை யொன்றினைவாங்கித் தண்மதியம்மயலே ததும்ப, வீழ்தருகங்கை கரந்தார் வேட்கள நன்னகராரே. 8

திருவொளிகாணிய பேதுறுகின்ற திசைமுகனுந் திசைமே லளந்த, கருவரையேந்திய மாலுங் கைதொழ நின்றதுமல்லால், அருவரையொல்க எடுத்தஅரக்கன் ஆடெழிற்றோள்க ளாழத் தழுந்த, வெருவுறவூன்றிய பெம்மான் வேட்கள நன்னகராரே. 9

அத்தமண்‡தோய்துவ ரார்அமண்குண்டர் யாதுமல்லாவுரை யேயுரைத்துப், பொய்த்தவம் பேசுவதல்லாற் புறனுரையாதொன்

---

* அணிந்த வரதர் என்னும் பாடம். ** கறி - மிளகு.
† குன்றம் - கோவர்த்தன மலை. ‡ அத்தமண்—காவிக்கல்.

றுங் கொள்ளேன், முத்தனவெண்முறு வல்லுமையஞ்ச சூரிவல் லானையின் ஈருரிபோர்த்த, வித்தகர்வேத முதல்வர் வேட்களஞ் நன்னகராரே. 10

விண்ணியன்மாடம் விளங்கொளிவீதி வெண்கொடியெங் கும் விரிந்திலங்க, நண்ணிய சீர்வளர் காழி நற்றமிழ் ஞானசம்பந்தன், பெண்ணின் நல்லாளொ$ரு பாகமமர்ந்து பேணிய வேட்கள மேல் மொழிந்த, பண்ணியல்பாடல் வல்லார்கள் பழியோடு பாவமிலாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி - பாசுபதேசுவரர்; தேவி - நல்லநாயகி.

---

## 3. திருநெல்வாயில் [திருவுச்சி]*

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

புடையி னார்புள்ளி† கால்பொ ருந்திய
மடையி னார்மணி நீர்நெல் வாயிலார்
நடையில் நால்விரற் கோவ ணந்நயந்
துடையி னாரெம துச்சி யாரே.** 1

வாங்கி னார்மதில் மேற்க ணைவெள்ளந்
தாங்கி னார்தலை யாய தன்மையர்
நீங்கு நீரநெல் வாயி லார்தொழ
ஓங்கி னாரெம துச்சி யாரே. 2

நிச்ச லேத்தும்நெல் வாயி லார்தொழ
இச்சை யாலுறை வாரெம் மீசனார்
கச்சை யாவதோர் பாம்பி னார்கவின்
இச்சை யாரெம துச்சி யாரே. 3

மறையி னார்மழு வாளி னார்மல்கு
பிறையி னார்பிறை யோடி லங்கிய
நிறையி னாரநெல் வாயி லார்தொழும்
இறைவ னாரெம துச்சி யாரே. 4

---

$ பெண்ணின் நல்லாள்—நல்ல நாயகி. * சிவபுரிஎன வழங்கப் பெறும். † புள்ளி—நண்டு. ** உச்சியார்-சுவாமியின் பெயர்.

விருத்த னாகிவெண் ணீறு பூசிய
கருத்த னார்கன லாட்டு கந்தவர்
நிருத்த னாரநெல் வாயில் மேவிய
ஒருத்த னாரெம துச்சி யாரே. 5

காரி னார்கொன்றைக் கண்ணி யார்மல்கு
பேரி னார்பிறை யோடி லங்கிய
சீரி னாரநெல் வாயி லார்தொழும்
ஏரி னாரெம துச்சி யாரே. 6

ஆதி யாரந்த மாயி னார்வினை
கோதி யார்மதில் கூட்ட ழித்தவர்
நீதி யாரநெல் வாயி லார்மறை
ஓதி யாரெம துச்சி யாரே. 7

பற்றி னன் அரக் கன்க யிலையை
ஒற்றி னாரொரு கால்வி ரலுற
நெற்றி யாரநெல் வாயி லார்தொழும்
பெற்றி யாரெம துச்சி யாரே. 8

நாடி னார்மணி வண்ணன் நான்முகன்
கூடி னார்குறு காத கொள்கையா
நீடி னார*நெல் வாயி லார்தலை
ஓடி னாரெம துச்சி யாரே. 9

குண்ட மண்துவர்க் கூறை மூடர்சொல்
பண்ட மாகவை யாத பண்பினர்
விண்ட யங்குநெல் வாயி லார்நஞ்சை
உண்ட கண்டரெம் உச்சி யாரே. 10

நெண்ப யங்குநெல் வாயி லீசனைச்
சண்பை** ஞானசம் பந்தன் சொல்லிவை
பண்ப யன்கொளப் பாட வல்லவர்
விண்ப யன்கொளும் வேட்கை யாளரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—உச்சிநாதேசுவரர்; தேவி—கனகாம்பிகை.

---

* சண்பை-சீகாழி. ** நீடினா, அ: சாரியை.

## 4. திருக்கழிப்பாலை*

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

புனலா டியபுன் சடையாய் அரணம்
அனலா கவிழித் தவனே** அழகார்
கனலா டலினாய் கழிப்பா லையுளாய்
உனவார் கழல்கை தொழுதுள் குதுமே. 1

துணையா கவொர்தூ வளமா தினையும்
இணையா கவுகந் தவனே இறைவா
கணையால் எயிலெய் கழிப்பா லையுளாய்
இணையார் கழலேத் தஇடர் கெடுமே. 2

நெடியாய் குறியாய் நிமிர்புன் சடையின்
முடியாய் சுடுவெண் பொடிமுற் றணிவாய்
கடியார் பொழில்சூழ் கழிப்பா லையுளாய்
அடியார்க் கடையா அவலம் அவையே. 3

எளியாய் அரியாய் நிலம்நீ ரொடுதீ
வளிகா யமென வெளிமன் னியதூ
ஒளியாய் உனையே தொழுதுன் னுமவர்க்
களியாய் கழிப்பா லையமர்ந் தவனே. 4

நடம்நண் ணியொர்நா கமசைத் தவனே
விடம்நண் ணியதூ மிடறா விகிர்தா
கடல்நண் ணுகழிப் பதிகா வலனே
உடன்நண் ணிவணங் குவனுன் னடியே. 5

பிறையார் சடையாய் பெரியாய் பெரியம்
மறையார் தருவாய் மையினா யுலகிற்
கறையார் பொழில்சூழ் கழிப்பா லையுளாய்
இறையார் கழலேத் தஇடர் கெடுமே. 6

---

* இது கொள்ளிடத்தின் வடகரையில் காரைமேடு என்ற இடத்தில் இருந்தது. இப்போது திருநெல்வாயில் ஆலயத்தில் தனிக் கோயிலாக அமைத்து வைக்கப்பட்டிருக்கிறது. ** இவ்வடிகள் இறைவன் முப்புரத்தை விழித்து எரித்ததாகக் கூறுகின்றன.

முதிருஞ் சடையின் முடிமேல் விளங்கும்
கதிர்வெண் பிறையாய் கழிப்பா லையுளாய்
எதிர்கொள் மொழியால் இரந்தேத் துமவர்க்
கதிரும் வினையா யினவா சறுமே. 7

எரியார் கணையால் எயிலெய் தவனே
விரியார் தருவீழ் சடையாய் இரவிற்
கரிகா டலினாய் கழிப்பா லையுளாய்
உரிதா கிவணங் குவனுன் னடியே. 8

நலநா ரணன்நான் முகன்நண் ணலுறக்
கனலா னவனே கழிப்பா லையுளாய்
உனவார் கழலே தொழுதுன் னுமவர்க்
கிலதாம் வினைதான் எயிலெய் தவனே. 9

தவர்கொண் டதொழிற் சமண்வே டரொடுந்
துவர்கொண் டனநுண் துகிலா டையரும்
அவர்கொண் டனவிட் டடிக ளுறையும்
உவர்கொண் டகழிப் பதியுள் குதுமே. 10

கழியார் பதிகா வலனைப் புகலி**ப்
பழியா மறைஞா னசம்பந் தனசொல்
வழிபா டிவைகொண் டடிவாழ்த் தவல்லார்
கெழியார் இமையோ ரொடுகே டிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - கௌசிகம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வெந்த குங்கி லியப்புகை விம்மவே
கந்தம் நின்றுல வுங்கழிப் பாலையார்
அந்த மும்மள வும்மறி யாததோர்
சந்த மாலவர் மேவிய சாந்தமே*. 1

வானி லங்க விளங்கும் இளம்பிறை
தான லங்கல் உகந்த தலைவனார்**

---

** புகலி — சீகாழி. * சாந்தம் — சிவம் சாந்தம் என்பது பாடபேதம். ** தலைவினார் என்றும் பாடம்.

கானி லங்க வருங்கழிப் பாலையார்
மான லம்பட நோக்குடை யாளொடே. 2

கொடிகொள் ஏற்றினர் கூற்றை யுதைத்தனர்
பொடிகொள் மார்பினிற் பூண்டதொ ராமையர்
கடிகொள் பூம்பொழில் சூழ்கழிப் பாலையுள்
அடிகள் செய்வன ஆர்க்கறி வொண்ணுமே. 3

பண்ண லம்பட வண்டறை கொன்றையின்
தண்ண லங்கல் உகந்த தலைவனார்
கண்ண லங்க வருங்கழிப் பாலையுள்
அண்ண லெங்கட வுள்ளவன் நல்லனே. 4

ஏரி னாருல கத்திமை யோரொடும்
பாரி னாருட னேபர வப்படுங்
காரி னார்பொழில் சூழ்கழிப் பாலையெம்
சீரி னார்கழ லேசிந்தை செய்ம்மினே. 5

துள்ளும் மான்மறி அங்கையி லேந்தியூர்
கொள்வ னாரிடு வெண்டலை யிற்பலி
கள்வ னாருறை யுங்கழிப் பாலையை
உள்ளு வார்வினை யாயின வோயுமே. 6

மண்ணி னார்மலி செல்வமும் வானமும்
எண்ணி நீரினி தேத்துமின் பாகமும்
பெண்ணி னார்பிறை நெற்றியொ டுற்றமுக்
கண்ணி னாருறை யுங்கழிப் பாலையே. 7

இலங்கை மன்னனை ஈரைந் திரட்டிதோள்
துலங்க வூன்றிய தூமழு வாளினார்
கலங்கள் வந்துல வுங்கழிப் பாலையை
வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. 8

ஆட்சி யால்அல ரானொடு மாலுமாய்த்
தாட்சி யாலறி யாது தளர்ந்தனர்
காட்சி யாலறி யான்கழிப் பாலையை
மாட்சி யால்தொழு வார்வினை மாயுமே. 9

செய்ய நுண்துவ ராடையி னாரொடு
மெய்யின் மாசு பிறக்கிய வீறிலாக்

கையர் கேண்மையெ னைகழிப் பாலையெம்
ஐயன் சேவடி யேஅடைந் துய்ம்மினே. 10

அந்தண் காழி அருமறை ஞானசம்
பந்தன் பாய்புனல் சூழ்கழிப் பாலையைச்
சிந்தை யாற்சொன்ன செந்தமிழ் வல்லவர்
முந்தி வானுல காடன் முறைமையே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பால்வண்ணநாதர் ; தேவி—வேதநாயகி.

---

## 5. திருநல்லூர்ப்பெருமணம்*

பண் - அந்தாளிக்குறிஞ்சி** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
சொல்லூர்ப் பெருமணஞ் சூடல ரேதொண்டர்
நல்லூர்ப் பெருமணம் மேயநம் பானே. 1

தருமண லோதஞ்சேர் தண்கடல் நித்திலம்
பருமண லாக்கொண்டு பாவைநல் லார்கள்
வருமணங் கூட்டி மணஞ்செயும் நல்லூர்ப்
பெருமணத் தான்பெண்ணோர் பாகங்கொண் டானே. 2

அன்புறு சிந்தைய ராகி அடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமணம் மேவிநின்
றின்புறும் எந்தை இணையடி யேத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டுசெய் வாரே. 3

வல்லியந் தோலுடை யார்ப்பது போர்ப்பது
கொல்லியல் வேழத் துரிவிரி கோவணம்
நல்லிய லார்தொழு நல்லூர்ப் பெருமணம்
புல்கிய வாழ்க்கையெம் புண்ணிய னார்க்கே. 4

---

* ஆச்சாபுரம் என வழங்கப்பெறும். ** இப்பதிகம், சிவபெருமான் சுத்த சோதி வடிவமாய்த் தோன்ற திருஞான சம்பந்தர் அதனுள் யாவரையும் முன்னர் செலுத்திவிட்டுப் பின்னர் தம் மனைவியாரோடு புகுந்து திருவடி முத்தியடைந்தபோது கூறியதாகும்.

ஏறுகந் தீரிடு காட்டேரி யாடிவெண்
நீறுகந் தீர்நிரை யார்விரி தேன்கொன்றை
நாறுகந் தீர்திரு நல்லூர்ப் பெருமணம்
வேறுகந் தீருமை கூறுகந் தீரே. 5

சிட்டப்பட் டார்க்கெளி யான்செங்கண் வேட்டுவப்
பட்டங்கட் டுஞ்சென்னி யான்பதி யாவது
நட்டக்கொட் டாட்டரு நல்லூர்ப் பெருமணத்
திட்டப்பட் டாலொத்தி ராலெம் பிரானிரே. 6

மேகத்த கண்டன்எண் தோளன்வெண் ணீற்றுமை
பாகத்தன் பாய்புலித் தோலொடு பந்தித்த
நாகத்தன் நல்லூர்ப் பெருமணத் தான்நல்ல
போகத்தன் யோகத்தை யேபுரிந் தானே. 7

தக்கிருந் தீரன்று தாளால் அரக்கனை
உக்கிருந் தொல்க உயர்வரைக் கீழிட்டு
நக்கிருந் தீரின்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந் தீரேமைப் போக்கரு ளீரே. 8

ஏலுந்தண் டாமரை யானும் இயல்புடை
மாலுந்தம் மாண்பறி கின்றிலர் மாமறை
நாலுந்தம் பாட்டென்பர் நல்லூர்ப் பெருமணம்
போலுந்தங் கோயில் புரிசடை யார்க்கே. 9

ஆதர்* அமணொடு சாக்கியர் தாஞ்சொல்லும்
பேதைமை கேட்டுப் பிணக்குறு வீர்வம்மின்
நாதனை நல்லூர்ப் பெருமணம் மேவிய
வேதன தாள்தொழ வீடெளி தாமே. 10

நறும்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன வொண்தமிழ் வல்லார்க்
கறும்பழி பாவம் அவலம்** இலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி - சிவலோகத் தியாகேசர் ; தேவி - நங்கையுமையம்மை.

---

* ஆதர் – அறிவில்லாதவர். ** அவலம்—துன்பம்.

## 6. திருமயேந்திரப்பள்ளி*

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

திரைதரு பவளமுஞ் சீர்திகழ் வயிரமுங்
கரைதரும் அகிலொடு கனவளை புகுதரும்
வரைவிலால் எயிலெய்த மயேந்திரப் பள்ளியுள்
அரவரை அழகனை அடியிணை பணிமினே. 1.

கொண்டல்சேர் கோபுரங் கோலமார் மாளிகை
கண்டலுங் கைதை‡யுங் கமலமார் வாவியும்
வண்டுலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியிற்
செண்டுசேர் விடையினான் திருந்தடி பணிமினே. 2

கோங்கிள வேங்கையுங் கொழுமலர்ப் புன்னையுந்
தாங்குதேன் கொன்றையுந் தகுமலர்க் குரவமு
மாங்கரும் புவ்வயல் மயேந்திரப் பள்ளியுள்
ஆங்கிருந் தவன்கழல் அடியிணை பணிமினே. 3

வங்கமார் சேணுயர் வருகுறி யான்மிகு
சங்கமார் ஒலிஅகில் தருபுகை கமழ்தரும்
மங்கையோர் பங்கினன் மயேந்திரப் பள்ளியுள்
எங்கள்நா யகன்றன திணையடி பணிமினே. 4

நித்திலத் தொகைபல நிரைதரு மலரெனச்
சித்திரப் புணரிசேர்த் திடத்திகழ்ந் திருந்தவன்
மைத்திகழ் கண்டன்நன் மயேந்திரப் பள்ளியுள்
கைத்தல மழுவனைக் கண்டடி பணிமினே. 5

சந்திரன் கதிரவன் தகுபுகழ் அயனொடும்
இந்திரன்** வழிபட இருந்தஎம் மிறையவன்
மந்திர மறைவளர் மயேந்திரப் பள்ளியுள்
அந்தமில் அழகனை† அடிபணிந் துய்ம்மினே. 6

---

* கோயிலடிப்பாளையம் என வழங்கப்பெறும்; இது மயேந்திரன் என்னும் ஓர் இந்திரன் வழிபட்ட இடம். பள்ளி – இடம். ‡ கைதை–தாழை. ** இவர்கள் இத்தலத்தை வழிபட்டவர்கள் ஆவர். † அழகன் - சுவாமியின் பெயர்.

சடைமுடி முனிவர்கள் சமையொடும் வழிபட
நடம்நவில் புரிவினன் நறவணி மலரொடு
படர்சடை மதியினன் மயேந்திரப் பள்ளியுள்
அடல்விடை யுடையவன் அடிபணிந் துய்ம்மினே. 7

சிரமொரு பதுமுடைச் செருவலி யரக்கனைக்
கரமிரு பதுமிறக் கனவரை யடர்த்தவன்
மரவ§மர் பூம்பொழில் மயேந்திரப் பள்ளியுள்
அரவமர் சடையனை அடிபணிந் துய்ம்மினே. 8

நாகணைத் துயில்பவன் நலமிகு மலரவன்
ஆகணைந் தவர்கழல் அணையவும் பெறுகிலர்
மாகணைந் தலர்பொழில் மயேந்திரப் பள்ளியுள்
யோகணைந் தவன்கழல் உணர்ந்திருந் துய்ம்மினே. 9

உடைதுறந் தவர்களும் உடைதுவர் உடையரும்$
படுபழி யுடையவர் பகர்வன விடுமின்நீர்
மடைவளர் வயலணி மயேந்திரப் பள்ளியுள்
இடமுடை ஈசனை இணையடி பணிமினே. 10

வம்புலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியுள்
நம்பனார் கழலடி ஞானசம் பந்தன்சொல்
நம்பர்* மிதுவென நாவினுல் நவில்பவர்
உம்பரார் எதிர்கொள உயர்பதி அணைவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—திருமேனியழகர் ; தேவி—வடிவாம்பிகை.

---

## 7. தென்திருமுல்லைவாயில்

பண் - பியந்தைக்காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

துளிமண்டி‡ யுண்டு நிறம்வந்த கண்டன் நடமன்னு துன்னு
சுடரோன், ஒளிமண்டி யும்ப ருலகங் கடந்த உமைபங்கன் எங்கள்

---

§ மரவு – மரவம் – குங்குமமரம். $ இவ்வடி சமணர்களைக் குறிக்கும். * நம்பரம்–நமது கடமை. ‡ துளிமண்டி–(விடத்தைத்) துளிபோல ஆக்கி.

அரனார், களிமண்டு சோலை கழனிக் கலந்த கமலங்கள் தங்குமது வில், தெளிமண்டி யுண்டு சிறைவண்டு பாடு திருமுல்லை வாயி லிதுவே. 1

பருவத்தில் வந்து பயனுற்ற பண்பன் அயனைப் படைத்த பரமன், அரவத் தொடங்க மவைகட்டி யெங்கு மரவிக்க† நின்ற அரனார், உருவத்தின் மிக்க வொளிர்சங்கொ டிப்பி யவையோத மோத வெருவித், தெருவத்தில் வந்து செழுமுத் தலைக்கொள் திரு முல்லை வாயிலிதுவே. 2

வாராத நாடன்* வருவார்தம் வில்லின் உருமெல்கி நாளும் உருகில், ஆராத இன்பன் அகலாத அன்பன் அருள்மேவி நின்ற அரனார், பேராத சோதி பிரியாத மார்பின் அலர்மேவு பேதை பிரியாள், தீராத காதல் நெதி§நேர நீடு திருமுல்லை வாயி லிதுவே.3

ஒன்றொன்றொ டொன்றும் ஒருநான்கொ டைந்தும் இரு மூன்றொ டேழு முடனாய்,|| அன்றின்றொ டென்றும்** அறிவான வர்க்கும்$ அறியாமை நின்ற அரனார், குன்றொன்றொ டொன்று குலையொன்றொ டொன்று கொடியொன்றொ டொன்று குழுமிச், சென்றொன்றொ டொன்று செறிவால் நிறைந்த திருமுல்லை வாயி லிதுவே. 4

கொம்பன்ன மின்னின் இடையாளொர் கூறன் விடை நாளும் ஏறு குழகன், நம்பன்னெம் அன்பன் மறைநாவன் வானின் மதியேறு சென்னி அரனார், அம்பன்ன வொண்க ணவரா டரங்கின் அணிகோபுரங்க ளழகார், செம்பொன்ன செவ்வி தருமாடம் நீடு திருமுல்லை வாயிலி துவே. 5

ஊனேறு வேலின் உருவேறு கண்ணி யொளியேறு கொண்ட வொருவன், ஆனேற தேறி யழகேறு நீறன் அரவேறு பூணும் அரனார், மானேறு கொல்லை மயிலேறி வந்து குயிலேறு சோலை மருவித், தேனேறு மாவின் வளமேறி யாடு திருமுல்லை வாயி லிதுவே. 6

---

† அரவிக்க—சந்திக்க. * வாராத நாடன்—சிவலோகன். § நெதி—செல்வம். || இவ்வடி இருபத்துநான்காவதாகிய பிரகிருதி தத்துவத் தைக் குறிப்பது. ** அன்றின்றொ டொன்றும் என்றும் பாடம். $ அறிவானவர்—இங்குத் திருமால்.

நெஞ்சார நீடு நினைவாரை மூடு வினைதேய நின்ற நிமலன்,
அஞ்சாடு சென்னி அரவாடு கையன் அனலாடு மேனி அரனூர்,
மஞ்சாரு மாட மனைதோறும் ஐயம் உளதென்று வைகி வரினுஞ்,
செஞ்சாலி நெல்லின் வளர்சோ றளிக்கொள் திருமுல்லை வாயி
லிதுவே. 7

வரைவந் தெடுத்த வலிவா ளரக்கன் முடிபத்து மிற்று நெரிய,
உரைவந்த பொன்னின் உருவந்த மேனி உமைபங்கன் எங்கள் அர
னூர், வரைவந்த சந்தொ டகிலுந்தி வந்து மிளிர்கின்ற பொன்னி§
வடபால், திரைவந்து வந்து செறிதேற லாடு திருமுல்லை வாயி
லிதுவே. 8

மேலோடி நீடு விளையாடல் மேவு விரிநூலன்† வேத முதல்
வன், பாலாடு மேனி கரியானு முன்னி யவர்தேட நின்ற பரனூர்,
காலாடு நீல மலர்துன்றி நின்ற கதிரேறு செந்நெல் வயலிற்,
சேலோடு வாளை குதிகொள்ள மல்கு திருமுல்லை வாயி லிதுவே. 9

பனைமல்கு திண்கை மதம்மா வுரித்த பரமன்ன நம்பன்
அடியே, நினைவன்ன சிந்தை யடையாத தேரர் அமண்மாய
நின்ற அரனூர், வனைமல்கு கைதை வகுளங்*க ளெங்கு
முகுளங்**க ளெங்கு நெரியச், சினைமல்கு புன்னை திகழ்வாச
நாறு திருமுல்லை வாயி லிதுவே. 10

அணிகொண்ட கோதை‡ யவள்நன்று மேத்த அருள்செய்த
எந்தை$ மருவார், திணிகொண்ட மூன்று புரமெய்த வில்லி திரு
முல்லை வாயில் இதன்மேல், தணிகொண்ட சிந்தை யவர்காழி
ஞான மிகுபந்தன் ஒண்ட மிழ்களின், அணிகொண்ட பத்தும்
இசைபாடு பத்தர் அகல்வானம் ஆள்வர் மிகவே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி - முல்லைவனநாதர்; தேவி - கோதையம்மை.

---

§ பொன்னி-காவிரி. † விரிநூலன்—பிரமன்: விரிநூல்—வேதம்.
* வகுளம்—மகிழமரம். ** முகுளம்—தாமரை வளையம். ‡ கோதை—
தேவியின் பெயர். தோகை என்றும் பாடம். $ இவ்வடி தேவி
வழிபட்டமையைக் குறிக்கும்.

# 8. திருக்கலிக்காமூர்*

பண் - பழம்பஞ்சுரம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மடல்வரை யின்மது விம்முசோலை வயல்சூழ்ந் தழகாருங்
கடல்வரை யோதங்** கலந்துமுத்தஞ் சொரியுங் கலிக்காமூர்
உடல்வரை யின்னுயிர் வாழ்க்கையாய வொருவன் கழலேத்த
இடர்தொட ராவினை யானசிந்தும் இறைவன் அருளாமே. 1

மைவரை போல்திரை யோடுகூடிப் புடையே மலிந்தோதம்
கைவரை யால்வளர் சங்கமெங்கும் மிகுக்குங் கலிக்காமூர்
மெய்வரை யான்மகள் பாகன்தன்னை விரும்ப உடல்வாழும்
ஐவரை† யாசறுத் தாளுமென்பர் அதுவுஞ் சரதமே. 2

தூவிய நீர்மல ரேந்திவையத் தவர்கள் தொழுதேத்தக்
காவியின் நேர்விழி மாதரென்றுங் கவினார் கலிக்காமூர்
மேவிய ஈசனை யெம்பிரானை விரும்பி வழிபட்டால்
ஆவியுள் நீங்கலன் ஆதிமூர்த்தி அமரர் பெருமானே. 3

குன்றுகள் போல்திரை உந்தியந்தண் மணியார் தரமேதி‡
கன்றுடன் புல்கியா யம்மனைசூழ் கவினார் கலிக்காமூர்
என்றுணர் ஊழியும் வாழுமெந்தை பெருமான் அடியேத்தி
நின்றுணர் வாரை நினையகில்லார் நீசர் நமன்தமரே. 4

வானிடை வாண்மதி மாடந்தீண்ட மருங்கே கடலோதங்
கானிடை நீழலிற் கண்டல்வாழுங் கழிசூழ் கலிக்காமூர்
ஆனிடை ஐந்து§கந் தாடினானை அமரர் தொழுதேத்த
நானடை வாம்வணம் அன்புதந்த$ நலமே நினைவோமே. 5

துறைவளர் கேதகை* மீதுவாசம் சூழ்வான் மலிதென்றல்
கறைவள ருங்கட லோதமென்றுங் கலிக்கும்** கலிக்காமூர்
மறைவள ரும்பொரு ளாயினானை மனத்தால் நினைந்தேத்த
நிறைவள ரும்புக ழெய்தும்வாதை நினையா வினைபோமே. 6

---

*அன்னப்பன் பேட்டை என வழங்கப்பெறும். **கடல்வரை யோடும் என்றும் பாடம். † ஐவர்-ஐம்புலனைசை. ‡ மேதி—எருமை. § ஆனிடை ஐந்து—பஞ்சகௌவியம். $ இன்புதந்த என்றும் பாடம். * கேதகை—தாழை. ** கலிக்கும் - ஒலிக்கும்.

கோலநன் மேனியின் மாதர்மைந்தர் கொணர்மங் கலியத்திற்
காலமும் பொய்க்கினுந் தாம்வழுவா தியற்றுங் கலிக்காமூர்
ஞாலமுந் தீவளி ஞாயிறுய நம்பன் கழலேத்தி
ஓலமி டாதவர் ஊழியென்றும் உணர்வைத் துறந்தாரே. 7

ஊரர வந்தலை நீள்முடியான் ஒலிநீர் உலகாண்டு
காரர வக்கடல் சூழவாழும் பதியாங் கலிக்காமூர்
தேரர வல்குல்அம் பேதையஞ்சத் திருந்து வரைபேர்த்தான்
ஆரர வம்பட வைத்தபாதம் உடையான் இடமாமே. 8

அருவரை யேந்திய மாலும்மற்றை அலர்மேல் உறைவானும்
இருவரும் அஞ்ச எரியுருவாய் எழுந்தான் கலிக்காமூர்
ஒருவரை யான்மகள் பாகன்தன்னை உணர்வால் தொழுதேத்தத்
திருமரு வுஞ்சிதை வில்லைச்செம்மைத் தேசுண் டவர்பாலே. 9

மாசு பிறக்கிய மேனியாரும் மருவுந் துவராடை
மீசு பிறக்கிய மெய்யினரும் அறியார் அவர்தோற்றங்
காசினி நீர்த்திரள் மண்டியெங்கும் வளமார் கலிக்காமூர்
ஈசனை யெந்தைபி ரானையேத்தி நினைவார் வினைபோமே. 10

ஆழியுள் நஞ்சமு தாரவுண்டன் றமரர்க் கமுதுண்ண
ஊழிதொ றும்முள ராஅளித்தான் உலகத் துயர்கின்ற
காழியுள் ஞானசம் பந்தன்சொன்ன தமிழாற் கலிக்காமூர்
வாழி யெம்மானை வணங்கியேத்த மருவா பிணிதானே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சுந்தரேசுரர் ; தேவி—அழகம்மை.

---

## 9. திருச்சாய்க்காடு*

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நித்தலும் நியமஞ் செய்துநீர் மலர்தூவிச்
சித்தமொன் றவல்லார்க் கருளுஞ் சிவன்கோயில்
மத்தயா னையின்கோ டும்வண்பீ லியும்வாரித்
தத்துநீர்ப் பொன்னி சாகரமேவு சாய்க்காடே. 1

---

* திருச்சாய்க்காடு — சாயாவனம்; சாய்-(நாகமணியின்) ஒளி.

பண்டலைக் கொண்டுபூ தங்கள்பா டமின்றுடும்
வெண்டலைக் கருங்கா டுறைவே தியன்கோயில்
கொண்டலைத் திகழபே ரிமுழங் கக்குலாவித்
தண்டலைத் தடமா மயிலாடு சாய்க்காடே. 2

நாறுகூ விளநா கிளவெண் மதியத்தோ(டு)
ஆறுசூ டும்அம ரர்பிரா னுறைகோயில்
ஊறுதேங் கனிமாங் கனியோங் கியசோலைத்
தாறுதண் கதலிப் புதல்மேவு சாய்க்காடே. 3

வரங்கள்வண் புகழ்மன் னியஎந் தைமருவார்
புரங்கள்மூன் றும்பொடி படஎய் தவன்கோயில்
இரங்கலோ சையுமீட் டியசரத் தொடு*மீண்டித்
தரங்கநீள் கழித்தண் கரைவைகு சாய்க்காடே. 4

ஏழைமார் கடைதோ றுமிடு பலிக்கென்று
கூழைவா ளரவாட் டும்பிரா னுறைகோயில்
மாழையொண் கண்வளைக் கைநு ளைச்சியர்வண்பூந்
தாழைவெண் மடற்கொய்து கொண்டாடு சாய்க்காடே. 5

துங்கவா னவர்சூழ் கடல்தாம் கடைபோதில்
அங்கொர்நீ ழலளித் தஎம்மா னுறைகோயில்
வங்கம்அங் கொளிர்இப் பியுமுத் துமணியுஞ்
சங்கும்வா ரி**த்தடங் கடலுந்து சாய்க்காடே. 6

வேதநா வினர்வெண் பளிங்கின் குழைக்காதர்
ஓதநஞ் சணிகண் டருகந் துறைகோயில்
மாதர்வண் டுதன்கா தல்வண் டா டியபுன்னைத்
தாதுகண் டுபொழில் மறைந்தூடு சாய்க்காடே. 7

இருக்குநீள் வரைபற் றியடர்த் தன்றெடுத்த
அரக்கன் ஆகம்நெரித் தருள்செய் தவன்கோயில்
மருக்குலா வியமல் லிகைசண் பகம்வண்பூந்
தருக்குலா வியதண் பொழில்நீடு சாய்க்காடே. 8

---

* ஈட்டியசரம் – நெருங்கிவரும் நீர். மீட்டிய சரக்கோடும் என்றும், மீட்டியர் சரக்கோடும் என்றும், (ஈட்டியர்-தேடிச்சம்பாதித்தவர்) மீட்டியர் சாத்தோடும் என்றும் பாடம். (ஈட்டியர்சாத்து – படைவீரர் முழக்கு.) ** வாரி-வாருதல்.

மாவினை டயன்காண் டற்கரி யவர்வாய்ந்த
வேலையார் விடமுண் டவர்மே வியகோயில்
சேலின்நேர் விழியார் மயிலா லச்செருந்தி
காலையே கனகம் மலர்கின்ற சாய்க்காடே. 9

ஊத்தைவாய்ச் சமண்கை யர்கள்சாக் கியர்க்*கென்றும்
ஆத்தமா கஅறி வரிதா யவன்கோயில்
வாய்த்தமா ளிகைசூழ் தருவண் புகார்மாடே
பூத்தவா விகள்சூழ்ந் துபொலிந்த சாய்க்காடே. 10

ஏனையோர்** புகழ்ந்தேத் தியஎந்தை சாய்க்காட்டை
ஞானசம் பந்தன்கா ழியர்கோன் நவில்பத்தும்
ஊனமின் றியுரை செயவல் லவர்தாம்போய்
வானநா டினிதாள் வர்இம்மா நிலத்தோரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - சீகாமரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மண்புகார் வான்புகுவர் மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார் கற்றாருங் கேட்டாரும்
விண்புகா ரெனவேண்டா வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெந் தலைவன்தாள் சார்ந்தாரே. 1

போய்க்காடே மறைந்துறைதல் புரிந்தானும் பூம்புகார்ச்
சாய்க்காடே பதியாக உடையானும் விடையானும்
வாய்க்காடு முதுமரமே இடமாக வந்தடைந்த
பேய்க்காடல் புரிந்தானும் பெரியோர்கள் பெருமானே. 2

நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்
சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே. 3

கட்டலர்த்த மலர்தூவிக் கைதொழுமின் பொன்னியன்ற
தட்டலர்த்த பூஞ்செருந்தி கோங்கமருந் தாழ்பொழில்வாய்
மொட்டலர்த்த தடந்தாழை முருகுயிர்க்குங் காவிரிப்பூம்
பட்டினத்துச் சாய்க்காட்டெம் பரமேட்டி பாதமே. 4

---

* சாக்கியர்—புத்தர். ** ஏனையோர்-வெவ்வேறு திசையாளர்கள்.

கோங்கன்ன குவிமுலையாள் கொழும்பவணத்தோட் கொடியிடையைப்
பாங்கென்ன வைத்துகந்தான் படர்சடைமேற் பால்மதியந்
தாங்கினான் பூம்புகார்ச் சாய்க்காட்டான் தாள்நிழற்கீழ்
ஓங்கினார் ஓங்கினா ரெனவுரைக்கும் உலகமே. 5

சாந்தாக நீறணிந்தான் சாய்க்காட்டான் காமனைமுன்
தீந்தாகம் எரிகொளுவச் செற்றுகந்தான் திருமுடிமேல்
ஓய்ந்தார மதிசூடி யொளிதிகழும் மலைமகள்தோள்
தோய்ந்தாகம் பாகமா வுடையானும் விடையானே. 6

மங்குல்தோய் மணிமாடம் மதிதவழும் நெடுவீதிச்
சங்கெலாங் கரைபொருது திரைபுலம்புஞ் சாய்க்காட்டான்
கொங்குலா வரிவண்டின் இசைபாடு மலர்க்கொன்றைத்
தொங்கலான் அடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே. 7

தொடலரிய தொருகணையாற் புரமூன்றும் எரியுண்ணப்
படஅரவத் தெழிலாரம் பூண்டான்பண் டரக்கனையுந்
தடவரையால் தடவரைத்தோ ளூன்றினான் சாய்க்காட்டை
இடவகையால் அடைவோ*மென் றெண்ணுவார்க் கிடரிலையே. 8

வையநீ ரேற்றானும் மலருறையும் நான்முகனும்
ஐயன்மார் இருவர்க்கும் அளப்பரிதால் அவன்பெருமை
தையலார் பாட்டோவாச் சாய்க்காட்டெம் பெருமானைத்
தெய்வமாப் பேணாதார் தெளிவுடைமை தேரோமே. 9

குறங்கா**ட்டு நால்விரலிற் கோவணத்துக் கோலோவி‡ப்போய்
அறங்§காட்டுஞ் சமணருஞ் சாக்கியரும் அலர்தூற்றுந்
திறங்காட்டல் கேளாதே தெளிவுடையீர் சென்றடைமின்
புறங்காட்டில் ஆடலான் பூம்புகார்ச் சாய்க்காடே. 10

கொம்பைந்து$ புடைத்தொல்கு நூபுரஞ்சேர் மெல்லடியார்
அம்பந்தும் வரிக்கழலும் அரவஞ்செய் பூங்காழிச்
சம்பந்தன் தமிழ்பகர்ந்த சாய்க்காட்டுப் பத்தினையும்
எம்பந்த மெனக்கருதி ஏத்துவார்க் கிடர்கெடுமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சாயாவனேசுவரர்; தேவி—குயிலினும் நன்மொழியாள்.

---

* இடவகையா அடைவோம் என்றும் பாடம். ** குறங்கு - தொடை. ‡ ஒவி—நீக்கி. § அறம்-கொல்லாமை. $ பைந்து-பந்து.

## 10. காவிரிப்பூம்பட்டினத்துத் திருப்பல்லவனீச்சரம்*

**பண் - தக்கேசி** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அடையார்தம் புரங்கள்மூன்றும் ஆரழலில் அழுந்த
விடையார்மேனி யராய்ச்சீறும் வித்தகர்மேயவிடம்
கடையார்மாடம் நீடியெங்கும்** கங்குல்புறந்தடவப்
படையார்புரிசைப் பட்டினஞ்சேர் பல்லவனீச்சரமே. 1

எண்ணாரெயில்கள் மூன்றுஞ்சீறும் எந்தைபிரான் இமையோர்
கண்ணாயுலகங் காக்கநின்ற கண்ணுதல் நண்ணுமிடம்
மண்ணார்சோலைக் கோலவண்டு வைகலுந்தேன் அருந்திப்
பண்ணார்செய்யும் பட்டினத்துப் பல்லவனீச்சரமே 2

மங்கையங்கோர் பாகமாக வாள்†நிலவார் சடைமேல்
கங்கையங்கே வாழவைத்த கள்வன் இருந்தஇடம்
பொங்கயஞ்சேர் புணரியோத மீதுயர்பொய்கையின்மேற்
பங்கயஞ்சேர் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 3

தாரார்கொன்றை பொன்தயங்கச் சாத்தியமார்பகலம்
நீரார்நீறு சாந்தம்வைத்த நின்மலன் மன்னுமிடம்
போரார்வேற்கண் மாதர்மைந்தர் புக்கிசை பாடலினாற்
பாரார்கின்ற பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 4

மைசேர்கண்டர் அண்டவாணர் வானவருந்துதிப்ப
மெய்சேர்பொடியர் அடியார்‡ ரேத்த மேவிஇருந்தவிடங்
கைசேர்வளையார் விழைவினோடு காதன்மையாற்கழலே
பைசேரரவார் அல்குலார்சேர் பல்லவனீச்சரமே. 5

குழலினோசை வீணைமொந்தை§ கொட்டமுழவதிரக்
கழலினோசை யார்க்கஆடுங் கடவுளிருந்தவிடஞ்
சுழியிலாருங் கடலிலோதந் தெண்டிரைமொண்டெறியப்
பழியிலார்கள் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 6

---

* பல்லவனீசுவரர் கோவில் என வழங்கப்பெறும்; பல்லவ அரசனால் கட்டிய கோயிலாதலின் இப்பெயர் பெற்றது. ** நீடியோங்கும் என்னும் பாடம். † வான் என்னும் பாடம். ‡ மெய்சேர் கோடி அடியார் என்னும் பாடம். § மொந்தை – ஒருபறை.

வெந்தலாய வேந்தன்வேள்வி வேரறச்சாடிவிண்ணோர்
வந்தெலாமுன் பேணநின்ற மைந்தன்மகிழ்ந்தஇடம்
மந்தலாய மல்லிகையும் புன்னைவளர்குரவின்
பந்தலாரும் பட்டினத்துப் பல்லவனீச்சரமே. 7

தேரரக்கன் மால்வரையைத் தெற்றியெடுக்கஅவன்
தாரரக்குந் திண்முடிகள் ஊன்றியசங்கரனூர்
காரரக்குங் கடல்கிளர்ந்த காலமெலாமுணரப்
பாரரக்கம் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 8

அங்கமாறும் வேதநான்கும் ஓதும்அயன்நெடுமால்
தங்கணும் நேடநின்ற சங்கரன்தங்குமிடம்
வங்கமாரு முத்தம்இப்பி வார்கடலூடலைப்பப்
பங்கமில்லார் பயில்புகாரிற் பல்லவனீச்சரமே. 9

உண்டுடுக்கை யின்றியேநின் றூர்நகவேதிரிவார்
கண்டுடுக்கை மெய்யிற்போர்த்தார் கண்டறியாதவிடந்
தண்டுடுக்கை தாளந்தக்கை சாரநடம்பயில்வார்
பண்டிடுக்கண் தீரநல்கும் பல்லவனீச்சரமே. 10

பத்தரேத்தும் பட்டினத்துப் பல்லவனீச்சரத்தெம்
அத்தன்தன்னை அணிகொள்காழி ஞானசம்பந்தன்சொல்
சித்தஞ்சேரச் செப்புமாந்தர் தீவினைநோயிலராய்
ஒத்தமைந்த உம்பர்வானில் உயர்வினொடோங்குவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - பழம்பஞ்சுரம்—ஈரடி* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பரசுபாணியர்‡ பாடல்வீணையர் பட்டினத்துறை பல்லவனீச்சரத், தரசுபேணி நின்றார் இவர்தன்மை யறிவாரார். 1

பட்ட**நெற்றியர் நட்டமாடுவர் பட்டினத்துறை பல்லவனீச்சரத், திட்டமா யிருப்பார் இவர்தன்மை யறிவாரார். 2

பவளமேனியர் திகழும்நீற்றினர் பட்டினத்துறை பல்லவனீச்சரத், தழகரா யிருப்பார் இவர்தன்மை யறிவாரார். 3

---

* இரண்டடிகளால் இயன்ற பாட்டுக்கள். ‡ பரசு பாணியர்—மழுவைக் கையில் உடையவர். **பட்டம்—தலைமைப்பட்டம் (கட்டிய).

பண்ணில்யாழினர் பயிலும்மொந்தையர் பட்டினத்துறை பல்லவனீச்சரத், தண்ணலா யிருப்பார் இவர்தன்மை யறிவாரார். 4

பல்லிலோட்டினர் பலிகொண்டுண்பவர் பட்டினத்துறை பல்லவனீச்சரத், தெல்லி யாட்டுகந்தார் இவர்தன்மை யறிவாரார். 5

பச்சைமேனியர் பிச்சைகொள்பவர் பட்டினத்துறை பல்லவனீச்சரத், திச்சைபா யிருப்பார் இவர்தன்மை யறிவாரார். 6

பைங்கண்ஏற்றினர் திங்கள்சூடுவர் பட்டினத்துறை பல்லவனீச்சரத், தெங்குமா யிருப்பார் இவர்தன்மை யறிவாரார். 7

பாதங்கைதொழ வேதமோதுவர் பட்டினத்துறை பல்லவனீச்சரத், தாதியா யிருப்பார் இவர்தன்மை யறிவாரார். 8

படிகொள்மேனியர் கடிகொள்கொன்றையர் பட்டினத்துறை பல்லவனீச்சரத், தடிகளா யிருப்பார் இவர்தன்மை யறிவாரார். 9

பறைகொள்பாணியர் பிறைகொள்சென்னியர் பட்டினத் துறை பல்லவனீச்சரத், திறைவரா யிருப்பார் இவர்தன்மை யறிவாரார். 10

வானமாள்வதற் கூனமொன்றிலை மாதர்பல்லவ னீச்சரத் தானை, ஞானசம்பந்தன் நற்றமிழ் சொல்லவல்லவர் நல்லவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பல்லவனேசுரர்; தேவி—சௌந்தரநாயகி.

---

## 11. திருவெண்காடு

பண் - சீகாமரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கண்காட்டு நுதலானுங் கனல்காட்டுங் கையானும்
பெண்காட்டும் உருவானும் பிறைகாட்டுஞ் சடையானும்
பண்காட்டும் இசையானும் பயிர்காட்டும் புயலானும்
வெண்காட்டில் உறைவானும் விடைகாட்டுங் கொடியானே. 1

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்

வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்*
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே. 2

மண்ணொடுநீ ரனல்காலோ டாகாயம் மதிஇரவி
எண்ணில்வரு மியமானன்** இகபரமு மெண்டிசையும்
பெண்ணினொடாண் பெருமையொடு சிறுமையுமாம் பேராளன்
விண்ணவர்கோன் வழிபடவெண் காடிடமா விரும்பினனே. 3

விடமுண்ட மிடற்றண்ணல் வெண்காட்டின் தண்புறவின்
மடல்விண்ட முடத்தாழை மலர்நிழலைக் குருகென்று
தடமண்டு துறைக்கெண்டை தாமரையின் பூமறையக்‡
கடல்விண்ட கதிர்முத்த நகைகாட்டுங் காட்சியதே. 4

வேலைமலி தண்கானல் வெண்காட்டான் திருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன் மறையவன்||றன்
மேலடர்வெங் காலனுயிர் விண்டபினை நமன்தூதர்
ஆலமிடற் றான்அடியார் என்றடர அஞ்சுவரே. 5

தண்மதியும் வெய்யரவுந் தாங்கினான் சடையினுடன்
ஒண்மதிய நுதலுமையோர் கூறுகந்தான் உறைகோயில்
பண்மொழியால் அவன்நாமம் பலவோதப் பசுங்கிள்ளை
வெண்முகில்சேர் கரும்பெணை$மேல்வீற்றிருக்கும் வெண்காடே.

சக்கரம்மாற் கீந்தானுஞ் சலந்தரனைப் பிளந்தானும்
அக்கரைமே லசைத்தானும் அடைந்தயிரா வதம்பணிய
மிக்கதனுக் கருள்சுரக்கும்* வெண்காடும் வினைதுரக்கும்
முக்குளம்நன் குடையானும் முக்கணுடை இறையவனே. 7

பண்மொய்த்த இன்மொழியாள் பயமெய்த மலையெடுத்த
உன்மத்தன் உரம்நெரித்தன் றருள்செய்தான் உறைகோயில்
கண்மொய்த்த கருமஞ்ஞை நடமாடக் கடல்முழங்க
விண்மொய்த்த பொழில்வரிவண் டிசைமுரலும் வெண்காடே. 8

---

* சந்திர, சூரிய, அக்கினி என்னும் இந்த முக்குளங்களில் மூழ்குவோர்க்கு நினைத்த காரியம் சித்தியாகும் என்பது புராண வரலாறு. ** இவ்வடிகள் அட்டமூர்த்தத்தைக் குறிக்கும். ‡ இவ் வடிகள் மயக்கவணி. || மறையவன்–சுவேதகேது: இவர்பொருட் டுக் காலசங்காரம் நடந்தமையை அத்தல புராணங் கூறும். $ கரும் பனை என்றும் பாடம். * இவ்வடிகள் வெள்ளையானை பூசித்துப் பேறு பெற்றதைக் குறிக்கும்.

கள்ளார்செங் கமலத்தான் கடல்கிடந்தான் எனஇவர்கள்
ஒள்ளாண்மை கொளற்கோடி உயர்ந்தாழ்ந்தும் உணர்வரியான்
வெள்ளானை தவஞ்செய்யும் மேதருவெண் காட்டானென்(று)
உள்ளாடி உருகாதார் உணர்வுடைமை உணரோமே. 9

போதியர்கள் பிண்டியர்கள் மிண்டுமொழி பொருளென்னும்
பேதையர்கள் அவர்பிறிமின் அறிவுடையீர் இதுகேண்மின்
வேதியர்கள் விரும்பியசீர் வியன்திருவெண் காட்டானென்
றோதியவர் யாதுமொரு தீதிலரென் றுணருமினே. 10

தண்பொழில்சூழ் சண்பையர்கோன் தமிழ்ஞான சம்பந்தன்
விண்பொலிவெண் பிறைச்சென்னி விகிர்தனுறை வெண்காட்டைப்
பண்பொலிசெந் தமிழ்மாலை பாடியபத் திவைவல்லார்
மண்பொலிய வாழ்ந்தவர்போய் வான்பொலியப் புகுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

உண்டாய் நஞ்சை உமையோர் பங்கா என்றுள்கித்
தொண்டாய்த் திரியும் அடியார் தங்கள் துயரங்கள்
அண்டா வண்ணம் அறுப்பான் எந்தை ஊர்போலும்
வெண்டா மரைமேற் கருவண் டியாழ்செய் வெண்காடே. 1

நாதன் நம்மை ஆள்வா னென்று நவின்றேத்திப்
பாதம் பன்னாள் பணியும் அடியார் தங்கள்மேல்
ஏதந் தீர இருந்தான் வாழும் ஊர்போலும்
வேதத் தொலியாற் கிளிசொற் பயிலும் வெண்காடே. 2

தண்முத் தரும்பத் தடமூன் றுடையான்** றனையுன்னிக்
கண்முத் தரும்பக் கழற்சே வடிகை தொழுவார்கள்
உண்முத் தரும்ப வுவகை தருவான் ஊர்போலும்
வெண்முத் தருவிப்|| புனல்வந் தலைக்கும் வெண்காடே. 3

கரையார் வந்து நாளுங் குறுகி நணுகாமுன்
உரையால் வேறா வுள்கு வார்கள் உள்ளத்தே

---

** தடமூன்றுடையான் – முக்குளமுடையவன்; சிவன்.
|| வெண்முத்தரும்பி என்றும் பாடம்.

கரையா வண்ணங் கண்டான் மேவும் ஊர்போலும்
விரையார் கமலத் தன்னம் மருவும் வெண்காடே. 4

பிள்ளைப் பிறையும் புனலுஞ் சூடும் பெம்மானென்
றுள்ளத் துள்ளித் தொழுவார் தங்கள் உறுநோய்கள்
தள்ளிப் போக அருளுந் தலைவன் ஊர்போலும்
வெள்ளைச் சுரிசங் குலவித் திரியும் வெண்காடே. 5

ஒளி*கொள் மேனி யுடையாய் உம்ப ராளீயென்
றளிய ராகி யழுதுற் றூறும்† அடியார்கட்
கெளியான் அமரர்க் கரியான் வாழும் ஊர்போலும்
வெளிய வுருவத் தானை‡ வணங்கும் வெண்காடே 6

கோள்வித் தனைய கூற்றந் தன்னைக் குறிப்பினால்
மாள்வித் தவனை மகிழ்ந்தங் கேத்த மாணிக்காய்**
ஆள்வித் தமரர் உலகம் அளிப்பான் ஊர்போலும்
வேள்விப் புகையால் வானம் இருள்கூர் வெண்காடே. 7

வளையார் முன்கை மலையாள் வெருவ வரையூன்றி
முளையார் மதியஞ் சூடி யென்று முப்போதும்
இளையா தேத்த இருந்தான் எந்தை ஊர்போலும்
விளையார் கழனிப் பழனஞ் சூழ்ந்த வெண்காடே. 8

கரியா னோடு கமல மலரான் காணாமை
எரியாய் நிமிர்ந்த எங்கள் பெருமான் என்பார்கட்
குரியான் அமரர்க் கரியான் வாழும் ஊர்போலும்
விரியார் பொழிலின் வண்டு பாடும் வெண்காடே. 9

பாடும் அடியார் பலருங் கூடிப் பரிந்தேத்த
ஆடும் அரவம் அசைத்த பெருமான் அறிவின்றி
மூடம் உடைய சமண்சாக் கியர்கள் உணராத
வேடம் உடைய பெருமான் பதியாம் வெண்காடே. 10

விடையார் கொடியான் மேவி யுறையும் வெண்காட்டைக்
கடையார் மாடங் கலந்து தோன்றுங் காழியான்
நடையா ரின்சொல் ஞானசம் பந்தன் தமிழ்வல்லார்க்
கடையா வினைகள் அமர லோகம் ஆள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

* ஒளி-ஞானவொளி. † அழுதூற்றூறும் என்றும் பாடம்.
‡ வெளியவுருவிலானை என்றும் பாடம். ** மாணி—மார்க்கண்டன்.

பண் - காந்தாரபஞ்சமம் [3-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

மந்திர மறையவை* வான வரொடும்
இந்திரன் வழிபட நின்ற எம்மிறை
வெந்தவெண் ணீற்றர்வெண் காடு மேவிய
அந்தமு முதலுடை அடிக ளல்லரே.** 1

படையுடை மழுவினர் பாய்புலித் தோலின்
உடைவிரி கோவணம் உகந்த கொள்கையர்
விடையுடைக் கொடியர்வெண் காடு மேவிய
சடையிடைப் புனல்வைத்த சதுர ரல்லரே. 2

பாலொடு நெய்தயிர் பலவு மாடுவர்
தோலொடு நூலிழை துதைந்த மார்பினர்
மேலவர் பரவுவெண் காடு மேவிய
ஆலம தமர்ந்தஎம் அடிக ளல்லரே. 3

ஞாழலுஞ் செருந்தியும் நறுமலர்ப் புன்னையுந்
தாழைவெண் குருகயல் தயங்கு கானலில்
வேழம துரித்தவெண் காடு மேவிய
யாழின திசையுடை இறைவ ரல்லரே. 4

பூதங்கள் பலவுடைப் புனிதர் புண்ணியர்
ஏதங்கள் பலஇடர் தீர்க்கும் எம்மிறை
வேதங்கள் முதல்வர்வெண் காடு மேவிய
பாதங்கள் தொழநின்ற பரம ரல்லரே. 5

மண்ணவர் விண்ணவர் வணங்க வைகலும்
எண்ணிய தேவர்கள் இறைஞ்சும் எம்மிறை
விண்ணமர் பொழில்கொள்வெண் காடு மேவிய
அண்ணலை அடிதொழ அல்லல் இல்லையே. 6

நயந்தவர்க் கருள்பல நல்கி இந்திரன்
கயந்திரம்|| வழிபட நின்ற கண்ணுதல்
வியந்தவர் பரவுவெண் காடு மேவிய
பயந்தரு மழுவுடைப் பரம ரல்லரே. 7

---

* மந்திர மறையவர் என்றும் பாடம். ** இச்செய்யுள் இந்திரன் வழிபாட்டைக் குறிக்கும். || இந்திரன் கயந்திரம்—வெள்ளை யானை.

மலையுடன் எடுத்தவல் லரக்கன் நீள்முடி
தலையுடன் நெரித்தருள் செய்த சங்கரர்
விலையுடை நீற்றர்வெண் காடு மேவிய
அலையுடைப் புனல்வைத்த அடிக ளல்லரே. 8

ஏடவிழ் நறுமலர் அயனும் மாலுமாய்த்
தேடவுந் தெரிந்தவர் தேர கிற்கிலார்
வேடம துடையவெண் காடு மேவிய
ஆடலை யமர்ந்தஎம் அடிக ளல்லரே. 9

போதியர் பிண்டியர் பொருத்த மில்லிகள்
நீதிகள் சொல்லியும் நினைய கிற்கிலார்
வேதியர் பரவுவெண் காடு மேவிய
ஆதியை யடிதொழ அல்ல லில்லையே. 10

நல்லவர் புகலி*யுள் ஞானசம் பந்தன்
செல்வன்எஞ் சிவனுறை திருவெண் காட்டின்மேற்
சொல்லிய அருந்தமிழ் பத்தும் வல்லவர்
அல்லலோ டருவினை அறுதல் ஆணையே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி - சுவேதாரணியேசுவரர்; தேவி - பிரமவித்தியா நாயகி.

---

## 12. கீழைத்திருக்காட்டுப்பள்ளி §

**பண் - நட்டபாடை**** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

செய்யரு கேபுனல் பாயவோங்கிச் செங்கயல் பாயச் சில மலர்த்தேன், கையரு கேகனி வாழையீன்று கானலெல் லாங் கமழ் காட்டுப் பள்ளிப், பையரு கேயழல் வாயவைவாய்ப் பாம் பணை யான்பணைத் தோளிபாகம், மெய்யரு கேயுடை யானையுள்கி விண்டவ ரேறுவர் மேலுலகே. 1-2

திரைகளெல் லாமல ருஞ்சுமந்து செழுமணி முத்தொடு பொன்வரன்றிக், கரைகளெல் லாமணி சேர்ந்துரிஞ்சிக் காவிரி

---

* புகலி — சீகாழி. § ஆரணீசுவரர் கோவில் என வழங்கப் பெறும். ** இப்பதிகத்தில் 2-ம் செய்யுள் சிதைந்து போயிற்று.

கால்பொரு காட்டுப்பள்ளி, உரைகளெல் லாமுணர் வெய்திநல்ல வுத்தம ராயுயர்ந் தாருலகில், அரவமெல் லாம்அரை யார்த்த செல்வர்க் காட்செய அல்லல் அறுக்கலாமே. 3

தோலுடை யான்வண்ணப் போர்வையினான் சுண்ணவெண் ணீறு துதைந்திலங்கு, நூலுடை யானிமை யோர்பெருமான் நுண்ணறி வால்வழி பாடுசெய்யுங், காலுடை யான்கரி தாயகண் டன் காதலிக் கப்படுங் காட்டுப்பள்ளி, மேலுடை யானிமை யாத முக்கண் மின்னிடை யாளொடும் வேண்டினானே. 4

சலசல சந்தகி லோடும்உந்திச் சந்தன மேகரை சார்த்தி யெங்கும், பலபல வாய்த்தலை யார்த்துமண்டிப் பாய்ந்திழி காவி ரிப் பாங்கரின் வாய்க், கலகல நின்றதி ருங்கழலான் காதலிக் கப்படுங் காட்டுப்பள்ளிச், சொலவல தொண்டர்க ளேத்தநின்ற சூலம்வல் லான்கழல் சொல்லுவோமே. 5

தளையவிழ் தண்ணிற நீலம்நெய்தல் தாமரை செங்கழு நீரு மெல்லாங், களையவி ழுங்குழ லார்கடியக் காதலிக் கப்படுங் காட்டுப்பள்ளித், துளைபயி லுங்குழல் யாழ்முரலத் துன்னிய இன்னிசை யால் துதைந்த, அளைபயில்* பாம்பரை யார்த்தசெல் வர்க் காட்செய அல்லல் அறுக்கலாமே. 6

முடிகையி னாற்றொடு மோட்டுழவர் முன்கைத் தருக்கைக் கரும்பின்கட்டிக், கடிகையி னாலெறி காட்டுப்பள்ளி காதல்செய் தான்கரி$ தாயகண்டன், பொடியணி மேனியி னானையுள்கிப் போதொடு நீர்சுமந் தேத்திமுன்னின், றடிகையி னால்தொழ வல்ல தொண்டர் அருவினை யைத்துரந் தாட்செய்வாரே. 7

பிறையுடை யான்பெரி யோர்கள்பெம்மான் பெய்கழல் நாடொறும் பேணியேத்த, மறையுடை யான்மழு வாளுடையான் வார்தரு மால்கடல் நஞ்சமுண்ட, கறையுடை யான்கன லாடு கண்ணாற் காமனைக் காய்ந்தவன் காட்டுப்பள்ளிக், குறையுடை யான்குறட் பூதச்செல்வன் குரைகழ லேகைகள் கூப்பினோமே. 8

செற்றவர் தம்அர ணம்அவற்றைச் செவ்வழல் வாயெரி யூட்டிநின்றுங், கற்றவர் தாந்தொழு தேத்தநின்றான் காதலிக்

---

* துதைந்து — வளைபயில் என்றும் பாடம். $ காதலித்தான் கரி என்றும் பாடம்.

கப்படுங் காட்டுப்பள்ளி, உற்றவர் தாமுணர் வெய்திநல்ல உம்பருள் ளார்தொழு தேத்தநின்ற, பெற்றம ரும்§பெரு மானையல்லால் பேசுவதும் மற்றோர் பேச்சிலோமே. 9

ஒண்துவ ரார்துகி லாடைமெய்போர்த் துச்சிகொ ளாமையுண் டேயுரைக்குங், குண்டர்க ளோடரைக் கூறையில்லார் கூறுவ தாங்குணம் அல்லகண்டீர், அண்டம றையவன் மாலுங்காணா ஆதியி னானுறை காட்டுப்பள்ளி, வண்டம ரும்மலர்க் கொன்றைமாலை வார்சடை யான்கழல் வாழ்த்துவோமே. 10

பொன்னியல் தாமரை நீலம்நெய்தல் போதுகளாற்பொலி வெய்து பொய்கைக், கன்னியர் தாங்குடை காட்டுப்பள்ளிக் காதல னைக்கடற் காழியர்கோன், துன்னிய இன்னிசை யாற்றுதைந்து சொல்லிய ஞானசம் பந்தன்நல்ல, தன்னிசை யாற் சொன்ன மாலைபத்துந் தாங்கவல் லார்புகழ் தாங்குவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—ஆரணிய சுந்தரேசுரர்; தேவி—அகிலாண்ட நாயகி.

---

## 13. திருக்குருகாவூர்வெள்ளடை*

**பண் - அந்தாளிக்குறிஞ்சி** [3-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

சுண்ணவெண் ணீறணி மார்பில் தோல்புனைந்
தெண்ணரும் பல்கணம் ஏத்தநின் றாடுவர்
விண்ணமர் பைம்பொழில் வெள்ளடை மேவிய
பெண்ணமர் மேனியெம் பிஞ்ஞக னாரே. 1

திரைபுல்கு கங்கை திகழ்சடை வைத்து
வரைமக ளோடுடன் ஆடுதிர் மல்கு
விரைகமழ் தண்பொழில் வெள்ளடை மேவிய
அரைமல்கு வாளர வாட்டுகந் தீரே. 2

---

§ பெற்றமுரும் என்றும் பாடம். * திருக்கடாவூர் என வழங்கப் பெறும். வெள்ளடை - ஆலயத்தின் பெயர். வெள்விடை என்பது வெள்ளடை என மருவியது. இது, வெள்விடை (இடபம்) பூசித் தலம். ** இப்பதிகத்தில் ஏனைய செய்யுட்கள் சிதைந்து போயின.

அடையலர் தொல்நகர் மூன்றெரித் தன்ன
நடைமட மங்கையொர் பாகம் நயந்து
விடையுகந் தேறுதிர் வெள்ளடை மேவிய
சடையமர் வெண்பிறைச் சங்கரன் நீரே. 3

வளங்கிளர் கங்கை மடவர லோடு
களம்பட ஆடுதிர் காடரங் காக
விளங்கிய தண்பொழில் வெள்ளடை மேவிய
இளம்பிறை சேர்சடை யெம்பெரு மானே. 4

சுரிகுழல் நல்ல துடியிடை யோடு
பொரிபுல்கு காட்டிடை யாடுதிர் பொங்க
விரிதரு பைம்பொழில் வெள்ளடை மேவிய
எரிமழு வாட்படை எந்தை பிரானே. 5

காவியங் கண்மட வாளொ‡டுங் காட்டிடைத்
தீயக லேந்திநின் றாடுதிர்† தேன்மலர்
மேவிய தண்பொழில் வெள்ளடை மேவிய
ஆவினில் ஐந்துகொண் டாட்டுகந் தீரே. 6 - 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வெள்ளடையீசுவரர்; தேவி—காவியங்கண்ணி.

---

## 14. திருப்பிரமபுரம்*

### பண் - நட்டபாடை [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடி§பூசிஎன்† உள்ளங்கவர்கள்வன்

---

‡ காவியங் கண்மடவாள்—தல அம்மையின் பெயர். † ஆடுதிர் என்று பாடல்தோறும் கூறியது இத்தலத்துக் கூத்துச் சிறப்பு. * திருப்பிரமபுரம் - சீகாழி; பிரமன் பூசித்தமையால் இப்பெயர் பெற்றது. இது வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, கொச்சைவயம், கழுமலம் என்னும் வேறு பெயர்களையும் உடையது. § பொடி – பெருந் தேவர்கள் அழிந்த சுடலை விபூதி. † பூசி எனது என்றும் பாடம்.

ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தஅருள்செய்த
பீடுடையபிர மாபுரம்மேவிய பெம்மானிவன‡ன்றே. 1

மூற்றலாமையிள நாகமோடேன முளைக்கொம்பவைபூண்டு
வற்றலோடுகல னாப்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கற்றல்கேட்டலுடை யார்பெரியார்கழல் கையால்தொழுதேத்தப்
பெற்றம்ஊர்ந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே. 2

நீர்பரந்தநிமிர் புன்சடைமேலோர் நிலாவெண்மதிசூடி
ஏர்பரந்தஇன வெள்வளைசோரஎன் உள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய ஓரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே. 3

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றி விளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங்கவர்கள்வன்
மண்மகிழ்ந்தஅர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பிற்
பெண்மகிழ்ந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே. 4

ஒருமை*பெண்மையுடை யன்சடையன்விடை யூரும்இவனென்ன
அருமையாகவுரை செய்யஅமர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
கருமைபெற்றகடல் கொள்ளமிதந்ததோர் காலம்இதுவென்னப்
பெருமைபெற்றபிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே. 5

மறைகலந்தஒலி பாடலோடாடல ராகிமழுவேந்தி
இறை**கலந்தஇன வெள்வளைசோரஎன் உள்ளங்கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழில்நீடுயர் சோலைக்கதிர்சிந்தப்
பிறைகலந்தபிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே. 6

சடைமுயங்குபுன லன்அனலன்எரி வீசிச்சதிர்வெய்த
உடைமுயங்கும்அர வோடுழிதந்தென துள்ளங்கவர்கள்வன்
கடல்முயங்குகழி சூழ்குளிர்கானல்அம் பொன்னஞ்சிறகன்னம்
பெடைமுயங்குபிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே. 7

வியரிலங்குவரை யுந்தியதோள்களை வீரம்விளைவித்த
உயரிலங்கையரை யன்வலிசெற்றென துள்ளங்கவர்கள்வன்
துயரிலங்கும்உல கிற்பலஊழிகள் தோன்றும்பொழுதெல்லாம்
பெயரிலங்குபிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே. 8

‡ இவன் – இதோ என் கண்முன் தோன்றும் முதல்வன்.
* ஒருமை–ஒருபாகத்தில். ** இறை–கைத்தலம்.

தாணுதல்*செய்திறை காணியமாலொடு தண்டாமரையானும்
நீணுதல்§செய்தொழி யந்நிமிர்ந்தானென துள்ளங்கவர்கள்வன்
வாணுதல்செய்மக ளீர்முதலாகிய வையத்தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே. 9

புத்தரோடுபொறி யில்சமணும்புறங் கூறநெறி†நில்லா
ஒத்தசொல்லஉல கம்பலிதேர்ந்தென துள்ளங்கவர்கள்வன்
மத்தயானைமறு கவ்வுரிபோர்த்ததோர் மாயம்இதுவென்னப்
பித்தர்போலும்பிர மாபுரம்மேவிய பெம்மானிவனன்றே. 10

அருநெறியமறை வல்லமுனி‡யகன் பொய்கை$யலர்மேய
பெருநெறி||யபிர மாபுரம்மேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்உரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தல் எளிதாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - சீகாமரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எம்பிரான் எனக்கமுத மாவானுந் தன்னடைந்தார்
தம்பிரான் ஆவானுந் தழலேந்து கையானுங்
கம்பமா கரியுரித்த காபாலி கறைக்கண்டன்
வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும் வானவனே. 1

தாமென்றும் மனந்தளராத் தகுதியராய் உலகத்துக்
காமென்று சரண்புகுந்தார் தமைக்காக்குங் கருணையினன்
ஓமென்று மறைபயில்வார்* பிரமபுரத் துறைகின்ற
காமன்றன் உடலெரியக் கனல்சேர்ந்த கண்ணானே. 2

நன்னெஞ்சே யுனையிரந்தேன் நம்பெருமான் திருவடியே
உன்னஞ்செய் திருகண்டாய் உய்வதனை வேண்டுயேல்
அன்னஞ்சேர் பிரமபுரத் தாரமுதை எப்போதும்
பன்னுஞ்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே. 3

---

* தாணுதல் — (தன் + நுதல்) அடிமுடி. § நீணுதல் — நீளுதல். † நெறி - சைவநெறி. ‡ முனி—பிரமன். $ பொய்கை - பிரமதீர்த்தம். || பெருநெறி - முத்தி நெறி. * வேதங்களுக்கு முதலிற் சொல்லப்படுவது பிரணவம் என்னும் மந்திரம் என்பதை இத்தொடர் அறிவிக்கும்.

சாநாளின் றிம்மனமே சங்கைதனைத் தவிர்ப்பிக்குங்
கோனாளுந் திருவடிக்கே கொழுமலர்தூ வெத்தனையுந்
தேனாளும் பொழிற்பிரம புரத்துறையுந் தீவணனை
நாநாளும் நல்நியமஞ் செய்தவன்சீர் நவின்றேத்தே. 4

கண்ணுதலான் வெண்ணீற்றன் கமழ்சடையான் விடையேறி
பெண்ணிதமாம் உருவத்தான் பிஞ்ஞகன்பேர் பலவுடையான்
விண்ணுதலாத் தோன்றியசீர்ப் பிரமபுரந் தொழவிரும்பி
எண்ணுதலாஞ் செல்வத்தை இயல்பாக அறிந்தோமே. 5

எங்கேனும் யாதாகிப் பிறந்திடினுந் தன்னடியார்க்
கிங்கேயென் றருள்புரியும்* எம்பெருமான் எருதேறிக்
கொங்கேயும் மலர்ச்சோலைக் குளிர்பிரம புரத்துறையுஞ்
சங்கேயொத் தொளிர்மேனிச் சங்கரன்றன் தன்மைகளே. 6

சிலையதுவெஞ்** சிலையாகத் திரிபுரமூன் றெரிசெய்த
இலைநுனை‡ வேல் தடக்கையன் ஏந்திழையா ளொருகூறன்
அலைபுனல்சூழ் பிரமபுரத் தருமணியை அடிபணிந்தால்
நிலையுடைய பெருஞ்செல்வம் நீடுலகிற் பெறலாமே. 7

எரித்தமயிர்† வாளரக்கன் வெற்பெடுக்கத் தோளொடுதாள்
நெரித்தருளுஞ் சிவமூர்த்தி நீறணிந்த மேனியினன்
உரித்தவரித் தோலுடையான் உறைபிரம புரந்தன்னைத்
தரித்தமனம் எப்போதும் பெறுவார்தாம் தக்காரே. 8

கரியானும் நான்முகனுங் காணுமைக் கனலுருவாய்
அரியானும் பரமேட்டி அரவஞ்சே ரகலத்தான்
தெரியாதான் இருந்துறையுந் திகழ்பிரம புரஞ்சேர
உரியார்தாம் ஏழுலகும் உடனாள உரியாரே. 9

உடையிலார் சீவரத்தார் தன்பெருமை உணர்வரியான்
முடையிலார் வெண்டலைக்கை மூர்த்தியாந் திருவுருவன்
பெடையிலார் வண்டாடும் பொழிற்பிரம புரத்துறையுஞ்
சடையிலார் வெண்பிறையான் தாள்பணிவார் தக்காரே. 10

---

* இவ்வடிகள் அடியார்க்கு இறைவன் அருள் செய்வதை உணர்த்தும். **சிலையதுவே என்றும் பாடம். ‡ இலைநுனி என்றும் பாடம். † எரித்தமயிர் – செந்நிறமயிர்.

தன்னடைந்தார்க் கின்பங்கள் தருவானைத் தத்துவனைக்
கன்னடைந்த மதிற்பிரம புரத்துறையுங் காவலனை
முன்னடைந்தான் சம்பந்தன் மொழிபத்து மிவைவல்லார்
பொன்னடைந்தார் போகங்கள் பலவடைந்தார் புண்ணியரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - காந்தாரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**கூ**றையணி வேலிலர் போலுங் கபாலந் தரித்திலர் போலும்
மறையும் நவின்றிலர் போலும் மாசுணம் ஆர்த்திலர் போலும்
பறையுங் கரத்திலர் போலும் பாசம் பிடித்திலர் போலும்
பிறையுஞ் சடைக்கிலர் போலும் பிரம புரம்அமர்ந் தாரே. 1

கூரம் பதுவிலர் போலுங் கொக்கின் இறகிலர் போலும்
ஆரமும் பூண்டிலர் போலும் ஆமை அணிந்திலர் போலுந்
தாருஞ் சடைக்கிலர் போலுஞ் சண்டிக்* கருளிலர் போலும்
பேரும் பலவிலர் போலும் பிரம புரம்அமர்ந் தாரே. 2

சித்த வடிவிலர் போலுந் தேசந் திரிந்திலர் போலுங்
கத்தி வருங்கடுங் காளி கதம்**கள் தவிர்த்திலர் போலும்
மெய்த்த நயனம் இடந்தார்‡க் காழி யளித்திலர் போலும்
பித்த வடிவிலர் போலும் பிரம புரம்அமர்ந் தாரே. 3

நச்சர வாட்டிலர் போலும் நஞ்சம் மிடற்றிலர் போலுங்
கச்சுத் தரித்திலர் போலுங் கங்கை தரித்திலர் போலும்
மொய்ச்சவன் பேயிலர் போலும் முப்புரம் எய்திலர் போலும்
பிச்சை இரந்திலர் போலும் பிரம புரம்அமர்ந் தாரே. 4

தோடு செவிக்கிலர் போலுஞ் சூலம் பிடித்திலர் போலும்
ஆடு தடக்கை வலிய ஆனை§ உரித்திலர் போலும்
ஓடு கரத்திலர் போலும் ஒள்ளழல் கையிலர் போலும்
பீடு மிகுத்தெழு செல்வப் பிரம புரம்அமர்ந் தாரே. 5

விண்ணவர் கண்டிலர் போலும் வேள்வி யழித்திலர் போலும்
அண்ணல் அயன்தலை வீழ அன்று மறுத்திலர் போலும்

---

* தண்டிக் என்றும் பாடம். ** கதம் - கோபம். ‡ நயனம் இடந்தார் - திருமால். § ஆனை - யானை : மரூஉப் பெயர்.

வண்ண எலும்பினொ டக்கு வடங்கள் தரித்திலர் போலும்
பெண்ணினம் மொய்த்தெழு செல்வப் பிரமபுரம்அமர்ந் தாரே. 6

பன்றின் கொம்பிலர் போலும் பார்த்தற் கருளிலர் போலுங்
கன்றிய காலனை வீழக் கால்கொடு பாய்ந்திலர் போலுந்
துன்று பிணஞ்சுடு காட்டி லாடித் துதைந்திலர் போலும்
பின்றியும் பீடும் பெருகும் பிரம புரம்அமர்ந் தாரே. 7

பரசு தரித்திலர் போலும் படுதலை பூண்டிலர் போலும்
அரசன் இலங்கையர் கோனை அன்றும் அடர்த்திலர் போலும்
புரைசெய் புனத்திள மானும் புலியின் அதளிலர் போலும்
பிரச* மலர்ப்பொழில் சூழ்ந்த பிரம புரம்அமர்ந் தாரே. 8

அடிமுடி மாலயன் தேட அன்றும் அளப்பிலர் போலுங்
கடிமலர் ஐங்கணை வேளைக் கனல விழித்திலர் போலும்
படிமலர்ப் பாலனு**க் காகப் பாற்கடல் ஈந்திலர் போலும்
பிடிநடை மாதர் பெருகும் பிரம புரம்அமர்ந் தாரே. 9

வெற்றரைச் சீவரத் தார்‡க்கு வெளிப்பட நின்றிலர் போலும்
அற்றவர் ஆல்நிழல் நால்வர்க் கறங்கள் உரைத்திலர் போலும்
உற்றல ரொன்றிலர்§ போலும் ஓடு முடிக்கிலர் போலும்
பெற்றமும் ஊர்ந்திலர் போலும் பிரம புரம்அமர்ந் தாரே. 10

பெண்ணுரு ஆணுரு அல்லாப் பிரம புரநகர் மேய
அண்ணல்செய் யாதன வெல்லாம் அறிந்து வகைவகை யாலே
நண்ணிய ஞானசம் பந்தன் நவின்றன பத்தும்வல் லார்கள்
விண்ணவ ரோடினி தாக வீற்றிருப் பாரவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கரமுனம்மல ராற்புனல்மலர் தூவியேகலந் தேத்துமின், பரம
னூர்பல பேரினாற்பொலி பத்தர்சித்தர்கள் தாம்பயில், வரமுன்

---

* பிரசம் — தேன் (பொருந்திய). **பாலன்—உபமன்னியன்.
‡ சீவரத்தார் — (மரவுரியுடையினர்) சமணர். § உற்றவ ரொன்றிலர் என்றும், உற்றவ ரொன்றிலர் என்றும் பாடம்.

னவ்வருள் செய்யவல்லஎம் ஐயன்நாடொறும் மேயசீர்ப்*
பிரமனூர்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன் அருள் பேணியே. 1

விண்ணிலார்மதி சூடினன்விரும் பும்மறையவன் தன்தலை,
உண்ணநன்பலி பேணினன்உல கத்துளூனுயி ரான்மலைப்,
பெண்ணினார்திரு மேனியான்பிர மாபுரத்துறை கோயிலுள்,
அண்ணலாரருளாளனாயமர் கின்றஎம்முடை யாதியே. 2

எல்லையில்புக ழாளனும்இமை யோர்கணத்துடன் கூடியும்,
பல்லையார்தலை யிற்பலியது கொண்டுகந்த படிறனும்,† தொல்லை
வையகத் தேறுதொண்டர்கள் தூமலர்சொரிந் தேத்தவே, மல்லை
யம்பொழில் தேன்பில்கும்பிர மாபுரத்துறை மைந்தனே. 3

அடையலார்புரஞ் சீறியந்தணர் ஏத்தமாமட மாதொடும்,
பெடையெலாங்கடற் கானல்புல்கும்**பிர மாபுரத்துறை கோயி
லான், தொடையலார்நறுங் கொன்றையான்தொழி லேபரவிநின்
றேத்தினால், இடையிலார்சிவ லோகம்எய்துதற் கீதுகாரணங்
காண்மினே. 4

வாயிடைம்மறை யோதிமங்கையர் வந்திடப்பலி கொண்டு
போய்ப் போயிடம்எரி கானிடைப்புரி நாடகம்இனி தாடினன்,
பேயொடுங்குடி‡ வாழ்வினன்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன், தாயி
டைப்பொருள் தந்தையாகுமென் றோதுவார்க் கருள்தன்மையே§ 5

ஊடினாலினி யாவதென்னுயிர்$ நெஞ்சமேயுறு வல்வினைக்,
கோடிநீயுழல் கின்றதென்னழ லன்றுதன்கையி லேந்தினன்,
பீடுநேர்ந்தது கொள்கையான்பிர மாபுரத்துறை வேதியன், ஏறு
நேர்மதி யோடராவணி எந்தையென்றுநின் றேத்திடே. 6

செய்யன்வெள்ளியன் ஒள்ளியார்சில ரென்றும்ஏத்தி நினைந்
திட, ஐயன்ஆண்டகை அந்தணன்அரு மாமறைப்பொரு ளாயி
னான், பெய்யுமாமழை யானவன்பிர மாபுரம்இடம் பேணிய,
வெய்யவெண்மழு ஏந்தியைந்நினைந் தேத்துமின்வினை வீடவே. 7

* மெய்யசீர் என்றும் பாடம். † படிறன்—வஞ்சகன். ** கடற்
கான் புகும் என்றும் பாடம். ‡ கூடி என்றும் பாடம். § ஓது
வார்க்குள தன்மையே என்றும் பாடம். $ தென்னுயிர் என்றும்
பாடம்.

கன்றொ†ருக்கைகயில் ஏந்திநல்விள வின்கனிபட நூறியுஞ், சென்றொருக்கிய மாமறைப்பொருள் தேர்ந்தசெம்மல ரோனுமாய், அன்றரக்கனைச் செற்றவன்அடி யும்முடியவை காண்கிலார், பின்தருக்கிய தண்பொழிற்பிர மாபுரத்தான் பெற்றியே. 8

உண்டுடுக்கைவிட் டார்களும்உயர் கஞ்சிமண்டைகொள் தேரரும்,‡பண்டடக்குசொற் பேசுமப்பரி வொன்றிலார்கள் சொற்கொள்ளன்மின், தண்டொடக்குவன் சூலமுந்தழல் மாமழுப்படை தன்கையிற், கொண்டொடுக்கிய மைந்தன்எம்பிர மாபுரத்துறை கூத்தனே. 9

பித்தனைப்பிர மாபுரத்துறை பிஞ்ஞகன்கழல் பேணியே, மெய்த்தவத்துநின் றோர்களுக்குரை செய்துநன்பொருள் மேவிட வைத்தசிந்தையுள் ஞானசம்பந்தன் வாய்நவின்றெழு மாலைகள், பொய்த்தவம்பொறி நீங்கஇன்னிசை போற்றிசெய்யும்மெய்ம் மாந்தரே. 10

திருச்சிற்றம்பலம்

---

பண் - பஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

இறைபவன் ஈசன்எந்தை இமை யோர்தொழு தேத்தநின்ற
கறையணி கண்டன்வெண்தோ டணி காதினன் காலத்தன்று
மறைமொழி வாய்மையினன் மலை யாளொடு மன்னுசென்னிப்
பிறையணி செஞ்சடையான் பிர மாபுரம் பேணுமினே. 1

சடையினன் சாமவேதன் சரி கோவண வன்மழுவாட்
படையினன் பாய்புலித்தோ லுடை யான்மறை பல்கலைநூல்
உடையவன் ஊனமில்லி யுட னாயுமை நங்கையென்னும்
பெடையொடும் பேணுமிடம் பிர மாபுரம் பேணுமினே. 2

மாணியை நாடுகாலன் உயிர் மாய்தரச் செற்றுக்காளி
காணிய ஆடல்கொண்டான் கலந் தூர்வழி சென்றுபிச்சை
ஊணியல் பாகக்கொண்டங் குட னேயுமை நங்கையொடும்
பேணிய கோயில்மன்னும் பிர மாபுரம் பேணுமினே. 3

---

† கன்று என்றது பசுங்கன்று வடிவாக வந்த வத்ஸாசுரனை.
‡ தேரர் – சமணரில் ஒரு வகையார்.

பாரிடம் விண்ணுமெங்கும் பயில் நஞ்சுப ரந்துமிண்டப்*
பேரிடர்த் தேவர்கணம் பெரு மானிது காஎனலும்
ஓரிடத் தேகரந்தங் குமை நங்கையொ டும்முடனே
பேரிட மாகக்கொண்ட பிர மாபுரம் பேணுமினே. 4

நச்சர வச்சடைமேல் நளிர் திங்களு மொன்றவைத்தங்
கச்சமெ ழுவிடை**மேல் அழ கார்மழு வேந்திநல்ல
இச்சைப கர்ந்துமிக இடு மின்பலி யென்றுநாளும்
பிச்சைகொள் அண்ணல்நண் ணும் பிர மாபுரம் பேணுமினே. 5

பெற்றவன் முப்புரங்கள் பிழை யாவண்ணம் வாளியினாற்
செற்றவன் செஞ்சடையில் திகழ் கங்கை தனைத்தரித்திட்
டொற்றை விடையினனாய் உமை நங்கையொ டும்முடனே
பெற்றிமை யாலிருந்தான் பிர மாபுரம் பேணுமினே. 6

வேதம விந்தவொலி விழ வின்னொலி வீணையொலி
கீதம விந்துடனே கிள ரத்திகழ் பௌவமறை
ஓதம விந்துயர்வான் முக டேறவொண் மால்வரையான்
பேதையொ டும்மிருந்தான் பிர மாபுரம் பேணுமினே. 7

இமையவர் அஞ்சியோட எதிர் வாரவர் தம்மையின்றி
அமைதரு வல்லரக்கன் அடர்த் தும்மலை அன்றெடுப்பக்
குமையது† செய்துபாடக் கொற்ற வாளொடு நாள்கொடுத்திட்
டுமையொ டிருந்தபிரான் பிர மாபுரம் உன்னுமினே. 8

ஞாலம் அளித்தவனும் அரி யும்அடி யோடுமுடி
காலம் பலசெலவுங் கண்டி லாமையி னாற்கதறி
ஓல மிடஅருளி உமை நங்கையொ டும்முடனாய்
ஏல இருந்தபிரான் பிர மாபுரம் ஏத்துமினே. 9

துவருறும் ஆடையினார் தொக்க பீலியர் நக்கரையர்‡
அவரவர் தன்மைகள்கண் டணு கேன்மின்ன ருள்பெறுவீர்
கவருறு சிந்தையொன்றிக் கழி காலமெல் லாம்படைத்த
இவரவர் என்றிறைஞ்சிப் பிர மாபுரம் ஏத்துமினே. 10

உரைதரும் நான்மறையோர் புகழ்ந் தேத்தவொண் மாதினொடும்
வரையென வீற்றிருந்தான் மலி கின்றபிரம புரத்

---

* பரந்து மண்ட என்றும் பாடம். ** கச்சமழவிடை என்றும் பாடம். † குமையது—குழைவு. ‡ நக்கரையர்—திருவாணத்தர்.

தரசிலே யேத்தவல்ல அணி சம்பந்தன் பத்தும்வல்லார்
விரைதரு விண்ணுலகம் எதிர் கொள்ள விரும்புவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## [திருவேணுபுரம்*]

### பண் - நட்டபாடை** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வ**ண்டார்குழ லரிவையொடும் பிரியாவகை பாகம்
பெண்டான்மிக ஆனான்பிறைச் சென்னிப்பெரு மானூர்
தண்டாமரை மலராளுறை தவளம்நெடு மாடம்
விண்டாங்குவ போலும்மிகு வேணுபுரம் அதுவே. 1

படைப்பும்நிலை யிறுதிப்பயன் பருமையொடு நேர்மை
கிடைப்பல்கண முடையான்கிறி பூதப்படை யானூர்
புடைப்பாளையின் கமுகின்னொடு புன்னைமலர் நாற்றம்
விடைத்தேவரு தென்றல்மிகு வேணுபுரம் அதுவே. 2

கடந்தாங்கிய கரியையவர் வெருவவுரி போர்த்துப்
படந்தாங்கிய அரவக்குழைப் பரமேட்டிதன் பழவூர்
நடந்தாங்கிய நடையார்நல பவளத்துவர் வாய்மேல்
விடந்தாங்கிய கண்ணார்பயில் வேணுபுரம் அதுவே. 3

தக்கன்தன சிரமொன்றினை அரிவித்தவன் தனக்கு
மிக்கவ்வரம் அருள்செய்தஎம் விண்ணோர்பெரு மானூர்
பக்கம்பல மயிலாடிட மேகம்முழ வதிர
மிக்கம்மது வண்டார்பொழில் வேணுபுரம் அதுவே. 4

நானாவித உருவாய்நமை‡ யாள்வான்நனு காதார்
வானார்திரி புரமூன்றெரி யுண்ணச்சிலை தொட்டான்
தேனார்ந்தெழு கதலிக்கனி யுண்பான் திகழ் மந்தி†
மேனோக்கிநின் றிறங்கும்பொழில் வேணுபுரம் அதுவே. 5

---

* திருவேணுபுரம்—சீகாழி; இந்திரன், சூரபதுமனுக்கு அஞ்சி பூசித்தபோது இறைவர் வேணு (மூங்கில்) வாய் முளைத்தருளினமை பற்றி இப்பெயர் பெற்றது. ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. ‡ உருவான்நமை என்றும் பாடம். † மந்தி—பெண் குரங்கு.

மண்ணோர்களும் விண்ணோர்களும்* வெருவிம்மிக அஞ்சக்
கண்ணார்சல மூடிக்கட லோங்கவ்வுயர்ந் தானார்
தண்ணார்நறுங் கமலம்மலர் சாயவ்விள வாளை
விண்ணார்குதி கொள்ளும்வியன் வேணுபுரம் அதுவே. 6-7

மலையான்மகள் அஞ்சவ்வரை எடுத்தவ்வலி யரக்கன்
தலைதோளவை நெரியச்சரண் உகிர்வைத்தவன் தன்னூர்
கலையாரொடு சுருதித்தொகை கற்றோர்மிகு கூட்டம்
விலையாயின சொற்றேர்தரு வேணுபுரம் அதுவே. 8

வயமுண்டவ மாலும்அடி காணாதல மாக்கும்
பயனாகிய பிரமன்படு தலையேந்திய பரனூர்
கயமேவிய சங்கந்தரு கழி§விட்டுயர் செந்நெல்
வியன்மேவி**வந் துறங்கும்பொழில் வேணுபுரம் அதுவே. 9

மாசேறிய வுடலாரமண் குழுக்கள்ளொடு தேரர்
தேசேறிய பாதம்வணங் காமைத்தெரி யானூர்
தூசேறிய அல்குல்துடி இடையார்துணை முலையார்
வீசேறிய புருவத்தவர் வேணுபுரம் அதுவே. 10

வேதத்தொலி யானும்மிகு வேணுபுரந் தன்னைப்
பாதத்தினின் மனம்வைத்தெழு பந்தனதன பாடல்‡
ஏதத்தினை இல்லாஇவை பத்தும்இசை வல்லார்
கேதத்தினை இல்லார்சிவ கெதியைப்பெறு வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - இந்தளம்* [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நிலவும் புனலும் நிறைவா ளரவும்
இலகுஞ் சடையார்க் கிடமாம் எழிலார்
உலவும் வயலுக் கொளியார் முத்தம்
விலகுங் கடலார் வேணு புரமே. 1

---

*விண்ணோர்களும் மண்ணோர்களும் என்றும் பாடம். § சய மேவிய சங்கந்தருகழி என்றும் பாடம். ** வயல்மேவி என்றும் பாடம். ‡ தெழுசம்பந்தன பாடல் என்றும் பாடம். * இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று.

அரவார் கரவன் அமையார் திரள்தோள்
குரவார் குழலா ளொருகூ றனிடங்
கரவா தகொடைக் கலந்தா ரவர்க்கு
விரவா கவல்லார் வேணு புரமே. 2

ஆகம் மழகா யவள்தான் வெருவ
நாகம் உரிபோர்த் தவன்நண் ணுமிடம்
போகந் தருசீர் வயல்சூழ் பொழில்கள்
மேகந் தவழும் வேணு புரமே. 3

காசக் கடலில் விடமுண் டகண்டத்
தீசர்க் கிடமா வதுஇன் நறவ
வாசக் கமலத் தனம்வன் றிரைகள்
வீசத் துயிலும் வேணு புரமே. 4

அரையார் கலைசேர் அனம்மென் னடையை
உரையா வுகந்தா னுறையும் இடமாம்
நிரையார் கமுகின் நிகழ்பா ளையுடை
விரையார் பொழில்சூழ் வேணு புரமே. 5

ஒளிரும் பிறையும் முறுகூ விளவின்
தளிருஞ் சடைமே லுடையா னிடமாம்
களிரும் புனலின் நலசெங் கயல்கள்
மிளிரும் வயல்சூழ் வேணு புரமே. 6-7

ஏவும் படைவேந் தன்இரா வணனை
ஆவென் றலற அடர்த்தா னிடமாம்
தாவும் மறிமா னொடுதண் மதியப்*
மேவும் பொழில்சூழ் வேணு புரமே. 8

கண்ணன் கடிமா மலரி**ல் திகழும்
அண்ணல் இருவர் அறியா இறையூர்
வண்ணச் சுதைமா ளிகைமேற் கொடிகள்
விண்ணில் திகழும் வேணு புரமே. 9

போகம் மறியார் துவர்போர்த் துழல்வார்
ஆகம் மறியா அடியார் இறையூர்

---

* தண்மதியும் என்றும் பாடம். **மாமலர் - தாமரை.

மூகம் மறிவார் கலைமுத் தமிழ்நூல்
மீகம் மறிவார் வேணு புரமே. 10

கலமார் கடல்போல் வளமார் தருநற்
புலமார் தருவே ணுபுரத் திறையை
நலமார் தருஞா னசம்பந் தன்சொன்ன
குலமார் தமிழ்கூ றுவர்கூர் மையரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - காந்தாரம்*** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பூதத்தின் படையினீர் பூங்கொன்றைத் தாரினீர்
ஓதத்தின் ஒலியொடும் உம்பர்வா னவர்புகுந்து
வேதத்தின் இசைபாடி விரைமலர்கள் சொரிந்தேத்தும்
பாதத்தீர் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே. 1

சுடுகாடு மேவினீர் துன்னம்†பெய் கோவணந்தோல்
உடையாடை யது**கொண்டீர் உமையாளை யொருபாகம்
அடையாளம் அதுகொண்டீர் அங்கையினிற் பரசுஎனும்
படையாள்வீர் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே. 2

கங்கைசேர் சடைமுடியீர் காலனைமுன் செற்றுகந்தீர்
திங்களோ டிளஅரவந் திகழ்சென்னி வைத்துகந்தீர்
மங்கையோர் கூறுடையீர் மறையோர்கள் நிறைந்தேத்தப்
பங்கயஞ்சேர் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே. 3

நீர்கொண்ட சடைமுடிமேல் நீள்மதியம் பாம்பினொடும்
ஏர்கொண்ட கொன்றையினோ டெழில்மத்தம் இலங்கவே
சீர்கொண்ட மாளிகைமேற் சேயிழையார் வாழ்த்துரைப்பக்
கார்கொண்ட வேணுபுரம் பதியாகக் கலந்தீரே. 4

ஆலைசேர் தண்கழனி அழகாக நறவுண்டு
சோலைசேர் வண்டினங்கள் இசைபாடத் தூமொழியார்
காலையே புகுந்திறைஞ்சிக் கைதொழமெய் மாதினொடும்
பாலையாழ் வேணுபுரம் பதியாகக் கொண்டீரே. 5

---

* இப்பதிகத்தில் 11-ம் செய்யுள் மறைந்துபோயிற்று.
† துன்னம் – கிழிவு ** உடையாயவது என்றும் பாடம்.

மணிமல்கு மால்வரைமேல் மாநிலொடு மகிழ்ந்திருந்தீர்
துணிமல்கு கோவணத்தீர் சுடுகாட்டில் ஆட்டுகந்தீர்
பணிமல்கு மறையோர்கள் பரிந்திறைஞ்ச வேணுபுரத்
தணிமல்கு கோயிலே கோயிலாக அமர்ந்தீரே. 6

நீலஞ்சேர் மிடற்றினீர் நீண்டசெஞ் சடையினீர்
கோலஞ்சேர் விடையினீர் கொடுங்காலன் தனைச்செற்றீர்
ஆலஞ்சேர் கழனி யழகார்வேணு புரம்அமருங்
கோலஞ்சேர் கோயிலே கோயிலாக் கொண்டீரே. 7

இரைமண்டிச்$ சங்கேறுங் கடல்சூழ்தென் இலங்கையர்கோன்
விரைமண்டு முடிநெரிய விரல்வைத்தீர் வரைதன்னிற்
கரைமண்டிப் பேரோதங் கலந்தெற்றுங் கடற்கவினார்
விரைமண்டு வேணுபுர மேயமர்ந்து மிக்கீரே. 8

தீயோம்பு மறைவாணர்க் காதியாந் திசைமுகன்மால்
போயோங்கி யிழிந்தாரும் போற்றரிய திருவடியீர்
பாயோங்கு மரக்கலங்கள் படுதிரையால் மொத்துண்டு
சேயோங்கு வேணுபுரஞ் செழும்பதியாத் திகழ்ந்தீரே. 9

நிலையார்ந்த வுண்டியினர் நெடுங்குண்டர் சாக்கியர்கள்
புலையாளர் அறவுரையைப் போற்றாதுன் பொன்னடியே
நிலையாகப் பேணீநீ சரணென்றார் தமையென்றும்
விலையாக ஆட்கொண்டு வேணுபுரம் விரும்பினையே. 10 - 11

திருச்சிற்றம்பலம்

---

## [திருப்புகலி]*

பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விதியாய் விளைவாய் விளைவின் பயனாகிக்
கொதியா வருகூற் றையுதைத் தவர்சேரும்
பதியா வதுபங் கயநின் றலரத்தேன்
பொதியார் பொழில்சூழ் புகலிந் நகர்தானே. 1

---

$ திரைமண்டிச் என்றும் பாடம். * திருப்புகலி - சீகாழி. சூரபதுமனுக்கு ஆற்றாத தேவர்கள் புகலடைந்த இடமாதலால் இப்பெயர் பெற்றது.

ஒன்றார்புர மூன்று மெரித்த ஒருவன்
மின்றாரிடை யாளொடுங் கூடிய வேடந்
தன்றாலுறை வாவது தண்கடல் சூழ்ந்த
பொன்றார் வயற்பூம் புகலிந் நகர்தானே. 2

வலியின்மதி செஞ்சடை வைத்தமணாளன்
புலியின்அதள் கொண்டரை யார்த்த புனிதன்
மலியும்பதி மாமறை யோர்நிறைந் தீண்டிப்
பொலியும் புனற்பூம் புகலிந் நகர்தானே. 3

கயலார்தடங் கண்ணி யொடும்மெரு தேறி
அயலார்கடை யிற்பலி கொண்ட அழகன்
இயலாலுறை யும்மிடம் எண்திசை யோர்க்கும்
புயலார்கடற் பூம்புக லிந்நகர் தானே. 4

காதார்கன பொற்குழை தோடதி லங்கத்
தாதார்மலர் தண்சடை* யேற முடித்து
நாதான் உறையும் மிடமா வதுநாளும்
போதார்பொழிற் பூம்புக லிந்நகர் தானே. 5

வலமார்படை மான்மழு** ஏந்திய மைந்தன்
கலமார்கடல் நஞ்சமு துண்ட கருத்தன்
குலமார்பதி கொன்றைகள் பொன்சொரி யத்தேன்
புலமார்வயற் பூம்புக லிந்நகர் தானே. 6

கறுத்தான்கன லால்மதில் மூன்றையும் வேவச்
சொறுத்தான்திக ழுங்கடல் நஞ்சமு தாக
அறுத்தான்அயன் தன்சிரம் ஐந்திலும் ஒன்றைப்
பொறுத்தானிடம் பூம்புக லிந்நகர் தானே. 7

தொழிலால்மிகு தொண்டர்கள் தோத்திரஞ் சொல்ல
எழிலார்வரை யாலன் றரக்கனைச் செற்ற
கழலானுறை யும்மிடங் கண்டல்கள் மிண்டிப்
பொழிலால்மலி பூம்புக லிந்நகர் தானே. 8

மாண்டார்சுட லைப்பொடி பூசி மயானத்
தீண்டாநட மாடிய வேந்தன்றன் மேனி

---

*தன்சடை என்றும் பாடம். **மாமழு என்றும் பாடம்.

நீண்டானிரு வர்க்கெரி யாய்அர வாரம்
பூண்டான்நகர் பூம்புக லிந்நகர் தானே. 9

உடையார்துகில் போர்த்துழல் வார்சமண் கையர்
அடையாதன சொல்லுவர் ஆதர்கள் ஓத்தைக்
கிடையாதவன் தன்நகர் நன்மலி பூகம்
புடையார்தரு பூம்புக லிந்நகர் தானே. 10

இரைக்கும்புனல் செஞ்சடை வைத்தஎம் மான்றன்
புரைக்கும்பொழிற் பூம்புக லிந்நகர் தன்மேல்
உரைக்குந்தமிழ் ஞானசம் பந்தனெண் மாலை
வரைக்குந்தொழில் வல்லவர் நல்லவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஆடல் அரவசைத்தான் அருமாமறை தான்விரித்தான் கொன்றை
சூடிய செஞ்சடையான் சுடுகா டமர்ந்தபிரான்
ஏடவிழ் மாமலையாள் ஒருபாகம் அமர்ந்தடியார் ஏத்த
ஆடிய எம்மிறையூர் புகலிப் பதியாமே. 1

ஏல மலிகுழலார் இசைபாடி யெழுந்தருளாற் சென்று
சோலை மலிசுனையிற் குடைந்தாடித் துதிசெய்ய
ஆலை மலிபுகைபோ யண்டர்வானத்தை மூடிநின்று நல்ல
மாலை யதுசெய்யும் புகலிப் பதியாமே. 2

ஆறணி செஞ்சடையான் அழகார்புர மூன்றும்அன்று வேவ
நீறணி யாகவைத்த நிமிர்புன்சடை எம்இறைவன்
பாறணி வெண்டலையிற் பகலேபலி யென்றுவந்து நின்ற
வேறணி கோலத்தினன் விரும்பும் புகலியதே. 3

வெள்ள மதுசடைமேற் கரந்தான் விரவார்புரங்கள் மூன்றுங்
கொள்ள எரிமடுத்தான் குறைவின்றி யுறைகோயில்
அள்ளல் விளைகழனி யழகார்விரைத் தாமரைமேல் அன்னம்
புள்ளினம் வைகியெழும் புகலிப் பதிதானே. 4

சூடு மதிச்சடைமேற் சுரும்பார்மலர்க் கொன்றைதுன்ற நட்டம்
ஆடும் அமரர்பிரான் அழகாருமை யோடும்உடன்

வேடு படநடந்த விகிர்தன் குணம்பரவித் தொண்டர்
பாட இனிதுறையும் புகலிப் பதியாமே. 5

மைந்தணி சோலையின்வாய் மதுப்பாய்வரி[1] வண்டினங்கள் வந்து
நந்திசை பாடநடம் பயில்கின்ற நம்பன் இடம்
அந்திசெய் மந்திரத்தால் அடியார்கள் பரவியெழ விரும்பும்
புந்திசெய் நான்மறையோர் புகலிப் பதிதானே. 6

மங்கையோர் கூறுகந்த மழுவாளன் வார்சடைமேல் திங்கள்
கங்கை தனைக்கரந்த கறைக்கண்டன் கருதும்இடம்
செங்கயல் வார்கழனி திகழும் புகலிதனைச் சென்றுதம்
அங்கையி னல்தொழுவார் அவலம் அறியாரே. 7

வில்லிய[2] நுண்ணிடையாள்[3] உமையாள் விருப்பனவன் நண்ணும்
நல்லிட மென்றறியான் நலியும் விறலரக்கன்
பல்லொடு தோள்நெரிய விரலூன்றிப் பாடலுமே கைவாள்
ஒல்லை அருள்புரிந்தான் உறையும் புகலியதே. 8

தாதலர் தாமரைமேல் அயனுந் திருமாலுந் தேடி
ஓதியுங் காண்பரிய உமைகோன் உறையுமிடம்
மாதவி[4] வான்வகுளம்[5] மலர்ந்தெங்கும் விரைதோய வாய்ந்த
போதலர் சோலைகள்சூழ் புகலிப் பதிதானே. 9

வெந்துவர் மேனியினர் விரிகோவணம் நீத்தார் சொல்லும்
அந்தர ஞானமெல்லாம் அவையோர் பொருளென்னேல்
வந்தெதி ரும்புரமூன் றெரித்தான் உறைகோயில் வாய்ந்த
புந்தியி னார்பயிலும் புகலிப் பதிதானே. 10

வேதமோர் கீதம்உணர் வாணர்தொழு தேத்த மிகுவாசப்
போதனைப் போல்மறையோர் பயிலும் புகலிதன்னுள்
நாதனை ஞானமிகு சம்பந்தன் தமிழ்மாலை நாவில்
ஓதவல் லார்உலகில் உறுநோய் களைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

[1] மதுப்பாய்விரை என்றும் பாடம். [2] வில்லிய - ஒளிபொருந்திய.
[3] வல்லிய னுண்ணிடை என்றும் பாடம். [4] மாதவி - குருக்கத்தி.
[5] வகுளம் - மகிழமரம்.

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

உகலி யாழ்கட லோங்கு பாருளீர்
அகலி யாவினை யல்லல் போயறும்
இகலி யார்புர மெய்த வன்உறை
புகலி யாம்நகர் போற்றி வாழ்மினே. 1

பண்ணி யாள்வதோ ரேற்றர் பால்மதிக்
கண்ணி யார்கமழ் கொன்றை சேர்முடிப்
புண்ணி யன்உறை யும்பு கலியை
நண்ணு மின்நல மான வேண்டிலே. 2

வீசு மின்புரை காதன் மேதகு
பாச வல்வினை தீர்த்த பண்பினன்
பூசு நீற்றினன் பூம்பு கலியைப்
பேசு மின்பெரி தின்ப மாகவே.[1] 3

கடிகொள் கூவிளம் மத்தம்[2] வைத்தவன்
படிகொள் பாரிடம் பேசும் பான்மையன்
பொடிகொள் மேனியன் பூம்பு கலியுள்
அடிகளை யடைந் தன்பு செய்யுமே.[3] 4

பாதத் தாரொலி பல்சி லம்பினன்
ஓதத் தார்விட முண்ட வன்படைப்
பூதத் தான்புக லிந்ந கர்தொழ
ஏதத் தார்க்கிட மில்லை யென்பரே. 5

மறையி னன்ஒலி மல்கு வீணையன்
நிறையி னார்நிமிர் புன்ச டையனெம்
பொறையி னுறை யும்பு கலியை
நிறையி னல்தொழ நேச மாகுமே. 6

கரவி டைமனத் தாரைக் காண்கிலான்
இரவி டைப்பலி கொள்ளும் எம்மிறை
பொருவி டைஉயர்த் தான்பு கலியைப்
பரவி டப்பயில் பாவம் பாறுமே. 7

---

[1] மாகுமே என்றும் பாடம். [2] மத்தம் - ஊமத்தை. [3] செய்ம்மினே என்றும் பாடம்.

அருப்பி னார்முலை மங்கை பங்கினன்
விருப்பி னன்அரக் கன்உ ரஞ்செகும்
பொருப்பி னன்பொழி லார்பு கலியூர்
இருப்பி னனடி யேத்தி வாழ்த்துமே. 8

மாலும் நான்முகன் தானும் வார்கழற்
சீல மும்முடி தேட நீண்டெரி
போலும் மேனியன் பூம்பு கலியுள்
பால தாடிய பண்பன் நல்லனே. 9

நின்று துய்ப்பவர் நீசர் தேரர்சொல்
ஒன்ற தாகவை யாவு ணர்வினுள்[3]
நின்ற வன்நிக ழும்பு கலியைச்
சென்று கைதொழச் செல்வ மாகுமே. 10

புல்லம்[4] ஏறிதன் பூம்பும் கலியை
நல்ல ஞானசம் பந்தன் நாவினாற்
சொல்லும் மாலைஈ ரைந்தும் வல்லவர்க்
கில்லை யாம்வினை இருநி லத்துளே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவிராகம்* பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

முன்னிய கலைப்பொருளும் மூவுலகில் வாழ்வும்
பன்னிய வொருத்தர்பழ வூர்வினவின் ஞாலந்
துன்னிஇமை யோர்கள்துதி செய்துமுன் வணங்குஞ்
சென்னியர் விருப்புறு திருப்புகலி யாமே. 1

வண்டிரை மதிச்சடை மிலைத்தபுனல் சூடிப்
பண்டெரிகை யாடுபர மன்பதிய தென்பர்
புண்டரிக வாசமது வீசமலர்[1] சோலைத்
தெண்டிரை கடற்பொலி திருப்புகலி யாமே. 2

பாவணவு சிந்தையவர் பத்தரொடு கூடி
நாவணவும் அந்தணன் விருப்பிடம தென்பர்

---

[3]வையார் உணர்வினுள் என்றும் பாடம். [4] புல்லம் - இடபம.
*இஃது ஒரு முடுகிசையைக் குறிப்பது. [1]வீசுமலர்ச் என்றும் பாடம்.

பூவணவு சோலையிருள் மாலையெதிர் கூரத்
தேவண விழா[2] வளர் திருப்புகலி யாமே. 3

மைதவழும் மாமிடறன் மாநடம தாடிக்
கைவளையி னாளொடு கலந்தபதி யென்பர்
செய்பணி பெருத்தெழும் உருத்திரர்கள் கூடித்
தெய்வம் திணக்குறு திருப்புகலி யாமே. 4

முன்னமிரு மூன்றுசம யங்களவை யாகிப்
பின்னையருள் செய்தபிறை யாளனுறை கோயில்
புன்னைய மலர்ப்[3] பொழில் களக்கினொளி காட்டச்
செந்நெல்வய லார்தரு திருப்புகலி யாமே. 5

வங்கமலி யுங்கடல் விடத்தினை நுகர்ந்த
அங்கணன் அருத்திசெய் திருக்குமிட மென்பர்
கொங்கண வியன்பொழிலின் மாசுபனி மூசத்
தெங்கணவு தேன்மலி திருப்புகலி யாமே. 6

நல்குரவும் இன்பமும் நலங்களவை யாகி
வல்வினைகள் தீர்த்தருளும் மைந்தனிட மென்பர்
பல்கு[4] மடி யார்கள்படி யாரஇசை பாடிச்
செல்வமறை யோருறை திருப்புகலி யாமே. 7

பரப்புறு புகழ்ப்பெருமை யாளன்வரை தன்னால்
அரக்கனை யடர்த்தருளும் அண்ணலிட மென்பர்
நெருக்குறு கடல்திரைகள் முத்தமணி சிந்தச்
செருக்குறு பொழிற்பொலி திருப்புகலி யாமே. 8

கோடலொடு கூன்மதி குலாயசடை தன்மேல்
ஆடரவம் வைத்தருளும் அப்பன்இரு வர்க்கும்
நேடஎரி யாகிஇரு பாலும்அடி பேணித்
தேடவுறை யும்நகர் திருப்புகலி யாமே. 9

கற்றமண ருற்றுலவு தேரருரை செய்த
குற்றமொழி கொள்கையதி லாதபெரு மானூர்
பொற்றொடி மடந்தையரும் மைந்தர்புல னைந்துஞ்
செற்றவர் விருப்புறு[5] திருப்புகலி யாமே. 10

---

[2]தேவணர் விழா என்றும் பாடம். [3]புன்னைமலரப் என்றும் பாடம்.
[4]மல்கு என்றும் பாடம். [5]செற்றவர் வனப்புறு என்றும் பாடம்.

செந்தமிழ் பரப்புறு திருப்புகலி தன்மேல்
அந்தமுத லாகிநடு வாயபெரு மானைப்
பந்தனுரை செந்தமிழ்கள் [6] பத்துமிசை கூற
வந்தவண மேத்துமவர் வானமுடை யாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

உருவார்ந்த மெல்லியலோர் பாகமுடையீர் அடைவோர்க்குக்
கருவார்ந்த வானுலகங் காட்டிக்கொடுத்தல் கருத்தானீர்
பொருவார்ந்த தெண்கடலொண் சங்கந்திளைக்கும் பூம்புகலித்
திருவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. 1

நீரார்ந்த செஞ்சடையீர் நிரையார்கழல்சேர் பாதத்தீர்
ஊரார்ந்த சில்பலியீர் உழைமானுரிதோ லாடையீர்
போரார்ந்த தெண்டிரைசென் றணையுங்கானற் பூம்புகலிச்
சீரார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 2

அழிமல்கு பூம்புனலும் அரவுஞ்சடைமே லடைவெய்த
மொழிமல்கு மாமறையீர் கறையார்கண்டத் தெண்தோளீர்
பொழின்மல்கு வண்டினங்கள் அறையுங்கானற் பூம்புகலி
எழின்மல்கு கோயிலே கோயிலாக இருந்தீரே. 3

கையிலார்ந்த வெண்மழுவொன் றுடையீர்கடிய கரியின்தோல்
மயிலார்ந்த சாயல்மட மங்கைவெருவ மெய்போர்த்தீர்
பயிலார்ந்த வேதியர்கள் பதியாய்விளங்கும் பைம்புகலி
எயிலார்ந்த கோயிலே கோயிலாக இசைந்தீரே. 4

காவார்ந்த பாடலீர் ஆடலரவம் அரைக்கார்த்தீர்
பாவார்ந்த பல்பொருளின் பயன்களானீர் அயன்பேணும்
பூவார்ந்த[1] பொய்கைகளும் வயலுஞ்சூழ்ந்த பொழிற்புகலித்
தேவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. 5

மண்ணார்ந்த மண்முழவந் ததும்பமலையான் மகளென்னும்
பெண்ணார்ந்த மெய்மகிழப் பேணியெரிகொண் டாடினீர்

---

[6] செய்தமிழ்கள்என்றும் பாடம். [1] அயன் பேணும் பூ வார்ந்த - தாமரை மலர் நிறைந்த.

விண்ணார்ந்த மதியமிடை மாடத்தாரும் வியன்புகலிக்
கண்ணார்ந்த கோயிலே கோயிலாகக் கலந்தீரே. 6

களிபுல்கு வல்லவுணர் ஊர்மூன் றெரியக் கணைதொட்டீர்
அளிபுல்கு பூமுடியீர் அமரரேத்த அருள்செய்தீர்
தெளிபுல்கு தேன்இனமும் மலருள்விரைசேர் திண்புகலி
ஒளிபுல்கு கோயிலே கோயிலாக உகந்தீரே. 7

பரந்தோங்கு பல்புகழ்சேர் அரக்கர்கோனை வரைக்கீழிட்
டுரந்தோன்றும் பாடல்கேட் டுகவையளித்தீர் உகவாதார்
புரந்தோன்று மும்மதிலும் எரியச்செற்றீர் பூம்புகலி
வரந்தோன்று கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 8

சலந்தாங்கு தாமரைமேல் அயனுந்தரணி யளந்தானுங்
கலந்தோங்கி வந்திழிந்துங் காணாவண்ணங் கனலானீர்
புலந்தாங்கி ஐம்புலனுஞ் செற்றார்வாழும் பூம்புகலி
கலந்தாங்கு கோயிலே கோயிலாக நயந்தீரே. 9

நெடிதாய வன்சமணும் நிறைவொன்றில்லாச் சாக்கியருங்
கடிதாய கட்டுரையாற் கழறமேலோர் பொருளானீர்
பொடியாரும் மேனியினீர் புகலிமறையோர் புரிந்தேத்த
வடிவாருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 10

ஒப்பரிய பூம்புகலி ஓங்குகோயில் மேயானை
அப்பரிசிற் பதியான [1] அணிகொள்ஞான சம்பந்தன்
செப்பரிய தண்தமிழால் தெரிந்தபாட லிவைவல்லார்
எப்பரிசில் இடர்நீங்கி இமையோருலகத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - செவ்வழி* [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விடையதேறி வெறிஅக் கரவார்த்த விமலனார்
படையதாகப் பரசு தரித்தார்க் கிடமாவது
கொடையிலோவார் குலமும் முயர்ந்தம் மறையோர்கள்தாம்
புடைகொள்வேள்விப் புகையும்பர் உலாவும் புகலியே. 1

---

[1] பதியானை என்றும் பாடம். *இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று.

வேலைதன்னில் மிகுநஞ்சினை யுண்டிருள் கண்டனார்
ஞாலமெங்கும் பலிகொண் டுழல்வார் நகராவது
சாலநல்லார் பயிலும் மறைகேட்டுப் பதங்களைச்
சோலைமேவுங் கிளித்தான் சொற்பயிலும் புகலியே. 2

வண்டுவாழுங் குழல்மங்கை யோர்கூ றுகந்தார்மதித்
துண்டமேவுஞ் சுடர்த்தொல் சடையார்க் கிடமாவது
கெண்டைபாய மடுவில் லுயர்கேதகை மாதவி
புண்டரீகம் மலர்ப்பொய்கை நிலாவும் புகலியே. 3

திரியும்மூன்று புரமும் எரித்துத் திகழ்வானவர்க்
கரியபெம்மான் அரவக் குழையார்க் கிடமாவது
பெரியமாடத் துயருங் கொடியின் மிடைவால்வெயிற்
புரிவிலாத தடம்பூம் பொழில்சூழ் தண்புகலியே. 4

ஏவிலாருஞ் சிலைப்பார்த் தனுக்கின் னருள்செய்தவர்
நாவினாள்[1]மூக் கரிவித்த நம்பர்க் கிடமாவது
மாவிலாருங் கனிவார் கிடங்கில் விழவாளைபோய்ப்
பூவிலாரும் புனற்பொய்கை யில்வைகும் புகலியே. 5

தக்கன்வேள்வி தகர்த்த தலைவன் தையலாளொடும்
ஒக்கவேஎம் உரவோ னுறையும் இடமாவது
கொக்கு[2]வாழை பலவின் கொழுந்தண் கனிகொன்றைகள்
புக்கவாசப் புன்னை பொன்திரள் காட்டும் புகலியே. 6 - 7

தொலைவிலாத அரக்கன் உரத்தைத் தொலைவித்தவன்
தலையுந்தோளுந் நெரித்த சதுரர்க் கிடமாவது
கலையின்மேவும் மனத்தோர் இரப்போர்க் குக்கரப்பிலார்
பொலியும்அந்தண் பொழில் சூழ்ந்தழ காரும் புகலியே. 8

கீண்டுபுக்கார் பறந்தார் அயர்ந்தார்[3] கேழல[4]ன்னமாய்க்
காண்டுமென்றார் கழல்பணிய நின்றார்க் கிடமாவது
நீண்டநாரை இரையாரல்[5] வாரநிறை செறுவினிற்
பூண்டுமிக்கவ் வயல்காட்டும் அந்தண் புகலியதே. 9

தடுக்குடுத்துத் தலையைப் பறிப்பா ரொடுசாக்கியர்
இடுக்கணுய்ப்பார் இறைஞ்சாத எம்மாற் கிடமாவது

---

[1]நாவினாள்-சரசுவதி. [2]கொக்கு-மாமரம். [3] பறந்தேயுயர்ந்தார் என்றும் பாடம். [4] கேழல்-பன்றி. [5] ஆரல்-ஓர் மீன்.

மடுப்படுக்குஞ் சுருதிப் பொருள்வல் லவர்வானுளோர்
அடுத்தடுத்துப் புகுந்தீண்டும் அந்தண் புகலியதே. 10

எய்தவொண்ணா இறைவன் உறைகின்ற புகலியைக்
கைதவமி[4]ல்லாக் கவுணியன்[5] ஞான சம்பந்தன்சீர்
செய்தபத்தும் இவைசெப்ப வல்லார் சிவலோகத்தில்
எய்திநல்ல இமையோர்க ளேத்த இருப்பார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

## நாலடிமேல்வைப்பு*

### பண் - காந்தாரபஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

இயலிசை[1] யெனும்பொரு ளின்திறமாம்
புயலன மிடறுடைப் புண்ணியனே
கயலன அரிநெடுங் கண்ணியொடும்
அயலுல க[2] டிதொழ அமர்ந்தவனே
கலனாவது வெண்டலை கடிபொழிற் புகலிதன்னுள்
நிலனாள்தொறும் இன்புற நிறைமதி[3] யருளினனே. 1

நிலையுறும் இடர்நிலை யாதவண்ணம்
இலையுறு மலர்கள்கொண் டேத்துதும்யாம்
மலையினில் அரிவையை வெருவவன்தோல்
அலைவரு மதகரி யுரித்தவனே
இமையோர்கள்நின் தாள்தொழ எழில்திகழ் பொழிற்புகலி
உமையாளொடு மன்னினை உயர்திரு வடியிணையே. 2

பாடினை அருமறை வரன்முறையால்
ஆடினை காணமுன் அருவனத்திற்
சாடினை காலனைத் தயங்கொளிசேர்
நீடுவெண் பிறைமுடி நின்மலனே

---

[4] கைதவம்—துன்பம்; வஞ்சனை. [5] கவுணியன் - கௌண்டின்ய கோத்திரத்தில் வந்தவன். * முன் நான்கடிகள் ஒருதன்மையாக வும், மேல்வரும் இரண்டடிகள் வேறுமோர் தன்மையாகவும் ஒட்டி வருவது நாலடிமேல்வைப்பு ஆகும். [1] இயல் - இயற்றமிழ், இசை- இசைத்தமிழ். [2] அயல் உலகு-விண்ணுலகம். [3] நிறைமதி - ஞானம்.

நினையேயடி யார்தொழ நெடுமதிற் புகலிந்நகர்
தனையேயிட மேவினை தவநெறி[4] அருளெமக்கே. 3

கிழல்திகழ் மழுவினை யானையின்தோல்
அழல்திகழ் மேனியில் அணிந்தவனே
கழல்திகழ் சிலம்பொலி யலம்பநல்ல
முழவொடும் அருநட முயற்றினனே
முடிமேல்மதி சூடினை முருகமர் பொழிற்புகலி[5]
அடியாரவ ரேத்துற அழகொடும் இருந்தவனே. 4

கருமையின் ஒளிர்கடல் நஞ்சமுண்ட
உரிமையின் உலகுயிர் அளித்தநின்றன்
பெருமையை நிலத்தவர் பேசினல்லால்
அருமையில் அளப்பரி தாயவனே
அரவேரிடை யாளொடும் அலைகடல் மலிபுகலிப்
பொருள்சேர்தர நாடொறும் புவிமிசைப்பொலிந்தவனே. 5

அடையரி மாவொடு வேங்கையின்தோல்
புடைபட அரைமிசைப் புனைந்தவனே
படையுடை நெடுமதிற் பரிசழித்த
விடையுடைக் கொடிமல்கு வேதியனே
விகிர்தாபரமா நின்னை விண்ணவர் தொழப்புகலித்
தகுவாய்மட மாதொடுந் தாள்பணிந் தவர்தமக்கே. 6

அடியவர் தொழுதெழ அமரரேத்தச்
செடியவல் வினைபல தீர்ப்பவனே
துடியிடை அகலல்குல் தூமொழியைப்
பொடியணி மார்புறப் புல்கினனே
புண்ணியா புனிதா புகரேற்றினை புகலிந்நகர்
நண்ணினாய் கழலேத்திட நண்ணகிலா வினையே. 7

இரவொடு பகலதாம் எம்மானுன்னைப்[6]
பரவுதல் ஒழிகிலேன் வழியடியேன்
குர[7] விரி நறுங்கொன்றை கொண்டணிந்த
அரவிரி சடைமுடி ஆண்டகையே

---

[4] தவநெறி - சிவபூசை. [5] புகலியுள் என்றும் பாடம். [6] எம்மானின்னை என்றும் பாடம். [7] குர - குராமலர்.

அனமென்னடை யாளொடும் அதிர்கடல் இலங்கைமன்னை
இனமார்தரு தோளடர்த் திருந்தனை புகலியுளே. 8

உருகிட வுவகைதந் துடலினுள்ளால்
பருகிடும் அமுதன பண்பினனே
பொருகடல் வண்ணனும் பூவுளானும்
பெருகிடும் அருளெனப் பிறங்கெரியாய்
உயர்ந்தாயினி நீயெனை ஒண்மலரடி யிணைக்கீழ்
வயந்தாங் குறநல்கிடு வளர்மதிற் புகலிமனே. 9

கையினி லுண்பவர் கணிகைநோன்பர்[7]
செய்வன தவமலாச் செதுமதியார்
பொய்யவ ரு[8]ரைகளைப் பொருளெனாத
மெய்யவ ரடிதொழ விரும்பினனே
வியந்தாய்வெள் ளேற்றினை விண்ணவர் தொழுபுகலி
உயர்ந்தார்பெருங் கோயிலுள்[9] ஒருங்குடன் இருந்தவனே. 10

புண்ணியர் தொழுதெழு புகலிந்நகர்
விண்ணவ ரடிதொழ விளங்கினானை
நண்ணிய ஞானசம் பந்தன்வாய்மை
பண்ணிய அருந்தமிழ் பத்தும்வல்லார்
நடலை[10]யவை யின்றிப்போய் நண்ணுவர் சிவனுலகம்
இடராயின இன்றித்தாம் எய்துவர் தவநெறியே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

கண்ணுத லானும்வெண் ணீற்றினா னுங்கழ லார்க்கவே
பண்ணிசை பாடநின் றாடினா னும்பரஞ் சோதியும்
புண்ணிய நான்மறை யோர்களேத் தும்புக லிந்நகர்ப்
பெண்ணினல் லாளொடும் வீற்றிருந் தபெரு மானன்றே.[1] 1

---

[7] கணிகை நோன்பர் - சமணர்; நோன்பவர் என்றும் பாடம். [8] இவ்வடிகள் சமணர்களின் செயல்களைக் குறிக்கும். [9] பெருங்கோயில் - தோணிபுரம். [10] நடலை - துன்பம். [1] இஃது உமாமகேசுவரர் வடிவைக் குறிப்பது.

சாம்பலோ டுந்தழ லாடினு னுஞ்சடை யின்மிசைப்
பாம்பினே டும்மதி சூடின னும்பசு வேறியும்
பூம்படு கல்விள வாளைபா யும்புக லிந்நகர்க்
காம்பன தோளியொ டும்மிருந் தகட வுளன்றே. 2

கருப்புநல் வார்சிலைக் காமன்வே வக்கடைக் கண்டானும்
மருப்புநல் லானையின் ஈருரி போர்த்தம ணாளனும்
பொருப்பன மாமணி மாடமோங் கும்புக லிந்நகர்
விருப்பின்நல் லாளொடும் வீற்றிருந் தவிம லனன்றே. 3

அங்கையில் அங்கழல் ஏந்தின னும்அழ காகவே
கங்கையைச் செஞ்சடை சூடின னுங்கட லின்னிடைப்
பொங்கிய நஞ்சமு துண்டவ னும்புக லிந்நகர்
மங்கைநல் லாளொடும் வீற்றிருந் தமண வாளனே. 4

சாமநல் வேதனுந் தக்கன்றன் வேள்வித கர்த்தானும்
நாமநூ றாயிரஞ்[1] சொல்லிவா னோர்தொழு நாதனும்
பூமல்கு தண்பொழில் மன்னுமந் தண்புக லிந்நகர்க்
கோமள மாதொடும் வீற்றிருந் தகுழ கனன்றே. 5

இரவிடை யொள்ளெரி யாடின னும்இமை யோர்தொழச்
செருவிடை முப்புரந் தீயெரித் தசிவ லோகனும்
பொருவிடை யொன்றுகந் தேறின னும்புக லிந்நகர்
அரவிடை மாதொடும் வீற்றிருந் தஅழ கனன்றே. 6

சேர்ப்பது திண்சிலை மேவின[2] னுந்திகழ் பாலன்மேல்
வேர்ப்பது செய்தவெங் கூற்றுதைத் தானும்வேள் விப்புகை
போர்ப்பது செய்தணி மாடமோங் கும்புக லிந்நகர்ப்
பார்ப்பதி யோடுடன் வீற்றிருந் தபர மனன்றே. 7

கன்னெடு மால்வரைக் கீழரக் கன்இடர் கண்டானும்
வின்னெடும் போர்விறல் வேடனு கிவிச யற்கொரு
பொன்னெடுங் கோல்கொடுத் தானுமந் தண்புக லிந்நகர்
அன்னமன் னந்நடை மங்கையொ டும்அமர்ந் தானன்றே. 8

பொன்னிற நான்முகன் பச்சையான் என்றிவர் புக்குழித்
தன்னையின் னானெனக் காண்பரி யதழற் சோதியும்

---

[1] நூறாயிரம் - லட்சம். [2] சேர்ப்பொழுதின் மலை வேவினு என்றும், சேர்ப்பொழுது மலை மேவினு என்றும் பாடம்.

புன்னைபொன் தாதுதிர் மல்குமந் தண்புக லிந்நகர்
மின்னிடை மாதொடும் வீற்றிருந் தவிம லனன்றே. 9

பிண்டியும் போதியும்[3] பேணுவார் பேச்சினைப்[4] பேணாதகோர்
தொண்டருங் காதல்செய் சோதியா யசுடர்ச் சோதியான்
புண்டரீ கம்மலர்ப் பொய்கைசூழ்ந் தபுக லிந்நகர்
வண்டமர் கோதையோ டும்மிருந் தமண வாளனே. 10

பூங்கமழ் கோதையோ டும்மிருந் தான்புக லிந்நகர்ப்
பாங்கனை ஞானசம் பந்தன்சொன் னதமிழ் பத்திவை
ஆங்கமர் வெய்திய ஆதியா கஇசை வல்லவர்
ஓங்கம ராவதி யோர்தொழச் செல்வதும் உண்மையே. 11

திருச்சிற்றம்பலம்

---

## [திருப்புகலியும் திருவீழிமிழலையும்]

### வினாவுரை

### பண் - நட்டபாடை* [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**மை**ம்மரு பூங்குழல் கற்றைதுற்ற வாணுதல் மான்விழி மங்கையோடும், பொய்ம்மொழி யாமறை யோர்களேத்தப் புகலி நிலாவிய புண்ணியனே, எம்மிறை யேஇமை யாதமுக்கண் ஈச என் நேசஇதென் கொல்சொல்லாய், மெய்ம்மொழி நான்மறை யோர்மிழலை விண்ணிழி கோயில்[1] விரும்பியதே. 1

கழல்மல்கு பந்தொடம் மானைமுற்றில் கற்றவர் சிற்றிடைக் கன்னிமார்கள், பொழில்மல்கு கிள்ளையைச் சொற்பயிற்றும் புகலி நிலாவிய புண்ணியனே, எழில்மல ரோன்சிர மேந்திஉண் டோர் இன்புறு செல்வமி தென்கொல்சொல்லாய், மிழலையுள் வேதிய ரேத்திவாழ்த்த விண்ணிழி கோயில் விரும்பியதே. 2

கன்னிய ராடல் கலந்துமிக்க கந்துக வாடை கலந்துதுங்கப், பொன்னியல் மாடம் நெருங்குசெல்வப் புகலி நிலாவிய புண்ணி

---

[3] பிண்டி - அசோகு; போதி - அரசு. [4] பேணுவார் பேணைப் என்றும் பாடம். * இப்பதிகம் திருத்தோணியிலிருந்த காட்சியைத் திருவீழிமிழலையில் தரிசித்தபோது பாடியதாகும். [1] விண்ணிழி கோயில் - (திருமால்) விண்ணுலகினின்றும் கொணர்ந்த விமானம்.

ய்னே, இன்னிசை யாழ்மொழி யாளோர்பாகத் தெம்மிறை யேஇது என்கொல் சொல்லாய், மின்னியல் நுண்ணிடை யார் மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 3

நாகப ணந்திகழ் அல்குல்மல்கு நன்னுதல் மான்விழி மங்கை யோடும், பூகவ னம்பொழில் சூழ்ந்தஅந்தண் புகலி நிலாவிய புண்ணியனே, ஏகபெ ருந்தகை யாயபெம்மான் எம்மிறையேஇது என் கொல்சொல்லாய், மேகமு ரிஞ்செயில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 4

சந்தள றேறுத டங்கொள்கொங்கைத் தையலொ டுந்தள ராதவாய்மைப், புந்தியி னல்மறை யோர்களேத்தும் புகலி நிலா விய புண்ணியனே, எந்தமை யாளுடை ஈசஎம்மான் எம்மிறை யேஇது என்கொல்சொல்லாய், வெந்தவெண் நீறணி வார்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 5

சங்கொளி இப்பி[2] சுறுமகரந் தாங்கி நிரந்து தரங்கம்மேன் மேற், பொங்கொலி நீர்சுமந் தோங்குசெம்மைப் புகலி நிலாவிய புண்ணியனே, எங்கள்பி ரானிமை யோர்கள்பெம்மான் எம் மிறை யேஇது என்கொல்சொல்லாய், வெங்கதிர் தோய்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 6

காமனெ ரிப்பிழம் பாகநோக்கிக் காம்பன தோளியொ டுங் கலந்து, பூமரு நான்முகன் போல்வரேத்தப் புகலி நிலாவிய புண்ணியனே, ஈமவ னத்தெரி ஆட்டுகந்த எம்பெருமான்இது என் கொல்சொல்லாய், வீ[3]மரு தண்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 7

இலங்கையர் வேந்தெழில் வாய்த்ததிண்டோ ளிற்றல றவ்விர லொற்றியைந்து, புலங்களைக் கட்டவர் போற்றஅந்தண் புகலி நிலாவிய புண்ணியனே, இலங்கெரி யேந்திநின் றெல்லியாடும் எம்மிறை யேஇது என்கொல்சொல்லாய், விலங்கலொண் மாளிகை சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 8

செறிமுள ரித்தவி சேறியாறுஞ் செற்றதில்[4] வீற்றிருந் தானுமற்றைப், பொறியர வத்தணை யானுங்காணாப் புகலி

---

[2] கொலி இப்பி என்றும் பாடம்; ஒலித்தல் - தழைத்தல். [3] வீ - வண்டு. [4] சேறியாருஞ் சேற்றதில் என்றும் பாடம்.

நிலாவிய புண்ணியனே, எறிமழு வோடிள மான்கையின்றி யிருந் தபி ரான்இது என் கொல்சொல்லாய், வெறிகமழ் பூம்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 9

பத்தர் கணம்பணிந் தேத்தவாய்த்த பான்மைய தன்றியும் பல்சமணும், புத்தரும் நின்றலர் தூற்றஅந்தண் புகலி நிலாவிய புண்ணியனே, எத்தவத் தோர்க்குமி லக்காய்நின்ற எம்பெரு மான்இது என்கொல் சொல்லாய், வித்தகர் வாழ்பொழில் சூழ் மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 10

விண்ணிழி கோயில் விரும்பிமேவும் வித்தக மென்கொலி தென்று சொல்லிப், புண்ணிய னைப்புக லிந்நிலாவு பூங்கொடி யோடிருந் தானைப் போற்றி, நண்ணிய கீர்த்தி நலங்கொள்கேள்வி நான்மறை ஞானசம் பந்தன்சொன்ன, பண்ணியல் பாடல்வல் லார் களிந்தப் பாரொடு விண்பரி பாலகரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## [ திருவெங்குரு ]*

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காலைநன்மாமலர் கொண்டடிபரவிக் கைதொழுமாணியைக் கறுத்தவெங்காலன், ஓலமதிடமுன் னுயிரொடுமாள வுதைத்தவன் உமையவள் விருப்பன்எம்பெருமான், மாலைவந்தணுக ஓதம்வந் துலவி மறிதிரைசங்கொடு பவளம்முன்உந்தி, வேலைவந்தணையுஞ் சோலைகள் சூழ்ந்த வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 1

பெண்ணினைப்பாகம் அமர்ந்துசெஞ்சடைமேற் பிறையொடும் அரவினை யணிந்தழகாகப், பண்ணினைப்பாடி யாடிமுன்பலி கொள் பரமரெம்அடிகளார் பரிசுகள்பேணி, மண்ணினைமூடி வான்முகடேறி மறிதிரைகடல்முகந் தெடுப்பமற்றுயர்ந்து, விண் ணளவோங்கி வந்திழிகோயில் வெங்குருமேவியுள் வீற்றிருந் தாரே. 2

ஓரியல்பில்லா வுருவமதாகி யொண்திறல்வேடன துருவது கொண்டு, காரிகைகாணத் தனஞ்சயன்தன்னைக் கறுத்தவற்

---

* திருவெங்குரு - சீகாழி ; சுக்கிரன் பூசித்துத் தேவகுருவுக்கு இணையாகப் பெற்றமையால் இப்பெயர் பெற்றது.

களித்து[1] டன் காதல்செய்பெருமான், நேரிசையாக அறுபத[2]
முரன்று நிரைமலர்த்தாதுகள் மூசவிண்டுதிர்ந்து, வேரிகளெங்கும்
விம்மியசோலை வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 3

வண்டணைகொன்றை வன்னியுமத்தம் மருவியகூவிளம்
எருக்கொடுமிக்க, கொண்டணிசடையர் விடையினர்பூதங் கொடு
கொட்டி குடமுழாக் கூடியுமுழவப்,[3] பண்டிகழ்வாகப் பாடியொர்
வேதம் பயில்வர்முன்பாய்புனற் கங்கையைச்சடைமேல், வெண்
பிறைசூடி உமையவளோடும்வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே.4

சடையினர்மேனி நீறதுபூசித் தக்கைகொள்பொக்கண[4] மிட்
டுடனாகக், கடைதொறும்வந்து பலியதுகொண்டு கண்டவர்மன
மவை கவர்ந்தழகாகப், படையதுவேந்திப் பைங்கயற்கண்ணி[5]
உமையவள்பாகமும் அமர்ந்தருள்செய்து, விடையொடுபூதஞ்
சூழ்தரச் சென்று வெங்குரு மேவியுள் வீற்றிருந்தாரே. 5

கரைபொருகடலில் திரையதுமோதக் கங்குல்வந்தேறிய சங்க
மும் இப்பி, உரையுடைமுத்தம் மணலிடைவைகி ஓங்குவான் இரு
ளறத் துரப்பஎண்டிசையும், புரைமலிவேதம் போற்றுபூசுரர்கள்
புரிந்தவர் கலங்கொள்ஆ குதியினில்நிறைந்த, விரைமலிதூபம்
விசும்பினைமறைக்கும் வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 6

வல்லிநுண் இடையாள் உமையவள்தன்னை மருகிடவருமத
களிற்றினைமயங்க, ஒல்லையிற்பிடித்தங் குரித்தவள்வெருவல்
கெடுத்தவர் விரிபொழில் மிகுதிருஆலில், நல்லறம்உரைத்து
ஞானமோடிருப்ப[6] நலிந்திடலுற்று வந்தஅக்கருப்பு, வில்லியைப்
பொடிபட விழித்தவர்விரும்பி வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே.

பாங்கிலா அரக்கன் கயிலைஅன்றெடுப்பப் பலதலைமுடியொடு
தோளவைநெரிய, ஓங்கியவிரலால் ஊன்றியன்றவற்கே ஒளிதிகழ்
வாளது கொடுத்தழகாய, கோங்கொடுசெருந்தி கூவிளமத்தங்
கொன்றையுங்குலாவிய செஞ்சடைச்செல்வர், வேங்கைபொன்
மலரார்[7] விரைதருகோயில் வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே.8

---

[1] கறுத்ததற்களித்து என்றும் பாடம். [2] அறுபதம் — வண்டு. [3] கூடியமுழவம் என்றும் பாடம். [4] பொக்கணம் - சோளி. [5] பங்கயக்கண்ணி என்றும் பாடம். [6] இவ்வடிகள் தட்சிணாமூர்த்தியைக் குறிக்கும். [7] மலரா என்றும் பாடம்.

ஆறுடைச்சடையெம் அடிகளைக்காண அரியொடுபிரமனும் அளப்பதற்காகிச், சேறிடைதிகழ்வா னத்திடைபுக்குஞ் செலவறத் தவிர்ந்தனர் எழிலுடைத்திகழ்வெண், நீறுடைக்கோல மேனியர் நெற்றிக் கண்ணினர்விண்ணவர் கைதொழுதேத்த, வேறெமை யாள விரும்பிய விகிர்தர் வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 9

பாடுடைக்குண்டர் சாக்கியர்சமணர் பயில்தருமறவுரை விட்டழகாக,ஏடுடைமலராள் பொருட்டுவன்தக்கன் எல்லையில்வேள்வியைத் தகர்த்தருள்செய்து, காடிடைக்கடிநாய் கலந்துடன்சூழக் கண்டவர்வெருவுற விளித்துவெய்தாய, வேடுடைக்கோலம் விரும்பியவிகிர்தர் வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரே. 10

விண்ணியல்விமானம் விரும்பியபெருமான் வெங்குருமேவியுள் வீற்றிருந்தாரை, நண்ணியநூலன் ஞானசம்பந்தன் நவின்ற இவ்வாய்மொழி நலம்மிகுபத்தும், பண்ணியல்பாகப் பத்திமையாலே பாடியும் ஆடியும் பயில்வல்லோர்கள், விண்ணவர்விமானங் கொடுவரஏறி வியனுலகாண்டுவீற் றிருப்பவர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருமுக்கால்* பண் - சாதாரி** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விண்ணவர் தொழுதெழு வெங்குரு மேவிய
சுண்ணவெண் பொடியணி வீரே
சுண்ணவெண் பொடியணி வீருமதொழுகழல்
எண்ணவல் லாரிட ரிலரே. 1

வேதியர் தொழுதெழு வெங்குரு மேவிய
ஆதிய அருமறை யீரே
ஆதிய அருமறை யீருமை யலர்கொடு
ஓதிய ருணர்வுடை யோரே. 2

விளங்குதண் பொழிலணி வெங்குரு மேவிய
இளம்பிறை யணிசடை யீரே

---

* இப்பதிகத்தில் 11-ம் செய்யுள் சிதைந்து போயிற்று.
** இரண்டாமடியும் நான்காமடியும் முச்சீரால் முடிவது திருமுக்கால் ஆகும்.

இளம்பிறை யணிசடை யீரும திணையடி
உளங்கொள உறுபிணி யிலரே. 3

விண்டலர் பொழிலணி வெங்குரு மேவிய
வண்டமர் வளர்சடை யீரே
வண்டமர் வளர்சடை யீருமை வாழ்த்துமத்
தொண்டர்கள் துயர்பிணி யிலரே. 4

மிக்கவர் தொழுதெழு வெங்குரு மேவிய
அக்கினொ டரவசைத் தீரே
அக்கினொ டரவசைத் தீரும தடியிணை
தக்கவர் உறுவது தவமே. 5

வெந்தவெண் பொடியணி வெங்குரு மேவிய
அந்தமில் பெருமையி னீரே
அந்தமில் பெருமையி னீருமை யலர்கொடு
சிந்தைசெய் வோர்வினை சிதைவே. 6

விழமல்கு பொழிலணி வெங்குரு மேவிய
அழல்மல்கும் அங்கையி னீரே
அழல்மல்கும் அங்கையி னீருமை யலர்கொடு
தொழஅல்லல் கெடுவது துணிவே. 7

வித்தக மறையவர் வெங்குரு மேவிய
மத்தநன் மலர்புனை வீரே
மத்தநன் மலர்புனை வீரும தடிதொழுஞ்
சித்தம துடையவர் திருவே. 8

மேலவர் தொழுதெழு வெங்குரு மேவிய
ஆலநன் மணிமிடற் றீரே
ஆலநன் மணிமிடற் றீரும தடிதொழுஞ்
சீலம துடையவர் திருவே. 9

விரைமல்கு பொழிலணி வெங்குரு மேவிய
அரைமல்கு புலியத ளீரே
அரைமல்கு புலியத ளீரும தடியிணை
உரைமல்கு புகழவர் உயர்வே. 10-11

திருச்சிற்றம்பலம்

## [திருத்தோணிபுரம்]*

பண் - பழந்தக்கராகம்** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வண்டரங்கப் புனற்கமலம் மதுமாந்திப் பெடையினொடும்
ஒண்டரங்க இசைபாடும் அளியரசே ஒளிமதியத்
துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க் கென்னிலைமை பரிந்தொருகாற் பகராயே. 1

எறிசுறவங் கழிக்கானல் இளங்குருகே என்பயலை[1]
அறிவுறா தொழிவதுவும் அருவினையேன்[2] பயனன்றே
செறிசிறார் பதம்ஓதுந் திருத்தோணி புரத்துறையும்
வெறிநிறார்[3] மலர்க்கண்ணி வேதியர்க்கு விளம்பாயே. 2

பண்பழனக் கோட்டகத்து வாட்டமிலாச் செஞ்சூட்டுக்
கண்பகத்தின் வாரணமே[4] கடுவினையேன் உறுபயலை
செண்பகஞ்சேர் பொழில்புடைசூழ் திருத்தோணிபுரத்துறையும்
பண்பனுக்கென் பரிசுரைத்தாற் பழியாமோ மொழியாயே. 3

காண்டகைய செங்காலொண் கழிநாராய் காதலாற்
பூண்டகைய முலைமெலிந்து பொன்பயந்தா ளென்றுவளர்
சேண்டகைய மணிமாடத் திருத்தோணி புரத்துறையும்
ஆண்டகையாற் கின்றேசென் றடியறிய உணர்த்தாயே. 4

பாராரே யெனையொருகால் தொழுகின்றேன் பாங்கமைந்த
காராருஞ் செழுநிறத்துப் பவளக்காற் கபோதகங்காள்[5]
தேராரும் நெடுவீதித் திருத்தோணி புரத்துறையும்
நீராருஞ் சடையாருக் கென்நிலைமை நிகழ்த்தீரே. 5

சேற்றெழுந்த மலர்க்கமலச் செஞ்சாலிக் கதிர்வீச
வீற்றிருந்த அன்னங்காள் விண்ணோடு மண்மறைகள்

---

* திருத்தோணிபுரம் — சீகாழி; பிரளயகாலத்தில் உலகம் அழிந்தபோது பிரணவம் தோணியாக மிதக்க அதில் இறைவன் அம்மையோடு வீற்றிருந்தமையால் இப்பெயர் பெற்றது. **இப்பதிகம் முழுமையும் 'காமம் மிக்க கழிபடர் கிளவி' என்ற துறை ஆகும். [1] பயலை - காமத்தால் உண்டாகும் பசப்புத் தேமல். [2] அருவினையின் என்றும் பாடம். [3] நிறார் என்றும் பாடம். [4] வாரணம்—கோழி. [5] கபோதம் - புறா.

தோற்றுவித்த திருத்தோணி புரத்தீசன் துளங்காத
கூற்றுதைத்த திருவடியே கூடுமோ கூறீரே. 6

முன்றில்வாய் மடற்பெண்ணை[3]க் குரம்பை[4] வாழ் முயங்குசிறை
அன்றில்காள் பிரிவுறுநோய் அறியாதீர் மிகவல்லீர்
தென்றலார் புகுந்துலவுந் திருத்தோணி புரத்துறையுங்
கொன்றைவார் சடையார்க்கென் கூர்பயலை கூறீரே. 7

பானுறு மலர்ச்சூத[5]ப் பல்லவங்க ளவைகோதி
ஏனோர்க்கும் இனிதாக மொழியும் எழில் இளங்குயிலே
தேனாரும் பொழில்புடைசூழ் திருத்தோணி புரத்தமரர்
கோனாரை யென்னிடத்தே[6] வரவொருகாற் கூவாயே. 8

நற்பதங்கள் மிகஅறிவாய் நானுன்னை வேண்டுகின்றேன்
பொற்பமைந்த வாயலகிற் பூவைநல்லாய் போற்றுகின்றேன்
சொற்பதஞ்சேர் மறையாளர் திருத்தோணி புரத்துறையும்
விற்பொலிதோள் விகிர்தனு[7]க்கென் மெய்ப்பயலை விளம்பாயே. 9

சிறையாரு மடக்கிளியே இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடுதரளந்
துறையாருங் கடல்தோணி புரத்தீசன் துளங்கும்இளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகாற் பேசாயே. 10

போர்மிகுத்த வயல்தோணி புரத்துறையும் புரிசடையெங்
கார்மிகுத்த கறைக்கண்டத் திறையவனை வண்கமலத்
தார்[8] மிகுத்த வரைமார்பன் சம்பந்தன் உரைசெய்த
சீர்மிகுத்த தமிழ்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சங்கமரு முன்கைமட மாதையொரு பாலுடன் விரும்பி
அங்கமு[1]டல் மேலுறவ ணிந்துபிணி தீரஅருள் செய்யும்

---

[3] பெண்ணை – பனை. [4] குரம்பை — கூடு. [5] சூதம் — மாமரம். [6] என்னிடத்தே என்றும் பாடம். [7] விகிர்தன்—இறைவன். [8] கமலத் தார் - தாமரை மலர் மாலை; இஃது அந்தனர்க்குரியதாகும். [1] அங்கம் — எலும்பு.

எங்கள்பெரு மானிடமெ னத்தகுமு னைக்கடலின் முத்தந்
துங்கமணி இப்பிகள்க ரைக்குவரு தோணிபுர மாமே. 1

சல்லரியி யாழ்முழவம் மொந்தை[1] குழல் தாளமதி யம்பக்
கல்லரிய மாமலையர் பாவையொரு பாகநிலை செய்து
அல்[2] லெரிகை யேந்திநட மாடுசடை அண்ணலிட மென்பர்
சொல்லரிய தொண்டர்துதி செய்யவளர் தோணிபுர மாமே. 2

வண்டரவு கொன்றைவளர் புன்சடையின் மேல்மதியம் வைத்துப்
பண்டரவு தன்னரையி லார்த்தபர மேட்டிபழி தீரக்
கண்டரவ வொண்கடலில் நஞ்சம்அமு துண்டகட வுள்ளூர்
தொண்டரவர் மிண்டிவழி பாடுமல்கு தோணிபுர மாமே. 3

கொல்லைவிடை யேறுடைய கோவணவன் நாவணவுமாலை
ஒல்லையுடை யான் அடைய லார் அரணம் ஒள்ளழல் விளைத்த
வில்லையுடை யான்மிக விரும்புபதி மேவிவளர் தொண்டர்
சொல்லையடை வாகஇடர் தீர்த்தருள்செய் தோணிபுர மாமே. 4

தேயுமதி யஞ்சடையி லங்கிடவி லங்கன்மலி கானிற்
காயுமடு திண்கரியின் ஈருரிவை போர்த்தவன் நினைப்பார்
தாயெனநி றைந்ததொரு தன்மையினர் நன்மையொடு வாழ்வு
தூயமறை யாளர்முறை யோதிநிறை தோணிபுர மாமே. 5

பற்றலர்தம் முப்புரமெ ரித்தடிப ணிந்தவர்கள் மேலைக்
குற்றமதொ ழித்தருளு கொள்கையினன் வெள்ளின்முது கானிற்
பற்றவன்இ சைக்கிளவி பாரிடம்[3] தேத்தநட மாடுந்
துற்றசடை யத்தனுறை கின்றபதி தோணிபுர மாமே. 6

பண்ணமரு நான்மறையர் நூன்முறைப யின்றதிரு மார்பிற்
பெண்ணமரு மேனியினர் தம்பெருமை பேசும்அடி யார்மெய்த்
திண்ணமரும் வல்வினைகள் தீரஅருள் செய்தலுடை யானூர்
துண்ணெனவி ரும்புசரிதை[4] த்தொழிலர் தோணிபுர மாமே. 7

தென்திசையி லங்கையரை யன்திசைகள் வீரம்விளை வித்து
வென்றிசை[5] பு யங்களைய டர்த்தருளும் வித்தகனி டஞ்சீர்
ஒன்றிசையி யற்கிளவி பாடமயி லாடவளர் சோலை
துன்றுசெய வண்டுமலி தும்பிமுரல் தோணிபுர மாமே. 8

---

[1] மொந்தை - ஓர் கட்பறை. [2] அல் - இரவு. [3] பாரிடம் - பூதம். [4] சரிதை - சரியை. [5] வென்றிசெய் என்றும் பாடம்.

காற்றமிகு மாமலரின் மேலயனும் நாரணனும் நாடி
ஆற்றலத னல்மிக வளப்பரிய வண்ணம்எரி யாகி
ஊற்றமிகு கீழுலகும் மேலுலகும் ஓங்கியெழு தன்மைத்
தோற்றமிக காணுமரி யானுறைவு[5] தோணிபுர மாமே. 9

மூடுதுவ ராடையினர் வேடநிலை காட்டும்அமண் ஆதர்
கேடுபல சொல்லிடுவ ரம்மொழிகெ டுத்தடைவி னைக்
காடுபதி யாகநட மாடிமட மாதொடிரு காதில்
தோடுகுழை பெய்தவர்த மக்குறைவு தோணிபுர மாமே. 10

துஞ்சிருளின் நின்றுநட மாடிமிகு தோணிபுர மேய
மஞ்சனைவ ணங்குதிரு ஞானசம் பந்தனசொன் மாலை
தஞ்சமென நின்றிசைமொ ழிந்தஅடி யார்கள்தடு மாற்றம்
வஞ்சமிலர் நெஞ்சிருளும் நீங்கியருள் பெற்றுவளர் வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - பழம்பஞ்சுரம்* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கரும்பமர் வில்லியைக் காய்ந்து காதற் காரிகை மாட்டருளி
அரும்பமர் கொங்கை யோர்பால் மகிழ்ந்த அற்புதஞ் செப்பரிதால்
பெரும்பக லேவந்தென் பெண்மை கொண்டு பேர்த்தவர் சேர்ந்தஇடஞ்
சுரும்பமர் சோலைகள் சூழ்ந்த செம்மைத் தோணி புரந்தானே. 1

கொங்கியல் பூங்குழற் கொவ்வைச் செவ்வாய்க் கோமள மாதுமையாள்
பங்கிய லுந்திரு மேனி யெங்கும் பால்வெள்ளை நீறணிந்து
சங்கியல் வெள்வளை சோர வந்தென் சாயல்கொண் டார்தமதூர்
தூங்கியன் மாளிகை சூழ்ந்த செம்மைத் தோணி புரந்தானே. 2

மத்தக் களிற்றுரி போர்க்கக் கண்டு மாதுமை பேதுறலுஞ்
சித்தந் தெளியநின் றாடி யேறூர் தீவண்ணர் சில்பலிக்கென்
றொத்தபடி வந்தென் னுள்ளங் கொண்ட ஒருவர்க் கிடம்போலுந்
துத்தநல் லின்னிசை வண்டு பாடுந் தோணி புரந்தானே. 3 - 7

வள்ள லிருந்த மலையத னைவலஞ் செய்தல் வாய்மையென
உள்ளங் கொள்ளாது கொதித்தெ ழுந்தன் றெடுத்தோன் உரம்நெரிய

---

[5] மரியானுறைவு என்றும் பாடம். * இப்பதிகத்தில் 4, 5, 6, 7-ம் செய்யுட்கள் சிதைந்துபோயின.

மெள்ள விரல்வைத்தென் உள்ளங் கொண்டார் மேவு மிடம்போலும்
துள்ளொலி வெள்ளத்தின் மேல்மிதந்த தோணி புரந்தானே. 8

வெல்பற வை[1] க்கொடி மாலும் மற்றை விரைமலர் மேலயனும்
பல்பற வைப்படி யாயுயர்ந்தும் பன்றிய தாய்ப்ப ணிந்துஞ்
செல்வற நீண்டெஞ் சிந்தை கொண்ட செல்வ ரிடம்போலுந்
தொல்பறவை[2] சுமந்தோங்கு செம்மைத் தோணி புரந்தானே. 9

குண்டிகை பீலிதட் டோடு நின்று கோசரங் கொள்ளியரும்
மண்டைகை யேந்தி மனங்கொள் கஞ்சி யூணரும் வாய்மடிய
இண்டை புனைந்தெரு தேறி வந்தென் எழில்கவர்ந் தாரிடமாந்
தொண்டிசை பாட லறாத தொன்மைத் தோணி புரந்தானே. 10

தூமரு மாளிகை மாடம் நீடு தோணி புரத்திறையை
மாமறை நான்கினொ டங்க மாறும் வல்லவன் வாய்மையினால்
நாமரு கேள்வி நலந்திகழும் ஞான சம்பந் தன்சொன்ன
பாமரு பாடல்கள் பத்தும் வல்லார் பார்முழு தாள்பவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## [திருப்பூந்தராய்*]

### வினாவுரை

பண் - இந்தளம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

செங்கெ லங்கழ னிப்பழ னத்தய லேசெழும்
புன்னை வெண்கிழி யிற்பவ ளம்புரை பூந்தராய்த்

---

[1] பறவை - கருடன். [2] இதனை 'நின்பாதமெல்லாம் - நாலஞ்சு புள்ளின மேந்தின வென்பர்' என்று திருக்கழுமலத் திருப்பதிகத்து அப்பர் சுவாமிகள் கூறியுள்ளார்; தொல்பரவை என்றும் பாடம்.
* திருப்பூந்தராய் – சீகாழி; சங்கநிதி பதுமநிதி என்ற இரண்டு தெய்வங்கள் மாறாது அளிக்க வரம் பெறுதற்குப் பூந்தராய் (பூமாலையாய்) இருந்து பூசித்தமையாலும், திருமால் வெள்ளைப்பன்றி வடிவு கொண்டு தன் கொம்பில் பூமியை எற்று வருத்திய பழி நீங்கப் பூசித்தமையாலும் இப்பெயர் பெற்றது. (பூ–பூமி; தராய்–கொம்பில் தரித்தவன்.) ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் மறைந்து போயிற்று.

துன்னி நல்லிமை யோர்முடி தோய்கழ லீர்[1] சொலீர்
பின்னு[2] செஞ்சடை யிற்பிறை பாம்புடன் வைத்ததே. 1

எற்று தெண்டிரை யேறிய சங்கினொ டிப்பிகள்
பொற்றி கழ்கம லப்பழ னம்புகு பூந்தராய்ச்
சுற்றி நல்லிமை யோர்தொழு பொற்கழ லீர்சொலீர்
பெற்ற மேறுதல் பெற்றிமை யோபெரு மானீரே. 2

சங்கு செம்பவ ளத்திரள் முத்தவை தாங்கொடு
பொங்கு தெண்டிரை வந்தலைக் கும்புனற் பூந்தராய்த்
துங்க மால்களிற் றின்னுரி போர்த்துகந் தீர்சொலீர்
மங்கை பங்கமும் அங்கத்தொ டொன்றிய மாண்பதே. 3

சேம வன்மதில் பொன்னணி மாளிகை சேணுயர்
பூம ணங்கம ழும்பொழில் சூழ்தரு பூந்தராய்ச்
சோம னும்அர வுந்தொடர் செஞ்சடை யீர்சொலீர்
காமன் வெண்பொடி யாகக் கடைக்கண் சிவந்ததே. 4

பள்ள மீன்இரை தேர்ந்துழ லும்பகு வாயன
புள்ளும் நாடொறுஞ் சேர்பொழில் சூழ்தரு பூந்தராய்த்
துள்ளும் மான்மறி யேந்திய செங்கையி னீர்சொலீர்
வெள்ள நீரொரு செஞ்சடை வைத்த வியப்பதே. 5

மாதி லங்கிய மங்கைய ராடம ருங்கெலாம்
போதி லங்கம லம்மது வார்புனற் பூந்தராய்ச்
சோதி யஞ்சுடர் மேனிவெண் ணீறணி வீர்சொலீர்
காதி லங்குழை சங்கவெண் தோடுடன் வைத்ததே. 6 - 7

வருக்க மார்தரு வான்கடு வன்[3] னொடு மந்திகள்
தருக்கொள் சோலை தருங்கனி மாந்திய பூந்தராய்த்
துரக்கும் மால்விடை மேல்வரு வீரடி கேள்சொலீர்
அரக்க னுற்றல் அழித்தரு ளாக்கிய ஆக்கமே. 8

வரிகொள் செங்கயல் பாய்புனல் சூழ்ந்த மருங்கெலாம்
புரிசை நீடுயர் மாடம்நி லாவிய பூந்தராய்ச்
சுருதி பாடிய பாணியல் தூமொழி யீர்சொலீர்
கரிய மாலயன் நேடியு மைக்கண்டி லாமையே. 9

---

[1] நல்லிமையோர் தொழுபொற் கழலீர் என்றும் பாடம். [2] மின்னு என்றும் பாடம். [3] கடுவன் - ஆண் குரங்கு.

வண்ட லங்கழ னிம்மடை வாளைகள் பாய்புனற்
புண்ட ரீகம லர்ந்தும துத்தரு பூந்தராய்த்
தொண்டர் வந்தடி போற்றிசெய் தொல்கழ லீர்சொலீர்
குண்டர் சாக்கியர் கூறிய தாங்குறி யின்மையே. 10

மகர வார்கடல் வந்தணை வும்மணற் கானல்வாய்ப்
புகலி ஞானசம் பந்தன் எழில்மிகு பூந்தராய்ப்
பகவ னுரைப் பரவுசொல் மாலைபத் தும்வல்லார்
அகல்வர் தீவினை நல்வினை யோடுட னவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரபஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பந்துசேர்விரலாள் பவளத்துவர்
வாயினுள்பனி மாமதிபோல்முகத்
தந்தமில்புக ழாள்மலைமாதொடும் ஆதிப்பிரான்[1]
வந்துசேர்விடம் வானவரெத்திசையுந்
நிறைந்துவலஞ் செய்துமாமலர்
புந்திசெய் திறைஞ்சிப் பொழிபூந்தராய் போற்றுதுமே. 1

காவியங்கருங் கண்ணினுள்கனித்
தொண்டை[2] வாய்க்கதிர் முத்தநல்வெண்ணகைத்
தூவியம்பெடை யன்னநடைச்சுரி மென்குழலாள்
தேவியுந்திரு மேனியோர்பாகமாய்
ஒன்றிரண்டொரு மூன்றொடுசேர்பதி
பூவிலந்தணன் ஒப்பவர்பூந்தராய் போற்றுதுமே. 2

பையராவரும் அல்குல்மெல்லியல்
பஞ்சின்சேரடி வஞ்சிகொள் நுண்ணிடைத்
தையலாளொரு பாலுடையெம்மிறை சாருமிடஞ்
செய்யெலாங்கழு நீர்கமலம்மலர்த்
தேறலூறலிற் சேறுலராதநற்
பொய்யிலாமறை யோர்பயில்பூந்தராய் போற்றுதுமே. 3

---

[1] ஆதிபிரான் என்றும் பாடம். [2] தொண்டை - கொவ்வைக் கனி (போன்ற).

முள்ளிநாண்முகை மொட்டியல்கோங்கின்
அரும்புதேன்கொள் குரும்பைமூவாமருந்
துள்ளியன்றபைம்பொற் கலசத்திய லொத்தமுலை
வெள்ளிமால்வரை யன்னதோர்மேனியின்
மேவினார்பதி வீமருதண்பொழிற்
புள்ளினந்துயில் மல்கியபூந்தராய் போற்றுதுமே. 4

பண்ணியன்றெழு மென்மொழியாள்பகர்
கோதையேர்திகழ் பைந்தளிர்மேனியோர்
பெண்ணியன்றமொய்ம்பிற் பெருமாற்கிடம் பெய்வளையார்
கண்ணியன்றெழு காவிச்செழுங்கரு
நீலமல்கிய காமருவாவிநற்
புண்ணியருறையும் பதிபூந்தராய் போற்றுதுமே. 5

வாள்நிலாமதி போல்நுதலாள்மட
மாழை[1] யொண்கணாள் வண்தரளந்நகை
பாண்நிலாவிய இன்னிசையார்மொழிப் பாவையொடுஞ்
சேண்நிலாத்திகழ் செஞ்சடையெம்மண்ணல்
சேர்வதுசிகரப் பெருங்கோயில்சூழ்
போர்ணிலாநுழையும் பொழிற்பூந்தராய் போற்றுதுமே. 6

காருலாவிய வார்குழலாள்கயற்
கண்ணினாள்புயற் காலொளிமின்னிடை
வாருலாவிய மென்முலையாள்மலை மாதுடனாய்
நீருலாவிய சென்னியன்மன்னி
நிகருநாமம் முந்நான்குநிகழ்பதி[2]
போருலாவெயில் சூழ்பொழிற்பூந்தராய் போற்றுதுமே. 7

காசை[3] சேர்குழலாள் கயலேர்தடங்
கண்ணிகாம்பன தோட்கதிர்மென்முலைத்
தேசுசேர்மலை மாதமருந்திரு மார்பகலத்
தீசன்மேவும் இருங்கயிலையெடுத்தானை
அன்றடர்த்தான் இணைச்சேவடி
பூசைசெய்பவர் சேர்பொழிற்பூந்தராய் போற்றுதுமே. 8

---

[1] மாழை - மாவடு; அழகுமாம். [2] இவ்வடி சீகாழி பன்னிரு நாமங்களைக் கொண்டது என்பதைக் குறிக்கும். [3] காசை - காயாம்பூ.

கொங்குசேர்குழ லாள்நிழல்வெண்ணகைக்
கொவ்வைவாய்க்கொடி யேரிடையாளுமை
பங்குசேர்திரு மார்புடையார்படர் தீயுருவாய்
மங்குல்வண்ணனும் மாமலரோனும்
மயங்கநீண்டவர் வான்மிசைவந்தெழு
பொங்குநீரின் மிதந்தநற்பூந்தராய் போற்றுதுமே. 9

கலவமாமயி லார்இயலாள்கரும்
பன்னமென்மொழி யாள்கதிர்வாணுதற்
குலவுபூங்குழ லாளுமைகூறனை வேறுரையால்
அலவைசொல்லுவார் தேரமண் ஆதர்கள்
ஆக்கினுன்றனை நண்ணலுநல்குநற்
புலவர்தாம்புகழ் பொற்பதிபூந்தராய் போற்றுதுமே. 10

தேம்பல்நுண்ணிடை யாள்செழுஞ்சேலன
கண்ணியோடண்ணல் சேர்விடந்தேன் அமர்
பூம்பொழில்திகழ் பொற்பதிபூந்தராய் போற்றுதுமென்
றோம்புதன்மையன் முத்தமிழ்நான்மறை
ஞானசம்பந்தன் ஒண்தமிழ்மாலைகொண்
டாம்படியிவை யேத்தவல்லார்க்கடை யாவினையே. 11

திருச்சிற்றம்பலம்

---

ஈரடிமேல்வைப்பு. பண் - காந்தாரபஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

தக்கன் வேள்வி தகர்த்தவன் பூந்தராய்
மிக்க செம்மை விமலன் வியன்கழல்
சென்று சிந்தையில் வைக்க மெய்க்கதி
நன்ற தாகிய நம்பன் தானே. 1

புள்ளி னம்புகழ் போற்றிய பூந்தராய்
வெள்ளந் தாங்கு விகிர்தன் அடிதொழ
ஞாலத் தில்லுயர் வாநுள்கு நன்னெறி
மூல மாய முதல்வன் தானே. 2

வேந்த ராயுல காள விருப்புறிற்
பூந்த ராய்நகர் மேயவன் பொற்கழல்

நீதி யால்நினைந் தேத்தி யுள்கிடச்
சாதி யாவினை யான தானே. 3

பூசு ரர்தொழு தேத்திய பூந்தராய்
ஈசன் சேவடி யேத்தி யிறைஞ்சிடச்
சிந்தை நோயவை தீர நல்கிடும்
இந்து வார்சடை யெம் இறையே. 4

பொலிந்த என்பணி மேனியன் பூந்தராய்
மலிந்த புந்திய ராகி வணங்கிட
நுந்தம் மேல்வினை யோட வீடுசெய்
எந்தை யாயஎம் ஈசன் தானே. 5

பூதஞ் சூழப் பொலிந்தவன் பூந்தராய்
நாதன் சேவடி நாளும் நவின்றிட
நல்கு நாடோறும் இன்ப ஙளிர்புனல்
பில்கு வார்சடைப் பிஞ்ஞ கனே.[1] 6

புற்றில் நாகம் அணிந்தவன் பூந்தராய்
பற்றி வாழும் பரமனைப் பாடிடப்
பாவ மாயின தீரப் பணிந்திடுஞ்
சேவ தேறிய செல்வன் தானே. 7

போத கத்துரி போர்த்தவன் பூந்தராய்
காத லித்தான் கழல்விரல் ஒன்றினால்
அரக்கன் ஆற்றல் அழித்தவ னுக்கருள்
பெருக்கி நின்றஎம் பிஞ்ஞ கனே. 8

மத்த மான[2] இருவர் மருவொணா
அத்த னவன் மேவிய பூந்தராய்
ஆள தாக அடைந்துய்ம்மின் நும் வினை
மாளு மாறருள் செய்யுந் தானே. 9

பொருத்த மில்சமண் சாக்கியப் பொய்கடிந்[3]
திருத்தல் செய்தபி ரான்இமை யோர்தொழப்
பூந்த ராய்நகர் கோயில் கொண்டுகை
ஏந்து மான்மறி யெம்மி றையே. 10

---

[1] பிஞ்ஞகன் – தலைக்கோலமுடையான்; இறைவன். [2] மத்த மான–செருக்குக்கொண்ட. [3] சாக்கியர் பொய்கடிந் என்றும் பாடம்.

புந்தி யால்மிக நல்லவர் பூந்தராய்
அந்த மில்லெம் மடிகளை ஞானசம்
பந்தன் மாலைகொண் டேத்தி வாழுநும்
பந்த மார்வினை பாறி டுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரபஞ்சமம்
திருச்சிற்றம்பலம்

மின்னன எயிறுடை விரவ லோர்கள்தந்
துன்னிய புரம்உகச் சுளிந்த தொன்மையர்
புன்னையம் பொழிலணி பூந்த ராய்நகர்
அன்னமன் னந்நடை அரிவை பங்கரே. 1

மூதணி முப்புரத் தெண்ணி லோர்களை
வேதணி சரத்தினால் வீட்டி னாவர்
போதணி பொழிலமர் பூந்த ராய்நகர்த்
தாதணி குழலுமை தலைவர் காண்மினே. 2

தருக்கிய திரிபுரத் தவர்கள் தாம்உகப்
பெருக்கிய சிலைதனைப் பிடித்த பெற்றியர்
பொருக்கடல் புடைதரு பூந்த ராய்நகர்க்
கருக்கிய குழலுமை கணவர் காண்மினே. 3

நாகமும் வரையுமே நாணும் வில்லுமா
மாகமார் புரங்களை மறித்த மாண்பினர்
பூகமா[1]ர் பொழிலணி பூந்த ராய்நகர்ப்
பாகமர் மொழியுமை பங்கர் காண்மினே. 4

வெள்ளெயி றுடையவவ் விரவ லார்களூர்[2]
ஒள்ளெரி யூட்டிய வொருவ னாரொளிர்
புள்ளணி புறவினிற் பூந்த ராய்நகர்க்
கள்ளணி குழலுமை கணவர் காண்மினே. 5

துங்கியல் தானவர் தோற்ற மாநகர்
அங்கியில் வீழ்தர வாய்ந்த வம்பினர்

---

[1] பூகம் – கமுகு. [2] வெள்ளையேறுடையவர் **விரவலார்களூர்** என்றும் பாடம்.

பொங்கிய கடலணி பூந்த ராய்நகர்
அங்கய லனகணி[3] அரிவை பங்கரே. 6

அண்டர்க ளுய்ந்திட அவுணர் மாய்தரக்
கண்டவர் கடல்விட முண்ட கண்டனார்
புண்டரீ கவ்வயற் பூந்த ராய்நகர்
வண்டமர் குழலிதன் மணாளர் காண்மினே. 7

மாசின அரக்கனை வரையின் வாட்டிய
காய்சின வெயில்களைக் கறுத்த கண்டனார்
பூசுரர் பொலிதரு பூந்த ராய்நகர்க்
காசைசெய் குழலுமை கணவர் காண்மினே. 8

தாமுக மாக்கிய அசுரர் தம்பதி
வேமுக மாக்கிய விகிர்தர் கண்ணனும்
பூமகன் அறிகிலாப் பூந்த ராய்நகர்க்
கோமகன் எழில்பெறும் அரிவை கூறரே. 9

முத்தர அசுரர்கள் மொய்த்த முப்புரம்
அத்தகும் அழலிடை வீட்டினார் அமண்
புத்தரும் அறிவொணாப் பூந்த ராய்நகர்க்
கொத்தணி குழலுமை கூறர் காண்மினே. 10

புரமெரி செய்தவர் பூந்த ராய்நகர்ப்
பரமலி குழலுமை நங்கை பங்கரைப்
பரவிய பந்தன்மெய்ப் பாடல் வல்லவர்
சிரமலி சிவகதி சேர்தல் திண்ணமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## [திருச்சிரபுரம்] *

பண் - பழந்தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பல்லடைந்த வெண்டலையிற் பலிகொள்வ தன்றியும்போய்
வில்லடைந்த புருவநல்லாள் மேனியில் வைத்தலென்னே

---

[3] கணி (கண்ணி) : இடைக் குறை. * திருச்சிரபுரம் - சீகாழி; தேவருடன் அமுதுண்ண வந்தபோது அடியுண்ட அரக்கன் தலை (சிரம்) இராகுவாக நின்று பூசித்தமையால் இப்பெயர் பெற்றது.

சொல்லடைந்த தொல்மறையோ டங்கங்கலைகளெல்லாஞ்
செல்லடைந்த செல்வர்வாழுஞ் சிரபுரம் மேயவனே. 1

கொல்லைமுல்லை நகையினாளோர் கூறது அன்றியும்போய்
அல்லல்வாழ்க்கைப் பலிகொண்டுண்ணும் ஆதர வென்னகொலாஞ்
சொல்லநீண்ட பெருமையாளர் தொல்கலை கற்றுவல்லார்
செல்லநீண்ட செல்வமல்கு சிரபுரம் மேயவனே. 2

நீரடைந்த சடையின்மேலோர் நிகழ்மதி யன்றியும்போய்
ஊரடைந்த ஏறதேறி யுண்பலி கொள்வதென்னே
காரடைந்த சோலைசூழ்ந்து காமரம்[1] வண்டிசைப்பச்
சீரடைந்த செல்வமோங்கு சிரபுரம் மேயவனே. 3

கையடைந்த மானினோடு காரர வன்றியும்போய்
மெய்யடைந்த வேட்கையோடு மெல்லியல் வைத்தலென்னே
கையடைந்த களைகளாகச் செங்கழு நீர்மலர்கள்
செய்யடைந்த வயல்கள்சூழ்ந்த சிரபுரம் மேயவனே. 4

புரம்எரித்த வெற்றியோடும் போர்மத யானைதன்னைக்
கரம்எடுத்துத் தோலுரித்த காரணம் ஆவதென்னே
மரம்உரித்த தோலு[2]டுத்த மாதவர் தேவரோடுஞ்
சிரம்எடுத்த கைகள்கூப்புஞ் சிரபுரம் மேயவனே. 5

கண்ணுமூன்றும் உடையதன்றிக் கையினில் வெண்மழுவும்
பண்ணுமூன்று வீணையோடு பாம்புடன் வைத்தலென்னே
எண்ணுமூன்று கனலும்ஓம்பி யெழுமையும் விழுமியராய்த்
திண்ணமூன்று வேள்வியாளர் சிரபுரம் மேயவனே. 6

குறைபடாத வேட்கையோடு கோல்வளை யாளொருபாற்
பொறைபடாத இன்பமோடு புணர்தரு மெய்ம்மை[3] யென்னே
இறைபடாத மென்முலையார் மாளிகை மேலிருந்து
சிறைபடாத பாடலோங்கு சிரபுரம் மேயவனே. 7

மலையெடுத்த வாளரக்கன் அஞ்சவொ ருவிரலால்
நிலையெடுத்த கொள்கையானே நின்மல னேநினைவார்
துலையெடுத்த சொற்பயில்வார் மேதகு வீதிதோறுஞ்
சிலையெடுத்த தோளினானே சிரபுரம் மேயவனே. 8

---

[1] காமரம் – இசை. [2] மரம் உரித்த தோல் – மரவுரி ஆடை.
[3] மேன்மை என்றும் பாடம்.

மாலினோடு மலரினானும் வந்தவர் காணாது
சாலுமஞ்சப் பண்ணிநீண்ட தத்துவ மேயதென்னே
நாலுவேதம் ஓதலார்கள் நம்துணை யென்றிறைஞ்சச்
சேலுமேயுங் கழனிசூழ்ந்த சிரபுரம் மேயவனே. 9

புத்தரோடு சமணர்சொற்கள் புறனுரை யென்றிருக்கும்
பத்தர்வந்து பணியவைத்த பான்மைய தென்னைகொலாம்
மத்தயானை யுரியும்போர்த்து மங்கையொ டும்முடனே
சித்தர்வந்து பணியுஞ்செல்வச் சிரபுரம் மேயவனே. 10

தெங்குநீண்ட சோலைசூழ்ந்த சிரபுரம் மேயவனை
அங்கம்நீண்ட மறைகள்வல்ல அணிகொள்சம் பந்தன்உரை
பங்கம்நீங்கப் பாடவல்ல பத்தர்கள் பாரிதன்மேற்
சங்கமோடு நீடிவாழ்வர் தன்மையி னலவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வாருறு வனமுலை மங்கைபங்கன்
நீருறு சடைமுடி நிமலனிடம்
காருறு கடிபொழில் சூழ்ந்தழகார்
சீருறு வளவயற் சிரபுரமே. 1

அங்கமொ டருமறை அருள்புரிந்தான்
திங்களொ டரவணி திகழ்முடியன்
மங்கையொ டினிதுறை வளநகரஞ்
செங்கயல் மிளிர்வயற் சிரபுரமே. 2

பரிந்தவன் பன்முடி அமரர்க்காகித்
திரிந்தவர் புரமவை தீயின்வேவ
வரிந்தவெஞ் சிலைபிடித் தடுசரத்தைத்
தெரிந்தவன் வளநகர் சிரபுரமே. 3

நீறணி மேனியன் நீள்மதியோ
டாறணி சடையினன் அணியிழையோர்
கூறணிந் தினிதுறை குளிர்நகரஞ்
சேறணி வளவயற் சிரபுரமே. 4

அருந்திறல் அவுணர்கள் அரண் அழியச்
சரந்துரந் தெரிசெய்த சங்கரனார்
குருந்தொடு கொடிவிடு மாதவிகள்
திருந்திய புறவணி சிரபுரமே. 5

கலையவன் மறையவன் காற்றொடுதீ
மலையவன் விண்ணொடு மண்ணும்அவன்
கொலையவன் கொடிமதில் கூட்டழித்த
சிலையவன் வளநகர் சிரபுரமே. 6

வானமர் மதியொடு மத்தஞ்சூடித்
தானவர் புரமெய்த சைவனி[1]டம்
கானமர் மடமயில் பெடைபயிலுந்
தேனமர் பொழிலணி சிரபுரமே. 7

மறுத்தவர் திரிபுரம் மாய்ந்தழியக்
கறுத்தவன் காரரக் கன்முடிதோள்
இறுத்தவன் இருஞ்சினக் காலனைமுன்
செறுத்தவன் வளநகர் சிரபுரமே. 8

வண்ணநன் மலருறை மறையவனுங்
கண்ணனுங் கழல்தொழக் கனலுருவாய்
விண்ணுற வோங்கிய விமலனிடம்[2]
திண்ணநன் மதில்அணி சிரபுரமே. 9

வெற்றரை யுழல்பவர் விரிதுகிலார்
கற்றிலர் அறவுரை[3] புறனுரைக்கப்
பற்றலர் திரிபுரம் மூன்றும்வேவச்
செற்றவன் வளநகர் சிரபுரமே. 10

அருமறை ஞானசம்பந்தன் அந்தண்
சிரபுர நகருறை சிவனடியைப்
பரவிய செந்தமிழ் பத்தும்வல்லார்
திருவொடு புகழ்மல்கு தேசினரே. 11

திருச்சிற்றம்பலம்

---

[1] சைவன் - சிவன். [2] இவ்வடிகள் அடிமுடி தேடியதைக் குறிக்கும். [3] அறனுரை என்றும் பாடம்.

பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அன்ன மென்னடை அரிவையொ டினிதுறை அமரர்தம் பெருமானார், மின்னு செஞ்சடை வெள்ளெருக் கம்மலர் வைத் தவர் வேதந்தாம், பன்னு நன்பொருள் பயந்தவர் பருமதிற் சிர புரத் தார்சீரார், பொன்னின் மாமலர் அடிதொழும் அடியவர் வினையொடும் பொருந்தாரே. 1

கோல மாகரி உரித்தவர் அரவொடும் ஏனக்கொம் பிளஆமை, சாலப் பூண்டுதண் மதியது சூடிய சங்கர னார்தம்மைப், போலத் தம்மடி யார்க்குமின் பளிப்பவர் பொருகடல் விடமுண்ட, நீலத் தார்மிடற் றண்ணலார் சிரபுரந் தொழவினை யில்லாவே. 2

மானத் திண்புய வரிசிலைப் பார்த்தனைத் தவங்கெட மதித் தன்று, கானத் தேதிரி வேடனு யமர்செயக் கண்டருள் புரிந்தார் பூந், தேனைத் தேர்ந்துசேர் வண்டுகள் திரிதருஞ் சிரபுரத் துறை யெங்கள், கோனைக் கும்பிடும் அடியரைக் கொடுவினை குற்றங்கள் குறுகாவே. 3

மாணி[1] தன்னுயிர் மதித்துண வந்தஅக் காலனை உதைசெய் தார், பேணியுள்குமெய் யடியவர் பெருந்துயர்ப் பிணக்கறுத் தருள்செய்வார், வேணி வெண்பிறை யுடையவர் வியன்புகழ்ச் சிரபுரத் தமர்கின்ற, ஆணிப் பொன்னினை அடிதொழும் அடிய வர்க் கருவினை யடையாவே. 4

பாரும் நீரொடு பல்கதிர் இரவியும் பனிமதி ஆகாசம், ஓரும் வாயுவும் ஒண்கனல் வேள்வியில் தலைவனு மாய்நின்றார்,[2] சேருஞ் சந்தனம் அகிலொடு வந்திழி செழும்புனற் கோட்டாறு, வாருந் தண்புனல் சூழ்சிர புரந்தொழும் அடியவர் வருந்தாரே. 5

ஊழி யந்தத்தில் ஒலிகடல் ஓட்டந்திவ் வுலகங்க ளவைமூட, ஆழி யெந்தையென் றமரர்கள் சரண்புக அந்தரத் துயர்ந்தார் தாம், யாழின் நேர்மொழி யேழையோ டினிதுறை இன்பனெம் பெருமானார், வாழி மாநகர்ச் சிரபுரந் தொழுதெழ வல்வினை அடையாவே. 6

---

[1] மாணி - பிரமசாரி: இங்கு மார்க்கண்டேயர். [2] இவ்வடிகள் அட்டமூர்த்தத்தைக் குறிக்கும்.

பேய்கள் பாடப்பல் பூதங்கள் துதிசெயப் பிணமிடு சுடு காட்டில், வேய்கொள் தோளிதான் வெள்கிட மாநடம் ஆடும்வித் தகனூர்என், சாய்களா[1] தான்மிக வுடையதண் மறையவர் தகுசிர புரத்தார்தாம், தாய்க ளாயினர் பல்லுயிர்க் குந்தமைத் தொழு மவர் தளராரே, 7

இலங்கு பூண்வரை மார்புடை இராவணன் எழில்கொள் வெற்பெடுத்தன்று, கலங்கச் செய்தலுங் கண்டுதங் கழலடி நெரிய வைத்த ருள்செய்தார், புலங்கள்[2] செங்கழு நீர்மலர்த் தென்றல் மன் றதனிடைப் புகுந்தாருங், குலங்கொள் மாமறை யவர்சிர புரந்தொழு தெழவினை குறுகாவே. 8

வண்டு சென்றணை மலர்மிசை நான்முகன் மாயனென் றிவரன்று, கண்டு கொள்ளவோர் ஏனமோ டன்னமாய்க் கிளறி யும் பறந்துந்தாம், பண்டு கண்டது காணவே நீண்டஎம் பசுபதி பரமேட்டி, கொண்ட செல்வத்துச் சிரபுரந் தொழுதெழ வினை யவை கூடாவே. 9

பறித்த புன்தலைக் குண்டிகைச் சமணரும் பார்மிசைத் துவர்[3] தோய்ந்த செறித்த சீவரத் தேரருந் தேர்கிலாத் தேவர்கள் பெரு மானூர், முறித்து மேதி[4]கள் கரும்புதின் றாவி[5]யின் மூழ்கிட இள வாளை, வெறித்துப் பாய்வயற் சிரபுரந் தொழவினை விட்டிடும் மிகத்தானே. 10

பரசு பாணியைப் பத்தர்கள் அத்தனைப் பையர வோடக்கு,[6] நிரைசெய் பூண்திரு மார்புடை நிமலனை நித்திலப் பெருந் தொத்தை,[7] விரைசெய் பூம்பொழிற் சிரபுரத் தண்ணலை விண்ண வர் பெருமானைப், பரவு சம்பந்தன் செந்தமிழ் வல்லவர் பரம னைப் பணிவாரே.[8] 11

திருச்சிற்றம்பலம்

---

[1]சாய்-புகழ். [2]புலங்கொள என்றும் பாடம். [3]துவர்-செந்நிறம். [4]மேதி - எருமை. [5]ஆவி - குளம். [6]அக்கு - எலும்பு. [7]தொத்து-திரள். [8]இப்பதிகம் திருச்சிரபுரத்தைத் தொழுபவர்களின் வினைகள் நீங்கப்பெறும் என்பதைக் குறிப்பிடுகின்றது.

## [திருப்புறவம்] *

**பண் - தக்கேசி** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நறவநிறைவண் டறைதார்க்கொன்றை நயந்துநயனத்தால்
சுறவஞ்செறிவண் கொடியோன்[1]உடலம்பொடியாவிழிசெய்தான்
புறவம்உறைவண் பதியாமதியார் புரமூன்றெரிசெய்த
இறைவன் அறவன் இமையோரேத்த உமையோடிருந்தானே. 1

உரவன்புலியின் உரிதோலாடை யுடைமேற்படநாகம்
விரவிவிரிபூங் கச்சா அசைத்த விகிர்தன்உகிர்தன்னாற்
பொருவெங்களிறு பிளிறவுரித்துப் புறவம்பதியாக
இரவும்பகலும் இமையோரேத்த உமையோடிருந்தானே. 2

பந்தமுடைய பூதம்பாடப் பாதஞ்சிலம்பார்க்கக்
கந்தமல்கு குழலிகாணக் கரிகாட்டெரியாடி
அந்தண்கடல்சூழ்ந் தழகார்புறவம் பதியா அமர்வெய்தி
எந்தம்பெருமான் இமையோரேத்த உமையோடிருந்தானே. 3

நினைவார்நினைய இனியான்பனியார் மலர்தூய்நித்தலுங்
கனையார்விடையோன் றுடையான்கங்கை திங்கள்கமழ்கொன்றை
புனைவார்சடையின் முடியான்கடல்சூழ் புறவம்பதியாக
எனையாளுடையான் இமையோரேத்த உமையோடிருந்தானே. 4

செங்கண் அரவும் நகுவெண்டலையும் முகிழ்வெண்திங்களுந்
தங்குசடையன் விடையனுடையன் சரிகோவண ஆடை
பொங்குதிரைவண் கடல்சூழ்ந்தழகார் புறவம்பதியாக
எங்கும்பரவி இமையோரேத்த உமையோடிருந்தானே. 5

பின்னுசடைகள் தாழக்கேழல் எயிறு[2]பிறழப்போய்
அன்னநடையார் மனைகள்தோறும் அழகாற்பலிதேர்ந்து
புன்னைமடலின் பொழில்சூழ்ந்தழகார் புறவம்பதியாக
என்னையுடையான் இமையோரேத்த உமையோடிருந்தானே. 6

---

* திருப்புறவம்-சீகாழி; சிபிச்சக்கிரவர்த்திக்காகப் புறு வடிவு கொண்ட தீக்கடவுள் பூசித்தமையாலும், கௌதம முனிவர் சாபத்தால் புறு வடிவம் பெற்ற பிரசாபதி முனிவன் பூசித்தமையாலும் இப்பெயர் பெற்றது. [1] சுறவஞ்செறிவண் கொடியோன் - மன்மதன். [2] கேழல் எயிறு - பன்றிக்கொம்பு.

உண்ணற்கரிய நஞ்சையுண் டொருதோழந்தேவர்
விண்ணிற்பொலிய அமுதமளித்த விடைசேர்கொடியண்ணல்
பண்ணிற்சிறைவண் டறைபூஞ்சோலைப் புறவம்பதியாக
எண்ணிற்சிறந்த இமையோரேத்த உமையோடிருந்தானே. 7

விண்தான் அதிர வியனார்கயிலை வேரோடெடுத்தான்றன்
திண்தோளுடலும் முடியுநெரியச் சிறிதேயூன்றிய
புண்தான்ஒழிய அருள்செய்பெருமான் புறவம்பதியாக
எண்தோளுடையான் இமையோரேத்த உமையோடிருந்தானே. 8

நெடியான்நீள்தா மரைமேலயனும் நேடிக்காண்கில்லாப்
படியாமேனி யுடையான்பவள வரைபோல்திருமார்பிற்
பொடியார்கோலம் உடையான்கடல்சூழ் புறவம்பதியாக
இடியார்முழவார் இமையோரேத்த உமையோடிருந்தானே. 9

ஆலும்மயிலின் பீலியமணர் அறிவில்சிறுதேரர்
கோலும்மொழிகள் ஒழியக்குழுவுந் தழலும்எழில்வானும்
போலும்வடிவும் உடையான்கடல்சூழ் புறவம்பதியாக
ஏலும்வகையால் இமையோரேத்த உமையோடிருந்தானே. 10

பொன்னார்மாட நீடுஞ்செல்வப் புறவம்பதியாக
மின்னாரிடையாள் உமையாளோடும் இருந்தவிமலனைத்
தன்னார்வஞ்செய் தமிழின்விரகன்[1] உரைத்ததமிழ்மாலை
பன்னாள்பாடி யாடப்பிரியார் பரலோகந்தானே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எய்யாவென்றித் தானவரூர்மூன் றெரிசெய்த
மையார்கண்டன் மாதுமைவைகுந் திருமேனிச்
செய்யாவெண்ணீ றணிவான்திகழ்பொற் பதிபோலும்
பொய்யாநாவின் அந்தணர்வாழும் புறவம்மே. 1

மாதொருபாலும் மாலொருபாலும்[2] மகிழ்கின்ற
நாதனென்றேத்தும் நம்பரன்வைகும் நகர்போலும்

---

[1] தமிழ் விரகன் - ஞானசம்பந்தர். [2] மாலொருபாலும் என்றது கேசவார்த்த மூர்த்தியைக் குறிக்கும்.

மாதவிமேய வண்டிசைபாட மயிலாடப்
போதலர்செம்பொன் புன்னைகொடுக்கும் புறவம்மே. 2

வற்றாநதியும் மதியும்பொதியுஞ் சடைமேலே
புற்றாரரவின் படமாடவுமிப் புவனிக்கோர்
பற்றாயிடுமின் பலியென்றடைவார் பதிபோலும்
பொற்றாமரையின் பொய்கைநிலாவும் புறவம்மே. 3

துன்னார்புரமும் பிரமன்சிரமுந் துணிசெய்து
மின்னார்சடைமேல் அரவும்மதியும் விளையாடப்
பன்னாளிடுமின் பலியென் றடைவார் பதிபோலும்
பொன்னார்புரிநூல் அந்தணர்வாழும் புறவம்மே. 4

தேவா அரனே சரணென்றிமையோர் திசைதோறுங்
காவாயென்று வந்தடையக்கார் விடம்உண்டு
பாவார்மறையும் பயில்வோருறையும் பதிபோலும்
பூவார்கோலச் சோலைசுலாவும் புறவம்மே. 5

கற்றறிவெய்திக் காமன்முன்னாகும் முகவெல்லாம்
அற்றரனேநின் னடிசரணென்னும் அடியோர்க்குப்
பற்றதுவாய பாசுபதன்சேர் பதியென்பர்
பொற்றிகழ்மாடத் தொளிகள்நிலாவும் புறவம்மே. 6

எண்டிசையோரஞ் சிடுவகைகார்சேர் வரையென்னக்
கொண்டெழுகோல முகில்போற்பெரிய கரிதன்னைப்
பண்டுரிசெய்தோன் பாவனைசெய்யும் பதியென்பர்
புண்டரிகத்தோன் போன்மறையோர்சேர் புறவம்மே. 7

பரக்குந்தொல்சீர்த் தேவர்கள்சேனைப் பௌவத்தைத்
துரக்குஞ்செந்தீப் போலமர்செய்யுந் தொழில்மேவும்
அரக்கன் திண்தோள் அழிவித்தானக் காலத்திற்
புரக்கும்வேந்தன் சேர்தருமூதூர் புறவம்மே. 8

மீத்திகழண்டந் தந்தயனோடு மிகுமாலும்
மூர்த்தியைநாடிக் காணவொணாது முயல்விட்டாங்
கேத்தவெளிப்பா டெய்தியவன்றன் இடமென்பர்
பூத்திகழ்சோலைத் தென்றல்உலாவும் புறவம்மே. 9

வையகம்நீர்தீ வாயுவும்விண்ணும் முதலானான்
மெய்யலதேரர் உண்டிலையென்றே நின்றேதம்

கையினிலுண்போர் காணவொணாதான் நகரென்பர்
பொய்யகமில்லாப் பூசுரர்வாழும் புறவம்மே.[4] 10

பொன்னியல்மாடப் புரிசை[5] நிலாவும் புறவத்து
மன்னியஈசன் சேவடிநாளும் பணிகின்ற
தன்னியல்பில்லாச் சண்பையர்கோன்சீர்ச் சம்பந்தன்
இன்னிசைஈரைந் தேத்தவல்லோர்கட் கிடர்போமே. 11

திருச்சிற்றம்பலம்

---

**திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

பெண்ணிய லுருவினர் பெருகிய புனல்விர வியபிறைக்
கண்ணி[1]யர் கடுநடை விடையினர் கழல்தொழும் அடியவர்
நண்ணிய பிணிகெட அருள்புரி பவர்நணு குயர்பதி
புண்ணிய மறையவர் நிறைபுக ழொலிமலி புறவமே. 1

கொக்குடை இறகொடு பிறையொடு குளிர்சடை முடியினர்
அக்குடை வடமு[2] மொர் அரவமு மலரரை மிசையினில்
திக்குடை மருவிய வுருவினர் திகழ்மலை மகளொடும்
புக்குட னுறைவது புதுமலர் விரைகமழ் புறவமே. 2

கொங்கியல் சுரிகுழல் வரிவளை யிளமுலை உமையொரு
பங்கியல் திருவுரு வுடையவர் பரசுவொ டிரலை[3] மெய்
தங்கிய கரதல முடையவர் விடையவர் உறைபதி
பொங்கிய பொருகடல் கொளவதன் மிசையுயர் புறவமே. 3

மாதவ முடைமறை யவனுயிர் கொளவரும் மறலியை
மேதகு திருவடி யிறையுற வுயிரது விலகினார்
சாதக வுருவியல் கானிடை உமைவெரு வுறவரு
போதக உரியதள் மருவினர் உறைபதி புறவமே. 4

காமனை யழல்கொள விழிசெய்து கருதலர் கடிமதில்[4]
தூமம துறவிறல் சுடர்கொளு வியஇறை தொகுபதி

---

[4] புறவமே என்றும் பாடம்; பிறவும் அன்ன. [5] புரிசை-மதில்.
[1] கண்ணி - தலைமாலை. [2] அக்குடை வடம் - உருத்திராட்ச மாலை; என்புமாலையுமாம். [3] இரலை-கலைமான். [4] கருதலர் கடிமதில்-திரிபுரம்.

ஓமமொ டுயர்மறை பிறவிய வகைதனொ டொளிசெழு
பூமகன் அலரொடு புனல்கொடு வழிபடு புறவமே.[2] 5

சொன்னய முடையவர் சுருதிகள் கருதிய தொழிலினர்
பின்னையர் நடுவுணர் பெருமையர் திருவடி பேணிட
முன்னைய முதல்வினை யறஅரு ளினருறை முதுபதி
புன்னையின் முகைநிதி[3]பொதியவிழ் பொழிலணி புறவமே. 6

வரிதரு புலியத ளுடையினர் மழுவெறி படையினர்
பிரிதரு நகுதலை வடமுடி மிசையணி பெருமையர்
எரிதரு முருவினர் இமையவர் தொழுவதொ ரியல்பினர்
புரிதரு குழலுமை யொடுமினி துறைபதி புறவமே. 7

வசிதரு முருவொடு மலர்தலை யுலகினை வலிசெயும்
நிசிசர னு[4]டலொடு நெடுமுடி யொருபது நெரிவுற
ஒசிதர வொருவிரல் நிறுவினர் ஒளிவளர் வெளிபொடி
பொசிதரு திருவுரு வுடையவர் உறைபதி புறவமே. 8

தேனக மருவிய செறிதரு முளரிசெய் தவிசினில்
ஊனக மருவிய புலனுகர் வுணர்வுடை யொருவனும்
வானகம் வரையக மறிகடல் நிலனெனு மெழுவகைப்
போனக மருவின னறிவரி யவர்பதி புறவமே. 9

கோசர நுகர்பவர் கொழுகிய[5] துவரன துகிலினர்
பாசுர வினைதரு பளகர்கள்[6] பழிதரு மொழியினர்
நீசரை விடுமினி நினைவுறு நிமலர்த முறைபதி
பூசுரர் மறைபயில் நிறைபுக ழொலிமலி புறவமே. 10

போதியல் பொழிலணி புறவநன் னகருறை புனிதனை
வேதிய ரதிபதி மிகுதலை தமிழ்கெழு விரகினன்
ஓதிய வொருபது முரியதொ ரிசைகொள வுரைசெயும்
நீதிய ரவரிரு நிலனிடை நிகழ்தரு பிறவியே. 11

திருச்சிற்றம்பலம்

---

2 இவ்வடிக்ள் பிரமதேவன பூசித்து வழிபட்டதைக் குறிக்கும். 3 முகநெதி என்றும், முகைநெதி என்றும் பாடம். 4 நிசிசரன்-இங்கு இராவணன். 5 கொழுவிய என்றும் பாடம். 6 பளகர்கள் - குற்றமுடையோர்.

## [திருச்சண்பைநகர்*]

பண் - தக்கேசி** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பங்கமேறு மதிசேர்சடையார் விடையார்பலவேதம்
அங்கமாறும் மறைநான்கவையு மானார்மீனரும்
வங்கமேவு கடல்வாழ்பரதர் மனைக்கேநுனைமூக்கின்
சங்கமேறி முத்தமீனுஞ் சண்பைநகராரே. 1

சூதகஞ்சேர் கொங்கையாளோர் பங்கர்சுடர்க்கமலப்
போதகஞ்சேர் புண்ணியனார் பூதகணநாதர்
மேதகஞ்சேர் மேகமந்தண் சோலையில்விண்ணார்ந்த
சாதகஞ்சேர் பாளைநீர்சேர் சண்பைநகராரே. 2

மகரத்தாடு கொடியோனுடலம் பொடிசெய்தவனுடைய
நிகரொப்பில்லாத் தேவிக்கருள்செய் நீலகண்டனார்
பகரத்தாரா[1] வன்னம்பகன்றில் பாதம்பணிந்தேத்தத்
தகரப்புன்னை தாழைப்பொழில்சேர் சண்பைநகராரே. 3

மொய்வல்லசுரர் தேவர்கடைந்த முழுநஞ்சதுவுண்ட
தெய்வர்செய்ய வுருவர்கரிய கண்டர்திகழ்சுத்திக்
கையர்கட்டங் கத்தர்கரியின் உரியர்காதலாற்
சைவர்பாசு பதர்கள்வணங்குஞ் சண்பைநகராரே. 4

கலமார்கடலுள் விடமுண்டமரர்க் கமுதம்அருள்செய்த
குலமார்கயிலைக் குன்றதுடைய[2] கொல்லையெருதேறி
நலமார்வெள்ளை நாளிகேரம்[3] விரியாநறும்பாளை
சலமார்கரியின் மருப்புக்காட்டுஞ் சண்பைநகராரே. 5

மாகரஞ்சேர் அத்தியின்தோல் போர்த்துமெய்ம்மாலான
சூகரஞ்[4] சேர் எயிறுபூண்ட சோதியன்மேதக்க

---

* திருச்சண்பைநகர்—சீகாழி; துருவாச முனிவர் சாபத்தால் சண்பைக்காடொன்று தோன்ற, அப்புல்லையே ஆயுதமாகக்கொண்டு யாதவகுமரர் போர்செய்து மடிய, அப்பழி நீங்கத் துருவாசர் பூசித்துப் பேறுபெற்றமையால் இப்பெயர் பெற்றது. ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்துபோயிற்று. [1] தாரா - ஒரு பறவை. [2] கயிலைக் குன்றொத் துடைய என்றும் பாடம். [3] நாளிகேரம் - தென்னை. [4] சூகரம் - பன்றி.

ஆகரஞ்[5] சேர் இப்பிழுத்தை அந்தண்வயலுக்கே
சாகரஞ்சேர் திரைகளுந்துஞ் சண்பைநகராரே. 6 - 7

இருளைப்புரையும் நிறத்திலரக்கன் றனையிடழிவித்து
அருளைச்செய்யும் அம்மான்ஏரா ரந்தண்கந்தத்தின்
மருளைச்சுரும்பு பாடியளக்கர் வரையார்திரைக்கையால்
தரளத்தோடு பவளமீனுஞ் சண்பைநகராரே. 8

மண்டான்முழுதும் உண்டமாலும் மலர்மிசைமேலயனும்
எண்டானறியா வண்ணம்நின்ற இறைவன்மறையோதி
தண்டார்குவளைக் கள்ளருந்தித் தாமரைத்தாதின்மேற்
பண்டான்கொண்டு வண்டுபாடுஞ் சண்பைநகராரே. 9

போதியாரும் பிண்டியாரும் புகழலசொன்னாலும்
நீதியாகக் கொண்டங்கருளும் நிமலன் இருநான்கின்
மாதிசித்தர் மாமறையின் மன்னியதொன்னூலர்
சாதிகீத வர்த்தமானர் சண்பைநகராரே. 10

வந்தியோடு பூசையல்லாப் போழ்தின்மறைபேசிச்
சந்திபோதிற் சமாதிசெய்யுஞ் சண்பைநகர்மேய
அந்திவண்ணன் தன்னையழகார் ஞானசம்பந்தன்சொற்
சிந்தைசெய்து பாடவல்லார் சிவகதிசேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எந்தமது சிந்தைபிரி யாதபெரு மானெனஇ றைஞ்சியிமை யோர், வந்துதுதி செய்யவளர் தூபமொடு தீபமலி[1] வாய்மை யதனால், அந்தியமர் சந்திபல அர்ச்சனைகள் செய்யஅமர் கின்ற அழகன், சந்தமலி குந்தளநன் மாதினொடு மேவுபதி சண்பை நகரே. 1

அங்கம்விரி துத்தி[2]யர வாமைவிர வாரம்அமர் மார்பிலழ கன், பங்கயமு கத்தரிவை யோடுபிரி யாதுபயில் கின்றபதிதான், பொங்குபர வைத்திரைகொ ணர்ந்துபவ ளத்திரள்பொ லிந்த

---

[5] ஆகரம் - உறைவிடம். [1] தீபமொடு தூபமலி என்றும் பாடம்.
[2] துத்தி — பாம்பின் படப்பொறி.

வயலே, சங்குபுரி யிப்பிதர ளத்திரள்பி றங்கொளிகொள் சண்பைநகரே. 2

போழுமதி தாழுநதி பொங்கரவு தங்குபுரி புன்சடையினன், யாழின்மொழி மாழைவிழி யேழையிள மாதினொடி ருந்தபதி தான், வாழைவளர் ஞாழல்மகிழ் மன்னுபுனை துன்னுபொழில் மாடுமடலார், தாழைமுகிழ் வேழமிகு தந்தமென உந்துதகு சண்பைநகரே. 3

கொட்டமுழ விட்டவடி வட்டணை[3]கள் கட்டநட மாடிகுலவும், பட்டநுதல் கட்டுமலர் மட்டுமலி பாவையொடு மேவுபதிதான், வட்டமதி தட்டுபொழி லுள்தமது வாய்மைவழு வாதமொழியார், சட்டகலை[4] எட்டுமரு வெட்டும்[5]வளர் தத்தைபயில் சண்பை நகரே. 4

பணங்கெழுவு பாடலினொ டாடல்பிரி யாதபர மேட்டிபக வன், அணங்கெழுவு பாகமுடை ஆகமுடை யன்பர்பெரு மான திடமாம், இணங்கெழுவி யாடுகொடி மாடமதில் நீடுவிரை யார் புறவெலாம், தணங்கெழுவி யேடலர்கொள் தாமரையில் அன் னம்வளர் சண்பைநகரே. 5

பாலனுயிர் மேலணவு காலனுயிர் பாறவுதை செய்தபரமன், ஆலுமயில் போலியலி ஆயிழைத னோடும்அமர் வெய்தும்இட மாம், ஏலமலி சோலையின வண்டுமலர் கிண்டிநற வுண்டிசை செயச், சாலிவயல் கோலமலி சேலுகள நீலம்வளர் சண்பை நகரே. 6

விண்பொய்அத னல்மழைவி ழாதொழியி னும்விளைவு தான் மிகவுடை, மண்பொய்அத னல்வளமி லாதொழியி னுந்தமது வண்மைவழுவார்,[6] உண்பகர வாருலகி னூழிபல தோறுநிலை யானபதிதான், சண்பைநகர் ஈசனடி தாழுமடி யார்தமது தன்மையதுவே. 7

வரைக்குலம கட்கொரும றுக்கம்[7]வரு வித்தமதி யில்வலி யுடை, அரக்கனது ரக்கரசி ரத்துறவ டர்த்தருள்பு ரிந்தஅழகன்,

---

[3] வட்டணை - தாளம். [4] சட்டகலை - ஆறங்கம். [5] எட்டுமருவெட்டும் - 64 கலைஞானங்கள். [6] வண்மை வழுவார் - வள்ளற்றன்மை குறையார். [7] மறுக்கம்-மனக்குழப்பம்; அச்சமுமாம்.

இருக்கையத ருக்கன்முத லானஇமை யோர்குழுமி யேழ்விழ வினில், தருக்குல நெருக்குமலி தண்பொழில்கள் கொண்டல்அன சண்பைநகரே. 8

நீலவரை போலநிகழ் கேழலுரு நீள்பறவை நேருருவமாம், மாலுமல ரானும்அறி யாமைவளர் தீயுருவ மானவரதன், சேலும்இன வேலும்அன கண்ணியொடு நண்ணுபதி சூழ்புறவெலாஞ், சாலிமலி சோலைகுயில் புள்ளிநெடு கிள்ளைபயில் சண்பை நகரே. 9

போதியர்கள் பிண்டியர்கள் போதுவழு வாதவகை யுண்டு பலபொய், ஓதியவர் கொண்டுசெய்வ தொன்றுமிலை நன்றதுணர் வீருரைமினோ, ஆதியெமை யாளுடைய அரிவையொடு பிரிவிலிஅ மர்ந்தபதிதான், சாதிமணி தெண்டிரைகொ ணர்ந்துவயல் புகஎறிகொள் சண்பைநகரே. 10

வாரின்மலி கொங்கையுமை நங்கையொடு சங்கரன்ம கிழ்ந் தமருமூர், சாரின்முரல் தெண்கடல்வி சும்புறமு ழங்கொலிகொள் சண்பைநகர்மேல், பாரின்மலி கின்றபுகழ் நின்றதமிழ் ஞானசம் பந்தனுரைசெய், சீரின்மலி செந்தமிழ்கள் செப்புமவர் சேர்வர் சிவ லோகநெறியே. 11

திருச்சிற்றம்பலம்

---

## [சீகாழி*]

### பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பூவார் கொன்றைப் புரிபுன் சடையீசா
காவா யெனநின் றேத்துங் காழியார்
மேவார் புரமூன் றட்டா ரவர்போலாம்
பாவா ரின்சொற் பயிலும் பரமரே. 1

எந்தை யென்றங் கிமையோர் புகுந்தீண்டிக்
கந்த மாலை கொடுசேர் காழியார்

---

* காளிதன் என்ற பாம்பும், நடனத்தில் தோல்வி யடைந்த காளியும் பூசித்துப் பேறு பெற்றமையால் சீகாழி எனப் பெயர் பெற்றது.

வெந்த நீற்றர் விமல ரவர்போலாம்
அந்தி நட்டம் ஆடும் அடிகளே. 2

தேனை வென்ற மொழியா ளொருபாகங்
கான மான்கைக் கொண்ட காழியார்
வான மோங்கு கோயி லவர்போலாம்
ஆன இன்பம் ஆடும் அடிகளே. 3

மாணா வென்றிக் காலன் மடியவே
காணா மாணிக் களித்த காழியார்
நாணார் வாளி தொட்டா ரவர்போலாம்
பேணார் புரங்கள் அட்ட பெருமானே. 4

மாடே ஓதம் எறிய வயற்செந்நெல்
காடே றிச்சங் கீனுங் காழியார்
வாடா மலராள் பங்க ரவர்போலாம்
ஏடார் புரமூன் றெரித்த இறைவரே. 5

கொங்கு செருந்தி கொன்றை மலர்கூடக்
கங்கை புனைந்த சடையார் காழியார்
அங்கண் அரவம் ஆட்டும் அவர்போலாஞ்
செங்கண் அரக்கர் புரத்தை யெரித்தாரே. 6

கொல்லை விடைமுன் பூதங் குனித்தாடுங்
கல்ல வடத்[1]தை யுகப்பார் காழியார்
அல்ல விடத்து நடந்தா ரவர்போலாம்
பல்ல விடத்தும் பயிலும் பரமரே. 7

எடுத்த அரக்கன் நெரிய விரலூன்றிக்
கடுத்து முரிய அடர்த்தார் காழியார்
எடுத்த பாடற் கிரங்கு மவர்போலாம்
பொடிக்கொள்[2] நீறு பூசும் புனிதரே. 8

ஆற்ற லுடைய அரியும் பிரமனுந்
தோற்றங் காணா வென்றிக் காழியார்
ஏற்ற மேறங் கேறு மவர்போலாங்
கூற்ற மறுகக் குமைத்த[3] குழகரே.[4] 9

---

[1] கல்லவடம் - கல்லால விருட்சம். [2] பொடிக்கண் என்றும் பாடம். [3] குமைத்தல் - அழித்தல். [4] குழகர் - அழகுடையவர்.

பெருக்கப் பிதற்றுஞ் சமணர் சாக்கியர்
கரக்கும் உரையை விட்டார் காழியார்
இருக்கின் மலிந்த இறைவ ரவர்போலாம்
அருப்பின் முலையாள் பங்கத் தையரே. 10

காரார் வயல்சூழ் காழிக் கோன்றனைச்
சீரார் ஞான சம்பந் தன்சொன்ன
பாரார் புகழப் பரவ[4] வல்லவர்
ஏரார் வானத் தினிதா இருப்பரே 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - தக்கராகம்*

திருச்சிற்றம்பலம்

அடலே றமருங் கொடி[1]யண்ணல்
மடலார் குழலா ளொடுமன்னுங்
கடலார் புடைசூழ் தருகாழி
தொடர்வா ரவர்தூ நெறியாரே. 1

திரையார் புனல்சூ டியசெல்வன்
வரையார் மகளோ டுமகிழ்ந்தான்
கரையார் புனல்சூழ் தருகாழி
நிரையார் மலர்தூ வுமின்இன்றே. 2

இடியார் குரல்ஏ றுடையெந்தை
துடியா ரிடையா ளொடுதுன்னுங்
கடியார் பொழில்சூழ் தருகாழி
அடியார் அறியார் அவலம்மே. 3

ஒளியார் விடமுண் டவொருவன்
அளியார் குழல்மங் கையொடன்பாய்க்
களியார் பொழில்சூழ்[1] தருகாழி
எளிதாம் அதுகண் டவரின்பே. 4

---

[4]பரவுதல்-துதித்தல். * இப்பதிகம் சீகாழிப்பதியை அடைந்தவர், வழிபட்டவர் பெறும் பயனை அறிவிப்பது. [1]அடலேறு அமருங்கொடி - இடபம் எழுதிய கொடி. [2] புனல்சூழ் என்றும் பாடம்.

பனியார் மலரார் தருபாதன்
முனிதா னுமையோ டுமுயங்கிக்
கனியார் பொழில்சூழ் தருகாழி
இனிதாம் அதுகண் டவரீடே. 5

கொலையார் தருகூற் றமுதைத்து
மலையான் மகளோ டுமகிழ்ந்தான்
கலையார் தொழுதேத் தியகாழி
தலையால் தொழுவார் தலையாரே. 6

திருவார் சிலைபால் எயிலெய்து
உருவார் உமையோ டுடனான்
கருவார் பொழில்சூழ் தருகாழி
மருவா தவர்[1]வான் மருவாரே. 7

அரக்கன் வலியொல் கஅடர்த்து
வரைக்கு மகளோ டுமகிழ்ந்தான்
சுரக்கும் புனல்சூழ் தருகாழி
நிரக்கும் மலர்தூ வுநினைந்தே. 8

இருவர்[2]க் கெரியா கிநிமிர்ந்தான்
உருவிற் பெரியா ளொடுசேருங்
கருநற் பரவை கமழ்காழி
மருவப் பிரியும் வினைமாய்ந்தே. 9

சமண்சாக் கியர்தாம் அலர்[3]தூற்ற
அமைந்தான் உமையோ டுடன் அன்பாய்க்
கமழ்ந்தார் பொழில்சூழ் தருகாழி
சுமந்தார் மலர்தூ வுதல்தொண்டே. 10

நலமா கியஞா னசம்பந்தன்
கலமார் கடல்சூழ் தருகாழி
நிலையா கநினைந் தவர்பாடல்
வலரா னவர்வான் அடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

[1]மருவாதவர் - அடையாதவர். [2] இருவர் - பிரம விட்டுணு என்ற இருவர்கள். [3] அலர் - பழிச்சொல்.

பண் - குறிஞ்சி* [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நல்லார் தீமேவுந் தொழிலார் நால்வேதஞ்
சொல்லார் கேண்மையார் சுடர்பொற் கழலேத்த
வில்லாற் புரஞ்செற்றான் மேவும் பதிபோலுங்
கல்லார் மதில்சூழ்ந்த காழிந் நகர்தானே. 1

துளிவண் தேன்பாயும் இதழி[1] தூமத்தந்
தெளிவெண் டிங்கள்மா சுண[2] நீர் திகழ்சென்னி
ஒளிவெண் டலைமாலை உகந்தா னூர்போலுங்
களிவண் டியாழ்செய்யுங் காழிந் நகர்தானே. 2

ஆலக் கோலத்தின் நஞ்சுண் டமுதத்தைச்
சாலத் தேவர்க்கீந் தளித்தான் தன்மையால்
பாலற்[3] காய்நன்றும் பரிந்து பாதத்தால்
காலற் காய்ந்தானூர் காழிந் நகர்தானே. 3-7

இரவில் திரிவோர்[4] கட் கிறைதோ ளிணைபத்தும்
நிரவிக் கரவாளை நேர்ந்தா னிடம்போலும்
பரவித் திரிவோர்க்கும் பால்நீ றணிவோர்க்குங்
கரவில் தடக்கையார் காழிந் நகர்தானே. 8

மாலும் பிரமனும் அறியா மாட்சியான்
தோலும் புரிநூலுந் துதைந்த வரைமார்பன்
ஏலும் பதிபோலும் இரந்தோர்க் கெந்நாளுங்
காலம் பகராதார் காழிந் நகர்தானே. 9

தங்கை யிடவுண்பார் தாழ்சீ வரத்தார்கள்
பெங்கை[5] யுணராதே பேணித் தொழுமின்கள்
மங்கை யொருபாகம் மகிழ்ந்தான் மலர்ச்சென்னிக்
கங்கை தரித்தானூர் காழிந் நகர்தானே. 10

வாசம் கமழ்காழி மதிசெஞ் சடைவைத்த
ஈசன் நகர்தன்னை இணையில் சம்பந்தன்

---

* இப்பதிகத்தில் 4, 5, 6, 7-ம் செய்யுட்கள் மறைந்து போயின. [1] இதழி - கொன்றை. [2] மாசுணம் - பாம்பு. [3] பாலன் - மார்க்கண்டேயர். [4] இரவில் திரிவோர் – அரக்கர். [5] பெங்கை – கள் போல் மயக்கந்தருஞ் சொற்களை.

பேசுந் தமிழ்வல்லோர் பெருநீ ருலகத்துப்
பாசந் தனையற்றுப் பழியில் புகழாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - குறிஞ்சி*

திருச்சிற்றம்பலம்

உரவார்கலையின் கவிதைப்புலவர்க் கொருநாளுங்
கரவாவண்கைக் கற்றவர்சேருங் கலிக்காழி
அரவார்அரையா அவுணர்புரமூன் றெரிசெய்த
சரவாஎன்பார் தத்துவஞானத் தலையாரே. 1

மொய்சேர்வண்டுண் மும்மதநால்வாய்[1] முரண்வேழக்
கைபோல்வாழை காய்குலையீனுங் கலிக்காழி
மைசேர்கண்டத் தெண்தோள்முக்கண் மறையோனே
ஐயாஎன்பார்க் கல்லல்களான அடையாவே. 2

இளகக்கமலத் தீன்களியங்குங் கழிசூழக்
களகப்புரிசைக் கவினார்சாருங் கலிக்காழி
அளகத்திருநல் நுதலிபங்கா அரனேயென்
றுளகப்பாடும் அடியார்க்குறுநோய் அடையாவே. 3

எண்ணார்முத்தம் ஈன்றுமரகதம் போற்காய்த்துக்
கண்ணார்கமுகு பவளம்பழுக்குங் கலிக்காழிப்
பெண்ணோர்பாகா பித்தாபிரானே யென்பார்க்கு
நண்ணாவினைகள் நாடொறும்இன்பந் நணுகும்மே. 4

மறையார்சாரற் செம்புனல்வந்தங் கடிவருடக்
கழையார்கரும்பு கண்வளர்சோலைக் கலிக்காழி
உழையார்கரவா உமையாள்கணவா வொளிர்சங்கக்
குழையாஎன்று கூறவல்லார்கள் குணவோரே. 5

குறியார்திரைகள் வரைகள்நின்றுங் கோட்டாறு
கறி[2] யார்கழிசம் பிரசங்[3] கொடுக்குங் கலிக்காழி
வெறியார்கொன்றைச் சடையாவிடையா என்பாரை
அறியாவினைகள் அருநோய்பாவம் அடையாவே. 6 - 7

---

* இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1] நால்வாய் – தொங்குகின்ற வாய். [2] கறி - மிளகு. [3] பிரசம் - தேன்.

உலங்[3] கொள்சங்கத் தார்கலியோதத் துதையுண்டு
கலங்கள்வந்து கார்வயலேறுங் கலிக்காழி
இலங்கைமன்னன் தன்னையிடர்கண் டருள்செய்த
சலங்கொள்சென்னி மன்னனென்னத் தவமாமே. 8

ஆவிக்கமலத் தன்னம்இயங்குங் கழிசூழக்
காவிக்கண்ணார் மங்கலம்ஓவாக் கலிக்காழிப்
பூவில்தோன்றும் புத்தேளொடுமா லவன்தானும்
மேவிப்பரவும் அரசேயென்ன வினைபோமே. 9

மலையார்மாடம் நீடுயர்இஞ்சி[4] மஞ்சாருங்
கலையார்மதியஞ் சேர்தரும்அந்தண் கலிக்காழித்
தலைவாசமணர் சாக்கியர்க்கென்றும் அறிவொண்ணா
நிலையாயென்னத் தொல்வினையாய நில்லாவே. 10

வடிகொள்வாவிச் செங்கழுநீரிற் கொங்காடிக்
கடிகொள்தென்றல் முன்றினில்வைகுங் கலிக்காழி
அடிகள்தம்மை அந்தமில்ஞான சம்பந்தன்
படிகொள்பாடல் வல்லவர்தம்மேற் பழிபோமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - இந்தளம்* [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நல்லானை நான்மறை யோடிய லாறங்கம்[1]
வல்லானை வல்லவர் பான்மலிந் தோங்கிய
சொல்லானைத் தொன்மதிற் காழியே கோயிலாம்
இல்லானை யேத்தநின் றூர்க்குள தின்பமே. 1

நம்மான மாற்றிந மக்கரு ளாய்நின்ற
பெம்மானைப் பேயுடன் ஆடல்பு ரிந்தானை
அம்மானை அந்தணர் சேரும ணிகாழி
எம்மானை யேத்தவல் லார்க்கிட ரில்லையே. 2

அருந்தானை யன்புசெய் தேத்தகில் லார்பால்
பொருந்தாவனைப் பொய்யடி மைத்தொழில் செய்வாருள்

---

[3] உலம்-திரட்சி. [4] இஞ்சி—மதில். *இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் மறைந்துபோயிற்று. [1]மறையோடிகலா றங்கம் என்னும் பாடம்.

விருந்தாவன வேதிய ரோதிமி டைகாழி
இருந்தானை யேத்துமின் நும்வினை யேகவே. 3

புற்றானைப்[1] புற்றர வம்அரை யின்மிசைச்
சுற்றானைத் தொண்டுசெய் வாரவர் தம்மொடும்
அற்றானை அந்தணர் காழிஅ மர்கோயில்
பற்றானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. 4

நெதி[2] யானை நெஞ்சிடங் கொள்ளநி னைவார்தம்
விதியானை விண்ணவர் தாம்வியந் தேத்திய
கதியானைக் காருல வும்பொழிற் காழியாம்
பதியானைப் பாடுமின் நும்வினை பாறவே. 5

செப்பான மென்முலை யாளைத் திகழ்மேனி
வைப்பானை வார்கழ லேத்தி நினைவார்தம்
ஒப்பானை ஓதம்உ லாவுக டற்காழி
மெய்ப்பானை மேவிய மாந்தர் வியந்தாரே.[3] 6

துன்பானைத் துன்பம்அ ழித்தரு ளாக்கிய
இன்பானை யேழிசை[4] யின்னிலை பேணுவார்
அன்பானை அணிபொழிற் காழிந கர்மேய
நம்பானை நண்ணவல் லார்வினை நாசமே. 7

குன்றானைக் குன்றெடுத் தான்புயம் நாலைந்தும்
வென்றானை மென்மல ரானொடு மால்தேட
நின்றானை நேரிழை யாளொடுங் காழியுள்
நன்றானை நம்பெரு மானைந ணுகுமே. 8-9

சாவாயும் வாதுசெய் சாவகர் சாக்கியர்
மேவாத சொல்லவை கேட்டுவெ குளேன்மின்
பூவாய கொன்றையி னானைப்பு னற்காழிக்
கோவாய கொள்கையி னானடி கூறுமே. 10

கழியார்சீ ரோதமல் குங்கடற் காழியுள்
ஒழியாது கோயில்கொண் டானையு கந்துள்கித்

---

[1] புற்றானை—புற்றாய் முளைத்திருப்பானை. [2] நெதி - செல்வம்; மோட்சம். [3] மேவியமாந்தார் வியந்தாரே என்றும் பாடம். [4] ஏழிசை-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் எழுவகை இசை.

தமிழார்சொல் ஞானசம் பந்தன்த மிழார[4]
மொழிவார்கள் மூவுல கும்பெறு வார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - சீகாமரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பண்ணின் நேர்மொழி மங்கை மார்பலர்
பாடி யாடிய வோசை நாடொறுங்
கண்ணின் நேரயலே பொலியுங் கடற்காழிப்
பெண்ணின் நேரொரு பங்கு டைப்பெரு
மானை யெம்பெரு மானென் றென்றுன்னும்
அண்ண லாரடியார் அருளாலுங் குறைவிலரே. 1

மொண்ட லம்பிய வார்தி ரைக்கடல்
மோதி மீதெறி சங்கம்[1] வங்கமுங்
கண்டல[2]ம் புடைசூழ் வயல்சேர் கலிக்காழி
வண்டு லம்பிய கொன்றை யானடி
வாழ்த்தி யேத்திய மாந்தர் தம்வினை
விண்டல் அங்கெளிதாம் அதுநல் விதியாமே. 2

நாடெ லாமொளி[3] யெய்த நல்லவர்
நன்று மேத்தி வணங்கு வார்பொழிற்
காடெ லாமலர் தேன்துளிக்குங் கடற்காழித்
தோடு லாவிய காது ளாய்சுரி
சங்க வெண்குழை யாயென் றென்றுன்னும்
வேடங் கொண்டவர்கள் வினை நீங்கலுற்றாரே. 3

மையி னார்பொழில் சூழ நீழலில்
வாச மார்மது மல்க நாடொறுங்
கையி னார்மலர் கொண்டெழுவார் கலிக்காழி
ஐய னேயர னேயென் றாதரித்
தோதி நீதியு ளேநி னைப்பவர்
உய்யு மாறுலகில் உயர்ந்தாரி னுள்ளாரே. 4

---

[4] தமிழான என்னும் பாடம். [1] வங்கம் - கப்பல். [2] கண்டல் - தாழை. [3] ஒளி—புகழ்.

மலிக டுந்திரை மேல்நி மிர்ந்தெதிர்[3]
வந்து வந்தொளிர் நித்தி லம்விழக்
கலிக டிந்தகையார் மருவுங் கலிக்காழி
வலிய காலனை வீட்டி மாணிதன்
இன்னு யிரளித் தானை வாழ்த்திட
மெலியுந் தீவினைநோ யவைமேவுவர் வீடே. 5

மற்றும் இவ்வுல கத்து ளோர்களும்
வானு ளோர்களும் வந்து வைகலுங்
கற்ற சிந்தையராய்க் கருதுங் கலிக்காழி
நெற்றி மேலமர் கண்ணி னானை
நினைந்தி ருந்திசை பாடு வார்வினை
செற்றமாந் தரெனத் தெளிமின்கள் சிந்தையுளே. 6

தான லம்புரை வேதிய ரொடு
தக்க மாதவர் தாந்தொ ழப்பயில்
கானலின் விரைசேர விம்முங் கலிக்காழி
ஊனு ளாருயிர் வாழ்க்கை யாயுற
வாகி நின்றவொ ருவனே யென்றென்
றுனலங் கொடுப்பார் அருள்வேந்த ராவாரே. 7

மைத்த வண்டெழு சோலை யாலைகள்
சாலி[4] சேர்வய லார வைகலுங்
கத்து வார்கடல் சென்றுலவுங் கலிக்காழி
அத்த னேயர னேய ரக்கனை
யன்ற டர்த்துகந் தாயு னகழல்
பத்தராய்ப் பரவும் பயன்ஈங்கு நல்காயே. 8

பரும ரா[5]மொடு தெங்கு பைங்கத
விப்ப ருங்கனி யுண்ண மந்திகள்
கருவரா லுகளும் வயல்சூழ் கலிக்காழித்
திருவின் நாயக னாய மாலொடு
செய்ய மாமலர்ச் செல்வ னாகிய
இருவர் காண்பரியா னெனவுத்துத லின்பமே. 9

---

[3] திரைமேனி ரந்தெதிர் என்றும் பாடம். [4] சாலி — நெல்.
[5] பருமராம்—பெரிய வெண்கடம்பு.

பிண்ட முண்டுழல் வார்க ளும்பிரி
யாது வண்துகி லாடை போர்த்தவர்
கண்டு சேரகிலா ரழகார் கலிக்காழித்
தொண்டை வாயுமை யோடு கூடிய
வேட னேசுட லைப்பொ டியணி
அண்டவா ணனென்பார்க் கடையா அல்லல்தானே. 10

பெயரெ னும்மிவை பன்னி ரண்டிலும்
உண்டெ னப்பெயர் பெற்ற வூர்திகழ்
கயலுலாம் வயல்சூழ்ந் தழகார் கலிக்காழி
நயன டன்கழ லேத்தி வாழ்த்திய
ஞான சம்பந்தன் செந்த மிழுரை
உயருமா மொழிவா நலகத் துயர்ந்தாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நலங்கொள் முத்தும் மணியும் அணியுந் திரளோதங்
கலங்கள் தன்னிற் கொண்டு கரைசேர் கலிக்காழி
வலங்கொள் மழுவொன் றுடையாய் விடையா யெனவேத்தி
அலங்கல் சூட்ட வல்லார்க் கடையா அருநோயே. 1

ஊரார் உவரிச் சங்கம் வங்கங் கொடுவந்து
காரார் ஓதங் கரைமேல் உயர்த்துங் கலிக்காழி
நீரார் சடையாய் நெற்றிக் கண்ணா என்றென்று
பேரா யிரமும் பிதற்றத் தீரும் பிணிதானே. 2

வடிகொள் பொழிலின் மழலை வரிவண் டிசைசெய்யக்
கடிகொள் போதில் தென்றல் அணையுங் கலிக்காழி
முடிகொள் சடையாய் முதல்வா என்று முயன்றேத்தி
அடிகை தொழுவார்க் கில்லை அல்லல் அவலமே. 3

மனைக்கே யேற வளஞ்செய் பவளம் வளர்முத்தங்
கனைக்குங் கடலுள் ஓதம் ஏறுங் கலிக்காழிப்
பனைக்கைப் பகட்டீர் உரியாய் பெரியா யெனப்பேணி
நினைக்க வல்ல அடியார் நெஞ்சில் நல்லாரே. 4

பரிதி[1] யியங்கும் பாரிற் சீரார் பணியாலே
கருதி விண்ணோர் மண்ணோர் விரும்புங் கலிக்காழிச்
சுருதி மறைநான் கான செம்மை தருவானைக்
கருதி யெழுமின் வழுவா வண்ணந் துயர்போமே. 5

மந்த[2] மருவும் பொழிலில் எழிலார் மதுவுண்டு
கந்த மருவ வரிவண் டிசைசெய் கலிக்காழிப்
பந்த நீங்க அருளும் பரனே யெனவேத்திச்
சிந்தை செய்வார் செம்மை நீங்கா திருப்பாரே. 6

புயலார் பூமி நாமம் ஓதிப் புகழ்மல்கக்
கயலார் கண்ணார் பண்ணார் ஒலிசெய் கலிக்காழிப்
பயில்வான் தன்னைப் பத்தி யாரத் தொழுதேத்த
முயல்வார் தம்மேல் வெம்மைக் கூற்ற முடுகாதே. 7

அரக்கன் முடிதோள் நெரிய அடர்த்தான் அடியார்க்குக்
கரக்க கில்லா தருள்செய் பெருமான் கலிக்காழிப்
பரக்கும் புகழான் தன்னை யேத்திப் பணிவார்மேல்
பெருக்கும் இன்பந் துன்ப மான பிணிபோமே. 8

மாணா யுலகங் கொண்ட மாலும் மலரோனுங்
காணா வண்ணம் எரியாய் நிமிர்ந்தான் கலிக்காழிப்
பூணார் முலையாள் பங்கத் தானைப் புகழ்ந்தேத்திக்
கோணா நெஞ்சம் உடையார்க் கில்லைக் குற்றமே. 9

அஞ்சி யல்லல் மொழிந்து திரிவார் அமண்ஆதர்
கஞ்சி காலை யுண்பார்[3]க் கரியான் கலிக்காழித்
தஞ்ச மாய தலைவன் தன்னை நினைவார்கள்
துஞ்ச லில்லா நல்ல வுலகம் பெறுவாரே. 10

ஊழி யாய பாரில் ஓங்கும் உயர்செல்வக்
காழி யீசன் கழலே பேணுஞ் சம்பந்தன்
தாழும் மனத்தால் உரைத்த தமிழ்கள் இவைவல்லார்
வாழி நீங்கா வானோ ருலகில் மகிழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

[1] பரிதி – வட்டவடிவாயுள்ளது; சூரியன். [2] மந்தம் – இளங்காற்று. [3] இது சமணர் செயலைக் குறிக்கும்.

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

விண்ணியங்கு மதிக்கண்ணி யான்விரி யுஞ்சடைப்
பெண்ணயங்கொள் திருமேனி யான்[1]பெரு மானனற்
கண்ணயங்கொள் திருநெற்றி யான்கலிக் காழியுள்
மண்ணயங்கொள் மறையாள ரேத்துமலர்ப் பாதனே. 1

வலிய காலனுயிர் வீட்டினன்மட வாளொடும்
பலிவி ரும்பியதோர் கையினன்பர மேட்டியான்
கலியை வென்றமறை யாளர்தங்கலிக் காழியுள்
நலிய வந்தவினை தீர்த்துகந்தஎந் நம்பனே. 2

சுற்ற லா[2] நற்புலித் தோலசைத்தயன் வெண்டலைத்
துற்ற லாயதொரு கொள்கையான்சுடு நீற்றினன்
கற்றல் கேட்டலுடை யார்கள்வாழ்கலிக் காழியுள்
மற்ற யங்கு[3]திரள் தோளெம்மைந்தனவன் நல்லனே. 3

பல்ல யங்குதலை யேந்தினன்படு கானிடை
மல்ல யங்குதிரள் தோள்களாரநட மாடியுங்
கல்ல யங்குதிரை சூழநீள்கலிக் காழியுள்
தொல்ல யங்குபுகழ் பேணநின்றசுடர் வண்ணனே. 4

தூந யங்கொள்திரு மேனியிற்பொடிப் பூசிப்போய்
நாந யங்கொள்மறை யோதிமாதொரு பாகமாக்
கான யங்கொள்புனல் வாசமார்கலிக் காழியுள்
தேன யங்கொள்முடி ஆனைந்தாடிய செல்வனே. 5

சுழியி லங்கும்புனற் கங்கையாள்சடை யாகவே
மொழியி லங்கும்மட மங்கைபாகம் உகந்தவன்
கழியி லங்குங்கடல் சூழுந்தண்கலிக் காழியுள்
பழியி லங்குந்துய ரொன்றிலாப்பர மேட்டியே. 6

முடியி லங்கும்உயர் சிந்தையான்முனி வர்தொழ
அடியி லங்குங்கழ லார்க்கவேயன லேந்தியுங்
கடியி லங்கும்பொழில் சூழுந்தண்கலிக் காழியுள்
கொடியி லங்கும்இடை யாளொடுங்குடி கொண்டதே. 7

---

[1] மேனியாம் என்றும் பாடம். [2] சுற்றரை என்றும் பாடம்.
[3] மற்றயங்கு—மல் + தயங்கு; மல்—வலிமை.

வல்ல ரக்கன்வரை பேர்க்கவந்தவன் தோள்முடி
கல்ல ரக்கிவ்விறல் வாட்டினுன்கலிக் காழியுள்
நல்லொ ருக்கியதோர் சிந்தையார்மலர் தூவவே
தொல்லி ருக்கும்மறை யோத்து[3] கந்துடன் வாழுமே. 8

மருவு நான்மறை யோனுமாமணி வண்ணனும்
இருவர் கூடியிசைந் தேத்தவேபெரி யான்றனூர்
வெருவ நின்றதிரை யோதம்வார்வியன்[4] முத்தவை
கருவை யார்வயற் சங்குசேர்கலிக் காழியே. 9

நன்றி யொன்றுமுண ராதவன்சமண் சாக்கியர்
அன்றி யங்கவர் சொன்னசொல்லவை கொள்கிலான்
கன்று மேதியிளங் கானல்வாழ்கலிக் காழியுள்
வென்றி சேர்வியன் கோயில்கொண்டவிடை யாளனே. 10

கண்ணும் மூன்றுமுடை யாதிவாழ்கலிக் காழியுள்
அண்ண லந்தண்ணருள் பேணிஞானசம் பந்தன்சொல்
வண்ணம் மூன்றுந்தமி ழில்தெரிந்திசை பாடுவார்
விண்ணும் மண்ணும்விரி கின்றதொல்புக ழாளரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - பியந்தைக்காந்தாரம்* [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொங்கு வெண்புரி[1] வளரும் பொற்புடை மார்பனெம் பெருமான்
செங்கண் ஆடர வாட்டுஞ் செல்வனெம் சிவனுறை கோயில்
பங்க மில்பல மறைகள் வல்லவர் பத்தர்கள் பரவுந்
தங்கு வெண்டிரைக் கானல் தண்வயற் காழிநன் னகரே. 1

தேவர் தானவர் பரந்து திண்வரை மால்கடல் நிறுவி
நாவ தாலமிர் துண்ண நயந்தவர் இரிந்திடக் கண்டு
ஆவ வென்றரு நஞ்சம் உண்டவன் அமர்தரும் மூதூர்
காவ லார்மதில் சூழ்ந்த கடிபொழிற் காழிநன் னகரே. 2

---

[3] மறையேத்து என்றும் பாடம். [4] திரையோத மார்வியன் என்றும், திரையோதம்வாரவியன் என்றும் பாடம். *இப்பதிகத்தில் 11-ம் செய்யுளில் பின் மூன்றடிகள் சிதைந்து போயின. [1]வெண்புரி—வெண்மையான பூணூல்.

கரியின் மாமுக முடைய கணபதி தாதைபல் பூதந்
திரிய இல்பலிக் கேகுஞ் செழுஞ்சுடர் சேர்தரும் மூதூர்
சரி[1]யின் முன்கைநன் மாதர் சதிபட மாநட மாடி
உரிய நாமங்கள் ஏத்தும் ஒலிபுனற் காழிநன் னகரே. 3

சங்க வெண்குழைச் செவியன் தண்மதி சூடிய சென்னி
அங்கம் பூணென வுடைய அப்பனுக் கழகிய வூராந்
துங்க மாளிகை யுயர்ந்த தொகுகொடி வானிடை மிடைந்து
வங்க வாண்மதி தடவு மணிபொழிற் காழிநன் னகரே. 4

மங்கை கூறமர் மெய்யான் மான்மறி யேந்திய கையான்
எங்க ளீசனென் றெழுவார் இடர்வினை கெடுப்பவற் கூராஞ்
சங்கை[2] யின்றிநல் நியமந் தாஞ்செய்து தகுதியின் மிக்க
கங்கை நாடுயர்[3] கீர்த்தி மறையவர் காழிநன் னகரே. 5

நாறு கூவிள[4] மத்தம் நாகமுஞ் சூடிய நம்பன்
ஏறும் ஏறிய ஈசன் இருந்தினி தமர்தரும் மூதூர்
நீறு பூசிய வுருவர் நெஞ்சினுள் வஞ்சமொன் றின்றித்
தேறு வார்கள்சென் றேத்துஞ் சீர்திகழ் காழிநன் னகரே. 6

நடம தாடிய நாதன் நந்திதன் முழவிடைக் காட்டில்
விடம மர்ந்தொரு காலம் விரித்தறம் உரைத்தவற் கூராம்
இடம தாமறை பயில்வார் இருந்தவர் திருந்தியம்[5] போதிற்
குடம தார்மணி மாடங் குலாவிய காழிநன் னகரே. 7

கார்கொள் மேனியவ் வரக்கன் றன்கடுந் திறலினைக் கருதி
ஏர்கொள் மங்கையும் அஞ்ச எழில்மலை யெடுத்தவன் நெரியச்
சீர்கொள் பாதத்தொர் விரலாற்செறுத்தவெஞ் சிவனுறைகோயில்
தார்கொள் வண்டினஞ் சூழ்ந்த தண்வயற் காழிநன் னகரே. 8

மாலும் மாமல ரானும் மருவிநின் றிகலிய மனத்தாற்
பாலுங் காண்பரி தாய பரஞ்சுடர் தன்பதி யாகுஞ்
சேலும் வாளையுங் கயலுஞ் செறிந்துதன் கிளையொடு மேய
ஆலுஞ் சாலிநற் கதிர்கள் அணிவயற் காழிநன் னகரே. 9

புத்தர் பொய்மிகு சமணர் பொலிகழல் அடியிணை காணுஞ்
சித்த மற்றவர்க் கிலாமைத் திகழ்ந்தநற் செழுஞ்சுடர்க் கூராஞ்

---

[1] சரி-வளை. [2] சங்கை-ஐயம். [3] கங்கைநாடுவேர் என்றும் பாடம்.
[4] கூவிளம்-வில்வம். [5] திருந்தியஎன்றும் பாடம்.

சித்த ரோடுநல் லமரர் செறிந்தநன் மாமலர் கொண்டு
முத்த னேயருு ளென்று முறைமைசெய் காழிநன் னகரே. 10

ஊழி யானவை பலவும் ஒழித்திடுங் காலத்தி லோங்கு
* * * * 11

திருச்சிற்றம்பலம்

---

### திருவிராகம் பண் - நட்டராகம்* [2.ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நம்பொருள் நம்மக்களென்று நச்சி[1] இச்சை செய்துநீர்
அம்பரம் அடைந்துசால அல்லலுய்ப்ப தன்முனம்
உம்பர்நாதன் உத்தமன் ஒளிமிகுத்த செஞ்சடை
நம்பன்மேவு நன்னகர் நலங்கொள்காழி சேர்மினே. 1

பாவமேவும் உள்ளமோடு பத்தியின்றி நித்தலும்
ஏவமான செய்துசாவ தன்முனம்மி சைந்துநீர்
தீபமாலை தூபமுஞ் செறிந்தகைய ராகிநம்
தேவதேவன் மன்னுமூர் திருந்துகாழி சேர்மினே. 2

சோறுகூறை[2] யின்றியே துவண்டுதூர மாய்நமக்
கேறுசுற்றம் எள்கவே யிடுக்கணுய்ப்ப தன்முனம்
ஆறுமோர் சடையினன் ஆதியானை செற்றவன்
நாறுதேன் மலர்ப்பொழில் நலங்கொள்காழி சேர்மினே. 3

நச்சிநீர் பிறன்கடை நடந்துசெல்ல[3] நாவளும்
உச்சிவம் மெனும்உரை[4] யுணர்ந்துகேட்ப தன்முனம்
பிச்சர்நச் சரவரைப் பெரியசோதி பேணுவார்
இச்சைசெய்யும் எம்பிரான் எழில்கொள்காழி சேர்மினே. 4

கண்கள்காண் பொழிந்துமேனி கன்றியொன்ற லாதநோய்
உண்கிலாமை செய்து[5]நும்மை யுய்த்தழிப்ப தன்முனம்
விண்குலாவு தேவருய்ய வேலைநஞ் சமுதுசெய்
கண்கள்மூன் றுடையவெம் கருத்தர்காழி சேர்மினே. 5

---

* இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1]நச்சி - விரும்பி. [2]கூறை - ஆடை. [3]நடந்துசொல்ல என்றும் பாடம். [4]உச்சிவம் மினெனுமுரை என்றும் பாடம். [5]உண்கிலாது செய்து என்றும் பாடம்.

அல்லல்வாழ்க்கை யுய்ப்பதற் கவத்தமே பிறந்துநீர்
எல்லையில் பிணக்கினிற் கிடந்திடா தெழும்மினோ
பல்லில்வெண் டலையினிற் பலிக்கியங்கு பான்மையன்
கொல்லையேற தேறுவான் கோலக்காழி சேர்மினே. 6, 7

பொய்மிகுத்த வாயராய்ப் பொருமையோடு செல்லுநீர்
ஐமிகுத்த கண்டரா யடுத்திரைப்ப தன்முனம்
மைமிகுத்த மேனிவாள் அரக்கனைநெ ரித்தவன்
பைமிகுத்த பாம்பரைப் பரமர்காழி சேர்மினே. 8

காலினோடு கைளுந் தளர்ந்துகாம நோய்தனல்
ஏலவார் குழலினர் இகழ்ந்துரைப்ப தன்முனம்
மாலினோடு நான்முகன் மதித்தவர்கள் காண்கிலா
நீலமேவு கண்டனர் நிகழ்ந்தகாழி சேர்மினே. 9

நிலைவெறுத்த நெஞ்சமோடு நேசமில் புதல்வர்கள்
முலைவெறுத்த பேர்தொடங்கி யேமுனிவ தன்முனந்
தலைபறித்த கையர்தேரர் தாந்தரிப் பரியவன்
சிலைபிடித் தெயிலெய்தான் திருந்துகாழி சேர்மினே. 10

தக்கனார் தலையரிந்த சங்கரன் றனதரை
அக்கினோ டரவசைத்த அந்திவண்ணர் காழியை
ஒக்கஞா னசம்பந்தன் உரைத்தபாடல் வல்லவர்
மிக்கஇன்ப மெய்திவீற் றிருந்துவாழ்தல் மெய்ம்மையே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - செவ்வழி [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொடியிலங்குந் திருமேனி யாளர் புலியதளினர்
அடியிலங்குங் கழலார்க்க ஆடும் அடிகள்ளிடம்
இடியிலங்குங் குரலோதம் மல்கவ் வெறிவார்திரைக்
கடியிலங்கும் புனல்முத் தலைக்குங்கடற் காழியே. 1

மயலிலங்குந் துயர்மா சறுப்பானருந் தொண்டர்கள்
அயலிலங்கப் பணிசெய்ய நின்றவ் வடிகள்ளிடம்
புயலிலங்குங் கொடையாளர் வேதத்தொலி பொலியவே
கயலிலங்கும் வயற்கழனி சூழுங்கடற் காழியே. 2

கூர்விலங்குந் திரிசூல வேலர்குழைக் காதினர்
மார்விலங்கும் புரிநூலு கந்தம்மண வாளனூர்
நேர்விலங்கல் லனதிரை கள்மோதம்[1] நெடுந்தாரைவாய்க்
கார்விலங்கல் லெனக்கலந் தொழுகுங்கடற் காழியே. 3

குற்றமில்லார் குறைபாடு செய்வார் பழிதீர்ப்பவர்
பெற்ற[2]நல்ல கொடிமுன் னுயர்த்த பெருமானிடம்
மற்றுநல்லார் மனத்தா லினியார் மறைகலையெலாங்
கற்றுநல்லார் பிழைதெரிந் தளிக்குங்கடற் காழியே. 4

விருதிலங்குஞ் சரிதைத் தொழிலார்[3] விரிசடையினார்
எருதிலங்கப் பொலிந்தேறும் எந்தைக் கிடமாவது
பெரிதிலங்கும் மறைகிளைஞர் ஓதப் பிழைகேட்டலாற்
கருதுகிள்ளைக் குலந்தெரிந்து தீர்க்குங்கடற் காழியே. 5

தோடிலங்குங் குழைக்காதர் வேதர்சுரும் பார்மலர்ப்
பீடிலங்குஞ் சடைப்பெருமை யாளர்க் கிடமாவது
கோடிலங்கும் பெரும்பொழில் கள்மல்கப் பெருஞ்செந்நெலின்
காடிலங்கும் வயல்பயிலும் அந்தண்கடற் காழியே. 6

மலையிலங்குஞ் சிலையாக வேகம்மதில் மூன்றெரித்
தலையிலங்கும் புனற்கங்கை வைத்தவ்வடி கட்கிடம்
இலையிலங்கும் மலர்க்கைதை கண்டல்வெறி விரவலால்
கலையிலங்குங் கணத்தினம் பொலியுங்கடற் காழியே. 7

முழுதிலங்கும் பெரும்பாருள் வாழும்முரண் இலங்கைக்கோன்
அழுதிரங்கச் சிரமுர மொடுங்கவ் வடர்த்தாங்கவன்
தொழுதிரங்கத் துயர்தீர்த் துகந்தார்க் கிடமாவது
கழுது[4]ப்புள்ளும் மதிற்புறம தாருங்கடற் காழியே. 8

பூவினானும் விரிபோதின் மல்குந்திரு மகள்தனை
மேவினானும் வியந்தேத்த நீண்டா ரழலாய்நிறைந்து
ஓவியங்கே யவர்க்கருள் புரிந்தவ் வொருவர்க்கிடம்
காவியங்கண் மடமங்கையர் சேர்கடற் காழியே. 9

---

[1] மோதந் என்றும் பாடம். [2]பெற்றம்-இடபம். [3]சரிதைத் தொழிலாளர் - சரியை என்னும் தொழிலில் ஈடுபடுபவர். [4]கழுது-வண்டு; பேயுமாம்.

உடைநவின் றுருடைவிட் டுழல்வார் இருந்தவத்தார்
முடைநவின் றம்மொழி யொழித்துகந்தம் முதல்வன்னிடம்
மடைநவின்ற புனற்கெண்டை பாயும்வயல் மலிதரக்
கடைநவின்றந் நெடுமாடம் ஓங்குங்கடற் காழியே. 10

கருகமுந்நீர்[2] திரையோத மாருங்கடற் காழியுள்
உரகமாருஞ் சடையடி கள்தம்பா லுணர்ந்துறுதலாற்
பெருகமல்கும் புகழ்பேணுந் தொண்டர்க்கிசை யார்தமிழ்
விரகன்சொன்ன இவைபாடி யாடக்கெடும் வினைகளே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - கௌசிகம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சந்த மார்முலை யாள்தன கூறனார்
வெந்த வெண்பொடி யாடிய மெய்யனார்
கந்த மார்பொழில் சூழ்தரு காழியுள்
எந்தை யாரடி யென்மனத் துள்ளவே. 1

மானி டம்முடை யார்வளர் செஞ்சடைத்
தேனி டங்கொளுங் கொன்றையந் தாரினார்
கானி டங்கொளுந் தண்வயற் காழியார்
ஊனி டங்கொண்டென் உச்சியில் நிற்பரே. 2

மை[3]கொள் கண்டத்தர் வான்மதிச் சென்னியர்
பைகொள் வாளர வாட்டும் படிறனார்
கைகொள் மான்மறி யார்கடற் காழியுள்
ஐயன் அந்தணர் போற்ற இருக்குமே. 3

புற்றில் நாகமும் பூளையும் வன்னியுங்
கற்றை வார்சடை வைத்தவர் காழியுட்
பொற்றொ டியொ டிருந்தவர் பொற்கழல்
உற்ற போதுடன் ஏத்தி யுணருமே. 4

---

[2] கருகு முந்நீர் என்றும் பாடம். முந்நீர் - ஆற்றுநீர், ஊற்றுநீர், மேல் நீர் என்ற மூவகை நீர்; கடல். படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று நீர்மையையுடையதுமாம். [3] மை - கருப்பு; விடம்.

நலியுங் குற்றமும் நம்முட லேய்வினை
மெலியு மாறது வேண்டுதி ரேல்வெய்ய
கலிக டிந்தகை யார்கடற் காழியுள்
அலைகொள் செஞ்சடை யாரடி போற்றுமே. 5

பெண்ணொர் கூறினர் பேயுடன் ஆடுவர்
பண்ணும் ஏத்திசை பாடிய வேடத்தர்
கண்ணு மூன்றுடை யார்கடற் காழியுள்
அண்ண லாய அடிகள் சரிதையே. 6

பற்று மானும் மழுவும் அழகுற
முற்று மூர்திரிந் துபலி முன்னுவர்
கற்ற மானன் மறையவர் காழியுட்
பெற்றம் ஏற துகந்தார்[1] பெருமையே. 7

எடுத்த வல்லரக் கன்முடி தோளிற
அடர்த்து கந்தருள் செய்தவர் காழியுள்
கொடித்த யங்குநற் கோயிலுள் இன்புற
இடத்து மாதொடு தாமும் இருப்பரே. 8

காலன் தன்னுயிர் வீட்டு கழலடி
மாலு நான்முகன் தானும் வனப்புற
ஓல மிட்டுமுன் தேடி யுணர்கிலாச்
சீலங் கொண்டவ னூர்திகழ் காழியே. 9

உருவ நீத்தவர் தாமும் உறுதுவர்[2]
தருவ லாடையி னாருந் தகவிலர்
கருமம் வேண்டுதி ரேற்கடற் காழியுள்
ஒருவன் சேவடி யேயடைந் துய்ம்மினே. 10

கானல்[3] வந்துல வுங்கடற் காழியுள்
ஈன மில்லி இணையடி யேத்திடும்
ஞான சம்பந்தன் சொல்லிய நற்றமிழ்
மான மாக்கும் மகிழ்ந்துரை செய்யவே. 11

திருச்சிற்றம்பலம்

---

[1]ஏற்றதுகந்தார் என்றும் பாடம். [2]உறுதுவர்—மிகுந்த சிவப்பு. [3]கானல்-கடற்கரைச்சோலை.

## திருமாலைமாற்று* பண் - கௌசிகம்**

திருச்சிற்றம்பலம்

யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா. 1

யாகாயாழீ காயாகா தாயாராரா தாயாயா
யாயாதாரா ராயாதா காயாகாழீ யாகாயா. 2

தாவாமூவா தாசாகா ழீநாதாநீ யாமாமா
மாமாயாநீ தாநாழீ காசாதாவா மூவாதா. 3

நீவாவாயா காயாழீ காவாவானோ வாராமே
மேராவானோ வாவாகா ழீயாகாயா வாவாநீ. 4

யாகாலாமே யாகாழீ யாமேதாவீ தாயாவீ
வீயாதாவீ தாமேயா ழீகாயாமே லாகாயா. 5

மேலேபோகா மேதேழீ காலாலேகா லானாயே
யேனாலாகா லேலாகா ழீதேமேகா போலேமே. 6

நீயாமாநீ யேயாமா தாவேழீகா நீதானே
நேதாநீகா ழீவேதா மாயாயேநீ மாயாநீ. 7

நேணவராவிழ யாசைழியே வேகதளேரிய ளாயுழிகா
காழியுளாயரி ளேதகவே யேழிசையாழவி ராவணனே. 8

காலேமேலே காணீகா ழீகாலேமா லேமேபூ
பூமேலேமா லேகாழீ காணீகாலே மேலேகா. 9

வேரியுமேணவ காழியொயே யேனேநிணேமட ளோகரதே
தேரகளோடம ணேநினேயே யேயொழிகாவண மேயுரிவே.

நேரகழாமித யாசழிதா யேனனியேனனி ளாயுழிகா
காழியுளானின யேனினயே தாழிசயாதமி ழாகரனே 11

திருச்சிற்றம்பலம்

---

* ஒரு செய்யுளை முன்னிருந்து பின் படிக்கினும் மாற்றிப் பின்னிருந்து முன் படிக்கினும் ஒன்றுபோல் வருவது மாலை மாற்று ஆகும். மாலை - வரிசை; மாற்று - மாறுதலுடையது. இங்கு ஓரடி முன்னிருந்து செல்வதும், ஓரடி பின்னிருந்து செல்வதுமாக அமைந்துள்ளது. ** இப்பதிகத்திலுள்ள 8, 9, 10, 11 பாட்டுக்கள் ஏனைய பதிகங்கள்போல் கருத்தமைந்தவை.

## [திருக்கோச்சைவயம்]*

பண் - பியந்தைக்காந்தாரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீலநன் மாமிடற்றன் இறைவன் சினத்த நெடுமா வுரித்த நிகரில், சேலன கண்ணிவண்ணம் ஒருகூ றுருக்கொள் திகழ் தேவன் மேவு பதிதான், வேலன கண்ணிமார்கள் விளையாடு மோசை விழவோசை வேத வொலியின், சீலநல் வேலையோசை தருமாட வீதி கொடியாடு கொச்சை வயமே. 1

விடையுடை யப்பனுப்பில் நடமாட வல்ல விகிர்தத் துருக் கொள் விமலன், சடையிடை வெள்ளெருக்க மலர்கங்கை திங்கள் தகவைத்த சோதி பதிதான், மடையிடை யன்னமெங்கும் நிறை யப் பரந்து கமலத்து வைகும் வயல்சூழ், கொடையுடை வண்கை யாளர் மறையோர்க ளென்றும் வளர்கின்ற கொச்சை வயமே. 2

படஅர வாடுமுன்கை யுடையா னிடும்பை களைவிக்கும் எங் கள் பரமன், இடமுடை வெண் டலைக்கை பலிகொள்ளும் இன் பன் இடமாய வேர்கொள் பதிதான், நடமிட மஞ்ஞை வண்டு மதுவுண்டு பாடு நளிர்சோலை கோலு கனகக், குடமிடு கூடமேறி வளர்பூவை நல்ல மறையோது கொச்சை வயமே. 3

எண்டிசை பாலரெங்கும் இகலிப் புகுந்து[1] முயல்வுற்ற சிந்தை[2] முடுகிப், பண்டொளி தீபமாலை யிடுதூப மோடு பணி வுற்ற பாதர் பதிதான், மண்டிய வண்டன்மிண்டி வருநீர பொன்னி வயல்பாய வாளை குழுமிக், குண்டகழ் பாயுமோசை படைநீட தென்ன வளர்கின்ற கொச்சை வயமே. 4

பனிவளர் மாமலைக்கு மருகன் குபேர னொடுதோழ மைக் கொள் பகவன், இனியன அல்லவற்றை யினிதாக நல்கும் இறை வன் இடங்கொள் பதிதான், முனிவர்கள்தொக்குமிக்க மறை

---

* திருக்கொச்சைவயம் - சீகாழி; பராசர் மச்சகந்தியைக் கூடியதால் ஏற்பட்ட நாற்றம் நீங்கும்படி பூசித்துப் பேறுபெற்றமை யால் இப்பெயர் பெற்றது. கொச்சை - தீநாற்றம். வயம் - சயம்; போக்குதல் குறித்தது. ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1] இயலிப்புகுந்து என்றும் பாடம். [2]முயல்வுற்ற சிந்தை என்றும் பாடம்.

யோர்க ளோமம் வளர்தூம மோடி யணவிச், குனிமதி மூடிநீடும் உயர்வான் மறைத்து நிறைகின்ற கொச்சை வயமே. 5

புலியதள் கோவணங்கள் உடையாடை யாக வுடையான் நினைக்குமளவில், நலிதரு முப்புரங்கள் எரிசெய்த நாதன் நலமா இருந்த நகர்தான், கலிகெட அந்தணாளர் கலைமேவு சிந்தை யுடையார் நிறைந்து வளரப், பொலிதரு மண்டபங்கள் உயர்மாட நீடு வரைமேவு கொச்சை வயமே. 6-7

மழைமுகில் போலுமேனி யடல்வா ளரக்கன் முடியோடு தோள்கள் நெரியப், பிழைகெட மாமலர்ப்பொன் அடிவைத்த பேயொ டுடனாடி[1] மேய பதிதான், இழைவள ரல்குல்மாதர் இசை பாடி யாட விடுமூசலன்ன கமுகின், குழைதரு கண்ணிவிண்ணில் வருவார்கள் தங்கள் அடிதேடு கொச்சை வயமே. 8

வண்டமர் பங்கயத்து வளர்வானும் வையம் முழுதுண்ட மாலும் இகலிக், கண்டிட வொண் ணுமென்று கிளறிப் பறந்தும் அறியாத சோதி பதிதான், நண்டுண நாரைசெந்நெல் நடுவே யிருந்து விரைதேர போது மதுவிற்,[2] புண்டரி கங்களோடு குமுதம் மலர்ந்து வயல் மேவு கொச்சை வயமே. 9

கையினி லுண்டு[3]மேனி யுதிர்மாசர் குண்டர் இடுசீவ ரத்தி னுடையார், மெய்யுரை யாதவண்ணம் விளையாட வல்ல விகிர்தத் துருக்கொள் விமலன், பையுடை நாகவாயில் எயிறூர மிக்க குரவம் பயின்று மலரச், செய்[4] யினில் நீலமொட்டு விரியக் கமழ்ந்து மணநாறு கொச்சை வயமே. 10

இறைவனை ஒப்பிலாத ஒளிமேனி யானை உலகங்க ளேழு முடனே, மறைதரு வெள்ளமேறி வளர்கோயில் மன்னி இனிதா இருந்த மணியை[5]க், குறைவில ஞானமேவு குளிர்பந்தன் வைத்த தமிழ்மாலை பாடுமவர்போய், அறைகழ லீசனாளும் நகர்மேவி யென்றும் அழகா இருப்ப தறிவே. 11

திருச்சிற்றம்பலம்

---

[1]பேயொடுடன் ஆடி - சிவபெருமான். [2] தேரபோது மதுவிற் என்றும் பாடம். [3] இது, சமணர் கையில் உண்பவர் என்பதைக் குறிக்கும். [4]செய் - வயல். [5]மணியை-தோணியப்பரை.

பண் - பியந்தைக்காந்தாரம்*
திருச்சிற்றம்பலம்

அறையும் பூம்புன லோடும் ஆடர வச்சடை தன்மேற்
பிறையுஞ் சூடுவர் மார்பிற் பெண்ணொரு பாகம் அமர்ந்தார்
மறையின் ஒல்லொலி யோவா மந்திர வேள்வி யறாத
குறைவில் அந்தணர் வாழுங் கொச்சை வயம் அமர்ந் தாரே. 1

சுண்ணத்தர் தோலொடு நூல்சேர் மார்பினர் துன்னிய பூதக்
கண்ணத்தர் வெங்கன லேந்திக் கங்குல்நின் றாடுவர் கேடில்
எண்ணத்தர் கேள்விநல் வேள்வி யறாதவர் மாலெரி யோம்பும்
வண்ணத்த அந்தணர் வாழுங் கொச்சை வயம்அமர்ந் தாரே. 2

பாலை யன்னவெண் ணீறு பூசுவர் பல்சடை தாழ
மாலை யாடுவர் கீதம் மாமறை பாடுதல் மகிழ்வர்
வேலை மால்கடல் ஓதம் வெண்திரை கரைமிசை விளங்குங்
கோல மாமணி சிந்துங் கொச்சை வயம்அமர்ந் தாரே. 3

கடிகொள் கூவிள மத்தங் கமழ்சடை நெடுமுடிக் கணிவர்
பொடிகள் பூசிய மார்பிற் புனைவர்நன் மங்கையோர் பங்கர்
கடிகொள் நீடொலி சங்கின் ஒலியொடு கலையொலி துதைந்து
கொடிகள் ஓங்கிய மாடக் கொச்சை வயம் அமர்ந் தாரே. 4

ஆடன் மாமதி யுடையா ராயின பாரிடஞ் சூழ
வாடல் வெண்டலை யேந்தி வையகம் இடுபலிக் குழல்வார்
ஆடல் மாமட மஞ்ஞை அணிதிகழ் பேடையோ டாடிக்
கூடு தண்பொழில் சூழ்ந்த கொச்சை வயம்அமர்ந் தாரே. 5

மண்டு கங்கையும் அரவும் மல்கிய வளர்சடை தன்மேல்
துண்ட வெண்பிறை யணிவர் தொல்வரை வில்லது வாக
விண்ட தானவா அரணம் வெவ்வழல் எரிகொள விடைமேல்
கொண்ட கோலம துடையார் கொச்சை வயம்அமர்ந் தாரே. 6-7

அன்றவ் ஆல்நிழல் அமர்ந்து அறவுரை நால்வர்க் கருளிப்
பொன்றி னார்[1] தலை யோட்டில் உண்பது பொருகடல் இலங்கை
வென்றி வேந்தனை யொல்க வூன்றிய விரலினர் வான்தோய்
குன்ற மன்னபொன் மாடக் கொச்சை வயம்அமர்ந் தாரே. 8

---

* இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்துபோயிற்று. [1]பொன்றினார்—இறந்தவரான பிரமன் முதலியோர்.

சீர்கொள் மாமல ரானுஞ் செங்கண்மால் என்றிவ ரேத்த
ஏர்கொள் வெவ்வழ லாகி யெங்கும் உறநிமிர்ந் தாரும்
பார்கொள் விண்ணழல் கால்நீர்ப் பண்பினர் பால்மொழியோடுங்
கூர்கொள் வேல்வலன் ஏந்திக் கொச்சை வயம்அமர்ந் தாரே. 9

குண்டர் வண்துவ ராடை போர்த்ததொர் கொள்கையி னார்கள்
மிண்டர் பேசிய பேச்சு மெய்யல மையணி கண்டன்
பண்டை நம்வினை தீர்க்கும் பண்பின ரொண்கொடி யோடுங்
கொண்டல் சேர்மணி மாடக் கொச்சை வயம்அமர்ந் தாரே. 10

கொந்த[2] ணிபொழில் சூழ்ந்த கொச்சை வயநகர் மேய
அந்த ணன் அடி யேத்தும் அருமறை ஞானசம் பந்தன்
சந்த மார்ந்தழ காய தண்தமிழ் மாலைவல் லோர்போய்
முந்தி வானவ ரோடும் புகவலா முனைகெட வினையே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

திருந்துமா களிற்றிள மருப்பொடு திரண்மணிச் சந்தமுந்திக், குருந்துமா குரவமுங் குடசமும்[1] பீலியுஞ் சுமந்துகொண்டு, கிரந் துமா வயல்புகு நீடுகோட்டாறுசூழ் கொச்சைமேவிப், பொருந்தி னார் திருந்தடி போற்றிவாழ் நெஞ்சமே புகலதாமே. 1

ஏலமார் இலவமோ டினமலர்த் தொகுதியா யெங்கும் நுந் தி[2]க், கோலமா மிளகொடு கொழுங்கனி கொன்றையுங் கொண்டு கோட்டா, றுவியா வயல்புகு மணிதரு கொச்சையே நச்சிமேவும், நீலமார் கண்டனை நினைமட நெஞ்சமே அஞ்சல்நீயே. 2

பொன்னுமா மணிகொழித் தெறிபுனற் கரைகள்வாய் நுரை சுளுந்திக், கன்னிமார் முலைநலங் கவரவந் தேறுகோட் டாறுசூழ, மன்னினார் மாதொடும் மருவிடங் கொச்சையே மருவில்நாளும், முன்னைநோய்[3] தொடருமா றில்லைகாண் நெஞ்சமேஅஞ்சல்நீயே 3

கந்தமார் கேதகை[4]ச் சந்தனக் காடுசூழ் கதலிமாடே, வந்துமா வள்ளையின் பவரளிக் குவளையைச் சாடியோடக், கொந்துவார்,

---

[2] கொந்து—கொத்து. [1] குடசம் – மலைமல்லிகை. [2] நுந்தி—தள்ளி. [3] முன்னைநோய்—முற்பவவினை. [4] கேதகை – தாழை.

குழலினார் குதிகொள்கோட் டாறுசூழ் கொச்சைமேய, எந்தை யார் அடியிணை துய்யலாம் நெஞ்சமே அஞ்சல்நீயே. 4

மறைகொளுந் திறலினார் ஆகுதிப் புகைகள்வான் அண்டம் மிண்டி[3]ச், சிறைகொளும் புனலணி செழும்பதி திகழ்மதிற் கொச்சைதன்பால், உறைவிட மெனமன மதுகொளும் பிரமனார் சிரமறுத்த, இறைவன தடியிணை இறைஞ்சிவாழ் நெஞ்சமே அஞ்சல்நீயே. 5

சுற்றமும் மக்களுந் தொக்கஅத் தக்கனைச் சாடியன்றே, உற்றமால் வரையுமை நங்கையைப் பங்கமா உள்கினானோர், குற்றமில் அடியவர் குழுமிய வீதிசூழ் கொச்சைமேவி, நற்றவம் அருள்புரி நம்பனை நம்பிடாய் நாளுநெஞ்சே. 6

கொண்டலார் வந்திடக் கோலவார் பொழில்களிற் கூடி மந்தி, கண்டவார் கழை[4]பிடித் தேறிமா முகில்தனைக் கதுவுகொச் சை, அண்டவா னவர்களும் அமரரும் முனிவரும் பணியஆலம், உண்டமா கண்டனார் தம்மையே உள்குநீ அஞ்சல்நெஞ்சே. 7

அடலெயிற் றரக்கனார் நெருக்கிமா மலையெடுத் தார்த்தவாய் கள், உடல்கெடத் திருவிரல் ஊன்றினார் உறைவிடம் ஒளிகொள் வெள்ளி, மடலிடைப் பவளமும் முத்தமுந் தொத்துவண் புன்னை மாடே, பெடையொடுங் குருகினம் பெருகுதண் கொச்சையே பேணுநெஞ்சே. 8

அரவினில் துயில்தரும் அரியும்நற் பிரமனும் அன்றயர்ந்து, குரைகழல் திருமுடி யளவிட அரியவர் கொங்குசெம்பொன், விரிபொழி லிடைமிகு மலைமகள் மகிழ்தர வீற்றிருந்த, கரியநன் மிடறுடைக் கடவுளார் கொச்சையே கருதுநெஞ்சே. 9

கடுமலி யுடலுடை அமணருங்[5] கஞ்சியுண் சாக்கியரும், இடு மற வுரைதனை இகழ்பவர் கருதுநம் ஈசர்வானோர், நடுவுறை நம்பனை நான்மறை யவர்பணிந் தேத்தஞாலம், உடையவன் கொச்சையே உள்கிவாழ் நெஞ்சமே அஞ்சல்நீயே. 10

காய்ந்துதங் காலினாற் காலனைச் செற்றவர் கடிகொள் கொச்சை, ஆய்ந்துகொண் டிடமென இருந்தநல் லடிகளை ஆத

[3] மிண்டி—நெருங்கி. [4] கழை — மூங்கில். [5] இது சமணரின் பழக்கத்தைக் குறிப்பது: கடு-கடுகு. அமணர்—சமணர்.

ரித்தே, ஏய்ந்ததொல் புகழ்மிகு மெழில்மறை ஞானசம் பந்தன் சொன்ன, வாய்ந்தஇம் மாலைகள் வல்லவர் நல்லவா னுலகின் மேலே. 11

திருச்சிற்றம்பலம்

---

## [திருக்கழுமலம் *]

### திருவிராகம். பண் - நட்டபாடை [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**பி**றையணி படர்சடை முடியிடை பெருகிய புனலுடை யவ னிறை, இறையணி வளையிணை முலையவ ளிணைவன தெழிலுடை யிடவகை, கறையணி பொழில்நிறை வயலணி கழுமலம் அமர் கன லுருவினன், நறையணி மலர்நறு விரைபுல்கு நலமலி கழல் தொழுன் மருவுமே. 1

பிணிபடு கடலபிற விகளறல் எளிதுள தநுபெரு கியதிரை, அணிபடு கழுமலம் இனிதம ரனலுரு வினன்அவிர் சடைமிசை, தணிபடு கதிர்வள ரிளமதி புனைவனை யுமைதலை வனைநிறம், மணி படு கறைமிட றனைநல மலிகழ லிணைதொழுன் மருவுமே. 2

வரியுறு புலியத ளுடையினன் வளர்பிறை யொளிகிளர் கதிர்பொதி, விரியுறு சடைவிரை புரைபொழில் விழவொலி மலி கழு மலம்அமர், எரியுறு நிறஇறை வனதடி யிரவொடு பகல்பர வுவர்தம, தெரியுறு வினைசெறி கதிர்முனை யிருள்கெட நனிநினை வெய்துமதே. 3

வினைகெட மனநினை வதுமுடி கெனில்நனி தொழுதெழு குலமதி, புனைகொடி யிடைபொருள் தருபடு களிறின துரிபுதை யுடலினன், மனைகுட வயிறுடை யனசில வருகுறள் படையுடை யவன்மலி, கனைகட லடைகழு மலம்அமர் கதிர்மதி யினன்அதிர் கழல்களே. 4

தலைமதி புனல்விட அரவிவை தலைமைய தொருசடை யிடை யுடன், நிலைமரு வவொரிட மருளினன் நிழன்மழு வினொடழல் கணையினன், மலைமரு வியசிலை தனின்மதி லெரியுண மனமரு

---

* திருக்கழுமலம் - சீகாழி; உரோமசமுனிவர் வழிபட்டு, உயிர்கள் மலங்கழுவும் வரம் பெற்றமையால் இப்பெயர் பெற்றது.

வினன்நல, கலைமரு வியபுற வணிதரு கழுமலம் இனிதமர் தலைவனே. 5

வரைபொரு திழியரு விகள்பல பருகொரு கடல்வரி மணலிடை, கரைபொரு திரையொலி கெழுமிய கழுமலம் அமர்கன லுருவினன், அரைபொரு புலியதள் உடையினன் அடியிணை தொழவரு வினையெனும், உரைபொடி படவுறு துயர்கெட வுயர்நல கெய்தலொரு தலைமையே. 6

முதிருறு கதிர்வளர் இளமதி சடையனை நறநிறை தலைதனில், உதிருறு மயிர்பிணை தவிர்தசை யுடைபுலி யதளிடை யிருள்கடி, கதிருறு சுடரொளி கெழுமிய கழுமலம் அமர்மழு மலிபடை, அதிருறு கழலடி களதடி தொழுமறி வலதறி வறியமே. 7

கடலென நிறநெடு முடியவ னடுதிறல் தெறஅடி சரணென, அடல்நிறை படையரு ளியபுக ழரவரை யினன்அணி கிளர்பிறை, விடம்நிறை மிடறுடை யவன்விரி சடையவன் விடையுடை யவ னுமை, உடனுறை பதிகள்தன் மறுகுடை யுயர்கழு மலவியன் நகரதே. 8

கொழுமல ருறைபதி யுடையவன் நெடியவ னெனவிவர் களுமவன், விழுமையை யளவறி கிலரிறை விரைபுணர் பொழி லணி விழவமர், கழுமலம் அமர்கன லுருவினன் அடியிணை தொழுமவ ரருவினை, எழுமையு மிலநில வகைதனி லெளிதிமை யவர் விய னுலகமே. 9

அமைவன துவரிழு கியதுகி லணியுடை யினர்அமண் உருவர்கள், சமையமும் ஒருபொரு ளெனுமவை சலநெறி யனஅற வுரைகளும், இமையவர் தொழுகழு மலமம ரிறைவன தடிபர வுவர்தமை, நமையல வினைநல னடைதலி லுயர்நெறி நனிநணு குவர்களே. 10

பெருகிய தமிழ்விர கினன்மலி பெயரவ னுறைபிணர் திரையொடு, கருகிய நிறவிரி கடலடை கழுமலம் உறைவிட மெனநனி, பெருகிய சிவனடி பரவிய பிணைமொழி யனவொரு பதுமுடன், மருவிய மனமுடை யவர்மதி யுடையவர் விதியுடை யவர்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

அயிலுறுபடையினர் விடையினர்முடிமேல் அரவமும்மதியமும் விரவிய அழகர், மயிலுறுசாயல வனமுலையொருபால் மகிழ்பவர்வானிடை முகில்புல்குமிடறர், பயில்வுறுசரிதையர் எருதுகந்தேறிப் பாடியும்ஆடியும் பலிகொள்வர்வலிசேர், கயிலையும்பொதியிலும்[1] இடமெனவுடையார் கழுமலம்நினையநம் வினைகரிச[2]றுமே.

கொண்டலும்நீலமும் புரைதிருமிடறர் கொடுமுடியுறைபவர் படுதலைக்கையர், பண்டலர்அயன்சிரம் அரிந்தவர்பொருந்தும் படர்சடையடிகளார் பதியதனயலே, வண்டலும்வங்கமுஞ் சங்கமுஞ்சுறவும் மறிகடல்திரைகொணர்ந் தெற்றியகரைமேற், கண்டலுங்கைதையும் நெய்தலுங்குலவுங் கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 2

எண்ணிடையொன்றினர் இரண்டினர்உருவம் எரியிடைமூன்றினர் நான்மறையாளர், மண்ணிடைஐந்தினர் ஆறினர்அங்கம் வகுத்தனர்ஏழிசை யெட்டிருங்கலைசேர், பண்ணிடையொன்பதும் உணர்ந்தவர்பத்தர் பாடிநின்றடிதொழ மதனனைவெகுண்ட கண்ணிடைக்கனலினர் கருதியகோயில் கழுமலம்நினையநம் வினைகரிசறுமே[3]. 3

எரியொருகரத்தினர் இமையவர்க்கிறைவர் ஏறுகந்தேறுவர் நீறுமெய்பூசித், திரிதருமியல்பினர் அயலவர்புரங்கள் தீயெழவிழித்தனர் வேய்புரைதோளி, வரிதருகண்ணிணை மடவரலஞ்சமஞ்சுறநிமிர்ந்த தோர்வடிவொடும்வந்த, கரியுரிமருவிய அடிகளுக்கிடமாங் கழுமலம் நினையநம் வினைகரிசறுமே. 4

ஊரெதிர்ந்திடுபலி தலைகலனாக உண்பவர்விண்பொலிந் திலங்கியவுருவர், பாரெதிர்ந்தடிதொழ விரைதருமார்பிற் படஅரவாமைஅக் கணிந்தவர்க்கிடமாம், நீரெதிர்ந்திழிமணி நித்திலம்முத்தம் நிரைசுரிசங்கமொ டொண்மணிவரன்றிங், காரெதிர்ந்தோதம்வன் றிரைகரைக்கெற்றுங் கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 5

---

[1] பொதியில்–பொதியமலை. [2] கரிசு–குற்றம். [3] இச்செய்யுளுள் ஒன்றுமுதல் பத்துஎண்வரை அமைந்திருக்கும் நயம்அறியத்தக்கது.

முன்னுயிர்த்தோற்றமும் இறுதியுமாகி முடியுடையமரர்கள் அடிபணிந்தேத்தப், பின்னியசடைமிசைப் பிறைநிறைவித்த பேரருளாளனார் பேணியகோயில், பொன்னியல் நறுமலர் புனலொடுதூபஞ் சாந்தமும்ஏந்திய கையினராகிக், கன்னியர்நாடோறும் வேடமேபரவுங் கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 6

கொலைக்கணித்தாவரு கூற்றுதைசெய்தார் குரைகழல்பணிந் தவர்க் கருளியபொருளின், நிலைக்கணித்தாவர நினையவல்லார்தம் நெடுந்துயர் தவிர்த்தவெம் நிமலருக்கிடமாம், மலைக்கணித் தாவர வன்றிரைமுரல மதுவிரிபுன்னைகள் முத்தென அரும்பக், கலைக்கணங்கானலின் நீழலில்வாழுங் கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 7

புயம்பலவுடையதென் இலங்கையர்வேந்தன் பொருவரையெடுத்தவன் பொன்முடிதிண்தோள், பயம்பலபடஅடர்த் தருளிய பெருமான் பரிவொடுமினிதுறை கோயிலதாகும், வியன்பலவிண்ணினும் மண்ணினுமெங்கும் வேறுவேறுகங்களிற் பெயருள தென்னக், கயம்பலபடக்கடல் திரைகரைக்கெற்றுங் கழுமலம் நினையநம் வினைகரிசறுமே. 8

விலங்கலொன்றேந்திவன் மழைதடுத்தோனும் வெறிகமழ்தாமரையோனுமென்றிவர்தம், பலங்களால்நேடியும் அறிவரிதாய பரிசினன்மருவிநின் றினிதுறைகோயில், மலங்கிவன்றிரைவரையெனப்பரந்தெங்கும் மறிகடலோங்கிவெள் இப்பியுஞ்சுமந்து, கலங்கடன்சரக்கொடு நிரக்கவந்தேறுங் கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 9

ஆம்பலதவமுயன் றறவுரைசொல்லும் அறிவிலாச்சமணருந் தேரருங்கணிசேர், நோம்பலதவமறி யாதவர்நொடிந்த மூதுரைகொள்கிலா முதல்வர்தம்மேனிச், சாம்பலும்பூசிவெண் டலைகலனாகத் தையலாரிடுபலி வையகத்தேற்றுக், காம்பனதோளியொடினிதுறைகோயில் கழுமலம்நினையநம் வினைகரிசறுமே. 10

கலிகெழுபாரிடை யூரெனவுளதாங் கழுமலம்விரும்பிய கோயில் கொண்டவர்மேல், வலிகெழுமனம்மிக வைத்தவன் மறைசேர் வருங்கலைஞானசம் பந்தனதமிழின், ஒலிகெழுமாலையென் றுரைசெய்தபத்தும் உண்மையினால்நினைந் தேத்தவல்லார்மேல்,

மெலிகெழுதுயரடை யாவினை சிந்தும் விண்ணவராற்றலின் மிகப் பெறுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருத்தாளச்சதி*

பண் - வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்ற வும்பரப்
பாலேசேர்வா யேனோர்கான்[1] பயில்கண முனிவர்களுஞ்
சிந்தித்தே வந்திப்பச் சிலம்பின்மங்கை தன்னொடுஞ்
சேர்வார்நாள்நாள் நீள்கயிலைத் திகழ்தரு பரிசதெலாஞ்
சந்தித்தே யிந்தப்பார் சனங்கள்நின்று தங்கணால்
தாமேகாணா வாழ்வாரத் தகவுசெய்த வனதிடங்
கந்தத்தால் எண்டிக்குங் கமழுந்திலங்கு சந்தனக்
காடார்பூவார் சீர்மேவுங் கழுமல வளநகரே. 1

பிச்சைக்கே யிச்சித்துப் பிசைந்தணிந்த வெண்பொடிப்
பீடார்நீடார் மாடாரும் பிறைநுதல் அரிவையொடும்
உச்சத்தால் நச்சிப்போல் தொடர்ந்தடர்ந்த வெங்கணே
றூராவூரா நீள்வீதிப் பயில்வொடும் ஒலிசெயிசை
வச்சத்தான் நச்சுச்சேர் வடங்கொள்கொங்கை மங்கைமார்
வாராநேரே மாலாரும் வசிவலவ வனதிடங்
கச்சத்தான் மெச்சிப்பூக் கலந்திலங்கு வண்டினங்
காரார்காரார் நீள்சோலைக் கழுமல வளநகரே. 2

திங்கட்கே தும்பைக்கே திகழ்ந்திலங்கு மத்தையின்
சேரேசேரே நீராகச் செறிதரு சுரநதியோ
டங்கைச்சேர் வின்றிக்கே யடைந்துடைந்த வெண்டலைப்
பாலேமேலே மாலேயப் படர்வுறு மவனிறகும்
பொங்கப்பேர் நஞ்சைச்சேர் புயங்கமங்கள் கொன்றையின்
போதார்தாரே தாமேவிப் புரிதரு சடையனிடங்[2]
கங்கைக்கே யும்பொற்பார் கலந்துவந்த பொன்னியின்
காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. 3

---

* தாளச்சதி—தாளவொத்து. [1] யேனோர்காண் என்றும் பாடம். [2] புரிவுசெய்தவனதிடம் என்றும் பாடம்.

அண்டத்தால் எண்திக்கும் அமைந்தடங்கும் மண்டலத்
தாறேவேறே வாளுள்வா ரவரவ ரிடமதெலாம்
மண்டிப்போய் வென்றிப்போர் மலைந்தலைந்த வும்பரும்
மாறேலாதார் தாமேவும் வலிமிகு புரமெரிய
முண்டத்தே வெந்திட்டே முடிந்திடிந்த இஞ்சிசூழ்
மூவாமூதூர் மூதூரா முனிவுசெய்த வனதிடங்
கண்டிட்டே செஞ்சொற்சேர் கவின்சிறந்த மந்திரக்
காலேயோவா தார்மேவுங் கழுமல வளநகரே. 4

திக்கிற்றே வற்றற்றே திகழ்ந்திலங்கு[3] மண்டலச்
சீரூர்வீரூர் போரார்தா ரகனுட லவனெதிரே
புக்கிட்டே வெட்டிட்டே புகைந்தெழுந்த சண்டத்தீப்
போலேபூமீர் தீகான்மீப் புணர்தரும் உயிர்கள் திறஞ்
சொக்கத்தே நிர்த்தத்தே தொடர்ந்தமங்கை செங்கதத்
தோடேயாமே ம்மாலோகத் துயர்களை பவனதிடங்
கைக்கப்பேர்[4] யுக்கத்தே கனன்றுமிண்டு தண்டலைக்
காடேயோடா வூரேசேர் கழுமல வளநகரே. 5

செற்றிட்டே வெற்றிச்சேர் திகழ்ந்ததும்பி மொய்ம்புறுஞ்
சேரேவாரா நீள்கோதைத் தெரியிழை பிடியதுவாய்
ஒற்றைச்சேர் முற்றற்கொம் புடைத்தடக்கை முக்கண்மிக்
கோவாதேபாய் மாதானத் துறுபுகர்முக இறையைப்
பெற்றிட்டே மற்றிப்பார் பெருத்துமிக்க துக்கமும்
பேராநோய்தா மேயாமைப் பிரிவுசெய் தவனதிடங்
கற்றிட்டே யெட்டெட்டுக் கலைத்[5]துறைக் கரைச்செலக்
காணுதாரே சேராமெய்க் கழுமல வளநகரே. 6

பத்திப்பேர் வித்திட்டே பரந்தஐம் புலன்கள்வாய்ப்
பாலேபோகா மேகாவாப் பகையறும் வகைநினையா
முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக்கு ணங்கள்வாய்
மூடாவூடா நாலந்தக் கரணமும் ஒருநெறியாய்ச்
சித்திக்கே யுய்த்திட்டுத் திகழ்ந்தமெய்ப் பரம்பொருள்
சேர்வார்தாமே தானுகச் செயுமவன் உறையுமிடங்

---

[3] திகழ்ந்தடங்கு என்றும் பாடம். [4] கைக்கப்போ என்றும் பாடம். [5] எட்டெட்டுக்கலை—64 கலைக்கியானங்கள்.

கத்திட்டோர் சட்டங்கங் கலந்திலங்கு நற்பொருள்
காலேயோவா தார்மேவுங் கழுமல வளநகரே. 7

செம்பைச்சேர் இஞ்சிச்சூழ் செறிந்திலங்கு பைம்பொழிற்
சேரேவாரா வாரீசத் திரையெறி நகர்இறைவன்
இம்பர்க்கே தஞ்செய்திட் டிருந்தரன் பயின்றவெற்
பேரார்பூநே ரோர்பாதத் தெழில்விரல் அவண்நிறுவிட்
டம்பொற்பூண் வென்றித்தோள் அழிந்துவந்த னஞ்செய்தாற்
காரார்கூர்வாள் வாளன் றருள்புரி பவனதிடங்
கம்பத்தார் தும்பித்திண் கவுட்சொரிந்த மும்மதக்
காரார்சேரூர் மாவீதிக் கழுமல வளநகரே. 8

பன்றிக்கோ லங்கொண்டிப் படித்தடம் பயின்றிடப்
பானுமால் தானுமேயப் பறவையி னுருவுகொள
ஒன்றிட்டே யம்புச்சே ருயர்ந்தபங் கயத்தவ
னோதானோதான் அஃதுணரா துருவின தடிமுடியுஞ்
சென்றிட்டே வந்திப்பத் திருக்களங்கொள் பைங்கணின்
றேசால்வேறோர் ஆகாரந் தெரிவுசெய்த வனதிடங்
கன்றுக்கே முன்றிற்கே கலந்திலந் நிறைக்கவுங்
காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. 9

தட்டிட்டே முட்டிக்கைத் தடுக்கிடுக்கி நின்றுணுத்
தாமேபேணு தேநாளுஞ் சமணொடு[6] முழல்பவரும்
இட்டத்தா லத்தந்தா னிதன்றதென்று நின்றவர்க்
கேயாமேவா யேதுச்சொல் லிலைமலி மருதம்பூப்
புட்டத்தே யட்டிட்டுப் புதைக்குமெய்க்கொள் புத்தரும்
போல்வார்தாமோ ராமேபோய்ப் புணர்வுசெய்த வனதிடங்[7]
கட்டிக்கால் வெட்டித்தீங் கரும்புதந்த பைம்புனற்
காலேவாரா மேலேபாய் கழுமல வளநகரே. 10

கஞ்சத்தே னுண்டிட்டே களித்துவண்டு சண்பகக்
கானேதேனே போராருங் கழுமல நகரிறையைத்
தஞ்சைச்சார் சண்பைக்கோன் சமைத்தநற் கலைத்துறை
தாமேபோல்வார் தேனேரார் தமிழ்விர கனமொழிகள்

---

[6] இவ்வடிகள் சமணர்களின் பழக்கவழக்கங்களைக் கூறும்.
[7] போய்ப்பரிவுசெய்த வனதிடம் என்றும் பாடம்.

எஞ்சத்தேய் வின்றிக்கே இமைத்திசைத்த மைத்தகொண்
டேழேயேழே நாலேமூன் றியலிசை இசையியல்பா [7]
வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப் பயிற்றுவோர்
மாற்பேசேர்வாள் வானோர்சீர் மதிநுதல் மடவரலே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - மேகராகக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சேவுயருந் திண்கொடியான் திருவடியே சரணென்று சிறந்தஅன்பால், நாவியலும் மங்கையொடு நான்முகன்றான் வழிபட்ட நலங்கொள்கோயில், வாவிதொறும் வண்கமலம் முகங் காட்டச் செங்குமுதம் வாய்கள்காட்டக், காவியிருங் கருங்குவளை கருநெய்தல் கண்காட்டுங் கழுமலமே. 1

பெருந்தடங்கண் செந்துவர்வாய்ப் பீடுடைய மலைச்செல்வி பிரியாமேனி, அருந்தகைய சுண்ணவெண்ணீ றலங்கரித்தான் அமரர்தொழ அமருங்கோயில், தருந்தடக்கை முத்தழலோர் மனை கள்தொறும் இறைவனது தன்மைபாடிக், கருந்தடங்கண் ணார் கழல்பந் தம்மானைப் பாட்டயருங் கழுமலமே. 2

அலங்கல்மலி வானவருந் தானவரும் அலைகடலைக் கடையப் பூதங், கலங்களழு கடுவிடமுண் டிருண்டமணி கண்டத்தோன் கருதுங்கோயில், விலங்கலமர் புயன்மறந்து மீன்சனிபுக் கூன்சலிக்குங் காலந்தானுங்,[1] கலங்கலிலா மனப்பெருவண் கையுடைய மெய்யர்வாழ் கழுமலமே. 3

பாரிதனை நலிந்தமரர் பயமெய்தச் சயமெய்தும் பரிசுவெம் மைப், போரிசையும் புரமூன்றும் பொன்றவொரு சிலைவளைத் தோன் பொருந்துங்கோயில், வாரிசைமென் முலைமடவார் மாளி கையின் சூளிகைமேல் மகப்பாராட்டக், காரிசையும் விசும்பியங் குங் கணங்கேட்டு மகிழ்வெய்துங் கழுமலமே. 4

ஊர்கின்ற அரவமொளி விடுதிங்க ளொடுவன்னி மத்தமன் னும், நீர்நின்ற கங்கைநகு வெண்டலைசேர் செஞ்சடையான்

---

[7] இவ்வடி தேவாரப்பண 21 என்று குறிப்பிடுகிறது. [1]இவ்வடி வான நூல் நுட்பத்தைக் குறிக்கும்.

திகழுங்கோயில், ஏர்தங்கி மலர்நிலவி யிசைவெள்ளி மலையென்ன நிலவிநின்ற, கார்வண்டின் கணங்களாற் கவின்பெருகு சுதை மாடக் கழுமலமே. 5

தருஞ்சரதந் தந்தருளென் றடிநினைந்து தழலவணைந்து தவங்கள் செய்த, பெருஞ்சதுரர் பெயலர்க்கும் பீடார்தோ ழமையளித்த பெருமான்கோயில், அரிந்தவயல் அரவிந்த மதுவுகுப்ப அதுகுடித்துக் களித்துவாளை, கருஞ்சகடம் இளகவளர் கரும்பிரிய அகம்பாயுங் கழுமலமே. 6

புவிமுதல்ஐம் பூதமாய்ப் புலன்ஐந்தாய் நிலன்ஐந்தாய்க் கரணம் நான்காய், அவையவைசேர் பயனுருவா யல்லவுரு வாய்[2]நின்றான் அமருங்கோயில், தவமுயல்வோர் மலர்பறிப்பத் தாழவிடு கொம்புதைப்பக் கொக்கின்காய்கள், கவணெறிகற் போற்சுனையிற் கரைசேரப் புள்ளிரியுங் கழுமலமே. 7

அடல்வந்த வானவரை யழித்துலகு தெழித்துழலும் அரக்கர் கோமான், மிடல்வந்த இருபதுதோள் நெரியவிரற் பணிகொண்டோன் மேவுங்கோயில், நடவந்த வுழவரிது நடவொணா வகைபரலாய்த் தென்றுதுன்று, கடல்வந்த சங்கீன்ற முத்துவயற் கரைகுவிக்குங் கழுமலமே. 8

பூமகள்தன் கோன்அயனும் புள்ளினொடு கேழல்உரு வாகிப் புக்கிட், டாமளவுஞ் சென்றுமுடி யடிகாணா வகைநின்றான் அமருங்கோயில், பாமருவுங் கலைப்புலவோர் பன்மலர்கள் கொண்டணிந்து பரிசினாலே, காமனைகள் பூரித்துக் களிகூர்ந்து நின்றேத்துங் கழுமலமே. 9

குணமின்றிப் புத்தர்களும் பொய்த்தவத்தை மெய்த்தவமாய் நின்றுகையில், உணல்மருவுஞ் சமணர்களும் உணராத வகைநின்றான் உறையுங்கோயில், மணமருவும் வதுவை[3]யொலி விழவின்ஒலி யிவையிசைய மண்மேல்தேவர், கணமருவும் மறையினொலி கீழ்ப்படுக்க மேற்படுக்குங் கழுமலமே. 10

கற்றவர்கள் பணிந்தேத்துங் கழுமலத்துள் ஈசன்றன் கழல்மேல் நல்லோர், நற்றுணையாம் பெருந்தன்மை ஞானசம்பந்தன்றன் நயந்துசொன்ன, சொற்றுணையோ ரைந்தினொடைந் திவை

[2] யல்லவருவாய் என்றும் பாடம். [3] வதுவை-திருமணம்.

வல்லார் தூமலராள்[4] துணைவராகி, முற்றுலகம் அது ஆண்டு முக்கணன் அடிசேர முயல்கின்றாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் – கொல்லி* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில்நல் லகதிக்கி யாதுமோர் குறைவிலைக்
கண்ணில்நல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே. 1

போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல் லாதெனத்
தாதையார்[2] முனிவுறத் தானெனை யாண்டவன்[3]
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே. 2

தொண்டணை செய்தொழில் துயரறுத் துய்யலாம்
வண்டணை கொன்றையான் மதுமலர்ச் சடைமுடிக்
கண்துணை நெற்றியான் கழுமல வளநகர்ப்
பெண்துணை யாகவோர் பெருந்தகை யிருந்ததே. 3

அயர்வுளோம் என்றுநீ அசைவொழி நெஞ்சமே
நியர்வளை முன்கையாள் நேரிழை யவளொடுங்
கயல்வயல் குதிகொளுங் கழுமல வளநகர்ப்
பெயர்பல துதிசெயப் பெருந்தகை யிருந்ததே. 4

அடைவிலோம் என்றுநீ அயர்வொழி நெஞ்சமே
விடையமர் கொடியினன் விண்ணவர் தொழுதெழுங்
கடையுயர் மாடமார் கழுமல வளநகர்ப்
பெடைநடை யவளொடும் பெருந்தகை யிருந்ததே. 5

மற்றொரு பற்றிலை நெஞ்சமே மறைபல
கற்றநல் வேதியர் கழுமல வளநகர்ச்

---

[4] தாமலராள்–இலக்குமி. * இப்பதிகம் மதுரையில் தந்தை முதலியோரைச் சந்தித்துத் தோணியப்பரை வினவுமுகமாகப் பாடியருளியது. [2] தாதையார்–சிவபாதவிருதயர். [3] இவ்வடிகள் ஞானப்பால் உண்டதைக் குறிக்கும் அகச்சான்று.

சிற்றிடைப் பேரல்குல் திருந்திழை யவ்வொளொடும்
பெற்றெனை யாளுடைப் பெருந்தகை யிருந்ததே. 6

குறைவளை வதுமொழி குறைவொழி நெஞ்சமே
நிறைவளை முன்கையாள் நேரிழை யவளொடுங்
கறைவளர் பொழிலணி கழுமல வளநகர்ப்
பிறைவளர் சடைமுடிப் பெருந்தகை யிருந்ததே. 7

அரக்கனார் அருவரை யெடுத்தவன் அலறிட
நெருக்கினா விரலினால் நீடியாழ் பாடவே
கருக்குவாள் அருள்செய்தான் கழுமல வளநகர்ப்
பெருக்குநீ ரவளொடும் பெருந்தகை யிருந்ததே. 8

நெடியவன் பிரமனும் நினைப்பரி தாயவர்
அடியொடு முடியறி யாஅழல் உருவினன்
கடிகமழ் பொழிலணி கழுமல வளநகர்ப்
பிடிநடை யவளொடும் பெருந்தகை யிருந்ததே. 9

தாருறு தட்டுடை[3]ச் சமணர்சாக் கியர்கள்தம்
ஆருறு சொற்களைந் த[4]டியிணை யடைந்துய்ம்மின்
காருறு பொழில்வளர் கழுமல வளநகர்ப்
பேரறத் தாளொடும் பெருந்தகை யிருந்ததே. 10

கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தஎம் பிரான்றனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - புறநீர்மை [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மடல்மலி கொன்றை துன்றுவா ளெருக்கும் வன்னியும் மத்தமுஞ் சடைமேற், படலொலி திரைகள் மோதிய கங்கைத் தலைவனார் தம்மிடம் பகரில், விடலொலி பரந்த வெண்டிரை முத்தம் இப்பிகள் கொணர்ந்துவெள் ளருவிக், கடலொலி யோதம் மோதவந் தலைக்குங் கழுமல நகரென லாமே. 1

---

[3] தட்டுஉடை—சுற்றிக்கட்டும் ஆடை. [4] களைந்து - நீக்கி.

மின்னிய அரவும் வெறிமலர் பலவும் விரும்பிய திங்களுந் தங்கு, சென்னிய துடையான் தேவர்தம் பெருமான் சேயிழை யொடும்உறை விடமாம், பொன்னியல் மணியு முரிகரி மருப்புஞ் சந்தமும் உந்துவன் றிரைகள், கன்னிய ராடக் கடலொலி மலியுங் கழுமல நகரென லாமே. 2

சீருறு தொண்டர் கொண்டடி போற்றச் செழுமலர் புனலொடு தூபந், தாருறு கொன்றை தம்முடி வைத்த சைவனார் தங்கிட மெங்கும், ஊருறு பதிகள் உலகுடன் பொங்கி யொலிபுனல் கொள[1] வுடன் மிதந்த, காருறு செம்மை நன்மையால் மிக்க கழுமல நகரென லாமே. 3

மண்ணினா ரேத்த வானுளார் பரச[2] அந்தரத் தமரர்கள் போற்றப், பண்ணினா ரெல்லாம் பலபல வேட முடையவர் பயில்விட மெங்கும், எண்ணினால் மிக்கார் இயல்பினால் நிறைந்தார் ஏந்திழை யவரொடு மைந்தர், கண்ணினால் இன்பங் கண்டொளி பரக்குங் கழுமல நகரென லாமே. 4

சுருதியான்[3] தலையும் நாமகள் மூக்குஞ் சுடரவன் கரமுமுன் னியங்கு, பரிதியான் பல்லும் இறுத்தவர்க் கருளும் பரமனார் பயின்றினி திருக்கை, விருதினன் மறையும் அங்கமோ ராறும் வேள்வியும் வேட்டவர் ஞானங், கருதினா ருலகிற் கருத்துடையார்சேர் கழுமல நகரென லாமே. 5

புற்றில்வாள் அரவும் ஆமையும் பூண்ட புனிதனார் பனிமலர்க் கொன்றை, பற்றிவான் மதியஞ் சடையிடை வைத்த படிறனார் பயின்றினி திருக்கை, செற்றுவன் றிரைகள் ஒன்றொடொன் றோடிச் செயிர்த்துவண் சங்கொடு வங்கங், கற்றுறை வரைகள் கரைக்குவந் துரைக்குங் கழுமல நகரென லாமே. 6

அலைபுனற் கங்கை தங்கிய சடையார் அடல்நெடு மதிலொரு மூன்றுங், கொலையிடைச் செந்தீ வெந்தறக் கண்ட குழகனார் கோயிலதென்பர், மலையின்மிக் குயர்ந்த மரக்கலஞ் சரக்கு மற்றுமற் றிடையிடை யெங்கும், கலைகளித் தேறிக் கானலில் வாழுங் கழுமல நகரென லாமே. 7

---

[1] பொங்கியொலி கடல்கொள என்றும் பாடம். [2] பரச - துதிக்க. [3] சுருதியான் - பிரமன்.

ஒருக்கமுன் நினையாத் தக்கன்றன் வேள்வி யுடைதர வுழறிய படையார், அரக்கனை வரையால் ஆற்றலன் றழித்த அழகனார் அமர்ந்துறை கோயில், பரக்கும்வண் புகழார் பழியவை பார்த்துப் பலபல[4] அறங்களே பயிற்றிச், கரக்குமா றறியா வண்மையால் வாழுங் கழுமல நகரென லாமே. 8

அருவரை பொறுத்த ஆற்றலி னானும் அணிகிளர் தாமரை யானும், இருவரும் ஏத்த எரியுரு வான இறைவனார் உறைவிடம் வினவில், ஒருவரிவ் வுலகில் வாழ்கிலா வண்ணம் ஒலிபுனல் வெள்ளமுன் பரப்பக், கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்குங் கழுமல நகரென லாமே. 9

உரிந்துயர் உருவில் உடைதவிர்ந் தாரும் அத்துகில் போர்த் துழல்வாருந், தெரிந்துபுன் மொழிகள் செப்பின கேளாச் செம்மை யார் நன்மையால் உறைவாங், குருந்துயர் கோங்கு கொடிவிடு முல்லை மல்லிகை சண்பகம் வேங்கை, கருத்தடங் கண்ணின் மங்கைமார் கொய்யுங் கழுமல நகரென லாமே. 10

கானலங் கழனி யோதம்வந் துலவுங் கழுமல நகருறை வார் மேல், ஞானசம் பந்தன் நற்றமிழ் மாலை நன்மையால் உரைசெய்து நவில்வார், ஊனசம் பந்தத் துறுபிணி நீங்கி உள்ளமும் ஒருவழிக் கொண்டு, வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார் மற்றிதற் காணையும் நமதே. 11

திருச்சிற்றம்பலம்

---

## [பல்பெயர்ப்பத்து*]

**பண் - தக்கேசி [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

எரியார்மழுவொன் றேந்தி அங்கை யிடுதலையேகலனா
வரியார்வளையா ரையம்வவ்வாய் மாநலம்வவ்வுதியே
சரியாநாவின் வேதகீதன் தாமரைநான்முகத்தன்
பெரியான்பிரமன் பேணியாண்ட பிரமபுரத்தானே. 1

---

[4] பார்த்துப்பலபட என்றும் பாடம். * சீகாழிக்குரிய பல பெயர்களை (பன்னிரு பெயர்களை)ப்பற்றிச் சிறப்பித்துக் கூறும் பதிகங்கள் பல் பெயர்ப்பத்து ஆகும்.

பெயலார்சடைக்கோர் திங்கள்சூடிப் பெய்பலிக்கென்றயலே
கயலார்தடங்கண் அஞ்சொல்நல்லார் கண்டுயில்வவ்வுதியே
இயலால்நடாவி இன்பமெய்தி யிந்திரனுள்மண்மேல்
வியலார்முரச மோங்குசெம்மை வேணுபுரத்தானே. 2

நகலார்தலையும் வெண்பிறையும் நளிர்சடைமாட்டயலே
பகலாப்பலிதேர்ந் தையம்வவ்வாய் பாய்கலைவவ்வுதியே
அகலாதுறையும் மாநிலத்தில் அயலின் மையாலமரர்[1]
புகலால்மலிந்த பூம்புகலி மேவியபுண்ணியனே. 3

சங்கோடிலங்கத் தோடுபெய்து காதிலோர் தாழ்குழையன்
அங்கோல்வளையார் ஐயம்வவ்வா யால்நலம்வவ்வுதியே
செங்கோல்நடாவிப் பல்லுயிர்க்குஞ் செய்வினைமெய்தெரிய
வெங்கோத்தருமன் மேவியாண்ட வெங்குருமேயவனே. 4

தணிநீர்மதியஞ் சூடிநீடு தாங்கியதாழ்சடையன்
பிணிநீர்மடவார் ஐயம்வவ்வாய் பெய்கலைவவ்வுதியே
அணிநீருலக மாகியெங்கும் ஆழ்கடலாலழுங்கத்
துணிநீர்பணியத் தான்மிதந்த தோணிபுரத்தானே. 5

கவர்பூம்புனலுந் தண்மதியுங் கமழ்சடைமாட்டயலே
அவர்பூம்பலியோ டையம்வவ்வா யால்நலம்வவ்வுதியே
அவர்பூணரையர்க் காதியாய் அவள்தன் மன்னனுள்மண்மேல்
தவர்பூம்பதிக ளெங்குமெங்குந் தங்குதராயவனே. 6

முலையாழ்கெழுவ[2] மொந்தைகொட்ட முன்கடைமாட்டயலே
நிலையாய்ப்பலிதேர்ந் தையம்வவ்வாய் நீநலம்வவ்வுதியே
தலையாய்க்கிடந்திவ் வையமெல்லாந் தன்னதோராணைநடாய்ச்
சிலையால்மலிந்த சீர்ச்சிலம்பன் சிரபுரமேயவனே. 7

எருதேகொணர்கென் றேறியங்கை யிடுதலையேகலனாக்
கருதேர்மடவார் ஐயம்வவ்வாய் கண்டுயில்வவ்வுதியே
ஒருதேர்கடாவி ஆரமரு ளொருபதுதோள்தொலையப்
பொருதேர்வலவன் மேவியாண்ட புறவமர் புண்ணியனே. 8

துவர்சேர்கலிங்க[3]ப் போர்வையாருந் தூய்மையிலாச்சமணுங்
கவர்செய்துழலக் கண்டவண்ணம் காரிகைவார்குழலார்

---

[1] நிலத்திலயலின் மயலாலமரர் என்றும் பாடம். [2] முலையாழ்கெழுமஎன்றும் பாடம். முலையாழ்—முல்லையாழ். [3] கலிங்கம்-ஆடை.

அவர்பூம்பலியோ டையம்வவ்வா யால்நலம்வவ்வுதியே
தவர்செய்நெடுவேற் சண்டனுளச் சண்பையமர்ந்தவனே. 9

கிழலால்மலிந்த கொன்றைசூடி நீறுமெய்பூசிநல்ல
குழலார்மடவா ரையம்வவ்வாய் கோல்வளைவவ்வுதியே
அழலாயுலகம் கவ்வைதீர ஐந்தலைநீண்முடிய
கழல்நாகரையன் காவலாகக் காழியமர்ந்தவனே. 10

கட்டார் துழாயன் தாமரையா னென்றிவர் காண்பரிய
சிட்டார்பலிதேர்ந் தையம்வவ்வாய் செங்கலைவவ்வுதியே
நட்டார்நடுவே நந்தனுள நல்வினையாலுயர்ந்த
கொட்டாறுடுத்த தண்வயல்சூழ் கோச்சையமர்ந்தவனே. 11

கடையார்கொடிநன் மாடவீதிக் கழுமலவூர்க்கவுணி
நடையார்பனுவல் மாலையாக ஞானசம்பந் தன்நல்ல
படையார்மழுவன் மேல்மொழிந்த பல்பெயர்ப்பத்தும்வல்லார்க்
கடையாவினைகள் உலகில்நாளும் அமருலகாள்பவரே. 12

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருக்குக்குறள் *
### பண் - குறிஞ்சி ** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அரனை உள்குவீர்,[1] பிரம னூருளெம்
பரனை யேமனம், பரவி உய்ம்மினே. 1

காண உள்குவீர், வேணு நற்புரத்
தாணு வின்கழல், பேணி உய்ம்மினே. 2

நாதன் என்பிர்காள், காதல் ஒண்புகல்[2]
ஆதி பாதமே, ஓதி உய்ம்மினே. 3

அங்கம் மாதுசேர், பங்கம்[3] ஆயவன்
வெங்குரு மன்னும், எங்க ளீசனே. 4

---

* இரு சீரால் இயன்ற அடியுடைய பாட்டு குறள் என்பதாம். திரு - அடைமொழி. இருக்கு - மந்திரப்பொருமை; செய்யுள் விகற்பமுமாம். ** இப்பதிகம் சீகாழிக்குரிய பன்னிரு பெயர்களை யும் துதிப்பது. [1] உள்குவீர் - நினைக்கும் மனமுடையவர்களே! [2] புகல் - புகலி. [3] பங்கம் - பாதி.

வாணி லாச்சடைத், தோணி வண்புரத்
தாணி[2] நற்பொனைக், காணு மின்களே. 5

பாந்த ளார்சடைப், பூந்த ராய்மன்னும்
ஏந்து கொங்கையாள், வேந்த னென்பரே. 6

கரிய கண்டனைச், சிரபு ரத்துளெம்
அரசை நாடொறும், பரவி உய்ம்மினே. 7

நறவம் ஆர்பொழிற், புறவ நற்பதி
இறைவன் நாமமே, மறவல் நெஞ்சமே. 8

தென்றில்[3] அரக்கனைக், குன்றிற் சண்பைமன்
அன்று நெரித்தவா, நின்று நினைமினே. 9

அயனும் மாலுமாய், முயலுங் காழியான்
பெயல்வை[4] யெய்திநின், றியலும் உள்ளமே. 10

தேரர் அமணரைச், சேர்வில் கொச்சைமன்
நேரில் கழல்நினைக், தோரும் உள்ளமே. 11

தொழும னத்தவர், கழும லத்துறை
பழுதில் சம்பந்தன், மொழிகள் பத்துமே.[5] 12

திருச்சிற்றம்பலம்

---

## மொழிமாற்று*

பண் - வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காட தணிகலங் காரர வம்பதி காலதனில்
தோட தணிகுவர் சுந்தரக் காதினில் தூச்சிலம்பர்
வேட தணிவர் விசயற் குருவம் வில்லுங்கொடுப்பர்
பீட தணிமணி மாடப் பிரம புரத்தாரே. 1

---

[2] ஆணி-பொன்னை உரையிட்டளக்கும் உரையாணி. [3] தென்றில் - பகை. தென்றி-தெற்கு என்றலுமாம். [4] பெயலவை-அருள் மொழிதல்; பெயல் – அருள் மழை. [5] மொழிகள் பத்துமே - மொழிகள் பத்துமே பற்றுக்கோடாவன; பத்து - பெரும்பான்மை பற்றி வந்தது. * மொழிகளை மாற்றிக் கூட்டிப் பொருள் கொள்ள வைக்கும் மிறைக்கவி மொழிமாற்று ஆகும். உதாரணம்: காடது-பதி-காரரவம் - அணிகலம் என்றிவ்வாறு மொழிகளை மாற்றுவது.

கற்றைச் சடையது கங்கண முன்கையில் திங்கள்கங்கை
பற்றித்து முப்புரம் பார்படைத் தோன்றலை சுட்டதுபண்
டெற்றித்துப் பாம்பை யணிந்தது கூற்றை யெழில்விளங்கும்
வெற்றிச் சிலைமதில் வேணு புரத்தெங்கள் வேதியரே. 2

கூவிளங் கையது பேரி சடைமுடிக் கூட்டத்தது
தூவிளங் கும்பொடிப் பூண்டது பூசிற்றுத் துத்திநாகம்
ஏவிளங் குந்நுத லாளையும் பாகமும் உரித்தனரின்
பூவிளஞ் சோலைப் புகலியுள் மேவிய புண்ணியரே. 3

உரித்தது பாம்பை யுடல்மிசை இட்டதோர் ஒண்களிற்றை
எரித்ததொ ராமையை இன்புறப் பூண்டது முப்புரத்தைச்
செருத்தது சூலத்தை யேந்திற்றுத் தக்கனை வேள்விபன்னூல்
விரித்தவர்[1] வாழ்தரு வெங்குரு வில்வீற் றிருந்தவரே. 4

கொட்டுவர் அக்கரை யார்ப்பது தக்கை[2] குறுந்தாளன
விட்டுவர் பூதங் கலப்பில ரின்புக ழென்புலவின்
மட்டுவ ருந்தழல் சூடுவர் மத்தமும் ஏந்துவர்வான்
தொட்டுவ ருங்கொடித் தோணி புரத்துறை சுந்தரரே. 5

சாத்துவர் பாசந் தடக்கையி லேந்துவர் கோவணந்தங்
கூத்தவர் கச்சுக் குலவிநின் றாடுவர் கொக்கிறகும்
பேர்த்தவர் பல்படை பேயவை சூடுவர் பேரெழிலார்
பூத்தவர் கைதொழு பூந்தராய் மேவிய புண்ணியரே. 6

காலது கங்கை கற்றைச் சடையுள்ளாற் கழல்சிலம்பு
மாலது ஏந்தல் மழுவது பாகம் வளர்கொழுங்கோட்
டாலது வூர்வர் அடலேற் றிருப்பர் அணிமணிநீர்ச்
சேலது கண்ணியொர் பங்கர் சிரபுரம் மேயவரே. 7

நெருப்புரு வெள்விடை மேனியர் ஏறுவர் நெற்றியின்கண்
மருப்புறு வன்கண்ணர் தாதையைக் காட்டுவர் மாமுருகன்
விருப்புறு பாம்புக்கு மெய்த்தந்தை யார்விறல் மாதவர்வாழ்
பொருப்புறு மாளிகைத் தென்புற வத்தணி புண்ணியரே. 8

இலங்கைத் தலைவனை யேந்திற் றிறுத்த திரலையின்னாள்
கலங்கிய கூற்றுயிர் பெற்றது மாணி குமைபெற்றது

---

[1] பன்னூல் விரித்தவர் - மறை முதலிய கலைகளில் வல்லவர்.
[2] தக்கை - ஒரு வாத்தியம்.

கலங்கிளர் மொந்தையி னாடுவர் கொட்டுவர் காட்டகத்துச்
சலங்கிளர் வாழ்வயற் சண்பையுள் மேவிய தத்துவரே. 9

அடியிணை கண்டிலன் தாமரை யோன்மால் முடிகண்டிலன்
கொடியணி யும்புலி யேறுகந் தேறுவர் தோலுடுப்பர்
பிடியணி யுந்நடை யாள்வெற் பிருப்பதோர் கூறுடையர்
கடியணி யும்பொழிற் காழியுள் மேய கறைக்கண்டரே. 10

கையது வெண்குழை காதது சூலம் அமணர்புத்தர்
எய்துவர் தம்மை யடியவர் எய்தாரொரர் ஏனக்கொம்பு
மெய்திகழ் கோவணம் பூண்ப துடுப்பது மேதகைய
கொய்தலர் பூம்பொழிற் கொச்சையுள் மேவிய கொற்றவரே. 11

கல்லுயர் கழுமல இஞ்சியுள் மேவிய கடவுள்தன்னை
நல்லுரை ஞானசம் பந்தன் ஞானத் தமிழ்[3] நன்குணரச்[4]
சொல்லிடல்[5] கேட்டல் வல்லோர்தொல்லை வானவர் தங்களொடும்
செல்குவர் சீரரு ளாற்பெற லாஞ்சிவ லோகமதே. 12

திருச்சிற்றம்பலம்

---

## ஏகபாதம் *

### பண் - வியாழக்குறிஞ்சி**

திருச்சிற்றம்பலம்

பிரம[1] புரத்துறை பெம்மா னெம்மான்[2]
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்[3]
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான். 1

---

[3] ஞானத் தமிழ் - இறைவனது சொரூப தடத்த இலக்கணங்களையும் சாதனங்களையும் அறிவிப்பது. [4] நன்குணர்தல் - மொழி மாற்றின் கூறறிந்து பொருளை உள்ளுணர்தல். [5] சொல்லுதல் என்றும் பாடம். * ஒரு அடி போலவே எல்லா அடிகளும் வருவது ஏக பாதம் எனப்படும். அடிதோறும் ஒன்றும் பலவுமாகிய சீர்கள் மடங்கி வருவது யமகம் ஆகும். ஏகபாதம், யமகத்தினும் சிறப்பு வகை என்பர். ** இப்பதிகத்தின் தெளிவான உரையை காஞ்சீபுரம் திரு. சபாபதி முதலியார் வெளியிட்ட அடங்கன் முறைப் பதிப்பில் கண்டு தெளிக. [1] பிரமம்-ஞானகாயமாகிய பராசத்தி. [2] பெம்மான் எம்மான் - எந்தப் பெரியோன். [3] பெம்-விருப்பம்; மான் - கங்கை. எம்ஆன் - எனதுயிர்.

விண்டலர்[4] பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழில[5]ணி வேணு புரத்தரன்
விண்டலர் பொழிலணி வேணு புரத்தரன். 2

புண்ட ரிகத்தவன்[6] மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன்[7] மேவிய புகலியே
புண்ட ரிகத்தவன் மேவிய புகலியே. 3

விளங்கொளி[8] திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன்
விளங்கொளி திகழ்தரு வெங்குரு மேவினன். 4

சுடர்மணி மாளி[9]கைத் தோணி[10] புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன்
சுடர்மணி மாளிகைத் தோணி புரத்தவன். 5

பூசுரர்[11] சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர்[12] சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி
பூசுரர் சேர்பூந்த ராயவன் பொன்னடி. 6

செருக்கு[13]வாய்ப் பு[14]டையான் சிரபுர மெ[15]ன்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில்
செருக்குவாய்ப் புடையான் சிரபுர மென்னில். 7

[4] விண்டு - மலை. அலர் - ஒலி. [5] விண்தலர் பொழில் - கற்பகச் சோலை. [6] புண்டரிகத்தவன் - இருதய கமலத்திலுள்ளவன். [7] புண்டரிகம் தவன் - புலிக்கால் முனிவன். [8] விள கொளி - விளாம்பழத்தைக் கொண்ட திருமால். [9] சுடர்மண் இம் ஆளி - சூடுநிறைந்த மண்ணுடைய சுடுகாட்டை ஆளுபவன். [10] கைத் தோணி - பேர் தொலைத்த துப்பமாலை. [11] பூசுரர் - மண்ணவரும் விண்ணவரும். [12] பூசுரர் - சிவஞானிகள். [13] செருக்கு - மயக்கம். [14] வாய்ப்பு - மேலீடு. [15] சிரபுரம் மேலாகிய இருப்பு.

பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் சேர்புற வத்தவன்
பொன்னடி மாதவர் [15] சேர்புற வத்தவன். 8

தசமுக னெ[16]ரிதர வூன்று சண்பையான் [17]
தசமுக னெரிதர வூன்று சண்பையான் [18]
தசமுக னெரிதர வூன்று சண்பையான் [19]
தசமுக னெரிதர வூன்று சண்பையான். 9

காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே
காழி யான[20]ய னுள்ளவா காண்பரே
காழி யானய னுள்ளவா காண்பரே. 10

கொச்சை [21]யண் ணலை [22]க்கூட கிலாரு[23]டன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே
கொச்சையண் ணலைக்கூட கிலாருடன் மூடரே. 11

கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை [24]
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை. 12

திருச்சிற்றம்பலம்

---

[15] பொன் நடி - அழகாக நடிப்பவன். மாது - காளி. அவர் — பூதகணங்கள். [16] தசமுகன் - தயவுடையவன். [17] சண் பையான் — வேகமும், படமும் உடைய பாம்பைக் கொண்டவன். [18] த - அது; சமுகம் - திரட்சி; நெரி - நேரானவன்; தர - புலி; ஊன்-புலால்; துசு-தூசு(ஆடை); அண்பையான்-விரித்துடுத்தான். [19] து-விசேடஞானம்; சண் - ஆறு சமயம்; பையான் - பயனாக உடையவன். [20] காழியான்—திருமால். காளிமம் - கறுப்பு நிறம். [21] கொச்சை - ஆணவம். [22] அண்ணலை - பொருந்துதலை. [23] கூடகில்லார்-மாறுபட்டார். [24] க - தலையில்; உணியன் - உண்பவன்; கட்டு - விளக்கம்; உரை - பொன்போன்றவன்.

## திருவெழுகூற்றிருக்கை *

### பண் - வியாழக்குறிஞ்சி **

திருச்சிற்றம்பலம்

ஓருரு வா[1]யினை மானா[2]ங் காரத்
தீரியல் பாயொரு விண்முதல் பூதலம்
ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை
இருவரோ டொருவ னாகி நின்றனை
ஓரால் நீழல் ஒண்கழல்[3] இரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க் கொளிநெறி
காட்டினை நாட்ட மூன்றாகக் கோட்டினை
இருநதி அரவமோ டொருமதி சூடினை
ஒருதா ளீரயின் மூவிலைச் சூலம்
நாற்கால் மான்மறி[4] ஐந்தலை அரவம்
ஏந்தினை காய்ந்த நால்வாய் மும்மதத்
திருகோட் டொருகரி யீடழித் துரித்தனை
ஒருதனு இருகால் வளைய வாங்கி
முப்புரத் தோடு நானிலம் அஞ்சக்
கொன்று தலத்துற அவுணரை யறுத்தனை
ஐம்புலன் நாலாம் அந்தக் கரணம்
முக்குணம் இருவளி யொருங்கிய வானோர்
ஏத்த நின்றனை யொருங்கிய மனத்தோ
டிருபிறப் போர்ந்து முப்பொழுது குறைமுடித்து

---

* ஏழறையாக்கி முறையானே குறுமக்கள் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றியால் வழுவாமை ஒன்று முதலாக ஏழிறுதியாக ஏறியும் இறங்கியும் எண்ணலங்காரம்படப் பாடுவது எழுகூற்றிருக்கை ஆகும். இஃது இணைக்குறள் ஆசிரியப்பா ஆகிய ஒரே பாட்டு; ஆயினும் மரபுபற்றிப் பதிகம் எனப்படும். ** இப்பதிகம் ஓதின் எல்லாப் பதிகங்களையும் ஓதின பயன்வரும் என்று பாடியதாகும். [1] ஓர் உருவு - தத்துவங்கள் எல்லாம் கடந்த சொரூபம். [2] மான்-சத்தி. [3] ஓரால் நீழல் உன் கழல் என்றும்பாடம். [4] மான் மறி-மான் கன்று.

நான்மறை யோதி ஐவகை வேள்வி[5]
அமைத்தா றங்க[6] முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை
அறுபதம் முரலும் வேணுபுரம் விரும்பினை
இகலிய மைந்துணர் புகலி யமர்ந்தனை
பொங்குநாற் கடல்சூழ் வெங்குரு விளங்கினை
பாணிமூ வுலகும் புதையமேல் மிதந்த
தோணிபுரத் துறைந்தனை தொலையா இருநிதி
வாய்ந்த பூந்தராய் ஏய்ந்தனை
வரபுரம் என்றுணர் சிரபுரத் துறைந்தனை
ஒருமலை யெடுத்த இருதிறல் அரக்கன்
விறல்கெடுத் தருளினை புறவம் புரிந்தனை
முந்நீர்த் துயின்றோன் நான்முகன் அறியாப்
பண்பொடு நின்றனை சண்பை யமர்ந்தனை
ஐயுறும் அமணரும் அறுவகைத் தேரரும்
ஊழியும் உணராக் காழி யமர்ந்தனை
எச்சனே ழிசையோன்[7] கொச்சையை மெச்சினை
ஆறு பதமும்[8] ஐந்தமர்[9] கல்வியும்
மறைமுதல் நான்கும்
மூன்று காலமுந் தோன்ற நின்றனை
இருமையின் ஒருமையும்[10] ஒருமை[11]யின் பெருமையும்

---

[5] ஐவகை வேள்வி - சிவபூசை, குருபூசை, மகேசுவர பூசை, அந்தணர் பூசை, அதிதிபூசை. பிரம யாகம், தேவயாகம், மானுட யாகம், பிதிர்யாகம், பூதயாகம் என்னும் ஐந்து யாகமும் ஆகும் என்பர். [6] ஆறு அங்கம்-ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன; சிட்சை, வியாகரணம், கற்பசூத்திரம், சந்தோவிசிதம், நிருத்தம், சோதிடம் என்ற வேதாங்கங்கள் ஆறு என்றலுமாம். [7] எச்சன் ஏழிசையோன் - பராசர முனிவன். [8] ஆறு பதம் - பிராத்தி, பிராத்தியாகாரம், துல்லியம், துல்லியாதீதம், வித்தை, அவித்தை என்பன. [9] ஐந்தமர் கல்வி - சிவாகமம். ஐந்து—ஈசானம் முதலிய ஐந்து முகம். [10] இருமையின் ஒருமை - அர்த்த நாரீசுவர வடிவு. [11] ஒருமை - தனி முதற் பொருள்.

மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணியன் அறியும்
அனைய தன்மையை யாதலின் நின்னை
நினைய வல்லவ ரில்லை நீள்நிலத்தே.

திருச்சிற்றம்பலம்

---

## திருச்சக்கரமாற்று*

பண் - காந்தாரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பிரமனூர் வேணுபுரம் புகலி வெங்குருப் பெருநீர்த் தோணி, புரமன்னு பூந்தராய் பொன்னஞ் சிரபுரம் புறவஞ் சண்பை, அரன்மன்னு தண்காழி கொச்சைவய முள்ளிட்டங் காதியாய, பரமனூர் பன்னிரண்டாய் நின்றதிருக் கழுமலம்நாம் பரவு மூரே. 1

வேணுபுரம் பிரமனூர் புகலிபெரு வெங்குரு வெள்ளத் தோங் குந், தோணிபுரம் பூந்தராய் தூநீர்ச் சிரபுரம் புறவங் காழி, கோணிய கோட்டாற்றுக் கொச்சை வயஞ்சண்பை கூருஞ் செல் வங், காணிய வையகத்தோ ரேத்துங் கழுமலம்நாங் கருது மூரே. 2

புகலி சிரபுரம் வேணுபுரஞ் சண்பை புறவங் காழி, நிகரில் பிரமபுரங் கொச்சை வயம்நீர்மேல் நின்ற மூதூர், அகலிய வெங் குருவோ டந்தண் டராய்அமரர் பெருமாற் கின்பம், பகரு நகர் நல்ல கழுமலம்நாங் கைதொழுது பாடு மூரே. 3

வெங்குருத் தண்புகலி வேணுபுரஞ் சண்பை வெள்ளங் கொள்ளத், தொங்கிய தோணிபுரம் பூந்தராய் தொகுபிரம புரந் தொல் காழி, தங்கு பொழிற்புறவங் கொச்சை வயந்தலைபண் டாண்ட மூதூர், கங்கை சடைமுடிமே லேற்றான் கழுமலம்நாங் கருது மூரே. 4

---

* திருச்சக்கரமாற்று - சக்கரவடிவாக அடைத்துச் சுழன்று வருவதுபோலச் சீகாழியின் பன்னிரண்டு பெயர்களும் மாறிச் சுழன்றுவரப் பாடியருளிய சித்திர கவி. ** இப்பதிகம், மதுரையில் கூன்பாண்டியன் 'உமது பதி யாது' என்று கேட்ட வினாவுக்குத் தமது திருப்பதி கழுமலம் என்று விடையளிப்பதாக அமைந்தது.

தொன்னீரில் தோணிபுரம் புகலி வெங்குருத் துயர்தீர் காழி, இன்னீர வேணுபுரம் பூந்தராய் பிரமனூர் எழிலார் சண்பை, நன்னீர பூம்புறவங் கொச்சை வயஞ்சிலம்ப னகராம் நல்ல, பொன்னீர புன்சடையான் பூந்தண் கழுமலம்நாம் புகழு மூரே. 5

தண்ணந் தராய்புகலி தாமரையா னூர்சண்பை தலைமுன் ஆண்ட, அண்ணல்நகர் கொச்சை வயந்தண் புறவஞ்சீர் அணியார் காழி, விண்ணியல்சீர் வெங்குருநல் வேணுபுரந் தோணிபுர மேலா ரேத்து, கண்ணுதலான் மேவியநற் கழுமலம்நாங் கைதொழுது கருது மூரே. 6

சீரார் சிரபுரமுங் கொச்சைவயஞ் சண்பையொடு புறவ நல்ல, ஆராத் தராய்பிரம னூர்புகலி வெங்குருவோ டந்தண் காழி, ஏரார் கழுமலமும் வேணுபுரந் தோணிபுர மென்றென் றுள்கிப், பேரால் நெடியவனும் நான்முகனுங் காண்பரிய பெருமா னூரே. 7

புறவஞ் சிரபுரமுந் தோணிபுரஞ் சண்பைமிகு புகலி காழி, நறவ மிகுசோலைக் கொச்சை வயந்தராய் நான்முகன் றனூர், விறலாய வெங்குருவும் வேணுபுரம் விசயன் மேலம் பெய்து, திறலால் அரக்கனைச் செற்றான்றன் கழுமலம்நாஞ் சேரு மூரே. 8

சண்பை பிரமபுரந் தண்புகலி வெங்குரு நற்காழி சாயாப், பண்பார் சிரபுரமுங் கொச்சை வயந்தராய் புறவம் பார்மேல், நண்பார் கழுமலஞ்சீர் வேணுபுரந் தோணிபுரம் நாணி லாத, வெண்பற் சமணரொடு சாக்கியரை வியப்பழித்த விமல னூரே. 9

செழுமலிய பூங்காழி புறவஞ் சிரபுரஞ்சீர்ப் புகலி செய்ய, கொழுமலரான் நன்னகரந் தோணிபுரங் கொச்சைவயஞ் சண்பையாய, விழுமியசீர் வெங்குருவோ டோங்குதராய் வேணுபுரமிகுநன் மாடக், கழுமலமென் றின்னபெயர் பன்னிரண்டுங் கண்ணுதலான் கருது மூரே. 10

கொச்சை வயம்பிரம னூர்புகலி வெங்குருப் புறவங் காழி, நிச்சல் விழவோவா நீடார் சிரபுரம்நீள் சண்பை மூதூர், நச்சினிய பூந்தராய் வேணுபுரந் தோணிபுர மாகி நம்மேல், அச்சங்கள் தீர்த்தருளும் அம்மான் கழுமலம்நாம் அமரு மூரே. 11

காவி மலர்புரையுங் கண்ணார் கழுமலத்தின் பெயரை நாளும், பாவிய சீர்ப் பன்னிரண்டு நன்னூலாப் பத்திமையாற் பனுவன்

மாலை, நாவி னலம்புகழ்சீர் நான்மறையான் ஞான சம்பந்தன் சொன்ன, மேவியிசை மொழிவார் விண்ணவரில் எண்ணுதலை விருப்பு ளாரே. 12

திருச்சிற்றம்பலம்

---

## திருச்சக்கரமாற்று

### பண் - காந்தாரம்*

திருச்சிற்றம்பலம்

**வி**ளங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம் புகலிவெங் குருமேற் சோலை, வளங்கவருந் தோணிபுரம் பூந்தராய் சிரபுரம்வண் புற வமண்மேல், களங்கமிலூர்[1] சண்பைகமழ் காழிவயங் கொச்சைகழு மலமென்றின்ன, இளங்குமரன்[2] றன்னைப்பெற் றிமையவர்தம் பகையெறிவித் திறைவனூரே. 1

திருவளருங் கழுமலமே கொச்சை தேவேந்திரனூர் அயனூர் தெய்வத், தருவளரும் பொழிற்புறவஞ் சிலம்பனூர் காழிதகு சண்பை யொண்பா, வுருவளர்வெங் குருப்புகலி யோங்குதராய் தோணிபுரம் உயர்ந்ததேவர், வெருவவளர் கடல்விடம துண்டணி கொள் கண்டத்தோன் விரும்புமூரே. 2

வாய்ந்தபுகழ் மறைவளருந் தோணிபுரம் பூந்தராய் சிலம்பன் வாழூர், ஏய்ந்தபுற வந்திகழுஞ் சண்பையெழிற் காழியிறை கொச்சையம்பொன், வேய்ந்தமதிற் கழுமலம்விண் ணோர்பணிய மிக்கயனூர் அமரர்கோனூர், ஆய்ந்தகலை யார்புகலி வெங்குருவ தரன்நாளும் அமருமூரே. 3

மாமலையாள் கணவன்மகிழ் வெங்குருமாப் புகலிதராய் தோணிபுரம்வான், சேமமதில் புடைதிகழுங் கழுமலமே கொச்சை தேவேந்திரனூர்சீர்ப், பூமகனூர் பொலிவுடைய புறவம்விறற் சிலம்பனூர் காழிசண்பை, பாமருவு கலையெட்டெட் டுணர்ந்த வற்றின் பயன்நுகர்வோர் பரவுமூரே. 4

தரைத்தேவர்[3] பணிசண்பை தமிழ்க்காழி வயங்கொச்சை தயங்குபூமேல், விரைச்சேருங் கழுமலம்மெய் யுணர்ந்தயனூர்

---

*இப்பதிகம் சீகாழியில் அருளியது. [1] களங்கம் இல் ஊர் - ஆணவ மலம் நீங்கும்படி செய்யும் ஊர். [2] இளங்குமரன் - முருகன். [3] தரைத்தேவர் - பூசுரர்; அந்தணர்.

விண்ணவர்தங் கோனூர்வென்றித், திரைச்சேரும் புனற்புகலி வெங்குருச் செல்வம் பெருகு தோணிபுரஞ்சீர், உரைச்சேர்பூந் தராய்சிலம்ப னூர்புறவம் உலகத்தில் உயர்ந்தவூரே. 5

புண்டரிகத் தார்வயல்சூழ் புறவமிகு சிரபுரம்பூங் காழி சண்பை, எண்டிசையோர் இறைஞ்சியவெங் குருப்புகலி பூந்த ராய் தோணிபுரஞ்சீர், வண்டமரும் பொழில்மல்கு கழுமலம்நற் கொச்சைவா னவர்தங்கோனூர், அண்டயனூ ரிவையென்பர் அருங்கூற்றை யுதைத்துகந்த அப்பனூரே. 6

வண்மைவளர் வரத்தயனூர் வானவர்தங் கோனூர்வண் புகலியிஞ்சி, வெண்மதிசேர் வெங்குருமிக் கோரிறைஞ்சு சண்பை வியன் காழிகொச்சை, கண்மகிழுங் கழுமலங்கற் றோர்புகழுந் தோணிபுரம் பூந்தராய்சீர்ப், பண்மலியுஞ் சிரபுரம்பார் புகழ்புற வம் பால்வண்ணன் பயிலுமூரே. 7

மோடி[4]புறங் காக்குமூர் புறவஞ்சீர்ச் சிலம்பனூர் காழி மூதூர், நீடியலுஞ் சண்பைகழு மலங்கொச்சை வேணுபுரங் கமல நீடு, கூடியவ னூர்[5]வளர்வெங் குருப்புகலி தராய்தோணி புரங் கூடப்போர், தேடியுழல் அவுணர்பயில் திரிபுரங்கள் செற்றமலைச் சிலையனூரே. 8

இரக்கமுடை யிறையவனூர் தோணிபுரம் பூந்தராய் சிலம் பன்தன்னூர், நிரக்கவரு புனற்புறவம் நின்றதவத் தயனூர்சீர்த் தேவர்கோனூர், வரக்கரவாப் புகலிவெங் குருமாசி லாச்சண்பை காழிகொச்சை, அரக்கன்விறல் அழித்தருளி கழுமலமந் தணர் வேத மறுதவூரே. 9

மேலோதுங் கழுமலமெய்த் தவம்வளருங் கொச்சையிந் திரனூர் மெய்ம்மை, நூலோ[6]தும் அயன்றனூர் நுண்ணறிவார் குருப்புகலி தராய்தூநீர்மேல், சேலோடு தோணிபுரந் திகழ்புறவஞ் சிலம்பனூர் செருச்செய்தன்று, மாலோடும் அயனறியான் வண் காழி சண்பை மண்ணோர் வாழ்த்துமூரே. 10

ஆக்கமர்சீ ரூர்சண்பை காழியமர் கொச்சைகழு மலமன் பானூர், ஓக்கமுடைத் தோணிபுரம் பூந்தராய் சிரபுரமொண்

---

[4] மோடி - காளி. [5] கூடியயனூர் என்றும் பாடம். [6] மெய்ம்மை நூல் - வேதம்.

புறவநண்பார், பூக்கமலத் தோன்மகிழூர் புரந்தரனூர் புகலிவெங் குருவுமென்பர், சாக்கியரோ டமண்கையர் தாமறியா வகை நின்றான் தங்குமூரே. 11

அக்கரஞ்சேர் தருமனூர் புகலிதராய் தோணிபுரம் அணிநீர்ப் பொய்கை, புக்கரஞ்சேர் புறவஞ்சீர்ச் சிலம்பனூர் புகழ்க்காழி சண்பை தொல்லூர், மிக்கரஞ்சீர்க் கழுமலமே கொச்சைவயம் வேணுபுரம் அயனூர்மேலிச், சக்கரஞ்[7]சீர்த் தமிழ்விரகன் தான் சொன்ன தமிழ்தரிப்போர்[8] தவஞ்செய்தோரே. 12

திருச்சிற்றம்பலம்

---

## திருக்கோமூத்திரி*

பண் - காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

**பூ**மகனூர் புத்தேளுக் கிறைவனூர் குறைவிலாப் புகலிபூமேல், மாமகளூர் வெங்குருநல் தோணிபுரம் பூந்தராய் வாய்ந்தஇஞ்சிச், சேமமிகு சிரபுரஞ்சீர்ப் புறவநிறை புகழ்ச்சண்பை காழிகொச் சை, காமனைமுன் காய்ந்தநுதற் கண்ணவனூர் கழுமலநாங் கருதுமூரே. 1

கருத்துடைய மறையவர்சேர் கழுமலம்மெய்த் தோணிபுரங் கனகமாட, உருத்திகழ்வெங் குருப்புகலி யோங்குதரா யுலகாருங் கொச்சைகாழி, திருத்திகழுஞ் சிரபுரந்தே வேந்திரனூர் செங்க மலத் தயனூர்தெய்வத், தருத்திகழும் பொழிற்புறவஞ் சண்பை சடை முடியண்ணல் தங்குமூரே. 2

ஊர்மதியைக் கதுவவுயர் மதிற்சண்பை யொளிமருவு காழி கொச்சை, கார்மலியும் பொழில்புடைசூழ் கழுமலமெய்த் தோணி புரங் கற்றோரேத்துஞ், சீர்மருவு பூந்தராய் சிரபுரம்மெய்ப் புறவம் அயனூர் பூங்கற்பத், தார்மருவும் இந்திரனூர் புகலிவெங் குருக் கங்கை தரித்தோனூரே. 3

---

[7] சக்கரம் - பதிகஅமைதியின் பெயர். [8] தரிப்போர்-மனங்கொள் வோர். *கோமூத்திர வடிவமாக அமைக்கப்பட்ட ரேகையிலே எழுத் துக்கள் அமைத்துப் பாடப்படுவது கோமூத்திரி ஆகும். கோ—பசு. மூத்திரி — மூத்திரவடிவுடையது. இஃது ஒரு சித்திரக்கவி.

தரித்தமறை யாளர்மிகு வெங்குருச்சீர்த் தோணிபுரந் தரியா ரிஞ்சி, எரித்தவன்சேர் கழுமலமே கொச்சைபூந் தராய்புகலி யிமையோர்கோனூர், தெரித்தபுகழ்ச் சிரபுரஞ்சீர் திகழ்காழி சண்பைசெழு மறைகளெல்லாம், விரித்தபுகழ்ப் புறவம்விரைக் கமலத்தோ னூருலகில் விளங்குமூரே. 4

விளங்கயனூர் பூந்தராய் மிகுசண்பை வேணுபுரம் மேக மேய்க்கும், இளங்கமுகம் பொழில்தோணி புரங்காழி யெழிற்புகலி புறவம் ஏரார், வளங்கவரும் வயற்கொச்சை வெங்குருமாச் சிர புரம்வன் னஞ்சமுண்டு, களங்கமலி களத்தவன்[1]சீர்க் கழுமலங்கா மன்னுடலங் காய்ந்தோனூரே. 5

காய்ந்துவரு காலனையன் றுதைத்தவனூர் கழுமலமாத் தோணிபுரஞ்சீர், ஏய்ந்தவெங் குருப்புகலி யிந்திரனூர் இருங் கமலத் தயனூர் இன்பம், வாய்ந்தபுற வந்திகழுஞ் சிரபுரம்பூந் தராய்கொச்சை காழிசண்பை, சேந்தனை[2]முன் பயந்துலகில் தேவர்கள்தம் பகைகெடுத்தோன் திகழுமூரே. 6

திகழ்மாட மலிசண்பை பூந்தராய் பிரமனூர் காழிதேசார், மிகுதோணி புரந்திகழும் வேணுபுரம் வயக்கொச்சை புறவம்விண் ணோர், புகழ்புகலி கழுமலஞ்சீர்ச் சிரபுரம்வெங் குருவெம்போர் மகிடற்[3]செற்று, நிகழ்நீலி நின்மலன்றன் அடியிணைகள் பணிந் துலகில் நின்றவூரே. 7

நின்றமதில் சூழ்தருவெங் குருத்தோணி புரநிகழும் வேணு மன்றில், ஒன்றுகழு மலங்கொச்சை உயர்காழி சண்பைவளர் புறவமோடி, சென்றுபுறங் காக்குமூர் சிரபுரம்பூந் தராய்புகலி தேவர்கோனூர், வென்றிமலி பிரமபுரம் பூதங்கள் தாங்காக்க மிக்கவூரே. 8

மிக்ககம லத்தயனூர் விளங்குபுற வஞ்சண்பை காழிகொச் சை, தொக்கபொழிற் கழுமலந்தூத் தோணிபுரம் பூந்தராய் சிலம் பன்சேரூர், மைக்கொள்பொழில் வேணுபுரம் மதிற்புகலி வெங் குருவல் அரக்கன் திண்தோள், ஒக்கஇரு பதுமுடிகள் ஒருபதுமீ டழித்துகந்த எம்மானூரே. 9

---

[1] களங்கமலி களத்தவன்-நீலகண்டன். [2] சேந்தன்—முருகன். [3] மகிடன் — ஓரசுரன்.

எம்மான்சேர் வெங்குருச்சீர்ச் சிலம்பனூர் கழுமலநற் புகலி யென்றும், பொய்ம்மாண்பி லோர்புறவங் கொச்சைபுரந் தரானூர் நல் தோணிபுரம்போர்க், கைம்மாவை யுரிசெய்தோன் காழியய னூர்தராய் சண்பைகாரின், மெய்ம்மால்பூ மகனுணரா வகைதழ லாய் விளங்கியஎம் இறைவனாரே. 10

இறைவனமர் சண்பையெழிற் புறவம்அய னூர்இமையோர்க் கதிபன்சேரூர், குறைவில்புகழ்ப் புகலிவெங் குருத்தோணி புரங் குணமார் பூந்தராய்நீர்ச், சிறைமலிநற் சிரபுரஞ்சீர்க் காழிவளர் கொச்சைகழு மலந்தேசின்றிப், பறிதலையோ டமண்கையர் சாக் கியர்கள் பரிசறியா அம்மானாரே. 11

அம்மான்சேர் கழுமலமாச் சிரபுரம்வெங் குருக்கொச்சை புறவமஞ்சீர், மெய்ம்மானத் தொண்புகலி மிகுகாழி தோணிபுரந் தேவர்கோனூர், அம்மான்மன் னுயர்சண்பை தராய்அய்னூர் வழிமுடக்கு மாவின்பாச்சல், தம்மானென் றியஞான சம்பந்தன் தமிழ்கற்போர் தக்கோர்தாமே.[4] 12

திருச்சிற்றம்பலம்

---

## வழிமொழி*த்திருவிராகம்

### பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சுரருலகு நரர்கள்பயில் தரணிதலம் முரணழிய அரணமதில் முப், புரமெரிய விரவுவகை சரவிசை[1]கொள் கரமுடைய பரம னிடமாம், வரமருள வரன்முறையி னிரைநிறைகொள் வருசுருதி சிரவுரையினாற், பிரமனுயர் அரனெழில்கொள் சரணவிணை பரவ வளர் பிரமபுரமே. 1

தாணுமிகு வாணிசைகொள்[2] தாணுவியர் பேணுமது காணுமளவிற், கோணுநுதல் நீள்நயனி கோணில்பிடி மாணிமது

---

[4] இங்கு அமைந்த பன்னிரண்டு பாடலும் அந்தாதித்தொடை பெற்று வந்துள்ளன. * சீகாழிப் பன்னிரு பெயர்களும் வந்த வரலாற்றினை அவ்வழியே மொழிதலின், 'வழி மொழி' எனப் பெயர் பெற்றது. இராகம்-முடுகிய சந்தம். [1] சரவிசை - சரத்தின் விசை; சரத்தின் இசையுமாம். [2] வாணிசைக என்றும் பாடம்.

காணும்வகையே, ஏனுகரி பூணழிய வாணியல்கொள் மாணிபதி சேணமரர்கோன், வேணு[4] வினை யேணிநகர் காணிறிவி காணநடு வேணுபுரமே. 2

பகலொளிசெய் நகமணியை முகைமலரை நிகழ்சரண வகவு முனிவர்க், ககலமலி சகலகலை மிகவுரைசெய் முகமுடைய பகவனிடமாம், பகைகளையும் வகையில்அறு முகஇறையை[5] மிக அருள நிகரிலிமையோர், புகவுலகு புகழஎழில் திகழநிக ழலர் பெருகு புகலிநகரே. 3

அங்கண்மதி கங்கைநதி வெங்கண்அர வங்களெழில் தங்கு மிதழித், துங்கமலர் தங்குசடை யங்கிநிகர் எங்களிறை தங்கு மிடமாம், வெங்கதிர்வி ளங்குலகம் எங்குமெதிர் பொங்கெரிபு லன்கள்களைவோர், வெங்குருவி ளங்கியுமை பங்கர்சர ணங்கள் பணி வெங்குருவதே. 4

ஆணியல்பு காணவன வாணவியல் பேணியெதிர் பாண மழைசேர், தூணியற நாணியற வேணுசிலை பேணியற நாணி விசயன், பாணியமர் பூணவருள் மாணுபிர மாணி[6] யிட மேணி முறையிற், பாணி[7] யுல காளமிக வாணின்மலி தோணிநிகர் தோணிபுரமே. 5

நிராமய பராபர புராதன பராவுசிவ ராகவருளென், றிரா வுமெ திராயது பராநினை புராணனம ராதிபதியாம், அராமிசை யிராதெழில் தராயர பராயண[8] வராகவுருவா, தராயனை[9] விரா யெரி பராய்மிகு தராய்மொழி விராயபதியே. 6

அரனையுறு முரணர்பலர் மரணம்வர விரணமதி லரமலி படைக், கரம்விசிறு விரகனமர் கரணனுயர் பரனெறிகொள் கரனதிடமாம், பரவமுது விரவவிடல் புரளமுறு மரவையரி சிர மரியவச், சிரமரன சரணமவை பரவவிரு கிரகமமர் சிரபுரமதே.

அறமழிவு பெறவுலகு தெறுபுயவன் விறலழிய நிறுவி விரன்மா, மறையின்ஒலி முறைமுரல்செய் பிறையெயிற னுற

---

[4] வேணு - மூங்கில். [5] அறுமுக இறை - சண்முகக் கடவுள். [6] வருணமாணி பிரமாணி என்றும் பாடம். பிரமாணி - இலக்கியமாக உள்ளவர். [7] பாணி - நீர்ப்பெருக்கு. [8] அர பராயண - சிவனைத் தியானிக்கின்ற. [9] வாதராயனை - திருமாலை.

அருளும் இறைவனிடமாங், குறைவின்மிக நிறைதையுழி மறை யமரர் நிறையருள முறையொடுவரும், புறவனெதிர் நிறைநிலவு பொறையனுடல் பெறவருளு புறவமதுவே. 8

விண்பயில மண்பகிரி வண்பிரமன் எண்பெரிய பண்படை கொண்மால், கண்பரியு மொண்பொ[10]ழிய நுண்பொருள்கள் தண்புகழ்கொள் கண்டனிடமாம், மண்பரியு மொண்பொழிய நுண்புசகர் புண்பயில விண்படரவச், சண்பைமொழி பண்ப முனி கண்பழிசெய் பண்புகளை சண்பைநகரே. 9

பாழி[11]யுறை வேழநிகர் பாழமணர் சூழுமுட லாளரு ணரா, ஏழினிசை யாழின்மொழி யேழையவள் வாழுமிறை தாழுமிடமாங், கீழிசைகொள் மேலுலகில் வாழரசு சூழரசு வாழ வரனுக், காழியசில் காழிசெய வேழுலகில் ஊழிவளர் காழி நகரே. 10

நச்சரவு கச்செனவ சைச்சுமதி யுச்சியின்மி லேச்சொரு கையான், மெய்ச்சிர மணைச்சுலகி னிச்சமிடு பிச்சையமர் பிச்ச னிடமாம், மச்சமத நச்சிமத மச்சிறுமி[12]யைச்செய்தவ வச்ச விரதக், கொச்சைமுர வச்சர்பணி யச்சுரர்கள் நச்சிமிடை கொச்சைநகரே. 11

ஒழுகலரி தழிகலியில் உழியுலகு பழிபெருகு வழியை நினையா, முழுதுடலில் எழுமயிர்கள் தழுவுமுனி குழுவினொடு கெழுவுசிவனைத், தொழுதுலகில் இழுகுமலம் அழியும்வகை கழுவு முரை கழுமலநகர்ப், பழுதிலிறை யெழுதுமொழி தமிழ்விரகன் வழிமொழிகள்[13] மொழிதகையவே. 12

திருச்சிற்றம்பலம்

---

ஈரடி* பண்-பழம்பஞ்சுரம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வரமதேகொளா உரமதேசெயும் புரமெரித்தவன் பிரமநற் புரத், தரன்நல்நாமமே பரவுவார்கள்சீர் விரவுநீள் புவியே. 1

---

10 ஒண்பு - ஊக்கம். 11 பாழி - சமண குருமார் தங்கு மிடம். 12 சிறுமி என்றது - மச்சகந்தியை. 13 வழிமொழிகள் - பெயர் வந்த வழியைச் சொல்லும் பாட்டுக்கள்; பதிகப் பெயர்.

* ஈரடி—இரண்டடிகளால் இயன்ற பாட்டுக்கள் கொண்ட பதிகம்.

சேணுலாமதில் வேணுமண்ணுளோர் காணமன்றலார் வேணு[1]நற்புரத், தாணுவின்கழல் பேணுகின்றவ ராணி[2]யொத் தவரே. 2

அகலமார்தரைப்[3] புகலும்நான்மறைக் கிகலியோர்கள்வாழ் புகலிமாநகர்ப், பகல்செய்வோனெதிர்ச் சகலசேகரன் அகிலநா யகனே. 3

துங்கமாகரி பங்கமாவடுஞ் செங்கையானிகழ் வெங்குருத்தி கழ், அங்கணன்அடி தங்கையால் தொழத் தங்குமோ வினையே. 4

காணியொண்பொருட் கற்றவர்க்கீகை யுடைமையோரவர் காதல்செய்யுநற், றோணிவண்புரத் தாணியென்பவர் தூமதி யினரே. 5

ஏந்தராவெதிர்வாய்ந்த நுண்ணிடைப்பூந் தணோதியாள் சேர்ந்தபங்கினன், பூந்தராய்தொழும் மாந்தர்மேனிமேற் சேர்ந் திரா வினையே. 6

சுரபுரத்[4]தினைத் துயர்செய்தாரகன்[5] துஞ்சவெஞ்சினக்காளி யைத்தருஞ், சிரபுரத்துளா னென்னவல்லவர் சித்திபெற் றவரே. 7

உறவுமாகியற் றவர்களுக்குமா நெதிகொடுத்துநீள் புவியி லங்கு சீர்ப், புறவமாநகர்க் கிறைவனேயெனத் தெறகிலா வினையே. 8

பண்புசேரிலங் கைக்குநாதனன் முடிகள்பத்தையுங் கெட நெரித்தவன், சண்பையாதியைத் தொழுமவர்களைச் சாதியா வினையே. 9

ஆழியங்கையிற் கொண்டமாலயன் அறிவொணாததோர் வடிவுகொண்டவன், காழிமாநகர்க் கடவுள்நாமமே கற்றல்நற் றவமே. 10

விச்சை[6]யொன்றிலாச் சமணர்சாக்கியப் பிச்சர்[7]தங்களைக் கரிசறுத்தவன், கொச்சைமாநகர்க் கன்புசெய்பவர் குணங்கள் கூறுமினே. 11

---

[1] மன்றிலார்வேணு என்றும் பாடம். [2] பேணிநின்றவராணி என்றும் பாடம். [3] அகலமாதரைப் என்றும் பாடம். [4] சுரபுரம் — தேவலோகம். [5] தாரகன் - ஓரசுரன். [6] விச்சை - அறிவு. [7] பிச்சர்—பித்தர்.

கழுமலத்தினுட் கடவுள்பாதமே கருதுஞானசம் பந்தனின் தமிழ், முழுதும்வல்லவர்க் கின்பமேதரும் முக்கண்எம் மிறையே. 12

திருச்சிற்றம்பலம்

---

## திருவியமகம்* பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

உற்றுமை சேர்வது மெய்யினையே உணர்வது நின்னருள் மெய்யினையே, கற்றவர் காய்வது காமனையே கனல்விழி காய்வது காமனையே, அற்றம்[1] மறைப்பதும் உன்பணியே அமரர்கள் செய்வதும் உன்பணியே, பெற்றும் உகந்தது கந்தனையே பிரமபுரத்தை உகந்தனையே. 1

சதிமிக வந்த சலந்தரனே[2] தடிசிர நேர்கொள் சலந்தரனே, அதிரொளி சேர்திகி ரிப்படையால் அமர்ந்தனர் உம்பர்துதிப் படையால், மதிதவழ் வெற்பது கைச்சிலையே மருவிட மேற்பது கைச்சிலையே, விதியினி லிட்டவி ரும்பரனே வேணு புரத்தைவி ரும்பரனே. 2

காதம ரத்திகழ் தோடினனே கானவ னாய்க்கடி தோடினனே, பாதம தாற்கூற் றுதைத்தனனே பார்த்தன் உடலம் புதைத்தனனே, தாதவிழ் கொன்றை தரித்தனனே சார்ந்தவி னையத ரித்தனனே, போதம் அமரும் உரைப்பொருளே புகலிய மர்ந்த பரம்பொருளே. 3

மைத்திகழ் நஞ்சுமிழ் மாசுணமே மகிழ்ந்தரை சேர்வது மாசுணமே, மெய்த்துடல் பூசுவர் மேன்மதியே வேதம தோதுவர் மேன்மதியே, பொய்த்தலை யோடுறு மத்தமதே புரிசடை வைத்தது மத்தம்[3]தே, வித்தக ராகிய வெங்குருவே விரும்பிய மர்ந்தனர் வெங்குருவே. 4

உடன்பயில் கின்றனன் மாதவனே யுறுபொறி காய்ந்திசை மாதவனே, திடம்பட மாமறை கண்டனனே திரிகுண மேவிய

---

* இயமகம் - அடிதோறும் சீர்கள் மீண்டும் மடங்கி வருதல். மடக்கு - தமிழ்ப் பெயர். இயமகம்-வடமொழி. [1] அற்றம்—குற்றம். [2] சலந்தரன்—ஓரசுரன். [3] மத்தம்—ஊமத்தை.

கண்டனனே, படங்கொள் அரவரை செய்தனனே பகடுரி[1] கொண் டரை செய்தனனே, தொடர்ந்த துயர்க்கொரு நஞ்சிவனே தோணிபு ரத்துறை நஞ்சிவனே. 5

திகழ்கைய தும்புகை தங்கழலே தேவர் தொழுவதுந் தங் கழலே, இகழ்பவர் தாமொரு மானிடமே யிருந்தனு வோடெழில் மானிடமே, மிகவரு நீர்கொளு மஞ்சடையே மின்னிகர் கின்றது மஞ்சடையே, தகவிர தங்கொள்வர்[2] சுந்தரரே தக்க ராயுறை சுந்தரரே. 6

ஓர்வரு கண்கள் இணைக்கயலே உமையவள் கண்கள் இணைக் கயலே, ஏர்மரு வுங்கழ லநகமதே யெழில்கொளு தாசன லநக மதே, நீர்வருகொந்தள கங்கையதே நெடுஞ்சடை மேவிய கங்கை யதே, சேர்வரு யோகதி யம்பகனே சிரபுர மேயதி யம்பகனே. 7

ஈண்டு துயிலம ரப்பினனே யிருங்கணி டந்தடி யப்பினனே, தீண்டல ரும்பரி சக்கரமே திகழ்ந்தொளி சேர்வது சக்கரமே, வேண்டிவ ருந்தந கைத்தலையே மிகைத்தவ ரோடுந கைத்தலையே, பூண்டனர் சேரலு மாபதியே புறவம் அமர்ந்தவு மாபதியே. 8

நின்மணி வாயது நீழலையே நேசம தானவர் நீழலையே, உன் னிம னத்தெழு சங்கமதே யொளியத னோடுறு சங்கமதே, கன்னிய ரைக்கவ ருங்களனே கடல்விட முண்டக ருங்களனே, மன்னிவ ரைப்பதி சண்பையதே வாரிவ யன்மலி சண்பையதே. 9

இலங்கை யரக்கர் தமக்கிறையே யிடந்துகயிலை யெடுக் கிறையே, புலன்கள் கெடவுடன் பாடினனே பொறிகள் கெட வுடன் பாடினனே, இலங்கியமேனி யிராவணனே[3] யெய்துபெய ரும் இராவணனே, கலந்தருள் பெற்றது மாவசியே காழி யரனடி மாவசியே. 10

கண்ணிகழ் புண்டரி கத்தினனே கலந்திரி புண்டரி கத்தி னனே, மண்ணிக ழும்பரி சேனமதே வானக மேய்வகை சேன மதே, நண்ணி யடிமுடி யெய்தலரே நளிர்மலி சோலையில் எய் தலரே, பண்ணியல் கொச்சை பசுபதியே பசு[4]மிக வூர்வர் பசுபதியே. 11

---

[1] பகடு உரி - யானைத் தோல். [2] கொள்வா என்றும் பாடம். [3] இராவ(ண்)ணனே - கருநிறமுடையவனே. [4] பசு - இங்கு எருது.

பருமதில் மதுரைமன் அவை[5]யெதிரே பதிகம தெழுதிலை யவையெதிரே, வருநதி யிடையிசை வருகரனே வசையொடு மலர்கெட வருகரனே, கருதலில் இசைமுரல் தருமருளே கழுமலம் அமரிறை தருமருளே, மருவிய தமிழ்விர சனமொழியே வல்லவர் தம்மிடர் திடமொழியே. 12

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பிரமபுரீசுவரர், தோணியப்பர்; தேவி—திருநிலைநாயகி.

---

## 15. திருக்கோலக்கா*

பண் - தக்கராகம்** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக்[1] கோலக் காவுளான்
சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீழ்
உடையுங் கொண்ட வுருவ மென்கொலோ. 1

பெண்டான் பாக மாகப் பிறைச்சென்னி
கொண்டான் கோலக் காவு கோயிலாக்
கண்டான் பாதங் கையாற் கூப்பவே
உண்டான் நஞ்சை உலக முய்யவே. 2

பூணற் பொறிகொள் அரவம் புன்சடை
கோணற் பிறையன் குழகன் கோலக்கா
மாணப் பாடி மறைவல் லானையே
பேணப் பறையும் பிணிக ளானவே. 3

தழுக்கொள் பாவந் தளர வேண்டுவீர்
மழுக்கொள் செல்வன் மறிசே ரங்கையான்
குழுக்கொள் பூதப் படையான் கோலக்கா
இழுக்கா வண்ணம் ஏத்தி வாழ்மினே. 4

---

[5] மதுரை மன் அவை—கூன்பாண்டியன் சபை. * 'திருத்தாளமுடையார் கோயில்' என வழங்கப்படும். ** இப்பதிகத்தினைக் கையினால் தாளமொத்தறுத்துப் பாடுதல் கண்ட இறைவன் கருணைகூர்ந்து அஞ்செழுத்து எழுதிய செம்பொற்றாளம் அருளினர் என்பது வரலாறு. [1] இவ்வடிகள் நீர்ச் சிறப்பினை உணர்த்தும்.

மயிலார் சாயல் மாதோர் பாகமா
எயிலார் சாய எரித்த [2] எந்தைதன்
குயிலார் சோலைக் கோலக் காவையே
பயிலா நிற்கப் பறையும் பாவமே. 5

வெடிகொள் [3] வினையை வீட்ட வேண்டுவீர்
கடிகொள் கொன்றை கலந்த சென்னியான்
கொடிகொள் விழவார் கோலக் காவுளெம்
அடிகள் பாதம் அடைந்து வாழ்மினே. 6

நிழலார் சோலை நீல வண்டினங்
குழலார் பண்செய் கோலக் காவுளான்
கழலால் மொய்த்த பாதங் கைகளால்
தொழலார் [4] பக்கல் துயர மில்லையே. 7

எறியார் கடல்சூழ் இலங்கைக் கோன்றனை
முறியார் தடக்கை யடர்த்த மூர்த்திதன்
குறியார் பண்செய் கோலக் காவையே
நெறியால் தொழுவார் வினைகள் நீங்குமே. 8

நாற்ற மலர்மேல் அயனும் நாகத்தில்
ஆற்ற லணைமே லவனுங் காண்கிலாக்
கூற்ற முதைத்த குழகன் கோலக்கா
ஏற்றான் பாதம் ஏத்தி வாழ்மினே. 9

பெற்ற மாசு பிறக்குஞ் சமணரும்
உற்ற துவர்தோ யுருவி லாளருங்
குற்ற நெறியார் கொள்ளார் கோலக்காப்
பற்றிப் பரவப் பறையும் பாவமே. 10

நலங்கொள் காழி ஞானசம் பந்தன்
குலங்கொள் கோலக் காவு ளானையே
வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்
உலங் [5] கொள் வினைபோய் ஓங்கி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சத்தபுரீசுவரர்; தேவி—ஓசைகொடுத்த நாயகி.

---

[2] எயிலார் புரமூன்றெரித்த என்றும் பாடம். [3] வெடிகொள் - நாசம் செய்யும். [4] தொழலார் - தொழுபவர். [5] உலம் - திண்மை.

## 16. திருப்புள்ளிருக்குவேளூர்*

பண் - சீகாமரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடிஎம் பெருமானார் உறையுமிடம்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனி[1] டம் புள்ளிருக்கு வேளூரே. 1

தையலாள்[2] ஒருபாகஞ் சடைமேலாள் அவளோடும்
ஐயந்தேர்ந் துழல்வாரோர் அந்தணனார் உறையுமிடம்
மெய்சொல்லா இராவணனை மேலோடி யீடழித்துப்
பொய்சொல்லா துயிர்போனான்[3] புள்ளிருக்கு வேளூரே. 2

வாசநலஞ் செய்திமையோர் நாடோறும் மலர்தூவ
ஈசனெம் பெருமானார் இனிதாக உறையுமிடம்
யோசனைபோய்ப் பூக்கொணர்ந்தங் கொருநாளும் ஒழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே. 3

மாகாயம் பெரியதொரு மானுரிதோ லுடையாடை
ஏகாய மி[4] ட்டுகந்த எரியாடி உறையுமிடம்
ஆகாயந் தேரோடும் இராவணனை அமரின்கண்
போகாமே பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 4

கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்
வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான்[5] புள்ளிருக்கு வேளூரே. 5

திறங்கொண்ட அடியார்மேல் தீவினைநோய் வாராமே
அறங்கொண்டு சிவதன்மம் உரைத்தபிரான் அமருமிடம்

---

*திருப்புள்ளிருக்கு வேளூர் - வைத்தீசுவரன் கோயில். புள்—சடாயு, சம்பாதி; இருக்கு - வேதம்; வேள் - முருகக் கடவுள்; ஊர் - சூரியன்; இவர்கள் பூசித்த தலம் என்பது பொருள். **இப்பதிகம் சம்பாதி, சடாயு முதலாயினோர் பூசையைச் சிறப்பித்துக் கூறுவது. [1] அரையன் - தலைவன். [2] தையலாள் - தல அம்மையின் பெயர். [3] இவ்வடிகள் சடாயு இராவணனோடு எதிர்த்து உயிர் இழந்த வரலாற்றைக் குறிக்கும். [4] ஏகாயம் - ஏகாசம் - மேலாடை. [5] இவ்வடிகள் சடாயுபூசித்தமையைக் குறிக்கும்.

மறங்கொண்டங் கிராவணன்றன் வலிகருதி வந்தானைப்
புறங்கண்ட சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. 6

அத்தியின்ஈ ருரிமூடி அழகாக அனலேந்திப்
பித்தரைப்போற் பலிதிரியும் பெருமானார் பேணுமிடம்
பத்தியினால் வழிபட்டுப் பலகாலந் தவஞ்செய்து
புத்தியொன்ற வைத்துகந்தான்[6] புள்ளிருக்கு வேளூரே. 7

பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன் மருவுமிடம்
எண்ணின்றி முக்கோடி வாணா ளுடையானைப்[7]
புண்ணொன்றப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 8

வேதித்தார் புரமூன்றும் வெங்கணையால் வெந்தவியச்
சாதித்த வில்லாளி கண்ணாளன் சாருமிடம்
ஆதித்தன் மகனென்ன அகன்ஞாலத் தவரோடும்
போதித்த சடாயென்பான்[8] புள்ளிருக்கு வேளூரே. 9

கடுத்துவருங் கங்கைதனைக் கமழ்சடையொன் றூடாமே
தடுத்தவரெம் பெருமானார் தாமினிதா யுறையுமிடம்
விடைத்துவரும் இலங்கைக்கோன் மலங்கச்சென் றிராமற்காய்ப்
புடைத்தவனைப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 10

செடியாய வுடல்தீர்ப்பான் தீவினைக்கோர் மருந்தாவான்[9]
பொடியாடிக் கடிமைசெய்த புள்ளிருக்கு வேளூரைக்
கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன்சம் பந்தன்சொல்
மடியாது[10] சொல்லவல்லார்க் கில்லையாம் மறுபிறப்பே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வைத்தியநாதர்; தேவி—தையநாயகி.

---

[6]புத்தியொன்ற வைத்திருந்தான் என்றும் பாடம். [7]முக்கோடி வாணா ளுடையான் - இராவணன். வாழ்+நாள் = வாணாள். [8] ஆதித்தன் மகன்........சடாயென்பான் - சடாயு—சம்பாதி இருவரும் சூரியனுடைய மக்கள் என்பது வரலாறு. [9] இவ்வடி இத்தல இறைவன் வைத்தியநாதர் எனப்படும் பொருளை உணர்த்தும். [10] மடியாது - சோம்பல் இல்லாமல்.

## 17. திருக்கண்ணார்கோயில்*

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தண்ணார்திங்கட் பொங்கரவந்தாழ் புனல்சூடிப்
பெண்ணாணய பேரருளாளன் பிரியாத
கண்ணார்கோயில் கைதொழுவோர்கட் கிடர்பாவம்
நண்ணாவாகும் நல்வினையாய நணுகும்மே. 1

கந்தமர்சந்துங் காரகிலுந்தண் கதிர்முத்தும்
வந்தமர்தெண்ணீர் மண்ணி[1] வளஞ்சேர் வயல்மண்டிக்
கொந்தலர்சோலைக் கோகிலம்[2] ஆடக்[3] குளிர்வண்டு
செந்திசைபாடுஞ் சீர்திகழ்கண்ணார் கோயிலே. 2

பல்லியல்பாணிப் பாரிடம்ஏத்தப் படுகானின்
எல்லிநடஞ்செய் யீசனெம்மான்றன் இடமென்பர்
கொல்லையின்முல்லை மல்லிகைமௌவற்[4] கொடிபின்னிக்
கல்லியல்இஞ்சி மஞ்சமர்கண்ணார் கோயிலே. 3

தருவளர்கானந் தங்கியதுங்கப் பெருவேழம்
மருவளர்கோதை அஞ்சவுரித்து மறைநால்வர்க்
குருவளர்ஆல நீழலமர்ந்தீங்[5] குரைசெய்தார்
கருவளர்கண்ணார் கோயிலடைந்தோர் கற்றோரே. 4

மறுமாணுருவாய்[6] மற்றிணையின்றி வானோரைச்
செறுமாவலிபாற் சென்றுலகெல்லாம் அளவிட்ட
குறுமாணு[7]ருவன் தற்குறியாகக் கொண்டா[8]டும்
கறுமாகண்டன் மேயதுகண்ணார் கோயிலே. 5

விண்ணவருக்காய் வேலையுள்நஞ்சம் விருப்பாக
உண்ணவனைத்தே வர்க்கமுதீந்தெவ் வுலகிற்கும்

---

*குறுமாணக்குடி என்று வழங்கப்படுகிறது. [1] மண்ணி-மண்ணியாறு. [2] கோகிலம் - குயில். [3] கொந்தமர் சோலைக் கோகுலமாடக் என்றும் பாடம். [4] மௌவல் — ஒருவகை முல்லை. [5] நீழலறந்தீங் என்றும் பாடம். [6] மறமாணுருவாய்என்றும் பாடம். மான் - மலை. [7] மாண் - மாணி - பிரமசாரி; வாமனன். குறுமாண்உருவன் (திருமால்) பூசித்ததனால் குறுமாணக்குடி என வழங்குகிறது. [8] தற்குறியாக - சிவலிங்கக் குறியாக.

கண்ணவனைக்கண் ணார்திகழ்கோயிற் கனிதன்னை
நண்ணவல்லோர்கட் கில்லைநமன்பால் நடலையே. 6

முன்னொருகாலத் திந்திரன்உற்ற முனி[8] சாபம்
பின்னொருநாளவ் விண்ணவரேத்தப் பெயர்வெய்தித்
தன்னருளாற்கண் ஆயிரம்ஈந்தோன் சார்பென்பர்
கன்னியர்நாளுந் துன்னமர்கண்ணார் கோயிலே.[9] 7

பெருக்கெண்ணாத பேதையரக்கன் வரைக்கீழால்
நெருக்குண்ணாத்தன் நீள்கழல்நெஞ்சில் நினைந்தேத்த
முருக்குண்ணாதோர் மொய்கதிர்வாள்தேர் முன்ஈந்த
திருக்கண்ணார்[10] என் பார்சிவலோகஞ் சேர்வாரே. 8

செங்கமலப்போ தில்திகழ்செல்வன் திருமாலும்
அங்கமலக்கண் நோக்கரும்வண்ணத் தழலானன்
தங்கமலக்[11] கண் ணார்திகழ்கோயில்[12] தமதுள்ளம்
அங்கமலத்தோ டே[13]த்திடஅண்டத் தமர்வாரே. 9

தாறிடுபெண்ணைத் தட்டுடையாருந் தாம்உண்ணும்
சோறுடையார்சொல் தேறன்மின்வெண் ணூல்சேர்மார்பன்
ஏறுடையன்பரன் என்பணிவான்நீள் சடைமேலோர்
ஆறுடையண்ணல் சேர்வதுகண்ணார் கோயிலே. 10

காமருகண்ணார் கோயிலுளானைக் கடல்சூழ்ந்த
பூமருசோலைப் பொன்னியல்மாடப் புகலிக்கோன்
நாமருதொன்மைத் தன்மையுள்ஞான சம்பந்தன்
பாமருபாடல் பத்தும்வல்லார்மேற் பழிபோமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கண்ணாயிரநாதர்; தேவி—முருகுவளர்கோதை.

---

[8] முனி - கௌதமன். [9] இச்செய்யுள் கண்ணார்கோயில் என்ற பெயர்பெறக் காரணங் கூறியது. [10] திருக்கண்ணார்—திருக்கண்ணார் கோயில். [11] அமலம் - மலமின்மை (செய்யும்). [12] அழலானன் தங்கு அமலக் கண்ணார் திகழ் கோயில்—அழல் வடிவுகொண்ட இறைவர் தங்குமிடமாகிய. [13] உள்ளம் அம் கமலம்—இதயதாமரை. ஓடு: உருபு மயக்கம்.

## 18. திருக்கடைமுடி*

**பண் - வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

அருத்தனை அறவனை அமுதனைநீர்
விருத்தனைப் பாலனை வினவுதிரேல்
ஒருத்தனை யல்லதிங் குலகமேத்தும்
கருத்தவன் வளநகர் கடைமுடியே. 1

திரைபொரு திருமுடி திங்கள்விம்மும்
அரைபொரு புலியதள் அடிகளிடம்
திரையொடு நுரைபொரு தெண்சுனைநீர்
கரைபொரு வளநகர் கடைமுடியே. 2

ஆலிள மதியினொ டரவுகங்கை
கோலவெண் ணீற்றனைத் தொழுதிறைஞ்சி
ஏலநன் மலரொடு விரைகமழும்
காலன வளநகர் கடைமுடியே. 3

கொய்யணி நறுமலர்க் கொன்றையந்தார்
மையணி மிடறுடை மறையவனூர்
பை [1]யணி யரவொடு மான்மழுவாள்
கையணி பவன்இடங் கடைமுடியே. 4

மறையவன் உலகவன் மாயம்அவன்
பிறையவன் புனலவன் அனலும்அவன்
இறையவன் எனஉல கேத்துங்கண்டம்
கறையவன் வளநகர் கடைமுடியே. 5

படஅர வேரல்குல் பல்வளைக்கை
மடவர லாளையோர் பாகம்வைத்துக்
குடதிசை மதி [2] யது சூடுசென்னிக்
கடவுள்தன் வளநகர் கடைமுடியே. 6

பொடி [3]புல்கு மார்பினிற் புரிபுல்குநூல் [4]
அடிபுல்கு பைங்கழல் அடிகளிடம்

---

* 'கீழூர்' என்று வழங்கப்படுகிறது. [1] பை – படம். [2] குட திசை மதி – மேற்கில் மாலையில் விளங்கும் இளமதி. [3] பொடி – விபூதி. [4] புரிபுல்குநூல் – முப்புரி நூல்; பூணூல்.

கொடிபுல்கு மலரொடு குளிர்சுனைநீர்
கடிபுல்கு வளநகர் கடைமுடியே. 7

நோதல்[2] செய் தரக்கனை நோக்கழியச்
சாதல்செய் தவன்அடி சரணெனலும்
ஆதர வருள்செய்த அடிகளவர்
காதல்செய் வளநகர் கடைமுடியே. 8

அடிமுடி காண்கிலர் ஓரிருவர்
புடைபுல்கி யருளென்று போற்றிசைப்பச்
சடையிடைப் புனல்வைத்த சதுரனி[3] டம்
கடைமுடி யதன்அயல் காவிரியே. 9

மண்ணுதல் பறித்தலு மாயமிவை
எண்ணிய காலவை யின்பமல்ல
ஒண்ணுத லுமையையோர் பாகம்வைத்த
கண்ணுதல் வளநகர் கடைமுடியே. 10

பொன்திகழ் காவிரிப் பொருபுனல்சீர்
சென்றடை கடைமுடிச் சிவனடியை
நன்றுணர் ஞானசம் பந்தன்சொன்ன
இன்தமி ழிவைசொல இன்பமாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கடைமுடி நாதர்; தேவி—அபிராமிபம்மை.

---

## 19. திருநின்றியூர்

பண் - நட்டபாடை* [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சூலம்படை சுண்ணப்பொடி சாந்தஞ்சுடு நீறு
பாலம்மதி[1] பவளச்சடை முடிமேலது பண்டைக்
காலன்வலி காலினொடு போக்கிக்கடி கமழும்
நீலம்மலர்ப் பொய்கைநின்றி யூரின்நிலை யோர்க்கே. 1

---

[2] நோதல் - துன்பம். [3] சதுரன் - சதுரப்பாடுடையவன்.
* இப்பதிகத்தில் 8-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1] பாலம் மதி - பால்போன்ற மதி; இளையமதி என்றலுமாம்.

அச்சம்இலர் பாவம்இலர் கேடும்இல ரடியார்
நிச்சம்உறு நோயும்இலர் தாமுந்நின்றி யூரில்
நச்சம்மிட றுடையார்நறுங் கொன்றைநயந் தாளும்[2]
பச்சம்[3] உடை யடிகள்திருப் பாதம்பணி வாரே. 2

பறையின்னொலி சங்கின்னொலி பாங்காரவு மார
அறையும்ஒலி யெங்கும்அவை யறிவாரவர் தன்மை
நிறையும்புனல் சடைமேலுடை யடிகள்நின்றி யூரில்
உறையும்இறை யல்லதென துள்ளம் உணராதே. 3

பூண்டவ்வரை மார்பிற்புரி நூலன்விரி கொன்றை
ஈண்டவ்வத னோடும்ஒரு பாலம்மதி யதனைத்
தீண்டும்பொழில் சூழ்ந்ததிரு நின்றியது தன்னில்
ஆண்டகழல் தொழிலல்லது[4] அறியாரவ ரறிவே. 4

குழலின்னிசை வண்டின்னிசை கண்டுகுயில் கூவும்
நிழலின்எழில் தாழ்ந்தபொழில் சூழ்ந்தநின்றி யூரில்
அழலின்வலன் அங்கையது ஏந்தியன லாடும்
கழலின்ஒலி யாடும்புரி கடவுள்களை கண்ணே. 5

மூரன்முறு வல்வெண்ணகை யுடையாளொரு பாகம்
சாரன்மதி யதனோடுடன் சலவஞ்[5] சடை வைத்த
வீரன்மலி யழகார்பொழில் மிடையுந்திரு நின்றி
ஊரன்கழ லல்லாதென துள்ளம்உண ராதே. 6

பற்றியொரு தலைகையினில் ஏந்திப்பலி தேரும்
பெற்றியது வாகித்திரி தேவர்பெரு மானார்
சுற்றியொரு வேங்கையத ளோடும்பிறை சூடும்
நெற்றியொரு கண்ணார்நின்றி யூரின்நிலை யாரே. 7 - 8

நல்லம்மலர் மேலானொடு ஞாலம்அது வுண்டான்
அல்லரென ஆவரென நின்றும்அறி வரிய
நெல்லின்பொழில் சூழ்ந்தநின்றி யூரில்நிலை யாரெம்
செல்வரடி யல்லாதென சிந்தையுண ராதே. 9

நெறியில்வரு பேராவகை நினையாநினை வொன்றை
அறிவில்சமண் ஆத[6] ருரை கேட்டும்அய ராதே

[2] நயந்தாளும் என்றும் பாடம். [3] பச்சம் - உருக்கம். [4] தொழலல்லது என்றும் பாடம். [5] சலவம் - கங்கை. [6] ஆதர் — கீழ்கள்.

நெறியில்லவர் குறிகள்நினை யாதேநின்றி யூரில்
மறியேந்திய கையானடி வாழ்த்தும்அது வாழ்த்தே. 10

குன்றம்அது எடுத்தானுடல் தோளும்நெரி வாக
நின்றங்கொரு விரலாலுற வைத்தான்நின்றி யூரை
நன்றார்தரு புகலித்தமிழ் ஞானம்மிகு பந்தன்
குன்றாத்தமிழ் சொல்லக்குறை வின்றிநிறை புகழே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மகாலட்சுமீசுவரர்; தேவி—உலகநாயகி.

---

## 20. திருப்புன்கூர்

பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முந்தி நின்ற வினைக ளவைபோகச்
சிந்தி நெஞ்சே சிவனார் திருப்புன்கூர்
அந்தம் இல்லா அடிகள் அவர்போலும்
கந்த [1] மல்கு கமழ்புன் சடையாரே. 1

மூவ ராய முதல்வர் [2] முறையாலே
தேவ ரெல்லாம் வணங்குந் திருப்புன்கூர்
ஆவ ரென்னும் அடிகள் அவர்போலும்
ஏவின் அல்லார் எயில்மூன் றெரித்தாரே. 2

பங்க யங்கள் மலரும் பழனத்துச்
செங்க யல்கள் திளைக்குந் திருப்புன்கூர்க்
கங்கை தங்கு சடையா ரவர்போலும்
எங்கள் உச்சி [3] உறையும் மிறையாரே. 3

கரையு லாவு கதிர்மா மணிமுத்தம்
திரையு லாவு வயல்சூழ் திருப்புன்கூர்
உரையின் நல்ல பெருமா னவர்போலும்
விரையின் நல்ல மலர்ச்சே வடியாரே. 4

---

1 கந்தம் - வாசனை. 2 மூவராய முதல்வர் - அயன், அரி, அரன் என்னும் மூவரையும் அதிட்டித்து நிற்கும் முதல்வனார். 3 உச்சி - துவாத சாந்தத் தாமரை.

பவள வண்ணப் பரிசார் திருமேனி
திகழும் வண்ணம் உறையுந் திருப்புன்கூர்
அழக ரென்னும் அடிகள் அவர்போலும்
புகழ நின்ற புரிபுன் சடையாரே. 5

தெரிந்தி லங்கு கழுநீர் வயற்செந்நெல்
திருந்த நின்ற வயல்சூழ் திருப்புன்கூர்ப்
பொருந்தி நின்ற அடிகள் அவர்போலும்
விரிந்தி லங்கு சடைவெண் பிறையாரே. 6

பாரும் விண்ணும் பரவித் தொழுதேத்தும்
தேர்கொள் வீதி விழவார் திருப்புன்கூர்
ஆர நின்ற அடிகள் அவர்போலும்
கூர நின்ற எயில்மூன் றெரித்தாரே. 7

மலைய தனா ரு[4] டைய மதில்மூன்றும்
சிலைய தனா லெரித்தார் திருப்புன்கூர்த்
தலைவர் வல்ல அரக்கன் தருக்கினை
மலைய தனா லடர்த்து மகிழ்ந்தாரே. 8

நாட வல்ல மலரான் மாலுமாய்த்
தேட நின்றா ருறையுந் திருப்புன்கூர்
ஆட வல்ல அடிகள் அவர்போலும்
பாட லாடல்[5] பயிலும் பரமரே. 9

குண்டு முற்றிக் கூறை யின்றியே
பிண்ட மு[6] ண்ணும் பிராந்தர்[7] சொற்கொளேல்
வண்டு பாட மலரார் திருப்புன்கூர்க்
கண்டு தொழுமின் கபாலி வேடமே. 10

மாட மல்கு மதில்சூழ் காழிமன்
சேடர் செல்வ ருறையுந் திருப்புன்கூர்
நாட வல்ல ஞான சம்பந்தன்
பாடல் பத்தும் பரவி வாழ்மினே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சிவலோகநாதர்; தேவி—சொக்கநாயகி.

---

[4] மலையதன்(ன்)னார்-மலைபோன்றார். [5] ஆடல்-ஐந்தொழிற் கூத்து.
[6] பிண்டம் - சோற்றுக் கவளம். [7] பிராந்தர் - மயக்கஅறிவினர்.

## 21. திருஅன்னியூர்

திருவிருக்குக்குறள். பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மன்னி யூரிறை,[1] சென்னி யார்பிறை
அன்னி யூரமர், மன்னு சோதியே. 1

பழகுந் தொண்டர்வம்,[2] அழகன் அன்னியூர்க்
குழகன் சேவடி, தொழுது வாழ்மினே. 2

நீதி பேணுவீர், ஆதி அன்னியூர்ச்
சோதி நாமமே, ஓதி உய்ம்மினே. 3

பத்த ராயினீர், அத்தர் அன்னியூர்ச்
சித்தர்[3] தாள்தொழ, முத்த ராவரே. 4

நிறைவு வேண்டுவீர், அறவன் அன்னியூர்
மறையு ளான்கழற், குறவு செய்ம்மினே. 5

இன்பம் வேண்டுவீர், அன்பன் அன்னியூர்
நன்பொ னென்னுமின், உம்ப ராகவே. 6

அந்த ணாளர்தம், தந்தை அன்னியூர்
எந்தை யேயெனப், பந்தம் நீங்குமே. 7

தூர்த்தனைச் செற்ற, தீர்த்தன்[4] அன்னியூர்
ஆர்த்த மாஅடைந், தேத்தி வாழ்மினே.[5] 8

இருவர் நாடிய, அரவன் அன்னியூர்
பரவு வார்விண்ணுக், கொருவ ராவரே. 9

குண்டர் தேரருக், கண்டன் அன்னியூர்த்
தொண்டு ளார்வினை, விண்டு போகுமே. 10

பூந்தராய்ப் பந்தன், ஆய்ந்த பாடலால்
வேந்தன் அன்னியூர், சேர்ந்து வாழ்மினே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—ஆபத் சகாயேசுவரர்; தேவி—பெரிய நாயகி.

---

* 'பொன்னூர்' என வழங்கப்பெறும். 1 மன்னி ஊர் இறை - உயிர்க்குயிராய் நிலைபெற்று உயிர்களை நடத்தும் தலைவர். 2 வம் - வம்மின். 3 சித்தர் - சித்தத்துள் நிற்பவர். 4 தீர்த்தன் - தூய்மை செய்பவன். 5 தேத்தியுய்ம்மினே என்றும் பாடம்.

# 22. [திருத்துருத்தி*யும்] திருவேள்விக்குடியும்

பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஓங்கிமேல் உழிதரும் ஒலிபுனற் கங்கையை ஒருசடைமேல்
தாங்கினார் இடுபலி தலைகல னாக்கொண்ட தம்மடிகள்
பாங்கினால் உமையொடும் பகலிடம் புகலிடம் பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே.[1] 1

ஆறுசேர் சுடலையிற் சுடரெரி யாடுவர் துளங்கொளிசேர்
நீறுசாந் தெனவுகந் தணிவர்வெண் பிறைபுல்கு[2] சடைமுடியார்
நாறுசாந் திளமுலை யரிவையோ டொருபகல் அமர்ந்தபிரான்
வீறுசேர் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 2

மழைவளர் இளமதி மலரொடு தலைபுல்கு வார்சடைமேல்
கழைவளர் புனல்புகக் கண்டவெங் கண்ணுதற் கபாலியார்தாம்
இழைவளர் துகிலல்குல் அரிவையோ டொருபகல் அமர்ந்தபிரான்
விழை[3] வளர் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 3

கரும்பன வரிசிலைப் பெருந்தகைக் காமனைக் கவினழித்த
சுரும்பொடு தேன்மல்கு தூமலர்க் கொன்றையஞ் சுடர்ச்சடையார்
அரும்பன வனமுலை அரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
விரும்பிடந் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 4

வளங்கிளர் மதியமும் பொன்மலர்க் கொன்றையும் வாளரவும்
களங்கொளச் சடையிடை வைத்தவெங் கண்ணுதற்கபாலியார்தாம்
துளங்குநூன் மார்பினர் அரிவையோ டொருபகல் அமர்ந்தபிரான்
விளங்குநீர்த் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 5

பொறியுலாம் அடுபுலி யுரிவையர் வரியராப் பூண்டிலங்கும்
நெறியுலாம் பலிகொளும் நீர்மையர் சீர்மையை நினைப்பரியார்
மறியுலாங் கையினர் மங்கையோ டொருபகல் அமர்ந்தபிரான்
வெறியுலாந் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 6

---

* குத்தாலம் எனப் பெயர் வழங்கும். துருத்தி - ஆற்றிடைக் குறை. [1] இறைவன் பகற்காலத்தில் துருத்தி (குத்தாலம்) என்னும் தலத்திலும், இராக்காலத்தில் வேள்விக்குடி என்னும் இத்தலத்திலும் எழுந்தருளியிருப்பர் என்பது பின்னிரண்டடியின் கருத்து. [2] பிறைமல்கு என்றும் பாடம். [3] விழை - விருப்பம்.

புரிதரு சடையினர் புலியுரி யரையினர் பொடியணிந்து
திரிதரும் இயல்பினர் திரிபுர மூன்றையுந் தீவளைத்தார்
வரிதரு வனமுலை மங்கையோ டொருபகல் அமர்ந்தபிரான்
விரிதரு துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 7

நீண்டிலங் கவிரொளி நெடுமுடி யரக்கன்இந் நீள்வரையைக்
கீண்டிடந் திடுவனென் றெழுந்தவ னுள்வினை கீழ்ப்படுத்தார்
பூண்டநூல் மார்பினர் அரிவையோ டொருபகல் அமர்ந்தபிரான்
வேண்டிடந் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 8

கரைகடல் அரவணைக் கடவுளுந் தாமரை நான்முகனும்
குரைகழ லடிதொழக் கூடெரி யெனநிறங் கொண்டபிரான்
வரைகெழு மகளொடும் பகலிடம் புகலிடம் வண்பொழில்சூழ்
விரைகமழ் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 9

அயமுக வெயினி[4]லை அமணருங் குண்டருஞ் சாக்கியரும்
நயமுக வுரையினர் நகுவன சரிதைகள் செய்துழல்வார்
கயலன அரிநெடுங் கண்ணியோ டொருபகல் அமர்ந்தபிரான்
வியன்நகர்த் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 10

விண்ணுலாம் விரிபொழில் விரைமணல் துருத்தி[5] வேள் விக்குடியும்
ஒண்ணுலாம் ஒலிகழல் ஆடுவார் அரிவையோ டுறைபதியை
கண்ணுலாம் புகலியுள் அருமறை ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணுலாம் அருந்தமிழ் பாடுவார் ஆடுவார் பழியிலரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—கலியாணசுந்தரர்; தேவி—பரிமளசுகந்தநாயகி.

## 23. திருமணஞ்சேரி *

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அயிலா[1]ரும் அம்பத னாற்புர மூன்றெய்து
குயிலாரும் மென்மொழி யாளொரு கூறாகி

---

[4] அயமுகவெயில் - கொடிய வெயில். [5] விரைமணல் துருத்தி- மலர்த்தாது படிந்த மணல் பரப்புடைய துருத்தி. * 'கீழைத் திருமணஞ்சேரி' என்று வழங்கப்படும். [1] அயில்-கூர்மை.

மயிலாரும் மல்கிய சோலை மணஞ்சேரிப்
பயில்வானைப் பற்றிநின் றார்க்கில்லை பாவமே. 1

விதியானை விண்ணவர் தாந்தொழு தேத்திய
நெதியானை நீள்சடை மேல்நிகழ் வித்தவான்
மதியானை வண்பொழில் சூழ்ந்த மணஞ்சேரிப்
பதியானைப் பாடவல் லார்வினை பாறுமே. 2

எய்ப்பானார்[2]க் கின்புறு தேனளித் தூறிய
இப்பாலா யெனையும் ஆள வுரியானை
வைப்பான மாடங்கள் சூழ்ந்த மணஞ்சேரி
மெய்ப்பானை மேவிநின் றார்வினை வீடுமே. 3

விடையானை மேலுல கேழுமிப் பாரெல்லாம்
உடையானை யூழிதோ றூழி உளதாய
படையானைப் பண்ணிசை பாடு மணஞ்சேரி
அடைவானை யடையவல் லார்க்கில்லை[3] யல்லலே. 4

எறி[4] யார்பூங் கொன்றையி னோடும் இளமத்தம்
வெறி[5] யாருஞ் செஞ்சடை யாரமி லைத்தானை
மறியாருங் கையுடை யானை மணஞ்சேரிச்
செறிவானைச் செப்பவல் லார்க்கிடர் சேராவே. 5

மொழியானை முன்னொரு நான்மறை யாறங்கம்
பழியாமைப்[6] பண்ணிசை யான பகர்வானை
வழியானை வானவ ரேத்து மணஞ்சேரி
இழியாமை யேத்தவல் லார்க்கெய்தும் இன்பமே. 6

எண்ணானை யெண்ணமர் சீரிமை யோர்கட்குக்
கண்ணானைக் கண்ணொரு மூன்றுடை யானை
மண்ணானை மாவயல் சூழ்ந்த மணஞ்சேரிப்
பெண்ணானைப் பேசநின் றார்பெரி யோர்களே. 7

எடுத்தானை யெழில்முடி யெட்டும் இரண்டும்[7] தோள்
கெடுத்தானைக் கேடிலாச் செம்மை யுடையானை

---

[2] எய்ப்பானார் - தொண்டு செய்து இளைத்தவர். [3] யடைய நின்றார்க்கில்லை என்றும் பாடம். [4] எறி - பறித்தல். [5] வெறி - மணம். [6] பழியானைப் என்றும் பாடம். [7] முடி எட்டும் இரண்டும் - பத்து முடிகள்.

மடுத்தார வண்டிசை பாடும் மணஞ்சேரி
பிடித்தாரப் பேணவல் லார்பெரி யோர்களே. 8

சொல்லானைத் தோற்றங்கண் டானும் நெடுமாலும்
கல்லானைக் கற்றன சொல்லித் தொழுதோங்க
வல்லார்நன் மாதவ ரேத்தும் மணஞ்சேரி
எல்லாமாம் எம்பெரு மான்கழல் ஏத்துமே. 9

சற்றேயுந் தாம்அறி வில்சமண் சாக்கியர்
சொற்றேயும் வண்ணமொர் செம்மை யுடையானை
வற்றாத வாவிகள் சூழ்ந்த மணஞ்சேரி
பற்றாக வாழ்பவர் மேல்வினை பற்றாவே. 10

கண்ணாருங் காழியர் கோன்கருத் தார்வித்த
தண்ணார்சீர் ஞானசம் பந்தன் தமிழ்மாலை
மண்ணாரும் மாவயல் சூழ்ந்த மணஞ்சேரி
பண்ணாரப் பாடவல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அருள்வள்ளல் நாயகர்; தேவி—யாழின் மொழியம்மை.

---

## 24. திருக்கருப்பறியலூர்*

திருவிராகம். பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சுற்றமொடு பற்றவை துயக்க[1]ற அறுத்துக்
குற்றமில் குணங்களொடு கூடும்அடி யார்கள்
மற்றவரை வானவர்தம் வானுலக மேற்றக்
கற்றவ னிருப்பது கருப்பறிய லூரே. 1

வண்டணைசெய் கொன்றையது வார்சடைகள் மேலே
கொண்டணைசெய் கோலமது கோளரவி னோடும்
விண்டணைசெய் மும்மதிலும் வீழ்தரவொ ரம்பால்
கண்டவ னிருப்பது கருப்பறிய லூரே. 2

---

* மேலைக்காழி என்றும், தலைஞாயிறு என்றும் வழங்கப்படும். கரு - (இறைவன் புகழைக் கூறியவாது) பிறப்பை, பறியல் - பறிக்கப்படுதல் என்ற காரணம் பற்றியது. [1] துயக்கு-தளர்வு.

வேதமொடு வேதியர்கள் வேள்விமுத லாகப்
போதினொடு போதுமலர் கொண்டுபுனை கின்ற
நாதனென நள்ளிருண்முன் ஆடுகுழை தாழும்
காதவ னிருப்பது கருப்பறிய லூரே. 3

மடம்படு மலைக்கிறைவன் மங்கையொரு பங்கன்
உடம்பினை விடக்கருதி நின்றமறை யோனைத்
தொடர்ந்தணவு காலனுயிர் காலவொரு காலால்
கடந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 4

ஒருத்தியுமை யோடுமொரு பாகமது வாய
நிருத்தனவன் நீதியவன் நித்தன்நெறி யாய
விருத்தனவன் வேதமென அங்கமவை யோதும்
கருத்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 5

விண்ணவர்கள் வெற்பரசு பெற்றமகள் மெய்த்தேன்
பண்ணமரும் மென்மொழியி னாளையணை விப்பான்
எண்ணிவரு காமனுடல் வேவளரி காலும்
கண்ணவ னிருப்பது கருப்பறிய லூரே. 6

ஆதி[1] யடி யைப்பணிய அப்பொ[2]டு மலர்ச்சேர்
சோதியொளி நற்புகை வளர்க்குவடு புக்குத்
தீதுசெய வந்தணையும் அந்தகன் அரங்கக்
காதினன் இருப்பது கருப்பறிய லூரே. 7

வாய்ந்தபுகழ் விண்ணவரும் மண்ணவரும் அஞ்சப்
பாய்ந்தமர்செ யுந்தொழிலி லங்கைநகர் வேந்தற்
கேய்ந்தபுயம் அத்தனையும் இற்றுவிழ மேனாள்
காய்ந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 8

பரந்தது நிரந்துவரு[3] பாய்திரைய கங்கை
கரந்தொர்சடை மேன்மிசை யுகந்தவளை வைத்து
நிரந்தரம்[4] நிரந்திருவர் நேடியறி யாமல்
கரந்தவ னிருப்பது கருப்பறிய லூரே. 9

அற்றமறை யாவமண ராதமிலி புத்தர்
சொற்றமறி யாதவர்கள் சொன்னசொலை விட்டுக்

---

1 ஆதி - முதல்வன். 2 அப்பு - நீர். 3 நிமிர்ந்துவரு என்றும் பாடம். 4 நிரந்தரம் - எப்பொழுதும்.

குற்றமறி யாதபெரு மான்[4] கொகுடிக் கோயில்[5]
கற்றென இருப்பது கருப்பறிய லூரே. 10

கலந்தரு புனற்புகலி ஞானசம் பந்தன்
கலந்தவர்[6] கருப்பறியல் மேயகட வுள்ளைப்
பலந்தரு தமிழ்க்கிளவி பத்துமிவை கற்று
வலந்தரு மவர்க்குவினை வாடலெ[7]ளி தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—குற்றம்பொறுத்தநாதர்; தேவி—கோல்வளைநாயகி.

---

## 25. திருவாழ்கொளிபுத்தூர்*

### பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொடியுடைமார்பினர் போர்விடையேறிப் பூதகணம் புடை சூழக், கொடியுடையூர்திரிந் தையங் கொண்டு பலபலகூறி, வடிவுடைவாள்நெடுங் கண்ணுமைபாகம் ஆயவன்வாழ்கொளி புத்தூர்க், கடிகமழ் மாமலரிட்டுக் கறைமிடற்றனடி காண்போம். 1

அரைகெழுகோவண ஆடையின்மேலோர் ஆடரவம்அசைத் தையம், புரைகெழுவெண்டலை யேந்திப் போர்விடை யேறிப்புகழ, வரைகெழுமங்கைய தாகமோர்பாகம் ஆயவன்வாழ்கொளி புத்தூர், விரைகமழ் மாமலர்[1] தூவி விரிசடையானடி சேர்வோம். 2

பூண்நெடுநாகம் அசைத்தனலாடிப் புன்றலையங்கையி லேந்தி, ஊண்இடுபிச்சையூ ரையம் உண்டி[2] யென்று பலகூறி, வாள்நெடுங்கண்ணுமை மங்கையொர்பாகம் ஆயவன்வாழ்

---

[4] குற்றமறியாத பெருமான் - தலச் சுவாமியின் பெயர். [5] கொகுடிக் கோயில் - ஆலயத்தின் பெயர். கொகுடி - ஒருவகை முல்லை. [6] கலந்தவர் - வந்து அணைந்தவர். [7] வினைவாடல் — கருப்பறிதல். * 'வாளொளி புற்றூர்' என்றும் 'வாளப்புற்றூர்' என்றும் வழங்கப்படுகிறது. இறைவன் அருச்சுனனுடைய கைவாளை புற்றில் ஒளித்துவைத்த காரணத்தால் 'வாள் ஒளி புற்றூர்' எனப் பெயர் வழங்கியது என்பர். [1] விரைகெழுமா மலர் என்றும் பாடம். [2] உண்டி - உண்டனே.

கொளி புத்தூர்த், தாள்நெடு மாமலரிட்டுத் தலைவனதாள்நிழல் சார்வோம். 3

தாரிடுகொன்றையொர் வெண்மதிகங்கை தாழ்சடை மேல்வைசூடி, ஊரிடுபிச்சைகொள் செல்வம் உண்டியென்று பல கூறி, வாரிடுமென்முலை மாதொருபாகம் ஆயவன்வாழ்கொளி புத்தூர்க், காரிடு மாமலர்தூவிக் கறைமிடற்றனடி காண்போம். 4

கனமலர்க்கொன்றை அலங்கல்இலங்கக் காதிலொர் வெண் குழையோடு, புனமலர்மாலை புனைந்தூர் புகுதி[3] யென்றே பல கூறி, வனமுலைமாமலை மங்கையொர்பாகம் ஆயவன்வாழ்கொளி புத்தூர், இனமல ரேய்ந்தனதூவி யெம்பெருமானடி சேர்வோம். 5

அளைவளர்நாகம் அசைத்தனலாடி அலர்மிசையந்தணன் உச்சிக், களைதலை யிற்பலிகொள்ளுங் கருத்தனே கள்வனே யென்னு, வளையொலிமுன்கை மடந்தையொர்பாகம் ஆயவன் வாழ்கொளி புத்தூர்த், தளையவிழ் மாமலர்தூவித் தலைவனதா ளிணை சார்வோம். 6

அடர்செவிவேழத்தின் ஈருரிபோர்த்து வழிதலையங்கையி லேந்தி, உடலிடுபிச்சையோ டையம் உண்டியென்று பலகூறி, மடல்நெடுமாமலர்க் கண்ணியொர்பாகம் ஆயவன்வாழ்கொளி புத்தூர்த், தடமல ராயினதூவித் தலைவனதாள்நிழல் சார்வோம். 7

உயர்வரையொல்க எடுத்தஅரக்கன் ஒளிர்கடகக்கை அடர்த்து, அயலிடுபிச்சையோ டையம் ஆர்தலையென்றடி போற்றி, வயல்விரிநீல நெடுங்கணிபாகம் ஆயவன்வாழ்கொளி புத்தூர்ச், சயவிரி மாமலர்தூவித் தாழ்சடையானடி சார்வோம். 8

கரியவன்நான்முகன் கைதொழுதேத்தக் காணலுஞ்சாரலும் ஆகா, எரியுருவாகியூ ரையம் இடுபலியுண்ணியென் றேத்தி, வரியரவல்குல் மடந்தையொர்பாகம் ஆயவன்வாழ்கொளி புத் தூர், விரிமல ராயினதூவி விகிர்தனசேவடி சேர்வோம். 9

குண்டமணர்துவர்க் கூறைகள்மெய்யிற் கொள்கையினார் புறங்கூற, வெண்டலையிற்பலி கொண்டல் விரும்பினையென்று விளம்பி, வண்டமர்பூங்குழல் மங்கை[4] யொர்பாகம் ஆயவன்வாழ்

---

[3] புகுதி - புகுகின்றாய். [4] வண்டமர் பூங்குழல் மங்கை - தல அம்மையின் பெயர்.

கொளி புத்தூர்த், தொண்டர்கள் மாமலர்தூவத் தோன்றிநின்ருணடி சேர்வோம். 10

கல்லுயர்மாக்கடல்நின்றுமுழங்கும் கரைபொரு காழியுமூதூர், நல்லுயர்நான்மறை நாவின் நற்றமிழ் ஞானசம்பந்தன், வல்லுயர்சூலமும் வெண்மழுவாளும் வல்லவன்வாழ்கொளி புத்தூர்ச், சொல்லியபாடல்கள் வல்லார் துயர்கெடுதல்எளிதாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - பியந்தைக்காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சாகை யாயிர முடையார் சாமமும் ஓதுவ துடையார்
ஈகை யார்கடை நோக்கி யிரப்பதும் பலபல வுடையார்
தோகை மாமயி லனைய துடியிடை பாகமும் உடையார்
வாகை நுண்துளி வீசும் வாழ்கொளி புத்தூ ருளாரே. 1

எண்ணில் ஈரமும் உடையார் எத்தனை யோரிவர் அறங்கள்
கண்ணும் ஆயிரம் உடையார் கையுமொ ராயிரம் உடையார்
பெண்ணும் ஆயிரம் உடையார் பெருமையொ ராயிரம் உடையார்
வண்ணம் ஆயிரம் உடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 2

கொடியொ ராயிரம் உடையார் நுண்ணிய ராமவர் நோக்கும்
வடிவும் ஆயிரம் உடையார் வண்ணமும் ஆயிரம் உடையார்
முடியும் ஆயிரம் உடையார் மொய்குழ லாளையும் உடையார்
வடிவும் ஆயிரம் உடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 3

பஞ்சி நுண்துகி லன்ன பைங்கழற் சேவடி யுடையார்
குஞ்சி மேகலை யுடையார் கொந்தணி வேல்வல னுடையார்
அஞ்சு[2]ம் வென்றவர்க் கணியார்[3] ஆனையின் ஈருரி யுடையார்
வஞ்சி நுண்ணிடை யுடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 4

பரவு வாரையும் உடையார் பழித்திகழ் வாரையும் உடையார்
விரவு வாரையும் உடையார் வெண்டலைப் பலிகொள்வ துடையார்
அரவம் பூண்பதும் உடையார் ஆயிரம் பேர்மிக வுடையார்
வரமும்[4] ஆயிரம் உடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 5

---

[2] அஞ்சு - ஐம்புலன். [3] அணியார் - அண்மையில் உள்ளவர்.
[4] வரவும் என்றும் பாடம்.

தண்டுந் தாளமுங் குழலுந் தண்ணுமை[5]க் கருவியும் புறவில்
கொண்ட பூதமும் உடையார் கோலமும் பலபல வுடையார்
கண்டு கோடலும் அரியார் காட்சியும் அரியதோர் கரந்தை
வண்டு வாழ்பதி யுடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 6

மான வாழ்க்கைய துடையார் மலைந்தவர் மதிற்பரி சறுத்தார்
தான வாழ்க்கைய துடையார் தவத்தொடு நாம்புகழ்ந் தேத்த
ஞான வாழ்க்கைய துடையார் நள்ளிருள் மகளிர்நின் றேத்த
வான வாழ்க்கைய துடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 7

ஏழும் மூன்றுமோர் தலைகள் உடையவன் இடர்பட அடர்த்து
வேழ்வி செற்றதும் விரும்பி விருப்பவர் பலபல வுடையார்
கேழல்[6] வெண்பிறை யன்ன கெழுமணி[7] மிடறுநின் றிலங்க
வாழி சாந்தமும் உடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 8

வென்றி மாமல ரோனும் விரிகடல் துயின்றவன் தானும்
என்றும் ஏத்துகை யுடையார் இமையவர் துதிசெய விரும்பி
முன்றில் மாமலர் வாசம் முதுமதி தவழ்பொழில் தில்லை
மன்றி லாடல துடையார் வாழ்கொளி புத்தூ ருளாரே. 9

மண்டை கொண்டுழல் தேரர் மாசுடை மேனிவன் சமணர்
குண்டர் பேசிய பேச்சுக் கொள்ளன்மின் திகழொளி நல்ல
துண்ட வெண்பிறை சூடிச் சுண்ணவெண் பொடியணிந் தெங்கும்
வண்டு வாழ்பொழில் சூழ்ந்த வாழ்கொளி புத்தூ ருளாரே. 10

நலங்கொள் பூம்பொழிற் காழி நற்றமிழ் ஞானசம் பந்தன்
வலங்கொள் வெண்மழு வாளன் வாழ்கொளி புத்தூ ருளானை
இலங்கு வெண்பிறை யானை யேத்திய தமிழிவை வல்லார்
நலங்கொள் சிந்தைய ராகி நன்னெறி யெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மாணிக்கவண்ணர்[8]; தேவி—வண்டமர்பூங்குழலி.

---

[5] தண்ணுமை - மத்தளம். [6] கேழல் - பன்றி. [7] கேழ்மணி என்றும் பாடம். [8] இவ்விறைவன் திருமேனியில் ஒளிவீசுங் காரணம் பற்றி இப்பெயர் பெற்றது என்பர்; இதனால் இத்தலம் 'அரதனபுரம்' எனவும் பெயர் பெறும்.

## 26. திருவோமாம்புலியூர்*

**பண் - புறநீர்மை [3-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

**பூ**ங்கொடி மடவாள் உமையொரு பாகம் புரிதரு சடைமுடி யடிகள், வீங்கிருள் நட்டம் ஆடுமெம் விகிர்தர் விருப்பொடும் உறைவிடம் வினவில், தேங்கமழ் பொழிலிற் செழுமலர் கோதிச் செறிதரு வண்டிசை பாடும், ஓங்கிய புகழார் ஓமமாம் புலியூர் உடையவர் வடதளி[1] யதுவே. 1

சம்பரற் கருளிச் சலந்தரன் வீயத் தழலுமிழ் சக்கரம் படைத்த, எம்பெரு மானார் இமையவ ரேத்த இனிதினங் குறை விடம் வினவில், அம்பர மாகி யழலுமிழ் புகை[2]யின் ஆகுதி யால்மழை பொழியும்[3], உம்பர்க ளேத்தும் ஓமமாம் புலியூர் உடையவர் வடதளி யதுவே. 2

பாங்குடைத் தவத்துப் பகீரதற் கருளிப் படர்சடைக் கரந்த நீர்க் கங்கை, தாங்குதல் தவிர்த்துத் தராதலத்திழித்த தத்துவன் உறைவிடம் வினவில், ஆங்கெரி மூன்றும் அமர்ந்துட னிருந்த அங்கையால் ஆகுதி வேட்கும், ஓங்கிய மறையோர் ஓமமாம் புலியூர் உடையவர் வடதளி யதுவே. 3

புற்றர வணிந்து நீறுமெய் பூசிப் பூதங்கள் சூழ்தர வூரூர், பெற்றமொன் றேறிப் பெய்பலி கொள்ளும் பிரானவன் உறை விடம் வினவில், கற்றநால் வேதம் அங்கமோ ராறுங் கருத்தினார் அருத்தியால் தெரியும், உற்றபல் புகழார் ஓமமாம் புலியூர் உடையவர் வடதளி யதுவே. 4

நிலத்தவர் வானம் ஆள்பவர் கீழோர் துயர்கெட நெடிய மாற் கருளால், அலைத்தவல் லசுரர் ஆசற வாழி யளித்தவன் உறைவிடம் வினவில், சலத்[4]தினாற் பொருள்கள் வேண்டுதல்

---

* ஓமமாம்புலியூர் என்பது ஓமாம்புலியூர் என மருவி வழங்குகிறது. ஓமம் (யாகம் - வேள்வி) செய்து ஒழுகும் சிறப்புப்பற்றி இப்பெயர் பெற்றது. [1] வடதளி - ஓமாம்புலியூர் ஆலயத்தின் கீழ்ப் பகுதியிலுள்ள ஓர் ஆலயம். தளி - கோயில். [2] யழல்மிகு புகை என்றும் பாடம். [3] இவ்வடி வேள்வி மழைக்குக் காரணம் என்பதை அறிவிக்கும். [4] சலம் - கோபம்.

செய்யாத் தன்மையார் நன்மையால் மிக்க, உலப்பில்பல் புகழார் ஓமமாம் புலியூர் உடையவர் வடதளி யதுவே. 5

மணந்திகழ் திசைகள் எட்டும் ஏழிசையும் மலியுமா றங்கமைஐ வேள்வி, இணைந்தநால் வேதம் மூன்றெரி யிரண்டு பிறப்பென வொருமையா லுணரும்,[4] குணங்களும் அவற்றின் கொள் பொருள் குற்றமற்றவை யுற்றது மெல்லாம், உணர்ந்தவர் வாழும் ஓமமாம் புலியூர் உடையவர் வடதளி யதுவே. 6 - 7

தலையொரு பத்துந் தடக்கைய திரட்டி தானுடை அரக்கனொண் கயிலை, அலைவது செய்த அவன்திறல் கெடுத்த ஆதியார் உறை விடம் வினவில், மலையென வோங்கும் மாளிகை நிலவும் மாமதில் மாற்றல ரென்றும், உலவுபல் புகழார் ஓமமாம் புலியூர் உடையவர் வடதளி யதுவே. 8

கள்ளவிழ் மலர்மே லிருந்தவன் கரியோ னென்றிவர் காண் பரி தாய, ஒள்ளெரி யுருவர் உமையவ ளோடும் உகந்தினி துறை விடம் வினவில், பள்ளநீர் வாளை பாய்தரு கழனிப் பனிமலர்ச் சோலைசூ ழாலை, ஒள்ளிய புகழார் ஓமமாம் புலியூர் உடையவர் வடதளி யதுவே. 9

தெள்ளிய ரல்லாத் தேரரோ டமணர் தடுக்கொடு சீவரம் உடுக்கும், கள்ளமார் மனத்துக் கலதி[5] கட் கருளாக் கடவுளார் உறைவிடம் வினவில், நள்ளிருள் யாமம் நான்மறை தெரிந்து நலந்திகழ் மூன்றெரி யோம்பும், ஒள்ளியார் வாழும் ஓமமாம் புலியூர் உடையவர் வடதளி யதுவே. 10

விளைதரு வயலுள் வெயில்செறி பவள மேதிகள் மேய்புலத் திடறி, ஒளிதர மல்கும் ஓமமாம் புலியூர் உடையவர் வடதளி யரனைக், களிதரு நிவப்பி[6]ற் காண்டகு செல்வக் காழியுள் ஞான சம் பந்தன், அளிதரு பாடல் பத்தும்வல் லார்கள் அமரலோ கத்திருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—துயரந்தீர்த்தநாதர் ; தேவி—பூங்கொடிநாயகி.

---

[4] இவ்வடிகளில் எட்டு முதலாக எண்களைக் கீழ் வரிசைப்படக்கூறி யது எண்ணலங்காரமாகும். [5]கலதி - கீழ்மகன். [6]நிவப்பு - உயர்வு.

# 27. திருநாரையூர் *

## பண் - பியந்தைக்காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

உரை[1]யினில் வந்தபாவம்[2] உணர்[3]நோய்க ளும்மசெயல்[4] தீங்கு குற்றமுலகில், வரையினி லாமைசெய்த அவைதீரும் வண்ணம் மிகவேத்தி நித்தம் நினைமின், வரைசிலை யாகஅன்று மதில்மூன் றெரித்து வளர்கங்குல் நங்கை வெருவத், திரையொலி நஞ்சமுண்ட சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழவே. 1

ஊனடை கின்றகுற்ற முதலாகி யுற்ற பிணிநோ யொருங்கும்[5] உயரும், வானடை கின்றவெள்ளை மதிசூடு சென்னி விதியான வேதவிகிர்தன், கானிடை யாடிபூதப் படையான் இயங்கு விடையான் இலங்கு முடிமேல், தேனடை வண்பாடு சடையண்ணல் நண்ணுதிருநாரை யூர்கை தொழவே. 2

ஊரிடை நின்றுவாழும் உயிர்செற்ற காலன் துயருற்ற தீங்கு விரவிப், பாரிடை மெள்ளவந்து பழியுற்ற வார்த்தை பொழிவுற்ற வண்ண மகலும், போரிடை யன்றுமூன்று மதிலெய்த ஞான்று புகழ்வானு ளோர்கள் புணரும், தேரிடை நின்ற எந்தை பெருமானிருந்த திருநாரை யூர்கை தொழவே. 3

தீயுற வாயஆக்கை யதுபற்றி வாழும் வினைசெற்ற வுற்ற உலகின், தாயுறு தன்மையாய தலைவன்றன் நாமம் நிலையாக நின்று மருவும், பேயுற வாயகானில் நடமாடி கோல விடமுண்ட கண்டன் முடிமேல், தேய்பிறை வைத்துகந்த சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழவே. 4

வசையப ராதமாய வுவரோதம்[6] நீங்குந் தவமாய தன்மை வரும்வான், மிசையவ ராதியாய திருமார் பிலங்கு விரிநூலர் விண்ணும் நிலனும், இசையவ ராசிசொல்ல இமையோர்க ளேத்தி

---

* நாரை பூசித்துப் பேறு பெற்றமையால் நாரையூர் எனப் பெயர் பெற்றது என்பர். [1] உரை-வாக்கு. [2] உரையினில் வந்த பாவம்-பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் முதலியவற்றால் வந்த பாவம். [3] உணர் - உணர்வுக்குரிய கருவி - மனம். [4] செயல்-செயலுக்குரிய காயம். [5] நோய் வருந்தும் என்றும் பாடம். [6] வுவரேதம் என்றும் பாடம்.

யமையாத காதலொடுசேர், திசையவர் போற்றநின்ற சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழுவே. 5

உறைவள ரூன்நிலாய வுயிர்நிற்கும் வண்ணம் உணர்வாக்கும்[5] உண்மை உலகில், குறைவுள வாகிநின்ற குறைதீர்க்கு நெஞ்சில் நிறைவாற்று நேசம் வளரும், மறைவளர் நாவன்மாவின் உரிபோர்த்த மெய்யன் அரவார்த்த அண்ணல் கழலே, திறை[6]வளர் தேவர் தொண்டின் அருள்[7]பேண நின்ற திருநாரை யூர்கை தொழவே. 6

தனம்வரும் நன்மையாகுந் தகுதிக் குழந்து வருதிக் குழன்ற உடலின், இனம்வளரைவர்[8] செய்யும் வினயங்கள்[9] செற்று நினைவொன்று சிந்தை பெருகும், முனமொரு காலம்மூன்று புரம் வெந்து மங்கச் சரமுன் றெரிந்த அவுணர், சினமொரு காலழித்த சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழவே. 7

உருவரை கின்றநாளில் உயிர்கொள்ளுங் கூற்றம் நனியஞ்சு மாதலுறநீர், மருமலர் தூவியென்றும் வழிபாடு செய்ம்மின் அழிபா டிலாத கடலின், அருவரை சூழிலங்கை யரையன்றன் வீரம் அழியத் தடக்கை முடிகள், திருவிரல் வைத்துகந்த சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழவே. 8

வேறுயர் வாழ்வுதன்மை வினைதுக்கம் மிக்க பகைதீர்க்கு மேயவுடலில், தேறிய சிந்தைவாய்மை தெளிவிக்க நின்ற கரவைக் கரந்து திகழும், சேறுயர் பூவின்மேய பெருமானும் மற்றைத் திருமாலும் நேட எரியாய்ச்,[10] சீறிய செம்மையாகுஞ் சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழவே. 9

மிடைப்படு துன்பம்இன்பம் உளதாக்கும் உள்ளம் வெளியாக்குமுன்னி யுணரும், படையொரு கையிலேந்திப் பலிகொள்ளும் வண்ணம் ஒலிபாடி யாடி பெருமை, உடையினை விட்டுளோரும் உடல் போர்த்துளோரும் உரைமாயும் வண்ணம் அழியச், செடிபட வைத்துகந்த சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழவே. 10

---

[5] உணர்வார்க்கும் என்றும் பாடம். [6] திறை — கையுறை. [7] தேவர் கொண்டினருள் என்றும் பாடம். [8] ஐவர் — ஐம்புலன். [9] வினயம்—மயக்கம். [10] நேடவரியாய்ச் என்றும் பாடம்.

எரியொரு வண்ணமாய உருவானை எந்தை பெருமானை யுள்கி நினையார், திரிபுர மன்றுசெற்ற சிவன்மேய செல்வத் திருநாரை யூர்கை தொழுவான், பொருபுனல் சூழ்ந்தகாழி மறை ஞான பந்தன் உரைமாலை பத்தும் மொழிவார், திருவளர் செம்மை யாகி யருள்பேறு மிக்க துளதென்பர் செம்மை யினரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - பழம்பஞ்சுரம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காம்பினை வென்றமென் தோளி பாகங் கலந்தான் நலந்தாங்கு
தேம்புனல் சூழ்திகழ் மாமடு வில்திரு நாரை யூர்மேய
பூம்புனல் சேர்புரி புன்ச டையான் புலியின் உரிதோல்மேல்
பாம்பினை வீக்கிய பண்ட ரங்கன்[1] பாதம் பணிவோமே. 1

தீவினை யாயின தீர்க்க நின்றான் திருநாரை யூர்மேயான்
பூவினை மேவு சடைமுடி யான்புடை சூழப் பலபூதம்
ஆவினில் ஐந்துங்கொண் டாட்டு கந்தான் அடங்கார்மதில்மூன்றும்
ஏவினை யெய்த ழித்தான் கழலே பரவா எழுவோமே. 2

மாயவன் சேயவன்[2] வெள்ளி யவன்[3] வி டஞ்சேரும் மைமிடற்றன்
ஆயவ னாகியோ ரந்தர மும்மவ னென்று வரையாகம்
தீயவன் நீரவன் பூமி யவன்திரு நாரை யூர்தன்னில்
மேயவ னைத்தொழ வாரவர் மேல்வினை யாயின வீடுமே. 3

துஞ்சிரு ளாடுவர் தூமு றுவல்து ளங்கும் உடம்பினராய்
அஞ்சுட ரார்எரி யாடு வர்ஆரழ லார்வி ழிக்கண்
நஞ்சுமிழ் நாகம் அரைக்கசைப் பர்நல னேங்கு நாரையூர்
எஞ்சிவ னார்க்கடி மைப்படு வார்க்கினி யில்லை யேதமே. 4

பொங்கி ளங்கொன் றையினர் கடலில் விடமுண் டிமையோர்கள்
தங்களை ஆரிடர் தீர நின்ற தலைவர் சடைமேலோர்
திங்களை வைத்தனல் ஆட லினர்திரு நாரை யூர்மேய
வெங்கனல் வெண்ணீ றணிய வல்லார் அவரே விழுமியரே. 5

பாரு றுவாய் மையினர் பரவும் பரமேட்டி பைங்கொன்றைத்
தாரு றுமார் புடையான் மலையின் தலைவன் மலைமகளைச்

---

[1] பண்டரங்கன் - சிவன். [2] சேயவன் - உருத்திரன். [3] வெள்ளி யவன் - பிரமன்.

சீரு றுமா மறுகிற் சிறைவண் டறையுந் திருநாரை
யூரு றையெம் மிறைவர்க் கிவையோன் றேடொன் றேவ்வாவே.[4] 6
கள்ளி யிடுதலை யேந்துகை யர்கரி காடர் கண்ணுதலர்
வெள்ளிய கோவண ஆடை தன்மேன் மிளிரா டரவார்த்து
நள்ளிருள் நட்டம தாடுவர் நல்நலன் ஓங்கு நாரையூர்
உள்ளிய போழ்தி லெம்மேல் வருவல் வினையாயின வோடுமே. 7
நாமமெ னப்பல வும்முடை யான்நலன் ஓங்கு நாரையூர்
தாமொம் மெனப்ப றையாழ் குழலு ளார்க மூல்பயில
ஈமவி ளக்கெரி சூழ்சு டலையி யம்பும் இடுகாட்டில்
சாமம் உரைக்கநின் றாடு வானுந் தழலாய சங்கரனே. 8
ஊனு டைவெண் டலைகொண் டுழல்வான் ஒளிர்புன் சடைமேலோர்
வானி டைவெண் மதிவைத் துகந்தான் வரிவண் டியாழ்முரலத்
தேனு டைமா மலரன் னம்வைகுந் திருநாரை யூர்மேய
ஆனி டையைந் துகந்தான் அடியே பரவா அடைவோமே. 9
தூசு புனைதுவ ராடை மேவுந் தொழிலா ருடம்பினிலுள்
மாசு புனைந்துடை நீத்தவர் கள்மயல் நீர்மை கேளாதே
தேசுடை யீர்கள் தெளிந்த டைமின் திருநாரை யூர்தன்னில்
பூசு பொடித்த லைவர் அடியார் அடியே பொருத்தமே. 10
தண்மதி தாழ் பொழில்சூழ் புகலித் தமிழ்ஞான சம்பந்தன்
ஒண்மதிசேர் சடையான் உறையுந் திருநாரை யூர்தன்மேல்
பண்மதி யாற் சொன்ன பாடல் பத்தும் பயின்றார் வினைபோகி
மண்மதி யாதுபோய்வான் புகுவர் வானோர் எதிர்கொளவே. 11

திருச்சிற்றம்பலம்

---

## பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

கடலிடை வெங்கடு நஞ்சமுண்ட கடவுள் விடையேறி
உடலிடை யிற்பொடிப் பூசவல்லான் உமையோ டொருபாகன்
அடலிடை யிற்சிலை தாங்கியெய்த அம்மான் அடியார்மேல்
நடலைவி னைத்தொகை தீர்த்துகந்தான் இடம்நாரை யூர்தானே. 1

---

[4] ஒன்றேடொன்று ஒவ்வா என்பதை முதலிரண்டடியிலும் மூன்றும் அடியிலும் அறிக.

விண்ணின்மின் னேர்மதி துத்திநாகம் விரிபூ மலர்க்கொன்றை
பெண்ணின்முன் னேமிக வைத்துகந்த பெருமான் எரியாடி
நண்ணிய தன்னடி யார்களோடுந் திருநாரை யூரானென்
றெண்ணுமின் நும்வினை போகும்வண்ணம் இறைஞ்சும் நிறைவாமே. 2

தோடொரு காதொரு காதுசேர்ந்த குழையான் இழைதோன்றும்
பீடொரு கால்பிரி யாதுநின்ற பிறையான் மறையோதி
நாடொரு காலமுஞ் சேரநின்ற திருநாரை யூரானைப்
பாடுமின் நீர்பழி போகும்வண்ணம் பயிலும் உயர்வாமே. 3

வெண்ணில வஞ்சடை சேரவைத்து விளங்குந் தலையேந்திப்
பெண்ணி லமர்ந்தொரு கூறதாய பெருமான் அருளார்ந்த
அண்ணல் மன்னியுறை கோயிலாகும் அணிநாரை யூர்தன்னை
நண்ணல மர்ந்துறை [1] வாக்குமின்கள் நடலை கரிசறுமே. 4

வானமர் தீவளி நீர்நிலனாய் வழங்கும் பழியாகும்
ஊனமர் இன்னுயிர் தீங்குகுற்ற முறைவால் பிறிதின்றி
நானம ரும் [2] பொரு ளாகிநின்றான் திருநாரை யூரெந்தை
கோனவ னைக்குறு கக்குறுகா கொடுவல் வினைதானே. 5

கொக்கிற குங்குளிர் சென்னிமத்தங் குலாய மலர்சூடி
அக்கர வோடரை யார்த்துகந்த அழகன் குழகாக
நக்கம ருந்திரு மேனியாளன் திருநாரை யூர்மேவிப்
புக்கம ரும்மனத் தோர்கள்தம்மைப் புணரும் புகல் [3] தானே. 6

ஊழியும் இன்பமுங் காலமாகி உயருந் தவமாகி
ஏழிசை யின்பொருள் வாழும்வாழ்க்கை வினையின் புணர்ப்பாகி
நாழிகை யும்பல ஞாயிறாகி நளிர்நாரை யூர்தன்னில்
வாழியர் மேதகு மைந்தர்செய்யும் வகையின் விளைவாமே. 7

கூசமிலா தரக்கன் வரையைக் குலுங்க எடுத்தான்தோள்
நாசம தாகி இறஅடர்த்த விரலான் கரவாதார்
பேசவி யப்பொடு பேணநின்ற பெரியோன் இடம்போலும்
தேசமு றப்புகழ் செம்மைபெற்ற திருநாரை யூர்தானே. 8

பூமக னும்அவ னைப்பயந்த புயலார் நிறத்தானும்
ஆமள வுந்திரிந் தேத்திக்காண் டல் [4] அறிதற் கரியானூர்

---

[1] நண்ணலமர்ந்துற என்றும் பாடம். [2] நான் அமரும் - நான் விரும்பும். [3] புகல்-வெற்றி; கதியுமாம். [4] ஏத்தக்காண்டல் என்றும் பாடம்.

பா[4] மரு வுங்குணத் தோர்கள்ஈண்டிப் பலவும் பணிசெய்யும்
தேமரு வுந்திகழ் சோலைசூழ்ந்த திருநாரை யூர்தானே. 9

வெற்றரை யாகிய வேடங்காட்டித் திரிவார் துவராடை
உற்றரை யோர்கள் உரைக்குஞ்சொல்லை உணரா தெழுமின்கள்
குற்றமி லாததோர் கொள்கையெம் மான்குழகன் தொழிலாரப்
பெற்றர வாட்டிவரும் பெருமான் திருநாரை யூர்சேர்வே. 10

பாடிய லுந்திரை சூழ்புகலித் திருஞான சம்பந்தன்
சேடிய லும்புக ழோங்குசெம்மைத் திருநாரை யூரான்மேல்
பாடிய தண்டமிழ் மாலைபத்தும் பரவித் திரிந்தாக[5]
வாடிய[6] சிந்தையி னார்க்குநீங்கும் அவலக் கடல்தானே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சௌந்தரேசுவரர் ; தேவி—திரிபுரசுந்தரி.

---

## 28. திருக்கடம்பூர்* [கடம்பைக் கரக்கோயில்]

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வா**னமர் திங்களும் நீரும் மருவிய வார்சடை யானைத்
தேனமர் கொன்றையி னானைத் தேவர் தொழப்படு வானைக்
கானம ரும்பிணை புல்கிக் கலை[1] பயி லுங்கடம் பூரில்
தானமர் கொள்கையி னானைத் தாள்தொழ வீடெளி தாமே. 1

அரவினொ டாமையும் பூண்டு அந்துகில் வேங்கை யதளும்
விரவுந் திருமுடி தன்மேல் வெண்திங்கள் சூடி விரும்பிப்
பரவுந் தனிக்கடம் பூரிற் பைங்கண்வெள் ளேற்றண்ணல் பாதம்
இரவும் பகலும் பணிய இன்பம் நமக்கது வாமே. 2

இளிபடும் இன்சொலி னா[2]ர்கள் இருங்குழல் மேலிசைந் தேறத்
தெளிபடு கொள்கை கலந்த தீத்தொழி லா[3]ர்கடம் பூரில்

---

[4] பா - (சிவனுடைய புகழைக் கூறும்) பாடல். [5] பரவித் திரிந்தார்கள் என்றும் பாடம். [6] ஆடிய - கொண்டாடிய. *'மேலைக்கடம்பூர்' என்று வழங்குவர். இங்குள்ள ஆலயத்தின் பெயர் 'கரக்கோயில்' ஆகும். [1] பிணை - பெண்மான்; கலை - ஆண்மான். [2] இளிபடு மென்சொலினார் என்றும் பாடம். இளி - ஏழிசையிலொன்று. [3] மறையோடு கூடிய என்றும் பாடம்.

ஒளிதரு வெண்பிறை சூடி யொண்ணுத லோடுட னாகிப்
புலியத ளாடை புனைந்தான் பொற்கழல் போற்றுதும் நாமே. 3

பறையொடு சங்கம் இயம்பப் பல்கொடி சேர்நெடு மாடம்
கறையுடை வேல்வரிக் கண்ணார் கலையொலி சேர்கடம் பூரில்
மறையொலி கூடிய[4] பாடல் மருவிநின் றாடல் மகிழும்
பிறையுடை வார்சடை யானைப் பேணவல் லார்பெரி யோரே. 4

தீவிரி யக்கழ லார்ப்பச் சேயெரி கொண்டிடு காட்டில்
நாவிரி கூந்தல்நற் பேய்கள் நகைசெய்ய நட்டம் நவின்றோன்
காவிரி கொன்றை கலந்த கண்ணுத லான்கடம் பூரில்
பாவிரி பாடல் பயில்வார் பழியொடு பாவ மிலாரே. 5

தண்புனல் நீள்வயல் தோறுந் தாமரை மேலனம் வைகக்
கண்புணர் காவில்வண் டேறக் கள்ளவி ழுங்கடம் பூரில்
பெண்புனை கூறுடை யானைப் பின்னு சடைப்பெரு மானைப்
பண்புனை பாடல் பயில்வார் பாவமி லாதவர் தாமே. 6

பலிகெழு செம்மலர் சாரப் பாடலொ டாட லருத
கலிகெழு வீதி கலந்த கார்வயல் சூழ்கடம் பூரில்
ஒலிதிகழ் கங்கை கரந்தான் ஒண்ணுத லாள்உமை கேள்வன்
புலியத ளாடையி னான்றன் புனைகழல் போற்றல் பொருளே. 7

பூம்படு கிற்[5] கயல் பாயப் புள்ளிரி யப்புறங் காட்டில்
காம்படு தோளியர் நாளுங் கண்கவ ருங்கடம் பூரில்
மேம்படு தேவியொர் பாகம் மேவியெம் மானென வாழ்த்தித்
தேம்படு மாமலர் தூவித் திசைதொழத் தீய கெடுமே. 8

திருமரு மார்பி லவனுந் திகழ்தரு மாமல ரோனும்
இருவரு மாயறி வொண்ணா எரியுரு வாகிய ஈசன்
கருவரை காலில் அடர்த்த கண்ணுத லான்கடம் பூரில்
மருவிய பாடல் பயில்வார் வானுல கம்பெறு வாரே. 9

ஆடை தவிர்த்தறங் காட்டு மவர்களும் அந்துவ ராடைச்
சோடைகள்[6] நன்னெறி சொல்லார் சொல்லினுஞ் சொல்லல கண்டீர்
வேடம் பலபல காட்டும் விகிர்தன்நம் வேதமு தல்வன்
காடத னில்நட மாடுங் கண்ணுத லான்கடம் பூரே. 10

---

[4] தீத்தொழில் - வேள்வி. [5] படுகில்-பள்ள நிலத்தில். [6] சோடைகள் - அன்பில்லாதவர்கள்.

விடைநவி லுங்கொடி யானை வெண்கொடி சேர்நெடு மாடம்
கடைநவி லுங்கடம் பூரிற் காதல னைக்கடற் காழி
நடை [7] நவில் ஞானசம் பந்தன் நன்மையா லேத்திய பத்தும்
படைநவில் பாடல்ப யில்வார் பழியொடு பாவமி லாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அமுதகடேசுவரர் ; தேவி—சோதிமின்னம்மை.

---

## 29. திருப்பந்தணை நல்லூர்*

பண் - புறநீர்மை [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

இடறினார் கூற்றைப் பொடிசெய்தார் மதிலை யிவைசொல்லி யுலகெழுந் தேத்தக், கடறினா ராவர் காற்றுளா ராவர் காதலித் துறைதரு கோயில், கொடிறனார் [1] யாதுங் குறைவிலார் தாம்போய்க் கோவணங் கொண்டுகூத் தாடும், படிறனார் [2] போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி [3] யாரே. 1

கழியுளா ரெனவுங் கடலுளா ரெனவுங் காட்டுளார் நாட்டுளா ரெனவும், வழியுளா ரெனவும் மலையுளா ரெனவும் மண்ணுளார் விண்ணுளா ரெனவும், சுழியுளா ரெனவுஞ் சுவடுதா மறியார் தொண்டர்வாய் வந்தன சொல்லும், பழியுளார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. 2

காட்டினா ரெனவும் நாட்டினா ரெனவுங் கடுந்தொழிற் காலனைக் காலால், வீட்டினா ரெனவுஞ் சாந்த வெண்ணீறு பூசியோர் வெண்மதி சடைமேல், சூட்டினா ரெனவுஞ் சுவடுதா மறியார் சொல்லுள சொல்லுநால் வேதப், பாட்டினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. 3

---

[7] நடை ஒழுக்கம். * 'பந்தநல்லூர்' என்றும் பந்தணநல்லூர் என்றும் வழங்கப்பெறும். உமையம்மையார் ஆடிய பந்து வந்தணைந்த ஊர் என்ற காரணத்தால் இப்பெயர் பெற்றது என்பர். [1] கொடிறனார் – கொடுமையார். கொடிறினார் என்றும் பாடம். படிறு—வஞ்சனை ; அமர்நீதியார் சரிதக்குறிப்புமாம். [2] படிறினார் என்றும் பாடம். [3] பசுபதியார்–தலத்துச் சுவாமியின் பெயர்.

முருகினார் பொழில்சூழ் உலகினா ரேத்த மொய்த்தபல் கணங்களின் றுயர்கண், டுருகினா ராகி யுறுதிபோந் துள்ளம் ஒண்மையால் ஒளிதிகழ் மேனி, கருகினா ரெ[4]ல்லாங் கைதொழு தேத்தக் கடலுள்நஞ் சமுதமா வாங்கிப், பருகினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. 4

பொன்னினார் கொன்றை யிருவடங் கிடந்து பொறிகிளர் பூணநூல் புரள, மின்னினார் உருவின் மிளிர்வதோர் அரவம் மேவுவெண் ணீறுமெய் பூசித், துன்னினார் நால்வர்க் கறம்அமர்ந் தருளித் தொன்மையார் தோற்றமுங் கேடும், பன்னினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. 5

ஒண்பொனா ரனைய அண்ணல்வாழ் கெனவும் உமையவள் கணவன்வாழ் கெனவும், அண்பினார் பிரியார் அல்லுநன் பகலும் அடியவர் அடியிணை தொழவே, நண்பினார் எல்லாம் நல்லரென் றேத்த வல்லவர் தீயரென் றேத்தும், பண்பினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. 6

எற்றினார் ஏதும் இடைகொள்வா ரில்லை இருநிலம் வானுலகெல்லை, தெற்றினார்[5] தங்கள் காரண மாகச் செருமலைந் தடியிணை சேர்வான், முற்றினார் வாழும் மும்மதில் வேவ மூவிலைச் சூலமும் மழுவும், பற்றினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. 7

ஒலிசெய்த குழலின் முழவம தியம்ப வோசையால் ஆடலறாத, கலிசெய்த பூதங் கையினா லிடவே காலினாற் பாய்தலும் அரக்கன், வலிகொள்வர் புலியின் உரிகொள்வ ரேனை வாழ்வுநன் றானுமோர் தலையில், பலிகொள்வர் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. 8

சேற்றினார் பொய்கைத் தாமரை யானுஞ் செங்கண்மா லிவரிரு கூறாத், தோற்றினார் தோற்றத் தொன்மையை யறியார் துணைமையும் பெருமையுந் தம்மில், சாற்றினார் சாற்றி யாற்றலோ மென்னச் சரண்கொடுத் தவர்செய்த பாவம், பாற்றினார் போலும் பந்தணை நல்லூர் நின்றஎம் பசுபதி யாரே. 9-10

---

[4] மேனிகருகினார் – விடம்எழுந்ததனால் உடல் கருகிய திருமால் முதலிய தேவர்கள். [5] தெற்றினார் – பகைவர்.

கல்லிசை[6] பூணக் கலையொலி ஓவாக் கழுமல முதுபதி தன்னில், நல்லிசையாளன் புல்லிசை கேளா நற்றமிழ் ஞானசம்பந்தன், பல்லிசை பகுவாய்ப் படுதலை யேந்தி மேவிய பந்தணை நல்லூர், சொல்லிய பாடல் பத்தும்வல் லவர்மேல் தொல்வினை சூழகி லாவே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பசுபதீசுவரர் ; தேவி—காம்பன்னதோளியம்மை.

---

## 30. திருக்கோடிகா*

**பண் - நட்டராகம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

இன்றுநன்று நாளைநன் றென்றுநின்ற இச்சையால்
பொன்றுகின்ற வாழ்க்கையைப் போகவிட்டுப் போதுமின்
மின்தயங்கு சோதியான் வெண்மதி விரிபுனல்
கொன்றைதுன்று சென்னியான் கோடிகாவு சேர்மினே. 1

அல்லல்மிக்க வாழ்க்கையை ஆதரித் திராதுநீர்
நல்லதோர் நெறியினை நாடுதும் நடம்மினோ
வில்லையன்ன வாணுதல் வெள்வளையொர் பாகமாம்
கொல்லை[1] வெள்ளை யேற்றினான் கோடிகாவு சேர்மினே. 2

துக்கமிக்க வாழ்க்கையின் சோர்வினைத் துறந்துநீர்
தக்கதோர் நெறியினைச் சார்தல்செய்யப் போதுமின்
அக்கணிந் தரைமிசை யாறணிந்த சென்னிமேல்
கொக்கிற கணிந்தவன் கோடிகாவு சேர்மினே. 3

பண்டுசெய்த வல்வினை பற்றறக் கெடும்வகை
உண்டுமக் குரைப்பன்நான் ஒல்லைநீர் எழுமினோ
மண்டுகங்கை செஞ்சடை வைத்துமாதொர் பாகமாக்
கொண்டுகந்த மார்பினான் கோடிகாவு சேர்மினே. 4

முன்னைநீர்செய் பாவத்தால் மூர்த்திபாதஞ் சிந்தியா
தின்னநீரி டும்பையில் மூழ்கிநீர் எழும்மினோ[2]

---

[6] கல்லிசை — நூல் கற்கும் இசை. * மூன்றுகோடி முனிவர்கள் பூசித்த காரணம்பற்றி இப்பெயர் பெற்றது. [1] கொல்லை — முல்லைநிலம். [2] வீழ்கிறீரெழும்மினோ என்றும் பாடம்.

பொன்னைவென்ற கொன்றையான் பூதம்பாட ஆடலான்
கொன்னவிலும் வேலினன்[3] கோடிகாவு சேர்மினே. 5

ஏவ[4] மிக்க சிந்தையோ டின்பமெய்த லாமெனப்
பாவமெத் தனையும்நீர் செய்தொரு பயனிலைக்
காவல்மிக்க மாநகர் காய்ந்துவெங் கனல்படக்
கோவமிக்க நெற்றியான் கோடிகாவு சேர்மினே. 6

ஏண[5] ழிந்த வாழ்க்கையை இன்பமென் றிருந்துநீர்
மாண ழிந்த மூப்பினால் வருந்தன்முன்னம் வம்மினோ
பூணல்வெள் ளெலும்பினன் பொன்றிகழ் சடைமுடிக்
கோணல்வெண் பிறையினன் கோடிகாவு சேர்மினே. 7

மற்றிவாழ்க்கை மெய்யெனும் மனத்தினைத் தவிர்ந்துநீர்
பற்றிவாழ்மின் சேவடி பணிந்துவந் தெழுமினோ
வெற்றிகொள் தசமுகன் விறல்கெட இருந்ததோர்
குற்றமில் வரையினன் கோடிகாவு சேர்மினே. 8

மங்குநோய் உறும்பிணி மாயும்வண்ணஞ் சொல்லுவன்
செங்கண்மால் திசைமுகன் சென்றளந்துங் காண்கிலா
வெங்கண்மால் விடையுடை வேதியன் விரும்புமூர்
கொங்குலாம் வளம்பொழிற் கோடிகாவு சேர்மினே. 9

தட்டொடு தழைமயிற் பீலிகொள் சமணரும்
பட்டுடை விரிதுகிலி னர்கள்சொற் பயனிலை
விட்டபுன் சடையினன் மேதகும் முழவொடும்
கொட்டமைந்த ஆடலான் கோடிகாவு சேர்மினே. 10

கொந்தணி குளிர்பொழிற் கோடிகாவு மேவிய
செந்தழ லுருவனைச் சீர்மிகு திறலுடை
அந்தணர் புகலியு ளாயகேள்வி ஞானசம்
பந்தன தமிழ்வல்லார் பாவமான பாறுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கோடிகாவீசுவரர், திரிகோடீசுவரர்;
தேவி—வடிவம்மை, திரிபுரசுந்தரி.

---

[3] கொன்னவில்லும் வேலினன் என்றும் பாடம். [4] ஏவம் - கணை; அம்பு. [5] ஏண் - பெருமை.

## 31. திருமங்கலக்குடி

### பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

### திருச்சிற்றம்பலம்

சீரி னார்மணி யும்மகில்[1] சந்துஞ்செ றிவரை
வாரி நீர்வரு பொன்னிவ டமங்க லக்குடி
நீரின் மாமுனி வன்[2]நெடுங் கைகொடு நீர்தனைப்
பூரித் தாட்டியர்ச் சிக்கஇ ருந்த புராணனே.[3] 1

பணங்கொ ளாடர வல்குல்நல் லார்பயின் றேத்தவே
மணங்கொள் மாமயி லாலும்பொ ழில்மங்க லக்குடி
இணங்கி லாமறை யோரிமை யோர்[4]தொழு தேத்திட
அணங்கி னோடிருந் தானடி யேசர ணாகுமே. 2

கருங்கை யானையின் ஈருரி போர்த்திடு கள்வனார்
மருங்கெ லாம்மண மார்பொழில் சூழ்மங்க லக்குடி
அரும்பு சேர்மலர்க் கொன்றையி னானடி யன்பொடு
விரும்பி யேத்தவல் லார்வினை யாயின வீடுமே. 3

பறையி னோடொலி பாடலும் ஆடலும் பாரிடம்
மறையி னோடியல் மல்கிடு வார்மங்க லக்குடிக்
குறைவி லாநிறை வேகுண மில்குண மேயென்று
முறையி னால்வணங் கும்மவர் முன்னெறி காண்பரே. 4

ஆனி லங்கிளர் ஐந்தும்[5] அவிர்முடி யாடியோர்
மானி லங்கையி னான்மண மார்மங்க லக்குடி
ஊனில் வெண்டலைக் கையுடை யானுயர் பாதமே
ஞான மாகநின் றேத்தவல் லார்வினை நாசமே. 5

தேனு மாயமு தாகிநின் றான்தெளி சிந்தையுள்
வானு மாய்மதி சூடவல் லான்மங்க லக்குடிக்
கோனை நாடொறும் ஏத்திக்கு ணங்கொடு கூறுவார்
ஊன மானவை போயறும் உய்யும்வ கையதே. 6

வேள்படுத்திடு கண்ணினன் மேருவில் லாகவே
வாள ரக்கர்பு ரமெரித் தான்மங்க லக்குடி

---

[1] மகிழ் என்றும் பாடம். [2] மாமுனிவன் — அகத்தியன். [3] புராணன்—தலத்துச் சுவாமியின்பெயர். [4] மறையோனிமையோர் என்றும் பாடம். [5] ஆனிலங்கிளர் ஐந்து—பஞ்சகௌவியம்.

ஆளும் ஆதிப்பி ரானடி கள்ளடைந் தேத்தவே
கோளு நாளவை போயறுங் குற்றமில் லார்களே. 7

பொலியும் மால்வரை புக்கெடுத் தான்புகழ்ந் தேத்திட
வலியும் வாளொடு நாள்கொடுத் தான்மங்க லக்குடிப்
புலியின் ஆடையி னானடி யேத்திடும் புண்ணியர்
மலியும் வானுல கம்புக வல்லவர் காண்மினே. 8

ஞாலம் முன்படைத் தான்நளிர் மாமலர் மேலயன்
மாலுங் காணவொ ணாஎரி யான்மங்க லக்குடி
ஏல வார்குழ லாளொரு பாகமி டங்கொடு
கோல மாகிநின் றான்குணங் கூறுங் குணமதே. 9

மெய்யின் மாசினர் மேனிவி ரிதுவ ராடையர்[6]
பொய்யை விட்டிடும் புண்ணியர் சேர்மங்க லக்குடிச்
செய்ய மேனிச்செ ழும்புனற் கங்கைசெ றிசடை
ஐயன் சேவடி யேத்தவல் லார்க்கழ காகுமே. 10

மந்த மாம்பொழில் சூழ்மங்க லக்குடி மன்னிய
எந்தை யையெழி லார்பொழிற் காழியர் காவலன்
சிந்தை செய்தடி சேர்த்திடு ஞானசம் பந்தன்சொல்
முந்தி யேத்தவல் லாரிமை யோர்முத லாவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—புராணவரதேசுவரர்; தேவி—மங்களநாயகி.

---

## 32. திருப்பனந்தாள்

### பண் - பஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கண்பொலி நெற்றியினான் திகழ் கையிலோர் வெண்மழுவான்
பெண்புணர் கூறுடையான் மிகு பீடுடை மால்விடையான்
விண்பொலி மாமதிசேர் தரு செஞ்சடை வேதியனூ[1]ர்
தண்பொழில் சூழ்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே.[2] 1

---

[6] துகிலாடையர் என்றும் பாடம். [1] செஞ்சடை வேதியன் — தலத்துச் சுவாமியின் பெயர். [2] திருப்பனந்தாள் — ஊரின் பெயர்; தாடகையீச்சரம்—கோயிலின் பெயர். தாடகை என்னும் அசுரமாது பூசித்தமையால் இப்பெயர் பெற்றது.

விரித்தவன் நான்மறையை மிக்க் விண்ணவர் வந்திறைஞ்ச
எரித்தவன் மூப்புரங்கள் இய லேழுல கில்லுயிரும்
பிரித்தவன் செஞ்சடை[3]மேல் நிறை பேரொலி வெள்ளந்தன்னைத்
தரித்தவன் ஊர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 2

உடுத்தவன் மானுரிதோல் கழ லுள்கவல் லார்வினைகள்
கெடுத்தருள் செய்யவல்லான் கிளர் கீதமொர் நான்மறையான்
மடுத்தவன் நஞ்சமுதா மிக்க மாதவர் வேள்வியைமுன்
தடுத்தவன் ஊர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 3

சூழ்தரு வல்வினையும் உடல் தோன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேல் மிக ஏத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் அனல் பொங்கர வும்புனைந்த
தாழ்சடை யான்[4] பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 4

விடம்படு கண்டத்தினன் இருள்[5] வெள்வளை மங்கையொடும்
நடம்புரி கொள்கையினன் அவன் எம்மிறை சேருமிடம்
படம்புரி நாகமொடு திரை பன்மணி யுங்கொணரும்
தடம்புனல்[6] சூழ்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 5

விடையுயர் வெல்கொடியான் அடி விண்ணொடு மண்ணுமெல்லாம்
புடைபட ஆடவல்லான் மிகு பூதமார் பல்படையான்
தொடைநவில்[7] கொன்றையொடுவன்னி துன்னெருக் கும்அணிந்த
சடையவன்[8] ஊர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 6

மலையவன் முன்பயந்த மட மாதையொர் கூறுடையான்
சிலைமலி வெங்கணையாற் புரம் மூன்றவை செற்றுகந்தான்
அலைமலி தண்புனலும் மதி ஆடர வும்அணிந்த
தலையவன் ஊர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 7

செற்றரக் கன்வலியைத் திரு மெல்விர லால்அடர்த்து
முற்றும்வெண் ணீறணிந்த திரு மேனியன் மும்மையினன்[9]

---

[3] செஞ்சடை — தலத்துச்சுவாமியின் பெயர்க்குறிப்பு. [4] சடையான்—தலத்துச்சுவாமியின் பெயர். [5] இருள்—சங்காரகாலம்; இரவு. [6] புனல்—மண்ணியாறு; காவிரியின் கிளை. [7] நவில்—போன்ற; உவமவுருபு. [8] சடையவன் — தலத்துச்சுவாமியின் பெயர். [9] மும்மையினன்—இம்மை, அம்மை, வீடு மூன்றுக்கும் தலைவனாகிய நாயகன்.

புற்றர வம்புலியின் உரி தோலொடு கோவணமும்
தற்றவன்[10] ஊர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 8

வின்மலை நாணரவம் மிகு வெங்கனல் அம்பதனால்
புன்மைசெய் தானவர்தம் புரம் பொன்றுவித் தான்புனிதன்
நன்மலர் மேலயனும் நண்ணும் நாரண னும் அறியாத்
தன்மையன் ஊர்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 9

ஆதர் சமணரொடும் மடை யைந்துகில் போர்த்துழலும்
நீதர்[11] உரைக்குமொழி யவை கொள்ளன்மின் நின்மலனூர்
போதவிழ் பொய்கை[12]தனுள் திகழ் புள்ளிரி யப்பொழில்வாய்த்
தாதவி ழும்பனந்தாள் திருத் தாடகை யீச்சரமே. 10

தண்வயல் சூழ்பனந்தாள் திருத் தாடகை யீச்சரத்துக்
கண்ணய லேபிறையான் அவன் றன்னைமுன் காழியர்கோன்
நண்ணிய செந்தமிழால் மிகு ஞானசம் பந்தன்நல்ல
பண்[13]ணியல் பாடல்வல்லார் அவர் தம்வினை பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—செஞ்சடையப்பர்; தேவி—பெரிய நாயகி

---

## 33. திருச்சேய்ஞலூர்*

பண் - பழந்தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நூல[1]டைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மால[2]டைந்த நால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழல்மேவி யருமறை சொன்னதென்னே[3]
சேலடைந்த தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே.[4] 1

---

[10] தற்றவன் — அணிந்தவன். [11] நீதர்—நீசர்; கீழ் மக்கள். [12] பொய்கை—இங்குப் பிரமதீர்த்தம். [13] பண்—பதிகப்பண்; பஞ்சமம்.
* சேய் (முருகக் கடவுள்) தாம் உறைதற்கு நல்ல ஊர் என்று உவந்தமையால் இப்பெயர் பெற்றது. சேய் நல்லூர் என்பது சேய்ஞலூர் என ஆயிற்று: சண்டேச்சுர நாயனார் பிறந்த தலம்.
[1] நூல் — வேதசிவாகமங்கள். [2] மால் - ஐயப்பாடு; காதலுமாம்.
[3] சொன்னது என்னே - சொன்ன பெருமை என்னே. [4] இச்செய்யுள் இறைவன் சனகாதி நால்வர்க்கு உபதேசித்ததைக் குறிக்கும்.

கீறடைந்த மேனியின்கண் நேரிழை யாளொருபால்
கூறடைந்த கொள்கையன்றிக் கோல வளர்சடைமேல்
ஆறடைந்த திங்கள்சூடி யரவம் அணிந்ததென்னே
சேறடைந்த தண்கழனிச்[5] சேய்ஞலூர் மேயவனே. 2

ஊனடைந்த வெண்டலையி னோடுப லிதிரிந்து
கானடைந்த பேய்களோடு பூதங்க லந்துடனே
மானடைந்த நோக்கி[6]காண மகிழ்ந்தெரி யாடலென்னே
தேனடைந்த சோலைமல்கு சேய்ஞலூர் மேயவனே. 3

வீணடைந்த மும்மதிலும் வில்மலை யாஅரவின்
நாணடைந்த வெஞ்சரத்தால் நல்லெரி யூட்டலென்னே
பாணடைந்த வண்டுபாடும் பைம்பொழில் சூழ்ந்தழகார்
சேணடைந்த மாடமல்கு சேய்ஞலூர் மேயவனே. 4

பேயடைந்த காடிடமாப் பேணுவ தன்றியும்போய்
வேயடைந்த தோளியஞ்ச வேழம் உரித்ததென்னே
வாயடைந்த நான்மறையா றங்கமோ டைவேள்வித்
தீயடைந்த செங்கையாளர் சேய்ஞலூர் மேயவனே. 5

காடடைந்த ஏனமொன்றின் காரண மாகிவந்து
வேடடைந்த வேடனாகி விசயனொ டெய்ததென்னே
கோடடைந்த மால்களிற்றுக் கோச்செங்க ணாற்கருள்செய்
சேட[7]டைந்த செல்வர்வாழுஞ் சேய்ஞலூர் மேயவனே. 6

பீர[8]டைந்த பாலதாட்டப் பேணாத வன்தாதை
வேர[9]டைந்து பாய்ந்ததாளை வேர்த்தடிந் தான்றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமைவ குத்ததென்னே
சீரடைந்த கோயில்மல்கு சேய்ஞலூர் மேயவனே.[10] 7

மாவடைந்த தேரரக்கன் வலிதொலை வித்தவன்றன்
நாவடைந்த பாடல்கேட்டு நயந்தருள் செய்ததென்னே
பூவடைந்த நான்முகன்போற் பூசுரர் போற்றிசெய்யும்
சே[11]வடைந்த வூர்தியானே சேய்ஞலூர் மேயவனே. 8

---

[5] சேறடைந்தவார் கழனிச் என்றும் பாடம். [6] நோக்கி-நோக்குடையவள்; உமைஅம்மையார். [7] சேடு - பெருமை. [8]பீர்-முலையின் வழிக் கறந்த பால். [9] வேர்-வெயர்வை; கோபமுமாம். [10] இச்செய்யுள் சண்டீச நாயனார் வரலாற்றைக்குறிக்கும். [11] சே - இடபம்.

காரடைந்த வண்ணனேடு கனகம னையானும்[13]
பாரடைந்தும்[14] விண்பறந்தும் பாதமு டிகாணுர்
சீரடைந்து வந்துபோற்றச் சென்றருள் செய்ததென்னே
தேரடைந்த மாமறுகிற் சேய்ஞலூர் மேயவனே. 9

மாசடைந்த மேனியாரும் மனந்திரி யாதகஞ்சி
நேசடைந்த வூணினரும் நேசமி லாததென்னே
வீசடைந்த தோகையாட விரைகம ழும்பொழில்வாய்த்
தேசடைந்த வண்டுபாடுஞ் சேய்ஞலூர் மேயவனே. 10

சேயடைந்த சேய்ஞலூரிற் செல்வன சீர்பரவித்
தோய[15]டைந்த வண்வயல்சூழ் தோணிபு ரத்தலைவன்
சாய[16]டைந்த ஞானமல்கு சம்பந்தன் இன்னுரைகள்
வாயடைந்து பாடவல்லார் வானுல காள்பவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சத்தியகிரீசுவரர்; தேவி—சகிதேவியார்.

---

## 34. திருந்துதேவன்குடி*

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மருந்து[1] வேண் டில்இவை மந்திரங் கள்இவை
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்இவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
அருந்தவத் தோர்தொழும் அடிகள்வே டங்களே. 1

வீதிபோக் கா[2] வன வினையைவீட் டுவ்வன
ஓதியோர்க் கப்படாப் பொருளையோர் விப்பன

---

13 கனகமனையான் - பிரமன். 14 பாரிடந்தும் என்றும் பாடம். 15 தோய் - தோயம்; கடைக்குறை; நீர். 16 சாய்-சார்பு; புகழுமாம். * இத்தலம் சுற்றிலும் வீடுகள் ஒன்றுமின்றி வயல் மத்தியில் தனிக் கோயிலாக உள்ளது. நண்டு பூசித்தமையால் சுவாமிக்குக் 'கற்கடகேசுவரர்' எனப் பெயர் வழங்குகிறது. 1 மருந்து-தல அம்மையின் பெயர்க் குறிப்பு. 2 வீதிபோக்கு - விதியையும் வெல்வது; விதி : வீதி என முதனீண்டது.

தீதில்தே வன்குடித் தேவர்தே வெய்திய
ஆதியந் தம்மிலா அடிகள்வே டங்களே. 2

மானமாக் குவ்வன மாசுநீக் குவ்வன
வானவ[3]யுள் கச்செலும் வழிகள்காட் டுவ்வன
தேனும்வண் டும்இசை பாடுந்தே வன்குடி
ஆனஞ்சா டும்முடி யடிகள்வே டங்களே. 3

செவிகளார் விப்பன சிந்தையுட் சேர்வன
கவிகள்பா டுவ்வன கண்குளிர் விப்பன
புவிகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி
அவிகளுய்க் கப்படும் அடிகள்வே டங்களே. 4

விண்ணுலா வுந்நெறி வீடுகாட் டுந்நெறி
மண்ணுலா வுந்நெறி மயக்கந்தீர்க் குந்நெறி
தெண்ணிலா வெண்மதி தீண்டுதே வன்குடி
அண்ணலான் ஏறுடை யடிகள்வே டங்களே. 5

பங்கமென் னப்படர் பழிகளென் னப்படா
புங்கமெ[4]ன் னப்படர் புகழ்களென் னப்படும்
திங்கள்தோ யும்பொழில் தீண்டுதே வன்குடி
அங்கமா றுஞ்சொன்ன அடிகள்வே டங்களே. 6

கரைதலொன் றும்மிலை கருதவல் லார்தமக்
குரையிலூ னம்மிலை உலகினின் மன்னுவர்
திரைகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி
அரையில்வெண் கோவணத் தடிகள்வே டங்களே. 7

உலகமுட் குந்திறல் லுடையரக் கன்வலி
விலகுபூ தக்கணம்[5] வெருட்டும்வே டத்தின
திலகமா ரும்பொழில் சூழ்ந்ததே வன்குடி
அலர்தயங் கும்முடி யடிகள்வே டங்களே. 8

துளக்கமில் லாதன தூயதோற் றத்தன
விளக்கமாக் குவ்வன வெறிவண்டா ரும்பொழில்
திளைக்குந்தே வன்குடித் திசைமுக னொடுமால்
அளக்கவொண் ணவண்ணத் தடிகள்வே டங்களே. 9

---

[3] வான் - சிவலோகம். [4] புங்கம் - உயர்வு. [5] விலகு பூதங்கணம் என்றும் பாடம்.

செருமரு தண்துவர்த் தேரமண் ஆதர்கள்
உருமரு வப்படாத் தொழும்பர்தம் உரைகொளேல்
திருமரு வும்பொய்கை சூழ்ந்ததே வன்குடி
அருமருந் தாவன அடிகள்வே டங்களே. 10

சேடர்தே வன்குடித் தேவர்தே வன்றனை
மாடமோங் கும்பொழில் மல்குதண் காழியான்
நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன[6]
பாடல்பத் தும்வல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி-தேவதேவேசர், கற்கடகேசுவரர் ; தேவி-அருமருந்தம்மை.

## 35. திருவியலூர்

பண் - நட்டபாடை [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

குரவங்கமழ் நறுமென்குழல் அரிவையவள் வெருவப்
பொருவெங்கரி படவென்றதன் உரிவையுடல் அணிவோன்
அரவும்மலை புனலும்இள மதியும்நகு தலையும்
விரவுஞ்சடை யடிகட்கிடம் விரிநீர்விய லூரே. 1

ஏறார்தரும் ஒருவன்பல வுருவன்நிலை யானான்
ஆறார்தரு சடையன்அன லுருவன்புரி வுடையான்[1]
மாறார்புரம் எரியச்சிலை வளைவித்தவன் மடவாள்
வீறார்தர நின்றானிடம் விரிநீர்விய லூரே. 2

செம்மென்சடை யவைதாழ்வுற மடவார்மனை தோறும்
பெய்ம்மின்பலி யெனநின்றிசை பகர்வாரவ ரிடமாம்
உம்மென்றெழும் அருவித்திரள் வரைபற்றிட வுரைமேல்
விம்மும்பொழில் கெழுவும்வயல் விரிநீர்விய லூரே. 3

அடைவாகிய அடியார்தொழ அலரோன்தலை யதனில்
மடவாரிடு பலிவந்துண லுடையானவ னிடமாம்
கடையார்தர அகிலார்கழை முத்தம்நிரை சிந்தி
மிடையார்பொழில் புடைசூழ்தரு விரிநீர்விய லூரே. 4

---

[6] ஞானசம்பந்தனற் என்றும் பாடம். [1] புலியுடையான் என்றும் பாடம்.

எண்ணார்தரு பயனாயய னவனாய்மிகு கலையாய்ப்
பண்ணார்தரு மறையாயுயர் பொருளாயிறை யவனாய்க்
கண்ணார்தரும் உருவாகிய கடவுள்ளிட மெனலாம்
விண்ணோரொடு மண்ணோர்தொழும் விரிநீர்விய லூரே. 5

வசைவிற்கொடு வருவேடுவ னவனாய்நிலை யறிவான்
திசையுற்றவர் காணச்செரு மலைவான்நிலை யவனை
அசையப்பொரு தசையாவணம் அவனுக்குயர் படைகள்
விசையற்கருள் செய்தானிடம் விரிநீர்விய லூரே. 6

மானார்அர வுடையான்இர வுடையான்பகல் நட்டம்
ஊனார்தரும் உயிரானுயர் விசையான்விளை பொருள்கள்
தானாகிய தலைவன்னென நினைவாரவ ரிடமாம்
மேனாடிய[2] விண்ணோர்தொழும் விரிநீர்விய லூரே. 7

பொருவாரெனக் கெதிராரெனப் பொருப்பையெடுத் தான்றன்
கருமால்வரை கரந்தோளுரங் கதிர்நீள்முடி நெரிந்து
சிரமாயின கதறச்செறி கழல்சேர்திரு வடியின்
விரலாலடர் வித்தானிடம் விரிநீர்விய லூரே. 8

வளம்பட்டலர் மலர்மேலயன் மாலும்மொரு வகையால்
அளம்பட்ட[3]றி வொண்ணாவகை அழலாகிய அண்ணல்
உளம்பட்டெழு தழல்தூணதன் நடுவேயொரு வுருவம்[4]
விளம்பட்ட[5]ருள் செய்தானிடம் விரிநீர்விய லூரே. 9

தடுக்கா[6]ல்உடல் மறைப்பாரவர் தவர்சீவர மூடிப்
பிடக்கே[7]யுரை செய்வாரொடு பேணார்நமர் பெரியோர்
கடற்சேர்தரு விடமுண்டமு தமரர்க்கருள் செய்த
விடைச்சேர்தரு கொடியானிடம் விரிநீர்விய லூரே.[8] 10

விளங்கும்பிறை சடைமேலுடை விகிர்தன்வியலூரைத்[9]
தளங்கொண்டதொர் புகலித்தகு தமிழ்ஞான சம்பந்தன்

---

[2] மேனாடியர் என்றும் பாடம். [3] அளம்பட்டு—வருந்தி. [4] இவ்வடிகள் இலிங்கோற்பவ மூர்த்தியைக் குறிப்பன. [5] விளம்பட்டு — வெளிப்பட்டு. [6] தடுக்கு — பாய். [7] பிடக்கே – பிடகநூல்; இது புத்த சமயத்தார்க்கு உரியது. [8] இங்குக் காவிரி பரந்து செல்லுதலின் 'விரிநீர்' வியலூர் என்று பாடல் தோறும் கூறப்பட்டுள்ளது. [9] இது 'பண்டாரவாடைத் திருவிசலூர்' என வழங்கப்படுகிறது.

துளங்கில்தமிழ் பரவித்தொழும் அடியாரவ ரென்றும்
விளங்கும்புக ழதனோடுயர் விண்ணும்உடை யாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—யோகாநந்தேசுவரர்; தேவி—சாந்த நாயகி.

---

## 36. திருஇன்னம்பர்*

திருமுக்கால். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எண்டிசைக் கும்புகழ் இன்னம்பர் மேவிய
வண்டிசைக் குஞ்சடை யீரே
வண்டிசைக் குஞ்சடை யீருமை வாழ்த்துவார்
தொண்டிசைக் கு[1]ந் தொழி லோரே. 1

யாழ்நரம் பின்னிசை இன்னம்பர் மேவிய
தாழ்தரு சடைமுடி யீரே
தாழ்தரு சடைமுடி யீருமைச் சார்பவர்
ஆழ்துயர் அருவினை யிலரே. 2

இளமதி நுதலியோ டின்னம்பர் மேவிய
வளமதி[2] வளர்சடை யீரே.
வளமதி[3] வளர்சடை யீருமை வாழ்த்துவார்
உளமதி மிகவுடை யோரே. 3

இடிகுரல் இசைமுரல் இன்னம்பர் மேவிய
கடிகமழ் சடைமுடி யீரே
கடிகமழ் சடைமுடி யீரும கழல்தொழும்
அடியவர் அருவினை யிலரே. 4

இமையவர் தொழுதெழும் இன்னம்பர் மேவிய
உமையொரு கூறுடை யீரே
உமையொரு கூறுடை யீருமை உள்குவார்
அமைகில ராகிலர் அன்பே. 5

---

* 'இன்னம்பூர்' என வழங்கப்பெறும். இனன் நம்பு ஊர் என்பது இன்னம்பர் என மருவிற்று என்பர். 1 இசைக்கும் - இசைவிக்கும். 2 3 வளர்மதி என்றும் பாடம்.

எண்ணரும் புகழுடை இன்னம்பர் மேவிய
தண்ணருஞ்[4] சடைமுடி யீரே
தண்ணருஞ்[5] சடைமுடி யீருமைச் சார்பவர்
விண்ணவர் அடைவுடை யோரே. 6

எழில்திக ழும்பொழில் இன்னம்பர் மேவிய
நிழல்திகழ் மேனியி னீரே
நிழல்திகழ் மேனியி னீருமை நினைபவர்
குழறிய கொடுவினை யிலரே. 7

ஏத்தரும் புகழணி இன்னம்பர் மேவிய
தூர்த்தனைத் தொலைவுசெய் தீரே
தூர்த்தனைத் தொலைவுசெய் தீருமைத் தொழுபவர்[6]
கூர்த்தநற் குணமுடை யோரே. 8

இயலுளோர்[7] தொழுதெழும் இன்னம்பர் மேவிய
அயனுமால் அறிவரி யீரே
அயனுமால் அறிவரி யீரும தடிதொழும்
இயலுளார்[8] மறுபிறப் பிலரே. 9

ஏரமர் பொழிலணி இன்னம்பர் மேவிய
தேரமண் சிதைவுசெய் தீரே
தேரமண் சிதைவுசெய் தீருமைச் சேர்பவர்
ஆர்துயர் அருவினை யிலரே. 10

ஏடமர் பொழிலணி இன்னம்பர் ஈசனை
நாடமர் ஞானசம் பந்தன்
நாடமர் ஞானசம் பந்தன நற்றமிழ்
பாடவல் லார்பழி யிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—தான்றேன்றியீசர், எழுத்தறிந்தநாதர்;
தேவி—சௌந்தரநாயகி, பூங்கொம்புநாயகி.

---

[4] [5] தண்ணறுஞ்சடை என்றும் பாடம். [6] தொழுமவர் என்றும் பாடம். [7] இயலுளோர்-ஆன்ம இலக்கணம் அறிந்த பெரியோர்கள். [8] மயலுளார் என்றும் பாடம்.

# 37. திருப்புறம்பயம்*

திருவிராகம். பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மறம்பய மலைந்தவர் மதிற்பரி சறுத்தனை
நிறம்[1] பசுமை செம்மையொ டிசைந்துனது நீர்மை
திறம்[2] பய னுறும்பொருள் தெரிந்துணரு நால்வர்க்
கறம்பய னுரைத்தனை புறம்பயம் அமர்ந்தோய். 1

விரித்தனை திருச்சடை யரித்தொழுகு வெள்ளம்
தரித்தனை யதன்றியும் மிகப்பெரிய காலன்
எருத்திற வுதைத்தனை இலங்கிழையொர் பாகம்
பொருத்துதல் கருத்தினை புறம்பயம் அமர்ந்தோய். 2

விரிந்தனை குவிந்தனை விழுங்குயி ருமிழ்ந்தனை
திரிந்தனை குருந்தொசி பெருந்தகையு நீயும்
பிரிந்தனை புணர்ந்தனை பிணம்புகு மயானம்
புரிந்தனை மகிழ்ந்தனை புறம்பயம் அமர்ந்தோய். 3

வளங்கெழு கடும்புன லொடுஞ்சடை யொடுங்கத்
துளங்கம ரிளம்பிறை சுமந்தது விளங்க
உளங்கொள வளைந்தவர் சுடுஞ்சுடலை நீறு
புளங்கொள[3] விளங்கினை புறம்பயம் அமர்ந்தோய். 4

பெரும்பிணி பிறப்பினொ டிறப்பிலையொர் பாகம்
கரும்பொடு படுஞ்சொலின் மடந்தை[4]யை மகிழ்ந்தோய்
சுரும்புண அரும்பவிழ் திருந்தியெழு கொன்றை
விரும்பினை புறம்பயம் அமர்ந்தஇறை யோனே. 5

அனற்படு தடக்கையவ ரெ[5]த்தொழில ரேனும்
நினைப்புடை மனத்தவர் வினைப்பகை[6]யு நீயே

---

* பிரளயவெள்ளம் தலத்துக்குள் புகாமல் வெளியில் நின்றமையின் 'புறம்பயம்' எனப் பெயர் பெற்றது. புறம்—வெளி; பயம்—நீர். புறம்பு+அயம் என்றும் பிரிக்கலாம்; அயம் — நீர். [1] நிறம்—நீர்மை. [2] திறம்—இசைக்கூறுபாடுகள். [3] புலங்கிள என்றும் பாடம். [4] கரும்பொடு படுஞ்சொலின் மடந்தை—(கரும்படுசொல்லம்மை) தல அம்மையின் பெயர். [5] அனற்படுதடக்கையவர் — அந்தணர். [6] வினைப்பகை — வினைக்குப் பகை.

தனற்படு சுடர்ச்சடை தனிப்பிறையொ டொன்றப்
புனற்படு கிடக்கையை புறம்பயம் அமர்ந்தோய். 6

மறத்துறை மறுத்தவர்[6] தவத்தடிய ருள்ளம்
அறத்துறை யொறுத்துன தருட்கிழமை[7] பெற்ருேர்
திறத்துள திறத்தினை மதித்தகல நின்றும்
புறத்துள திறத்தினை[8] புறம்பயம் அமர்ந்தோய். 7

இலங்கைய ரிறைஞ்சிறை விலங்கலின் முழங்க
உலங்[9]கெழு தடக்கைக ளடர்த்திடலு மஞ்சி
வலங்கொள் எழுந்தவன் நலங்கவின அஞ்சு
புலங்களை விலங்கினை புறம்பயம் அமர்ந்தோய் 8

வடங்கெட நுடங்குண இடந்தவிடை யல்லிக்
கிடந்தவன் இருந்தவன் அளந்துணர லாகார்
தொடர்ந்தவ ருடம்பொடு நிமிர்ந்துடன் வணங்கப்
புடங்கருள்செய் தோன்றினை புறம்பயம் அமர்ந்தோய். 9

விடக்கொ[10]ருவர் நன்றெென விடக்கொருவர் தீதென[11]
உடற்குடை களைந்தவ ருடம்பினை மறைக்கும்
படக்கர்[12]கள் பிடக்கு[13]ரை படுத்துமையோர் பாகம்
அடக்கினை புறம்பயம் அமர்ந்தவுர வோனே. 10

கருங்கழி பொருந்திரை கரைக்குலவு முத்தம்
தருங்கழு மலத்திறை தமிழ்க்கிழமை ஞானன்
சுரும்பவிழ் புறம்பயம் அமர்ந்ததமிழ் வல்லார்
பெரும்பிணி[14] மருங்கற ஒருங்குவர் பிறப்பே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சாட்சிநாதர்; தேவி—கரும்படுசொல்லம்மை.

---

[6] மறுத்தவர் – கொன்றவர்; அதனுட் செல்லாதவர். [7] அருட்கிழமை – அருளுக்கு உரியராந் தன்மை. [8] அறத்துளதிறத்தினை என்றும் பாடம். [9] உலம் – திரண்டகல். [10] விடக்கு – புலால். [11] இவ்வடி முறையே புத்தர், சமணர் கொள்கைகளைக் குறிக்கும். [12] படக்கர் – கீழ்கள். [13] பிடக்கு – பொய்; வஞ்சனை. [14] பெரும்பிணி – ஆணவம்.

## 38. திருவிசயமங்கை*

**பண் - காந்தாரபஞ்சமம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மருவமர் குழலுமை பங்கர் வார்சடை
அரவமர் கொள்கையெம் அடிகள் கோயிலாம்
குரவமர் சுரபுன்னை கோங்கு வேங்கைகள்[1]
விரவிய பொழிலணி விசய மங்கையே.[2] 1

கீதமுன் இசைதரக் கிளரும் வீணையர்
பூதமுன் இயல்புடைப் புனிதர் பொன்னகர்
கோதனம் வழிபடக் குலவு நான்மறை
வேதியர் தொழுதெழ விசய மங்கையே. 2

அக்கர வரையினர் அரிவை பாகமாத்
தொக்கநல் விடையுடைச்[3] சோதி தொன்னகர்
தக்கநல் வானவர் தலைவர் நாடொறும்
மிக்கவர் தொழுதெழு விசய மங்கையே. 3

தொடைமலி இதழியுந் துன்எ ருக்கொடு
புடைமலி சடைமுடி யடிகள் பொன்னகர்
படைமலி மழுவினர் பைங்கண் மூரிவெள்
விடைமலி கொடியணல் விசய மங்கையே. 4

தோடமர் காதினன் துதைந்த நீற்றினன்
ஏடமர் கோதையோ டினித மர்விடம்
காடமர் மாகரி கதறப் போர்த்ததோர்
வேடம துடையணல் விசய மங்கையே. 5

மைப்புரை கண்ணுமை பங்கன் வண்டழல்
ஒப்புரை[4] மேனியெம் முடைய வன்னகர்
அப்பொடு மலர்கொடங் கிறைஞ்சி வானவர்
மெய்ப்பட அருள்புரி விசய மங்கையே. 6

---

* விசயன் (அருச்சுனன்) வழிபட்டு வரம் பெற்றமையால் இப்பெயர் பெற்றது. [1] குரா—சுரபுன்னை—கோங்கு—வேங்கை - இவை கோட்டுப் பூக்கள். [2] விசயமங்கையே அடிகள் கோவிலாம் என்க. [3] தொக்கநல் வினையுடைச் என்றும் பாடம். [4] ஒப்புஉரை – ஒப்பாகச் சொல்லப்பட்ட.

இரும்பொனின் மலை[4] வில்லின் எரிச ரத்தினால்
வரும்புரங் களைப்பொடி செய்த மைந்தனார்
சுரும்பமர் கொன்றையுந் தூய மத்தமும்
விரும்பிய சடையணல் விசய மங்கையே. 7

உளங்கைய இருபதோ டொருபதும்[5] கொடாங்
களந்தரும் வரையெடுத் திடும்அ ரக்கனைத்
தளர்ந்துடல் நெரிதர அடர்த்த தன்மையன்
விளங்கிழை யொடும்புகும் விசய மங்கையே. 8

மண்ணினை யுண்டவன் மலரின் மேலுறை
அண்ணல்கள் தமக்களப் பரிய அத்தனார்
தண்ணறுஞ் சாந்தமும் பூவும் நீர்கொடு
விண்ணவர் தொழுதெழு விசய மங்கையே. 9

கஞ்சியுங் கவளமுண் கவணர்[6] கட்டுரை
நஞ்சினுங் கொடியன நமர்கள் தேர்கிலார்
செஞ்சடை முடியுடைத் தேவன் நன்னகர்
விஞ்சையர் தொழுதெழு விசய மங்கையே. 10

விண்ணவர் தொழுதெழு விசய மங்கையை
நண்ணிய புகலியுள் ஞான சம்பந்தன்
பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லவர்
புண்ணியர் சிவகதி புகுதல் திண்ணமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—விசயநாதர்; தேவி—மங்கைநாயகி.

---

## 39. திருவைகாவூர் [திருவைகாவில்]

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**கோ**ழைமிட றாககவி கோளுமில வாகஇசை கூடுவகையால்,
ஏழையடி யாரவர்கள் யாவைசொன சொல்மகிழும் ஈசனிடமாம்,
தாழை[1] யிள நீர்முதிய காய்கமுகின் வீழநிறை தாறுசிதறி,
வாழையுதிர் வீழ்கனிகள் ஊறிவயல் சேறுசெயும் வைகாவிலே. 1

---

[4] பொனின்மலை - மேரு. [5] உளங்கையி லிருபதோடொரு என்றும் பாடம். [6] கவணர் - கீழ்கள். [1] தாழை - தென்னை.

அண்டமுறு மேருவரை யங்கிகணை நாணரவ தாகஎழிலார்,
விண்டவர்[2]த முப்புரமெ ரித்தவிகிர் தன்னவன்விரும்புமிடமாம்,
புண்டரிக மாமலர்கள் புக்குவிளை யாடுவயல் சூழ்தடமெலாம்,
வண்டினிசை பாடஅழ கார்[3]குயில்மி ழற்றுபொழில் வைகாவிலே. 2

ஊனமில ராகியுயர் நற்றவமெய் கற்றவையு ணர்ந்தஅடியார்,
ஞானமிக நின்றுதொழ நாளுமருள் செய்யவல நாதனிடமாம், ஆன
வயல் சூழ்தருமல் சூழியரு கேபொழில்கள் தோறும்அழகார்,
வானமதி யோடுமழை நீள்முகில்கள் வந்தணவும் வைகாவிலே. 3

இன்னவுரு இன்னநிறம் என்றறிவ தேலரிது நீதிபலவும், தன்ன
வுரு வாமெனமி குத்தவன் நீதி[4]யோடு தானமர்விடம், முன்னை
வினை போய்வகையி னுல்முழு துணர்ந்துமுயல் கின்றமுனிவர், மன்ன
இருபோதுமரு வித்தொழுது சேரும்வயல் வைகாவிலே. 4

வேதமொடு வேள்விபல வாயினமி குத்துவிதி யாறுசமயம்,
ஓதியுமு ணர்ந்துமுள தேவர்தொழ நின்றருள்செ யொருவனிடமாம்,
மேதகைய கேதகைகள் புன்னையொடு ஞாழலவை மிக்கஅழகால்,
மாதவிம ணங்கமழ வண்டுபல பாடுபொழில் வைகாவிலே. 5

நஞ்சமுது செய்தமணி கண்டன்நமை யாளுடைய ஞான
முதல்வன், செஞ்சடையி டைப்புனல்க ரந்தசிவ லோகன்அமர்
கின்றஇடமாம், அஞ்சுடரொ[5] டாறுபத மே[6]ழின்இசை யெண்
ணரிய வண்ணமுளவாய், மைஞ்சரொ[7]டு மாதர்பல ருந்தொழுது
சேரும்வயல் வைகாவிலே. 6

நாளுமிகு பாடலொடு ஞானமிகு நல்லமலர் வல்லவகையால்,
தோளினொடு கைகுளிர வேதொழும வர்க்கருள்செய் சோதியிடமாம்,
நீளவளர் சோலைதொறும் நாளிபல துன்றுகனி நின்றதுதிர,
வாளைகுதி கொள்ளமது நாறமலர் விரியும்வயல் வைகாவிலே. 7

கையிருப தோடுமெய்க லங்கிடவி லங்கலை[8]யெ டுத்தகடி
யோன், ஐயிருசி ரங்களையொ ருங்குடன்நெ ரித்தஅழ கன்றனிட

---

[2] விண்டவர்-பகைவர். [3] னிசைபதாடி யழகார் என்றும் பாடம். [4] தவநீதி என்றும் பாடம். [5] அஞ்சுடர் - தீபம். [6] ஆறுபதம்- பிரணவ முதலாகிய பஞ்சாட்சரம். [7] மைஞ்சர்-மைந்தர் என்பதன் திரிபு. [8] விலங்கல் - மலை.

மாம், கையின்மலர் கொண்டுநல காலையொடு மாலைகரு திப்பல விதம், வையகமெ லா ம ரு வி நின்றுதொழு தேத்துமெழில் வைகாவிலே. 8

அந்தமுதல் ஆதிபெரு மானமரர் கோனையயன் மாலுமிவர் கள், எந்தைபெரு மான்இறைவன் என்றுதொழ நின்றருள்செ யீசனிடமாம், சிந்தைசெய்து பாடும்அடி யார்பொடிமெய் பூசி யெழு தொண்டரவர்கள், வந்துபல சந்தமலர் முந்தியணை யும்பதி நல் வைகாவிலே. 9

ஈசனெமை யாளுடைய எந்தைபெரு மான்இறைவ னென்று தனையே, பேசுதல்செ யாஅமணர் புத்தரவர் சித்தமணை யாஅவ னிடம், தேசமதெ லாமருவி நின்றுபர வித்திகழ நின்றபுகழோன், வாசமல ரானபல தூவியணை யும்பதிநல் வைகாவிலே. 10

முற்றுநமை யாளுடைய முக்கண்முதல் வன்திருவை காவி லதனைச், செற்றமலி ஞர்[9] சிரபு ரத்தலைவன் ஞானசம் பந்தன் உரைசெய், உற்றதமிழ் மாலை[10] யீ ரைந்துமிவை வல்லவர் உருத் திரரெனப் பெற்றமர லோகமிக வாழ்வர்பிரி யாரவர்பெ ரும்புக ழொடே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வில்வவனநாதர்; தேவி—வளைக்கைநாயகி.

---

## 40. திருவடகுரங்காடுதுறை*

பண் - சாதாரி** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கோங்கமே குரவமே கொழுமலர்ப் புன்னையே கொகுடிமுல்லை
வேங்கையே ஞாழலே விம்மு[1] பா திரிகளே விரவியெங்கும்
ஓங்குமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
வீங்குநீர்ச் சடைமுடி அடிகளா ரிடமென விரும்பினரே. 1

---

[9] செற்றமலிஞர் என்றும் பாடம். [10] மாலை - பாட்டு. * வாலி (குரங்கு) வழிபட்ட காரணத்தால் இப்பெயர் பெற்றது. இதன் தெற்கில் 'தென்குரங்காடுதுறை' என்று ஒன்றுளது. ** இப் பதிகத்தில் 7-ம் செய்யுள் மறைந்து போயிற்று. [1] விம்முதல் - செழித்தல்.

மந்தமா யிழிமதக் களிற்றிள மருப்பொடு பொருப்பின்நல்ல
சந்தமார் அகிலொடு சாதியின் பலங்களுந் தகையமோதி
உந்துமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
எந்தையார் இணையடி இமையவர் தொழுதெழும் இயல்பினரே.

முத்துமா மணியொடு முழைவளர் ஆரமும் முகந்துநுந்தி [2]
எத்துமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
மத்தமா மலரொடு மதிபொதி சடைமுடி யடிகள்தம்மேல்
சித்தமாம் அடியவர் சிவகதி பெறுவது திண்ணமன்றே. 3

கறியுமா மிளகொடு கதலியின் பலங்களுங் கலந்துநுந்தி
எறியுமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
மறியுலாங் கையினர் மலரடி தொழுதெழ மருவுமுள்ளக்
குறியினா ரவர்மிகக் கூடுவார் நீடுவா னுலகினூடே. 4

கோடிடைச்சொரிந்ததேனதனொடுங்கொண்டல்வாய்விண்டமுன்னீர்
காடுடைப் பீலியுங் கடறுடைப் பண்டமுங் கலந்துநுந்தி
ஓடுடைக் காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
பீடுடைச் சடைமுடி யடிகளா ரிடமெனப் பேணினரே. 5

கோலமா மலரொடு தூபமுஞ் சாந்தமுங் கொண்டுபோற்றி
வாலியார் வழிபடப் பொருந்தினார் திருந்துமாங் கனிகளுந்தி
ஆலுமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
நீலமா மணிமிடற் றடிகளை நினையவல் வினைகள்வீடே. 6-7

நீல [3]மா மணிநிறத் தரக்கனை யிருபது கரத்தொடல்க
வாலினாற் கட்டிய வாலியார் வழிபட [4] மன்னுகோயில்
ஏலமோ டிலையில வங்கமே யிஞ்சியே மஞ்சளுந்தி
ஆலியா [5] வருபுனல் வடகரை யடைகுரங் காடுதுறையே. 8

பொருந்திறல் பெருங்கைமா வுரித்துமை யஞ்சவே யொருங்கு நோக்கிப்
பெருந்திறத் தநங்கனை அநங்கமா [6] விழித்ததும் பெருமைபோலும்
வருந்திறற் காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை
அருந்திறத் திருவரை யல்லல்கண் டோங்கிய அடிகளாரே. 9

---

[2] நுந்தி - அலைத்து. [3] நீலம்-கருமை குறித்தது. [4] இவ்வடிகள் வாலி இராவணனை வாலினால் கட்டியதையும், வாலி வழிபட்டதையும் கூறுகின்றன. [5] ஆலியா - கலித்து. [6] அநங்கமாக - அங்கமழிய; வேவ.

கட்டமண் தேரருங் கடுக்கடின் கழுக்களுங் கசிவொன்றில்லாப்
பிட்டர்தம் மறவுரை கொள்ளலும் பெருவரைப் பண்ட[6] முந்தி
எட்டுமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறைச்
சிட்டனா ரடிதொழச் சிவகதி பெறுவது திண்ணமாமே. 10

தாழிளங் காவிரி வடகரை யடைகுரங் காடுதுறைப்
போழிள மதிபொதி புரிதரு சடைமுடிப் புண்ணியனைக்
காழியான் அருமறை ஞானசம் பந்தன கருதுபாடல்
கோழையா அழைப்பினுங் கூடுவார் நீடுவா னுலகினூடே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—குலைவணங்குநாதர் ; தேவி—அழகுசடைமுடியம்மை.

## 41. திருப்பழனம்

**பண் - தக்கேசி** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வேதமோதி வெண்ணூல்பூண்டு வெள்ளையெருதேறிப்
பூதஞ்சூழப் பொலியவருவார் புலியினுரிதோலார்
நாதாஎனவும் நக்காஎனவும் நம்பாஎனநின்று[1]
பாதந்தொழுவார் பாவந்தீர்ப்பார் பழனநகராரே. 1

கண்மேற்கண்ணுஞ் சடைமேற்பிறையும் உடையார்காலனைப்
புண்ணாறு[2] திர மெதிராவோடப் பொன்றப்புறந்தாளால்
எண்ணாது[3] தைத்த எந்தைபெருமான் இமவான்மகளோடும்
பண்ணார்களிவண் டறைபூஞ்சோலைப் பழனநகராரே. 2

பிறையும்புனலுஞ் சடைமேலுடையார் பறைபோல்விழிகட்பேய்
உறையுமயான மிடமாவுடையார் உலகர்தலைமகன்[4]
அறையுமலர்கொண் டடியார்பரவி ஆடல்பாடல்செய்
பறையுஞ்சங்கும் பலியும்ஓவாப் பழனநகராரே. 3

உரமன்னுயர்கோட் டுலறுகூகை யலறும்மயானத்தில்
இரவிற்பூதம் பாடஆடி யெழிலாரலர்மேலைப்

---

[6] வரைப்பண்டம் - மலைபடுபொருள். [1] இவ்வடி அடியார் போற்றும் வகை. [2] புண் ஆறு - புண் வழியாக. [3] எண்ணாது — எளிதில். [4] தலைமகன் — தலைவர்.

பிரமன்தலையின் நறவமே[3] ற்ற பெம்மான்எமையாளும்
பரமன்[4] பகவன் பரமேச்சுவரன் பழனநகராரே. 4

குலவெஞ்சிலையால் மதில்மூன்றெரித்த கொல்லேறுடையண்ணல்
கலவமயிலுங் குயிலும்பயிலுங் கடல்போற்காவேரி
நலமஞ்சுடைய நறுமாங்கனிகள் குதிகொண்டெதிருந்திப்
பலவின்கனிகள் திரைமுன்சேர்க்கும் பழனநகராரே. 5

வீளைக்குரலும்[5] விளிசங்கொலியும் விழவின் ஒலியோவா
மூளை[7] த்தலைகொண் டடியாரேத்தப் பொடியாமதிளெ[6] ய்தார்
ஈளைப்படுகில் இலையார்தெங்கிற் குலையார்வாழையின்
பாளைக்கமுகின் பழம்வீழ்சோலைப் பழனநகராரே. 6

பொய்யாமொழியார்[8] முறையாலேத்திப் புகழ்வார்திருமேனி
செய்யார்கரிய மிடற்றார்வெண்ணூல் சேர்ந்தஅகலத்தார்
கையாடலினார் புனலால்மல்கு சடைமேற்பிறையோடும்
பையாடரவ முடனே[9] வைத்தார் பழனநகராரே. 7

மஞ்சோங்குயரம் உடையான்மலையை மாறாயெடுத்தான்தோள்
அஞ்சோடஞ்சும் ஆறுநான்கும் அடரவூன்றினார்
நஞ்சார்[10] சுடலைப் பொடிநீறணிந்த நம்பான்வம்பாரும்
பைந்தாமரைகள் கழனிசூழ்ந்த பழனநகராரே. 8

கடியார்கொன்றைச் சுரும்பின்மாலை கமழ்புன்சடையார்விண்
முடியாப்படிமூ வடியாலுலக முழுதுந்தாவிய
நெடியான்நீள்தா மரைமேலயனும் நேடிக்காணாத
படியார்பொடியா டகலமுடையார் பழனநகராரே. 9

கண்டான்கழுவா முன்னேயோடிக் கலவைக்கஞ்சியை[11]
உண்டாங்கவர்கள் உரைக்குஞ்சிறுசொல் லோரார்பாராட்ட
வண்டாமரையின் மலர்மேல்நறவ மதுவாய்மிகவுண்டு
பண்டான்கெழும வண்டியாழ்செய்யும் பழனநகராரே. 10

---

[3] நறவம் - குருதி; இரத்தம். [4] பரமன் - கடந்தவன். [5] வீளைக்குரல் - சிள் என்ற ஓசை. [6] மதிள்-மதில். [7] மூளை-மண்டையின் உள்ளீடு. [8] பொய்யாமொழியார் - உண்மை வாக்குடைய அடியார்; இறைவனுமாம். [9] பைவாயரவமுடனே என்றும் பாடம். [10] நஞ்சார் - நைஞ்சார் (இறந்தார்). [11] கவ்வைக் கஞ்சியை என்றும் பாடம்; இவ்வடி சமணர் பழக்கவழக்கத்தைக் குறிக்கும்.

வேய்முத்தோங்கி விரைமுன்பரக்கும் வேணுபுரந்தன்னுள்
நாவுய்த்தனைய திறலான்மிக்க ஞானசம்பந்தன்
பேசற்கினிய பாடல்பயிலும் பெருமான்பழனத்தை
வாயிற்பொலிந்த மாலைபத்தும் வல்லார்நல்லாரே. 11
திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—ஆபத்சகாயேசுவரர் ; தேவி—பெரியநாயகி.

---

## 42. திருவையாறு

பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

கலையார் மதியோ டரநீரும்
நிலையார் சடையா ரிடமாகும்
மலையா ருமையாள் மணிசந்தோ
டலையார் புனல்சே ருமையாறே. 1

மதியொன் றியகொன் றைவடத்தன்
மதியொன் றவுதைத் தவர்வாழ்வும்
மதியின் னெடுசேர் கொடிமாடம்
மதியம் பயில்கின் றவையாறே. 2

கொக்கின் இறகின் னொடுவன்னி
புக்க சடையார்க் கிடமாகும்
திக்கின் னிசைதே வர்வணங்கும்
அக்கின் அரையா ரதையாறே.[1] 3

சிறைகொண் டபுரம் அவைசிந்தக்
கறைகொண் டவர்கா தல்செய்கோயில்
மறைகொண் டநல்வா னவர்தம்மில்
அறையும் ஒலிசே ருமையாறே. 4

உமையா ளொருபா கமதாகச்
சமைவா ரவர்சார் விடமாகும்
அமையா ருடல்சோர் தரமுத்தம்[2]
அமையா வருமந் தணையாறே. 5

---

[1] அரையார்த்தவையாறே என்றும் பாடம். [2] ருடல்சோர்தர முத்தம் என்றும், ருடல்சேர்தரு முத்தம் என்றும் பாடம்.

தலையின் தொடைமா லையணிந்து
கலைகொண் டதொர்கை யினர்சேர்வாம்
நிலைகொண் டமனத் தவர்நித்தம்
மலர்கொண் டுவணங் குமையாறே. 6

வரமொன் றியமா மலரோன்றன்
சிரமொன் றையறுத் தவர்சேர்வாம்
வரைநின் றிழிவார் தருபொன்னி
அரவங் கொடுசே ருமையாறே. 7

வரையொன் றதெடுத் தஅரக்கன்
சிரமங் கநெரித் தவர்சேர்வாம்
விரையின் மலர்மே தகுபொன்னித்
திரைதன் னொடுசே ருமையாறே. 8

சங்கக் கயனும்[3] அறியாமைப்
பொங்குஞ் சுடரா னவர்கோயில்
கொங்கிற் பொலியும் புனல்கொண்டு[4]
அங்கிக் கெதிர்காட் டுமையாறே. 9

துவரா டையர்தோ லுடையார்கள்
கவர்வாய் மொழிகா தல்செய்யாதே
தவரா சர்கள்தா மரையானோ
டவர்தா மணைஅந் தணையாறே. 10

கலையார் கலிக்கா ழியர்மன்னன்
நலமார் தருஞா னசம்பந்தன்
அலையார் புனல்சூ ழுமையாற்றைச்
சொலுமா லைவல்லார் துயர்வீடே.[5] 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பணிந்தவர் அருவினை பற்றறுத் தருள்செயத்
துணிந்தவன் தோலொடு நூல்துதை மார்பினில்

---

[3] சங்கத்தயனும் என்றும் பாடம். [4] புனல்கொண்ட என்றும் பாடம். [5] வீடு – விடுதல்; அழிதல்.

பிணிந்தவன் அரவொடு பேரெழி லாமைகொண்
டணிந்தவன் வளநகர் அந்தண் ஐயாறே. 1

கீர்த்திமிக் கவன்நகர் கிளரொளி யுடனடப்
பார்த்தவன் பனிமதி படர்சடை வைத்துப்
போர்த்தவன் கரியுரி புலியதள் அரவரை
ஆர்த்தவன் வளநகர் அந்தண் ஐயாறே. 2

வரிந்தவெஞ் சிலைபிடித் தவுணர்தம் வளநகர்
எரிந்தற எய்தவன் எழில்திகழ் மலர்மேல்
இருந்தவன் சிரமது இமையவர் குறைகொள
அரிந்தவன் வளநகர் அந்தண் ஐயாறே. 3

வாய்ந்தவல் அவுணர்தம் வளநகர் எரியிடை
மாய்ந்தற எய்தவன் வளர்பிறை விரிபுனல்
தோய்ந்தெழு சடையினன் தொன்மறை ஆறங்கம்
ஆய்ந்தவன் வளநகர் அந்தண் ஐயாறே. 4

வானமர் மதிபுல்கு சடையிடை அரவொடு
தேனமர் கொன்றையன் திகழ்தரு மார்பினன்
மானன மென்விழி மங்கையொர் பாகமும்
ஆனவன் வளநகர் அந்தண் ஐயாறே. 5

முன்பனை முனிவரோ டமரர்கள் தொழுதெழும்[1]
இன்பனை யிணையில இறைவனை யெழில்திகழ்
என்பொனை யேதமில் வேதியர் தாந்தொழும்
அன்பன[2] வளநகர் அந்தண் ஐயாறே. 6

வன்திறல்[3] அவுணர்தம் வளநகர் எரியிடை
வெந்தற எய்தவன் விளங்கிய மார்பினில்
பந்தமர் மெல்விரல் பாகம தாகிதன்
அந்தமில் வளநகர் அந்தண் ஐயாறே. 7

விடைத்தவல் அரக்கன்நல் வெற்பினை யெடுத்தலும்
அடித்தலத் தால்இறை யூன்றிமற் றவனது
முடித்தலை தோளவை நெரிதர முறைமுறை
அடர்த்தவன் வளநகர் அந்தண் ஐயாறே. 8

---

[1] ரோடமரர்கள அடிதொழும் என்றும் பாடம். [2] அன்பனன் என்றும் பாடம். [3] வக்திறல் என்றும் பாடம்.

விண்ணவர் தம்மொடு வெங்கதி ரோன்நல
எண்ணிலி தேவர்கள் இந்திரன் வழிபடக்
கண்ணனும் பிரமனுங் காண்பரி தாகிய
அண்ணல்தன் வளநகர் அந்தண் ஐயாறே. 9

மருளுடை மனத்துவன் சமணர்கள் மாசரு
இருளுடை யிணைத்துவர்ப் போர்வையி னார்களும்
தெருளுடை மனத்தவர் தேறுமின் திண்ணமா
அருளுடை யடிகள்தம் அந்தண் ஐயாறே. 10

நலம்மலி ஞானசம் பந்தன தின்தமிழ்
அலைமலி புனல்மல்கும் அந்தண்ஐ யாற்றினைக்
கலைமலி தமிழிவை கற்றுவல் லார்மிக
நலமலி புகழ்மிகும் நன்மையர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - மேகராகக்குறிஞ்சி* [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**பு**லனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி யறிவழிந்திட் டைம்[1] மேலுந்தி, அலமந்த போதா[2]க அஞ்சே[3]லென் றருள்செய்வான் அமருங்கோயில், வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழையென் றஞ்சிச், சிலமந்தி யலமந்து மரமேறி முகில்பார்க்குந்[4] திருவையாறே. 1

விடலேறு[5] படநாகம் அரைக்கசைத்து வெற்பரையன் பாவை யோடும், அடலேறொன் றதுவேறி யஞ்சொலீர் பலியென்னும் அடிகள்கோயில், கடலேறித் திரைமோதிக் காவிரியி னுடன்வந்து கங்குல் வைகித், திடலே[6]றிச் சுரிசங்கஞ் செழுமுத்தங் கீன்றலைக் குந் திருவையாறே. 2

கங்காளர் கயிலாய மலையாளர் கானப்பே ராளர்மங்கை, பங்காளர் திரிசூலப் படையாளர் விடையாளர் பயிலுங்கோயில்,

---

* இப்பதிகம் இந்நகரின் புறத்தே நின்று பாடியதாகும்; இஃது இயற்கை வருணனை நிறைந்த பகுதியாகும். [1] ஐ - கபம். [2] அலமந்தபோது - சாக்காலம். [3] அஞ்சேல் - அபயம். [4] மழை... முகில் பார்க்கும் - இவ்வடி மயக்க அணி. [5] விடலேறு-விடத்தினை மேலேகொண்ட. விடல் - விடம். [6] திடல் - மணல்மேடு.

கொங்காளப் பொழில்நுழைந்து கூர்வாயால் இறகுலர்த்திக் கூதல்நீங்கிச் செங்கால்நல் வெண்குருகு பைங்கானல் இரை தேருந் திருவையாறே. 3

ஊன்பாயும் முடைதலைகொண் டூரின்[7] பலிக்குழல்வார் உமையாள் பங்கர், தான்பாயும் விடையேறுஞ் சங்கரனார் தழ லுருவர் தங்குங் கோயில், மான்பாய வயலருகே மரமேறி மந்தி பாய் மடுக்கள்தோறும், தேன்பாய மீன்பாயச் செழுங்கமல மொட்டலருந் திருவையாறே 4

நீரோடு கூவிளமும் நிலாமதியும் வெள்ளெருக்கும் நிறைந்த கொன்றைத், தாரோடு தண்கரந்தை சடைக்கணிந்த தத்துவனார் தங்குங்கோயில், காரோடி விசும்பளந்து கடிநாறும் பொழி லணைந்த கமழ்தார்வீதித், தேரோடும் அரங்கேறிச் சேயிழையார் நடம்பயிலுந் திருவையாறே. 5

வேந்தாகி விண்ணவர்க்கும் மண்ணவர்க்குப் நெறிகாட்டும் விகிர்தனாகிப், பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த புண்ணிய னார் நண்ணுங்கோயில், காந்தார[8] மிசையமைத்துக் காரிகையார் பண்பாடக் கவினார்வீதித், தேந்தாமென் றரங்கேறிச் சேயிழை யார் நடமாடுந் திருவையாறே. 6

நின்றுலா நெடுவிசும்பில் நெருக்கிவரு புரமூன்றும் நீள் வாயம்பு, சென்றுலாம் படிதொட்ட சிலையாளி மலையாளி[9] சேருங் கோயில், குன்றெலாங் குயில்கூவக் கொழும்பிரச[10]மலர்பாய்ந்து வாசமல்கு, தென்றலார் அடிவருடச் செழுங்கரும்பு கண்வள ருந் திருவையாறே. 7

அஞ்சாதே கயிலாய மலையெடுத்த அரக்கர்கோன் தலைகள் பத்தும், மஞ்சாடு தோள்நெரிய அடர்த்தவனுக் கருள்புரிந்த மைந் தர்கோயில், இஞ்சாயல் இளந்தெங்கின் பழம்வீழ இளமேதி யிரிந்தங்கோடிச், செஞ்சாலிக் கதிருழக்கிச் செழுங்கமல[11] வயல் படியுந் திருவையாறே.[12] 8

---

[7] கொண்டூரான் என்றும் பாடம். [8] காந்தாரம் - ஓர் பண். [9] மலையாளி-கயிலைமலையை ஆள்பவர். [10] பிரசம்-தேன். [11] செங்கமல என்றும் பாடம். [12] இச்செய்யுளின் பின்னிரண்டடிகள் நகர் வளத் தையும், நீர் வளத்தையும் குறிப்பன.

மேலோடி விசும்பணவி[12] வியன்நிலத்தை மிகஅகழ்ந்து மிக்குநாடும், மாலோடு நான்முகனும் அறியாத வகைநின்றான் மன்னுங்கோயில், கோலோ[13] டக் கோல்வளையார் கூத்தாடக் குவிமுலையார் முகத்தினின்று, சேலோடச் சிலையாடச் சேயிழை யார் நடமாடுந் திருவையாறே. 9

குண்டாடு குற்றுடுக்கை[14] ச் சமணரொடு சாக்கியருங் குண மொன்றில்லா, மிண்டாடு மிண்டருரை கேளாதே யாளாமின், மேவித்தொண்டீர், எண்டோளர் முக்கண்ணர் எம்மீசர்இறைவர் இனி தமருங்கோயில், செண்டாடு புனற்பொன்னிச் செழுமணி கள் வந்தலைக்குந் திருவையாறே. 10

அன்னமலி பொழில்புடைசூழ் ஐயாற்றெம் பெருமானை அந்தண்காழி, மன்னியசீர் மறைநாவன் வளர்ஞான சம்பந்தன் மருவுபாடல், இன்னிசையால் இவைபத்தும் இசையுங்கால் ஈச னடி யேத்துவார்கள், தன்னிசையோ டமருலகில் தவநெறிசென் றெய்துவார் தாழாதன்றே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - இந்தளம்* [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கோடல்[1] கோங்கங் குளிர் கூவிளமாலை குலாயசீர்
ஓடு கங்கை ஒளிவெண் பிறைசூடும் ஒருவனார்
பாடல் வீணை முழவங்குழல் மொந்தைபண் ணாகவே
ஆடுமா றுவல் லானும் ஐயாறுடை ஐயனே.[2] 1

தன்மை யாரும் அறிவாரில்லை தாம்பிறர் எள்கவே
பின்னும் முன்னுஞ்சில பேய்க்க ணஞ்சூழத் திரிதர்வர்
துன்ன ஆடை யுடுப்பர் சுடலைப்பொடிப் பூசுவர்
அன்னம் ஆலுந்துறை யானும் ஐயாறுடை ஐயனே. 2

---

[12] அணவி - அணுகி. [13] கோல் - ஆடலாசிரியன் எந்தும் தலைக்கோல். [14] குற்றுடுக்கை-மேலேற உடுத்த பாய்உடை. * இப் ப தி க ம் இத்தலத்தில் தில்லைப்பிரான் திருக்கூத்தைக்கண்டு தரிசித்தபோது பாடியதாகும். [1] கோடல்-காந்தள். [2] இவ்வடிகள் திருக்கூத்தில் இயையும் அங்கங்களைக் குறிப்பன.

கூறு பெண்ணுடை கோவணம் உண்பதும் வெண்டலை
மாறி லாருங்கொள் வாரில்லை மார்பி லணிகலம்
ஏறும் ஏறித்திரி வரிமை யோர்தொழு தேத்தவே
ஆறும் நான்கும்[3]சொன் னானும் ஐயாறுடை ஐயனே. 3

பண்ணின் நல்லமொழி யார்பவ ளத்துவர் வாயினார்
எண்ணின் நல்லகுணத் தாரிணை வேல்வென்ற கண்ணினார்
வண்ணம் பாடிவலி பாடித்தம் வாய்மொழி பாடவே
அண்ணல் கேட்டுகந் தானும் ஐயாறுடை ஐயனே. 4

வேன லானை வெருவவுரி போர்த்துமை யஞ்சவே
வானை யூடறுக் கும்மதி சூடிய மைந்தனார்
தேன்நெய் பால்தயிர் தெங்கிள நீர்கரும் பின்தெளி
ஆனஞ் சாடும்முடி யானும் ஐயாறுடை ஐயனே. 5

எங்கு மாகி நின்றானும் இயல்பறி யப்படா[4]
மங்கை பாகங்கொண் டானும் மதிசூடு மைந்தனும்
பங்க மில்பதி னெட்டொடு[5] நான்குக் குணர்வுமாய்
அங்கம் ஆறுஞ்சொன் னானும் ஐயாறுடை ஐயனே. 6

ஓதி யாருமறி வாரில்லை யோதி யுலகெலாம்
சோதி யாய்நிறைந் தான்சுடர்ச் சோதியுட் சோதியான்
வேதி[6] யாகிவிண் ணாகிமண் ணோடெரி காற்றுமாய்[7]
ஆதி யாகிநின் றானும் ஐயாறுடை ஐயனே. 7

குரவ நாண்மலர் கொண்டடி யார்வழி பாடுசெய்
விரவி நீறணி வார்சில தொண்டர் வியப்பவே
பரவி நாடொறும் பாடநம் பாவம் பறைதலால்
அரவ மார்த்துகந் தானும் ஐயாறுடை ஐயனே. 8

உரைசெய் தொல்வழி செய்தறி யாஇலங் கைக்குமன்
வரைசெய் தோளடர்த் தும்மதி சூடிய மைந்தனார்
கரைசெய் காவிரி யின்வட பாலது காதலான்
அரைசெய் மேகலை யானும் ஐயாறுடை ஐயனே. 9

---

[3] ஆறு-ஆறங்கம். நான்கு-நான்குவேதம். [4] இயல்வறியப்படா என்றும் பாடம். [5]பதினெட்டு - பதினெண் புராணம். [6] வேதி - வேதத்தை யுடையவன். [7] டெரிகாற்றுமாய் என்றும் பாடம்.

மாலுஞ் சோதி மலரானும் அறிகிலா வாய்மையான்
காலங் காம்பு[8] வயிரங் கடிகையன் பொற்கழல்
கோல மாய்க்கொழுந் தீன்று பவளந் திரண்டதோர்
ஆல நீழலு ளானும் ஐயாறுடை ஐயனே. 10

கையி லுண்டுழல் வாருங் கமழ்துவ ராடையால்
மெய்யைப் போர்த்துழல் வாரும் உரைப்பன மெய்யல
மைகொள்கண்டத்தெண்டோள்முக்கணன்கழல் வாழ்த்தவே
ஐயந் தேர்ந்தளிப் பானும் ஐயாறுடை ஐயனே. 11

பலிதி ரிந்துழல் பண்டங்கள் மேய ஐயாற்றினைக்
கலிக டிந்தகை[9] யான்கடற் காழியர் காவலன்
ஒலிகொள் சம்பந்தன் ஒண்டமிழ் பத்தும்வல் லார்கள்போய்
மலிகொள் விண்ணிடை மன்னிய சீர்பெறு வார்களே. 12

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

திருத்திகழ் மலைச்சிறுமி யோடுமிகு தேசர்
உருத்திகழ் எழிற்கயிலை வெற்பிலுறை தற்கே
விருப்புடைய அற்புத ரிருக்குமிடம் ஏரார்
மருத்திகழ் பொழிற்குலவு வண்திருவை யாறே. 1

கந்தமர வுந்துபுகை யுந்தலில் விளக்கேர்
இந்திர னுணர்ந்துபணி யெந்தையிட மெங்கும்
சந்தமலி யுந்தரு மிடைந்தபொழில் சார
வந்தவளி நந்தணவு[1] வண்திருவை யாறே. 2

கட்டுவட மெட்டுமுறு வட்டமுழ வத்தில்
கொட்டுகர மிட்டவொலி தட்டும்வகை நந்திக்
கிட்டமிக நட்டமவை யிட்டவ ரிடஞ்சீர்
வட்டமதி லுள்திகழும் வண்திருவை யாறே. 3

நண்ணியொர் வடத்[2]தின்நிழல் நால்வர்முனி வர்க்கன்
றெண்ணிலி மறைப்பொருள் விரித்தவ ரிடஞ்சீர்த்

---

[8] காலகாம்பு என்றும் பாடம். [9] கலிகடந்தகை என்றும் பாடம்.
[1] வந்தவனிநந்தணவு என்றும் பாடம். [2] வடம் - ஆலமரம்.

தண்ணின்மலி சந்தகிலொ டுந்திவரு பொன்னி
மண்ணின்மிசை வந்தணவு வண்திருவை யாறே. 4

வென்றிமிகு தாரகன தாருயிர் மடங்கக்
கன்றிவரு கோபம்மிகு காளி[3] கதம் ஓவ
நின்றுநட மாடியிட நீடுமலர் மேலால்
மன்றல்மலி யும்பொழில்கொள் வண்திருவை யாறே. 5

பூதமொடு பேய்கள்பல பாடநட மாடிப்
பாதமுதல் பையரவு கொண்டணி பெறுத்திக்
கோதைய ரிடும்பலி கொளும்பர னிடம்பூ
மாதவி மணங்கமழும் வண்திருவை யாறே. 6

துன்னுகுழல் மங்கையுமை நங்கைசுளி வெய்தப்
பின்னொரு தவஞ்செய்துழல் பிஞ்ஞகனு மங்கே
என்னசதி[4] என்றுரைசெ யங்கண னிடஞ்சீர்
மன்னுகொடை யாளர்பயில் வண்திருவை யாறே. 7

இரக்கமில் குணத்தொடுல கெங்குநலி வெம்போர்
அரக்கன்முடி யத்தலை புயத்தொடு மடங்கத்
துரக்கவிர லிற்சிறிது[5] வைத்தவ ரிடஞ்சீர்
வரக்கருணை யாளர்பயில் வண்திருவை யாறே. 8

பருத்துருவ தாகிவிண் அடைந்தவனொர் பன்றிப்
பெருத்துருவ தாயுல கிடந்தவனு மென்றும்
கருத்துரு வொணுவகை நிமிர்ந்தவ னிடங்கார்
வருத்துவகை தீர்கொள்[6] பொழில் வண்திருவை யாறே. 9

பாக்கியம தொன்றுமில் சமண்பதகர் புத்தர்
சாக்கியர்க ளென்றுடல் பொதிந்துதிரி வார்தம்
நோக்கரிய தத்துவ னிடம்படியின் மேலால்
மாக்கமுற நீடுபொழில் வண்திருவை யாறே. 10

வாசமலி யும்பொழில்கொள் வண்திருவை யாற்றுள்
ஈசனை யெழிற்புகலி மன்னவன்மெய்ஞ் ஞானப்

---

[3] 'தாருகன் பேருரங் கிழித்த பெண்ணும் அல்லள்' என்னும் சிலப்பதிகார அடிகளோடு ஒப்பு நோக்குக. [4] சகி என்றும் பாடம். [5] துரக்கம்விரலிற் சிறிது என்றும் பாடம். [6] வகைநீர்கொள் என்றும் பாடம்.

பூசுர னுரைத்ததமிழ் பத்துமிவை வல்லார்
நேசமலி பத்தரவர் நின்மல னடிக்கே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி - செம்பொற்சோதி நாதர், ஐயாறப்பர் (பஞ்சநதேசுவரர்);
தேவி—அறம்வளர்த்த நாயகி, (தர்மசம்வர்த்தனி).

---

## 43. திருநெய்த்தானம்*

பண் - நட்டபாடை [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மையாடிய[1] கண்டன்மலை மகள்பாகம துடையான்
கையாடிய கேடில்கரி யுரிமூடிய வொருவன்
செய்யாடிய குவளைம்மலர் நயனத்தவ ளோடும்
நெய்யாடிய பெருமா[2] னிடம் நெய்த்தான மெனீரே. 1

பறையும்பழி பாவம்படு துயரம்பல தீரும்
பிறையும்புனல் அரவும்படு சடையெம்பெரு மானூர்
அறையும்புனல் வருகாவிரி அலைசேர்வட கரைமேல்
நிறையும்புனை மடவார்பயில் நெய்த்தானமெ னீரே. 2

பேயாயின பாடப்பெரு நடமாடிய பெருமான்
வேயாயின தோளிக்கொரு பாகம்மிக வுடையான்
தாயாகிய வுலகங்களை நிலைபேறுசெய் தலைவன்
நேயா[3] டிய பெருமானிடம் நெய்த்தானமெ னீரே. 3

சுடுநீறணி யண்ணல்சுடர் சூலம்அன லேந்தி
நடுநள்ளிருள்[4] நடமாடிய நம்பன்உறை யிடமாம்[5]
கடுவாளிள அரவாடுமிழ் கடல்நஞ்சம துண்டான்
நெடுவாளைகள் குதிகொள்ளுயர் நெய்த்தானமெ னீரே. 4

நுகராரமொ டேலம்மணி செம்பொன்னுரை யுந்திப்
பகராவரு புனல்காவிரி பரவிப்பணிந் தேத்தும்

---

* 'தில்லை ஸ்தானம்' என வழங்கப்பெறும். [1] மை ஆடிய - விடம் பொருந்திய. [2] நெய்யாடிய பெருமான் - தலத்துச் சுவாமியின் பெயர். நெய்யாடல் விழா என்ற குறிப்பும் உளது. [3] நெய் : நேய் என முதல் நீண்டது. [4] நடுநள் இருள் - சங்கார காலம். [5] உறைவிடமாம் என்றும் பாடம்.

நிகரான்மண விடுதண்கரை நிகழ்வாயநெய்த் தான
நகரான் அடி யேத்தந்நமை நடலையடை யாவே. 5

விடையார்கொடி யுடையவ்வணல் வீந்தார்வெளை யெலும்பும்
உடையார்நறு மாலைசடை யுடையாரவர் மேய
புடையேபுனல் பாயும்வயல் பொழில்சூழ்ந்தநெய்த் தானம்
அடையாதவ ரென்றும் அம ருலகம் அடை யாரே. 6

நிழலார்வயல் கமழ்சோலைகள் நிறைகின்றநெய்த் தானத்
தழலானவன் அனலங்கையி லேந்தியழ காய
கழலானடி நாளுங்கழ லாதேவிட லின்றித்
தொழலாரவர் நாளுந்துய ரின்றித்தொழு வாரே. 7

அறையார்கடல் இலங்கைக்கிறை யணிசேர்கயி லாயம்
இறையார[7] முன் எடுத்தான் இரு பதுதோளிற வூன்றி
நிறையார்புனல் நெய்த்தானன்நல் நிகழ்சேவடி பரவக்
கறையார்கதிர் வாளீந்தவர் கழலேத்துதல் கதியே. 8

கோலம்முடி நெடுமாலொடு கொய்தாமரை யானும்
சீலம்மறி வரிதாயொளி திகழ்வாயநெய்த் தானம்
காலம்பெற மலர்[8] நீரவை தூவித்தொழ தேத்தும்
ஞாலம்புகழ் அடியாருடல் உறுநோய்நலி யாவே. 9

மத்தம்மலி சித்தத்திறை[9] மதியில்லவர் சமணர்
புத்தரவர் சொன்னம்மொழி பொருளாநினை யேன்மின்
நித்தம்பயில் நிமலன்உறை நெய்த்தானம தேத்தும்
சித்தம்உடை யடியாருடல் செறுநோயடை யாவே. 10

தலமல்கிய[10] புனற்காழியுள் தமிழ்ஞானசம் பந்தன்
நிலமல்கிய புகழான்மிகு நெய்த்தானனை நிகரில்
பலமல்கிய பாடல்இவை பத்தும்மிக வல்லார்
சிலமல்கிய செல்வன்அடி சேர்வர்சிவ கதியே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—நெய்யாடியப்பர்;
தேவி—இளமங்கையம்மை, வாலாம்பிகையம்மை.

---

7 இறையார - கைபொருந்த. 8 காலம்பெற - விதித்த காலத்தில். 9 இறை - சிறிதும். 10 தலமல்கிய - நிலத்தை வளம்படுத்திய.

# 44. திருப்பெரும்புலியூர் *

**பண் - காந்தாரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மண்[1]ணுமோர் பாகம் உடையார் மாலுமோர் பாகம் உடையார்
விண்[2]ணுமோர் பாகம் உடையார் வேதம் உடைய விமலர்
கண்ணுமோர் பாகம் உடையார் கங்கை சடையிற் கரந்தார்
பெண்ணுமோர் பாகம் உடையார் பெரும்புலி யூர்பிரி யாரே. 1

துன்னு கடற்பவ ளஞ்சேர் தூயன நீண்ட திண்டோள்கள்[3]
மின்னு சுடர்க்கொடி போலும் மேனியி னாளொரு கங்கைக்
கன்னி[4]களின்புனை யோடு கலைமதி மாலை கலந்த
பின்னு சடைப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 2

கள்ள மதித்த[5] கபாலங் கைதனி லேமிக ஏந்தித்
துள்ள மிதித்துநின் றாடுந் தொழிலர் எழில்மிகு செல்வர்
வெள்ள நகுதலை மாலை விரிசடை மேல்மிளிர் கின்ற
பிள்ளை மதிப்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே, 3

ஆட லிலயம்[6] உடையார் அருமறை தாங்கிஆ றங்கம்
பாட லிலயம் உடையார் பன்மை யொருமைசெய் தஞ்சும்
ஊட லிலயம்[7] உடையார் யோகெனும் பேரொளி தாங்கிப்
பீட லிலயும் உடையார் பெரும்புலி யூர்பிரி யாரே. 4

தோடுடை யார்குழைக் காதிற் சுடுபொடி யாரன லாடக்
காடுடை யாரெரி வீசுங் கையுடை யார்கடல் சூழ்ந்த
நாடுடை யார்பொரு ளின்ப நல்லவை நாளு நயந்த
வீடுடை யார்பெரு மானார் பெரும்புலி யூர்பிரி யாரே. 5

கற்ற துறப்பணி செய்து காண்டுமென் பாரவர் தங்கள்
முற்றி தறிதுமென் பார்கள் முதலியர் வேதபு ராணர்

---

* புலிக்கால் முனிவர் (வியாக்கிரபாதர்) பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது. [1] [2] மண் - விண் - பாகமுடையார் - புவனங்களைத் தோற்றுவிக்கும் மாயையைப் பரிக்கிரக சத்தியாக உடையவர். [3] நீண்ட தோள்கள் பவளம்போல உள்ளன. [4] மேனியினாளும் கங்கையுமாகிய கன்னிகள் என்க. [5] கள்ளமதித்த - கள்ளமாகச் செருகிய. [6] இலயம் - பொருந்த இசைதல். [7] ஊடலிலயம் — ஊடலிலும் ஒற்றுமை.

மற்றி தறிதுமென் பார்கள் மனத்திடை யார்பணி செய்யப்
பெற்றி பெரிதும் உகப்பார் பெரும்புலி யூர்பிரி யாரே. 6

மறையுடை யாரொலி பாடல் மாமலர்ச் சேவடி சேர்வார்
குறையுடை யார்குறை தீர்ப்பார் குழகர் அழகர்நஞ் செல்வர்
கறையுடை யார்திகழ் கண்டங் கங்கை சடையிற் கரந்தார்
பிறையுடை யார்சென்னி தன்மேற் பெரும்புலி யூர்பிரி யாரே. 7

உறவியும் இன்புறு சீரும் ஓங்குதல் வீடெளி தாகித்
துறவியுங் கூட்டமுங் காட்டித் துன்பமும் இன்பமுந் தோற்றி
மறவியென் சிந்தனை மாற்றி வாழவல் லார்தமக் கென்றும்
பிறவி யறுக்கும் பிரானூர் பெரும்புலி யூர்பிரி யாரே. 8

சீருடை யாரடி யார்கள் சேடரொப் பார்சடை சேரும்
நீருடை யார்பொடிப் பூசு நினைப்புடை யார்விரி கொன்றைத்
தாருடை யார்விடை யூர்வார் தலைவரைந் நூற்றுப்பத் தாய[8]
பேரு[9]டை யார்பெரு மானூர் பெரும்புலி யூர்பிரி யாரே. 9

உரிமை யுடையடி யார்கள் உள்ளுற வுள்கவல் லார்கட்
கருமை யுடையன காட்டி அருள்செயும் ஆதி முதல்வர்
கருமை யுடைநெடு மாலுங் கடிமல ரண்ணலுங் காணப்
பெருமை யுடைப்பெரு மானூர் பெரும்புலி யூர்பிரி யாரே. 10

பிறைவள ரும்முடிச் சென்னிப் பெரும்புலி யூர்ப்பெரு மானை
நறைவள ரும்பொழிற் காழி நற்றமிழ் ஞானசம் பந்தன்
மறைவள ரு[10]ந்தமிழ் மாலை வல்லவர் தந்துயர்[11] நீங்கி
நிறை[12] வளர் நெஞ்சின ராகி நீடுல கத்[13]திருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பிரியாநாதர் வியாக்கிரபுரீசுவர்; தேவி-சௌந்தரநாயகி.

---

[8] தலைவர் அந்நூற்றுப் பத்தாய என்றும் பாடம். [9] ஐந்நூற்றுப் பத்தாய பேர் - (ஐ - அழகிய. நூற்றுப் பத்து - ஆயிரம்) அழகிய ஆயிரம் பேருடையவர். [10] மறைவளர் — வேதப்பொருள்களைத் திரட்டிப் பரவச்செய்யும். [11] துயர் - மலவாதனை. [12] நிறை- அன்பு. [13] நீடுலகம் — சிவலோகம்.

# 45. திருமழபாடி*

**பண் - இந்தளம்**** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

களையும் வல்வினை யஞ்சல்நெஞ் சேகரு தார்புரம்
உலையும்[1] பூசல்செய் தானுயர் மால்வரை நல்விலா
வளைய வெஞ்சரம் வாங்கியெய் தான்மதுத் தும்பிவண்
டளையும்[2] கொன்றையந் தார்மழ பாடியுள் அண்ணலே. 1

காச்சி லாதபொன் னோக்குங்க னவயி ரத்திரள்[3]
ஆச்சி[4] லாதப ளிங்கினன் அஞ்சுமுன் ஆடினன்
பேச்சி னாலுமக் காவதென் பேதைகாள் பேணுமின்
வாச்ச[5] மாளிகை சூழ்மழ பாடியை வாழ்த்துமே. 2

உரங்கெ டுப்பவன் உம்பர்க ளாயவர் தங்களைப்
பரங்கெ டுப்பவன் நஞ்சையுண் டுபக லோன்றனை
முரண்கெ டுப்பவன் முப்புரந் தீயெழச் செற்றுமுன்
வரங்கொ டுப்பவன் மாமழ பாடியுள் வள்ளலே. 3

பள்ள மார்சடை யிற்புடை யேயடை யப்புனல்
வெள்ளம் ஆதரித் தான்விடை யேறிய வேதியன்
வள்ளல் மாமழ பாடியுள் மேயம ருந்தினை
உள்ளம் ஆதரி மின்வினை யாயின ஓயவே. 4

தேனு லாமலர் கொண்டுமெய்த் தேவர்கள் சித்தர்கள்
பால்நெய் அஞ்சுடன் ஆட்டமுன் ஆடிய பால்வணன்
வான நாடர்கள் கைதொழு மாமழ பாடியெம்
கோனை நாடொறுங் கும்பிட வேகுறி[6] கூடுமே. 5

---

* இது மழவர்பாடி என்பதன் மரூஉ. மழவர் - இளைஞர் - ஒரு வகை வீரர்; பாடி - இருப்பிடம். இறைவன் மழு ஆயுதத்தை ஏந்தி நடனமாடியதால் மழுவாடி எனப் பெயர்பெற்றது என்பர். மழு ஆடிய இடம் மழுவாடி - மழுபாடி - மழபாடி என ஆயிற்று என்பாருமுளர். ** இப்பதிகத்தின் 11-ம் செய்யுளின் பின்னிரண்டடிகள் சிதைவுற்றன. [1] உலைதல் - அழிதல். [2] அளைதல்-சேர்தல். [3] கனவயிரத்திரள் - தலத்துச் சுவாமியின் பெயர்க் குறிப்பு. [4] ஆசு - ஆச்சு என நின்றது. ஆசு-குற்றம். [5] வாய்ச்ச என்பது வாச்ச என நின்றது. [6] குறி - உயிர்க்குறுதியாகிய குறிக்கோள்.

தெரிந்த வன்புர மூன்றுடன் மாட்டிய சேவகன்
பரிந்து கைதொழு வாரவர் தம்மனம் பாவினன் [9]
வரிந்த வெஞ்சிலை யொன்றுடை யான்மழ பாடியைப்
புரிந்து கைதொழு மின்வினை யாயின போகுமே. 6

சந்த வார்குழ லாளுமை தன்னொரு கூறுடை
எந்தை யான்இமை யாதமுக் கண்ணினன் எம்பிரான்
மைந்தன் வார்பொழில் சூழ்மழ பாடிம ருந்தினைச்
சிந்தி யாவெழு வார்வினை யாயின தேயுமே. 7

இரக்கம் ஒன்றுமி லான்இறை யான்திரு மாமலை
உரக்கை யாலெடுத் தான்தன தொண்முடி பத்திற
விரல்த லைந்நிறு வியுமை யாளொடு மேயவன்
வரத்தை யே [10]கொடுக் கும்மழ பாடியுள் வள்ளலே. 8

ஆலம் உண்டமு தம்அம ரர்க்கருள் அண்ணலார்
காலன் ஆருயிர் வீட்டிய மாமணி கண்டனார்
சால நல்லடி யார்தவத் தார்களுஞ் சார்விடம்
மால யன்வணங் கும்மழ பாடியெம் மைந்தனே. 9

கலி [11] யின் வல்லம ணுங்கருஞ் சாக்கியப் பேய்களும்
நலியும் நாள்கெடுத் தாண்டஎன் நாதனார் வாழ்பதி
பலியும் பாட்டொடு பண்முழ வும்பல வோசையும்
மலியும் மாமழ பாடியை வாழ்த்திவ ணங்குமே. 10

மலியு மாளிகை சூழ்மழ பாடியுள் வள்ளலைக்
கலிசெய் [12] மாமதில் சூழ்கடற் காழிக் கவுணியன்
* * * * * 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காலையார் வண்டினங் கிண்டிய [1] காருறும்
சோலையார் பைங்கிளி சொற்பொருள் பயிலவே

---

[9] பாவினன் - பரவி நிறைந்தவன். பரவினன் என்றும் பாடம். [10] வரத்தையே, ஏ : தேற்றம். [11] கலி - கொடுமை; தீமை. [12] கலி செய் - ஒலிக்கின்ற; புகழப்படுகின்ற. [1] கிண்டுதல் - ஆராய்தல்.

வேலை[2] யார் விடமணி வேதியன் விரும்பிடம்
மாலையார் மதிதவழ் மாமழ பாடியே. 1

கறையணி மிடறுடைக் கண்ணுதல் நண்ணிய
பிறையணி செஞ்சடைப் பிஞ்ஞகன்[3] பேணுமூர்
துறையணி குருகினந் தூமலர் துதையவே
மறையணி நாவினன்[4] மாமழ பாடியே. 2

அந்தணர் வேள்வியும் அருமறைத் துழனி[5]யும்
செந்தமிழ்க் கீதமுஞ் சீரினால் வளர்தரப்
பந்தணை மெல்விர லாளொடும் பயில்விடம்
மந்தம்[6] வந் துலவுசீர் மாமழ பாடியே. 3

அத்தியின் உரிதனை யழகுறப் போர்த்தவன்
முத்தியாய் மூவரி[7]ன் முதல்வனாய் நின்றவன்
பத்தியாற் பாடிடப் பரிந்தவர்க் கருள்செயும்
அத்தனார் உறைவிடம் அணிமழ பாடியே. 4

கங்கையார் சடையிடைக் கதிர்மதி யணிந்தவன்
வெங்கண்வா ள[8]ரவுடை வேதியன் தீதிலாச்
செங்கயற் கண்ணுமை யாளொடுஞ் சேர்விடம்
மங்கைமார் நடம்பயில் மாமழ பாடியே. 5

பாலனா ராருயிர் பாங்கி[9]னால் உணவரும்
காலனார் உயிர்செகக் காலினாற் சாடினான்
சேலினார் கண்ணினாள் தன்னொடுஞ் சேர்விடம்
மாலி[10]னார் வழிபடு மாமழ பாடியே. 6

விண்ணிலார் இமையவர் மெய்ம்மகிழ்ந் தேத்தவே
எண்ணிலார் முப்புரம் எரியுண நகைசெய்தார்
கண்ணினாற் காமனைக் கனலெழக் காய்ந்தஎம்
அண்ணலார் உறைவிடம் அணிமழ பாடியே. 7

---

[2] வேலை - கடல். [3] பிஞ்ஞகன் - தலைக்கோலம் உடையவன். [4] மறையணி நாவினன் - வேதங்களை அழகுபெற ஓதுகின்ற நாவினை யுடைய சிவபெருமான்; பிரமதேவன் (வணங்கும்) எனினுமாம். [5] துழனி - ஓசை. [6] மந்தம் - இளந்தென்றல். [7] மூவர் - பிரமன், திருமால், உருத்திரன். [8] வாள் - ஒளி. [9] பாங்கு - இவ்வளவு வயது என்று வரையறுத்த முறைமை. [10] மால் - விருப்பம்.

கரத்திறற் கயிலையை யெடுத்தகார் அரக்கன
சிரத்தினை யூன்றலுஞ் சிவனடி சரண்எனு
இரத்[11] திறற் கைந்நரம் பெடுத்திசை பாடலும்
வரத்தினன் மருவிடம் மாமழ பாடியே. 8

ஏடுலா மலர்மிசை அயனெழில் மாலுமாய்
நாடினார்க் கரியசீர் நாதனா் உறைவிடம்
பாடெலாம் பெண்ணை[12] யின் பழம்விழப் பைம்பொழில்
மாடெ[13] லாம் மல்குசீர் மாமழ பாடியே. 9

உறிபிடித் தூத்தைவாய்ச் சமணொடு சாக்கியர்
நெறிபிடித் தறிவிலா நீசர்சொற் கொள்ளன்மின்
பொறிபிடித் தரவினம் பூணெனக் கொண்டுமான்
மறிபிடித் தானிடம் மாமழ பாடியே. 10

ஞாலத்தார் ஆதிரை நாளினன்[14] நாடொறும்
சீலத்தான் மேவிய திருமழ பாடியை
ஞாலத்தான் மிக்கசீர் ஞானசம் பந்தன்சொல்[15]
கோலத்[16] தாற் பாடுவார் குற்றமற் றார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - கௌசிகம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அங்கை[1] யாரழ லன்அழ கார்சடைக்
கங்கை யான்கட வுள்ளிட மேவிய
மங்கை யானுறை யும்மழ பாடியைத்
தங்கை யால்தொழு வார்தக வாளரே. 1

விதி[2] யு மாம்விளை வா[3] மொளி யார்ந்ததோர்
கதியு மாங்கசி வாம்வசி யாற்றமா[4]
மதியு மாம்வலி யாம்மழ பாடியுள்
நதியந் தோய்சடை நாதன்நற் பாதமே. 2

---

11 ஈரம் - இரம் எனக் குறுகிற்று. ஈரம் - அன்பு. 12 பெண்ணை - பனை. 13 மாடு - பக்கம். 14 ஆதிரை நாளினன் - சிவபெருமான். 15 சொல் - இங்குப் பதிகம். 16 கோலம் - பண்ணழகு. 1 அங்கை - அகம்+கை. 2 விதி - ஊழ்; நியதி. 3 விளைவு - ஊழின்பயன். 4 வசியற்றமா என்றும் பாடம்.

முழவி னன்முது காடு[5] றை பேய்க்கணக்
குழவி னன்குல வுங்கையி லேந்திய
மழுவி னனுறை யும்மழ பாடியைத்
தொழுமின் நுந்துய ரானவை தீரவே. 3

கலையி னன்மறை யான்கதி யாகிய
மலையி னன்மரு வார்புர மூன்றெய்த
சிலையி னன்சேர் திருமழ பாடியைத்
தலையி னல்வணங் கத்தவ மாகுமே. 4

நல்வி னைப்பயன் நான்மறை யின்பொருள்
கல்வி யாயக ருத்தன்[6] உருத்திரன்
செல்வன் மேய திருமழ பாடியைப்
புல்கி யேத்தும் அதுபுக ழாகுமே. 5

நீடி னாருல குக்குயி ராய்நின்றான்[7]
ஆடி னானெரி கானிடை மாநடம்[8]
பாடி னாரிசை மாமழ பாடியை
நாடி னார்க்கில்லை நல்குர வானவே. 6

மின்னி னாரிடை யாளொரு பாகமாய்
மன்னி னானுறை மாமழ பாடியைப்
பன்[9]னி னாரிசை யால்வழி பாடுசெய்
துன்னி னார்வினை யாயின வோயுமே. 7

தென்னி லங்கையர் மன்னன் செழுவரை
தன்னி லங்கஅ டர்த்தருள் செய்தவன்
மன்னி லங்கிய மாமழ பாடியை
உன்னி லங்க[10] வுறுபிணி யில்லையே. 8

திருவின் நாயக னுஞ்செழுந் தாமரை
மருவி னுந்தொழத் தழல் மாண்பமர்
உருவி னனுறை யும்மழ பாடியைப்
பரவி னார்வினைப் பற்றறுப் பார்களே.[11] 9

---

[5] முதுகாடு - சுடுகாடு. [6] கருத்தன்-கருத்துள் நிறைந்தவன்; முதல்வன். [7] நின்று என்றும் பாடம். [8] மாநடம் - சங்கார நடனம். [9] பண் என்பது எதுகைநோக்கிப் பன் என நின்றது. [10] அங்கம் - உடம்பு. [11] வினைபற்றறுப்பார்களே என்றும் பாடம்.

நலி[11] யும் நன்றறி யாச்சமண் சாக்கியர்
வலிய சொல்லினும் மாமழ பாடியுள்
ஒலிசெய் வார்கழ லான்திறம் உள்கவே
மெலியும் நம்முடன் மேல்வினை யானவே. 10

மந்தம் உந்து பொழில்மழ பாடியுள்
எந்தை சந்தம் இனிதுகந் தேத்துவான்
கந்த மார்கடற் காழியுள் ஞானசம்
பந்தன் மாலைவல் லார்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வச்சிரத்தம்பேசுவரர் (வயிரத்தூணுதர்):
தேவி—அழகாம்பிகை.

---

## 46. திருப்பழுவூர்*

திருவிராகம். பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முத்தன்மிகு மூவிலைநல் வேலன்விரி நூலன்
அத்தன்எமை யாளுடைய அண்ணலிட மென்பர்
மைத்தழை பெரும்பொழிலின் வாசமது வீசப்
பத்தரொடு சித்தர்பயில் கின்றபழு வூரே. 1

கோடலொடு கோங்கவை குலாவுமுடி தன்மேல்
ஆடரவம் வைத்தபெரு மானதிட மென்பர்
மாடமலி சூளிகையி லேறிமட வார்கள்
பாடலொலி செய்யமலி கின்றபழு வூரே. 2

வாலிய புரத்திலவர்[1] வேவவிழி செய்த
போலிய வொருத்தர்புரி நூலரிட மென்பர்
வேலியின் விரைக்கமல மன்னமுக மாதர்
பாலென மிழற்றிநட மாடுபழு வூரே. 3

எண்ணுமோ ரெழுத்துமிசை யின்கிளவி தேர்வார்
கண்ணுமுத லாயகட வுட்கிடம தென்பர்

---

[11] நலிதல் - வருத்துதல். [1] வாலியபுரத்தில் அவர் - திரிபுராதிகள். * இதனை யானையுரித்த வீரட்டம் அன்று என்பர்.

மண்ணின்மிசை யாடிமலை யாளர்தொழு தேத்திப்
பண்ணியொலி கொண்டுபயில் கின்றபழு வூரே. 4

சாதல்புரி வார்சுடலை தன்னில்நட மாடும்
நாதன்நமை யாளுடைய நம்பனிட மென்பர்
வேதமொழி சொல்லிமறை யாளரிறை வன்றன்
பாதமவை யேத்த[2] நிகழ் கின்றபழு வூரே. 5

மேவயரு மும்மதிலும் வெந்தழல் விளைத்து
மாவயர அன்றுரிசெய் மைந்தனிட மென்பர்
பூவையை மடந்தையர்கள் கொண்டுபுகழ் சொல்லிப்
பாவையர்கள் கற்பொடு பொலிந்தபழு வூரே. 6

மந்தண[3] மிருந்துபுரி மாமடிதன் வேள்வி
சிந்தவிளை யாடுசிவ லோகனிட மென்பர்
அந்தணர்கள் ஆகுதியி லிட்டஅகில் மட்டார்
பைந்தொடிநன் மாதர்சுவ டொற்றுபழு வூரே. 7

உரக்கடல் விடத்தினை மிடற்றிலுற வைத்தன்
றரக்கனை யடர்த்தருளும் அப்பனிட மென்பர்
குரக்கினம் விரைப்பொழிலின் மீதுகனி யுண்டு
பரக்குறு புனற்செய்[4] விளை யாடுபழு வூரே. 8

நின்றநெடு மாலுமொரு நான்முகனும் நேட
அன்றுதழ லாய்நிமிரும் ஆதியிட மென்பர்
ஒன்றுமிரு மூன்றுமொரு நாலுமுணர் வார்கள்
மன்றினி லிருந்துடன் மகிழ்ந்தபழு வூரே. 9

மொட்டையமண் ஆதர்துகில் மூடுவிரி தேரர்
முட்டைகள் மொழிந்தமுனி வான்றனிட மென்பர்
மட்டைமலி தாழைஇள நீரதிசை பூகம்
பட்டையொடு தாறுவிரி கின்றபழு வூரே. 10

அந்தணர்க ளானமலை யாளரவ ரேத்தும்
பந்தமலி கின்றபழு வூர[5] ரனை யாரச்

---

[2] பாதமவையோத என்றும் பாடம். [3] மந்தணம் — மந்திரம்; இரகசியமுமாம். [4] புணர்ச்செய் என்றும் பாடம். [5] இவ்வடிகள் இத்தலம் அந்தணர்களாகிய மலையாளர் பூசிக்கும் சிறப்பினைப் பெற்றுள்ளது என்பதை அறிவிக்கும்.

சந்தம்மிகு ஞானமுணர் பந்தனுரை[5] பேணி
வந்தவண மேத்துமவர் வானமுடை யாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வடமூலநாதர் ; தேவி—அருந்தவநாயகி.

---

## 47. திருக்கானூர்

பண் - தக்கேசி* [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வானு[1]ர்சோதி மன்னுசென்னி வன்னிபுனங்கொன்றைத்
தேனார்போது தானார்கங்கை திங்களொடுசூடி
மானேர்நோக்கி கண்டங்குவப்ப மாலையாடுவார்
கானூர்மேய கண்ணார்நெற்றி ஆன்ஊர்செல்வரே. 1

நீந்தலாகா வெள்ளமூழ்கு நீள்சடைதன்மேலோர்
ஏய்ந்தகோணற் பிறையோடரவு கொன்றைஎழிலாரப்
போந்தமென்சொல் இன்பம்பயந்த மைந்தரவர்போலாம்
காந்தள்விம்மு கானூர்மேய சாந்தநீற்றாரே. 2

சிறையார்வண்டுந் தேனும்விம்மு செய்யமலர்க்கொன்றை
மறையார்பாட லாடலோடு மால்விடைமேல்வருவார்
இறையார்வந்தென் இல்புகுந்தென் எழில்நலமுங்கொண்டார்
கறை[2]யார்சோலைக் கானூர்மேய பிறையார்சடையாரே. 3

விண்ணார்திங்கட் கண்ணிவெள்ளை மாலையதுசூடித்
தண்ணாரக்கோ டாமைபூண்டு தழைபுன் சடைதாழ
எண்ணாவந்தென் இல்புகுந்தங் கெவ்வ[3]நோய்செய்தான்
கண்ணார்சோலைக் கானூர்மேய விண்ணோர்பெருமானே. 4

தார்கொள்கொன்றைக் கண்ணியோடுந் தண்மதியஞ்சூடி
சீர்கொள்பாட லாடலோடு சேடராய்வந்து
ஊர்கள்தோறும் ஐயம்ஏற்றென் னுள்வெங்நோய்செய்தார்
கார்கொள்சோலைக் கானூர்மேய கறைக்கண்டத்தாரே. 5

---

[5] ஞானசம்பந்தனுரை என்றும் பாடம். * இப்பதிகம் தலைவி தோழிக்குக் கூறுவதாக அமையப்பெற்றுள்ளது. [1] வான் - ஞானாகாயம். [2] கறை-நிழல்; இருள். [3] எவ்வம் - துன்பம்.

முளி[4] வெள்ளெலும்பு நீறுநூலும் மூழ்குமார்பராய்
எளிவந்தார்போல் ஐயமென்றென் இல்லேபுகுந்துள்ளத்
தெளிவுநாணுங் கொண்டகள்வர் தேறலார்பூவில்
களிவண்டியாழ்செய் கானூர்மேய ஒளிவெண்பிறையாரே. 6

மூவாவண்ணர் முளைவெண்பிறையர் முறுவல்செய்திங்கே
பூவார்கொன்றை புனைந்துவந்தார் பொக்கம்[5] பலபேசிப்
போவார்போல மால்செய்துள்ளம் புக்கபுரிநூலர்
தேவார்சோலைக் கானூர்மேய தேவதேவரே. 7

தமிழி[6]ன்னீர்மை பேசித்தாளம் வீணைபண்ணிநல்ல
முழவமொந்தை மல்குபாடல் செய்கையிடமோவார்
குமிழின்மேனி தந்துகோல நீர்மையதுகொண்டார்
கமழுஞ்சோலைக் கானூர்மேய பவளவண்ணரே. 8

அந்தமாதி அயனும்மாலும் ஆர்க்கும்அறிவரியான்
சிந்தையுள்ளும் நாவின்மேலுஞ் சென்னியுமன்னினான்
வந்தென்னுள்ளம் புகுந்துமாலை காலையாடுவான்[7]
கந்தமல்கு கானூர்மேய எந்தைபெம்மானே. 9

ஆமையரவோ டேனவெண்கொம் பக்குமாலைபூண்
டாமோர்கள்வர் வெள்ளர்போல உள்வெந்நோய்செய்தார்
ஓமவேத நான்முகனுங் கோணைகணையானும்
சேமமாய செல்வர்கானூர் மேயசேடரே. 10

கழுதுதுஞ்சுங்[8] கங்குலாடுங் கானூர்மேயானைப்
பழுதில்ஞான சம்பந்தன்சொற் பத்தும்பாடியே
தொழுதுபொழுது தோத்திரங்கள் சொல்லித்துதித்துநின்
றழுதுநக்கும் அன்புசெய்வார் அல்லல்அறுப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—செம்மேனிநாதர், முளைநாதர்; தேவி—சிவயோகநாயகி.

---

[4] முளி - எலும்புப் பொருத்தல்கள்; உலர்ந்த எனினுமாம். [5] பொக்கம் - ஒவ்வாத பொய்மொழி. [6] தமிழ் - இனிமை. [7] மாலை காலை ஆடுவான் - மாலையும் காலையும் உடையாடா நிற்பன். [8] கழுது துஞ்சும் - பேய்கள் உறங்கும்.

## 48. திருஅன்பிலாலந்துறை*

**பண் - தக்கராகம்** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கணைநீடெரி மாலர வம்வரை வில்லா[1]
இணையாஎயில் மூன்றும் எரித்த இறைவர்
பிணைமாமயி லுங்[2] குயில் சேர்மட அன்னம்
அணையும் பொழில்அன் பிலாலந் துறையாரே. 1

சடையார்சது ரன்முதி ராமதி சூடி
விடையார்கொடி யொன்றுடை யெந்தை விமலன்
கிடை[3] யாரொலி ஓத்தர வத்[4] திசை கிள்ளை
அடையார்பொழில் அன்பிலா லந்துறை யாரே. 2

ஊரும்அர வம்சடை மேலுற வைத்துப்
பாரும்பலி கொண்டொலி பாடும் பரமர்
நீருண்கய லும்வயல் வாளை வராலோ
டாரும்புனல் அன்பிலா லந்துறை யாரே. 3

பிறையும்அர வும்முற வைத்த முடிமேல்
நறையுண்டெழு வன்னியு மன்னு சடையார்
மறையும்பல வேதிய ரோத ஒலிசென்
றறையும்புனல் அன்பிலா லந்துறை யாரே. 4

நீடும்புனற் கங்கையுந் தங்க முடிமேல்
கூடும்மலை யாளொரு பாகம் அமர்ந்தார்
மாடும்முழ வம்அதி ரம்மட மாதர்
ஆடும்பதி அன்பிலா லந்துறை யாரே. 5

நீரூர்திரு மேனிய ரூனமி[5] லார்பால்
ஊறு[6] ர்சுவை யாகிய உம்பர் பெருமான்
வேரூரகி லும்மிகு சந்தனம் உந்தி
ஆரூர்வயல் அன்பிலா லந்துறை யாரே. 6

---

* 'அன்பில்' என வழங்கப்பெறும். [1] எரி, மால் - கணையாகவும், அரவம் (பிணித்த) வரை - வில்லாகவும் கொள்க. [2] பிணையா மயிலுங் என்றும் பாடம். [3] கிடை - ஓது கிடை; வேதம் பயில் சிறூர் கூட்டம். [4] ஓத்து அரவம் - வேதம் பயிலும் ஒலி. [5] ஊனம் - பாவம். [6] ஊறு - ஊற்று.

செடியார்தலை யிற்பலி கொண்டினி துண்ட
படியார்பர மன்பர மேட்டிதன் சீரைக்
கடியார்மல ரும்புனல் தூவிநின் றேத்தும்
அடியார்தொழும் அன்பிலா லந்துறை யாரே. 7

விடத்தார் திகழும்மிட றன்நட மாடி
படத்தாரர வம்விர வுஞ்சடை ஆதி
கொடித்தேரிலங் கைக்குலக் கோன்வரை யார
அடர்த்தாரருள் அன்பிலா லந்துறை யாரே. 8

வணங்கிம்மலர் மேலய னும்நெடு மாலும்
பிணங்கியறி கின்றிலர் மற்றும் பெருமை
சுணங்குமுகத் தம்முலை யாளொரு பாகம்
அணங்குந்திக ழன்பிலா லந்துறை யாரே. 9

தறியார்துகில் போர்த்துழல் வார்சமண் கையர்
நெறியாஉணர் ராநிலை கேடினர் நித்தல்
வெறியார்மலர் கொண்டடி வீழும் அவரை
அறிவாரவர் அன்பிலா லந்துறை யாரே. 10

அரவார்புனல் அன்பிலா லந்துறை தன்மேல்
கரவாதவர் காழியுள் ஞானசம் பந்தன்
பரவா[7]ர்தமிழ் பத்திசை பாடவல் லார்போய்
விரவாகுவர் வானிடை வீடெளி தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சத்தியவாகீசர், ஆலந்துறைநாதர்;
தேவி—சௌந்தரநாயகி.

---

## 49. திருமாந்துறை *

பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

செம்பொ னார்தரு வேங்கையும் ஞாழலுஞ் செருந்திசெண் பகம்ஆனைக், கொம்பும் ஆரமும் மாதவி சுரபுனை குருந்தலர் பரங்

---

[7] பரவு - துதி. * 'வடகரை மாந்துறை' என வழங்கப்பெறும்; ஆம்ரவனம் என்றும் கூறப்பெறும். (ஆம்ரம்-மா.)

துந்தி, அம்பொன் நேர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறை கின்ற, எம்பி ரானிமை யோர்தொழு பைங்கழல் ஏத்துதல் செய் வோமே. 1

விளவு[1] தேனொடு சாதியின் பலங்[2] களும் வேய்மணி நிரந் துந்தி, அளவி நீர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைவானத், துளவ மான்மக னைங்கணைக் காமனைச் சுடவிழித் தவனெற்றி, அளக வாணுதல் அரிவைதன் பங்கனை யன்றிமற் றறியோமே. 2

கோடு தேன்சொரி குன்றிடைப் பூகமுங் கூந்தலின் குலை வாரி, ஓடு நீர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைநம்பன், வாடி னார்தலை யிற்பலி கொள்பவன் வானவர் மகிழ்ந்தேத்தும், கேடி லாமணி யைத்தொழல் அல்லது கெழுமுதல் அறியோமே. 3

இலவ ஞாழலும் ஈஞ்சொடு சுரபுன்னை இளமரு திலவங்கம், கலவி நீர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைகண்டன், அலை கொள் வார்புனல் அம்புலி மத்தமும் ஆடர வுடன்வைத்த, மலையை வானவர் கொழுந்தினை யல்லது வணங்குதல் அறியோமே. 4

கோங்கு செண்பகங் குருந்தொடு பாதிரி குரவிடை மலருந்தி, ஓங்கி நீர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைவானைப், பாங்கி னாலிடுந் தூபமுந் தீபமும் பாட்டவி மலர்சேர்த்தித், தாங்கு வாரவர் நாமங்கள் நாவினில் தலைப்படுந் தவத்தோரே. 5

பெருகு சந்தனங் காரகில் பீலியும் பெருமரம் நிமிர்ந்துந்திப்,[3] பொருது காவிரி வடகரை மாந்துறைப் புனிதனெம் பெருமானைப், பரிவி னாலிருந் திரவியும் மதியமும் பார்மன்னர் பணிந் தேத்த, மருத வானவர்[4] வழிபடு மலரடி வணங்குதல் செய் வோமே.[5] 6

நறவ மல்லிகை முல்லையும் மௌவலும் நாண்மல ரவை வாரி, இறவில்[6] வந்தெறி காவிரி வடகரை மாந்துறை யிறைஅன் றங், கறவ னாகிய கூற்றினைச் சாடிய அந்தணன் வரைவில்லால்,[7]

---

[1] விளவு - விளா. [2] சாதியின் பலம் - சாதிக்காய். [3] பெருமரம் நிரந்துந்திப் என்றும் பாடம். [4] மருத வானவர் - மருத்துவர். [5] இச்செய்யுளில் சூரியன் சந்திரன், மருந்துக்கள் வழி பட்டமை யைச் சிறப்பித்துக்கூறும். [6] இறவில் - கானவில். [7] வரைவில்லா என்றும் பாடம்.

நிறைய வாங்கி வலித்தெயி லெய்தவன் நிரைகழல் பணி வோமே. 7

மந்த மார்பொழில் மாங்கனி மாந்திட மந்திகள் மாணிக்கம், உந்தி நீர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைவானை, நிந்தி யாளெடுத் தார்த்தவல் லரக்கனை நெரித்திடு விரலானைச், சிந்தி யாமனத் தாரவர் சேர்வது தீநெறி யதுதானே. 8

நீல மாமணி நித்திலத் தொத்தொடு நிரைமலர் நிரந்துந்தி, ஆலி யாவரு காவிரி வடகரை மாந்துறை யமர்வானை, மாலு நான்முகன் தேடியுங் காண்கிலா மலரடி யிணைநாளும், கோல மேத்திநின் றாடுமின் பாடுமின் கூற்றுவன் நலியானே. 9

நின்று ணுஞ்சமண் தேரரும் நிலையிலர் நெடுங்கழை நற வேலம், கன்று மாங்கனி கதலியின் பலங்களும் நாணலின் நுரை வாரி, ஒன்றி நேர்வரு காவிரி வடகரை மாந்துறை யொருகாலம், அன்றி யுள்ளழிந் தெழும்பரி சழகிது அதுவவர்க் கிடமாமே. 10

வரைவ ளங்கவர் காவிரி வடகரை மாந்துறை யுறைவானைச், சிரபு ரம்பதி யுடையவன் கவுணியன் செழுமறை நிறைநாவன், அரவெ னும்பணி[8] வல்லவன் ஞானசம் பந்தன்அன் புறுமாலை, பரவி டுந்தொழில் வல்லவர் அல்லலும் பாவமும் இலர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—ஆம்ரவனநாதர்; தேவி—அழகம்மை.

---

## 50. திருப்பாற்றுறை*

**பண் - பழந்தக்கராகம்** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காரார்[1] கொன்றை கலந்த முடியினர்
சீரார் சிந்தை செலச் செய்தார்

---

[8] அரவெனும் பணி - அரனைத் துதியுமின் என்று உயிர்களை வழிப்படுத்தும் பணி. * மார்க்கண்டேயர் தம் சிவபூசைக்குப் பால் பெறாது வருந்தி இறைவனை வேண்ட, அவர் திருவருளால் பால் பெருகிய காரணத்தால் இப்பெயர் பெற்றது. பால்+துறை=பாற் றுறை. [1] காரார் - கார்காலத்தை உரிமையாகக் கொண்ட.

பாரார் நாளும் பரவிய பாற்றுறை
ஆரா[2] ராதி முதல்வரே. 1

நல்லா ரும்மவர் தீய ரெனப்படும்
சொல்லார் நன்மலர் சூடினார்
பல்லார் வெண்டலைச் செல்வரெம் பாற்றுறை
எல்லா ருந்தொழும் ஈசரே. 2

விண்ணார் திங்கள் விளங்கும் நுதலினர்
எண்ணார் வந்தென் எழில்கொண்டார்[3]
பண்ணார் வண்டினம் பாடல்செய் பாற்றுறை
உண்ணா ளும் உறைவரே. 3

பூவுந் திங்கள் புனைந்த முடியினர்
ஏவின் அல்லா ரெயிலெய்தார்
பாவந் தீர்புனல் மல்கிய பாற்றுறை
ஓவென் சிந்தை யொருவரே. 4

மாகந் தோய்மதி சூடி மகிழ்ந்தென
தாகம் பொன்னிற மாக்கினார்
பாகம் பெண்ணும் உடையவர் பாற்றுறை
நாகம் பூண்ட நயவரே. 5

போது பொன்திகழ் கொன்றை புனைமுடி
நாதர் வந்தென் நலங்கொண்டார்
பாதந் தொண்டர் பரவிய பாற்றுறை
வேத மோதும் விகிர்தரே. 6

வாடல் வெண்டலை சூடினர் மால்விடை
கோடல் செய்த குறிப்பினார்
பாடல் வண்டினம் பண்செயும் பாற்றுறை
ஆடல் நாகம் அசைத்தாரே. 7

வெவ்வ மேனிய ராய்வெள்ளை நீற்றினர்
எவ்வஞ்[5] செய்தென் எழில்கொண்டார்
பவ்வம் நஞ்சடை கண்டரெம் பாற்றுறை
மவ்வல்[6] சூடிய மைந்தரே. 8

---

2 ஆர் - ஆத்தி. 3 என் எழில் கொண்டார் - பசுத் தன்மையைப் போக்கினர். 4 எவ்வம் - நோய். 5 மவ்வல்-முல்லையின் வகை.

ஏனம் அன்னமும் ஆனவ ருக்கெரி
ஆன வண்ணத்தெம் அண்ணலார்
பான ல[7]ம்மலர் விம்மிய பாற்றுறை
வான, வெண்பிறை மைந்தரே. 9

வெந்த நீற்றினர் வேலினர் நூலினர்
வந்தென் நன்னலம் வௌவினர்
பைந்தண் மாதவி சூழ்தரு பாற்றுறை
மைந்தர் தாமோர் மணாளரே. 10

பத்தர் மன்னிய பாற்றுறை மேவிய
பத்து நூறு பெயரனைப்
பத்தன் ஞானசம் பந்தன தின்தமிழ்
பத்தும் பாடிப் பரவுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—திருமூலநாதர்; தேவி—மோகநாயகி, மேகலாம்பிகை.

---

## 51. திருவானைக்கா*

பண் - இந்தளம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மழையார் மிடறு மழுவா ளுடையாய்
உழை[1]யார் கரவா உமையாள் கணவா
விழவா ரும்வெணா வலின்மே வியஎம்
அழகா எனும் ஆயிழையாள் அவளே. 1

கொலையார் கரியின் உரிமூ டியனே
மலையார் சிலையா வளைவித் தவனே
விலையா லெனையா ளும்வெண்நா வலுளாய்
நிலையா அருளாய் எனும் நேரிழையே. 2

---

[7] பானல் - நீலோற்பலம். * இறைவன் யானைக்கு அருள் புரிந்தமையின் 'ஆனைக்கா' எனப் பெயர் பெறலாயிற்று. இது ஜம்புகேசுவரம் எனவும் பெயர் பெறும். ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்துபோயிற்று; இப்பதிகம் செவிலித்தாய் இரங்கிக் கூறும் கூற்றாக அமைந்துள்ளது. [1] உழை - மான்.

காலா லுயிர்கா லனைவீ டுசெய்தாய்
பாலோ டுநெய்யா டியபால் வணனே
வேலா டுகையா யெம்வெண்நா வலுளாய்
ஆலா[2]ர் நிழலாய் எனும் ஆயிழையே. 3

சுறவக் கொடிகொண் டவன்[3] நீ றதுவாய்
உறநெற் றிவிழித் தளம்உத் தமனே
விறல்மிக் ககரி[4]க் கருள்செய் தவனே
அறமிக் கதுவென் னுமென் ஆயிழையே. 4

செங்கட் பெயர்கொண் டவன்செம் பியர்கோன்[5]
அங்கட் கருணை பெரிதா யவனே
வெங்கண் விடையா யெம்வெண்நா வலுளாய்
அங்கத் தயர்வா யினள் ஆயிழையே. 5

குன்றே யமர்வாய் கொலையார் புலியின்
தன்தோ லுடையாய் சடையாய் பிறையாய்
வென்றாய் புரமூன் றைவெண்நா வலுளே
நின்றா யருளாய் எனும் நேரிழையே. 6 - 7

மலையன் றெடுத்த அரக்கன் முடிதோள்
தொலையவ் விரலூன் றியதூ மழுவா
விலையா லெனையா ளும்வெண்நா வலுளாய்
அலசா மல்[6] நல்காய் எனும் ஆயிழையே. 8

திரு[7] வார் தருநா ரணன்நான் முகனும்
மருவா வெருவா அழலாய் நிமிர்ந்தாய்
விரையா ரும்வெண்நா வலுள்மே வியஎம்
அரவா எனும் ஆயிழையா ளவளே. 9

புத்தர் பலரோ டமண்பொய்த் தவர்கள்
ஒத்தவ் வுரைசொல் லிவையோ ரகிலார்
மெய்த்தே வர்வணங் கும்வெண்நா வலு[8]ளாய்
அத்தா அருளாய் எனும் ஆயிழையே. 10

---

[2] ஆல் - கல்லால மரம். [3] சுறவம் - மீன்; சுறவக் கொடிகொண் டவன் - மன்மதன். [4] கரி - யானை. [5] இவ்வடி கோச்செங்கட் சோழனைக் குறிக்கும். [6] அலசாமல் - வருந்தாமல். [7] திரு - இலக்குமி. [8] வெண்நாவல் — தலவிருட்சம்.

வெண்ணா வலமர்ந் துறைவே தியனைக்[8]
கண்ணார் கமழ்கா ழியர்தந் தலைவன்
பண்ணோ டிவைபா டியபத் தும்வல்லார்
விண்ணோ ரவரேத் தவிரும் புவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - கௌசிகம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வானைக்காவில்[1] வெண்மதி மல்குபுல்கு வார்சடைத்
தேனைக்காவில் இன்மொழித் தேவிபாக மாயினான்
ஆனைக்காவில் அண்ணலை அபயமாக வாழ்பவர்
ஏனைக்காவல் வேண்டுவார்க்கேதும்[2] ஏதம் இல்லையே. 1

சேறுபட்ட தண்வயற் சென்றுசென்று சேணுலா
வாறுபட்ட நுண்டுறை யானைக்காவில் அண்ணலார்
நீறுபட்ட மேனியார் நிகரில்பாதம் ஏத்துவார்
வேறுபட்ட சிந்தையார் விண்ணிலெண்ண வல்லரே. 2

தாரமாய மாதராள் தானோர்பாக மாயினான்
ஈரமாய புன்சடை யேற்றதிங்கள் சூடினான்
ஆரமாய மார்புடை யானைக்காவில் அண்ணலை
வாரமாய் வணங்குவார் வல்வினைகள் மாயுமே. 3

விண்ணினண்ணு புல்கிய வீரமாய மால்விடைச்
சுண்ணவெண்ணீ றாடினான் சூலமேந்து கையினான்
அண்ணல்கண்ணோர் மூன்றினான் ஆனைக்காவு கைதொழ
எண்ணும்வண்ணம் வல்லவர்க் கேதமொன்றும் இல்லையே. 4

வெய்யபாவங் கைவிட வேண்டுவீர்கள் ஆண்டசீர்
மைகொள்கண்டன் வெய்யதீ மாலையாடு காதலான்
கொய்யவிண்ட நாண்மலர்க் கொன்றைதுன்று சென்னியெம்
ஐயன்மேய பொய்கைசூழ் ஆனைக்காவு சேர்மினே. 5

நாணுமோர்வு சார்வுமுன் நகையுமுட்கு நன்மையும்
பேணுறாத செல்வமும் பேசநின்ற பெற்றியான்

---

[8] வேதியன் - வேதப்பொருளானவன். [1] வானைக்காவல் என்றும் பாடம். [2] வேண்டுவாரேதம் என்றும் பாடம்.

ஆணும்பெண்ணு மாகிய ஆனைக்காவில் அண்ணலார்
காணுங்கண்ணு மூன்றுடைக் கறைகொள்மிடறன் அல்லனே. 6

கூருமாலை நண்பகற் கூடிவல்ல தொண்டர்கள்
பேருமூருஞ் செல்வமும் பேசநின்ற பெற்றியான்
பாரும்விண்ணுங் கைதொழப் பாயுங்கங்கை செஞ்சடை
ஆரநீரோ டேந்தினான்[3] ஆனைக்காவு சேர்மினே. 7

பொன்னமல்கு தாமரைப் போதுதாது வண்டினம்
அன்னமல்கு தண்டுறை ஆனைக்காவில் அண்ணலைப்
பன்னவல்ல நான்மறை பாடவல்ல தன்மையோர்
முன்னவல்லர் மொய்கழல் துன்னவல்லர் விண்ணையே. 8

ஊனொடுண்டல் நன்றெனா ஊனொடுண்டல் தீதெனா
ஆனதொண்டர்[4] அன்பினாற் பேசநின்ற தன்மையான்
வானொடொன்று சூடினான் வாய்மையாக மன்னிநின்
றூனொடுஞ்சும் ஆடினான் ஆனைக்காவு சேர்மினே. 9

கையிலுண்ணுங் கையருங் கடுக்கடின் கழுக்களும்
மெய்யைப்போர்க்கும் பொய்யரும் வேதநெறியை யறிகிலார்
தையல்பாக மாயினான் தழலதுருவத் தானெங்கள்
ஐயன்மேய பொய்கைசூழ் ஆனைக்காவு சேர்மினே. 10

ஊழியூழி வையகத் துயிர்கள்தோற்றும் வானொடும்
ஆழியானுங் காண்கிலா ஆனைக்காவில் அண்ணலைக்
காழிஞான சம்பந்தன் கருதிச்சொன்ன பத்திவை
வாழியாகக் கற்பவர் வல்வினைகள் மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

[3] இஃது, உறையூர்ச் சோழன் நீராடியபொழுது முத்தாரம் காவிரியாற்றில் நழுவி விழுந்ததை அறிந்து, நின்மலனே! 'ஆரத்தைக் கொள்க' என வேண்ட திருமஞ்சனக் குடத்தில் அந்த ஆரம் புகுந்து இறைவனை நீராட்டியபோது அவ் இறைவனுக்கு அணியாயது என்பதைக் குறிக்கும் வரலாறு. [4] ஆனதொண்டர் - இங்கு முறையே கண்ணப்பர், சிவகோசரியார் இவர்களைக் குறிக்கும்.

## கூடற்சதுக்கம் *

### பண் - பழம்பஞ்சுரம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மண்ணது உண்டரி[1] மலரோன்[2] காணு
வெண்ணாவல் விரும்புமயேந்திரரும்[3]
கண்[4] ணது வோங்கிய கயிலையாரும்
அண்ணல்ஆ ரூராதி யானைக்காவே. 1

வந்துமா லயனவர் காண்பரியார்
வெந்தவெண் ணீறணி மயேந்திரரும்
கந்தவார் சடையுடைக் கயிலையாரும்
அந்தண்ஆ ரூராதி யானைக்காவே. 2

மாலயன் தேடிய மயேந்திரரும்
காலனை உயிர்கொண்ட கயிலையாரும்
வேலைய தோங்கும்[5] வெண் ணாவலாரும்
ஆலைஆ ரூராதி யானைக்காவே. 3

கருடனை யேறரி அயனோர் காணார்
வெருள்விடை யேறிய மயேந்திரரும்
கருடரு கண்டத்தெங் கயிலையாரும்
அருளன்ஆ ரூராதி யானைக்காவே. 4

மதுசூதனன்[6] நான்முகன் வணங்கரியார்
மதி[7] யது சொல்லிய[8] மயேந்திரரும்

---

* திருக்கயிலாயம், திருவானைக்கா, திருமயேந்திரம், திருவாரூர் என்னும் நான்கு தலங்களையும் சேர்த்துக் கூறப்பட்டது கூடற் சதுக்கமாம். இஃது ஒரு வகைச் சித்திரக்கவி ஆகும். ** இப்பதிகம் முழுதும் மாலயன் தேடிக் காணாமையைப்பற்றிச் சிறப்பித்துக் கூறப்பெறுவதாகும். [1] உண்ட + அரி-உண்டரி; அகரம் தொக்கது. [2] மண்ணதுவுண்ட மான் மலரோன் என்றும் பாடம். [3] வெண்ணாவலுறையு மயேந்திரரும் என்றும் பாடம். [4] கண் - அருட் கண்; இடமுமாம். [5] வேலையது ஒக்கும்-ஊழி வெள்ளத்திலும் அழியாது விலக்கும். [6] மதுசூதனன் - திருமால். [7] மதி - இங்கு ஆகமம். [8] சொல்லிய - உபதேசித்த.

கதிர்முலை [9] புல்கிய கயிலையாரும்
அதியன்ஆ ரூராதி யானைக்காவே. 5

சக்கரம் [10] வேண்டுமால் பிரமன்காணா
மிக்கவர் கயிலை மயேந்திரரும்
தக்கனைத் தலையரி தழலுருவர்
அக்கணி யவராரூர் ஆனைக்காவே. 6

கண்ணனும் நான்முகன் காண்பரியார்
வெண்ணாவல் விரும்பு மயேந்திரரும்
கண்ணப்பர்க் கருள்செய்த கயிலையெங்கள்
அண்ணல்ஆ ரூராதி யானைக்காவே. 7

கடல்வண்ணன் நான்முகன் காண்பரியார்
தடவரை யரக்கனைத் தலைநெரித்தார்
விடமது வுண்டவெம் மயேந்திரரும்
அடல்விடையார்ஆ ரூராதி யானைக்காவே. 8

ஆதிமால் அயனவர் காண்பரியார்
வேதங்கள் துதிசெயும் மயேந்திரரும்
காதிலோர் குழையுடைக் கயிலையாரும்
ஆதிஆ ரூரெந்தை யானைக்காவே. 9

அறிவில் அமண்புத்தர் அறிவுகொள்ளேல்
வெறியமான் கரத்தாரூர் மயேந்திரரும்
மறிகட லோன்அயன் தேடத்தானும்
அறிவரு கயிலையோன் ஆனைக்காவே. 10

ஏனமா லயனவர் காண்பரியார்
கானமார் கயிலைநன் மயேந்திரரும்
ஆனஆ ரூராதி யானைக்காவை
ஞானசம் பந்தன் தமிழ்சொல்லுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—ஜம்புகேசுவரர்; தேவி—அகிலாண்ட நாயகி.

---

[9] கதிர்முலை – உமாதேவியார்: ஆகுபெயர். [10] இஃது இறைவன் சலந்தராசுரனை இருபிளவாகப் பிளந்து ஏந்திய சக்கரமாகும்.

# 52. திருப்பைஞ்ஞீலி*

**பண் - காந்தாரபஞ்சமம் [3-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

ஆரிடம்[1] பாடிலர்[2] அடிகள் காடலால்
ஓரிடங் குறைவிலர் உடையர் கோவணம்
நீரிடஞ் சடைவிடை யூர்தி நித்தலும்
பாரிடம் பணிசெயும் பயில்பைஞ் ஞீலியே. 1

மருவிலார்[3] திரிபுரம் எரிய மால்வரை
பருவிலாக் குனித்தபைஞ் ஞீலி மேவலான்
உருவிலான் பெருமையை யுளங்கொ ளாதவத்
திருவிலார் அவர்களைத்[4] தெருட்ட லாகுமே. 2

அஞ்சுரும் பணிமலர் அமுதம் மாந்தித்தேன்
பஞ்சுரம்[5] பயிற்றுபைஞ் ஞீலி மேவலான்
வெஞ்சுரந் தனிலுமை வெருவ வந்ததோர்
குஞ்சரம் படவுரி போர்த்த கொள்கையே. 3

கோடல்கள் புறவணி கொல்லை முல்லைமேல்
பாடல்வண் டிசைமுரல் பயில்பைஞ் ஞீலியார்
பேடலர் ஆணலர் பெண்ணும் அல்லதோர்
ஆடலை யுகந்தஎம் அடிகள் அல்லரே. 4

விழியிலா நகுதலை விளங்கி ளம்பிறை
சுழியிலார் வருபுனற் சூழல் தாங்கினான்
பழியிலார் பரவுபைஞ் ஞீலி பாடலான்
கிழியிலார்[6] கேண்மையைக் கெடுக்க லாகுமே. 5

---

* இங்குப் பசியநீலி தலமரம் ஆதலின் இப் பெயர் பெற்றது. ஞீலி - ஒருவகை வாழை. [1] ஆரிடம் - முனிவர்கண்ட நூல்; வேத சாகைகள். [2] பாடிலர் - அவற்றால் பேசப்பட்டவர்; பாடப்படும் இல்லை யுடையவர் எனினுமாம். இல் - வாசத்தானம். [3] மருவலார் என்றும் பாடம். [4] திருவிலாதவர்களைத் என்றும் பாடம். திருவிலார் - சிவன் பெருமையை உளங்கொள்ளாதவரே செல்வம் இல்லாதவர். [5] பஞ்சுரம் - பழம் பஞ்சுரம்; ஒருபண். [6] கிழியிலார் - கீளுடையை விரும்பியணிவோர்.

விடையுடைக் கொடிவல னேந்தி வெண்மழுப்
படையுடைக் கடவுள்பைஞ் ஞீலி மேவலான்
துடியிடைக் கலையல்கு லாளோர் பாகமாச்
சடையிடைப் புனல்வைத்த சதுரன் அல்லனே. 6

தூயவன் தூயவெண் ணீறு மேனிமேல்
பாயவன் பாயபைஞ் ஞீலி கோயிலா
மேயவன் வேய்புரை[7] தோளி பாகமா
ஏயவன் எனைச்செயுந் தன்மை யென்கொலோ. 7

தொத்தின தோள்முடி யுடைய வன்றலை
பத்தினை நெரித்தபைஞ் ஞீலி மேவலான்
முத்தினை முறுவல்செய் தாளோர் பாகமாப்
பொத்தினன் திருந்தடி பொருந்தி வாழ்மினே. 8

நீருடைப் போதுறை வானும் மாலுமாய்ச்
சீருடைக் கழலடி சென்னி காண்கிலர்
பாருடைக் கடவுள்பைஞ் ஞீலி மேவிய
தாருடைக் கொன்றையந் தலைவர் தன்மையே, 6

பீலியார்[8] பெருமையும் பிடகர்[9] நூன்மையும்
சாலியா தவர்களைச் சாதி யாததோர்
கோலியா வருவரை கூட்டி யெய்தபைஞ்
ஞீலியான் கழலடி நினைந்து வாழ்மினே. 10

கண்புனல் விளைவயற் காழிக் கற்பகம்
நண்புணர் அருமறை ஞானசம் பந்தன்
பண்பினர் பரவுபைஞ் ஞீலி பாடுவார்
உண்பின[10] வுலகினி லோங்கி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—நீலகண்டர், ஆரணீய விடங்கர்;
தேவி—விசாலாட்சி, நீணெடுங்கண்ணி.

---

[7] வேய்புரை - மூங்கிலை ஒத்த. [8] பீலியார் - மயிற்பீலி ஏந்திய சமணர். [9] பிடகர் - திரிபிடகத்தைத் தம் நூலாக வுடைய புத்தர். [10] உண்பின் - நல் அனுபவத் துக் கிடமான.

# 53. திருப்பாச்சிலாச்சிராமம்*

**பண் - தக்கராகம்**** [1-ம் திருமுறை]

*திருச்சிற்றம்பலம்*

**து**ணிவளர்திங்கள் துளங்கிவிளங்கச் சுடர்ச்சடை சுற்றி முடித்துப், பணிவளர்கொள்கையர் பாரிடஞ்சூழ வாரிடமும் பலி தேர்வர், அணிவளர்கோல மெலாஞ்செய்துபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற, மணிவளர் கண்டரோ[1] மங்கையைவாட மயல் செய்வதோ இவர்மாண்பே. 1

கலைபுனைமானுரி தோலுடையாடை கனல்சுட ராலிவர்கண்கள், தலை யணிசென்னியர் தாரணிமார்பர் தம்மடிகள் ளிவரென்ன, அலைபுனல்பூம்பொழில் சூழ்ந்தமர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற, இலைபுனைவேலரோ ஏழையைவாட இடர்செய் வதோ இவரீடே. 2

வெஞ்சுடராடுவர் துஞ்சிருள்மாலை வேண்டுவர்பூண்பது வெண்ணூல், நஞ்சடைகண்டர் நெஞ்சிடமாக நண்ணுவர் நம்மை நயந்து, மஞ்சடைமாளிகை சூழ்தருபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற, செஞ்சுடர்வண்ணரோ பைந்தொடிவாடச் சிதைசெய் வதோ இவர்சீரே. 3

கனமலர்க்கொன்றை அலங்கல்இலங்கக் கனல்தரு தூமதிக் கண்ணி, புனமலர்மாலை யணிந்தழகாய புனிதர்கொ லாமிவ ரென்ன, வனமலிவண்பொழில் சூழ்தருபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற, மனமலிமைந்தரோ மங்கையைவாட மயல்செய் வதோ இவர்மாண்பே. 4

மாந்தர்தம்பால்நறு நெய்மகிழ்ந்தாடி வளர்சடை மேற்புனல் வைத்து, மோந்தைமுழாக்குழல் தாளமொர்வீணை முதிரவோர் வாய்மூரி[2] பாடி, ஆந்தைவிழிச்சிறு பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற, சாந்தணிமார்பரோ தையலைவாடச் சதுர்செய் வதோ இவர்சார்வே. 5

---

* 'திருவாசி' என வழங்கப்படும். பாச்சில் – பதி ; ஆச்சிராமம்–கோயில். ** இப்பதிகம் கொல்லிமழவனது பெண்ணைப் பற்றியிருந்த முயலகநோய் நீங்கப் பாடியருளியது ஆகும். [1] மணிவளர் கண்டர் – மணிகண்டீசர்; தலத்துச் சுவாமியின் பெயர். [2] வாய்மூரி – இசைவகை.

நீறுமெய்பூசி நிறைசடைதாழ நெற்றிக்கண் ணாலுற்றுநோக்கி, ஆறதுசூடி ஆடரவாட்டி யைவிரற் கோவண[4] ஆடை, பாறரு மேனியர் பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற, ஏறதுஏறியர் ஏழையைவாட இடர்செய்வதோ இவரீடே. 6

பொங்கிளநாகமொ ரேகவடத்[5]தோ டாமைவெண் ணூல் புனைகொன்றை, கொங்கிளமாலை புனைந்தழகாய குழகர்கொ லாமிவரென்ன, அங்கிளமங்கையோர் பங்கினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற, சங்கொளிவண்ணரோ தாழ்குழல்வாடச் சதிர் செய்வதோ இவர்சார்வே. 7

ஏவ[6]லத்தால்விச யற்கருள்செய்து இராவணனை[7]யீடழித்து, மூவரிலும்முத லாய்நடுவாய மூர்த்தியை யன்றிமொழியாள், யாவர்களும்பர வும்மெழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற, தேவர்கள்தேவரோ சேயிழைவாடச் சிதைசெய்வதோ இவர் சேர்வே. 8

மேலதுநான்முகன் எய்தியதில்லை கீழது சேவடிதன்னை, நீலதுவண்ணனும் எய்தியதில்லை யெனஇவர் நின்றதுமல்லால், ஆலதுமாமதி தோய்பொழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற, பாலதுவண்ணரோ பைந்தொடிவாடப் பழிசெய்வதோ இவர் பண்பே. 9

நாணொடுகூடிய சாயி[8]னரேனும் நகுவ ரவரிருபோதும், ஊணொடுகூடிய வுட்கு[9]நகையால் உரைக ளவைகொளவேண் டா, ஆணொடுபெண்வடி வாயினர்பாச்சி லாச்சிரா மத்துறை கின்ற, பூண்நெடுமார்பரோ பூங்கொடி[10]வாடப் புனைசெய்வதோ இவர்பொற்பே. 10

அகமலிஅன்பொடு தொண்டர்வணங்க ஆச்சிரா மத்துறை கின்ற, புகைமலிமாலை புனைந்தழகாய புனிதர்கொ லாமிவ ரென்ன, நகைமலிதண்பொழில் சூழ்தருகாழி நற்றமிழ் ஞானசம்

---

[4] ஐவிரற் கோவணம் - ஐந்து விரற்கடை அகலமுள்ள கோவணம். [5] ஏகவடம் – ஒற்றைச்சரமாலை; இதனை ஏகாவலி என்பர். [6] ஏவம் – இங்குப் பாசுபதாத்திரம். [7] இராவணன்றன்னை என்றும் பாடம். [8] சாய் – சாயகம் - அம்பு. [9] உட்கும் - நாணத்தகும். [10] பூங்கொடி– இங்குக் கொல்லிமழவனது பெண்.

பந்தன், தகைமலிதண்டமிழ் கொண்டிவையேத்தச் சாரகி லாவினை தானே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மணிகண்டேசர், மாற்றறிவரதர்; தேவி—பாலசுந்தரி.

---

## 54. திருஈங்கோய்மலை *

**பண் - தக்கேசி**** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வா**னத்துயர்தண் மதிதோய் சடைமேல் மத்தமலர்சூடித்
தேனொத்தனமென் மொழிமான்விழியாள் தேவிபாகமாக்
கானத்[1] திரவில் எரிகொண்டாடுங் கடவுள்உலகேத்த
ஏனத்திரள்[2]வந் திழியுஞ்சாரல் ஈங்கோய்மலையாரே. 1

சூலப்படையொன் றேந்திஇரவிற் சுடுகாடிடமாகக்
கோலச்சடைகள் தாழக்குழல்யாழ் மொந்தைகொட்டவே
பாலொத்தனைய மொழியாள்காண ஆடும்பரமனார்
ஏலத்தொடுநல் இலவங்கமழும் ஈங்கோய்மலையாரே. 2

கண்கொள்நுதலார் கறைகொள்மிடற்றார் கரியின்உரிதோலார்
விண்கொள்மதிசேர் சடையார்விடையார் கொடியார்வெண்ணீறு
பெண்கொள்திருமார் பதனிற்பூசும் பெம்மான்எமையாள்வார்
எண்கும்[3] அரியுந் திரியுஞ்சாரல் ஈங்கோய்மலையாரே. 3

மறையின்இசையார் நெறிமென்கூந்தல் மலையான்மகளோடும்
குறைவெண்பிறையும் புனலுந்நிலவுங் குளிர்புன்சடைதாழப்
பறையுங்குழலுங் கழலும்ஆர்ப்பப் படுகாட்[4] டெரியாடும்
இறைவர்சிறைவண் டறைபூஞ்சாரல் ஈங்கோய்மலையாரே. 4

நொந்தசுடலைப் பொடிநீறணிவார் நுதல்சேர்கண்ணினார்
கந்தமலர்கள் பலவுந்நிலவு கமழ்புன்சடைதாழப்

---

* திருவிங்கநாதமலை என வழங்கப்பெறும். அகத்தியர் ஈ வடிவுகொண்டு பூசித்தமையால் இப்பெயர் பெற்றது. **இப்பதிகம் மலையின் வளத்தை அழகுபடக் கூறுகின்றது. [1] கானம் - சங்கார இடம். [2] ஏனத்திரள்—பன்றிக் கூட்டம். [3] எண்கு - கரடி. அரி - சிங்கம். [4] படுகாடு - இறந்த இடம்.

பந்தண்விரலாள் பாகமாகப் படுகாட்டெரியாடும்
எந்தம்அடிகள் கடிகொள்சாரல் ஈங்கோய்மலையாரே. 5

நீரூர் அகலம் உடையார்நிரையார் கொன்றைஅரவோடும்
ஆரூர்சடையார் அயில்வெங்கணையால் அவுணர்புரம்மூன்றும்
சீரூஎரிசெய் தேவர்பெருமான் செங்கண் அடல்வெள்ளை
ஏரூர்கொடியார் உமையாளோடும் ஈங்கோய்மலையாரே. 6

வினையாயினதீர்த் தருளேபுரியும் விகிர்தன்விரிகொன்றை
நனையார்முடிமேல் மதியஞ்சூடும் நம்பானலமல்கு
தனையார்கமல மலர்மேலுறைவான் தலையோடனலேந்தும்
எனையாளுடையான் உமையாளோடும் ஈங்கோய்மலையாரே. 7

பரக்கும்பெருமை இலங்கையென்னும் பதியிற்பொலிவாய
அரக்கர்க்கிறைவன் முடியுந்தோளும் அணியார்விரல்தன்னால்
நெருக்கியடர்த்து நிமலாபோற்றி யென்றுநின்றேத்த*
இரக்கம்புரிந்தார் உமையாளோடும் ஈங்கோய்மலையாரே. 8

வரியார்புலியின் உரிதோலுடையான் மலையாள்மகளோடும்
பிரியாதுடனாய் ஆடல்பேணும் பெம்மான்திருமேனி
அரியோடயனும் அறியாவண்ணம் அளவில்பெருமையோ
டெரியாய்நிமிர்ந்த எங்கள்பெருமான் ஈங்கோய்மலையாரே. 9

பிண்டியேன்று பெயராநிற்கும் பிணங்குசமணரும்
மண்டைக்கலனைக் கொண்டுதிரியும் மதியில்தேரரும்
உண்டிவயிறூர் உரைகள்கொள்ளா துமையோடுடனாகி
இண்டைச்சடையான் இமையோர்பெருமான் ஈங்கோய்மலையாரே. 10

விழவாரொலியும் முழவும்ஓவா வேணுபுரந்தன்னுள்
அழலார்வண்ணத் தடிகளருள்சே ரணிகொள்சம்பந்தன்
எழிலார்சுனையும் பொழிலும்புடைசூழ் ஈங்கோய்மலையீசன்
கழல்சேர்பாடல் பத்தும்வல்லார் கவலைகளைவாரே.[5] 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—மரகதாசலர்; தேவி—மரகதவல்லியார்.

---

[5] இவ்வடிக்கு "தாள்சேர்ந்தார்க் கல்லான், மனக்கவலை மாற்ற லரிது" என்ற திருக்குறளை ஒப்புநோக்குக. கவலைகழல்வாரே என்றும் பாடம்.

## சோழநாட்டில் காவிரிக்குத் தென்கரையில் உள்ள தலங்கள்

# 1. திருப்பராய்த்துறை*

**பண் - மேகராகக்குறிஞ்சி** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீறுசேர்வதொர் மேனியர்நேரிழை
கூறுசேர்வதொர் கோலமாய்ப்
பாறுசேர்தலைக் கையர்பராய்த்துறை
ஆறுசேர்சடை அண்ணலே. 1

கந்தமாமலர்க் கொன்றைகமழ்சடை
வந்தபூம்புனல் வைத்தவர்
பைந்தண்மாதவி சூழ்ந்தபராய்த்துறை
அந்தமில்ல அடிகளே. 2

வேதர்வேதமெல் லாம்முறையால்விரித்
தோதநின்ற வொருவனார்[1]
பாதிபெண்ணுரு ஆவர்பராய்த்துறை
ஆதியாய அடிகளே. 3

தோலுந்தம்அரை யாடைசுடர்விடு
நூலுந்தாமணி மார்பினர்
பாலும்நெய்பயின் றாடுபராய்த்துறை
ஆலநீழல் அடிகளே. 4

விரவிநீறுமெய் பூசுவர் மேனிமேல்
இரவில்நின்றெரி யாடுவர்
பரவினாரவர் வேதம்[2] பராய்த்துறை
அரவமார்த்த அடிகளே. 5

---

* இங்குப் பராய் தலமரம் ஆதலின் இப்பெயர் பெற்றது. பராய் - முருடுகள் உள்ள ஒருவகை மரம். துறை - காவிரி பரவிச் செல்லும் துறை; "பரக்குநீர்ப் பொன்னி மன்னு பராய்த்துறை" என்பது அப்பர் தேவாரம். [1] ஒருவனார் - முழுமுதற் கடவுள். [2] வேதம் பரவினார் - வேதங்களாற் பரவப்படுபவர்.

மறையும்ஓதுவர் மான்மறிக்கையினர்
கறைகொள்கண்ட முடையவர்
பறையுஞ்சங்கும் ஒலிசெய்ப்ராய்த்துறை
அறையநின்ற அடிகளே. 6

விடையும் ஏறுவர் வெண்பொடிப்பூசுவர்
சடையிற்கங்கை தரித்தவர்
படைகொள்வெண்மழு வாளர்பராய்த்துறை
அடைய [2] நின்ற அடிகளே. 7

தருக்கின்மிக்க தசக்கிரிவன் [3] றனை
நெருக்கினார்விர லொன்றினால்
பருக்கினாரவர் போலும்பராய்த்துறை
அரக்கன்றன்னை அடிகளே. 8

நாற்றமாமல ராளெடுமாலுமாய்த்
தோற்றமும்அறி யாதவர்
பாற்றினார்வினை யானபராய்த்துறை
ஆற்றல்மிக்க அடிகளே. 9

திருவிலிச்சில தேரமண்ஆதர்கள்
உருவிலாவுரை கொள்ளேலும்
பருவிலால்எயில் எய்துபராய்த்துறை
மருவினான்றனை வாழ்த்துமே. 10

செல்வமல்கிய செல்வர் [4] பராய்த்துறைச்
செல்வர்மேற்சிதை யாதன [5]
செல்வன் ஞானசம் பந்தனசெந்தமிழ்
செல்வமாமிவை செப்பவே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பராய்த்துறைநாதர், செல்வர்;
தேவி—பொன்மயிலம்மையார்.

---

[2] அடைய - (உயிர்கள் தம்மை வந்து) அடையும்படி. [3] தசக்கிவன் - இராவணன். [4] செல்வமல்கிய செல்வர் - முத்திச்செல்வர். [5] சிதையாதவன் என்றும் பாடம்

## 2. திருக்கற்குடி

**பண் - தக்கராகம்** [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

**வடந்**[1] **திகழ் மென்முலை யாளைப் பாகம தாக மதித்துத்**
**தடந்திரை சேர்புனல் மாதைத் தாழ்சடை வைத்த சதுரர்**
**இடந்திகழ் முப்புரி நூலர் துன்பமொ டின்பம தெல்லாம்**
**கடந்தவர் காதலில் வாழுங் கற்குடி மாமலை யாரே.** 1

**அங்கமொ**[2] **ராறுடை**[3] **வேள்வி**[4] **யான அருமறை நான்கும்**
**பங்கமில் பாடலோ டாடல் பாணி**[5] **பயின்ற படிறர்**
**சங்கம தார்குற மாதர் தங்கையில் மைந்தர்கள் தாவிக்**
**கங்குலின் மாமதி பற்றுங் கற்குடி மாமலை யாரே.** 2

**நீரக லந்தரு சென்னி நீடிய மத்தமும் வைத்துத்**
**தாரகை**[6] **யின்னொளி சூழ்ந்த தண்மதி சூடிய சைவர்**
**போரக லந்தரு வேடர் புனத்திடை யிட்ட விறகில்**
**காரகி லின்புகை விம்முங் கற்குடி மாமலை யாரே.** 3

**ஒருங்களி நீயிறை வாவென் றும்பர்கள் ஓல மிடக்கண்**
**டிருங்கள மார விடத்தை இன்னமு துண்ணிய ஈசர்**[7]
**மருங்களி யார்பிடி வாயில் வாழ்வெதி ரின்**[8] **முளை வாரிக்**
**கருங்களி யானை கொடுக்குங் கற்குடி மாமலை யாரே.** 4

**போர்மலி திண்சிலை கொண்டு பூதக ணம்புடை சூழப்**
**பார்மலி வேடுரு வாகிப் பண்டொரு வர்**[9] **க்கருள் செய்தார்**
**ஏர்மலி கேழல் கிளைத்த இன்னொளி மாமணி யெங்கும்**
**கார்மலி வேடர் குவிக்குங் கற்குடி மாமலை யாரே.** 5

**உலந்தவர்**[10] **என்ப தணிந்தே யூரிடு பிச்சைய ராகி**
**விலங்கல்வில் வெங்கன லாலே மூவெயில் வேவ முனிந்தார்**

---

* 'திருக்கற்குடி மாமலை' என்றும் 'உய்யக்கொண்டான் மலை' என்றும் வழங்கப்பெறும். [1] வடம் - முத்து வடம். [2] அங்கம் - வேதாங்கம். [3] மொராறுடை என்றும் பாடம். [4] ஐவேள்வி - சிவ வேள்வி. [5] பாணி - தாளம். [6] தாரகை - நட்சத்திரம். [7] இன்னமு துன்னிய வீசா என்றும் பாடம். [8] வெதிர் - மூங்கில். [9] ஒருவர் - அருச்சுனர். [10] உலந்தவர் — இறந்த பிரம விட்டுணுக்கள்.

நலந்தரு சிந்தைய ராகி நாமலி மாலையி னாலே
கலந்தவர்[1] காதலில் வாழுங் கற்குடி மாமலை யாரே. 6

மானிடம் ஆர்தரு கையர் மாமழு வாரும் வலத்தார்
ஊனிடை யார்தலை யோட்டில் உண்கல னாக வுகந்தார்
தேனிடை யார்தரு சந்தின் திண்சிறை யால்தினை வித்திக்
கானிடை வேடர் விளக்குங் கற்குடி மாமலை யாரே. 7

வாளமர் வீரம் நினைந்த இராவணன் மாமலை யின்கீழ்த்
தோளமர் வன்றலை குன்றத் தொல்விர லூன்று துணைவர்
தாளமர் வேய்தலை பற்றித் தாழ்கரி விட்ட விசைபோய்க்
காளம தார்முகில் கீறுங் கற்குடி மாமலை யாரே. 8

தண்டமர் தாமரை யானுந் தாவியிம் மண்ணை யளந்து
கொண்டவ னும்அறி வொண்ணாக் கொள்கையர் வெள்விடையூர்வர்
வண்டிசை யாயின பாட நீடிய வார்பொழில் நீழல்
கண்டமர் மாமயி லாடுங் கற்குடி மாமலை யாரே. 9

மூத்துவ ராடையி னாரும் மூசு கடுப்பொடி யாரும்[2]
நாத்துவர் பொய்ம்மொழி யார்கள் நயமில் அராமதி வைத்தார்
ஏத்துயர் பத்தர்கள் சித்தர் இறைஞ்ச[3] அவரிட ரெல்லாம்
காத்தவர்[4] காமரு சோலைக் கற்குடி மாமலை யாரே. 10

காமரு வார்பொழில் சூழுங் கற்குடி மாமலை யாரை
நாமரு வண்புகழ்க் காழி நலந்திகழ் ஞானசம் பந்தன்
பாமரு செந்தமிழ் மாலை பத்திவை பாடவல் லார்கள்
பூமலி வானவ ரோடும் பொன்னுல கிற்பொலி வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—உச்சி நாதர், கற்பக நாதர்;
தேவி—அஞ்சனாட்சியம்மை.

---

[1] நலந்தரு...கலந்தவர் - அன்புகலந்த பணிசெய்யும் உண்மை அடியார்கள். [2] கடுப்பொடியார் - கடுக் கவளம் தின்னுமவர்; சமணர். [3] இஃது ஈழநாட்டரசன் முதலியோர் பூசித்துப் பேறு பெற்றமையைக் குறிப்பிடும். [4] இடர்காத்தல் - இடரை நீக்குதலும் வாராமல் காத்தலும் ஆகும்.

# 3. திருமுக்கீச்சரம்*

பண் - செவ்வழி [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சாந்தம் வெண்ணீ றெனப்பூசி வெள்ளஞ்சடை வைத்தவர்
காந்தளாரும் விரலேழை யோடாடிய காரணம்
ஆய்ந்துகொண்டாங் கறியந் நிறைந்தாரவ ரார்கொலோ
வேந்தன்[1]மூக்கிச் சரத்தடிகள் செய்கின்றதோர் மெய்ம்மையே. 1

வெண்டலையோர் கலனாப் பலிதேர்ந்து விரிசடைக்
கொண்டலாரும்[2] புனல்சேர்த்து மையாளொடுங் கூட்டமா
விண்டவர்[3] தம் மதிலெய்த பின்வேனில் வேள்வெந்தெழக்
கண்டவர்மூக் கீச்சரத்தெம் அடிகள் செய்கன்மமே. 2

மருவலார்தம் மதிலெய்த துவும்மான் மதலையை[4]
உருவிலாரவ் வெரியூட்டி யதும்உல குண்டதால்
செருவிலாரும் புலிசெங் கயலாணை யினான்[5] செய்த
பொருவின்மூக் கீச்சரத்தெம் அடிகள் செயும்பூசலே. 3

அன்னமன்னந் நடைச்சாய லாளோ டழகெய்தவே
மின்னையன்ன சடைக்கங்கை யாள்மேவிய காரணம்
தென்னன்கோழி[6] யெழில்வஞ்சியும் ஓங்கு செங்கோலினான்
மன்னன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோர்மாயமே. 4

விடமுனாரவ் வழல்வாய தோர்பாம்பரை வீக்கியே
நடமுனாரவ் வழலாடுவர் பேயொடு நள்ளிருள்
வடமன்னீடு புகழ்ப்பூழி யன்தென்ன வன்கோழிமன்
அடல்மன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரச்சமே. 5

வெந்தநீறு மெய்யிற் பூசுவராடுவர் வீங்கிருள்
வந்தனாரவ் வளை[7] கொள்வதும் இங்கொரு மாயமாம்
அந்தண்மா மானதன்[8] நேரியன் செம்பிய னாக்கிய
எந்தைமூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரேதமே. 6

அரையிலாருங் கலையில்ல வனாெடு பெண்ணுமாய்
உரையிலாரவ் வழலாடு வரொன்றலர் காண்மினோ

---

*உறையூர் என வழங்கப்பெறும். [1] வேந்தன் - செங்கணான். [2] கொண்டலரும் என்றும் பாடம். [3] விண்டவர் - நீதி விடுத்தவர். [4] மான் மதலை - மன்மதன். [5] லாஞ்சனையினான் என்றும் பாடம். [6] கோழி - உறையூர். [7] வளை — வளையல். [8] மானதன் - அரசன்.

விரவலார்தம் மதில்மூன் றுடன்வெவ்வழ லாக்கினன்
அரையன்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோரச்சமே. 7

ஈர்க்குநீர்செஞ் சடைக்கேற் றதுங்கூற்றை யுதைத்ததும்
கூர்க்குநன்மூ விலைவேல்வல னேந்திய கொள்கையும்
ஆர்க்கும்வாயான் அரக்கன் னுரத்தைந் நெரித்தவ்வடல்
மூர்க்கன் [9] மூக்கீச் சரத்தடிகள் செய்யாநின்ற மொய்ம்பதே. 8

நீருளாரும் மலர் [10] மேல் உறைவான் நெடுமாலுமாய்ச்
சீருளாருங் கழல்தேட மெய்த்தீத் திரளாயினன்
சீரினலங் கொளிர்தென்ன வன்செம்பி யன்வில்லவன்
சேருமூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோர்செம்மையே. 9

வெண்புலான்மார் பி [11] டுதுகிலினர் வெற்றரை யுழல்பவர்
உண்பினாலே யுரைப்பார் மொழி யூனம்தாக்கினன்
ஒண்புலால்வேல் மிகவல்லவ னோங்கெழிற் கிள்ளிசேர்
பண்பின்மூக்கீச் சரத்தடிகள் செய்கின்ற தோர்பச்சையே.[12] 10

மல்லையார்மும் முடிமன்னர் மூக்கீச்சரத் தடிகளைச்
செல்வராக நினையும்படி சேர்த்திய செந்தமிழ்
நல்லராய்வாழ் பவர்காழி யுள்ஞான சம்பந்தன
சொல்லவல்லா ரவர்வானுல காளவும் வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பஞ்சவர்ணேசுவரர் ; தேவி—காந்திமதியம்மை.

---

## 4. திருச்சிராப்பள்ளி*

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நன்றுடையானைத் தீயதிலானை [1] நரைவெள்ளே
றொன்றுடையானை உமையொருபாகம் உடையானைச்

---

[9] மூர்க்கன் - வலியன். [10] நீருள் ஆரும். மலர் - தாமரை. [11] புலால் மார்பு - பருத்த உடல். [12] பச்சை - வாடாத நிலைபெறும் தன்மை குறித்தது. * திருசிராமலை என்றும் வழங்கப்பெறும். இது மலைக்கோவில் ஆகும். [1] நன்றுடையான் - தீயதிலான் - இத் தலத்தில் உள்ள இரண்டு தீர்த்தங்களின் பெயர் ; இறைவனின் இயல்பு குறிப்பனவுமாம்.

சென்றடையாத திருவுடையானை[2] ச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறஎன்னுள்ளங் குளிரும்மே. 1

கைம்மகவேந்திக் கடுவனொ[3]டூடிக் கழைபாய்வான்
செம்முகமந்தி கருவரையேறுஞ் சிராப்பள்ளி
வெம்முகவேழத் தீருரிபோர்த்த விகிர்தாநீ
பைம்முகநாகம் மதியுடன்வைத்தல் பழியன்றே. 2

மந்தம்முழவம் மழலை[4] ததும்ப வரைநீழல்
செந்தண்புனமுஞ் சுனையுஞ்சூழ்ந்த சிராப்பள்ளிச்
சந்தம்மலர்கள் சடைமேலுடையார் விடையூரும்
எந்தம்அடிகள் அடியார்க்கல்லல் இல்லையே. 3

துறை[5] மல்குசாரற் சுனைமல்குநீலத் திடைவைகிச்
சிறைமல்குவண்டுந் தும்பியும்பாடுஞ் சிராப்பள்ளிக்
கறைமல்குகண்டன் கனலெரியாடுங் கடவுள்எம்
பிறைமல்குசென்னி யுடையவன்எங்கள் பெருமானே. 4

கொலைவரையாத[6] கொள்கையர்தங்கள் மதில்மூன்றும்
சிலைவரையாகச் செற்றனரேனுஞ் சிராப்பள்ளித்
தலைவரைநாளுந் தலைவரல்லாமை யுரைப்பீர்காள்
நிலவரைநீல முண்டதும்வெள்ளை நிறமாமே. 5

வெய்யதண்சாரல் விரிநிறவேங்கைத் தண்போது
செய்யபொன்சேருஞ் சிராப்பள்ளிமேய செல்வனார்
தையலோர்பாகம் மகிழ்வர்நஞ்சுண்பர் தலையோட்டில்
ஐயமுங்கொள்வர் ஆரிவர்செய்கை அறிவாரே. 6

வேயுயர்சாரல் கருவிரலூகம்[7] விளையாடும்
சேயுயர்கோயிற் சிராப்பள்ளிமேய செல்வனார்
பேயுயர்கொள்ளி[8] கைவிளக்காகப் பெருமானார்
தீயுகந்தாடல் திருக்குறிப்பாயிற் றாகாதே. 7

---

[2] சென்றடையாத திருவுடையான் - எங்கும் நிறைதலாகிய இயற்கைத் திருவுடையவர். [3] கடுவன் - ஆண் குரங்கு. [4] மழலை - மெல்லிய கனிந்த இனிய ஓசை, [5] துறை - ஏறுதுறை; இறங்கு துறை; நீர் ஓடும் வழிகளுமாம். [6] வரையாத - நீக்காத. [7] ஊகம் - கருங்குரங்கு. [8] பேய் உயர் கொள்ளி - பேய்கள் சுடலையிற் பிடிக்கும் குறைக் கொள்ளி.

மலைமல்குதோளன் வலிகெடவூன்றி மலரோன்றன்
தலைகலனாகப் பலிதிரிந்துண்பர் பழியோரார்
சொலவலவேதஞ் சொலவலகீதஞ் சொல்லுங்கால்
சிலவலபோலுஞ் சிராப்பள்ளிச்சேடர்[9] செய்கையே. 8

அரப்பள்ளி[10]யானும் மலருறைவானும் அறியாமைக்
கரப்புள்ளிநாடிக் கண்டிலரேனுங் கல்சூழ்ந்த
சிரப்பள்ளி[11]மேய வார்சடைச்செல்வர் மனைதோறும்
இரப்புள்ளீரும்மை யேதிலர்கண்டால் இகழாரே. 9

நாணாதுடைநீத் தோர்களுங்கஞ்சி நாட்காலை
ஊணாப்பகலுண் டோதுவோர்கள்[12] உரைக்குஞ்சொல்
பேணாதுறுசீர் பெறுதுமென்பீரெம் பெருமானார்
சேணார்கோயில் சிராப்பள்ளிசென்று சேர்மினே. 10

தேனயம்[13] பாடுஞ் சிராப்பள்ளியானைத் திரைசூழ்ந்த
கானல்சங்கேறுங் கழுமலவூரிற் கவுணியன்
ஞானசம்பந்தன் நலம்மிகுபாடல் இவைவல்லார்
வானசம்பந்தத் தவரொ[14]டுமன்னி வாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—தாயுமானவர்; தேவி—மட்டுவார்குழலம்மை.

---

## 5. திருநெடுங்களம்*

**பண் - பழந்தக்கராகம்**** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப்பே சினல்லால்
குறையுடையார் குற்றம்ஓராய் கொள்கையினால் உயர்ந்த
நிறையுடையார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 1

---

9 சேடர் - அறிவுடையோர். 10 அரப்பள்ளி - பாம்பணை. 11 சிரப்பள்ளி - சிராப்பள்ளி. 12 இது புத்தர் வழக்கு. 13 தேன் - வண்டு; நயம் - நல்லிசை. 14 வானசம்பந்தத்தவர் - சிவகணத்தவர்.
* 'திருநட்டாங்குளம்' என வழங்கப்பெறும். ** இப்பதிகம் இறைவன்பால் அன்பு செல்லாவகைத் தடுக்கும் துன்பம் தீரும்படி பாடியருளியதாகும்.

கனைத்தெழுந்த வெண்டிரைசூழ் கடலிடைநஞ் சுதன்னைத்
தினைத்தனையா மிடற்றில்வைத்த திருந்தியதே வநின்னை
மனத்தகத்தோர் பாடல்ஆடல் பேணியிராப் பகலும்
நினைத்தெழுவார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 2

நின்னடியே வழிபடுவான் நிமலாநினைக் கருத
என்னடியான் உயிரைவவ்வேல் என்றடற்கூற் றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடுநீர் சுமக்கும்
நின்னடியார்[1] இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 3

மலைபுரிந்த மன்னவன்றன் மகளையோர்பால் மகிழ்ந்தாய்
அலைபுரிந்த கங்கைதங்கும் அவிர்சடையா ரூரா
தலைபுரிந்த பலிமகிழ்வாய் தலைவநின்றாள் நிழற்கீழ்
நிலைபுரிந்தார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 4

பாங்கி[2] னல்லார்[3] படிமஞ்[4] செய்வார் பாரிடமும் பலிசேர்
தூங்கிநல்லார் பாடலோடு தொழுகழலே வணங்கித்
தாங்கிநில்லா[5] அன்பினோடுந் தலைவநின்றாள் நிழற்கீழ்
நீங்கிநில்லார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 5

விருத்தனாகிப் பாலனாகி[6] வேதமோர்நான் குணர்ந்து
கருத்தனாகிக் கங்கையாளைக் கமழ்சடைமேற் கரந்தாய்
அருத்தனாய ஆதிதேவன் அடியிணையே பரவும்
நிருத்தர்கீதர் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 6

கூறுகொண்டாய் மூன்று[7] மொன்றாக் கூட்டியோர்வெங் கணையால்
மாறுகொண்டார் புரமெரித்த மன்னவனே கொடிமேல்
ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெருமா னணிந்த
நீறுகொண்டார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 7

குன்றின்உச்சி மேல்விளங்குங் கொடிமதில்சூழ் இலங்கை
அன்றிநின்ற அரக்கர்கோனை யருவரைக்கீழ் அடர்த்தாய்

---

[1] இவ்வடிகள் மார்க்கண்டேயர் வரலாற்றைக் குறிக்கும்.
[2] பாங்கு-அடிமைப் பண்பு; திறம். [3] பாங்கி நல்லார் என்றும் பாடம்.
[4] படிமம்-தெய்வவழிபாட்டு முறை. [5] தாங்கிநல்லா என்றும் பாடம்.
[6] விருத்தனாகி பாலனாகி - எல்லார்க்கும் முன்னாகியும் பின்னாகியும் உள்ள நிலை; விருத்தகுமார பாலரான திருவிளையாடற் குறிப்புமாம்.
[7] மூன்று - திரிபுரம்.

என்றுநல்ல வாய்மொழியா லேத்தியிராப் பகலும்
நின்றுநைவார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 8
வேழ[8]வெண்கொம் பொசித்தமாலும் விளங்கியநான் முகனும்
சூழவெங்கும் நேடஆங்கோர் சோதியுளா கினின்றாய்
கேழல்வெண் கொம் பணிந்தபெம்மான் கேடிலாப்பொன்னடியின்
கீழல்வாழ்வார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 9
வெஞ்சொல்தஞ்சொல் லாக்கிநின்ற வேடமிலாச் சமணும்
தஞ்சமி[9]ல்லாச் சாக்கியருந் தத்துவமொ[10]ன் றறியார்
துஞ்சலில்லா வாய்மொழியால் தோத்திரநின் னடியே
நெஞ்சில்வைப்பார் இடர்களையாய் நெடுங்களம்மே யவனே. 10
நீடவல்ல வார்சடையான் மேயநெடுங் களத்தைச்
சேடர்வாழும் மாமறுகிற் சிரபுரக்கோன் நலத்தால்
நாடவல்ல பனுவன்மாலை ஞானசம்பந்தன் சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார் பாவம்ப றையுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—நித்தியசுந்தரர் ; தேவி—ஒப்பிலாநாயகி.

---

## 6. மேலைத் திருக்காட்டுப்பள்ளி

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வாருமன் னும்முலை மங்கையோர் பங்கினன்
ஊருமன் னும்பலி யுண்பதும் வெண்டலை
காருமன் னும்பொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நீருமன் னுஞ்சடை நிமலர்தந் நீர்மையே. 1
நிருத்தனார் நீள்சடை மதியொடு பாம்பணி
கருத்தனார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
அருத்தனார் அழகமர் மங்கையோர் பாகமாப்
பொருத்தனார் கழலிணை போற்றுதல் பொருளதே. 2
பண்ணினார் அருமறை பாடினார் நெற்றியோர்
கண்ணினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி

---

[8] வேழம் – குவலயாபீடம் என்னும் யானை. [9] தஞ்சம் - நற்சார்பு. [10] தத்துவம் - பொருளுண்மை.

விண்ணினார் விரிபுனல் மேவினார் சடைமுடி
அண்ணலார் எம்மையா ளுடையஎம் அடிகளே. 3

பணங்கொள்நா கம்மரைக் கார்ப்பது பல்பலி
உணங்கலோ[1] டுண்கலன் உறைவது காட்டிடைக்
கணங்கள்கூ டித்தொழு தேத்துகாட் டுப்பள்ளி
நிணங்கொள்சூ லப்படை நிமலர்தந் நீர்மையே. 4

வரையுலாஞ் சந்தொடு வந்திழி காவிரிக்
கரையுலாம் இடுமணல் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
திரையுலாங் கங்கையுந் திங்களுஞ் சூடியங்
கரையுலாங் கோவணத் தடிகள்வே டங்களே. 5

வேதனார் வெண்மழு ஏந்தினார் அங்கமுன்
ஓதினார் உமையொரு கூறனார் ஒண்குழைக்
காதினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நாதனார் திருவடி நாளுநின் றேத்துமே. 6

மையினார் மிடறனார் மான்மழு வேந்திய
கையினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
தையலோர் பாகமாத் தண்மதி சூடிய
ஐயனார் அடிதொழ அல்லலொ[2]ன் றில்லையே. 7

சிலைதனால் முப்புரஞ் செற்றவன் சீரினார்
மலைதனால் வல்லரக் கன்வலி வாட்டினான்
கலைதனார் புறவணி மல்குகாட் டுப்பள்ளி
தலைதனால் வணங்கிடத் தவமது[3] ஆகுமே. 8

செங்கண்மால் நிகழ்தரு மலருறை திசைமுகன்
தங்கையால் தொழுதெழத் தழலுரு வாயினான்
கங்கையார் சடையினன் கருதுகாட் டுப்பள்ளி
அங்கையால் தொழுமவர்க் கல்லலொன் றில்லையே. 9

போதியார் பிண்டியா ரெ[4]ன்றஅப் பொய்யர்கள்
வாதினால் உரையவை மெய்யல வைகலும்

---

[1] உணங்கல் - சோறு. [2] அல்லல - பிறவித் துன்பம். [3] இவ்வடி தலைபெற்ற பயனைக் கூறும். "தலையே நீ வணங்காய்" என்பது அப்பர் தேவாரம். [4] போதியார் - புத்தர். போதி - அரசமரம். பிண்டியார் - சமணர். பிண்டி - அசோகு.

காரினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
ஏரினால் தொழுதெழ இன்பம்வந் தெய்துமே. 10

பொருபுனல் புடையணி புறவநன் னகர்மன்னன்
அருமறை யவைவல்ல அணிகொள்சம் பந்தன்சொல்
கருமணி மிடற்றினன் கருதுகாட் டுப்பள்ளி
பரவிய தமிழ்சொல்லப் பறையும்மெய்ப் பாவமே.[5] 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—தீயாடியப்பர்;
தேவி—வார்கொண்ட முலையாள், சௌந்தரநாயகி.

---

## 7. திருக்கண்டியூர்வீரட்டம்*

**வினாவுரை - பண் - கொல்லி** [3-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

**வி**னவினேன் அறி யாமையிலுரை செய்ம்மினீரருள் வேண்டுவீர், கனைவிலார்புனற் காவிரிக்கரை மேயகண்டியூர் வீரட்டன், தனமுனே தனக் கின்மையோதம ராயினாரண்ட மாளத் தான், வனனில்வாழ்க்கைகொண் டாடிப்பாடியிவ் வையமாப் பலி தேர்ந்ததே. 1

**உ**ள்ளவாறெனக் குரைசெய்மின்னுயர் வாயமாதவம் பேணுவீர், கள்ளவிழ்பொழில் சூழுங்கண்டியூர் வீரட்டத்துறை காதலான், பிள்ளைவான்பிறை செஞ்சடைம்மிசை வைத்ததும் பெரு நீரொலி, வெள்ளந்தாங்கிய தென்கொலோமிகு மங்கை யாளுட னாகவே. 2

அடியராயினீர் சொல்லுமின் அறி கின்றிலேன் அரன் செய் கையைப், படியெலாந்தொழு தேத்துகண்டியூர் வீரட்டத்துறை பான்மையான், முடிவுமாய்முத லாயிவ்வைய முழுதுமாயழ காய தோர், பொடியதார்திரு மார்பினிற்புரி நூலும்பூண்டெழு பொற்பதே. 3

---

[5] மெய்ப்பாவம்—வலியபாவம். * இஃது அட்டவீரட்டங்களில் ஒன்று; பிரமனின் சிரசைக் கொய்த தலம். ** இப்பதிகம் திரு வருட்டன்மையை வினாவுரையாகப் பாடியருளியதாகும்.

பழையதொண்டர்கள் பகருமின்பல வாயவேதியன் பான்மையைக், கழையுலாம்புனல் மல்குகாவிரி மன்னுகண்டியூர் வீரட்டன், குழையொர்காதினிற் பெய்துகந்தொரு குன்றின் மங்கை வெருவுறப், புழைநெடுங்கைநன் மாவுரித்தது போர்த்துகந்த பொலிவதே. 4

விரவிலாதுமைக் கேட்கின்றேனடி விரும்பியாட்செய்வீர் விளம்புமின், கரையெலாந்திரை மண்டுகாவிரிக் கண்டியூருறை வீரட்டன், முரவமொந்தை முழாவொலிக்க முழங்குபேயொடுங் கூடிப்போய்ப், பரவுவானவர்க் காகவார்கடல் நஞ்சமுண்ட பரிசதே. 5

இயலுமாறெனக் கியம்புமின்இறை வன்னுமாய்நிறை செய்கையைக், கயல்நெடுங்கண்ணி னார்கள்தாம்பொலி கண்டியூருறை வீரட்டன், புயல்பொழிந்திழி வானுளோர்களுக் காகவன்றயன் பொய்ச்சிரம், அயனகவ்வ தரிந்துமற்றதில் ஊனுகந்த அருத்தியே. 6

திருந்துதொண்டர்கள் செப்புமின்மிகச் செல்வன்றன்னது திறமெலாம், கருந்தடங்கண்ணி னார்கள்தாந்தொழு கண்டியூருறை வீரட்டன், இருந்துநால்வரொ டால்நிழல்அறம் உரைத்ததுமிகு வெம்மையார், வருந்தவன்சிலை யால்அம்மாமதில் மூன்றுமாட்டிய வண்ணமே.[1] 7

நாவிரித்தரன் தொல்புகழ்பல பேணுவீரிறை நல்குமின், காவிரித்தடம் புனல்செய்கண்டியூர் வீரட்டத்துறை கண்ணுதல், கோவிரிப்பயன் ஆன் அஞ்சாடிய கொள்கையுங்கொடி வரைபெற, மாவரைத்தலத் தாலரக்கனை வலியைவாட்டிய மாண்பதே. 8

பெருமையேசர ணாக[2]வாழ்வுறு மாந்தர்காளிறை பேசுமின், கருமையார்பொழில் சூழுந்தண்வயற் கண்டியூருறை வீரட்டன், ஒருமையாலுயர் மாலுமற்றை மலரவன் உணர்ந் தேத்தவே, அருமையாலவ ருக்குயர்ந்தெரி யாகிநின்றஅத் தன்மையே. 9

---

[1] இவ்வடிகளில் இறைவன் நால்வர்க்கு அருளியது அறச்செயலாம்; திரிபுரத்தை எரித்தது மறச்செயலாம். "பார்க்கில் அருளே எல்லாம்" என்பது சிவஞான சித்தியார். [2] பெருமையே சரணாக — தன் பெருமையினையே பற்றுக்கோடாக.

நமரெழுபிறப் பறுக்குமாந்தர்காள் நவிலுமின்உமைக் கேட்கின்றேன், கமரழிவயல் சூழுந்தண்புனற் கண்டியூருறை வீரட்டன், தமரழிந்தெழு சாக்கியச்சமண் ஆதரோது மது கொளா, தமரர்ஆனவ ரேத்தஅந்தகன் றன்னைச்சூலத்தி லாய்ந் ததே. 10

கருத்தனைப்பொழில் சூழுங்கண்டியூர் வீரட்டத்துறை கள் வனை, அருத்தனைத்திறம் அடியர்பால்மிகக் கேட்டுகந்த வினு வுரை, திருத்தமாந்திகழ் காழிஞானசம் பந்தன்செப்பிய செந்தமிழ், ஒருத்தராகிலும் பலர்களாகிலும் உரைசெய்வாருயர்ந் தார்களே.[3] 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வீரட்டேசுவரர், பிரமசிரக்கண்டீசுவரர்;
தேவி—மங்களநாயகி.

---

## 8. திருச்சோற்றுத்துறை*

**பண் - தக்கராகம்** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்[1]
துப்ப னென்று தருளே துணையாக
ஒப்ப ரொப்பர் பெருமான் ஒளிவெண்ணீற்
றப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 1

பாலும் நெய்யுந் தயிரும் பயின்றாடித்
தோலும் நூலுந் துதைந்த வரைமார்பர்
மாலுஞ் சோலை புடைசூழ் மடமஞ்ஞை
ஆலுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 2

செய்யர்[2] செய்ய சடையர் விடையூர்வர்
கைகொள் வேலர் கழலர் கரிகாடர்

---

* 'திருச்சற்றுறை' என வழங்குவர். இஃது அருளாளன் என்னும் அந்தணன் பசியால் வாடியபோது எடுக்கஎடுக்கக் குறையா திருக்கும்படியான சோற்றை இறைவன் அளித்தமையால் இப் பெயர் பெற்றது. [1] நெறிகள் சிற்றின்பம் என்றும் பாடம். [2] செய்யர் – செந்நிறமுடையவர்.

தைய லாளொர் பாக மாயஎம்
ஐயர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 3

பிணிகொ ளாக்கை யொழிய பிறப்புளீர்
துணிகொள் போரார் துளங்கு மழுவாளர்
மணிகொள் கண்டர் மேய வார்பொழில்
அணிகொள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 4

பிறையும் அரவும் புனலுஞ் சடைவைத்து
மறையும் ஓதி மயானம் இடமாக
உறைபுஞ் செல்வம் உடையார் காவிரி
அறையுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 5

துடிக ளோடு முழவம் விம்மவே
பொடிகள் பூசிப் புறங்கா ட[3]ரங்காகப்
படிகொள் பாணி பாடல் பயின்றாடும்
அடிகள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 6

சாடிக் காலன் மாளத் தலைமாலை
சூடி மிக்குச் சுவண்டாய் வருவார்தாம்
பாடி யாடிப் பரவு வாருள்ளத்
தாடி சோற்றுத் துறைசென் றடைவோமே. 7

பெண்ணோர் பாகம் உடையார் பிறைச்சென்னிக்
கண்ணோர் பாகங் கலந்த நுதலினார்
எண்ணா தரக்கன் எடுக்க வூன்றிய
அண்ணல் சோற்றுத் துறைசென் றடைவோமே. 8

தொழுவா ரிருவர் துயரம் நீங்கவே
அழலா யோங்கி அருள்கள் செய்தவன்
விழவார் மறுகில் விதியால் மிக்களம்
எழிலார்[4] சோற்றுத் துறைசென் றடைவோமே. 9

கோது[5] சாற்றித் திரிவார் அமண்குண்டர்
ஓதும் ஓத்தை[6] யுணரா தெழுநெஞ்சே
நீதி நின்று நினைவார் வேடமாம்
ஆதி சோற்றுத் துறைசென் றடைவோமே. 10

---

[3] புறங்காடு — சுடுகாடு. [4] விதியான்மிக்க - எழிலார் என்றும் பாடம். [5] கோது — குற்றம். [6] ஓத்தை — வார்த்தைகளை.

அந்தண் சோற்றுத் துறைஎம் ஆதியைச்
சிந்தை செய்ம்மின் அடியா ராயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புனைதல் வழிபாடே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—தொலையாச்செல்வர், ஓதவனேசுவரர்;
தேவி—ஒப்பிலாவம்மை, அன்னபூரணி.

---

## 9. திருவேதிகுடி*

திருவிராகம் பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீறுவரி ஆடரவொ டாமைமன என்புநிரை பூண்பரிடபம், ஏறுவரி யாவரும் இறைஞ்சுகழல் ஆதியர் இருந்தவிடமாம், தாறு விரி பூகமலி வாழைவிரை நாறவிணை வாளை [1] மடுவில், வேறுபிரி யாதுவிளை யாடவள மாரும்வயல் வேதிகுடியே. 1

சொற்பிரிவி லாதமறை பாடிநட மாடுவர்தொ லாணையுரிவை, மற்புரிபு யத்தினிது மேவுவரெந் நாளும்வளர் வானவர்தொழத், துற்பரிய [2] நஞ்சமுத மாகமுன் அயின்றவரி யன்றதொகுசீர், வெற்பரையன் மங்கை [3] யொரு பங்கர்நக ரென்பர்திரு வேதிகுடியே. 2

போழுமதி பூணரவு கொன்றைமலர் துன்றுசடை வென்றி புகமேல், வாழுநதி தாழுமரு ளாளரிரு ளார்மிடறர் மாதரிமை யோர், சூழுமிர [4] வாளர்திரு மார்பில்விரி நூலர்வரி தோலருடைமேல், வேழவுரி போர்வையினர் மேவுபதி யென்பர்திரு வேதிகுடியே. 3

காடர்கரி காலர்கனல் கையரனல் மெய்யருடல் செய்யர் செவியில், தோடர்தெரி கீளர்சரி கோவணவர் ஆவணவர் [5]

---

* வேதங்களைத் தோற்றுவித்த இடமாதலால் இப்பெயர் பெற்றது. [1] இளவாளை என்றும் பாடம். [2] துற்பரிய – பெருங் கொடுமையினையுடைய. [3] மங்கை–மங்கையர்க்கரசி; தல அம்மையார் பெயர். [4] இரவு–சங்காரம், பிச்சையுமாம். [5] ஆவணவர்–உயிர்களை அடிமையாக உடையவர். ஆவணம் – ஓலை.

தொல்லைநகர்தான் பாடலுடை யார்களடி யார்கள்மல ரோடு புனல் கொண்டுபணிவார், வேடமொளி யானபொடி பூசியிசை மேவுதிரு வேதிகுடியே. 4

சொக்கர்[6] துணை மிக்கஎயில் உக்கறமு னிந்துதொழு மூவர் மகிழத், தக்கஅருள் பக்கமுற வைத்தஅர னினிது தங்குநகர் தான், கொக்கர[7]வ முற்றபொழில் வெற்றிநிழல் பற்றி[8] வரி வண்டிசைகுலாம், மிக்கமரர் மெச்சியினி தச்சமிடர் போகநல்கு வேதிகுடியே. 5

செய்யதிரு மேனிமிசை வெண்பொடிய ணிந்துகரு மானு ரிவைபோர்த், தையமிடு மென்றுமட மங்கையொட கந்திரியும் அண்ணலிடமாம், வையம்விலை மாறிடினு[9] மேறுபுகழ் மிக்கிழிவி லாதவகையார், வெய்யமொழி தண்புலவ ருக்குரைசெ யாத அவர் வேதிகுடியே. 6

உன்னிஇரு போதும்அடி பேணும்அடி யார்தமிடர் ஒல்க[10] அருளித், துன்னியொரு நால்வருடன் ஆல்நிழலி ருந்ததுணை வன் றனிடமாம், கன்னியரொ டாடவர்கள் மாமணம்வி ரும்பியரு மங்கலமிக, மின்னியலும் நுண்ணிடைநன் மங்கையரி யற்றுபதி வேதிகுடியே. 7

உரக்[11] கரநெ ருப்பெழநெ ருக்கிவரை பற்றியவொ ருத்தன் முடிதோள், அரக்கனைய டர்த்தவன் இசைக்கினிது நல்கியருள் அங்கணனிடம், முருக்கிதழ்ம டக்கொடிம டந்தையரும் ஆட வரும் மொய்த்தகலவை, விரைக்குழல்மி கக்கமழ விண்ணிசையு லாவுதிரு வேதிகுடியே. 8

பூவின்மிசை அந்தணனொ டாழிபொலி அங்கையனும் நேட[12] எரியாய்த்,[13] தேவுமிவ ரல்லரினி யாவரென நின்றுதிகழ் கின்ற வரிடம், பாவலர்கள் ஓசையியல் கேள்வியத ருதகொடை யாளர் பயில்வாம், மேவரிய செல்வநெடு மாடம்வளர் வீதிநிகழ் வேதி குடியே. 9

---

[6] சொக்கர் — அழகர். [7] கொக்கு — மாமரம். [9] பற்ற என்றும் பாடம். [8] வையம்விலை மாறிடினும் — பஞ்சத்தினால் பொருள்கள் எளிதில் பெற முடியாமல் விலை ஏறினாலும். [10] ஒல்க — நீக்க. [11] உரம் — வலிமை. [12] நேட — (அடியையும் முடியையும்) தேட. [13] எரியாய் — அக்கினித் தூணாய்.

வஞ்சமணர் தேரர்மதி கேடர்தம்ம னத்தறிவி லாதவர் மொழி, தஞ்சமென என்றும்உண ராதஅடி யார்கருது சைவ னி[12] டமாம், அஞ்சுபுலன்[13] வென்றறுவ கைப்பொருள்[14] தெரிந்தெழு இசைக்கிளவியால், வெஞ்சினம் ஒழித்தவர்கள் மேவிநிகழ் கின்றதிரு வேதிகுடியே. 10

கந்தமலி தண்பொழில்நல் மாடமிடை காழிவளர் ஞான முணர்சம், பந்தன்மலி செந்தமிழின் மாலைகொடு வேதிகுடி யாதி கழலே, சிந்தைசெய வல்லவர்கள் நல்லவர்க ளென்னநிகழ் வெய்திஇமையோர், அந்தவுல கெய்திஅர சாளும்அது வேசரதம் ஆவணமதே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வேதபுரீசுவரர்; ஆராவமுதுநாதர்;
தேவி—மங்கையர்க்கரசி.

---

## 10. திருத்தென்குடித்திட்டை*

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முன்னைநான் மறையவை முறைமுறை குறையொடும்
தன்னதாள் தொழுதெழ நின்றவன் தன்னிடம்[1]
மன்னுமா காவிரி வந்தடி வருடநல்
செந்நெலார் வளவயல் தென்குடித் திட்டையே. 1

மகர[2] மா டுங்கொடி மன்மத வேள்தனை
நிகரலா காநெருப் பெழவிழித் தானிடம்
பகரபா ணித்திலம் பன்மக ரத்தொடும்
சிகரமா ளிகைதொகுந் தென்குடித் திட்டையே. 2

கருவினு லன்றியே கருவெலா மாயவன்
உருவினு லன்றியே உருவுசெய் தானிடம்

---

[12] சைவன் – சிவத்துவத்துக் கிருப்பிடமானவன். [13] அஞ்சுபுலன் – ஐம்பொறிகள். அஞ்சு—ஐந்து என்பதன் போலி. [14] அறுவகைப் பொருள் – ஆறு அங்கம். * 'திட்டை' என வழங்கப் பெறும். [1] நின்றவன்னிடம் என்றும் பாடம். [2] மகரம்-மீன்.

பருவநாள் விழவொடும் பாடலோ டாடலும்
திருவினல் மிகுபுகழ்த் தென்குடித் திட்டையே. 3

உண்ணிலா வாவியா யோங்குதன் தன்மையை
விண்ணிலார் அறிகிலா வேதவே தாந்தனூர்
எண்ணிலார் எழில்மணிக் கனகமா ளிகையிளந்
தெண்ணிலா விரிதருந் தென்குடித் திட்டையே. 4

வருந்திவா னோர்கள்வந் தடையமா நஞ்சுதான்
அருந்திஆர் அமுதவர்க் கருள்செய்தான் அமருமூர்
செருந்திபூ மாதவிப் பந்தர்வண் செண்பகம்
திருந்துநீள் வளர்பொழில் தென்குடித் திட்டையே. 5

ஊறினார் ஓசையுள் ஒன்றினார் ஒன்றிமால்
கூறினார் அமர்தரும் குமரவேள் தாதையூர்
ஆறினார் பொய்யகத் தையுணர் வெய்திமெய்
தேறினார் வழிபடுந் தென்குடித் திட்டையே. 6

கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பநீள்
வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடம்[3]
தானலைத் தெள்ளமூர் தாமரைத் தண்டுறை
தேனலைக் கும்வயல் தென்குடித் திட்டையே. 7

மாலொடும் பொருதிறல் வாளரக் கன்நெரிந்
தோலிடும் படிவிர லொன்றுவைத் தானிடம்
காலொடுங் கனகமூக் குடன்வரக்[4] கயல்வரால்
சேலொடும் பாய்வயல் தென்குடித் திட்டையே. 8

நாரணன் தன்னொடு நான்முகன் தானுமாய்க்
காரணன் அடிமுடி காணவொண் ணானிடம்
ஆரணங்[5] கொண்டுபூ சுரர்கள்வந் தடிதொழச்
சீரணங் கும்புகழ்த் தென்குடித் திட்டையே. 9

குண்டிகைக் கையுடைக் குண்டரும் புத்தரும்
பண்டுரைத் தேயிடும் பற்றுவிட் டீர்தொழும்
வண்டிரைக் கும்பொழில் தண்டலைக் கொண்டலார்
தெண்டிரைத் தண்புனல் தென்குடித் திட்டையே. 10

---

[3] இவ்வடிகள் கண்ணப்ப நாயனார் வரலாற்றைக் குறிக்கும்.
[4] கனகமூக்குடன்வாக் என்றும் பாடம். [5] ஆரணம் - வேதம்.

தேனலார் சோலைசூழ் தென்குடித் திட்டையைக்
கானலார் கடிபொழில் சூழ்தருங் காழியுள்
ஞானமார்[6] ஞானசம் பந்தன செந்தமிழ்
பானலார் மொழிவலார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பசுபதீசுவரர்; தேவி—உலகநாயகி.

---

## 11. திருப்புள்ளமங்கை *

பண் - நட்டபாடை [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாலுந்துறு திரளா[1]யின பரமன்பிர மன்தான்
போலுந்திற லவர்வாழ்தரு பொழில்சூழ்புள மங்கைக்
காலன்திற லறச்சாடிய கடவுள்ளிடங் கருதில்
ஆலந்துறை[2] தொழுவார்தமை யடையாவினை தானே. 1

மலையான்மகள் கணவன்மலி கடல்சூழ்[3] தரு தன்மைப்
புலை[4]யாயின களைவானிடம் பொழில்சூழ்புள மங்கைக்
கலையால்மலி மறையோரவர் கருதித்தொழு தேத்த
அலையார்புனல் வருகாவிரி யாலந்துறை யதுவே. 2

கறையார்மிட றுடையான்கமழ் கொன்றைச்சடை முடிமேல்
பொறையார்தரு கங்கைப்புன லுடையான்புள மங்கைச்
சிறையார்தரு களிவண்டறை பொழில்சூழ்திருவாலந்
துறையானவன் நறையார்கழல் தொழுமின்துதி செய்தே. 3

தணியார்மதி யரவின்னொடு வைத்தானிடம் மொய்த்தெம்
பணியாயவன் அடியார்தொழு தேத்தும்புள மங்கை

---

[6] ஞானவார் என்றும் பாடம். * 'வேளாளப் பசுபதி கோயில்' என வழங்கப்பெறும். புள்ளமங்கை - ஊரின் பெயர். புள் - கழுகு; இப்பெயருக்கேற்பக் கழுகுகள் கோபுரத்துள் குடிகொண்டுள்ளன என்பர். [1] பாலுந்துறு திரள் - பால் கடையக் கிடைக்கும் அமுது போன்றவர். [2] ஆலந்துறை - புள்ளமங்கையின் ஆலயத்தின் பெயர்; இறைவன் விடமுண்டு அருள் செய்த இடமாதலால் இப்பெயர் பெற்றது. [3] கடல்சூழ்-கடல் போலச் சூழ்கின்ற. [4] புலை - துன்பம்.

மணியார்தரு கனகம்அவை வயிரத்திர ளோடும்
அணியார்மணல் அணைகாவிரி யாலந்துறை யதுவே. 4

மெய்த்தன்னுறும் வினைதீர்வகை தொழுமின்செழு மலரின்
கொத்தின்னொடு சந்தாரகில் கொணர்காவிரிக் கரைமேல்
பொத்தின்னிடை யாந்தைபல பாடும்புள மங்கை
அத்தன்நமை யாள்வானிடம் ஆலந்துறை யதுவே. 5

மன்னனவன் உலகிற்கொரு மழையானவன் பிழையில்
பொன்னனவன்[5] முதலா[6]னவன் பொழில்சூழ்புள மங்கை
என்னனவன் இசையானவன் இளஞாயிறின் சோதி
அன்னனவன் உறையும்இடம் ஆலந்துறை யதுவே. 6

முடியார்தரு சடைமேல்முளை யிளவெண்மதி சூடிப்
பொடியாடிய திருமேனியர் பொழில்சூழ்புள மங்கைக்
கடியார்மலர் புனல்கொண்டுதன் கழலேதொழு தேத்தும்
அடியார்தமக் கினியானிடம் ஆலந்துறை யதுவே. 7

இலங்கைமனன் முடிதோளிற எழிலார்திரு விரலால்
விலங்கல்லிடை யடர்த்தானிடம் வேதம்பயின் றேத்திப்
புலன்கள்தமை வென்றார்[7] புக ழவர்வாழ்புள மங்கை
அலங்கல்[8] மலி சடையானிடம் ஆலந்துறை யதுவே. 8

செறியார்தரு வெள்ளைத்திரு நீற்றின்திரு முண்டப்[9]
பொறியார்தரு புரிநூல்வரை மார்பன்புள மங்கை
வெறியார்தரு கமலத்தயன் மாலுந்தனை நாடி
அறியாவகை நின்றானிடம் ஆலந்துறை யதுவே. 9

நீதியறி யாதாரமண் கையரொடு மண்டைப்
போதியவ ரோதும்உரை கொள்ளார்புள மங்கை
ஆதியவர் கோயில்திரு ஆலந்துறை தொழுமின்
சாதிம்மிகு வானோர்தொழு தன்மைபெற லாமே. 10

---

[5] மன் - மழை - பொன் - இவை உலகம் நில்வுதற்கு ஆதாரமான பொருள். [6] முதல் - முதல்வன்; நிமித்த காரணன். [7] புலன்கள்தமை வென்றார் - அந்தணர் "தம்மை ஐந்து புலனும்பின் செல்லுந் தகையார்" என்பது ஆன்றோர் வாக்கு. [8] அலங்கல் - முடிமாலை இங்குக் கொன்றைமாலையைக் குறித்து நின்றது. [9] முண்டம் - நெற்றி.

பொந்தின்னிடைத் தேனூறிய பொழில்[10]சூழ்புள மங்கை
அந்தண்புனல் வருகாவிரி யாலந்துறை யரனைக்
கந்தம்மலி கமழ்காழியுட் கலைஞானசம் பந்தன்
சந்தம்மலி பாடல்சொலி ஆடத்தவ மாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பசுபதிநாதர், ஆலந்துறைநாதர்;
தேவி—பால்வளைநாயகி, அல்லியங்கோதை.

---

## 12. திருச்சக்கரப்பள்ளி*

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

படையினர் வெண்மழு[1]ப் பாய்புலித் தோலரை
உடையினர் உமையொரு கூறனர் ஊர்வதோர்
விடையினர் வெண்பொடிப் பூசியார் விரிபுனல்
சடையினர் உறைவிடஞ் சக்கரப் பள்ளியே. 1

பாடினர் அருமறை பனிமதி சடைமிசைச்
சூடினர் படுதலை துன்னெருக் கதனொடும்
நாடினர் இடுபலி நண்ணியோர் காலனைச்
சாடினர் வளநகர் சக்கரப் பள்ளியே. 2

மின்னினர்[2] சடைமிசை விரிகதிர் மதியமும்
பொன்னினர் கொன்றையும் பொறிகிளர் அரவமும்
துன்னினர் உலகெலாந் தொழுதெழ நான்மறை
தன்னினர்[3] வளநகர் சக்கரப் பள்ளியே. 3

நலமலி கொள்கையார் நான்மறை பாடலார்
வலமலி மழுவினர் மகிழுமூர் வண்டறை

---

[10] இவ்வடியினல் இன்றும் இப்பதியில் பொந்துகளில் எங்கும் தேன்கூடுகள் காணப்படுகின்றன. * சக்கரவாகம் என்றும் நேமிப் புள் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது. அன்றியும் திரு மால் பூசித்துச் சக்கரம் பெற்ற காரணமும் கூறுவர். [1] வெண்மழுப் படையினர் என்க. [2] மின்னின் ஆர்—மின்போன்ற. [3] தன்னினர்—தன்னுள் நிறைந்தவர்.

மலர்மலி சலமொடு வந்திழி காவிரி
சலசல மணிகொழி சக்கரப் பள்ளியே. 4

வெந்தவெண் பொடியணி வேதியர் விரிபுனல்
அந்தமில் அணிமலை மங்கையோ டமருமூர்
கந்தமார் மலரொடு காரகில் பன்மணி
சந்திறே டணைபுனற் சக்கரப் பள்ளியே. 5

பாங்கினால் முப்புரம் பாழ்பட வெஞ்சிலை
வாங்கினார் வானவர் தானவர் வணங்கிட
ஓங்கினார் உமையொரு கூறுடும் ஒலிபுனல்[4]
தாங்கினார் உறைவிடஞ் சக்கரப் பள்ளியே. 6

பாரினார் தொழுதெழு பரவுபல் லாயிரம்
பேரினார் பெண்ணொரு கூறனார் பேரொலி
நீரினார் சடைமுடி நிரைமலர்க் கொன்றையந்
தாரினார் வளநகர் சக்கரப் பள்ளியே. 7

முதிரிலா[5] வெண்பிறை சூடினார் முன்னநாள்
எதிரிலா முப்புரம் எரிசெய்தார் வரைதனால்
அதிரிலா வல்லரக் கன்வலி வாட்டிய
சதிரி[6]னார்[7] வளநகர் சக்கரப் பள்ளியே. 8

துணிபடு கோவணஞ் சுண்ணவெண் பொடியினர்
பணி[8]படு மார்பினர் பனிமதிச் சடையினர்
மணிவண னவனொடு மலர்மிசை யானையும்
தணிவினர்[9] வளநகர் சக்கரப் பள்ளியே. 9

உடம்புபோர் சீவரர் ஊண்தொழிற் சமணர்கள்
விடம்படும் உரையவை மெய்யல விரிபுனல்
வடம்படு மலர்[10]கொடு வணங்குமின் வைகலும்
தடம்புனல் சூழ்தரு சக்கரப் பள்ளியே. 10

தண்வயல் புடையணி சக்கரப் பள்ளியெம்
கண்ணுதல் அவனடிக் கழுமல வளநகர்

---

[4] புனல் — கங்கை. [5] முதிரிலா — இளமையான. [6] சதிர் — வலிமை. [7] சதுரனார் என்றும் பாடம். [8] பணி—பாம்பு. [9] தணிவினர் — மிகத்தணிந்தவர்; தணியினர் என்றும் பாடம். [10] வடம்படுமலர்—இண்டை மலர் மாலை.

நண்ணிய செந்தமிழ் ஞானசம் பந்தன்சொல்
பண்ணிய இவைசொலப் பறையுமெய்ப் பாவமே.[10] 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சக்கரவாகேசுவரர், பசுபதிநாயகர்;
தேவி—தேவநாயகி, அல்லியங்கோதை.

## 13. திருக்கருகாவூர்*

பண் - கௌசிகம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முத்தி லங்குமுறு வல்லுமை யஞ்சவே
மத்த யானைமறு கவ்வுரி வாங்கியக்
கத்தை[1] போர்த்தகட வுள்கரு காவூரெம்
அத்தர் வண்ணம்அழ லும்அழல் வண்ணமே. 1

விமுத[2] வல்லசடை யான்வினை[3] யுள்குவார்க்
கமுத நீழலக லாததோர் செல்வமாம்
கமுத[4] முல்லை[5] கமழ்கின்ற கருகாவூர்
அமுதர் வண்ணம்அழ லும்அழல் வண்ணமே. 2

பழக வல்லசிறுத் தொண்டர்பா வின்னிசைக்
குழக ரென்றுகுழை யாவழை யாவரும்
கழல்கொள் பாடலுடை யார்கரு காவூரெம்
அழகர் வண்ணம்அழ லும்அழல் வண்ணமே. 3

பொடிமெய் பூசிமலர் கொய்துபு ணர்ந்துடன்
செடிய ர[6]ல்லாவுள்ளம் நல்கிய செல்வத்தர்

[10] மெய்ப்பாவம்-வலியபாவம்; உடம்பால் ஈட்டப்பட்ட பாவமுமாம். * 'திருக்களாவூர்' என வழங்கப்பெறும். உதவியற்ற ஒரு பெண்ணின் கருப்பத்தைக் காத்த காரணத்தால், கருகாவூர் எனப் பெயர்பெற்றது; இக்காரணத்தால் தேவியாருக்கும் 'கர்ப்பரட்சகி' என்ற திருநாமம் உண்டாயிற்று என்பர். ** இப்பதிகத்தில் 8-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1] கத்தை - தோல். [2] விமுதம் - நீக்கம். [3] சடையான்நினை என்றும் பாடம். [4] கமுதம் - மணம். [5] கமுகமுல்லை என்றும் பாடம். [6] செடியர் - தீயவர்.

கடிகொள் முல்லைகம ழுங்கரு க்காவூரெம்
அடிகள் வண்ணம்அழ லும்அழல் வண்ணமே. 4

மைய லின்றிமலர் கொய்துவ ணங்கிடச்
செய்ய வுள்ளம்மிக நல்கிய செல்வத்தர்
கைதன் முல்லைகம ழுங்கரு காவூரெம்
ஐயர் வண்ணம்அழ லும்அழல் வண்ணமே. 5

மாசில் தொண்டர்மலர் கொண்டு வணங்கிட
ஆசை யாரஅருள் நல்கிய செல்வத்தர்
காய்சி னத்தவிடை யார்கரு காவூரெம்
ஈசர் வண்ணம்எரி யும்எரி வண்ணமே. 6

வெந்த நீறுமெய் பூசிய வேதியன்
சிந்தை நின்றருள் நல்கிய செல்வத்தன்
கந்த மௌவல்கம ழுங்கரு காவூரெம்
எந்தை வண்ணம்எரி யும்எரி வண்ணமே. 7 - 8

பண்ணின் நேர்மொழி யாளையோர் பாகனூர்
மண்ணு கோலம்முடை யம்மல ரானொடும்
கண்ணன் நேடஅரி யார்[7] கரு காவூரெம்
அண்ணல் வண்ணம்அழ லும்அழல் வண்ணமே. 9

போர்த்த மெய்யினர் போதுழல் வார்கள்சொல்
தீர்த்த மென்றுதெளி வீர்தெளி யேன்மின்
கார்த்தண் முல்லைகம ழுங்கரு காவூரெம்
ஆத்தர்[8] வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 10

கலவ மஞ்ஞையுல வுங்கரு காவூர்
நிலவு பாடலுடை யான்றன நீள்கழல்
குலவு ஞானசம் பந்தன செந்தமிழ்
சொலவ லாரவர் தொல்வினை தீருமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—முல்லைவனேசுவரர்;
தேவி—கரும்பனையாளம்மை, கர்ப்பரட்சகி.

---

[7] அரியர் - அருமையானவர். [8] ஆர்த்தர் என்றும் பாடம்.

## 14 திருநல்லூர்*

**பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

கொட்டும் பறைசீராற் குழும அனலேந்தி
நட்டம் பயின்றாடும் நல்லூர்ப் பெருமானை
முட்டின் றிருபோதும் முனியா தெழுந்தன்பு
பட்ட மனத்தார்கள் அறியார் பாவமே. 1

ஏறில் எருதேறும் எழிலா யிழையோடும்
வேறும் உடனுமாம் விகிர்த ரவரென்ன
நாறும் மலர்ப்பொய்கை நல்லூர்ப் பெருமானைக்
கூறும் அடியார்கட் கடையா குற்றமே. 2

சூடும் இளந்திங்கள் சுடர்பொற் சடைதாழ
ஓடுண் கலனாக வூரு ரிடுபிச்சை
நாடும் நெறியானை நல்லூர்ப் பெருமானைப்
பாடும் அடியார்கட் கடையா பாவமே. 3

நீத்த நெறியானை நீங்காத் தவத்தானை
நாத்த நெறியானை நல்லூர்ப் பெருமானைக்
காத்த நெறியானைக் கைகூப் பித்தொழு
தேத்தும் அடியார்கட் கில்லை யிடர்தானே. 4

ஆகத் துமைகேள்வன் அரவச் சடைதாழ
நாகம் அசைத்தானை நல்லூர்ப் பெருமானைத்
தாகம் புகுந்தண்மித் தாள்கள் தொழுந்தொண்டர்
போகம் மனத்தராய்ப் புகழத் திரிவாரே. 5

கொல்லுங் களியானை யுரிபோர்த் துமையஞ்ச
நல்ல நெறியானை நல்லூர்ப் பெருமானைச்
செல்லும் நெறியானைச் சேர்ந்தா ரிடர்தீரச்
சொல்லும் அடியார்கள் அறியார் துக்கமே. 6

எங்கள் பெருமானை இமையோர் தொழுதேத்தும்
நங்கள் பெருமானை நல்லூர் பிரிவில்லாத்
தங்கை தலைக்கேற்றி யாளென் றடிநீழல்
தங்கும் மனத்தார்கள் தடுமாற் றறுப்பாரே. 7

---

* 'ஆண்டான் கோயில்' என வழங்கப்பெறும்.

காமன் எழில்வாட்டிக் கடல்சூழ் இலங்கைக்கோன்
நாமம் இறுத்தானை [1] நல்லூர்ப் பெருமானை
ஏம மனத்தாரா [2] யிகழா தெழுந்தொண்டர்
தீப மனத்தார்கள் [3] அறியார் தீயவே. 8

வண்ண மலரானும் வையம் அளந்தானும்
நண்ண லரியானை நல்லூர்ப் பெருமானைத்
தண்ண மலர் [4] தூவித் தாள்கள் தொழுதேத்த
எண்ணும் அடியார்கட் கில்லை யிடுக்கணே. 9

பிச்சக் குடைநீழற் சமணர் சாக்கியர்
நிச்சம் அலர் [5] தூற்ற நின்ற பெருமானை
நச்சு மிடற்றானை நல் லூர்ப் பெருமானை
எச்சும் அடியார்கட் கில்லை இடர்தானே. 10

தண்ணம் புனற்காழி ஞான சம்பந்தன்
நண்ணும் புனல்வேலி நல்லூர்ப் பெருமானை
வண்ணம் புனைமாலை வைக லேத்துவார்
விண்ணுந் நிலனுமாய் விளங்கும் புகழாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - காந்தாரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பெண்ணமருந் திருமேனி யுடையீர் பிறங்கு சடைதாழப்
பண்ணமரும் நான்மறையே [1] பாடியாடல் பயில்கின்றீர்
திண்ணமரும் பைம்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்
மண்ணமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 1

அலைமல்கு தண்புனலும் பிறையுஞ்சூடி அங்கையில்
கொலைமல்கு வெண்மழுவும் அனலுமேந்துங் கொள்கையீர்
சிலைமல்கு வெங்கணையாற் புரமூன்றெரித்தீர் திருநல்லூர்
மலைமல்கு கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 2

---

[1] ஆகமிறுத்தானை என்றும் பாடம். [2] ஏகமனத்தாரா என்றும், ஏவமனத்தாரா என்றும் பாடம். [3] தீபமனத்தார்கள் — அறிவுடைய யோகிகள். [4] தண்ணன் மலர் என்றும் பாடம். [5] நிச்சம் — நித்தம்: போலி. அலர்—பழிச்சொல். [1] மறையே, ஏ : தேற்றம்.

குறைநிரம்பா வெண்மதியஞ் சூடிக்குளிர்புன் சடைதாழப்
பறைநவின்ற பாடலோ டாடல்பேணிப் பயில்கின்றீர்
சிறைநவின்ற தண்புனலும் வயலுஞ்சூழ்ந்த திருநல்லூர்
மறைநவின்ற கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 3

கூனமரும் வெண்பிறையும் புனலுஞ்சூடுங் கொள்கையீர்
மானமரும் மென்விழியாள் பாகமாகும் மாண்பினீர்
தேனமரும் பைம்பொழிலின் வண்டுபாடுந் திருநல்லூர்
வானமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 4

நிணங்கவரும் மூவிலையும் அனலுமேந்தி நெறிகுழலாள்
அணங்கமரும் பாடலோ டாடல்மேவும் அழகினீர்
திணங்கவரும்[2] ஆடரவும் பிறையுஞ்சூடித் திருநல்லூர்
மணங்கமழுங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 5

கார்மருவு பூங்கொன்றை சூடிக்கமழ்புன் சடைதாழ
வார்மருவு மென்முலையாள் பாகமாகும் மாண்பினீர்
தேர்மருவு நெடுவீதிக் கொடிகளாடுந் திருநல்லூர்
ஏர்மருவு கோயிலே கோயிலாக இருந்தீரே. 6

ஊன்தோயும் வெண்மழுவும் அனலுமேந்தி உமைகாண
மீன்[3]தோயுந் திசைநிறைய வோங்கியாடும் வேடத்தீர்
தேன்தோயும் பைம்பொழிலின் வண்டுபாடுந் திருநல்லூர்
வான்தோயுங் கோயிலே கோயிலாக மகிழ்ந்திரே. 7

காதமரும் வெண்குழையீர் கறுத்தஅரக்கன் மலையெடுப்ப
மாதமரும் மென்மொழியாள் மறுகும்வண்ணங்[4] கண்டுகந்தீர்
தீதமரா அந்தணர்கள் பரவியேத்துந் திருநல்லூர்
மாதமருங் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 8

போதின்மேல் அயன்திருமால் போற்றியும்மைக் காணாது
நாதனே இவனென்று நயந்தேத்த மகிழ்ந்தளித்தீர்
தீதிலா அந்தணர்கள் தீமூன்றோ[5]ம்புந் திருநல்லூர்
மாதராள் அவளோடு மன்னுகோயில் மகிழ்ந்தீரே. 9

---

[2] திண் அம் கவரும் – அழகிய வலிமையைக் கவருகின்ற
[3] மீன் – நட்சத்திரம். [4] மறுகும் வண்ணம் – மனங்குழம்பும்படி
[5] தீ மூன்று – ஆவகனீயம், காருகபத்தியம், தக்கிணாக்கினியம் என்னும் மூன்று அக்கினி.

பொல்லாத சமணரொடு புறங்கூறுஞ் சாக்கியரொன்
றல்லாதார் அறவுரைவிட் டடியார்கள்[3] போற்றுவா
நல்லார்கள் அந்தணர்கள் நாளுமேத்துந் திருநல்லூர்
மல்[4]லார்ந்த கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 10

கொந்தணவும் பொழில்புடைசூழ் கொச்சைமேவு குலவேந்தன்
செந்தமிழின் சம்பந்தன் சிறைவண்புனல்சூழ் திருநல்லூர்
பந்தணவும் மெல்விரலாள் பங்கன்றன்னைப் பயில்பாடல்
சிந்தனையா லுரைசெய்வார் சிவலோகஞ்சேர்ந் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வண்டிரிய விண்டமலர் மல்குசடை தாழவிடை யேறிப்
பண்டெரிகை கொண்டபர மன்பதிய தென்பரத னயலே
நண்டிரிய நாரையிரை தேரவரை மேலருவி முத்தம்
தெண்திரைகள் மோதவிரி போதுகம ழுந்திருந லூரே.[1] 1

பல்வளரு நாகம்அரை யார்த்துவரை மங்கையொரு பாகம்
மல்வளர்பு யத்திலணை வித்துமகி ழும்பரம னிடமாம்
சொல்வளரி சைக்கிளவி பாடிமட வார்நடம தாடச்
செல்வமறை யோர்கள்முறை யேத்தவள ருந்திருந லூரே. 2

நீடுவரை மேருவில தாகநிகழ் நாகம்அழ லம்பால்
கூடலர்கள் மூவெயிலெ ரித்தகுழ கன்குலவு சடைமேல்
ஏடுலவு கொன்றைபுனல் நின்றுதிக ழும்[2] நிமல னிடமாம்
சேடு[3]லவு தாமரைகள் நீடுவய லார்திருந லூரே. 3

கருகுபுரி மிடறர்கரி காடரெரி கைஅதனி லேந்தி
அருகுவரு கரியினுரி யதளர்பட அரவரிடம் வினவில்
முருகுவிரி பொழிலின்மணம் நாறமயி லாலமர மேறித்
திருகுசின மந்திகனி சிந்தமது வார்திருந லூரே. 4

---

[3] புறங்கூறு சாக்கியரொன்றும் - அல்லாதாரறவுரை கேட்டடியார்கள் என்றும் பாடம். [4] மல் - வளப்பம். [1] இவ்வடிகள் இயற்கை வருணனையைக் குறிக்கும். [2] நின்று நிகழும் என்றும் பாடம். [3] சேடு - ஒளி.

பொடிகொள்திரு மார்பர்புரி நூலர்புனல் பொங்கரவு தங்கும்
முடிகொள்சடை தாழவிடை யேறுமுத லாளரவ ரிடமாம்
இடிகொள்முழ வோசையெழி லார்செய்தொழி லாளர்விழ மல்கச்
செடி[3]கொள்வினை யகலமனம் இனியவர்கள் சேர்திருந லூரே. 5

புற்றரவர் நெற்றியொர்கண் ஒற்றைவிடை யூர்வரடை யாளம்
சுற்றமிருள் பற்றியபல் பூதம்இசை பாடநசை யாலே
கற்றமறை யுற்றுணர்வர் பற்றலர்கள் முற்றும்எயில் மாளச்
செற்றவர் இருப்பிடம்நெ ருக்குபுன லார்திருந லூரே. 6

பொங்கரவர் அங்கமுடன் மேலணிவர் ஞாலமிடு பிச்சை
தங்கரவ மாகவுழி தந்துமெய்து லங்கியவெண் ணீற்றர்
கங்கையர வம்விரவு திங்கள்சடை யடிகளிடம் வினவில்
செங்கயல்வ திக்குதிகொ ளும்புனல தார்திருந லூரே. 7

ஏறுபுகழ் பெற்றதென் இலங்கையர் கோனையரு வரையில்
சீறியவ னுக்கருளும் எங்கள்சிவ லோகனிட மாகும்
கூறும்அடி யார்களிசை பாடிவலம் வந்தயரும் அருவிச்
சேறுகம ரானவழி யத்திகழ்த ருந்திருந லூரே. 8

மாலுமலர் மேலயனும் நேடியறி யாமையெரி யாய
கோலமுடை யானுணர்வு கோதில்புக ழானிடம தாகும்
நாலுமறை யங்கமுத லாறுமெரி மூன்றுதழ லோம்பும்
சீலமுடை யார்கள்நெடு மாடம்வள ருந்திருந லூரே. 9

கீறுமுடை[4] கோவணமி லாமையிலொ லோவியத வத்தர்
பாறுமுடன் மூடுதுவ ராடையர்கள் வேடமவை பாரேல்
ஏறுமட வாளொடினி தேறிமுனி ருந்தவிட மென்பர்
தேறுமன வார[5]முடை யார்குடிசெ யுந்திருந லூரே. 10

திரைகளிரு கரையும்வரு பொன்னிநில வுந்திருந லூர்மேல்
பரசுதரு பாணியைந லந்திகழ்செய் தோணிபுர நாதன்
உரைசெய்தமிழ் ஞானசம் பந்தனிசை மாலைமொழி வார்போய்
விரைசெய்மலர் தூவவிதி பேணுகதி பேறுபெறு வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பெரியவாண்டவர், கலியாணசுந்தரேசுவரர்;
தேவி—திரிபுரசுந்தரி, கலியாணசுந்தரி.

---

[3] செடி - துன்பம். [4] கீறுமுடை என்றும் பாடம். [5] வாரம் - அன்பு.

## 15. திருஆவூர்ப் பசுபதீச்சரம்*

**பண் - நட்டபாடை [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

புண்ணியர் பூதியர் பூதநாதர் புடைபடு வார்தம் மனத்தார் திங்கட், கண்ணிய ரென்றென்று காதலாளர் கைதொழு தேத்த இருந்தவூராம், விண்ணுயர் மாளிகை மாடவீதி விரைகமழ் சோலை சுலாவியெங்கும், பண்ணியல் பாடல றாதஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 1

முத்தியர் மூப்பிலராப்பினுள்ளார் முக்கணர் தக்கன்றன் வேள்வி சாடும், அத்திய ரென்றென் றடியரேத்தும் ஐயன் அணங்கொ டிருந்தவூராம், தொத்திய லும்பொழில் மாடு[1] வண்டு துதைந் தெங்குந் தூமதுப்பாயக்கோயிற், பத்திமைப் பாடல றாத[2] ஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 2

பொங்கி வரும்புனல் சென்னிவைத்தார் போம்வழி வந்திழி வேற்றமானார், இங்குயர் ஞானத்தர் வானோரேத்தும் இறையவ ரென் றுமிருந்த வூராம், தெங்குயர் சோலைசே ராலைசாலி திளைக்கும் விளைவயல் சேரும் பொய்கைப், பங்கய மங்கை விரும்புஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 3

தேவியோர் கூறின ரேறதேறுஞ் செலவினர் நல்குர வென்வனை நீக்கும், ஆவிய ரந்தண ரல்லல்தீர்க்கும் அப்பனு ரங்கே அமர்ந்தவூராம், பூவிய லும்பொழில் வாசம்வீசப் புரிகுழ லார்சுவ டொற்றி முற்றப், பாவியல் பாடல றாத ஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே.

இந்த[3]ணை யுஞ்சடை யார்விடையார் இப்பிறப் பென்வனை யறுக்க வல்லார், வந்தணைந் தின்னிசை பாடுவார்பால் மன்னினர் மன்னி யிருந்தவூராம், கொந்தணை யுங்குழ லார்விழவிற் கூட்ட மிடை யிடை சேரும்வீதிப், பந்தணை யும்விர லார்தம்ஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 5

குற்ற மறுத்தார் குணத்தினுள்ளார் கும்பிடு வார்தமக் கன்பு செய்வார், ஒற்றை விடையினர் நெற்றிக்கண்ணர் உறைபதி

---

* பசுக்கள் பூசித்ததனால் 'ஆவூர்' எனப் பெயர்பெற்றது. ஆவூர் - தலத்தின் பெயர். பசுபதீச்சரம் - கோயிலின் பெயர். [1] மாடு - பக்கம்; எழுனுருபு. [2] பத்திசை பாடலறாத என்றும் பாடம். [3] இந்து — சந்திரன்.

யாகுஞ் செறிகொள்மாடம், சுற்றிய வாசலின் மாதர்விழாச் சொற்கவி பாடநி தானம்நல்கப், பற்றிய கையினர் வாழும் ஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 6

நீறுடை யார்நெடு மால்வணங்கும் நிமிர்சடை யார்நினை வார்தமுள்ளம், கூறுடை யாருடை கோவணத்தார் குவலய மேத்தஇ ருந்தவூராம், தாறுடை வாழையிற் கூழைமந்தி தகுகனி யுண்டுமிண் டிட்டினத்தைப், பாறிடப் பாய்ந்துப யிலும்ஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 7

வெண்டலை மாலை விரவிப்பூண்ட மெய்யுடை யார்விறல் ஆரரக்கன், வண்டமர் பூமுடி செற்றுகந்த மைந்தரி டம்வள மோங்கியெங்கும், கண்டவர்[4] சிந்தைக் கருத்தின்மிக்கார் கதியரு ளென்றுகை யாரக்கூப்பிப், பண்ட[5]லர் கொண்டு பயிலும்ஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 8

மாலும் அயனும் வணங்கிநேட மற்றவ ருக்கெரி யாகிநீண்ட, சீலம் அறிவரி தாகிநின்ற செம்மையி னாரவர் சேருமூராம், கோல விழாவி னரங்கதேறிக் கொடியிடை மாதர்கள் மைந்தரோடும், பாலென வேமொழிந் தேத்தும்ஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடு நாவே. 9

பின்னிய தாழ்சடை யார்பிதற்றும் பேதைய ராஞ்சமண் சாக்கியர்கள், தன்னிய லும்உரை கொள்ளகில்லாச் சைவ ரிடந் தள வேறுசோலைத், துன்னிய மாதரும் மைந்தர்தாமுஞ் சுனை யிடை மூழ்கித் தொடர்ந்தசிந்தைப், பன்னிய பாடல் பயிலும் ஆவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 10

எண்டிசை யாரும்வ ணங்கியேத்தும் எம்பெரு மானை யெழில் கொளாவூர்ப், பண்டுரி யார்சிலர் தொண்டர் போற்றும் பசுபதி யீச்சரத்தாதிதன்மேல், கண்டல்கண் மிண்டிய கானற் காழிக் கவுணியன் ஞானசம் பந்தன்சொன்ன, கொண்டினி தாவிசை பாடியாடிக் கூடுமவர்உடை யார்கள்வானே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பசுபதீச்சுவரர்; தேவி—மங்களநாயகி.

---

[4] கண்டலர் என்றும் பாடம். [5] பண்டு-தொன்றுதொட்டு.

## 16. திருப்பட்டீச்சரம் *

### திருவிராகம். பண் - சாதாரி ** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாடல்மறை சூடல்மதி பல்வளையொர் பாகமதில் மூன்றோர் கணையால், கூடளரி யூட்டியெழில் காட்டிநிழல் கூட்டுபொழில்[1] சூழ்பழையை[2] யுள், மாடமழ பாடி[3] யுறை பட்டிசரம்[4] மேயகடி கட்டரவினர், வேடநிலை கொண்டவரை வீடுநெறி காட்டி வினை வீடுமவரே. 1

நீரின்மலி புன்சடையர் நீளரவு கச்சையது நச்சிலையதோர், கூரின்மலி சூலமது ஏந்தியுடை கோவணமும் மானின்உரிதோல், காரின்மலி கொன்றைவிரி தார்கடவுள் காதல்செய்து மேயநகர்தான், பாரின்மலி சீர்பழைசை பட்டிசர மேத்தவினை பற்றறுழியுமே. 2

காலைமட வார்கள்புன லாடுவது கௌவை[5] கடி யார்மறுகெலாம் மாலைமணம் நாறுபழை யாறைமழ பாடியழ காயமலிசீர்ப், பாலையன நீறுபுனை மார்பனுறை பட்டிசர மேபரவுவார், மேலையொரு மால்கடல்கள் போல்பெருகி விண்ணுலகம் ஆளுமவரே. 3

கண்ணின்மிசை நண்ணியிழி விப்பமுக மேத்துகமழ் செஞ்சடையினன், பண்ணின்மிசை நின்றுபல பாணிபடஆடவல பான்மதியினன், மண்ணின்மிசை நேரின்மழ பாடிமலி பட்டிசர மேமருவுவார், விண்ணின்மிசை வாழும்இமை யோரொடுட னாதலது மேவலெளிதே. 4

மருவமுழ வதிரமழ பாடிமலி மத்தவிழ வார்[6] க்கஅரையார், பருவமழை பண்கவர்செய் பட்டிசர மேயபடர் புன்சடையினன்,

---

* காமதேனுவின் புத்திரிகள் நால்வருள் 'பட்டி' என்பவள் பூசித்தமையால் இப்பெயர் பெற்றது. ** இப்பதிகம் முத்துப் பந்தர் பெற்றபோது திருவருளைத் துதித்துப் பாடியதாகும். [1] காட்டு நிழல் கூடுபொழில் என்றும, காட்டி நிழல் கூடுபொழில் என்றும் பாடம். [2] பழைசை - பழையாறை: மரூஉ. [3] மழபாடி - நகரின் பெயர்; திருமழபாடி வேறு. [4] பட்டிசரம் - கோயிலின் பெயர். [5] கௌவை - மிக்க ஓசை. [6] மத்த விழவு - சுத்தமத்தளத்துடன் நிகழும் ஒருவகை விழா.

வெருவமத யானையுரி போர்த்துமையை அஞ்சவரு வெள்விடையின்ன், உருவமெரி கழல்கள்தொழ வுள்ளமுடை யாரையடையாவினைகளே. 5

மறையினெலி கீதமொடு பாடுவன பூதமடி மருவிவிரவார், பறையினெலி பெருகநிகழ் நட்டம்அமர் பட்டிசர மேயபனிகூர், பிறையினெடு மருவியதொர் சடையினிடை யேற்றபுனல் தோற்றநிலையாம், இறைவனடி முறைமுறையின் ஏத்துமவர் தீத்தொழில்கள் இல்லர்மிகவே. 6

பிறவிபிணி மூப்பினெடு நீங்கியிமை யோருலகு பேணலுறுவார், துறவியெனும் உள்ளமுடை யார்கள்கொடி வீதியழ காயதொருசீர், இறைவனுறை பட்டிசர மேத்தியெழ வார்கள்வினை யேதுமிலவாய், நறவவிரை யாலுமொழி யாலும்வழி பாடுமற வாதவவரே. 7

நேசமிகு தோள்வலவ ணகி[7] யிறை வன்மலையை நீக்கியிடலும், நீசன்விறல் வாட்டிவரை யுற்றதுண ராதநிரம் பாமதியினன், ஈசனுறை பட்டிசர மேத்தியெழு வார்கள்வினை யேதுமிலவாய், நாசமற வேண்டுதலின் நண்ணலெளி தாம்அமரர் விண்ணுலகமே. 8

தூயமல ரானும்நெடி யானும்அறி யாரவன[8] தோற்றநிலையின், ஏயவகை யானதனை யாரதறி வாரணிகொள் மார்பினகலம், பாயநல நீறதணி வானுமைத ணேடுமுறை பட்டிசரமே, மேயவன தீரடியு மேத்தஎளி தாகுநல மேலுலகமே. 9

தடுக்கினையி டுக்கிமட வார்களிடு பிண்டமது வுண்டுழல்தரும், கடுப்பொடியு டற்கவசர்[9] கத்துமொழி காதல்செய்தி டாதுகமழ்சேர், மடைக்கயல்வ யற்கொள்மழ பாடிநகர் நீடுபழை யாறையதனுள், படைக்கொருக ரத்தன்மிகு பட்டிசர மேத்தவினை பற்றறுதலே. 10

மந்த[10] மலி சோலைமழ பாடிநகர் நீடுபழை யாறையதனுள், பந்தமுயர் வீடுநல பட்டிசர மேயபடர் புன்சடையனை, அந்தண்

---

[7] வலவணகி - வல்லவணகி. [8] அவன - அவனுடைய. [9] கடுப்பொடி உடற் கவசர் - புத்தர்; கசவர் என்றும் பாடம். [10] மந்தம் - மணம்.

மறை யோரினிது வாழ்புகலி ஞானசம் பந்தன்அணியார், செந் தமிழ்கள் கொண்டினிது செப்பவல தொண்டர்வினை நிற்ப திலவே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பட்டீச்சரநாதர் ; தேவி—பல்வளை நாயகி.

---

## 17. திருவலஞ்சுழி*

**வினாவுரை - பண் - இந்தளம்** [2.ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விண்டெ[1] லாமல ரவ்விரை நாறுதண் டேன்விம்மி
வண்டெ லாம்நசை யாலிசை பாடும் வலஞ்சுழித்
தொண்டெ லாம்பர வுஞ்சுடர் போலொளி யீர்சொலீர்
பண்டெ லாம்பலி தேர்ந்தொலி பாடல் பயின்றதே. 1

பாரல்[2] வெண்குரு கும்பகு வாயன நாரையும்
வாரல் வெண்டிரை வாயிரை தேரும் வலஞ்சுழி
மூரல் வெண்முறு வல்நகு மொய்யொளி யீர்சொலீர்
ஊரல்[3] வெண்டலை கொண்டுல கொக்கவு ழன்றதே. 2

கிண்ண வண்ணமல ருங்கிளர் தாமரைத் தாதளாய்
வண்ண நுண்மணல் மேலனம் வைகும் வலஞ்சுழிச்
சுண்ண வெண்பொடிக் கொண்டுமெய் பூசவ லீர்சொலீர்
விண்ண வர்தொழ வெண்டலை யிற்பலி கொண்டதே. 3

கோடெ[4] லாம்நிறை யக்குவ ளைம்மல ருங்குழி
மாடெ லாம்மலி நீர்மண நாறும் வலஞ்சுழிச்
சேடெ லாமுடை யீர்சிறு மான்மறி யீர்சொலீர்
நாடெ லாம்அறி யத்தலை யின்னற வேற்றதே. 4

கொல்லை வென்றபுனத் திற்குரு மாமணி கொண்டுபோய்
வல்லை நுண்மணல் மேலனம் வைகும் வலஞ்சுழி

---

* பிலத்துட்புக்க காவிரி மீண்டும் மேலெழுந்து வலஞ்சுழித்து வந்த இடமாகிய காரணத்தால் இப்பெயர் பெற்றது. [1] விண்டு - விரிந்து. [2] பாரல் - பரவிச்சென்று இரை தேடும் இயல்பு. [3] ஊரல் - உருளுதலையுடைய. [4] கோடு - குளங்கள்; கரை எனினுமாம்.

முல்லை வெண்முறு வல்நகை யாளொளி யீர்சொலீர்
சில்லை வெண்டலை யிற்பலி கொண்டுழல் செல்வமே. 5

பூச[5] நீர்பொழி யும்புனற் பொன்னியிற் பன்மலர்
வாச நீர்குடை வாரிடர்[6] தீர்க்கும் வலஞ்சுழித்
தேச நீர்திரு நீர்சிறு மான்மறி யீர்சொலீர்
ஏச வெண்டலை[7] யிற்பலி கொள்வதி லாமையே. 6

கந்த மாமலர்ச் சந்தொடு காரகி லுந்தழீஇ
வந்த நீர்குடை வாரி[8]டர் தீர்க்கும் வலஞ்சுழி
அந்த நீர்முதல் நீர்நடு வாமடி கேள்சொலீர்
பந்த[9] நீர்கரு தாதுல கிற்பலி கொள்வதே. 7

தேனுற் றநறு மாமலர்ச் சோலையில் வண்டினம்
வானுற் றநசை யாலிசை பாடும் வலஞ்சுழிக்
கானுற் றகளிற் றின்னுரி போர்க்கவல் லீர்சொலீர்
ஊனுற் றதலை கொண்டுல கொக்கவு ழன்றதே. 8

தீர்த்த நீர்வந் திழிபுனற் பொன்னியிற் பன்மலர்
வார்த்த நீர்குடை வாரிடர் தீர்க்கும் வலஞ்சுழி
ஆர்த்து வந்த அரக்கனை யன்றடர்த் தீர்சொலீர்
சீர்த்த வெண்டலை யிற்பலி கொள்வதுஞ் சீர்மையே. 9

உரம னுஞ்சடை யீர்விடை யீரும தின்னருள்
வரம னும்பெற லாவதும் எந்தை வலஞ்சுழிப்
பிரம னுந்திரு மாலும் அளப்பரி யீர்சொலீர்
சிரமெ னுங்கல னிற்பலி வேண்டிய செல்வமே. 10

வீடும் ஞானமும் வேண்டுதி ரேல்விர தங்களால்
வாடி ஞானமென் னைவதும் எந்தை வலஞ்சுழி
நாடி ஞானசம் பந்தன் செந்தமிழ் கொண்டிசை
பாடும் ஞானம்வல் லாரடி சேர்வது ஞானமே. 11

திருச்சிற்றம்பலம்

---

[5] பூசம் - இங்குத் தீர்த்த நாள். [6] இவ்வடிகள் தீர்த்த நாளில் ஸ்நானஞ் செய்தலால் வரும் பயனைக் கூறுகின்றன. [7] ஏசல் வெண்டலை என்றும் பாடம். [8] நீர் குடைதல்-இது தீர்த்த நாளில் அன்றி ஏனைய நாளிலும் மூழ்குதல். [9] பந்தம் - கீழ்மை.

பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

என்ன புண்ணியஞ்[1] செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து, முன்னம் நீபுரி நல்வினைப்[2] பயனிடை முழுமணித் தரளங்கள், மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப், பன்னி யாதரித் தேத்தியும் பாடியும் வழிபடும் அதனாலே. 1

விண்டொ ழிந்தன நம்முடை வல்வினை விரிகடல் வருநஞ்சம், உண்டி றைஞ்சுவா னவர்தமைத் தாங்கிய இறைவனை உலகத் தில், வண்டு வாழ்குழல்[3] மங்கையொர் பங்கனை வலஞ்சுழி யிட மாகக், கொண்ட நாதன்மெய்த் தொழில்புரி தொண்டரோ டினி திருந் தமையாலே. 2

திருந்த லார்புரந் தீயெழச் செறுவன விறலின்கண் அடியா ரைப், பரிந்து காப்பன பத்தியில் வருவன மத்தமாம் பிணிநோய்க்கு, மருந்து மாவன மந்திர மாவன வலஞ்சுழி யிடமாக, இருந்த நாயகன் இமையவ ரேத்திய இணையடித் தலந்தானே. 3

கறைகொள் கண்டத்தர் காய்கதிர் நிறத்தினர் அறத்திற முனிவர்க்கன், றிறைவ ராலிடை நீழலி லிருந்துகந் தினிதருள் பெருமானார், மறைக ளோதுவர் வருபுனல் வலஞ்சுழி யிடம் மகிழ்ந் தருங்கானத், தறைக ழல்சிலம் பார்க்கநின் றாடிய அற் புதம் அறியோமே. 4

மண்ணர் நீரர்விண் காற்றின ராற்றலாம் எரியுரு வொரு பாகம், பெண்ண ராணெனத் தெரிவரு வடிவினர் பெருங்கடற் பவளம்போல், வண்ண ராகிலும் வலஞ்சுழி பிரிகிலார் பரிபவர் மனம்புக்க, எண்ண ரா[4]கிலும் எனைப்பல இயம்புவர் இணையடி தொழுவாரே. 5

ஒருவ ராலுவ மிப்பதை யரியதோர் மேனியர் மடமாதர், இருவ ராதரிப் பார்பல பூதமும் பேய்களும் அடையாளம், அருவ ராததோர் வெண்டலை கைப்பிடித் தகந்தொறும் பலிக்கென்று, வருவ ரேலவர் வலஞ்சுழி யடிகளே வரிவளை கவர்ந்தாரே. 6

[1] புண்ணியம் - சிவபுண்ணியம். [2] முன்னம் - முன்னைப் பிறவி; நல்வினை — நற்கருமங்கள். [3] வண்டு வார்குழல் என்றும் பாடம். [4] எண்ணர் - எண்ணப்படுபவர்.

குன்றி யூர்குட மூக்கிடம் வலம்புரங் குலவிய நெய்த்தானம், என்றிவ் வூர்களி லோமென்றும் இயம்புவர் இமையவர் பணி கேட்பார், அன்றி யூர்தமக் குள்ளன அறிகிலோம் வலஞ்சுழி யரனார்பால், சென்ற வூர்தனில் தலைப்பட லாமென்று சேயிழை தளர்வாமே. 7

குயிலின் நேர்மொழிக் கொடியிடை வெருவுறக் குலவரைப் பரப்பாய,[5] கயிலை யைப்பிடித் தெடுத்தவன் கதிர்முடி தோளிரு பதுமூன்றி, மயிலின் நேரன சாயலோ டமர்ந்தவன் வலஞ்சுழி யெம்மானைப், பயில[6] வல்லவர் பரகதி காண்பவர் அல்லவர் கணாரே. 8

அழல தோம்பிய அலர்மிசை அண்ணலும் அரவணைத் துயின்றானும், கழலுஞ் சென்னியுங் காண்பரி தாயவர் மாண் பமர் தடக்கையில், மழலை வீணையர் மகிழ்திரு வலஞ்சுழி வலங் கொடு பாதத்தால், சுழலு மாந்தர்கள் தொல்வினை யதனொடு துன்பங்கள் களைவாரே. 9

அறிவி லாதவன்[7] சமணர்கள் சாக்கியர் தவம்புரிந் தவஞ் செய்வார், நெறிய லாதன கூறுவர் மற்றவை தேறன்மின் மாறு நீர், மறியு லாந்திரைக் காவிரி வலஞ்சுழி மருவிய பெருமானைப், பிறிவி லாதவர் பெறுகதி பேசிடில் அளவறுப் பொண்ணாதே. 10

மாதொர் கூறனை வலஞ்சுழி மருவிய மருந்தினை வயற்காழி, நாதன் வேதியன் ஞானசம் பந்தன்வாய் நவிற்றிய தமிழ்மாலை, ஆதரித்திசை கற்றுவல் லார்சொலக் கேட்டுகந் தவர்தம்மை, வாதி யாவினை மறுமைக்கும் இம்மைக்கும் வருத்தம்வந் தடையாவே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - பழம்பஞ்சுரம் [3-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

பள்ளம்[1] தாயபடர்சடைமேற் பயிலுந் திரைக்கங்கை
வெள்ளம தார விரும்பிநின்ற விகிர்தன் விடையேறும்

---

[5] வரைப்பாற்பாய என்றும் என்றும் பாடம். [6] பயில-பயின்று பாவ.
[7] வன் - வன்மை; மனக்கொடுமை. [1] பள்ளம் - நீர்த்தங்குமிடம்.

வள்ளல் வலஞ்சுழி வாணனென்று மருவி நினைந்தேத்தி
உள்ளம் உருக உணருமின்கள் உறுநோ யடையாவே. 1

காரணி வெள்ளை மதியஞ்சூடிக் கமழ்புன் சடைதன்மேல்
தாரணி கொன்றையுந் தண்ணெருக்குந் தழைய நுழைவித்து
வாரணி கொங்கைந லாள்தனோடும் வலஞ்சுழி மேவியவர்
ஊரணி பெய்பலி கொண்டுகந்த உவகை அறியோமே. 2

பொன்னிய லுந்திரு மேனிதன்மேற் புரிநூல் பொலிவித்து
மின்னிய லுஞ்சடை தாழவேழ உரிபோர்த் தரவாட
மன்னியமாமறையோர்கள்போற்றும் வலஞ்சுழி வாணர்தம்மேல்
உன்னிய சிந்தையில் நீங்ககில்லார்க் குயர்வாம் பிணிபோமே. 3

விடையொரு பாலொரு பால்விரும்பு மெல்லியல் புல்கியதோர்
சடையொருபாலொருபாலிடங்கொள் தாழ்குழல் போற்றிசைப்ப
நடையொரு பாலொரு பால்சிலம்பு நாளும் வலஞ்சுழிசேர்
அடையொரு பால்டை யாதசெய்யுஞ் செய்கை அறியோமே. 4

கையம ரும்மழு நாகம்வீணை கலைமான் மறியேந்தி
மெய்யம ரும்பொடிப் பூசிவீசுங் குழையார் தருதோடும்
பையம ரும்அர வாடஆடும் படர்சடை யார்க்கிடமாம்
மையம ரும்பொழில் சூழும்வேலி வலஞ்சுழி மாநகரே. 5

தண்டொடு சூலந் தழையஏந்தித் தைய லொருபாகம்
கண்டிடு பெய்பலி பேணிநாணார் கரியின் உரிதோலர்
வண்டிடு மொய்பொழில் சூழ்ந்தமாட வலஞ்சுழி மன்னியவர்
தொண்டொடுகூடித் துதைந்துநின்ற தொடர்பை[2] த்தொடர்வோமே. 6

கல்[3] விய லும்மலை யங்கைநீங்க வளைத்து வளையாதார்
சொல்லிய லும்மதில் மூன்றுஞ்செற்ற சுடரான் இடர்நீங்க
மல்லிய லுந்திரள் தோளெம்மாதி வலஞ்சுழி மாநகரே
புல்கிய வேந்தனைப் புல்கியேத்தி யிருப்பவர் புண்ணியரே. 7

வெஞ்சின வாளரக்கன் வரையை விறலா லெடுத்தான்தோள்
அஞ்சுமொ ராறிரு நான்குமொன் றுமடர்த்தா ரழகாய
நஞ்சிருள் கண்டத்து நாதரென்றும் நணுகும் இடம்போலும்
மஞ்சுல வும்பொழில் வண்டுகெண்டும் வலஞ்சுழி மாநகரே. 8

---

[2] தொண்டரொடுகூடித் துதைந்து நின்ற தொடர்பு - "அடியார் நடுவுளிருவீரு மிருப்பது" என்பது திருவாசகம். [3] கல் - கற்களால்.

ஏடியல் நான்முகன் சீர்நெடுமா லெனநின் றவர்காணார்
கூடிய கூரெரி யாய்நிமிர்ந்த குழகர் உலகேத்த
வாடிய வெண்டலை கையிலேந்தி வலஞ்சுழி மேயஎம்மான்
பாடிய நான்மறை யாளர்செய்யுஞ் சரிதை பலபலவே. 9
குண்டரும் புத்தருங் கூறையின்றிக் குழுவார் உரைநீத்துத்
தொண்டருந் தன்தொழில் பேணநின்ற கழலான் அழலாடி
வண்டமரும்பொழில்மல்குபொன்னிவலஞ்சுழி வாணன்எம்மான்
பண்டொரு வேள்வி முனிந்துசெற்ற பரிசே பகர்வோமே. 10
வாழியெம் மானெனக் கெந்தைமேய வலஞ்சுழி மாநகர்மேல்
காழியுள் ஞானசம் பந்தன்சொன்ன கருத்தின் தமிழ்மாலை
ஆழியிவ் வையகத் தேத்தவல்லார் அவர்க்குந் தமருக்கும்
ஊழி யொருபெரும் இன்பமோக்கும் உருவும் உயர்வாமே. 11
திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கபர்த்தீசர் ; தேவி—பெரியநாயகி.

---

## 18. திருக்குடமூக்கு*

பண் - பஞ்சமம் [3-ம் திருமுறை]

தி ரு ச் சி ற் ற ம் ப ல ம்

அரவிரி கோடனீ[1]ட லணி காவிரி யாற்றயலே
மரவிரி போதுமௌவல் மண மல்லிகை கள்ளவிழும்
குரவிரி சோலைசூழ்ந்த குழகன்குட மூக்கிடமா
இரவிரி திங்கள்சூடி யிருந் தானவன் எம்மிறையே. 1
ஓத்தர வங்களோ[2]டும் ஒலி காவிரி யார்த்தயலே
பூத்தர வங்களோடும் புகை கொண்டடி போற்றிநல்ல
கூத்தர வங்களோவாக் குழ கன்குட மூக்கிடமா
ஏத்தர வங்கள்செய்ய இருந் தானவன் எம்மிறையே. 2
மயில்பெடை புல்கியால மணல் மேல்மட அன்னமல்கும்
பயில்பெடை வண்டுபண்செய் பழங்காவிரிப்பைம்பொழில்வாய்க்
குயில்பெடை யோடுபாட லுடை யான்குட மூக்கிடமா
இயலொடு வானமேத்த இருந் தானவன் எம்மிறையே. 3

---

* குடமூக்கு - கும்பகோணம். [1] அரவிரி கோடல் - பாம்பின் படம்போல மலரும் வெண்காந்தள். [2] ஓத்தரவங்கள்-வேத ஒலிகள்.

மிக்கரை தாழவேங்கை யுரி யார்த்துமை யாள்வெருவ
அக்கர வாமையேன மருப் போடவை பூண்டழகார்
கொக்கரை [3] யோடுபாட லுடை யான்குட மூக்கிடமா
எக்கரை யாரு [4] மேத்த இருந் தானவன் எம்மிறையே. 4

வடிவுடை வாள்தடங்கண் உமை யஞ்சவோர் வாரணத்தைப்
பொடியணி மேனிமூட வுரி கொண்டவன் புன்சடையான்
கொடிநெடு மாடமோங்குங் குழ கன்குட மூக்கிடமா
இடிபடு வானமேத்த இருந் தானவன் எம்மிறையே. 5

கழைவளர் கவ்வைமுத்தங் [5] கமழ் காவிரி யாற்றயலே
தழைவளர் மாவின்நல்ல பல வின்கனி கள்தயங்கும்
குழைவளர் சோலை [6] சூழ்ந்த குழ கன்குட மூக்கிடமா
இழைவளர் மங்கையோடும் இருந் தானவன் எம்மிறையே. 6

மலைமலி மங்கைபாகம் மகிழ்ந் தானெழில் வையமுய்யச்
சிலைமலி வெங்கணையாற் சிதைத் தான்புர மூன்றினையும்
குலைமலி தண்பலவின் பழம் வீழ்குட மூக்கிடமா
இலைமலி சூலமேந்தி இருந் தானவன் எம்மிறையே. 7

நெடுமுடி பத்துடைய நிகழ் வாளரக் கன்னுடலைப்
படுமிடர் கண்டயரப் பரு மால்வரைக் கீழடர்த்தான்
கொடுமடல் தங்குதெங்கு பழம் வீழ்குட மூக்கிடமா
இடுமணல் எக்கர்சூழ இருந் தானவன் எம்மிறையே. 8

ஆரெரி ஆழியானும் மல ரானும் அளப்பரிய
நீரிரி புன்சடைமேல் நிரம் பாமதி சூடிநல்ல
கூரெரி யாகிநீண்ட குழ கன்குட மூக்கிடமா
ஈரிரு கோவணத்தோ [7] டிருந் தானவன் எம்மிறையே. 9

மூடிய சீவரத்தார் முது மட்டையர் மோட்டமணர்
நாடிய தேவரெல்லாம் நயந் தேத்திய நன்னலத்தான்

---

[3] கொக்கரை - இயங்களுள் ஒன்று. [4] எக்கரையாரும் - எத்திசையாரும். [5] கழைவளர் முத்தம் - மூங்கிலிற்படும் முத்து. [6] மாவின்.........சோலை - கனிகள் பறிப்பாரின்றி மிக்கிருக்கும் சோலை. [7] ஈரிருகோவணம் - நான்கு வேதம்; 'மறையே நமது கோவணமாம்' என்பது திருவிளையாடற் புராணம். ஈருரி கோவணத்தோ என்றும் பாடம்.

கூடிய குன்றமெல்லா முடை யான்குட மூக்கிடமா
வேடலர் கொன்றைசூடி யிருந் தானவன் எம்மிறையே. 10

வெண்கொடி மாடமோங்கு விறல் வெங்குரு நன்னகரான்
நண்பொடு நின்றசீரான் தமிழ் ஞானசம் பந்தனல்ல
தண்குட மூக்கமர்ந்தான் அடி சேர்தமிழ் பத்தும்வல்லார்
விண்புடை மேலுலகம் வியப் பெய்துவர் வீடெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கும்பேசுவரர்; தேவி—மங்களநாயகி.

---

## 19. திருக்குடந்தைக்காரோணம்*

பண் - தக்கேசி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வாரார் கொங்கை மாதோர்பாக மாகவார்சடை
நீரார்கங்கை திங்கள்சூடி நெற்றியொற்றைக்கண்
கூரார்மழுவொன் றேந்தியந்தண் குழகன்குடமூக்கில்
காரார்கண்டத் தெண்டோள் எந்தை காரோணத்தாரே. 1

முடியார்மன்னர் மடமான்விழியார் மூவுலகும் ஏத்தும்
படியார்பவள வாயார்பலரும் பரவிப்பணிந்தேத்தக்
கொடியார் விடையார் மாடவீதிக் குடந்தைக்குழகாரும்
கடியார்சோலைக் கலவமயிலார் காரோணத்தாரே. 2

மலையார்மங்கை பங்கர்அங்கை அனலர்மடலாரும்
குலையார்தெங்கு குளிர்கொள்வாழை யழகார் குடமூக்கில்
முலையாரணிபொன் முளைவெண்நகையார் மூவாமதியினார்
கலையார்மொழியார் காதல்செய்யுங் காரணத்தாரே. 3

---

* கும்பகோணம் - 'காசிவிசுவநாதர் கோயில்' என வழங்கப் பெறும். குடந்தை: கும்பகோணம் மரூஉப்பெயர். காயாரோகணம் காரோணம் என நின்றது; சிவனது திருமேனியில் ஆரோகணம் (ஒன்றுபட்டுப்போதல்) ஆனபதி என்பதாம். இது மகாமக தீர்த்தத்துக்கு வட கீழ்பால் உள்ள திருக்கோயில் என்பர். இங்குள்ள மூர்த்தி, கங்கை முதலிய தீர்த்த மாதர்கள் எழுவரையும் அழைத்து வந்து தீர்த்தத்தில் மூழ்கச் செய்தருளினர் என்பர்.

போதார்புனல்சேர் கந்தம்உந்திப் பொலிபவ்வழகாரும்
தாதார்பொழில்சூழ்ந் தெழிலார்புறவி லந்தண்குடமூக்கில்
மாதார்மங்கை பாகமாக மனைகள் பலிதேர்வார்
காதார்குழையர் காளகண்டர் காரோணத்தாரே. 4

பூவார்பொய்கை அலர்தாமரைசெங் கழுநீர்புறவெல்லாம்
தேவார்சிந்தை அந்தணாளர் சீராலடிபோற்றக்
கூவார்குயில்கள் ஆலும்மயில்கள் இன்சொற்கிளிப்பிள்ளை
காவார்பொழில்சூழ்ந் தழகார்குடந்தைக் காரோணத்தாரே. 5

மூப்பூர்[1] நலிய நெதியார்விதியாய் முன்னே அனல்வாளி
கோப்பார்பார்த்தன் நிலைகண்டருளுங் குழகர்குடமூக்கில்
தீர்ப்பாருடலில் அடுநோய் அவலம் வினைகள்நலியாமைக்
காப்பார்காலன் அடையாவண்ணங் காரோணத்தரே. 6

ஊனார்தலைகை யேந்தியுலகம் பலிதேர்ந்துழல்வாழ்க்கை
மானார்தோலார் புலியினுடையார் கரியின்உரிபோர்வை
தேனார்மொழியார் திளைத்தங்காடித் திகழுங்குடமூக்கில்
கானார்நட்டம் உடையார்செல்வக் கரோணத்தாரே. 7

வரையார்திரள்தோள் மதவாளரக்கன் எடுப்பமலைசேரும்
விரையார்பாதம் நுதியாலூன்ற நெரிந்துசிரம்பத்தும்
உரையார்கீதம் பாடக்கேட்டங் கொளிவாள்கொடுத்தாரும்
சுரையார்பொன்னி சூழ்தண்குடந்தைக் காரோணத்தாரே. 8

கரியமாலுஞ் செய்யபூமேல் அயனுங்கழறி[2]ப்போய்
அரிய அண்டந்[3] தேடிப்புக்கும் அளக்கவொண்கிலார்
தெரியஅரிய தேவர்செல்வந் திகழுங்குடமூக்கில்
கரியகண்டர் காலகாலர் காரோணத்தாரே. 9

நாணார்அமணர் நல்லதறியார் நாளுங்குரத்திகள்[4]
பேணார்தூய்மை மாசு[5] கழியார் பேசேலவரோடும்
சேணார்மதிதோய் மாடமல்கு செல்வநெடுவீதிக்
கோணாகரமொ[6]ன் றுடையார்குடந்தைக் காரோணத்தாரே. 10

---

[1] மூப்பூர் - பழைய மூன்று ஊர்கள்; திரிபுரம். [2] கழறி - அறைகூவி. [3] அண்டம் - மேலும் கீழும் உள்ள உலகம். [4] குரத்திகள் - பெண் துறவிகள். [5] பேணார்தா மெய்மாசு என்றும் பாடம். [6] கோணாகரம் - வளைந்த கடல்போன்ற குளம்.

கருவார்பொழில்சூழ் தழகார்செல்வக் காரோணத்தாரைத்
திருவார்செல்வம் மல்குசண்பைத் திகழுஞ்சம்பந்தன்
உருவார்செஞ்சொல் மாலையிவைபத் துரைப்பாருலகத்துக்
கருவாரிடும்பைப் பிறப்பதறுத்துக் கவலைகழிவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—காசிவிசுவநாதர், சோமநாதர் ;
தேவி—விசாலாட்சி, தேனார்மொழியம்மை.

---

## 20. திருநாகேச்சரம்*

**பண் - இந்தளம் [2-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

பொன்நேர் த[1]ருமே னியனே புரியும்
மின்நேர் சடையாய் விரைகா விரியின்[2]
நன்னீர் வயல்நா கேச்சர நகரின்
மன்னே யெனவல் வினை[3] மாய்ந் தறுமே. 1

சிறவார் புரமூன் றெரியச் சிலையில்
உறவார் கணையுய்த் தவனே உயரும்
நறவார் பொழில்நா கேச்சர நகருள்
அறவா எனவல் வினையா சறுமே. 2

கல்லால் நிழல்மே யவனே கரும்பின்
வில்லான்[4] எழில்வே வவிழித் தவனே
நல்லார் தொழுநா கேச்சர நகரில்
செல்வா எனவல் வினைதேய்ந் தறுமே. 3

நகுவான் மதியோ டரவும் புனலும்
தகுவார் சடையின் முடியாய் தளவம்
நகுவார் பொழில்நா கேச்சர நகருள்
பகவா எனவல் வினைபற் றறுமே. 4

---

* சண்பகவனம் எனவும் பெயர் பெறும். திருநாகேச்சுரம் என்றும் பாடம். [1] நேர்தரு - ஒத்த. [2] விரிகாவிரியின் என்றும் பாடம், [3] வல்வினை - பிறவிக்காரணமாகிய பழவினை. [4] கரும்பின் வில்லான் - மன்மதன்.

கலைமான் மறியுங் கனலும் மழுவும்
நிலையா கியகை யினனே நிகழும்
நலமா கியநா கேச்சர நகருள்
தலைவா எனவல் வினைதான் அறுமே. 5

குரையார் கழலா டநடங் குலவி
வரையான் மகள்கா ணமகிழ்ந் தவனே
நரையார் விடையே றுநாகேச் சரத்தெம்
அரைசே எனநீங் கும்அருந் துயரே. 6

முடையார் தருவெண் டலைகொண் டுலகில்
கடையார் பலிகொண் டுழல்கா ரணனே
நடையார் தருநா கேச்சர நகருள்
சடையா எனவல் வினைதான் அறுமே. 7

ஓயா தஅரக் கன்ஒடிந் தலற
நீயா ரருள்செய் துநிகழ்ந் தவனே
வாயா ரவழுத் துவர்நா கேச்சரத்
தாயே எனவல் வினைதான் அறுமே. 8

நெடியா னொடுநான் முகன்நே டலுறச்
சுடுமா லெரியாய் நிமிர்சோ தியனே
நடுமா வயல்நா கேச்சர நகரே
இடமா வுறைவா யெனஇன் புறுமே. 9

மலம்பா விய[5] கையொடுமண் டையதுண்
கலம்பா வியர்கட் டுரைவிட் டுலகில்[6]
நலம்பா வியநா கேச்சர நகருள்
சிலம்பா எனத்தீ வினைதேய்ந் தறுமே. 10

கலமார் கடல்சூழ் தருகா ழியர்கோன்
தலமார் தருசெந் தமிழின் விரகன்
நலமார் தருநா கேச்சரத் தரனைச்
சொலமா லைகள்சொல் லநிலா வினையே. 11

திருச்சிற்றம்பலம்

---

[5] மலம்பாவிய — கழுவுதலின்மையால் அழுக்குப் படிந்த.
[6] இவ்வடிகள் புத்த சமண குருமார் வழக்கினைக் குறிக்கும்.

பண் - செவ்வழி [2-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

தழைகொள்சந் தும்அகிலும் மயிற்பீலி யுஞ்சாதியின்
பழமும் உந்திப் புனல்பாய் பழங்காவிரி[1] த் தென்கரை
நழுவில்வானோர் தொழநல்கு சீர்மல்கு நாகேச்சரத்
தழகர்[2] பாதந் தொழுதேத்த வல்லார்க் கழகாகுமே. 1

பெண்ணோர்பாகம் அடையச் சடையிற் புனல்பேணிய
வண்ணமான பெருமான் மருவும் இடம் மண்ணுளார்
நண்ணிநாளுந் தொழுதேத்தி நன்கெய்து நாகேச்சரம்
கண்ணினாற் காணவல்லா ரவர்கண் ணுடையார்களே. 2

குறவர்கொல்லைப் புனங்கொள்ளை கொண்டும் மணிகுலவுநீர்
பறவையாலப் பரக்கும் பழங்காவிரித்[3] தென்கரை
நறவநாறும் பொழில்சூழ்ந் தழகாய நாகேச்சரத்
திறைவர்பாதந் தொழுதேத்த வல்லார்க் கிடரில்லையே. 3

கூசநோக்காதுமுன் சொன்ன பொய்கொடு வினைகுற்றமும்
நாசமாக்கும் மனத்தார்கள் வந்தாடு நாகேச்சரம்
தேசமாக்குந் திருக்கோயி லாக்கொண்ட செல்வன்கழல்
நேசமாக்குந் திறத்தார் அறத்தார் நெறிப்பாலரே. 4

வம்புநாறும் மலரும்மலைப் பண்டமுங் கொண்டுநீர்
பைம்பொன்வாரிக் கொழிக்கும் பழங்காவிரித் தென்கரை
நம்பன்நாளும் அமர்கின்ற நாகேச்சரம் நண்ணுவார்
உம்பர்வானோர் தொழச் சென்றுடனாவதும் உண்மையே. 5

காளமேகந் நிறக்கால னோடந்தகன் கருடனும்
நீளமாய்நின் றெய்தகாமனும் பட்டன நினைவுறின்
நாளுநாதன் அமர்கின்ற நாகேச்சரம் நண்ணுவார்
கோளுநாளுந் தீயவேனும் நன்காங் குறிக்கொண்மினே.[4] 6

---

[1] பழங்காவிரி-காவிரி பின்னர் வேறு நிலைபெற்று ஓடுதல் குறிப்பு; இஃது அரிசில்நதி எனவும்பெயர் பெறும். [2] அழகர் - அழகுக்கெல்லா மிருப்பிடமானவர். [3] இவ்வடிகள் தற்குறிப்பேற்றவணி ஆகும். [4] இவ்வடிகள் இத்தலத்தை அடைந்து வழிபடுவோர்க்குச் சர்ப்பதோஷம் முதலிய தோஷங்களும் கிரகங்களின் கொடுமைகளும் நீங்கும் என்பதை அறிவிக்கும்.

வேயுதிர்முத் தொடுமத்த யானை மருப்பும்விராய்ப்
பாய்புனல்வந் தலைக்கும் பழங்காவிரித் தென்கரை
நாயிறுந்[5] திங் களுங்கூடி வந்தாடு நாகேச்சரம்
மேயவன்றன் அடிபோற்றி யென்பார் வினைவீடுமே. 7

இலங்கைவேந்தன் சிரம்பத்தி ரட்டியெழில் தோள்களும்
மலங்கிவீழும் மலையால் அடர்த்தா னிடமல்கிய
நலங்கொள்சிந்தை யவர்நாடோறும் நண்ணும் நாகேச்சரம்
வலங்கொள்சிந்தை யுடையார் இடராயின மாயுமே. 8

கரியமாலும் அயனும் அடியும்முடி காண்பொணா
எரியதாகிந் நிமிர்ந்தான் அமரும் இட மீண்டுகா
விரியின்நீர்வந் தலைக்குங் கரைமேவு நாகேச்சரம்
பிரிவிலாதவ் வடியார்கள் வானிற் பிரியார்களே. 9

தட்டிடுக்கி யுறிதூக்கி யகையினர் சாக்கியர்
கட்டுரைக்கும் மொழிகொள்ள லும்[6] வெள்ளி லங்காட்டிடை
நட்டிருட்கண் நடமாடிய நாதன் நாகேச்சரம்
மட்டிருக்கும் மலரிட் டடிவீழ்வது வாய்மையே. 10

கந்தநாறும் புனற்காவிரித் தென்கரைக் கண்ணுதல்
நந்தி[7] சேருந் திருநாகேச் சரத்தின் மேன்ஞானசம்
பந்தன்நாவிற் பனுவல் லிவைபத்தும் வல்லார்கள்போய்
எந்தையீசன் இருக்கும் உலகெய்த வல்லார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சண்பகாரணியர்; தேவி—குன்றமுலைநாயகி.

---

## 21. திருவிடைமருதூர்

பண் - தக்கராகம்* [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஓடேகலன் உண்பதும் ஊரிடு பிச்சை
காடேயிட மாவது கல்லால் நிழற்கீழ்

---

[5] நாயிறுசூரியன் நாயிறு என்பதன் போலி ஞாயிறு.
[6] கொள்ளல்-கொள்ளவேண்டாம்; உம்: அசைநிலை. [7] நந்தி-சிவன்.
* இப்பதிகம் பாடிக்கொண்டு இத்தலத்தை அடைந்தருளினார்.

வாடாமுலை மங்கையுந் தானும்[1] மகிழ்ந்
தீடா[2] வுறை கின்ற இடைமரு தீதோ. 1

தடங்கொண்டதோர் தாமரைப் பொன்முடி தன்மேல்
குடங்கொண்டடி யார்குளிர் நீர்சுமந் தாட்டப்
படங்கொண்டதோர் பாம்பரை யார்த்த பரமன்
இடங்கொண்டிருந் தான்றன் இடைமரு தீதோ. 2

வெண்கோவணங் கொண்டொரு வெண்டலை யேந்தி
அங்கோல்வளை யாளையொர் பாகம் அமர்ந்து
பொங்காவரு காவிரிக் கோலக் கரைமேல்
எங்கோ னுறைகின்ற இடைமரு தீதோ. 3

அந்தம்அறி யாதஅ ருங்கல[3] முந்திக்
கந்தங்கமழ் காவிரிக் கோலக் கரைமேல்
வெந்தபொடிப் பூசிய வேத முதல்வன்
எந்தையுறை கின்ற இடைமரு தீதோ. 4

வாசங்கமழ் மாமலர்ச் சோலையில் வண்டே
தேசம்புகுந் தீண்டியொர் செம்மை யுடைத்தாய்ப்
பூசம்புகுந் தாடி[4]ப் பொலிந்தழ காய
ஈசன் உறை கின்ற இடைமரு தீதோ. 5

வன்புற்றிள நாகம் அசைத்தழ காக
என்பிற்பல மாலையும் பூண்டெரு தேறி
அன்பிற்பிரி யாதவ ளோடும் உடனாய்
இன்புற்றிருந் தான்றன் இடைமரு தீதோ. 6

தேக்குந்திமி லும்பல வுஞ்சுமந் துந்திப்
போக்கிப்புறம் பூச லடிப்ப வருமால்
ஆர்க்குந்திரைக் காவிரிக் கோலக் கரைமேல்
ஏற்கஇருந் தான்றன் இடைமரு தீதோ. 7

---

[1] 'வாடாமுலை மங்கையும் தானும்' என்ற அடியோடு 'பவன் பிரமசாரியாகும், பான்மொழிகன்னியாகும்' என்ற சிவஞான சித்தியார் அடியினை ஒப்பு நோக்குக. [2] ஈடா-இடமாக. [3] அந்தம் அறியாத அருங்கலம் - கணக்கற்ற அருமணிகள். [4] பூசம் புகுந்தாடி-பூசத்தீர்த்தச் சிறப்பு; "பூசத்தீர்த்தம் புரக்கும் பொன்னி, அயிராவணத் துறையாடு மடுப்ப!" என்பது திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.

பூவார்குழ லார்அகில் கொண்டு புகைப்ப
ஓவா தடி யாரடி யுள்[5] குளிர்ந் தேத்த
ஆவா அரக் கன்றனை ஆற்ற லழித்த
ஏவார்சிலை யான்றன் இடைமரு தீதோ. 8

முற்றாததொர் பால்மதி சூடு முதல்வன்
நற்றாமரை யானொடு மால்நயந் தேத்தப்
பொற்றோளியுந் தானும் பொலிந்தழ காக
எற்றே[6] யுறை கின்ற இடைமரு தீதோ. 9

சிறுதேரரும் சில்சம ணும்புறங் கூற
நெறியேபல பத்தர்கள் கைதொழு தேத்த
வெறியாவரு காவிரிக் கோலக் கரைமேல்
எறியார்மழு வாளன் இடைமரு தீதோ. 10

கண்ணார்கமழ் காழியுள் ஞானசம் பந்தன்
எண்ணார்புக ழெந்தை யிடைமரு தின்மேல்
பண்ணோடிசை பாடிய பத்தும்வல் லார்கள்
விண்ணோருல கத்தினில் வீற்றிருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிருக்குக்குறள். பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தோடொர் காதினன்,[1] பாடும் மறையினன்
காடு பேணிநின், றாடும் மருதனே. 1

கருதார் புரமெய்வர், எருதே இனிதூர்வர்
மருதே யிடமாகும், விருதா[2]ம் வினைதீர்ப்பே. 2

எண்ணும் அடியார்கள், அண்ணல் மருதரைப்
பண்ணின் மொழிசொல்ல, விண்ணுந் தமதாமே. 3

விரியார் சடைமேனி, எரியார் மருதரைத்
தரியா தேத்துவார், பெரியா ருலகிலே. 4

---

[5] ஓவாதடியாரடிகள் என்றும் பாடம். [6] எற்றே-என்னதெய்வம். என்தேவு என்பது எதுகைநோக்கி எற்றே என நின்றது.
[1] தோடொர் காதினன்-'தோடுடைய செவியன்' (அப்பர் தேவாரம்).
[2] விருது – வெற்றிச் சின்னம்.

பந்த விடை[3] யேறும், எந்தை மருதரைச்
சிந்தை செய்பவர், புந்தி நல்லரே. 5

கழலுஞ் சிலம்பார்க்கும், எழிலார் மருதரைத்
தொழலே பேணுவார்க் குழலும் வினைபோமே. 6

பிறையார் சடையண்ணல், மறையார் மருதரை
நிறை[4] யால் நினைபவர், குறையா ரின்பமே. 7

எடுத்தான் புயந்தன்னை, அடுத்தார்[5] மருதரைத்
தொடுத்தார் மலர்சூட்ட, விடுத்தார் வேட்கையே. 8

இருவர்க் கெரியாய, உருவ மருதரைப்
பரவி யேத்துவார், மருவி வாழ்வரே. 9

நின்றுண் சமண்தேரர், என்று மருதரை
அன்றி யுரைசொல்ல, நன்று மொழியாரே. 10

கருது சம்பந்தன், மருத ரடிபாடிப்
பெரிதுந் தமிழ்சொல்லப், பொருத வினைபோமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மருந்தவன் வானவர் தானவர்க்கும்
பெருந்தகை பிறவினொ டிறவு[1] மானான்[2]
அருந்தவ முனிவரொ டால்நிழற்கீழ்
இருந்தவன் வளநகர் இடைமருதே. 1

தோற்றவன் கேடவன்[3] துணைமுலையாள்
கூற்றவன் கொல்புலித் தோலசைத்த
நீற்றவன் நிறைபுனல் நீள்சடைமேல்
ஏற்றவன் வளநகர் இடைமருதே. 2

படையுடை மழுவினன் பால்வெண்ணீற்றன்
நடைநவில் ஏற்றினன் ஞாலமெல்லாம்

---

[3] பந்தவிடை — பாசக்கட்டுடைய ஆன்மாவாகிய பசு. [4] நிறை— மனம் புலன்வழி செல்லாது நிற்றல். [5] அடுத்தார் - தண்டித்தார்.
[1] இறவு - இறப்பு. [2] ஆனான் - ஆகுமாறு செய்பவன். [3] தோற்றவன்-படைப்பவன்; கேடவன் அழிப்பவன்.

முடைதலை யிடுபலி கொண்டுழல்வான்
இடைமரு தினிதுறை யெம்மிறையே. 3

பணைமுலை யுமையொரு பங்கனொன்னார்
துணைமதில் மூன்றையுஞ் சுடரின்மூழ்கக்
கணைதுரந் தடுதிறற் காலற்செற்ற
இணையிலி[4] வளநகர் இடைமருதே. 4

பொழில[5]வன் புயல[6]வன் புயலியக்குந்
தொழிலவன் துயரவன்[7] துயரகற்றும்
கழலவன் கரியுரி போர்த்துகந்த
எழிலவன் வளநகர் இடைமருதே. 5

நிறையவன் புனலொடு மதியும்வைத்த
பொறையவன் புகழவன் புகழநின்ற
மறையவன் மறிகடல் நஞ்சையுண்ட
இறையவன் வளநகர் இடைமருதே. 6

நனிவளர் மதியொடு நாகம்வைத்த
பனிமலர்க் கொன்றையம் படர்சடையன்
முனிவரொ டமரர்கள் முறைவணங்க
இனிதுறை வளநகர் இடைமருதே. 7

தருக்கின அரக்கன தாளுந்தோளும்
நெரித்தவன் நெடுங்கைமா மதகரிஅன்
றுரித்தவன் ஒன்னலர் புரங்கள்மூன்றும்
எரித்தவன் வளநகர் இடைமருதே. 8

பெரியவன் பெண்ணினொ டாணுமானான்
வரியர வணைமறி கடல்துயின்ற
கரியவன் அலரவன் காண்பரிய
எரியவன் வளநகர் இடைமருதே. 9

சிந்தையில் சமணொடு[8] தேரர்சொன்ன
புந்தியில் உரையவை பொருள்கொளாதே

---

[4] இணையிலி - தனக்கு உவமையில்லாதான். [5] பொழில்-உலகு. [6] புயல் - (உலகைவளர்க்கும்) நீர். [7] துயரவன் - கன்மங்களை அனுபவிக்கும் பொருட்டுத் துன்பங்களை ஊட்டுவிப்பவன். [8] சிந்தையிலமணொடு என்றும் பாடம்.

அந்தணர் ஓத்தினொ டரவம்ஓவா
எந்தைதன் வளநகர் இடைமருதே. 10

இலைமலி பொழிலிடை மருதிறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
பலமிகு தமிழிவை பத்தும்வல்லார்
உலகுறு புகழினொ டோங்குவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**திருவிராகம். பண் - வியாழக்குறிஞ்சி**

திருச்சிற்றம்பலம்

நடைமரு[1] திரிபுரம் எரியுண நகைசெய்த
படைமரு தழலெழ மழுவல பகவன்
புடைமரு திளமுகில் வளம்அமர் பொதுளிய
இடைமரு தடையநம் இடர்கெடல் எளிதே. 1

மழைநுழை மதியமொ டழிதலை மடமஞ்ஞை
கழைநுழை புனல்பெய்த கமழ்சடை முடியன்
குழைநுழை திகழ்செவி[2] யழகொடு மிளிர்வதொர்
இழைநுழை புரியணல் இடம்இடை மருதே. 2

அருமையன் எளிமையன் அழல்விடம் மிடறினன்
கருமையின் ஒளிபெறு கமழ்சடை முடியன்
பெருமையன் சிறுமையன் பிணைபெணொ டொருமையின்
இருமையும் உடையணல்[3] இடம்இடை மருதே. 3

பொரிபடு முதுகுற முளிகளி[4] புடைபுல்கு
நரிவளர் சுடலையுள் நடமென நவில்வோன்
வரிவளர் குளிர்மதி யொளிபெற மிளிர்வதொர்
எரிவளர் சடையணல் இடம்இடை மருதே. 4

---

1 நடைமரு - இயங்குகின்ற. 2 குழைநுழை திகழ்செவி-குழையணிந்து விளங்குகின்ற காது; நுழை - (இசைபாடுவதற்காகக் கந்தருவன் குழையாகி) நுழைந்த. 3 பெணொடு ஒருமையின் இருமையும் உடைஅணல் - இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும் உடைய அண்ணல். 4 பொரிபடு - காய்ந்த; முளிகளி - காய்ந்த கள்ளி.

வருநல மயிலன[5] மடநடை மலைமகள்
பெருநல முலையிணை பிணைசெய்த பெருமான்
செருநல மதிலெய்த சிவனுறை செழுநகர்
இருநல புகழ்மல்கும் இடம்இடை மருதே. 5

கலையுடை விரிதுகில் கமழ்குழல் அகில்புகை
மலையுடை மடமகள் தனையிடம் உடையோன்
விலையுடை அணிகலன் இலனென மழுவினொ
டிலையுடை படையவன் இடம்இடை மருதே. 6

வளமென வளர்வன வரிமுரல் பறவைகள்
இளமணல் அணைகரை யிசைசெயும் இடைமரு
துளமென நினைபவர் ஒலிகழல் இணையடி
குளமண லுறமூழ்கி வழிபடல் குணமே. 7

மறையவன் உலகவன் மதியவன் மதிபுல்கு
துறையவ னெனவல அடியவர் துயரிலர்
கறையவன் மிடறது கனல்செய்த கமழ்சடை
இறையவன் உறைதரும் இடம்இடை மருதே. 8

மருதிடை நடவிய மணிவணர்[6] பிரமரும்
இருதுடை யகலமொ டிகலின ரினதெனக்
கருதிடல் அரியதொர் உருவொடு பெரியதொர்
எருதுடை யடிகள்தம் இடம்இடை மருதே. 9

துவருறு விரிதுகில் உடையரும் அமணரும்
அவருறு சிறுசொலை நயவன்மின் இடுமணல்
கவருறு புனல்இடை மருதுகை தொழுதெழும்
அவருறு வினைகெடல் அணுகுதல் குணமே. 10

தடமலி புகலியர் தமிழ்கெழு விரகினன்
இடமலி பொழில்இடை மருதினை யிசைசெய்த
படமலி தமிழிவை பரவவல் லவர்வினை
கெடமலி புகழொடு கிளரொளி யினரே. 11

திருச்சிற்றம்பலம்

---

[5] மயிலென என்றும் பாடம். [6] மருதிடை நடவிய மணிவணர்- இரட்டை மருதமரத்திடை தவழ்ந்த திருமால்.

திருவிராகம். பண்-வியாழக்குறிஞ்சி

திருச்சிற்றம்பலம்

விரிதரு புலியுரி விரவிய அரையினர்
திரிதரும் எயிலவை புனைகணை யினிலெய்த
எரிதரு சடையினர் இடைமரு தடைவுனல்[1]
புரி[2] தரு மனனவர் புகழ்மிக வுளதே. 1

மறிதிரை படுகடல் விடமடை மிடறினர்
எறிதிரை கரைபொரும் இடைமரு தெனுமவர்
செறிதிரை நரையொடு செலவி[3] லர் உலகினில்
பிறிதிரை பெறும்உடல் பெறுகுவ தரிதே. 2

சலசல சொரிபுனல் சடையினர் மலைமகள்
நிலவிய வுடலினர் நிறைமறை மொழியினர்
இலரென இடுபலி யவர்இடை மருதினை
வலமிட வுடல்நலி விலதுள வினையே. 3

விடையினர் வெளியதொர் தலைகல னெனநனி
கடைகடை தொறுபலி யிடுகென முடுகுவர்
இடைவிட லரியவர்[4] இடைமரு தெனும்நகர்
உடையவ ரடியிணை தொழுவதெம் உயர்வே. 4

உரையரும் உருவினர் உணர்வரு வகையினர்
அரைபொரு புலியதள் உடையினர் அதன்மிசை
இரைமரும்[5] அரவினர்[6] இடைமரு தெனவுளம்
உரைகள துடையவர் புகழ்மிக வுளதே. 5

ஒழுகிய புனல்மதி அரவமொ டுறைதரும்
அழகிய முடியுடை அடிகள தறைகழல்
எழிலினர் உறைஇடை மருதினை மலர்கொடு
தொழுதல்செய் தெழுமவர் துயருறல் இலரே. 6

கலைமலி விரலினர்[7] கடியதொர் மழுவொடும்
நிலையினர் சலமகள் உலவிய சடையினர்

---

[1] தடைவுளல் என்றும் பாடம். [2] புரிதல் - இடைவிடாது நினைத்தல். [3] செலவு - சாதல். [4] இடைவிடலியரவர் என்றும் பாடம். [5] இரைமரும் - உயிருள்ள. [6] இரைமருவரவினர் என்றும் பாடம். [7] கலைமலி விரலினர் - மானேந்திய விரலையுடையவர்.

மலைமகள் முலையிணை மருவிய வடிவினர்
இலைமலி படையவர் இடம்இடை மருதே. 7

செருவடை யிலவல செயல்செயத் திறலொடும்
அருவரை யினிலொரு பதுமுடி நெரிதர
இருவகை விரனி[8]றி யவரிடை மருதது
பரவுவர் அருவினை யொருவுதல் பெரிதே. 8

அரியொடு மலரவன் எனஇவ ரடிமுடி
தெரிவகை யரியவர் திருவடி தொழுதெழ
எரிதரும் உருவர்தம் இடைமரு தடைவுறல்
புரிதரு மனனவர் புகழ்மிக வுளதே. 9

குடைமயி லினதழை[9] மருவிய வுருவினர்
உடைமரு துவரினர் பலசொல வுறவிலை
அடைமரு திருவினர் தொழுதெழு கழலவர்
இடைமரு தெனமனம் நினைவதும் எழிலே. 10

பொருகட லடைதரு புகலியர் தமிழொடு
விரகினன் விரிதரு பொழிலிடை மருதினைப்
பரவிய வொருபது பயிலவல் லவரிடர்
விரவிலர் வினையொடு வியனுல குறவே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**பொ**ங்கு நூல் மார்பினீர் பூதப்படையீர் பூங்கங்கை
தங்குசெஞ் சடையினீர் சாமவேதம் ஓதினீர்
எங்குமெழிலார் மறையோர்கள் முறையாலே[1]த்த இடைமருதில்
மங்குல்தோய் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 1

நீரார்ந்த செஞ்சடையீர் நெற்றித்திருக்கண் நிகழ்வித்தீர்
போரார்ந்த வெண்மழுவொன் றுடையீர் பூதம்பாடலீர்

---

[8] இருவகை விரல் - கோபமும் பிரசாதமும் உடன் உடைய விரல்; தண்டித்துப் பின் அருள் செய்த என்றபடி. [9] தழை-இறகு; தழைத்து நிற்பது தழையாம். [1] முறையால் - ஓதுமுறையும் வழிபடும் முறையும்.

ஏரார்ந்த மேகலையாள் பாகங்கொண்டீர் இடைமருதில்
சீரார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 2

அழல்மல்கும் அங்கையி லேந்திப்பூதம் அவைபாடச்
சுழல்மல்கும் ஆடலீர் சுடுகாடல்லாற் கருதாதீர்
எழின்மல்கு நான்மறையோர் முறையாலேத்த இடைமருதில்
பொழில்மல்கு கோயிலே கோயிலாகப் பொலிந்தீரே. 3

பொல்லாப் படுதலையொன் றேந்திப்புறங் காட்டாடலீர்
வில்லாற் புரமூன்றும் எரித்தீர்விடை யார்கொடியினீர்
எல்லாக் கணங்களும் முறையாலேத்த இடைமருதில்
செல்வாய கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 4

வருந்திய மாதவத்தோர் வானோரேனோர் வந்தீண்டிப்
பொருந்திய தைப்பூச [2] மாடியுலகம் பொலிவெய்தத்
திருந்திய நான்மறையோர் சீராலேத்த இடைமருதில்
பொருந்திய கோயிலே கோயிலாகப் புக்கீரே. 5

சலமல்கு செஞ்சடையீர் சாந்தநீறு பூசினீர்
வலமல்கு வெண்மழுவொன் றேந்திமயானத் தாடலீர்
இலமல்கு நான்மறையோ ரினிதாயேத்த இடைமருதில்
புலமல்கு கோயிலே கோயிலாகப் பொலிந்தீரே. 6

புனமல்கு கொன்றையீர் புலியின் அதளீர் பொலிவார்ந்த
சினமல்கு மால்விடையீர் செய்யீர் [3] கரிய கண்டத்தீர் [4]
இனமல்கு நன்மறையோ ரேத்துஞ்சீர்கொள் இடைமருதில்
கனமல்கு கோயிலே கோயிலாகக் கலந்தீரே. 7

சிலையுய்த்த வெங்கணையாற் புரமூன்றெரித்தீர் திறலரக்கன்
தலைபத்துந் திண்தோளும் நெரித்தீர் தையல்பாகத்தீர்
இலைமொய்த்த தண்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த இடைமருதில்
நலமொய்த்த கோயிலே கோயிலாக நயந்தீரே. 8

மறைமல்கு நான்முகனும் மாலும்அறியா வண்ணத்தீர்
கறைமல்கு கண்டத்தீர் கபாலமேந்து கையினீர்
அறைமல்கு வண்டினங்கள் ஆலுஞ்சோலை இடைமருதில்
நிறைமல்கு கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. 9

---

[2] தைப்பூசம் - இத்தலத்தின் தீர்த்தச் சிறப்பு நாள். [3] செய்யீர் - சிவந்ததிருமேனியுடையீர். [4] இவ்வடி முரண் அணி.

சின்போர்வைச் சாக்கியரும் மாசுசேருஞ் சமணரும்
துன்பாய கட்டுரைகள் சொல்லி யல்லல்தூற்றவே
இன்பாய அந்தணர்கள் ஏத்தும்ஏர்கொள் இடைமருதில்
அன்பாய கோயிலே கோயிலாக அமர்ந்தீரே. 10

கல்லின் மணிமாடக் கழுமலத்தார் காவலவன்
நல்ல அருமறையான் நற்றமிழ் ஞானசம்பந்தன்
எல்லி[5] இடைமருதில் ஏத்துபாட லிவைபத்தும்
சொல்லு வார்க்குங் கேட்பார்க்குந் துயரமில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மகாலிங்கேசுவரர், மருதவாணர்;
தேவி—நன்முலைநாயகி.

---

## 22. திருத்தென்குரங்காடுதுறை*

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பரவக் கெடும்வல் வினைபா ரிடஞ்[1] சூழ
இரவிற் புறங்காட் டிடைநின் றெரியாடி
அரவச் சடையந் தணன்மேய அழகார்
குரவப் பொழில்சூழ் குரங்கா டுதுறையே. 1

விண்டார் புரமூன்று மெரித்த விமலன்
இண்டா[2]ர் புறங்காட் டிடைநின் றெரியாடி
வண்டார் கருமென் குழல்மங் கையொர்பாகம்
கொண்டான் நகர்போல் குரங்கா டுதுறையே. 2

நிறைவில் புறங்காட் டிடைநே ரிழையோடும்
இறைவில் லெரியான் மழுவேந் திநின்றாடி
மறையின் னொலிவா னவர்தா னவரேத்தும்
குறைவில் லவனூர் குரங்கா டுதுறையே. 3

---

[5] எல்லி - ஒளியுடைய. * 'ஆடுதுறை' என வழங்கப்பெறும். சுக்கிரீவனும் அனுமானும் ஆகிய வானர வீரர்கள் பூசித்ததால் இப்பெயர் பெற்றது. [1] பாரிடம் - பூதகணம். [2] இண்டு - முட்செடி; பாலைப் பொருள்.

விழிக்கும் நுதன்மேலொருவெண் பிறைசூடித்
தெழிக்கும் புறங்காட் டிடைச்சேர்ந் தெரியாடிப்
பழிக்கும் பரிசே பலிதேர்ந் தவனூர்பொன்
கொழிக்கும் புனல்சூழ் குரங்கா டுதுறையே. 4

நீரூர் தருமே னியன்நெற் றியொர்கண்ணன்
ஏரூர் கொடி[3] யெம் மிறையீண் டெரியாடி
ஆரூர் சடையந் தணன் ஆயிழையாளோர்
கூரூன் நகர்போல் குரங்கா டுதுறையே. 5

நளிரும் மலர்கொன் றையுநா றுகரந்தைத்[4]
துளிருஞ் சுலவிச் சுடுகாட் டெரியாடி
மிளிரும் அரவார்த் தவன்மே வியகோயில்
குளிரும் புனல்சூழ் குரங்கா டுதுறையே. 6

பழகும் வினைதீர்ப் பவன்பார்ப் பதியோடும்
முழவம் குழல்மொந் தைமுழங் கெரியாடும்
அழகன் அயில்மூ விலைவேல் வலனேந்தும்
குழகன் நகர்போல் குரங்கா டுதுறையே. 7

வரையார்த் தெடுத்தவ் வரக்கன் வலியொல்க
நிரையார் விரலால் நெரித்திட் டவனூராம்
கரையார்ந் திழிகா விரிக்கோ லக்கரைமேல்
குரையார் பொழில்சூழ் குரங்கா டுதுறையே. 8

நெடியா னொடுநான் முகனும் நினைவொண்ணாப்
படியா கியபண் டங்கனி[5] ன் றெரியாடி
செடியார் தலையேந் தியசெங்கண் வெள்ளேற்றின்
கொடியான் நகர்போல் குரங்கா டுதுறையே. 9

துவரா டையர்வே டமலாச் சமண்கையர்
கவர்வாய் மொழிகா தல்செய்யா தவனூராம்
நவையார் மணிபொன் அகில்சந் தனமுந்திக்
குவையார் கரைசேர் குரங்கா டுதுறையே. 10

நல்லார் பயில்கா ழியுள்ஞா னசம்பந்தன்
கொல்லே றுடையான் குரங்கா டுதுறைமேல்

---

[3] ஏறு ஆர் கொடி - இடபக்கொடி. [4] கரந்தை - கொட்டைக் கரந்தை. [5] பண்டங்கன் - சிவன்; பண்டாரங்கம் - சிவனுடல்.

சொல்லார் தமிழ்மா லைபத்துந் தொழுதேத்த
வல்லா ரவர்வா னவரோ டுறைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி— ஆபத்சகாயேசுவரர்; தேவி—பவளக்கொடியம்மை.

---

## 23. திருவைகல் - மாடக்கோயில்*

பண் - காந்தாரபஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

துளமதி யுடை[1] மறி தோன்று கையினர்
இளமதி யணிசடை யெந்தை யாரிடம்
உளமதி யுடையவர்[2] வைக லோ[3] ங்கிய
வளமதி தடவிய மாடக் கோயிலே. 1

மெய்யகம் மிளிரும்வெண் ணூலர் வேதியர்
மையகண் மலைமக ளோடும் வைகிடம்
வையகம் மகிழ்தர வைகல் மேற்றிசைச்
செய்யகண் வளவன்[4] முன் செய்த கோயிலே. 2

கணியணி மலர்கொடு காலை மாலையும்
பணியணி பவர்க்கருள் செய்த பான்மையர்
தணியணி யுமையொடு தாமுந் தங்கிடம்
மணியணி கிளர்வைகல் மாடக் கோயிலே. 3

கொம்பியல் கோதைமுன் அஞ்சக் குஞ்சரத்
தும்பி[5] ய துரிசெய்த துங்கர் தங்கிடம்
வம்பியல் சோலைசூழ் வைகல் மேற்றிசைச்
செம்பியன் கோச்செங்க ணான்செய் கோயிலே. 4

விடம்அடை மிடற்றினர் வேத நாவினர்
மடமொழி மலைமக ளோடும் வைகிடம்

---

* வைகல்நகருள் மேற்றிசையில் உள்ள பெருங்கோயில். இம் மாடக்கோயில் கோச்செங்கட் சோழனால் கட்டப்பட்ட கோயில்களில் ஒன்று. [1] துளமதியுடை-துள்ளும் கினைவினையுடைய. [2] உளமதி யுடையோர்-அறிவுடையோர். [3] வைகல்-வைகல்நகர். [4] செய்யகண் வளவன் - கோச்செங்கட் சோழர். [5] குஞ்சரத்தும்பி - குஞ்சரமாகிய தும்பி - யானை : இருபெயரொட்டு.

மடவனம் நடைபயில் வைகல் மாநகர்க்
குடதிசை[6] நிலவிய மாடக் கோயிலே. 5

நிறைபுனல் பிறையொடு நிலவு நீள்சடை
இறையவ ருறைவிடம் இலங்கு மூவெரி
மறையொடு வளர்வுசெய் வாணர்[7] வைகலில்
திறையுடை நிறைசெல்வன் செய்த கோயிலே. 6

எரிசரம்[8] வரிசிலை வளைய ஏவிமுன்
திரிபுரம் எரிசெய்த செல்வர் சேர்விடம்
வரிவளை யவர்பயில் வைகல் மேற்றிசை
வருமுகி லணவிய மாடக் கோயிலே. 7

மலையன இருபது தோளி னுன்வலி
தொலைவுசெய் தருள்செய்த சோதி யாரிடம்
மலர்மலி பொழிலணி வைகல் வாழ்வர்கள்
வலம்வரு மலையன மாடக் கோயிலே. 8

மாலவன் மலரவன் நேடி மால்கொள
மாலெரி யாகிய வரதர் வைகிடம்
மாலைகொ டணிமறை வாணர் வைகலில்
மாலன மணியணி மாடக் கோயிலே. 9

கடுவுடை வாயினர் கஞ்சி வாயினர்
பிடகுரை[9] பேணிலார் பேணு கோயிலாம்
மடமுடை யவர்பயில் வைகல் மாநகர்
வடமலை[10] யனையநன் மாடக் கோயிலே. 10

மைந்தன திடம்வைகல் மாடக் கோயிலைச்
சந்தமர் பொழிலணி சண்பை ஞானசம்
பந்தன தமிழ்கெழு பாடல் பத்திவை
சிந்தைசெய் பவர்சிவ லோகஞ் சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வைகனாதர்; தேவி—வைகலாம்பிகை.

---

[6] குடதிசை - மேற்குத்திசை. [7] வாணர்-வாழ்நர். [8] எரிசரம்-தீயாகிய அம்பு. [9] பிடகுரை - பொய்ம்மொழி; பிடக நூலினைப் பற்றிய உரை. [10] வடமலை - இமயம்.

## 24. திருநல்லம்*

### பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கல்லால் நிழல்மேய கறைசேர் கண்டாவென்
றெல்லா மொழியாலும்[1] இமையோர் தொழுதேத்த
வில்லால் அரண்மூன்றும் வெந்து விழவெய்த
நல்லான் நமையாள்வான் நல்லம் நகரானே. 1

தக்கன் பெருவேள்வி தன்னி லமரரைத்
துக்கம்[2] பலசெய்து சுடர்பொற் சடைதாழக்
கொக்கின் இறகோடு குளிர்வெண் பிறைசூடும்
நக்கன் நமையாள்வான் நல்லம் நகரானே. 2

அந்தி மதியோடும் அரவச் சடைதாழ
முந்தி யனலேந்தி முதுகாட் டெரியாடி
சிந்தித் தெழவல்லார் தீரா வினை[3] தீர்க்கும்
நந்தி[4] நமையாள்வான் நல்லம் நகரானே. 3

குளிரும் மதிசூடிக் கொன்றைச் சடைதாழ
மிளிரும் அரவோடு வெண்ணூல் திகழ்மார்பில்
தளிருந் திகழ்மேனித் தையல் பாகமாய்
நளிரும் வயல்சூழ்ந்த நல்லம் நகரானே. 4

மணியார் திகழ்கண்டம் முடையான் மலர்மல்கு
பிணிவார் சடையெந்தை பெருமாள் கழல்பேணித்
துணிவார் மலர்கொண்டு தொண்டர் தொழுதேத்த
நணியான் நமையாள்வான் நல்லம் நகரானே. 5

வாசம் மலர்மல்கு மலையான் மகளோடும்
பூசுஞ் சுடுநீறு புனைந்தான் விரிகொன்றை
ஈசன் எனவுள்கி யெழுவார் வினைகட்கு
நாசன் நமையாள்வான் நல்லம் நகரானே. 6

அங்கோல் வளைமங்கை[5] காண அனலேந்திக்
கொங்கார் நறுங்கொன்றை சூடிக் குழகாக

---

* 'கோனேரி ராஜபுரம்' என வழங்கும். [1] எல்லா மொழியாலும் - ஆரியம் தமிழ் என்ற மொழி அனைத்தாலும். [2] துக்கம் - இங்குத் தண்டனை. [3] தீராவினை - பழவினை. [4] நந்தி - சிவன். [5] அங்கோல் வளை மங்கை - தல அம்மையின் பெயர்.

வெங்கா டிடமாக வெந்தீ விளையாடும்
நங்கோன் நமையாள்வான் நல்லம் நகரானே. 7

பெண்ணார் திருமேனிப் பெருமான் பிறைமல்கு
கண்ணார் நுதலினன் கயிலை கருத்திலல்
எண்ணா தெடுத்தானை யிறையே விரலூன்றி
நண்ணார் புரமெய்தான் நல்லம் நகரானே. 8

நாகத் தணையானும் நளிர்மா மலரானும்
போக[6]த் தியல்பினற் பொலிய அழகாகும்
ஆகத் தவளோடும் அமர்ந்தங் கழகாரும்
நாகம் அரையார்த்தான் நல்லம் நகரானே. 9

குறி[7]யில் சமணோடு குண்டர் வண்தேரர்
அறிவில் உரைகேட்டங் கவமே கழியாதே
பொறிகொள் அரவார்த்தான் பொல்லா வினைதீர்க்கும்
நறைகொள் பொழில்சூழ்ந்த நல்லம் நகரானே. 10

நலமார் மறையோர்வாழ் நல்லம் நகர்மேய
கொலைசேர் மழுவானைக் கொச்சை யமர்ந்தோங்கு
தலமார் தமிழ்ஞான சம்பந் தன்சொன்ன
கலைக ளிவைவல்லார் கவலை கழிவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—உமாமகேசுவரர் ; தேவி—மங்கள நாயகி,
அங்கோல்வளையம்மை.

---

## 25. திருக்கோழம்பம்*

**பண் - இந்தளம் [2-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

நீற்றானை நீள்சடை மேல்நிறை வுள்ளதோர்
ஆற்றானை அழகமர் மென்முலை யாளையோர்

---

[6] போகம்—அவ்வவாது தொழில். [7] குறி—குறிக்கோள். * இது 'கொழும்பியம்' என மருவி வழங்கப்பெறுகிறது. இந்திரன் சாபத்தால் குயில் வடிவுகொண்ட சந்தன் என்ற வித்தியாதரன் பூசித்துச் சாபம் நீங்கப்பெற்ற தலம்.

கூற்றனைக் குளிர்பொழிற் கோழம்பம் மேவிய
ஏற்றனை யேத்துமின் நும்மிடர் ஏகவே. 1

மையான கண்டனை மான்மறி யேந்திய
கையானைக் கடிபொழிற் கோழம்பம் மேவிய
செய்யானைத் தேன்நெய்பா லுந்திகழ்ந் தாடிய
மெய்யானை மேவுவார் மேல்வினை மேவாவே. 2

ஏதனை[1] யேதமி லாஇமை யோர்தொழும்
வேதனை வெண்குழை தோடுவி ளங்கிய
காதனைக் கடிபொழிற் கோழம்பம் மேவிய
நாதனை யேத்துமின் நும்வினை நையவே. 3

சடையானைத் தண்மல ரான்சிரம் ஏந்திய
விடையானை வேதமும் வேள்வியும் ஆயநன்
குடையானைக் குளிர்பொழில் சூழ்திருக் கோழம்பம்
உடையானை உள்குமின் உள்ளங்கு ளிரவே. 4

காரானைக் கடிகமழ் கொன்றையம் போதணி
தாரானைத் தையலோர் பால்மகிழ்ந் தோங்கிய
சீரானைச் செறிபொழிற் கோழம்பம் மேவிய
ஊரானை யேத்துமின் நும்மிடர் ஒல்கவே. 5

பண்டாலின் நீழலா னைப்பரஞ் சோதியை
விண்டார்கள் தம்புரம் மூன்றுட னேவேவக்
கண்டானைக் கடிகமழ் கோழம்பங் கோயிலாக்
கொண்டானைக் கூறுமின் உள்ளங் குளிரவே. 6

சொல்லானைச் சுடுகணை யால்புரம் மூன்றெய்த
வில்லானை வேதமும் வேள்வியு மானவைக்
கொல்லானை உரியானைக் கோழம்பம் மேவிய
நல்லானை யேத்துமின் நும்மிடர் நையவே. 7

விற்றானை வல்லரக் கர்விறல் வேந்தனைக்
குற்றவைத்[2] திருவிர லாற்கொடுங் காலனைச்
செற்றானைச் சீர்திக ழுந்திருக் கோழம்பம்
பற்றானைப் பற்றுவார் மேல்வினை பற்றாவே.[3] 8

---

[1] ஏதன் - நன்மையுடையவன். [2] குற்றவை-குறுகுவித்தவனே.
[3] பற்றானை...பற்றாவே - பற்றுக பற்றற்றான் பற்றினை (திருக்குறள்).

நெடியானோ டயனறி யாவகை நின்றதோர்
படியானைப் பண்டங்க வேடம்ப யின்றானைக்
கடியாருங் கோழம்பம் மேவிய வெள்ளேற்றின்
கொடியானைக் கூறுமின் உள்ளங் குளிரவே. 9

புத்தருந் தோகையம் பீலிகொள் பொய்ம்மொழிப்
பித்தரும்[4] பேசுவ பேச்சல்ல பீடுடைக்
கொத்தலர் தண்பொழில் கோழம்பம் மேவிய
அத்தனை யேத்துமின் அல்லல் அறுக்கவே. 10

தண்புன லோங்குதண் ணந்தராய் மாநகர்
நண்புடை ஞானசம் பந்தன்நம் பான்[5] உறை
விண்பொழிற் கோழம்பம் மேவிய பத்திவை
பண்கொளப் பாடவல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கோகிலேசுவரர்; தேவி—சௌந்தரநாயகி.

---

## 26. திருவாவடுதுறை

### நாலடிமேல்வைப்பு

### பண் - காந்தாரபஞ்சமம்* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

இடரினுந் தளரினும்[1] எனதுறுநோய்[2]
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே. 1

வாழினுஞ் சாவினும்[3] வருந்தினும்போய்
வீழினும்[4] உனகழல் விடுவேனல்லேன்

---

[4] பொய்ம்மொழிப்பித்தர் - சமணர். [5] நம்பான்-நம்பி அடையத் தக்க புகலாக உள்ளவன். * இப்பதிகம் பாடி உலவாக்கிழிபெற்று மகிழ்ந்ததை அறிவிக்கும். [1] இடரினும் தளரினும், இடர் - தளர்வு இவை முன்செய் வினைப்பயனாக வரினும். [2] உறுநோய் - பழவினை. [3] சாவினும்-சாதல். [4] வீழினும் - நிலை குலைந்துபடுதல்.

தாழிளந் தடம்புனல்[5] தயங்குசென்னிப்
போழிள மதிவைத்த புண்ணியனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக் கில்லையேல்
அதுவோவுன தின் னருள் ஆவடுதுறை யரனே. 2

நனவினுங் கனவினும் நம்பாவுன்னை
மனவினும் வழிபடல் மறவேன் அம்மான்
புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த
கனலெரி யனல்புல்கு கையவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக் கில்லையேல்
அதுவோவுன தின் னருள் ஆவடுதுறை யரனே. 3

தும்மலோ[6] டருந்துயர் தோன்றிடினும்
அம்மலர் அடியலால் அரற்று[7] தென்நாக்
கைமல்கு வரிசிலைக் கணையொன் றினால்
மும்மதில் எரியெழ முனிந்தவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக் கில்லையேல்
அதுவோவுன தின் னருள் ஆவடுதுறை யரனே. 4

கையது வீழினுங்[8] கழிவுறினும்[9]
செய்கழல் அடியலால் சிந்தைசெய்யேன்
கொய்யணி நறுமலர் குலாயசென்னி
மையணி மிடறுடை மறையவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக் கில்லையேல்
அதுவோவுன தின் னருள் ஆவடுதுறை யரனே. 5

வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்
எந்தாயுன் அடியலால் ஏத்தாதென்நா
ஐந்தலை யரவுகொண் டரைக்கசைத்த
சந்தவெண் பொடியணி சங்கரனே
இதுவோஎமை யாளுமா றீவதொன் றெமக் கில்லையேல்
அதுவோவுன தின் னருள் ஆவடுதுறை யரனே. 6

---

5 இளம்புனல் - கன்னிதீர்த்தம்; புதுப்புனல். 6 தும்மல்-மரணக் குறிகளுள் ஒன்றாய் வரும்நோய் குறித்தது. 7 அடியலால் அலற்றா என்றும் பாடம். 8 கையது வீழ்தல் - பக்கவாதம். 9 கழிவுறுதல்-உயிர்வன்மை குறைதல்.

வெப்பொடு விரவியோர் வினைவரினும்
அப்பாவுன் னடியலால் அரற்றாதென்நா
ஒப்புடை யொருவனை[10] யுருவழிய
அப்படி யழலெழ விழித்தவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே. 7

பேரிடர் பெருகியோர் பிணிவரினுஞ்
சீருடைக் கழல்அலாற் சிந்தைசெய்யேன்
ஏருடை மணிமுடி இராவணனை
ஆரிடர் படவரை யடர்த்தவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே. 8

உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்
ஒண்மல ரடியலால் உரையாதென்நாக்
கண்ணனுங் கடிகமழ் தாமரைமேல்
அண்ணலும் அளப்பரி தாயவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை யரனே. 9

பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்
அத்தாவுன் அடியலால் அரற்றாதென்நாப்
புத்தருஞ் சமணரும் புறனுரைக்கப்
பத்தர்கட் கருள்செய்து பயின்றவனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை[11] யரனே. 10

அலைபுனல் ஆவடு துறையமர்ந்த
இலைநுனை வேற்படை யெம்இறையை
நலம்மிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை[12] யருந்தமிழ் மாலைவல்லார்

---

[10] ஒப்புடையொருவன் - மன்மதன். [11] ஆவடுதுறை - பிறவி தீர்ந்து பசுத் தன்மை நீங்க வேண்டுவோர் அடையுமிடம். இஃது அநாதி முத்தித் தலம், கோமுத்திபுரம் நவகோடி சித்தவாசபுரம் முதலிய பல பெயர்களைக் கொண்டது. [12] விலையுடை - பொருள் பெறுங் குறிப்பு.

வினையாயினநீங் கிப்போய் விண்ணவர் வியனுலகம்
நிலையாகமுன் னேறுவர்நிலமிசை நிலையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மாசிலாமணியீசர், செம்பொற்றியாகர்;
தேவி—ஒப்பிலாமுலையம்மை.

---

## 27. திருத்துருத்தி *

திருவிராகம். பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வரைத்தலைப்[1] பசும்பொனோ டருங்கலன்[2]கள் உந்திவந்
திரைத்தலைச் சுமந்துகொண் டெறிந்திலங்கு காவிரிக்
கரைத்தலைத் துருத்திபுக் கிருப்பதே கருத்தினாய்
உரைத்தலைப் பொலிந்துனக் குணர்த்துமாறு வல்லமே. 1

அடுத்தடுத்த கத்தியோடு வன்னிகொன்றை கூவிளம்
தொடுத்துடன் சடைப்பெய்தாய் துருத்தியாயொர் காலனைக்
கடுத்தடிப் புறத்தினா னிறத்[3]துதைத்த காரணம்
எடுத்தெடுத் துரைக்குமாறு வல்லமாகின் நல்லமே. 2

கங்குல்கொண்ட திங்களோடு கங்கைதங்கு செஞ்சடைச்
சங்கிலங்கு வெண்குழை சரிந்திலங்கு காதினாய்
பொங்கிலங்கு பூணநூல் உருத்திரா துருத்திபுக்
கெங்குநின் இடங்களா அடங்கிவாழ்வ தென்கொலோ. 3

கருத்தினாலோர் காணியில் விருத்தி[4] யில்லை தொண்டர்தம்
அருத்தியால்தம் மல்லல்சொல்லி ஐயமேற்ப தன்றியும்
ஒருத்திபால் பொருத்திவைத் துடம்புவிட்டி யோகியாய்
இருத்தி[5] நீ துருத்திபுக் கிதென்னமாயம் என்பதே. 4

துறக்குமா சொலப்படாய் துருத்தியாய் திருந்தடி
மறக்குமா றிலாதஎன்னை மையல்செய்திம் மண்ணின்மேல்

---

* 'குத்தாலம்' என வழங்கப்படும். [1] வரைத்தலை - காவிரி உற்பத்தியாகும் சையமலை. [2] டொருங்கலன் என்றும் பாடம். [3] நிறம் - மார்பு [4] காணியில் விருத்தி-உழவுத் தொழில். [5] யோகியாய் இருத்தல் - துருத்தியில் பிரமசாரியாய் வேதமோதுதல்.

பிறக்குமாறு காட்டினாய் பிணிப்படும் உடம்புவிட்
டிறக்குமாறு காட்டினாய்க் கிழுக்குகின்ற தென்னையே.[6] 5
வெயிற்கெதிர்ந் திடங்கொடா தகங்குளிர்ந்த பைம்பொழில்
துயிற்கெதிர்ந்த புள்ளினங்கள் மல்குதண் துருத்தியாய்
மயிற்கெதிர்ந் தணங்குசாயல் மாதொர்பாக மாகமூ
எயிற்கெதிர்ந் தொரம்பினால் எரித்தவில்லி யல்லையே. 6
கணிச்சி[7] யம்ப டைச்செல்வா கழிந்தவர்க் கொழிந்தசீர்
துணிச்சிரக் கிரந்தையாய் கரந்தையாய் துருத்தியாய்
அணிப்படுந் தனிப்பிறைப் பனிக்கதிர்க் கவாவுநல்
மணிப்படும்பை நாகம்நீ மகிழ்ந்தஅண்ணல் அல்லையே. 7
சுடப்பொடிந் துடம்பிழந் தநங்கனாய மன்மதன்
இடர்ப்படக் கடந்திடந் துருத்தியாக எண்ணினாய்
கடற்படை யுடையஅக் கடல்இலங்கை மன்னனை
அடற்பட அடுக்கலில் அடர்த்தஅண்ணல் அல்லையே. 8
களங்குளிர்ந் திலங்குபோது காதலானும் மாலுமாய்
வளங்கிளம்பொ னங்கழல் வணங்கிவந்து காண்கிலார்
துளங்கிளம்பி றைச்செனித் துருத்தியாய் திருந்தடி
உளங்குளிர்ந்த போதெலாம் உகந்துகந் துரைப்பனே. 9
புத்தர்தத் துவமிலாச் சமணுரைத்த பொய்தனை
உத்தம மெனக்கொளா துகந்தெழுந்து வண்டினம்
துத்த[8] நின்று பண்செயுஞ் சூழ்பொழில் துருத்தியெம்
பித்தர்பித்த னைத்தொழப் பிறப்பறுத்தல்[9] பெற்றியே. 10
கற்றுமுற்றி னார்தொழுங் கழுமலத் தருந்தமிழ்
சுற்றுமுற்று மாயினான்[10] அவன்பகர்ந்த சொற்களால்
பெற்றமொன் றுயர்த்தவன் பெருந்துருத்தி பேணவே
குற்றமுற்று மின்மையிற் குணங்கள்வந்து கூடுமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—உத்தரவேதீசுவரர்; தேவி—மிருதுமுகிழாம்பிகை.

---

[6] இச்செய்யுள் சம்பந்தரின் முன்னை நிலையினைக் கூறும் அகச்சான்று. [7] கணிச்சி - மழு. [8] துத்தம் - எழிசையினொன்று. [9] பிறப்பறுதல் என்றும் பாடம். [10] தமிழ் மாயினன் - தமிழாகரன்.

# 28. திருஅழுந்தூர்*

*பண் - இந்தளம்*** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தொழுமா றுவல்லார் துயர்தீ ரநினைந்
தெழுமா றுவல்லார் இசைபாடி விம்மி
அழுமா றுவல்லார் அழுந்தை[1] மறையோர்
வழிபா டுசெய்மா மடம்[2] மன் னினையே. 1

கடலே றியநஞ் சமுதுண் டவனே
உடலே உயிரே உணர்வே யெழிலே
அடலே றுடையாய் அழுந்தை மறையோர்
விடலே தொழமா மடம்மே வினையே. 2

கழிகா ட[3] லனே கனலா டலினாய்
பழிபா டிலனே யவையே பயிலும்
அழிபா டி[4] லராய் அழுந்தை மறையோர்
வழிபா டுசெய்மா மடம்மன் னினையே. 3

வானே மலையே யெனமன் னுயிரே
தானே தொழுவார் தொழுதாள் மணியே
ஆனே சிவனே அழுந்தை யவரெம்
மானே யெனமா மடம்மன் னினையே. 4

அலையார் புனல்சூழ் அழுந்தைப் பெருமான்
நிலையார் மறியும் நிறைவெண் மழுவும்
இலையார் படையும் மிவையேந் துசெல்வ[5]
நிலையா வதுகொள் கெனநீ நினையே. 5

---

* 'தேரழுந்தூர்' என வழங்கப்படும்; அகத்தியர் இறைவனைப் பூசித்து இருந்ததனை அறியாது 'ஊர்த்துவரதன்' என்னும் அரசன் ஆகாயத்தில் செலுத்திய தேர் செல்லாது பூமியில்வந்து அழுந்தியதால் இப்பெயர் பெற்றது. ** இப்பதிகம் திருவழுந்தூர் மறையவரின் பெருமையினைக் குறிப்பிடுகின்றது. [1] அழுந்தை - அழுந்தூர்: மரூஉப்பெயர். [2] மாமடம் - பெருங்கோயில்; மாடக்கோயில். [3] கழிகாடு-சுடுகாடு; சங்கரிக்கப்பட்ட இடம். [4] அழிபாடு- துன்பம். [5] இவை ஏந்து செல்வம் - இவற்றை ஏந்திய சிவனது தன்மை பெறும் முத்திச் செல்வம். செல்வா, செல்வன் என்றும் பாடம்.

நறவார் தலையின் நயவா வுலகில்
பிறவா தவனே பிணியில் லவனே
அறையார் கழலாய் அழுந்தை மறையோர்
மறவா தெழமா மடம்மன் னினையே. 6

தடுமாறு வல்லாய் தலைவா மதியம்
சுடுமா றுவல்லாய் சுடரார் சடையில்
அடுமா றுவல்லாய் அழுந்தை மறையோர்
நெடுமா நகர்கை தொழநின் றனையே. 7

பெரியாய் சிறியாய் [6] பிறையாய் மிடறுங்
கரியாய் கரிகா டுயர்வீ டுடையாய்
அரியாய் எளியாய் [6] அழுந்தை மறையோர்
வெரியார் தொழமா மடம்மே வினையே. [6] 8

மணிநீள் முடியான் மலையை அரக்கன்
தணியா தெடுத்தான் [7] உடலம் நெரித்த
அணியார் விரலாய் அழுந்தை மறையோர்
பணிமா [8] மடம்மன் னியிருந் தனையே. 9

முடியார் சடையாய் முனநா ளிருவர்
நெடியான் மலரான் நிகழ்வா லிவர்கள்
அடிமே லறியார் அழுந்தை மறையோர்
படியால் [9] தொழமா மடம்பற் றினையே. 10

அருஞா னம்வல்லார் அழுந்தை மறையோர்
பெருஞா னமுடைப் பெருமா னவனைத்
திருஞா னசம்பந் தனசெந் தமிழ்கள்
உருஞா ன [10] முண்டாம் உணர்ந்தார் தமக்கே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—வேதபுரீசுரர்; தேவி—சௌந்தராம்பிகை.

---

[6] இச்செய்யுள் எல்லாம் வல்ல தன்மையினைக் குறிக்கும்; பெரியாய் சிறியாய்; அரியாய் எளியாய் - எல்லாம் வல்ல தன்மை. [7] எடுத்தான் - எடுத்தானை. [8] மணிமா என்றும் பாடம். [9] படியால் - விதிப்படி. [10] உருஞானம் - சிவனுருவாம் ஞானம்.

## 29. திருமயிலாடுதுறை*

### பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கரவின் றிநன்மா மலர்கொண்டு[1]
இரவும் பகலுந் தொழுவார்கள்
சிரமொன் றியசெஞ் சடையான்வாழ்
வரமா மயிலா டுதுறையே. 1

உரவெங் கரியின் உரிபோர்த்த
பரமன் உறையும் பதியென்பர்
குரவஞ் சுரபுன் னையும்வன்னி
மருவும் மயிலா டுதுறையே. 2

ஊனத்[2] திருள்நீங் கிடவேண்டில்
ஞானப் பொருள்[3] கொண் டடிபேணும்
தேனைத் தினியா னமருஞ்சேர்
வானம் மயிலா டுதுறையே. 3

அஞ்சொண் புலனும்[4] அவைசெற்ற
மஞ்சன் மயிலா டுதுறையை
நெஞ்சொன் றிநினைந் தெழுவார்மேல்
துஞ்சும்[5] பிணியா யினதானே. 4

தணியார் மதிசெஞ் சடையான்றன்
அணியார்ந் தவருக் கருளென்றும்
பிணியா யினதீர்த் தருள்செய்யும்
மணியான்[6] மயிலா டுதுறையே. 5

தொண்ட ரிசைபா டியுங்கூடிக்
கண்டு துதிசெய் பவனூராம்
பண்டும் பலவே தியரோத
வண்டார் மயிலா டுதுறையே. 6

---

* மாயூரம்; (மாயவரம்) என வழங்கப்பெறும். [1] கரவு-மருள்; மலர்கொண்டே என்றும் பாடம். [2] ஊனம் - பிறவிக்குக் காரண மான மலம். [3] ஞானப்பொருள் - சிவஞானம். [4] ஒண்புலன் - ஒண்மை; இகழ்ச்சிக் குறிப்பு. [5] துஞ்சும் - ஒழியும். [6] மணியான் - மணிபோன்ற இயற்கை ஒளியுடையவன்.

அணங்கோ டொருபா கம்அமர்ந்து
இணங்கி யருள்செய் தவனூராம்
நுணங்கும் புரிநூ லர்கள்கூடி
வணங்கும் மயிலா டுதுறையே. 7

சிரங்[6] கை யினிலேந் தியிரந்த
பரங்கொள் பரமேட் டிவரையால்
அரங்கவ் வரக்கன் வலிசெற்ற
வரங்கொள் மயிலா டுதுறையே. 8

ஞாலத் தைநுகர்ந் தவன்தானும்
கோலத் தயனும் அறியாத
சீலத் தவனூர் சிலர்கூடி
மாலைத் தீர்மயிலா டுதுறையே. 9

நின்றுண் சமணும் நெடுந்தேரர்
ஒன்றும் அறியா மையுயர்ந்த
வென்றி யருளா னவனூராம்
மன்றன் மயிலா டுதுறையே. 10

நயர்கா ழியுள்ஞா னசம்பந்தன்
மயல்தீர் மயிலா டுதுறைமேல்
செயலா லுரைசெய் தனபத்தும்
உயர்வாம் இவையுற் றுணர்வார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஏனவெயி றாடரவொ டென்புவரி யாமை[1]யிவை பூண்டிளைஞராய்[2]க், கானவரி நீடுழுவை யதளுடைய படர்சடையர் காணியெனலாம், ஆனபுகழ் வேதியர்கள் ஆகுதியின் மீதுபுகை போகியழகார், வானமுறு சோலைமிசை மாசுபட மூசுமயி லாடுதுறையே. 1

---

[6] சிரம் - மண்டைஓடு. [1] ஏன எயிறு - திருமாலாகிய வெள்ளைப் பன்றியின் கொம்பு. ஆமை - ஆமை முதுகோடு. [2] இளைஞராய்க் - அழகுக் குறிப்பு.

அந்தண்மதி செஞ்சடையர் அங்கணெழில் கொன்றைபொ டணிந்தழகராம், எந்தம்அடி கட்கினிய தானமது வேண்டில்எழி லார்பதியதாம், கந்தமலி சந்திநொடு காரகிலும் வாரிவரு காவிரி யுளால், வந்ததிரை யுந்தியெதிர் மந்திமலர் சிந்துமயி லாடு துறையே. 2

தோளின்மிசை வரியரவம் நஞ்சழல வீக்கிமிகு நோக்கரிய ராய்,[3] மூளைபடு[4] வெண்டலையி லுண்டுமுது காடுறையும் முதல் வரிடமாம், பாளைபடு பைங்கமுகு செங்கனி யுதிர்த்திட நிரந்து கமழ்பூ,[5] வாளைகுதி கொள்ளமடல் விரியமணம் நாறுமயி லாடு துறையே. 3

ஏதமிலர் அரியமறை மலையர்மக ளாகிய இலங்குநுதலொண், பேதைதட மார்பதிட மாகவுறை கின்றபெரு மானதிடமாம், காதல்மிகு கவ்வை[6] யொடு மவ்வலவை கூடிவரு காவிரியுளால், மாதர்மறி திரைகள்புக வெறியவெறி கமழுமயி லாடுதுறையே. 4

பூவிரி கதுப்பி[7] ன்மட மங்கையர கந்தொறும் நடந்துபலி தேர், பாவிரி யிசைக்குரிய பாடல்பயி லும்பரமர் பழமை[8] யென லாம், காவிரி நுரைத்திரு கரைக்குமணி சிந்தவரி வண்டுகவர, மாவிரி மதுக்கிழிய மந்திகுதி கொள்ளுமயி லாடுதுறையே. 5

கடந்[9] திகழ் கருங்களி றுரித்துமையும் அஞ்சமிக நோக்கரிய ராய், விடந்திகழும் மூவிலைநல் வேலுடைய வேதியர் விரும்புமிட மாம், தொடர்ந்தொளிர் கிடந்ததொரு சோதிமிகு தொண்டை யெழில் கொண்டதுவர்வாய், மடந்தையர் குடைந்தபுனல் வாசம் மிக நாறுமயி லாடுதுறையே. 6

அவ்வதிசை யாரும்அடி யாருமுள ராகஅருள் செய்தவர் கள்மேல், எவ்வ[10] மற வைகலும் இரங்கியெரி யாடும்எம தீசனிட மாம், கவ்வையொடு காவிரிக லந்துவரு தென்கரை நிரந்துகமழ்பூ, மவ்வலொடு மாதவி[11] மயங்கிமணம் நாறுமயி லாடுதுறையே. 7

---

[3] நோக்கரியராய் - நோக்க அரியவராய். [4] மூளைபடு - மூளை வற்றிய. [5] பூ - நீர்ப்பூக்கள். [6] கவ்வை - ஓசை. [7] கதுப்பு - தலை மயிர் [8] பழமை - பழைய இருப்பிடம். [9] கடம் - மதம். [10] எவ்வம் - குற்றம்; துன்பம்; பிறவித் துன்பங் குறித்தது. [11] மவ்வல், மாதவி - முல்லை வகைகள்.

இலங்கைநகர் மன்னன்முடி யொருபதினொ டிருபதுதோள் நெரியவிரலால், விலங்கலி லடர்த்தருள் புரிந்தவ ரிருந்தவிடம் வினவுதிர்களேல், கலங்கல்நுரை யுந்தியெதிர் வந்தகயம் மூழ்கிமலர் கொண்டு மகிழா, மலங்கிவரு காவிரிநி ரந்துபொழி கின்றமயி லாடுதுறையே. 8

ஒண்திறலின் நான்முகனும் மாலுமிக நேடியுண ராதவகையால், அண்டமுற அங்கியுரு வாகிமிக நீண்டஅர னுறைதிடமாம், கெண்டையிரை கொண்டுகெளி றுருடனி ருந்துகிளர் வாயறுதல்சேர், வண்டல்மணல் கொண்டிமட நாரைவிளை யாடுமயிலாடுதுறையே. 9

மிண்டுதிறல் அமணரொடு சாக்கியரும் அலர்தூற்ற மிக்கதிறலோன், இண்டைகுடி கொண்டசடை யெங்கள்பெரு மானதிட மென்பரெழிலார், தெண்டிரைப ரந்தொழுகு காவிரிய தென்கரை நிரந்துகமழ்பூ, வண்டவை திளைக்கமது வந்தொழுகு சோலைமயி லாடுதுறையே. 10

நிணந்தரும யானநில வானமதி யாததொரு சூலமொடுபேய்க், கணந்தொழுக பாலிகழ லேத்திமிக வாய்த்ததொரு காதன்மையினால், மணந்தண்மலி காழிமறை ஞானசம் பந்தன்மயிலாடுதுறையைப், புணர்ந்ததமிழ் பத்துமிசை யாலுரைசெய் வார்பெறுவர் பொன்னுலகமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மயூரநாதேசுவரர் ;
தேவி—அபயாம்பிகை ; அஞ்சொலுயகி.

---

## 30. திருவிளநகர்

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஒளிரிளம்பிறை சென்னிமேல் உடையர்கோவண ஆடையர்
குளிரிளம்மழை தவழ்பொழிற் கோலநீர்மல்கு காவிரி
நளிரிளம்புனல்[1] வார்துறை நங்கைகங்கையை நண்ணினார்
மிளிரிளம்பொறி அரவினார் மேயதுவிள நகரதே. 1

---

[1] இளம்புனல் - பெருக்கெடுக்காது தெளிந்தோடும் நீர்.

அக்கரவ்வணி கலனென அதனொடார்த்ததோர் ஆமைபூண்
டுக்கவர்சுடு நீறணிந் தொளிமல்குபுனற் காவிரிப்
புக்கவர்[2] துயர் கெடுகெனப் பூசுவெண்பொடி மேவிய
மிக்கவர்வழி பாடுசெய் விளநகரவர் மேயதே. 2

வாளிசேரடங் கார்மதி தொலையநூறிய வம்பின்வேய்த்
தோளிபாகம் அமர்ந்தவர் உயர்ந்ததொல்கடல் நஞ்சுடன்
காளமல்கிய கண்டத்தர் கதிர்விரிசுடர் முடியினர்
மீளியேறுகந் தேறினர் மேயதுவள நகரதே. 3

கால்விளங்கெரி கழலினார் கையிலங்கிய வேலினார்
நூல்விளங்கிய மார்பினார் நோயிலார்பிறப் பும்மிலார்
மால்விளங்கொளி மல்கிய மாசிலாமணி மிடறினார்
மேல்விளங்குவெண் பிறையினார் மேயதுவிள நகரதே. 4

பன்னினார்மறை பாடினார் பாயசீர்ப்பழங் காவிரித்
துன்னுதண்டுறை முன்னினார்[3] தூநெறிபெறு வாரெனச்
சென்னிதிங்களைப் பொங்கராக் கங்கையோடுடன் சேர்த்தினார்
மின்னுபொன்புரி நூலினார் மேயதுவிள நகரதே. 5

தேவரும்அம ரர்களுந் திசைகள்மேலுள தெய்வமும்
யாவரும்அறி யாததோர் அமைதியால்தழ லுருவினார்
மூவரும்இவ ரென்னவும் முதல்வரும்இவ ரென்னவும்
மேவரும்பொரு ளாயினார் மேயதுவிள நகரதே. 6

சொற்றரும்மறை பாடினார் சுடர்விடுஞ்சடை முடியினார்
கற்றருவ்வடங் கையினார் காவிரித்துறை காட்டினார்
மற்றருந்திரள் தோளினார் மாசில்வெண்பொடிப் பூசினார்
விற்றரும்மணி மிடறினார் மேயதுவிள நகரதே. 7

படர்தருஞ்சடை முடியினார் பைங்கழல்அடி பரவுவார்
அடர்தரும்பிணி[4] கெடுகென அருளுவார்அர வரையினார்

---

[2] காவிரிப்புக்கவர் - காவிரித்துறை படிந்தாடினோர். [3] பழங் காவிரி......முன்னினார் - இப்பதியின் இறைவரது பெயர்; துறை காட்டும் வள்ளல் என்பதாம்; திருநந்தவனப்பணிசெய்த அருள் வித்தர் என்ற அந்தணர் ஆற்றுவெள்ளத்துள் அகப்பட்டுச் சிந்தித்த போது இறைவர் துறைகாட்டக் கரையேறினர் என்பது வரலாறு.
[4] அடர்தரும்பிணி - பிறவிநோய்.

விடர்தரும்மணி மிடறினர் மின்னுபொன்புரி நூலினர்
மிடறரும்படை மழுவினர் மேயதுவிள நகரதே. 8

கையிலங்கிய வேலினர் தோலினர்கரி காலினர்
பையிலங்கர வல்குலாள் பாகமாகிய பரமனர்
மையிலங்கொளி மல்கிய மாசிலாமணி மிடறினர்
மெய்யிலங்குவெண் ணீற்றினர் மேயதுவிள நகரதே. 9

உள்ளதன்றனைக் காண்பன்கீ ழென்றமாமணி வண்ணனும்
உள்ளதன்றனைக் காண்பன்மே லென்றமாமலர் அண்ணலும்
உள்ளதன்றனைக் கண்டிலார் ஒளியார்தருஞ்சடை முடியின்மேல்
உள்ளதன்றனைக் கண்டிலா வொளியார்விளநகர் மேயதே. 10

மென்சிறைவண் டியாழ்முரல் விளநகர்த்துறை மேவிய
நன்பிறைநுதல் அண்ணலைச் சண்பைஞானசம் பந்தன்சீர்
இன்புறுந்தமி ழாற்சொன்ன ஏத்துவார்வினை நீங்கிப்போய்த்
துன்புறுந்துய ரம்மிலாத் தூநெறிபெறு வார்களே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—துறைகாட்டும் வள்ளல்; தேவி—வேயுறுதோளியம்மை.

---

## 31. திருப்பறியலூர்வீரட்டம்*

பண் - மேகராகக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கருத்தன் கடவுள் கனலேந் தியாடும்
நிருத்தன் சடைமேல் நிரம்பா மதியன்
திருத்த முடையார் திருப்பறி யலூ[1]ரில்
விருத்தன் எனத்தகும் வீரட்டத்[2] தானே. 1

மருந்தன் அமுதன்[3] மயானத்துள் மைந்தன்
பெருந்தண் புனற்சென்னி வைத்த பெருமான்

---

* 'பறசலூர்' என வழங்கப்பெறும். தக்கயாக சங்காரமாகிய வீரம் நிகழ்ந்த பதி; அட்ட வீரட்டத் தொன்று; தக்கயாகத்தில் உடனிருந்த தேவர்களது பாவங்களைத் தண்டனையினல் பறித்த (போக்கிய) காரணத்தால் இப்பெயர் பெற்றது. [1] பறியல் - ஊர். [2] வீரட்டம் - கோயிலின் பெயர். [3] மருந்தன் - பாசம் நீக்குபவன்; அமுதன் - சிவப்பேறு அளிப்பவன்.

திருந்து மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்த மலர்ச்சோலை வீரட்டத் தானே. 2

குளிர்ந்தார் சடையன் கொடுஞ்சிலை விற்காமன்
விளிந்தான் அடங்க வீந்தெய்தச் செற்றான்
தெளிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
மிளிர்ந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. 3

பிறப்பாதி யில்லான் பிறப்பார் பிறப்புச்
செறப்பா[4] தி யந்தஞ் செலச்செய்யுந் தேசன்[5]
சிறப்பா டுடையார் திருப்பறி யலூரில்
விறற்பா ரிடஞ்சூழ வீரட்டத் தானே. 4

கரிந்தார் இடுகாட்டில் ஆடுங்க பாலி
புரிந்தார் படுதம்[6] புறங்காட் டிலாடும்
தெரிந்தார் மறையோர் திருப்பறி யலூரில்
விரிந்தார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. 5

அரவுற்ற நாணா அனல்அம்ப தாகச்
செருவுற் றவர்புரந் தீயெழச் செற்றான்
தெருவிற் கொடிசூழ் திருப்பறி யலூரில்
வெருவுற் றவர்தொழும் வீரட்டத் தானே. 6

நரையார் விடையான் நலங்கொள் பெருமான்
அரையார் அரவம் அழகா அசைத்தான்
திரையார் புனல்சூழ் திருப்பறி யலூரில்
விரையார் மலர்ச்சோலை வீரட்டத் தானே. 7

வளைக்கும் எயிற்றின் அரக்கன் வரைக்கீழ்
இளைக்கும் படிதா னிருந்தேழை யன்னம்
திளைக்கும் படுகர்த் திருப்பறி யலூரில்
விளைக்கும் வயல்சூழ்ந்த வீரட்டத் தானே. 8

விளங்கொள் மலர்மேல் அயன்ஓத வண்ணன்
துளங்கும் மனத்தார் தொழத்தழ லாய்நின்றான்
இளங்கோம் பனாளோ[7] டிணைந்தும் பிணைந்தும்
விளங்குந் திருப்பறியல் வீரட்டத் தானே. 9

---

[4] செறப்பு-இறப்பு. [5] தேசன் - ஞான ஒளியுடையவன். [6] படுதம்-கூத்துவகை. [7] இளங் கொம்பனாள் - தல அம்மையின் பெயர்.

சடையன் பிறையன் சமண்சாக் கியரோ
டடையன் பிலாதான் அடியார் பெருமான்
உடையன் புலியின் உரிதோல் அரைமேல்
விடையன் திருப்பறியல் வீரட்டத் தானே. 10

நறுநீ ரு[8] குங்காழி ஞானசம் பந்தன்
வெறுநீர்த்[9] திருப்பறியல் வீரட்டத் தானைப்
பொறிநீ டரவன் புனைபாடல் வல்லார்க்
கறுநீ டவலம் அறும்பிறப் புத்தானே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வீரட்டேசுவரர் ; தேவி—இளங்கொம்பனையாள்.

---

## 32. திருச்செம்பொன்பள்ளி*

பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மருவார் குழலி[1] மாதோர் பாகமாய்த்
திருவார் செம்பொன் பள்ளி மேவிய
கருவார் கண்டத் தீசன் கழல்களை
மருவா தவர்மேல் மன்னும் பாவமே. 1

வாரார் கொங்கை மாதோர் பாகமாய்ச்
சீரார் செம்பொன் பள்ளி மேவிய
ஏரார் புரிபுன் சடையெம் ஈசனைச்
சேரா தவர்மேற் சேரும் வினைகளே. 2

வரையார் சந்தோ டகிலும் வருபொன்னித்
திரையார் செம்பொன் பள்ளி மேவிய
நரையார் விடையொன் றூரும் நம்பனை
உரையா தவர்மே லொழியா வூனமே. 3

மழுவா ளேந்தி மாதோர் பாகமாய்ச்
செழுவார் செம்பொன் பள்ளி மேவிய

---

[8] நறுநீர் - புதுமைநீர். [9] வெறுநீர் - அகந்தை கொண்ட தக்கனை அழிக்கும் தன்மை. * 'செம்பொனார் கோயில்' என வழங்கப்பெறும். [1] குழலி-கூந்தலையுடையவள்; மருவார் குழலி - தலஅம்மையின் பெயர்.

எழிலார் புரிபுன் சடையெம் இறைவனைத்
தொழுவார் தம்மேல் துயர மில்லையே. 4

மலையான் மகளோ டுடனாய் மதிலெய்த
சிலையார் செம்பொன் பள்ளி யானையே
இலையார் மலர்[2] கொண் டெல்லி நண்பகல்
நிலையா வணங்க நில்லா வினைகளே. 5

அறையார் புனலோ டகிலும் வருபொன்னிச்
சிறையார் செம்பொன் பள்ளி மேவிய
கறையார் கண்டத் தீசன் கழல்களை
நிறையால் வணங்க நில்லா வினைகளே. 6

பையார் அரவே ரல்கு லாளொடும்
செய்யார் செம்பொன் பள்ளி மேவிய
கையார் சூல மேந்து கடவுளை[3]
மெய்யால் வணங்க[4] மேவா வினைகளே. 7

வானார் திங்கள் வளர்புன் சடைவைத்துத்
தேனார் செம்பொன் பள்ளி மேவிய
ஊனார் தலையிற் பலிகொண் டுழல்வாழ்க்கை
ஆனான் கழலே அடைந்து வாழ்மினே. 8

காரார் வண்ணன் கனகம் அனையானும்
தேரார் செம்பொன் பள்ளி மேவிய
நீரார் நிமிர்புன் சடையெம் நிமலனை
ஓரா தவர்மே லொழியா வூனமே. 9

மாசா ருடம்பர் மண்டைத் தேரரும்
பேசா வண்ணம் பேசித் திரியவே
தேசார் செம்பொன் பள்ளி மேவிய
ஈசா என்ன நில்லா இடர்களே. 10

நறவார் புகலி ஞான சம்பந்தன்
செறுவார் செம்பொன் பள்ளி மேயானைப்

---

[2] இலையார் மலர் - இலையும் நிறைந்த மலரும்; இலை - தோடு - இதழ் என்றலுமாம். [3] கடவுள் - எல்லாம் கடந்தவர் - அப்பாற்பட்டவர் - பரம்பொருள். [4] மெய்யால் வணங்க - உண்மையான அன்போடு வணங்க. மெய் - உடலுமாம்.

பெறுமா றிசையாற் பாட லிவைப்பத்தும்
உறுமா சொல்ல வோங்கி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சொர்ணபுரீசுவரர்; தேவி—மருவார்குழலியம்மை.

## 33. திருநனிபள்ளி*

**பண் - பியந்தைக்காந்தாரம்**** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காரைகள் கூகைமுல்லை களவாகை யீகைபடர்தொ டரி கள்ளிகவினிச், சூரைகள் பம்மிவிம்மு சுடுகா ட[1]மர்ந்த சிவன் மேய சோலை நகர்தான், தேரைக ளாரைசாய மிதிகொள்ள வாளை குதிகொள்ள வள்ளை துவள, நாரைக ளாரல்வாரி வயன் மேதி வைகும் நனிபள்ளி போலும் நமர்காள். 1

சடையிடை புக்கொடுங்கி யுளதங்கு வெள்ளம் வளர்திங்கள் கண்ணி அயலே, இடையிடை வைத்ததொக்கு மலர்தொத்து மாலை யிறைவன் இடங்கொள் பதிதான், மடையிடை வாளைபாய முகிழ்வாய் நெரிந்து மணநாறு நீலம் மலரும், நடையுடை யன்னம்வைகு புனலம் படப்பை நனிபள்ளி போலும் நமர்காள். 2

பெறுமலர் கொண்டுதொண்டர் வழிபாடு செய்யல் ஒழிபாடிலாத பெருமான், கறுமலர் கண்டமாக விடமுண்ட காளை யிடமாய காதல் நகர்தான், வெறுமலர்தொட்டுவிட்ட விசைபோன கொம்பின் விடுபோதலர்ந்த விரைசூழ், நறுமல ர[2]ல்லிபுல்லி யொலிவண் டுறங்கு நனிபள்ளி போலும் நமர்காள். 3

குளிர்தரு கங்கைதங்கு சடைமா டிலங்கு தலைமாலை யோடு குலவி, ஒளிர்தரு திங்கள்சூடி உமைபாக மாக வுடையா னுகந்த நகர்தான், குளிர்தரு கொம்மலோடு குயில்பாடல் கேட்ட பெடை

* 'புஞ்சை' என வழங்கப்பெறும். ** இப்பதிகம் பாலையை நெய்தல் நிலமாக்கி, அதனையே கானமும் வயலுமாக்கியது; "பாலை நெய்தல் பாடியதும்" என்பது திருக்களிற்றுப்படியார். [1]இவ்வடிகள் பாலைநிலத்தையும் அதன் கருப்பொருள்களையும் குறிப்பன. [2] நறுமலர் - நீலம்.

வண்டு தானும் முரல, நளிர்தரு சோலைமாலை[3] நரைகுருகு வைகு நனிபள்ளி போலும் நமர்காள். 4

தோடொரு காதனாகி யொருகா திலங்கு சுரிசங்கு நின்று புரளக், காடிட மாகநின்று கனலாடும் எந்தை யிடமாய காதல் நகர்தான், வீடுடன் எய்துவார்கள் விதி[4] யென்று சென்று வெறி நீர்தெளிப்ப விரலால், நாடுடனாடுசெம்மை யொலிவெள்ள மாரு நனிபள்ளி போலும் நமர்காள். 5

மேகமொ டோடுதிங்கள் மலரா அணிந்து மலையான் மடந்தை மணிபொன், ஆகமொர் பாகமாக அனலாடும் எந்தை பெருமான் அமர்ந்த நகர்தான், ஊகமொ டாடுமந்தி யுகளுஞ் சிலம்ப அகிலுந்தி யொண்பொன் இடறி, நாகமொ டாரம்வாரு புனல்வந் தலைக்கும் நனிபள்ளி போலும் நமர்காள். 6

தகைமலி தண்டுசூலம் அனலுமிழு நாகங் கொடுகொட்டி வீணைமுரல, வகைமலி வன்னிகொன்றை மதமத்தம் வைத்த பெருமான் உகந்த நகர்தான், புகைமலி கந்தமாலை புனைவார்கள் பூசல்[5] பணிவார்கள் பாடல் பெருகி, நகைமலி முத்திலங்கு மணல் சூழ் கிடக்கை நனிபள்ளி போலும் நமர்காள். 7

வலம்மிகு வாளன்வேலன் வளைவா ளெயிற்று மதியா அரக்கன் வலியோ, டுல[6] மிகு தோள்கள்ஒல்க விரலா லடர்த்த பெருமான் உகந்த நகர்தான், நிலமிகு கீழுமேலும் நிகராது மில்லை யெனநின்ற நீதியதனை, நலம்மிகு தொண்டர்நாளும் அடிபரவல் செய்யும் நனிபள்ளி போலும் நமர்காள். 8

நிறவுரு வொன்றுதோன்றி யெரியொன்றி நின்ற தொருநீர்மை சீர்மை நினையார், அறவுரு வேதநாவன் அயனோடு மாலும் அறியாத அண்ணல் நகர்தான், புறவிரி முல்லைமௌவல் குளிர்பிண்டி புன்னை புனைகொன்றை துன்று பொதுளி, நறவிரி போதுதாது புதுவாசம் நாறும் நனிபள்ளி போலும் நமர்காள். 9

அனமிகு செல்குசோறு கொணர்கென்று கையில் இடவுண்டு பட்ட அமணும், மனமிகு கஞ்சிமண்டை யதிலுண்டு தொண்டர் குணமின்றி நின்ற:வடிவும், வினைமிகு வேதநான்கும் விரிவித்த

---

[3] சோலைமாலை - சோலையிடத்து மாலைப்பொழுதில். [4] விதி - நூல்விதி. [5] பூசல் - போரொலி. [6] உலம் - வல்லமை.

நாவின் விடையா னுகந்த நகர்தான், நனமிகு தொண்டர்நாளும் அடிபரவல் செய்யும் நனிபள்ளி போலும் நமர்காள். 10

கடல்வரை யோதம்மல்கு கழிகானல் பானல் கமழ்காழி யென்று கருதப், படுபொரு ளாறுநாலும் உளதாக வைத்த பதி யான ஞான முனிவன், இடுபறை யொன்றஅத்தர் பியன்மே லிருந்தி னிசையாலுரைத்த பனுவல்,[7] நடுவிரு ளாடுமெந்தை நனிபள்ளி யுள்க வினைகெடுதல் ஆணை நமதே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—நற்றுணையப்பர்; தேவி—மலையான்மடந்தை.

---

## 34. திருவலம்புரம் *

**பண் - பழம்பஞ்சுரம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கொடியுடை மும்மதி லூடுருவக் குனிவெஞ்சி லைதாங்கி, இடிபட எய்த அமரர்பிரான் அடியார் இசைந்தே[1]த்தத், துடி யிடை யாளையொர் பாகமாகத் துதைந்தா[2] ரிடம்போலும், வடி வுடை மேதி வயல்படியும் வலம்புர நன்னகரே. 1

கோத்தகல் லாடை[3]யுங் கோவணமுங் கொடுகொட்டி கொண்டொருகைத், தேய்த்தன் றநங்கனைத் தேசழித்துத் திசை யார் தொழுதேத்தக், காய்த்தகல் லாலதன் கீழிருந்த கடவுள் இடம்போலும், வாய்த்தமுத் தீத்தொழில் நான்மறையோர் வலம் புர நன்னகரே. 2

நொய்யதோர் மான்மறி கைவிரலின் நுனைமேல் நிலையாக்கி, மெய்யெரி மேனிவெண் ணீறுபூசி விரிபுன் சடைதாழ, மையிருஞ் சோலை மணங்கமழ இருந்தா ரிடம்போலும், வைகலும் மாமுழ வம்மதிரும் வலம்புர நன்னகரே. 3

---

[7] இவ்வடி சம்பந்தர் தம் தந்தையார் தோள்மீது இருந்து பாடினார் என்பதைக் குறிக்கும் அகச்சான்று. * 'மேலப் பெரும் பள்ளம்' என வழங்கப்படும்; சிவலிங்கப்பெருமான் திருமுடியில் பெரும் பள்ளம் உண்டு. அதனால் இப்பெயர் பெற்றது என்பர்.
[1] இசைந்து - மன மொன்றி. [2] துதைதல் - பிரிவின்றிக் கூடுதல்.
[3] கோத்த கல்லாடை - காவிக்கல் தோய்ந்த உடை.

ஊனம ராக்கை யுடம்புதன்னை யுணரிற் பொருளன்[4] றுதேனமர் கொன்றையி னடிக்கே சிறுகாலை[5] யேத்துமினோ, ஆனமர் ஐந்துங்கொண் டாட்டுகந்த அடிகள் இடம்போலும், வானவர் நாடொறும் வந்திறைஞ்சும் வலம்புர நன்னகரே. 4

செற்றெறியுந் திரையார் கலுழி[6]ச் செழுநீர்கிளர் செஞ் சடைமேல், அற்றறியா தனலாடு நட்ட மணியார் தடங்கண்ணி, பெற்றறிவார் எருதேற வல்ல பெருமான் இடம்போலும், வற்றறி யாப் புனல்வாய்ப் புடைய வலம்புர நன்னகரே. 5

உண்ணவண் ணத்தொளி நஞ்சமுண்டு வுமையோ டுடனாகிச், சுண்ணவண் ணப்பொடி மேனிபூசிச் சுடர்ச்சோதி நின்றிலங்கப், பண்ணவண் ணத்தன[7] பாணிசெய்யப் பயின்றா ரிடம்போலும், வண்ணவண் ணப்பறை பாணியறா வலம்புர நன்னகரே. 6

புரிதரு புன்சடை பொன்தயங்கப் புரிநூல் புரண்டிலங்க, விரைதரு வேழத்தின் ஈருரிதோல் மேல்மூடி வேய்புரைதோள், அரைதரு பூந்துகில் ஆரணங்கை யமர்ந்தா ரிடம்போலும், வரை தரு தொல்புகழ் வாழ்க்கையறா வலம்புர நன்னகரே. 7

தண்டணை தோளிரு பத்தினொடுந் தலைபத் துடையானை, ஒண் டணை மாதுமை தான்நடுங்க வொருகால் விரலூன்றி, மிண்டது தீர்த்தருள் செய்யவல்ல விகிர்தர்க் கிடம்போலும், வண்டணை தன்னொடு வைகுபொழில் வலம்புர நன்னகரே. 8

தாருறு தாமரை மேலயனுந் தரணி யளந்தானும், தேர்வறி யாவகை யால்இகலித் திகைத்துத் திரிந்தேத்தப், பேர்வறி யாவகை யால்நிமிர்ந்த பெருமான் இடம்போலும், வாருறு சோலை மணங்கமழும் வலம்புர நன்னகரே. 9

காவிய நல்துவ ராடையினர் கடுநோன்பு மேல்கொள்ளும், பாவிகள் சொல்லைப் பயின்றறியாப் பழந்தொண்டர் உள்ளுருக, ஆவியுள் நின்ற[8]ருள் செய்யவல்ல அழகர் இடம்போலும், வாவி யின் நீர்வயல் வாய்ப்புடைய வலம்புர நன்னகரே. 10

---

[4] பொருள் - உறுதிப் பொருள்; நிலையற்றபொருள். [5] சிறு காலை - வைகறை. [6] கலுழி - காட்டாறு. [7] பண்ணவண்ணத்தன - பண்ணையுடைய வண்ணப் பாடல்கள். [8] ஆவியுள்நின்று - உயிர்க் குயிராய் நீங்காமல் இருந்து.

நல்லியல் நான்மறை யோர்புகலித் தமிழ்ஞான சம்பந்தன், வல்லியங்[9] தோலுடை யாடை[10] யினான் வலம்புர நன்னகரைச், சொல்லிய பாடல்கள் பத்துஞ்சொல்ல வல்லவர் தொல்வினை போய்ச், செல்வன சேவடி சென்றணுகிச் சிவலோகஞ் சேர் வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வலம்புரிநாதேசுவரர் ; தேவி—வடுவகிர்க்கண்ணி.

---

## 35. திருத்தலைச்சங்காடு

**பண் - காந்தாரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நலச்சங்க வெண்குழையுந் தோடும்பெய்தோர் நால்வேதம்
சொலச்சங்கை யில்லாதீர் சுடுகாடல்லாற் கருதாதீர்
குலைச்செங்காய்ப் பைங்கமுகின் குளிர்கொள்சோலைக் குயிலாலும்
தலைச்சங்கைக் கோயிலே கோயிலாகத் தாழ்ந்தீரே.[1] 1

துணிமல்கு கோவணமுந் தோலுங்காட்டித் தொண்டாண்டீர்
மணிமல்கு கண்டத்தீர் அண்டர்க்கெல்லாம் மாண்பானீர்
பிணிமல்கு நூல்மார்பர் பெரியோர்வாழுந் தலைச்சங்கை
அணிமல்கு கோயிலே கோயிலாக அமர்ந்தீரே. 2

சீர்கொண்ட பாடலீர் செங்கண்வெள்ளே றூர்தியீர்
நீர்கொண்டும் பூக்கொண்டு நீங்காத்தொண்டர் நின்றேத்தத்
தார்கொண்ட நூல்மார்பர் தக்கோர்வாழுந் தலைச்சங்கை
ஏர்கொண்ட கோயிலே கோயிலாக இருந்தீரே. 3

வேடஞ்சூழ் கொள்கையீர் வேண்டிநீண்ட வெண்டிங்கள்
ஓடஞ்சூழ் கங்கையும் உச்சிவைத்தீர் தலைச்சங்கைக்
கூடஞ்சூழ் மண்டபமுங் குலாயவாசற் கொடித்தோன்றும்
மாடஞ்சூழ் கோயிலே கோயிலாக மகிழ்ந்தீரே. 4

சூலஞ்சேர் கையினீர் சுண்ணவெண்ணீ றாடலீர்
நீலஞ்சேர் கண்டத்தீர் நீண்டசடைமேல் நீரேற்றீர்

---

[9] வல்லியம் - புலி. [10] உடை - கீழ் உடை ; ஆடை-மேலாடை.
[1] கோயிலாகச் சார்ந்தீரே என்றும் பாடம்.

ஆலஞ்சேர் தண்கானல் அன்னமன்னுந் தலைச்சங்கைக்
கோலஞ்சேர் கோயிலே கோயிலாகக் கொண்டீரே. 5

நிலநீரொ டாகாசம் அனல்காலாகி நின்றைந்து[2]
புலநீர்மை புறங்கண்டார் பொக்கஞ்செய்யார் போற்றோவார்
சலநீத ரல்லாதார் தக்கோர்வாழுந் தலைச்சங்கை
நலநீர கோயிலே கோயிலாக நயந்தீரே. 6

அடிபுல்கு பைங்கழல்கள் ஆர்ப்பப்பேர்ந்தோர் அனலேந்திக்
கொடிபுல்கு மென்சாயல் உமையோர் பாகங்கூடினீர்
பொடிபுல்கு நூல்மார்பர் புரிநூலாளர் தலைச்சங்கைக்
கடிபுல்கு கோயிலே கோயிலாகக் கலந்தீரே. 7

திரையார்ந்த மாகடல்சூழ் தென்இலங்கைக் கோமானை
வரையார்ந்த தோளடர விரலாலூன்றும் மாண்பினீர்
அரையார்ந்த மேகலையீர் அந்தணாளர் தலைச்சங்கை
நிரையார்ந்த கோயிலே கோயிலாக நினைந்தீரே. 8

மாயோங்கு பாம்பணைமே லானும்பைந்தா மரையானும்
போயோங்கிக் காண்கிலார் புறம்நின்றோரார் போற்றோவார்
தீ[3] யோங்கு மறையாளர் திகழுஞ்செல்வத் தலைச்சங்கைச்
சே[4] யோங்கு கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 9

அலையாரும் புனல்துறந்த அமணர்குண்டர் சாக்கியர்
தொலையாதங் கலர்தூற்றத் தோற்றங்காட்டி யாட்கொண்டீர்
தலையான நால்வேதந் தரித்தார்[5] வாழுந் தலைச்சங்கை
நிலையார்ந்த கோயிலே கோயிலாக நின்றீரே. 10

களிரும் புனற்காழி நல்லஞான சம்பந்தன்
குளிருந் தலைச்சங்கை ஓங்குகோயில் மேயானை
ஒளிரும் பிறையானை யுரைத்தபாடல் இவைவல்லார்
மிளிருந் திரைசூழ்ந்த வையத்தார்க்கு மேலாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சங்கருணாதேசுவரர் ; தேவி—சௌந்தரநாயகி.

---

[2] இவ்வடி பஞ்சபூதங்களைக் குறிக்கும். [3] தீ—முத்தீ. [4] சேய்—சேய்மை ; உயரம். [5] நால்வேதந் தரித்தார் — அந்தணர்.

## 36. திருஆக்கூர்த்தான்றோன்றிமாடம்*

**பண் - சீகாமரம் [2-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

அக்கிருந்த ஆரமும் ஆடரவும் ஆமையும்
தொக்கிருந்த மார்பினன் தோலுடையான் வெண்ணீற்றன்
புக்கிருந்த[1] தொல்கோயில்[2] பொய்யிலா மெய்ந்நெறிக்கே
தக்கிருந்தார்[3] ஆக்கூரில் தான்தோன்றி மாடமே. 1

நீரார வார்சடையான் நீறுடையான் ஏறுடையான்
காரார்பூங் கொன்றையினன் காதலித்த தொல்கோயில்
கூராரல் வாய்நிறையக் கொண்டயலே கோட்டக[4]த்தில்
தாராமல் காக்கூரில் தான்தோன்றி மாடமே. 2

வாளார்கண் செந்துவர்வாய் மாமலையான் றன்மடந்தை
தோளாகம் பாகமாப் புல்கினன் தொல்கோயில்
வேளாள ரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும்
தாளாளர் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே.[5] 3

கொங்குசேர் தண்கொன்றை மாலையினன் கூற்றடரப்
பொங்கினன் பொங்கொளிசேர் வெண்ணீற்றன் பூங்கோயில்
அங்கம் ஆறோடும் அருமறைகள் ஐவேள்வி
தங்கினார் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே. 4

வீக்கினன் ஆடரவம் வீந்தழிந்தார் வெண்டலையென்
பாக்கினன் பலகலன்க ளாதரித்துப் பாகம்பெண்
ஆக்கினன் தொல்கோயில் ஆம்பலம்பூம் பொய்கைபுடை
தாக்கினார் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே. 5

பண்ணொளி[6] சேர் நான்மறையான் பாடலினோ டாடலினன்
கண்ணொளிசேர் நெற்றியினன் காதலித்த தொல்கோயில்

---

* ஆக்கூர் - தலத்தின் பெயர். தான்தோன்றிமாடம் - கோயிலின் பெயர். தான்தோன்றி — சுயம்பு மூர்த்தி. [1] புக்கிருந்த — (கோச்செங்கட் சோழர் அன்பினால் கட்டிய திருக்கோயிலினுள்) புகுந்திருந்த. [2] தொல்கோயில் — பழங்கோயில். [3] தக்கிருந்தார் — தகுதியுடன் இருந்தார். [4] கோட்டகம் — கரையினிடம். [5] இவ்வடிகள் வேளாளர் சிறப்பினைக் குறிப்பிடுகின்றன. [6] ஒளி - ஞானவொளி.

விண்ணொளிசேர் மாமதியந் தீண்டியக்கால் வெண்மாடம்
தண்ணொளிசேர் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே. 6

வீங்கினார்[7] மும்மதிலும் வில்வரையால் வெந்தவிய
வாங்கினார்[8] வானவர்கள் வந்திறைஞ்சுந் தொல்கோயில்
பாங்கினார் நான்மறையோ டாறங்கம் பலகலைகள்
தாங்கினார் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே. 7

கன்னெடிய குன்றெடுத்தான் தோளடரக் காலூன்றி
இன்னருளா லாட்கொண்ட எம்பெருமான் தொல்கோயில்
பொன்னடிக்கே நாடோறும் பூவோடு நீர்சுமக்கும்
தன்னடியார்[9] ஆக்கூரில் தான்தோன்றி மாடமே. 8

நன்மையான் நாரணனும் நான்முகனுங் காண்பரிய
தொன்மையான் தோற்றங்கே டில்லாதான் தொல்கோயில்
இன்மையாற் சென்றிரந்தார்க் கில்லையென்னா தீந்துவக்குந்
தன்மையார்[10] ஆக்கூரில் தான்தோன்றி மாடமே. 9

நாமருவு புன்மை நவிற்றச் சமண்தேரர்
பூமருவு[11] கொன்றையினான் புக்கமருந் தொல்கோயில்
சேல்மருவு பைங்கயத்துச் செங்கழுநீர் பைங்குவளை
தாமருவும் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே. 10

ஆடல்[12] அமர்ந்தானை ஆக்கூரில் தான்தோன்றி
மாடம் அமர்ந்தானை மாடஞ்சேர்[13] தண்காழி
நாடற் கரியசீர் ஞானசம் பந்தன்சொல்
பாடலிவை வல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சுயம்புநாதர், தான்தோன்றியப்பர்;
தேவி—(கட்கநேத்திரி) வாள்நெடுங்கண்ணி.

---

[7] வீங்கினார் - வலிமையால் மிக்கவர்; திரிபுரர். [8] வாங்கினார் - வளைத்தார். [9] தன் அடியார் - தன்னுடைய அடியார்க்கு (அருளுமிடம்). [10] இவ்வடிகள் இப்பதியில் வாழும் மக்களின் சிறப்பினைக் குறிக்கும். [11] பூமருவு - பூக்கள் மிகப் பொருந்தும், [12] ஆடல் - அருட்கூத்து. [13] மாடம்சேர் - தோணியாகிய மாடம்.

# 37. திருக்கடவூர்வீரட்டம்*

**பண் - காந்தாரபஞ்சமம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சடையுடை யானும்நெய் யாடலா னுஞ்சரி கோவண
உடையுடை யானும்மை ஆர்ந்த[1] வொண் கண்உமைகேள்வனும்
கடையுடை நன்னெடு மாடமோங் குங்கட வூர்தனுள்
விடையுடை யண்ணலும் வீரட்டா னத்தர னல்லனே.[2] 1

எரிதரு வார்சடை யானும்வெள் ளையெரு தேறியும்
புரிதரு[3] மாமலர்க் கொன்றைமா லைபுனைந் தேத்தவே
கரிதரு காலனைச் சாடினா னுங்கட வூர்தனுள்
விரிதரு தொல்புகழ் வீரட்டா னத்தர னல்லனே. 2

நாதனும் நள்ளிரு ளாடினா னுந்நளிர் போதின்கண்
பாதனும் பாய்புலித் தோலினா னும்பசு[4] வேறியும்
காதலர் தண்கட வூரினா னுங்கலந் தேத்தவே
வேதம தோதியும் வீரட்டா னத்தர னல்லனே. 3

மழுவமவர் செல்வனும் மாசிலா தபல பூதமுன்
முழவொலி யாழ்குழல் மொந்தைகொட் டமுது காட்டிடைக்
கழல்வளர் கால்குஞ்சித் தா[5]டினா னுங்கட வூர்தனுள்
விழவொலி மல்கிய வீரட்டா னத்தர னல்லனே. 4

சுடர்மணிச் சுண்ணவெண் ணீற்றினா னுஞ்சுழல் வாயதோர்
படமணி நாகம் அரைக்கசைத் தபர மேட்டியும்
கடமணி மா[6]வுரித் தோலினா னுங்கட வூர்தனுள்
விடமணி கண்டனும் வீரட்டா னத்தர னல்லனே. 5

---

* 'திருக்கடவூர்' என வழங்கப்பெறும். கடவூர் - அமுதகடம் அமுதலிங்கமான இடம். கடம் - குடம். இயமவாதனையைக் கடத்தற்கு உதவும் ஊர் என்றலுமாம். [1] உடையுடையானுமையார்ந்த என்றும் பாடம். [2] அல்லனே – அல்லனோ? ஏ : வினா. இஃது அவனேயாம் என்ற உடன்பாடு குறித்து நின்றது. நல்லனே என்று பிரித்தலுமாம். [3] புரிதரு - மாலைபோன்ற. [4] பசு - இடப வகை என்ற பொருளில் வந்தது; பசு - உயிர் என்றலுமாம்; இப்பொருளில் ஏறி என்பது உயிர்க்குயிராய்க் கலந்து. [5] குஞ்சித்து - தூக்கி. [6] கடம் அணிமா - மதமுடைய யானை.

பண்பொலி நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
உண்பலி கொண்டுழல் வானும்வா னின்னொளி[7] மல்கிய
கண்பொலி நெற்றிவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்
வெண்பொடிப் பூசியும்[8] வீரட்டா னத்தர னல்லனே. 6

செவ்வழ லாய்நில னாகிநின் றசிவ மூர்த்தியும்
முவ்வழல் நான்மறை யைந்துமா யமுனி கேள்வனும்
கவ்வழல் வாய்க்கத நாகமார்த் தான்கட வூர்தனுள்
வெவ்வழ லேந்துகை வீரட்டா னத்தர னல்லனே. 7

அடியிரண் டோருடம் பைஞ்ஞான்கி ருபது தோள்தச
முடியுடை வேந்தனை மூர்க்கழித்தமுதல் மூர்த்தியும்[9]
கடிகம ழும்பொழில் சூழுமந் தண்கட வூர்தனுள்
வெடிதலை யேந்தியும் வீரட்டா னத்தர னல்லனே. 8

வரைகுடை யாமழை தாங்கினா னும்வளர் போதின்கண்
புரைகடிந் தோங்கிய நான்முகத் தான்புரிந் தேத்தவே
கரைகடல் சூழ்வையங் காக்கின்றா னுங்கட வூர்தனுள்
விரைகமழ் பூம்பொழில் வீரட்டா னத்தர னல்லனே. 9

தேரரும் மாசுகொள் மேனியா ருந்தெளி யாததோர்
ஆரருஞ் சொற்பொரு ளாகிநின் றஎம தாதியான்
காரிளங் கொன்றைவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்
வீரமுஞ் சேர்கழல் வீரட்டா னத்தர னல்லனே. 10

வெந்தவெண் ணீறணி வீரட்டா னத்துறை வேந்தனை
அந்தணர் தங்கட வூருளா னையணி காழியான்
சந்தமெல் லாமடிச் சாத்த[10] வல் லமறை ஞானசம்
பந்தன செந்தமிழ் பாடியா டக்கெடும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அமிர்தகடேசுவரர்; தேவி—அபிராமியம்மை.

---

[7] வானின் ஒளி - வானில் விளங்கும் சந்திரன் - சூரியன் - அக்கினி என்ற முச்சுடர்களின் ஒளி. [8] பூசி: பெயர்; பூசுபவன். [9] மூர்க்கு - மூர்க்கம்; இதில் அம் கெட்டு நின்றது. முதல் மூர்த்தி-சிவமூர்த்தி வடிவு. [10] மடிச்சார்த்த என்றும் பாடம்.

# 38. திருக்கடவூர் மயானம்*

*பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]*

திருச்சிற்றம்பலம்

வரிய[1] மறையார் பிறையார் மலையோர்சிலையா வணக்கி
எரியமதில்கள் எய்தார் எறியும்முசலம் உடையார்
கரியமிடறும் உடையார் கடவூர்மயானம் அமர்ந்தார்
பெரியவிடைமேல் வருவா ரவரெம்பெருமான் அடிகளே.[2] 1

மங்கைமணந்த மார்பர் மழுவாள்வலனொன் றேந்திக்
கங்கைசடையிற் கரந்தார் கடவூர்மயானம் அமர்ந்தார்
செங்கண்வெள்ளே றேறிச் செல்வஞ் செய்யா[3] வருவார்
அங்கையேறிய மறியார் அவரெம்பெருமான் அடிகளே. 2

ஈடல்இடபம் இசைய ஏறிமழுவொன் றேந்திக்
காடதிடமா வுடையார் கடவூர்மயானம் அமர்ந்தார்
பாடலிசைகொள் கருவி படுதம்பலவும் பயில்வார்
ஆடல்அரவம் உடையார் அவரெம்பெருமான் அடிகளே. 3

இறைநின் றிலங்கு வளையாள் இளையாளொருபா லுடையார்
மறைநின் றிலங்கு மொழியார் மலையார்[4] மனத்தின் மிசையார்
கறைநின் றிலங்கு பொழில்சூழ் கடவூர்மயானம் அமர்ந்தார்
பிறைநின் றிலங்கு சடையார் அவரெம்பெருமான் அடிகளே. 4

வெள்ளையெருத்தின் மிசையார் விரிதோடொருகா திலங்கத்
துள்ளும்இளமான் மறியார் சுடர்பொற்சடைகள் துலங்கக்
கள்ளநகுவெண் டலையார் கடவூர்மயானம் அமர்ந்தார்
பிள்ளைமதியம் உடையார் அவரெம்பெருமான் அடிகளே. 5

பொன்றுதிரு மணங்கொள் புனைபூங்கொன்றை புனைந்தார்
ஒன்றுவெள்ளே றுயர்த்த துடையாரதுவே யூர்வார்
கன்றுவினஞ்சூழ் புறவிற் கடவூர்மயானம் அமர்ந்தார்
பின்தாழ்சடையார் ஒருவர் அவரெம்பெருமான் அடிகளே. 6

---

* 'திருமெய்ஞ்ஞானம்' என வழங்கப்பெறும். [1] வரிய-இசைப் பாட்டுடைய. [2] பெருமான் அடிகள் -இறைவர்; தலத்துச் சுவாமி யின் பெயர்க் குறிப்பு. [3] செல்வம் - சிவஞானச்செல்வம். செய்யா-செய்து; அடியார்க்குச் செல்வங் கொடுத்து. [4] மலையார் - மயக்க மில்லாத உறுதிப்பாடுடையார்.

பாசமான களைவார் பரிவார்க்கமுதம் அனையார்
ஆசைதீரக் கொடுப்பார் அலங்கல்விடைமேல் வருவார்
காசைமலர்போல் மிடற்றார் கடவூர்மயானம் அமர்ந்தார்
பேசவருவார் ஒருவர் அவரெம்பெருமான் அடிகளே. 7

செற்றஅரக்கன் அலறத் திகழ்சேவடிமெல் விரலாற்
கற்குன்றடர்த்த பெருமான் கடவூர்மயானம் அமர்ந்தார்
மற்றொன்றிணையில் வலிய மாசில்வெள்ளி மலைபோல்
பெற்றொ[5]ன்றேறி வருவார் அவரெம்பெருமான் அடிகளே. 8

வருமாகரியின் உரியார் வளர்புன்சடையார் விடையார்
கருமான்உரிதோல் உடையார் கடவூர்மயானம் அமர்ந்தார்
திருமாலொடுநான் முகனுந் தேர்ந்துங்காண் முன்னொண்ணாப்
பெருமானெனவும் வருவார் அவரெம்பெருமான் அடிகளே. 9

தூயவிடைமேல் வருவார் துன்னாருடைய மதில்கள்
காயவேவச் செற்றார் கடவூர்மயானம் அமர்ந்தார்
தீயகருமஞ் சொல்லுஞ் சிறுபுன்தேரர் அமணர்
பேய்பேயென்ன வருவார் அவரெம்பெருமான் அடிகளே. 10

மரவம்பொழில்சூழ் கடவூர் மன்னும்மயானம் அமர்ந்த
அரவம்அசைத்த பெருமான் அகலம்அறிய லாக[6]ப்
பரவும்முறையே பயிலும் பந்தன்செஞ்சொல் மாலை
இரவும்பகலும் பரவி நினைவார் வினைகள் இலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பெரியபெருமானடிகள், பிரமபுரீசுவரர்;
தேவி—அமலகுயமின்னம்மை.

---

## 39. திருவேட்டக்குடி *

பண் - பஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வ**ண்டிரைக்கும் மலர்க்கொன்றை விரிசடைமேல் வரியரவம்
கண்டிரைக்கும் பிறைச்சென்னிக் காபாலி கனைகழல்கள்

---

[5] பெற்று - இடபம். [6] அகலம் அறியல்ஆக-தன்மைகள் அறியும்படியாக. * இறைவன் வேடர் உருவுடன் அருச்சுனனுக்காக வெளிப்பட்டு அருளிய காரணத்தால் இப்பெயர் பெற்றது என்பர்.

தொண்டிரைத்துத் தொழுதிறைஞ்சத் துளங்கொளிநீர்ச் சுடர்ப்பவளம்
தெண்டிரைகள் கொணர்ந்தெறியுந் திருவேட்டக் குடியாரே. 1

பாய்திமிலர் வலையோடு மீன்வாரிப் பயின்றெங்கும்
காசினியிற் கொணர்ந்தட்டுங் கைதல்சூழ் கழிக்கானல்[1]
போயிரவிற் பேயோடும் புறங்காட்டிற் புரிந்தழகார்
தீயெரிகை[2] மகிழ்ந்தாருந் திருவேட்டக் குடியாரே. 2

தோத்திரமா மணலிலிங்கந் தொடங்கியஆன் நிரையிற்பால்
பாத்திரமா ஆட்டதலும்[3] பரஞ்சோதி பரிந்தருளி
ஆத்தமென மறைநால்வர்க் கறம்புரிநூ லன்றுரைத்த
தீர்த்தமல்கு சடையாருந் திருவேட்டக் குடியாரே. 3

கலவஞ்சேர் கழிக்கானல் கதிர்முத்தங் கலந்தெங்கும்
அலவஞ்சே ரணைவாரிக் கொணர்ந்தெறியும் அகன்றுறைவாய்
நிலவஞ்சேர் நுண்ணிடைய நேரிழையா ளவளோடும்
திலகஞ்சேர் நெற்றியினார் திருவேட்டக் குடியாரே. 4

பங்கமார் கடலலறப் பருவரையோ டரவுழலச்[4]
செங்கண்மால் கடையஎழு நஞ்சருந்துஞ் சிவமூர்த்தி
அங்கநான் மறைநால்வர்க் கறம்பொருளின் பயனளித்த
திங்கள்சேர் சடையாருந் திருவேட்டக் குடியாரே. 5

நாவாய[5] பிறைச்சென்னி நலந்திகழ மிலங்கிப்பி
கோவாத நித்திலங்கள் கொணர்ந்தெறியுங் குளிர்கானல்
ஏவாரும் வெஞ்சிலையால் எயின்மூன்றும் எரிசெய்த
தேவாதி தேவனார் திருவேட்டக் குடியாரே. 6

பானிலவும்[6] பங்கயத்துப் பைங்கானல் வெண்குருகு
கானிலவு மலர்ப்பொய்கைக் கைதல்[7] சூழ் கழிக்கானல்
மானின்விழி மலைமகளோ டொருபாகம் பிரிவரியார்
தேனிலவு மலர்ச்சோலைத் திருவேட்டக் குடியாரே. 7

---

1 இவ்வடிகள் தன்மை நவிற்சியணி. 2 தீயெரிகை - தல விசேடம்; இது சந்நிதியின் கிழக்கே கடற்கரை ஓரம் நாடோறும் இரவில் தீ எரிவதுபோலக் காட்சி காணப்படுவதைக் குறிப்பது. 3 இவ்வடிகள் சண்டீசர் வரலாற்றைக் குறிக்கும். 4 டரவழலச் என்றும் பாடம். 5 நாவாய - தோணி போன்ற. 6 பால் நிலவும் - பான்மையினால் நிலவுகின்ற. 7 பொய்கை கைதல் என்றும் பாடம்.

துறையுலவு கடலோதஞ் சுரிசங்க மிடறிப்போய்
நறையுலவும் பொழிற்புன்னை நன்னீழற் கீழமரும்
இறைபயிலும் இராவணன்றன் தலைபத்தும் இருபதுதோள்
திறலழிய அடர்த்தாருந் திருவேட்டக் குடியாரே. 8

அருமறைநான் முகத்தானும் அகலிடம்நீ ரேற்றானும்
இருவருமாய் அளப்பரிய எரியுருவாய் நீண்டபிரான்
வருபுனலின் மணியுந்தி மறிதிரையார் சுடர்ப்பவளத்
திருவுருவில் வெண்ணீற்றார் திருவேட்டக் குடியாரே. 9

இகழ்ந்துரைக்குஞ் சமணர்களும் இடும்போர்வைச் சாக்கியரும்
புகழ்ந்துரையாப் பாவிகள்சொற் கொள்ளேன்மின் பொருளென்ன
நிகழ்ந்திலங்கு வெண்மணலில் நிறைத்துண்டப் பிறைக்கற்றை
திகழ்ந்திலங்கு செஞ்சடையார் திருவேட்டக்[8] குடியாரே. 10

தெண்டிரைசேர் வயலுடுத்த திருவேட்டக் குடியாரைத்
தண்டலைசூழ் கலிக்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
ஒண்டமிழ்நூல் இவைபத்தும் உணர்ந்தேத்த வல்லார்போய்
உண்டுடுப்பில் வானவரோ[9] டுயர்வானத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—திருமேனியழகர் ; தேவி—சாந்தநாயகி.

---

## 40. திருத்தெளிச்சேரி*

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பூவ லர்ந்தன கொண்டுமுப் போதுமும் பொற்கழல்
தேவர் வந்து வணங்கு மிகுதெளிச் சேரியீர்
மேவருந் தொழி லாளொடு கேழற்[1]பின் வேடனும்
பாவங் கொடு நின்றது போலுநும் பான்மையே. 1

விளைக்கும் பத்திக்கு விண்ணவர் மண்ணவ ரேத்தவே
திளைக்குந் தீர்த்த மறுத திகழ்தெளிச் சேரியீர்

---

[8] வெண் மணலில் - திருவேட்டக்குடி - என்று கூட்டுக.
[9] உண்டு உடுப்பு இல் வானவர் - போக உலகமல்லாத தேவர்கள்.
* 'கோயிற்பத்து' என வழங்கப்படும். [1] கேழல் - பன்றி.

வளைக்குந் திண்சிலை மேலைந்து பாணமுந்[2] தானெய்து
களிக்குங் காமனை யெங்ஙனம் நீர்கண்ணிற் காய்ந்ததே. 2

வம்ப டுத்த மலர்ப்பொழில் சூழ மதிதவழ்
செம்ப டுத்த செழும்புரி சை[3]த்தெளிச் சேரியீர்
கொம்ப டுத்ததொர் கோல விடைமிசைக் கூர்மையோ
டம்ப டுத்தகண் ணாளொடு மேவல் அழகிதே. 3

காரு லாங்கடல் இப்பிகள் முத்தங் கரைப்பெயும்
தேரு லாநெடு வீதிய தார்தெளிச் சேரியீர்
ஏரு லாம்பலிக் கேகிட வைப்பிட மின்றியே
வாரு லாமுலை யாளையொர் பாகத்து வைத்ததே. 4

பக்கல் நுந்தமைப்[4] பார்ப்பதி யேத்திமுன் பாவிக்கும்
செக்கர் மாமதி சேர்ம தில்சூழ்தெளிச் சேரியீர்
மைக்கொள் கண்ணியர் கைவளை மால்[5] செய்து வெளவவே
நக்க ராயுல கெங்கும் பலிக்கு நடப்பதே. 5

தவள வெண்பிறை தோய்தரு தாழ்பொழில் சூழநல்
திவள மாமணி மாடந் திகழ்தெளிச் சேரியீர்
குவளை போற்கண்ணி துண்ணென வந்து குறுகிய
கவள மால்கரி யெங்ஙனம் நீர்கையிற் காய்ந்ததே.[6] 6

கோடடுத்தபொ ழிலின்பி சைக்குயில் கூவிடும்
சேடடுத்த தொழிலின் மிகுதெளிச் சேரியீர்
மாடடுத்த மலர்க்கண்ணி னாள்கங்கை நங்கையைத்
தோடடுத்த மலர்ச்சடை யென்கொல்நீர் சூடிற்றே. 7

கொத்திரைத்த மலர்க்குழ லாள்குயில் கோலஞ்சேர்
சித்திரக் கொடி மாளிகை சூழ்தெளிச் சேரியீர்
வித்தகப் படை வல்லஅரக்கன் விறல்தலை
பத்தி ரட்டிக் கரம்நெரித் திட்டதும் பாதமே. 8

காலெ டுத்த திரைக்கை கரைக்கெறி கானல்சூழ்
சேல டுத்த வயற்பழ னத்தெளிச் சேரியீர்

---

[2] ஐந்து பாணம் - தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்னும் ஐந்து புட்ப பாணங்கள். [3] புரிசை - மதில். [4] பக்கலுந் தமைப் என்றும் பாடம். [5] மால்-(காதல்) மயக்கம். [6] கவளம்-சோற்றுத் திரளை. மால் கரி - பெரிய யானை. காய்ந்தது - கொன்றது.

மால டித்தல மாமல ரான்முடி தேடியே
ஓல மிட்டிட எங்ஙனம் ஓருருக் கொண்டதே. 9

மந்தி ரந்தரு மாமறையோர்கள் தவத்தவர்
செந்தி லங்கு மொழியவர் சேர்தெளிச் சேரியீர்
வெந்த லாகிய சாக்கிய ரோடுச மணர்கள்
தந்தி றத்தன நீக்குவித் தீரோர் சதிரரே. 10

திக்கு லாம்பொழில் சூழ்தெளிச் சேரியெஞ் செல்வனை
மிக்க காழியுள் ஞானசம் பந்தன் விளம்பிய
தக்க பாடல்கள் பத்தும்வல் லார்கள் தடமுடித்
தொக்க வானவர் சூழ இருப்பவர் சொல்லிலே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பார்வதீசுவரர் ; தேவி—சத்தியம்மை.

---

## 41. திருத்தருமபுரம்*

பண் - யாழ்மூரி ** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மாதர்[1] ம டப்பிடியும் மட அன்னமும் அன்னதோர்
நடை யுடைம் மலை மகள் துணையென மகிழ்வர்
பூதஇ னப்படைநின் றிசை பாடவும் ஆடுவர்
அவர் படர் சடைந் நெடு முடியதொர் புனலர்
வேதமொ டேழிசைபா டுவ ராழ்கடல் வெண்டிரை
யிரைந் நுரை கரை பொரு துவிம்மிநின் றயலே
தாதவிழ் புன்னைதயங் குமலர்ச்சிறை வண்டறை
யெழில் பொழில் குயில் பயில் தருமபு ரம்பதியே. 1

பொங்குந டைப்புகலில் விடை யாமவர் ஊர்திவெண்
பொடி யணி தடங் கொள்மார் புபூணநூல் புரள
மங்குலி டைத்தவழும் மதி சூடுவர் ஆடுவர்
வளங் கிளர் புனல்அர வம்வைகிய சடையர்

---

* பாண்டவருள் தருமராசன் பூசித்துப் பேறுபெற்ற காரணத்தால் இப்பெயர்பெற்றது. ** இப்பதிகத்தின் இசை யாழிலளவுபடாத்தன்மையைத் தெரிவித்ததாகும். [1] மாதர் - அழகிய.

சங்குக டல்திரையால் உதை யுண்டுச ரிந்திரிந்
தொசிந்தசைந்திசைந்துசேரும்வெண்மணற்குவை[2]மேல்
தங்குக திர்ம்மணிநித் திலம் எல்லிருள் ஒல்கநின்
றிலங் கொளிந் நலங் கெழில் தருமபு ரம்பதியே. 2

விண்ணுறு மால்வரைபோல் விடை யேறுவ ராறுசூ
டுவர் விரி சுரி யொளி கொள்தோடு நின்றிலங்கக்
கண்ணுற நின்றொளிருங் கதிர்வெண்மதிக் கண்ணியர்
கழிந் தவ ரி[3] ழிந் திடும்[4] முடைதலை கலனாப்
பெண்ணுற நின்றவர்தம் உரு வம்அயன் மால்தொழவ்
வரி வையைப் பிணைந் திணைந் தணைந்ததும் பிரியார்
தண்ணிதழ் முல்லையொடெண் இதழ் மௌவல்ம ருங்கலர்
கருங் கழிந் நெருங் குநல் தருமபு ரம்பதியே. 3

வாருறு மென்முலைநன் னுதல் ஏழையொ டாடுவர்
வளங் கிளர் விளங் குதிங் கள்வைகிய சடையர்
காருற நின்றலரும் மலர்க் கொன்றையங் கண்ணியர்
கடுவ் விடை கொடி வெடி கொள்காடுறை பதியர்
பாருற விண்ணுலகம் பர வப்படு வோரவர்
படு தலைப் பலி கொளல் பரிபவந் நினையார்
தாருறு நல்லரவம் மலர் துன்னிய தாதுதிர்
தழை பொழில் மழைந் நுழை தருமபு ரம்பதியே. 4

நேரும வர்க்குணரப் புகி லில்லைநெ டுஞ்சடைக்
கடும் புனல் படர்ந் திடம் படுவ்வதொர் நிலையர்
பேரும வர்க்கெனையா யிர முன்னைப்பி றப்பிறப்
பிலா தவ ருடல் தடர்த் தபெற்றியா ரறிவார்
ஆரம வர்க்கழல்வா யதொர் நாகம ழஃகுறவ்
வெழுஃ கொழும்மலர்கொள்பொன் னிதழிநல் லலங்கல்
தாரம வர்க்கிமவான் மகள் ஊர்வது போர்விடை
கடி படு செடி பொழில் தருமபு ரம்பதியே. 5

கூழையங் கோதைகுலா யவள் தம்பிணை புல்கமல்
குமென் முலைப் பொறி கொள்பொற் கொடியிடைத்துவர்வாய்

---

[2] வெண்மணற்குவை - வெண்மையான மணல்மேடு. [3] கழிந் தவர் - இறந்தவர். [4] ரழிந்திடும் என்றும் பாடம்.

மாழையொண் கண்மடவா ளையொர் பாகம கிழ்ந்தவர்
வலம் மலி படை விடை கொடிகொடும் மழுவாள்
யாழையும் எள்கிடவே ழிசை வண்டுமு ரன்றினந்
துவன் றிமென் சிறஃ கறை யுறந்நறவ்வி ரியுந்நல்
தாழையும் ஞாழலுந்நீ டிய கானலி னள்ளலி
சைபுள் ளினந் துயில் பயில் தருமபு ரம்பதியே. 6

தேமரு வார்குழல்அன் னந டைப்பெடை மான்விழித்
திருந் திழை பொருந் துமே னிசெங்கதிர் விரியத்
தூமரு செஞ்சடையில் துதை வெண்மதி துன்றுகொன்
றைதொல் புனல் சிரங் கரந் துரித்ததோ லுடையர்
காமரு தண்கழிநீ டிய கானல கண்டகங்
கடல் அடை கழி யிழி யமுண் டகத் தயலே
தாமரை சேர்குவளைப் படு கிற்கழு நீர்மலர்
வெறி கமழ் செறிவ் வயல் தருமபு ரம்பதியே.[5] 7

தூவண நீறகலம் பொலி யவ்விரை புல்கமல்
குமென் மலர் வரை புரை திரள்புயம் அணிவர்
கோவண மும்உழையின் அத ளும்முடை யாடையர்
கொலைம் மலி படை யொர்சூ லமேந்திய குழகர்
பாவண மாவலற[6]த் தலை பத்துடை யவ்வரக்
கனவ் வலி யொர்கவ் வைசெய் தருள்புரி தலைவர்
தாவண[7] ஏறுடையெம் அடி கட்கிடம் வன்தடங்
கடல் இடுந் தடங் கரைத் தருமபு ரம்பதியே. 8

வார்மலி மென்முலைமா தொரு பாகம தாகுவர்
வளங் கிளர் மதி யரவம்வைகிய சடையர்
கூர்மலி சூலமும்வெண் மழு வும்மவர் வெல்படை
குனி சிலை தனிம் மலை[8]ய தேந்திய குழகர்
ஆர்மலி யாழிகொள்செல் வனும் அல்லிகொள் தாமரைம்
மிசை யவன் அடிம் முடி யளவுதாம் அறியார்

---

[5] இச்செய்யுள் மருதமும் நெய்தலும் மயங்கியவளத்தை அறி விப்பதால் திணைமயக்கம் ஆகும். [6] பாவணமா அலற - சாமவேதம் பாடி அலறிப் போற்ற. [7] தாவணம் - தாண்டிச்செல்லும் இயல் புடைய. [8] தனிமலை - மேரு.

தார்மலி கொன்றையலங் கலு கந்தவர் தங்கிடந்
தடங் கடல் விடுந் திரைத் தருமபு ரம்பதியே. 9

புத்தர்கள் தத்துவர்மொய்த் துறி புல்கிய கையர்பொய்ம்
மொழிந் தழி வில்பெற் றியுற் றநற்றவர் புலவோர்
பத்தர்க ளத்தவமெய்ப் பய னுகவு கந்தவர்
நிகழ்ந் தவர் சிவந் தவர்[9] சுடலைப்பொடி யணிவர்
முத்தன வெண்ணகையொண் மலை மாதுமை பொன்னணி
புணர்ம் முலை யிணை துணை யணைவதும் பிரியார்
தத்தரு வித்திரளுந் திய மால்கட லோதம்வந்
தடர்ந் திடுந் தடம் பொழில் தருமபு ரம்பதியே. 10

பொன்னெடு நன்மணிமா ளிகை சூழ்விழ வம்மலீ
பொரூஉ புனல்[10] திரூஉ அமர் புகலியென் றுலகில்
தன்னொடு நேர்பிறவில் பதி ஞானசம் பந்தனஃ
துசெந் தமிழ்த் தடங் கடல் தருமபுரம் பதியைப்
பின்னெடு வார்சடையிற் பிறை யும்அர வும்முடை
யவன் பிணை துணை கழல் கள்பேணுத லுரியார்
இன்னெடு நன்னுலகெய் துவ ரெய்திய போகமும்
உறு வர்கள் இடர் பிணி துயரணைவ் விலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—யாழ்மூரிநாதர்; தேவி—மதுரமின்னம்மை.

---

## 42. திருநள்ளாறு* [திருநள்ளாறும்-திருஆலவாயும்]

### வினாவுரை. பண் - நட்டபாடை** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாடகம் மெல்லடிப் பாவையோடும் படுபிணக் காடிடம் பற்றிநின்று, நாடகம் ஆடுகள் ளாறுடைய நம்பெரு மானிது என்

---

[9] சவந்தவர் என்றும் பாடம். சவம் தவர்-பிணங்கள்கிடந்த; அலைபடுகின்ற. [10] புனல் - காவிரி. * நளன் பூசித்தமையால் இப் பெயர் பெற்றது. இது முசுகுந்தன் தாபித்த விடங்கத் தலங்கள் ஏழனுள் ஒன்று. ** இப்பதிகம் மதுரையில் பாண்டியன்முன் அமணர் செய்த வாதத்தில் தீயிலிட்ட ஏடு பச்சையாய் இருக்க அருளிய பண்பினைப் போற்றி வியந்தது.

கொல்சொல்லாய், சூடகம் முன்கை மடந்தைமார்கள் துணைவ ரொடுந்தொழு தேத்திவாழ்த்த, ஆடக[1] மாடம் நெருங்குகூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே. 1

திங்களம் போதுஞ் செழும்புனலுஞ் செஞ்சடை மாட்டயல் வைத்துகந்து, நங்கண் மகிழுநள் ளாறுடைய நம்பெரு மானிது என்கொல்சொல்லாய், பொங்கிள மென்முலை யார்களோடும் புனமயி லாட நிலாமுளைக்கும், அங்கழ கச்சுதை[2] மாடக்கூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே. 2

தண்ணறு[3] மத்தமுங் கூவிளமும் வெண்டலை மாலையுந் தாங்கியார்க்கும், நண்ணல் அரியநள் ளாறுடைய நம்பெரு மானிது என் கொல்சொல்லாய், புண்ணிய வாணரும் மாதவரும் புகுந்துட னேத்தப் புனையிழையார், அண்ணலின் பாட லெடுக்குங் கூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே. 3

பூவினில் வாசம் புனலிற்பொற்புப் புதுவிரைச் சாந்தினி[4]ன் நாற்றத்தோடு, நாவினிற் பாடல்நள் ளாறுடைய நம்பெரு மானிது என் கொல்சொல்லாய், தேவர்கள் தானவர் சித்தர்விச்சா தரர்கணத் தோடுஞ் சிறந்துபொங்கி, ஆவினில் ஐந்துகந் தாட்டுங்கூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே. 4

செம்பொன்செய் மாலையும் வாசிகை[5]யுந் திருந்து புகையு மவியும் பாட்டும், நம்பும் பெருமைநள் ளாறுடைய நம்பெரு மானிது என் கொல்சொல்லாய், உம்பரும் நாகரு லகந்தானும் ஒலி கடல் சூழ்ந்த வுலகத்தோரும், அம்புத நால்களால் நீடுங்கூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே. 5

பாகமுந் தேவியை வைத்துக்கொண்டு பைவிரி துத்தி[6]ப் பரிய பேழ்வாய், நாகமும் பூண்டநள் ளாறுடைய நம்பெரு மானிது என் கொல்சொல்லாய், போகமும் நின்வை மனத்துவைத் துப் புண்ணியர் நண்ணும் புணர்வுபூண்ட, ஆகமு டையவர் சேருங் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்தவாறே. 6

---

[1] சூடகம் - சங்க வளையல். ஆடகம் - உயர்ந்த பொன். [2] அங்கள பச்சுதை என்றும் பாடம். [3] தண்ணுறு என்றும் பாடம். [4] சாந்து - சந்தனம். [5] வாசிகை - தொடுத்த பூமாலை. [6] துத்தி - புள்ளி.

கோவண ஆடையும் நீறுப்பூச்சுங் கொடுமழு ஏந்தலுஞ் செஞ்சடையும், நாவணப் பாட்டுநள் ளாறுடைய நம்பெரு மானிது என்கொல்சொல்லாய், பூவண மேனி இளையமாதர் பொன்னும் மணியுங் கொழித்தெடுத்து, ஆவண வீதியி லாடுங்கூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே. 7

இலங்கை இராவணன் வெற்பெடுக்க எழில்விர லூன்றி யிசை விரும்பி, நலங்கொளச் சேர்ந்தநள் ளாறுடைய நம்பெரு மானிது என்கொல்சொல்லாய், புலன்களைச் செற்றுப் பொறியை நீக்கிப் புந்தியி லுந்நினைச் சிந்தைசெய்யும், அலங்கல் நல்லார்கள் அமருங்கூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே. 8

பணியுடை மாலும் மலரினோனும் பன்றியும் வென்றிப் பறவையாயும், நணுகல் அரியநள் ளாறுடைய நம்பெரு மானிது என்கொல்சொல்லாய், மணியொலி சங்கொலி யோடுமற்றை மாமுர சின்னொலி யென்றும்ஓவா, தணிகிளர் வேந்தர் புகுதுங் கூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே. 9

தடுக்குடைக் கையருஞ் சாக்கியருஞ் சாதியில் நீங்கிய வத்தவத்தர், நடுக்குற நின்றநள் ளாறுடைய நம்பெரு மானிது என்கொல்சொல்லாய், எடுக்கும் விழவும் நன்னாள்விழவும் இரும்பலி யின்பினோ[7] டெத்திசையும், அடுக்கும் பெருமைசேர் மாடக்கூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே. 10

அன்புடை யானை அரனைக்கூடல் ஆலவாய்[8] மேவிய தென்கொலென்று, நன்பொனை நாதனை நள்ளாற்றானை நயம்பெறப் போற்றி நலங்குலாவும், பொன்புடை சூழ்தரு மாடக்காழிப் பூசுரன் ஞானசம்பந்தன் சொன்ன, இன்புடைப் பாடல்கள் பத்தும் வல்லார் இமையவரேத்த இருப்பர்தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

[7] பலியன்பினோ என்றும் பாடம். [8] வருணன் மதுரையை அழிக்க விடுத்த ஏழு மேகங்களையும், இறைவன் சடையிலுள்ள நான்கு மேகங்களும் மேலுயர்ந்து தடுத்து, நான்கு மாடமாகக் கூடியதால் கூடல் என்னும், இறைவன் கட்டளைப்படி வங்கிய சேகரனுக்கு நாகம் தன் வாலும் வாயும் ஒன்றுபடும்படி உடல் வளைத்து மதுரை எல்லையைக் காட்டியதால் ஆலவாய் என்னும் மதுரைக்குப் பெயர்கள் உண்டாயின.

பண் - பழந்தக்கராகம்* [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**போ**கமார்த்த பூண்முலையாள்[1] தன்னொடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி[2]
ஆகமார்த்த தோலுடையன் கோவண ஆடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே. 1

தோடுடைய காதுடையன் தோலுடை யன்தொலையாப்
பீடுடைய போர்விடையன் பெண்ணுமோர் பாலுடையன்
ஏடுடைய மேலுலகோ டேழ்கட லுஞ்சூழ்ந்த
காடுடைய நம்பெருமான் மேயது நள்ளாறே. 2

ஆன்முறை[3]யா லாற்றவெண்ணீ றாடி அணியிழையோர்
பான்முறையால் வைத்தபாதம் பத்தர்ப ணிந்தேத்த
மான்மறியும் வெண்மழுவுஞ் சூலமும் பற்றியகை
நான்மறையான் நம்பெருமான் மேயது நள்ளாறே. 3

புல்கவல்ல வார்சடைமேற் பூம்புனல் பெய்தயலே
மல்கவல்ல கொன்றைமாலை மதியோடு டன்சூடிப்
பல்கவல்ல தொண்டர்தம்பொற் பாதநி ழற்சேர
நல்கவல்ல நம்பெருமான் மேயது நள்ளாறே. 4

ஏறுதாங்கி யூர்திபேணி யேர்கொள் இளமதியம்
ஆறுதாங்குஞ் சென்னிமேலோர் ஆடர வுஞ்சூடி
நீறுதாங்கி நூல்கிடந்த மார்பில் நிரைகொன்றை
நாறுதாங்கும் நம்பெருமான் மேயது நள்ளாறே. 5

திங்களுச்சி மேல்விளங்குந் தேவன் இமையோர்கள்
எங்களுச்சி யெம்மிறைவன் என்றடி யேயிறைஞ்சத்
தங்களுச்சி யால்வணங்குந் தன்னடி யார்கட்கெல்லாம்
நங்களுச்சி நம்பெருமான் மேயது நள்ளாறே. 6

---

* இப்பதிகம் மதுரையில் சமணருடன் நிகழ்ந்த கனல் வாதத்தில் தீயிலிட்ட ஏடு வேகாது இருந்து, சைவசமய உண்மையை நிலைநாட்டியதாகும். இது **பச்சைப் பதிகம்** எனவும் வழங்கப் பெறும். [1] போகமார்த்த பூண்முலையாள் - தலத்து அம்மையின் பெயர். [2] அண்ணல் பரமேட்டி - பெருமை தங்கிய சிவன். [3] ஆனமுறை என்பது ஆன்முறை என்றாயிற்று.

வெஞ்சுடர்த்தீ யங்கையேந்தி விண்கொண்மு ழவதிர
அஞ்சிடத்தோர் ஆடல்பாடல் பேணுவ தன்றியும்போய்ச்
செஞ்சடைக்கோர் திங்கள்சூடித் திகழ்தரு கண்டத்துள்ளே
நஞ்சடைத்த நம்பெருமான் மேயது நள்ளாறே. 7

சிட்டமார்ந்த மும்மதிலுஞ் சிலைவரைத் தீயம்பினால்
சுட்டுமாட்டிச் சுண்ணவெண்ணீ றாடுவ தன்றியும்போய்ப்
பட்ட[4] மார்ந்த சென்னிமேலோர் பால்ம தியஞ்சூடி
நட்டமாடும் நம்பெருமான் மேயது நள்ளாறே. 8

உண்ணலாகா நஞ்சுகண்டத் துண்டுட னேயொடுக்கி
அண்ணலாகா[5] வண்ணல்நீழல் ஆரழல் போலுருவம்
எண்ணலாகா வுள்வினையென் றெள்க வலித்திருவர்
நண்ணலாகா நம்பெருமான் மேயது நள்ளாறே. 9

மாசுமெய்யர் மண்டைத்தேரர் குண்டர்கு ணம்இலிகள்
பேசும்பேச்சை மெய்யென்றெண்ணி யந்நெறி செல்லன்மின்
மூசுவண்டார் கொன்றைசூடி மும்மதி லும்உடனே
நாசஞ்செய்த நம்பெருமான் மேயது நள்ளாறே. 10

தண்புனலும் வெண்பிறையுந் தாங்கிய தாழ்சடையன்
நண்புநல்லார் மல்குகாழி ஞானசம் பந்தன்நல்ல
பண்புநள்ளா றேத்துபாடல் பத்தும் இவைவல்லார்
உண்புநீங்கி வானவரோ டுலகிலு றைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஏடுமலி கொன்றையர விந்து[1] இள வன்னி
மாடவல செஞ்சடையெம் மைந்தனிட மென்பர்
கோடுமலி ஞாழல்குர[2] வேறுசுர புன்னை
நாடுமலி வாசமது வீசியநள் ளாறே. 1

விண்ணியல் பிறைப்பிள வறைப்புனல் முடித்த
புண்ணியன் இருக்குமிட மென்பர்புவி தன்மேல்

---

[4] பட்டம் - நெற்றிப் பட்டம். [5] அண்ணலாக - அணுகுதற்கு முடியாத. [1] அரவிந்து - அரவிந்தம் - தாமரை. [2] குர - குராமலர்.

பண்ணிய நடத்தொடிசை பாடும்அடி யார்கள்
நண்ணிய மனத்தின்வழி பாடுசெய்நள் ளாறே. 2

விளங்கிழை மடந்தைமலை மங்கையொரு பாகத்
துளங்கொள இருத்திய வொருத்தனிட மென்பர்
வளங்கெழுவு தீபமொடு தூபம்மலர் தூவி
நளன்கெழுவி நாளும்வழி பாடுசெய்நள் ளாறே.[2] 3

கொக்கரவர் கூன்மதியர் கோபர்திரு மேனிச்
செக்கரவர் சேருமிட மென்பர்தடம் மூழ்கிப்
புக்கரவர் விஞ்சையரும் விண்ணவரும் நண்ணி
நக்கரவர் நாமநினை வெய்தியநள் ளாறே. 4

நெஞ்சமிது கண்டுகொ ளுனக்கென நினைந்தார்
வஞ்சம தறுத்தருளும் மற்றவனை வானோர்
அஞ்சமுது காகியவர் கைதொழ எழுந்த
நஞ்சமுது செய்தவன் இருப்பிடம்நள் ளாறே. 5

பாலன[3]டி பேணவவ னுருயிர் குறைக்குங்
காலனுடன் மாளமு னுதைத்தஅர னூராம்
கோலமலர் நீர்க்குட மெடுத்துமறை யாளர்
நாலின்வழி நின்றுதொழில் பேணியநள் ளாறே. 6

நீதியர் நெடுந்தகையர் நீள்மலையர் பாவை
பாதியர் பராபரர் பரம்பர ரிருக்கை
வேதியர்கள் வேள்வியொழி யாதுமறை நாளும்
ஓதியரன் நாமமும் உணர்த்திடுநள் ளாறே. 7

கடுத்து[4]வல் லரக்கன்முன் நெருக்கிவரை தன்னை
எடுத்தவன் முடித்தலைகள் பத்தும்மிகு தோளும்
அடர்த்தவர் தமக்கிடம தென்பரளி பாட
நடத்தகல வைத்திரள்கள் வைகியநள் ளாறே. 8

உயர்ந்தவ னுருக்கொடு திரிந்துலக மெல்லாம்
பயந்தவன் நினைப்பரிய பண்பனிட மென்பர்
வியந்தமரர் மெச்சமலர் மல்குபொழி லெங்கும்
நயந்தரும வேதவொலி யார்திருநள் ளாறே. 9

---

[2] இவ்வடிகள் நளன் பூசித்து வழிபட்டதை அறிவிக்கும்.
[3] பாலன் - மார்க்கண்டேயர். [4] தடுத்து என்றும்பாடம்.

சிந்தைதிரு கற்சமணர் தேரர்தவ மென்னும்
பந்தனை [5] யறுத்தருளு கின்றபர மன்னூர்
மந்தமுழ வந்தரு விழாவொலியும் வேதச்
சந்தம்விர விப்பொழில் முழங்கியநள் ளாறே. 10

ஆடலர வார்சடையன் ஆயிழைதன் னோடும்
நாடுமலி வெய்திட இருந்தவன்நள் ளாற்றை
மாடமலி காழிவளர் பந்தனது செஞ்சொல்
பாடலுடை யாரையடை யாபழிகள் நோயே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவிராகம். பண் - சாதாரி* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தளிரிள வளரொளி தனதெழில் தருதிகழ் மலைமகள்
குளிரிள வளரொளி வனமுலை யிணையவை குலவலின்
நளிரிள வளரொளி மருவுநள் ளாறர்தம் நாமமே
மிளிரிள வளரெரி யிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 1

போதமர் தருபுரி குழலெழின் மலைமகள் பூணணி
சீதம தணிதரு முகிழிள வனமுலை செறிதலின்
நாதம தெழிலுரு வணையநள் ளாறர்தந் நாமமே
மீதம தெரியினி விடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 2

இட்டுறு மணியணி யிணர்புணர் வளரொளி யெழில்வடம்
கட்டுறு கதிரிள வனமுலை யிணையொடு கலவலின்
நட்டுறு செறிவயல் மருவுநள் ளாறர்தந் நாமமே
இட்டுறு மெரியினி விடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 3

மைச்சணி வரியரி நயனிதொன் மலைமகள் பயனுறு
கச்சணி கதிரிள வனமுலை யவையொடு கலவலின்
நச்சணி மிடறுடை யடிகள்நள் ளாறர்தந் நாமமே
மெச்சணி எரியினி விடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 4

---

[5] பந்தனை - பற்றுக்களை. * இப்பதிகம் போகமார்த்த பூண் முலையாள் என்னும் திருப்பதிகம் எழுதப்பட்ட திருவேட்டை எடுத்துக்கொண்டு, இன்னகாரணத்தால் இது தீயிலிடப் பச்சையா யிருக்கும் என்று பாடியதாகும்.

பண்ணியல் மலைமகள் கதிர்விடு பருமணி யணிநிறக்
கண்ணியல் கலசம தனமுலை யிணையொடு கலவலின்
நண்ணிய குளிர்புனல் புகுதுநள் ளாறர்தம் நாமமே
விண்ணியல் யெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 5

போதுறு புரிகுழல் மலைமகள் இளவளர் பொன்னணி
சூது[1]று தளிர்நிற வனமுலை யவையொடு துதைதலின்
தாதுறு நிறமுடை யடிகள்நள் ளாறர்தம் நாமமே
மீதுறும் எரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 6

கார்மலி நெறிபுரி சுரிகுழல் மலைமகள் கவினுறு
சீர்மலி தருமணி யணிமுலை திகழ்வொடு செறிதலின்
தார்மலி நகுதலை யுடையநள் ளாறர்தம் நாமமே
ஏர்மலி யெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 7

மன்னிய வளரொளி மலைமகள் தளிர்நிற மதம்மிகு
பொன்னியல் மணியணி கலசம தனமுலை புணர்தலின்
தன்னியல் தசமுகன் நெரியநள் ளாறர்தம் நாமமே
மின்னிய லெரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 8

கான்முக மயிலியல் மலைமகள் கதிர்விடு கனமிகு
பான்முக மியல்பணை யிணைமுலை துணையொடு பயிறலின்
நான்முகன் அரிஅறி வரியநள் ளாறர்தம் நாமமே
மேன்முக எரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 9

அத்திர நயனிதொன் மலைமகள் பயனுறு மதிசயச்
சித்திர மணியணி திகழ்முலை யிணையொடு செறிதலின்
புத்தரொ டமணர்பொய் பெயருநள் ளாறர்தம் நாமமே
மெய்த்திரள் எரியினி லிடிலிவை பழுதிலை மெய்ம்மையே. 10

சிற்றிடை அரிவைதன் வனமுலை யிணையொடு செறிதரும்
நற்றிற முறுகழு மலநகர் ஞானசம் பந்தன
கொற்றவன்[2] எதிரிடை யெரியினி லிடஇவை கூறிய
சொற்றெரி யொருபதும் அறிபவர் துயரிலர் தூயரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி-தர்ப்பாரண்யேசுவரர்; தேவி-போகமார்த்தபூண்முலையாள்

---

[1] சூதி—சூதம் - மாமரம். [2] கொற்றவன் - மதுரையில் ஆட்சி புரிந்த கூன் பாண்டியன்.

# 43. திருக்கோட்டாறு

**பண் - சீகாமரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கருந்த டங்கண்ணின் மாத ராரிசை
செய்யக் காரதிர் கின்ற பூம்பொழிற்
குருந்த மாதவியின் விரைமல்கு கோட்டாற்றில்
இருந்த எம்பெரு மானை யுள்கி
இணைய டிதொழு தேத்தும் மாந்தர்கள்
வருந்து மாறறியார்[1] நெறிசேர்வர் வானூடே. 1

நின்று மேய்ந்து நிவந்து மாகரி
நீரோ டும்மலர் வேண்டி வான்மழை
குன்றின் நேர்ந்துகுத்திப் பணிசெய்யுங்[2] கோட்டாற்றுள்
என்றும் மன்னிய எம்பி ரான்கழல்
ஏத்தி வானர சாள வல்லவர்
பொன்று மாறறியார் புகழார்ந்த புண்ணியரே. 2

விரவி நாளும் விழா விடைப்பொலி
தொண்டர் வந்து வியந்து பண்செயக்
குரவ மாரும் நீழற் பொழில்மல்கு கோட்டாற்றில்
அரவ நீள்சடை யானை யுள்கிநின்
றாத ரித்துமுன் அன்பு செய்தடி
பரவு[3] மாறுவல் லார்பழிபற் றறுப்பாரே. 3

அம்பின் நேர்விழி மங்கை மார்பலர்
ஆட கம்பெறு மாட மாளிகைக்
கொம்பி னேர்துகி லின்கொடியாடு கோட்டாற்றில்
நம்ப னேநட னேந லந்திகழ்
நாதனே யென்று காதல் செய்தவர்
தம்பின் நேர்ந்தறி யார்தடுமாற்ற வல்வினையே. 4

---

[1] இறைவனை இடைவிடாது நினைத்துத் தொழுபவர்கள் எத்துன்பத்தையும் அடையார்கள் என்பதை இவ்வடிகள் காட்டும்.
[2] இவ்வடிகள் இத்தலத்தில் வெள்ளையானை பூசித்துப் பேறு பெற்றதைக் குறிக்கும்; மாகரி - பெரிய யானை; இங்கு வெள்ளை யானையைக் குறிக்கும். [3] பரவுதல் - துதித்தல்.

பழைய தம்மடி யார்து திசெயப்
பாரு ளோர்களும் விண்ணு ளோர்தொழக்
குழலும் மொந்தை விழாவொலிசெய்யுங் கோட்டாற்றில்
கழலும் வண்சிலம் பும்மொ லிசெயக்
கானி டைக்கண மேத்த ஆடிய
அழக னென்றெழுவா ரணியாவர்[4] வானவர்க்கே. 5

பஞ்சின் மெல்லடி மாத ராடவர்
பத்தர் சித்தர்கள் பண்பு வைகலும்
கொஞ்சி இன்மொழியால் தொழில்மல்கு கோட்டாற்றில்
மஞ்ச னே[5] மணி யேம ணிமிடற்
றண்ண லேயென வுள்நெ கிழ்ந்தவர்
துஞ்சு மாறறியார் பிறவார்இத் தொல்நிலத்தே. 6

கலவ மாமயி லாளோர் பங்கனைக்
கண்டு கண்மிசை நீர்நெ கிழ்த்திசை
குலவு மாறுவல்லார் குடிகொண்ட கோட்டாற்றில்
நிலவு மாமதி சேர்ச டையுடை
நின்ம லாவென வுன்னு வாரவர்
உலவு வானவரின் உயர்வாகுவ துண்மையதே. 7

வண்ட லார்வயற் சாலி யாலைவ
ளம்பொ லிந்திட வார்பு னல்திரை
கொண்ட லார்கொணர்ந் தங்குலவுந்திகழ் கோட்டாற்றில்
தொண்டெ லாந்துதி செய்ய நின்ற
தொழில னேகழ லால ரக்கனை
மிண்டெ லாந்தவிர்த் தென்னுகந்திட்ட வெற்றிமையே. 8

கருதி வந்தடி யார்தொ ழுதெழக்
கண்ண னோடயன் தேடஆனை[6] யின்
குருதி மெய்கலப்ப உரிகொண்டு[7] கோட்டாற்றில்
விருதி னன்மட மாதும் நீயும்வி
யப்பொ டும்உயர் கோயில் மேவிவெள்
எருதுகந் தவனே இரங்காயுன தின்னருளே. 9

---

[4] ரணியார்வர் என்றும் பாடம். [5] மஞ்சன்—மைந்தன்-வலியுள்ளவன். [6] ஆனை-யானை; மரூஉப் பெயர். [7] கொண்ட என்று பாடம்.

உடையி லாதுழல் கின்ற குண்டரும்
ஊண ருந்தவத் தாய சாக்கியர்
கொடையி லாமனத்தார் குறையாருங் கோட்டாற்றில்
படையி லார்மழு வேந்தி யாடிய
பண்ப னேயிவ ரென்கொ லோநுனை
அடைகி லாதவண்ணம் அருளாயுன் னடியவர்க்கே. 10

கால னைக்கழ லாலு தைத்தொரு
காம னைக்கன லாகச் சீறிமெய்
கோல வார்குழ லாள்குடிகொண்ட கோட்டாற்றில்
மூல னைம்முடி வொன்றி லாதஎம்
முத்த னைப்பயில் பந்தன் சொல்லிய
மாலை பத்தும்வல்லார்க் கெளிதாகும் வானகமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரபஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வேதியன் விண்ணவ ரேத்தநின் றன்விளங் கும்மறை
ஓதிய வொண்பொரு ளாகிநின் றானொளி யார்கிளி
கோதிய தண்பொழில் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
ஆதியை யேநினைந் தேத்தவல் லார்க்கல்லல் இல்லையே. 1

ஏலம லர்க்குழல் மங்கைநல் லாளிம வான்மகள்
பாலம ருந்திரு மேனியெங் கள்பர மேட்டியும்
கோலம லர்ப்பொழில் சூழ்ந்தெழி லார்திருக் கோட்டாற்றுள்
ஆலநீ ழற்கீழ் இருந்தறஞ் சொன்னஅ ழகனே. 2

இலைமல்கு சூலமொன் றேந்தினு னும்இமை யோர்தொழ
மலைமல்கு மங்கையோர் பங்கனு யம்மணி கண்டனும்
குலைமல்கு தண்பொழில் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
அலைமல்கு வார்சடை யேற்றுகந் தஅழ கனன்றே. 3

ஊனம ரும்முட லுள்ளிருந் தவ்வுமை பங்கனும்
வானம ரும்மதி சென்னிவைத் தமறை யோதியும்
தேனம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
தானம ரும்விடை யானும்எங் கள்தலை வனன்றே. 4

வம்பல ரும்மலர்க் கோதைபா கம்மகிழ் மைந்தனும்
செம்பவ ளத்திரு மேனிவெண் ணீறணி செல்வனும்
கொம்பம ரும்மலர் வண்டுகெண் டுந்திருக் கோட்டாற்றுள்
நம்பனெ னப்பணி வார்க்கருள் செய்யெங்கள் நாதனே. 5.

பந்தம ரும்விரல் மங்கைநல் லாளொரு பாகமா
வெந்தம ரும்பொடிப் பூசவல் லவிகிர் தன்மிகும்
கொந்தம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
அந்தணனை நினைந் தேத்தவல் லார்க்கில்லை அல்லலே. 6

துண்டம ரும்பிறை சூடிநீ டுசுடர் வண்ணனும்
வண்டம ருங்குழல் மங்கைநல் லாளொரு பங்கனும்
தெண்டிரை நீர்வயல் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
அண்டமும் எண்டிசை யாகிநின் றஅழ கனன்றே. 7

இரவம ருந்நிறம் பெற்றுடை யஇலங் கைக்கிறை
கரவம ரக்கயி லையெடுத் தான்வலி செற்றவன்
குரவம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
அரவம ருஞ்சடை யான்அடி யார்க்கருள் செய்யுமே. 8

ஓங்கிய நாரணன் நான்முக னும்உண ராவகை
நீங்கிய தீயுரு வாகிநின் றநிம லன்நிழற்
கோங்கம ரும்பொழில் சூழ்ந்தெழி லார்திருக் கோட்டாற்றுள்
ஆங்கம ரும்பெரு மான்அம ரர்க்கம ரனன்றே. 9

கடுக்கொடுத் ததுவ ராடையர் காட்சியில் லாததோர்
தடுக்கிடுக் கிச்சம ணேதிரி வார்கட்குத் தன்னருள்
கொடுக்ககில் லாக்குழ கன்அம ருந்திருக் கோட்டாற்றுள்
இடுக்கணின் றித்தொழு வார்அம ரர்க்கிறை யாவரே. 10

கொடியுயர் மால்விடை யூர்தியி னன்திருக் கோட்டாற்றுள்
அடிகழ லார்க்கநின் றாடவல் லஅரு ளாளனைக்
கடிகம ழும்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன்சொல்
படியிவை பாடிநின் றாடவல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—ஐராவதேசுவரர்; தேவி—வண்டமர்பூங்குழலி.

---

## 44. திருஅம்பர்ப்பெருந்திருக்கோயில்*

**பண் - காந்தாரபஞ்சமம்**** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எரிதர அனல்கையில் ஏந்தி எல்லியில்
நரிதிரி கானிடை நட்டம் ஆடுவர்
அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில்[1] சேர்வரே. 1

மைய[2]கண் மலைமகள் பாக மாயிருள்
கையதோர் கனலெரி கனல ஆடுவர்
ஐயநன் பொருபுனல் அம்பர்ச் செம்பியர்
செய்யகண் ணிறைசெய்த கோயில் சேர்வரே. 2

மறைபுனை பாடலர் சுடர்கை மல்கவோர்
பிறைபுனை சடைமுடி பெயர ஆடுவர்
அறைபுனல் நிறைவயல் அம்பர் மாநகர்
இறைபுனை யெழில்வளர் இடம தென்பரே. 3

இரவுமல் கிளமதி சூடி யீடுயர்
பரவமல் கருமறை பாடி யாடுவர்
அரவமோ டுயர்செம்மல் அம்பர்க் கொம்பலர்
மரவமல் கெழில்நகர் மருவி வாழ்வரே. 4

சங்கணி குழையினர் சாமம் பாடுவர்
வெங்கனல் கனல்தர வீசி யாடுவர்
அங்கணி விழவமர் அம்பர் மாநகர்ச்
செங்கண்நல் இறைசெய்த கோயில் சேர்வரே. 5

---

* இஃது அம்பரில் உள்ள மாடக்கோயில் என்பது பெயர்ப் பொருள். பெருங்கோயில் என்பது மாடக்கோயில். இங்கு அம்மையார் திருவுருவம் கருப்பக்கிரகத்தில் மூலலிங்கத்தின் பின்னே அமைந்துள்ளது. ** இப்பதிகம் கோச்செங்கட் சோழர் திருப்பணியை வியந்து பாராட்டியது; முதல் ஏழு பாடல்களிலும் இறைவரது ஆடல் கூறப்பட்டுள்ளது. [1] அம்பர்-செங்கண்ணவன் கோயில்- அம்பர் என்னும் பெருநகரில் கோச்செங்கட் சோழர் எடுப்பித்த மாடக் கோயில். [2] மைய — மை எழுதிய.

கழல்வளர் காலினர் சுடர்கை மல்கவோர்
சுழல்வளர் குளிர்புனல் சூடி யாடுவர்
அழல்வளர் மறையவர் [3] அம்பர்ப் பைம்பொழில்
நிழல்வளர் நெடுநகர் இடம தென்பரே. 6.

இகலுறு சுடரெரி இலங்க வீசியே
பகலிடம் பலிகொளப் பாடி யாடுவர்
அகலிடம் மலிபுகழ் அம்பர் வம்பவிழ்
புகலிடம் நெடுநகர் புகுவர் போலுமே. 7

எரியன மணிமுடி இலங்கைக் கோன்றன
கரியன தடக்கைகள் அடர்த்த காலினர்
அரியவர் வளநகர் அம்பர் இன்பொடு
புரியவர் [4] பிரிவிலாப் பூதஞ் சூழவே. 8

வெறிகிளர் மலர்மிசை யவனும் வெந்தொழிற்
பொறிகிளர் அரவணைப் புல்கு செல்வனும்
அறிகில அரியவர் அம்பர்ச் செம்பியர் [5]
செறிகழல் இறைசெய்த கோயில் சேர்வரே. 9

வழிதலை பறிதலை யவர்கள் கட்டிய
மொழிதலைப் பயனென மொழியல் வம்மினோ
அழிதலை பொருபுனல் அம்பர் மாநகர்
உழிதலை யொழிந்துளர் உமையுந் தாமுமே. 10

அழகரை யடிகளை அம்பர் மேவிய
நிழல்திகழ் [6] சடைமுடி நீல கண்டரை
உமிழ்திரை யுலகினில் ஓதுவீர் கொண்மின்
தமிழ்கெழு விரகினன் தமிழ்செய் மாலையே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பிரமபுரிநாதர்; தேவி—பூங்குழல்நாயகி.

---

[3] அழல்வளர் மறையவர் - நித்தியாக்கினியை வளர்க்கும் அந்தணர்கள். [4] புரியவர்—இடைவிடாது சொல்பவர்; நினைப்பவர். [5] சிபி என்னும் சோழவாசனின் வமிசத்தில் வந்தவர் செம்பியர்; தத்திதாந்தநாமம். [6] நிழல்திகழ் — ஒளியுடைய.

## 45. திருஅம்பர்மாகாளம்*

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அடையார் புரமூன்றும் அனல்வாய் விழ[1] வெய்து
மடையார் புனலம்பர் மாகா ளம்மேய
விடையார் கொடியெந்தை வெள்ளைப் பிறைசூடும்
சடையான் கழலேத்தச் சாரா வினைதானே. 1

தேனார் மதமத்தந் திங்கள் புனல்சூடி
வானார் பொழிலம்பர் மாகா ளம்மேய
ஊனார் தலைதன்னிற் பலிகொண் டுழல்வாழ்க்கை
ஆனான் கழலேத்த அல்லல் அடையாவே. 2

திரையார் புனலோடு செல்வ மதிசூடி
விரையார் பொழிலம்பர் மாகா ளம்மேய
நரையார்[2] விடையூரும் நம்பான் கழல்நாளும்
உரையா தவர்கண்மேல் ஒழியா வூனம்மே. 3

கொந்தண்[3] பொழிற்சோலைக் கோல வரிவண்டு
மந்தம் மலியம்பர் மாகா ளம்மேய
கந்தம் கமழ்கொன்றை கமழ்புன் சடைவைத்த
எந்தை கழலேத்த இடர்வந் தடையாவே. 4

அணியார் மலைமங்கை ஆகம் பாகமாய்
மணியார் புனலம்பர் மாகா ளம்மேய
துணியா ரு[4]டையினான் துதைபொற் கழல்நாளும்
பணியா தவர்தம்மேற் பறையா பாவம்மே. 5

பண்டாழ் கடல்நஞ்சை உண்டு களிமாந்தி
வண்டார் பொழிலம்பர் மாகா ளம்மேய

---

* 'கோயில் திருமாகாளம்' என வழங்கப்பெறும். இஃது அம்பன் அம்பாசுரன் என்ற இரண்டு அரக்கரை வதைத்தபழி நீங்கக் காளி பூசித்த பதியாதலின் இப்பெயர் பெற்றது. இங்கு மாகாள இருடியரும் பூசித்துப் பேறுபெற்றனர். [1] அனலால்விழ என்றும், அனலாய்விழ என்றும் பாடம். [2] நரையார் - நரைத்ததுபோன்ற வெள்ளை நிறமுடைய, [3] கொந்தம் என்றும் பாடம். [4] துணியார்- துணித்தல் - துண்டித்தல், வெட்டுதல்.

விண்டார் புரம்வேவ மேருச் சிலையாகக்
கொண்டான் கழலேத்தக் குறுகா குற்றம்மே. 6

மிளிரும் அரவோடு வெள்ளைப் பிறைசூடி
வளரும் பொழிலம்பர் மாகா ளம்மேய
கிளருஞ் சடையண்ணல் கேடில் கழலேத்தத்
தளரும் உறுநோய்கள் சாருந் தவந்தானே. 7

கொலையார் மழுவோடு கோலச் சிலையேந்தி
மலையார் புனலம்பர் மாகா ளம்மேய
இலையார் திரிசூலப் படையான் கழல்நாளும்
நிலையா [5] நினைவார்மேல் நில்லா வினைதானே. 8

சிறையார் வரிவண்டு தேனுண் டிசைபாட
மறையார் நிறையம்பர் மாகா ளம்மேய
நறையார் மலரானும் மாலுங் காண்பொண்ணா
இறையான் கழலேத்த எய்தும் இன்பம்மே. 9

மாசூர் வடிவின்னார் மண்டை யுணல்கொள்வார்
கூசா துரைக்குஞ்சொற் கொள்கை குணமல்ல
வாசார் பொழிலம்பர் மாகா ளம்மேய
ஈசா என்பார்கட் கில்லை யிடர்தானே. 10

வெருநீர் கொள [6] வோங்கும் [7] வேணு புரந்தன்னுள்
திருமா மறைஞான சம்பந்தன் சேணார்
பெருமான் மலியம்பர் மாகா ளம்பேணி
உருகா வுரைசெய்வார் உயர்வான் அடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

**பு**ல்கு பொன்னிறம் புரிசடை நெடுமுடிப் போழிள மதிசூடிப்,
பில்கு தேனுடை நறுமலர்க் கொன்றையும் பிணையல் [1]செய் தவர்

---

[5] நிலையா - நிலைபெற்ற பொருளாக. [6] வெருநீர் - யாவரும் அச்சுறும் ஊழிவெள்ள நீர். வெரிநீர்கொள என்றும் பாடம். இதனை நீர்வெரிக்கொள என மாற்றுக. [7] ஓங்கும் - மிதக்கும்.
[1] பிணையல் - மாலையாகச் சேர்த்தல்.

மேய, மல்கு தண்டுறை அரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம், அல்லும் நன்பக லுந்தொழும் அடியவர்க் கருவினை அடையாவே. 1

அரவம் ஆட்டுவர் அந்துகில் புலியதள் அங்கையில் அனலேந்தி, இரவும் ஆடுவர் இவையிவர் சரிதைக ளி[1] சைவன பல பூதம், மரவந் தோய்பொழில் அரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம், பரவி யும்பணிந் தேத்தவல் லாரவர் பயன்தலைப் படுவாரே. 2

குணங்கள் கூறியுங் குற்றங்கள் பரவியுங் குரைகழ லடிசேரக், கணங்கள் பாடவுங் கண்டவர் பரவவுங் கருத்தறிந் தவர் மேய, மணங்கொள் பூம்பொழில் அரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம், வணங்கும் உள்ளமோ டணையவல் லார்களை வல்வினை யடையாவே. 3

எங்கு மேதுமோர் பிணியிலர் கேடிலர் இழைவளர் நறுங் கொன்றை, தங்கு தொங்கலுந் தாமமுங் கண்ணியுந் தாமகிழ்ந் தவர்மேய, மங்குல் தோய்பொழில் அரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம், கங்கு லும்பக லுந்தொழும் அடியவர் காதன்மை[2] யுடையாரே. 4

நெதியம்[3] என்னுள போகமற் றென்னுள நிலமிசை நலமாய், கதியம்[4] என்னுள வானவர் என்னுளர் கருதிய பொருள் கூடில், மதியந் தோய்பொழில் அரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம், புதிய பூவொடு சாந்தமும் புகையுங்கொண் டேத்துதல் புரிந்தோர்க்கே. 6

கண்ணு லாவிய கதிரொளி முடிமிசைக் கனல்விடு சுடர் நாகம், தெண்ணி லாவொடு திலதமு நகுதலை திகழவைத் தவர் மேய, மண்ணு லாம்பொழில் அரசிலின் வடகரை வருபுனல் மாகாளம், உண்ணி லாநினைப் புடையவ ரியாவரிவ் வுலகினில் உயர்வாரே. 6

தூசு தானரைத் தோலுடைக் கண்ணியஞ் சுடர்விடு நறுங் கொன்றை, பூசு வெண்பொடிப் பூசுவ தன்றியும் புகழ்புரிந் தவர்

[1] சரிதைகள்-சரிப்பவை; செய்பவை. [2] காதன்மை-பேரன்பு.
[3] நெதியம்-அருநிதியம். [4] கதியம், அம்சாரியை.

மேய, மாசு லாம்பொழில் அரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம், பேசும் நீர்மைய ரியாவரிவ் வுலகினிற் பெருமையைப் பெறுவாரே. 7

பவ்வ மார்கடல் இலங்கையர் கோன்றனைப் பருவரைக் கீழூன்றி, எவ்வந் தீரஅன் றிமையவர்க் கருள்செய்த இறைவன் உறைகோயில், மவ்வம்[5] தோய்பொழில் அரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம், கவ்வை[6] யால்தொழும் அடியவர் மேல்வினை கனலிடைச் செதிளன்றே. 8

உய்யுங் காரணம் உண்டென்று கருதுமின் ஒளிகிளர் மலரோனும், பைகொள் பாம்பணைப் பள்ளிகொள் அண்ணலும் பரவநின் றவர்மேய, மையுலாம்பொழில் அரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம், கையி னல்தொழு தவலமும் பிணியுந்தம் கவலையுங் களைவாரே. 9

பிண்டி பாலரும்[7] மண்டைகொள் தேரரும் பீலிகொண் டுழல்வாரும், கண்ட நூலருங் கடுந்தொழி லாளருங் கழறநின் றவர்மேய,[8] வண்டு லாம்பொழில் அரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம், பண்டு நாம்செய்த பாவங்கள் பற்றறப் பரவுதல் செய்வோமே. 10

மாறு தன்னொடு மண்மிசை யில்லது வருபுனல் மாகாளத், தீறும் ஆதியு மாகிய சோதியை யேறமர் பெருமானை, நாறு பூம்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன தமிழ்மாலை, கூறு வாரையுங் கேட்கவல் லாரையுங் குற்றங்கள் குறுகாவே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

படியுளார்[1] விடையினர் பாய்புலித் தோலினர் பாவநாசர்
பொடிகொள்மா மேனியர் பூதமார் படையினர் பூணநூலர்
கடிகொள்மா மலரிடும் அடியினர் பிடிநடை மங்கையோடும்
அடிகளார் அருள்புரிந் திருப்பிடம் அம்பர்மா காளந்தானே. 1

---

5 மவ்வம்-அழகு. 6 கவ்வை-ஒலி. 7 பிண்டிபாலர்-சமணருள் ஒரு சாரார். 8 இவ்வடிகள் அமணர்களின் வகையினைக் குறிக்கும்.
1 படியுளார் - உலகில் மறைந்து நிற்பவர்.

கையின்மா மழுவினர்[2] கடுவிடம் உண்டஎங் காளகண்டர்
செய்யமா மேனியர் ஊனமர் உடைதலைப் பலிதிரிவார்
வையமார் பொதுவினில் மறையவர் தொழுதெழ நடமதாடும்
ஐயன்மா தேவியோ டிருப்பிடம் அம்பர்மா காளந்தானே. 2

பரவின அடியவர் படுதுயர் கெடுப்பவர் பரிவிலார்பால்
கரவினர் கனலன வுருவினர் படுதலைப் பலிகொடேகும்
இரவினர் பகலெரி கானிடை யாடிய வேடர்பூணும்
அரவினர் அரிவையோ டிருப்பிடம் அம்பர்மா காளந்தானே. 3

நீற்றினர் நீண்டவார் சடையினர் படையினர் நிமலர்வெள்ளை
ஏற்றினர் எரிபுரி[3] கரத்தினர் புரத்துளார் உயிரைவவ்வும்
கூற்றினர் கொடியிடை முனிவுற நனிவருங் குலவுகங்கை
ஆற்றினர் அரிவையோ டிருப்பிடம் அம்பர்மா காளந்தானே. 4

புறத்தினர் அகத்துளர் போற்றிநின் றழுதெழும் அன்பர்சிந்தைத்
திறத்தினர் அறிவிலாச் செதுமதித் தக்கன்றன் வேள்விசெற்ற
மறத்தினர் மாதவர் நால்வருக் காலின்கீழ் அருள்புரிந்த
அறத்தினர் அரிவையோ டிருப்பிடம் அம்பர்மா காளந்தானே. 5

பழகமா மலர்பறித் திண்டைகொண் டிறைஞ்சுவார் பாற்செறிந்த
குழகனார் குணம்புகழ்ந் தேத்துவா ரவர்பலர் கூடநின்ற
கழகனார்[4] கரியுரித் தாடுகங் காளர்நங் காளியேத்தும்
அழகனார்[5] அரிவையோ டிருப்பிடம் அம்பர்மா காளந்தானே. 6

சங்கவார் குழையினர் தழலன வுருவினர் தமதருளே
எங்குமா யிருந்தவர் அருந்தவ முனிவருக் களித்துகந்தார்
பொங்குமா புனல்பரந் தரிசிலின் வடகரை திருத்தம்பேணி
அங்கமா றோதுவார் இருப்பிடம் அம்பர்மா காளந்தானே. 7

பொருசிலை மதனனைப் பொடிபட விழித்தவர் பொழில்இலங்கைக்
குரிசிலைக் குலவரைக் கீழுற அடர்த்தவர் கோயில்கூறில்
பெருசிலை நலமணி மீலியோ டேலமும் பெருகநுந்தும்
அரிசிலின் வடகரை அழகமர் அம்பர்மா காளந்தானே. 8

---

[2] கையின்மான் மழுவினர் என்றும் பாடம். [3] எரியுரி - தீயை ஏந்தி வளர்க்கும். [4] கழகனார் - கூட்டத்துள் உறைபவர். [5] காளியேத்தும் அழகனார் என்றது இத்தலத்தில் காளிதேவி பூசித்தமையைப் பாராட்டிக் குறிப்பதாம்.

வரியரா அதன்மிசைத் துயின்றவன் தானும்மா மலருளானும்
எரியராம் அணிகழ லேத்தவொண் ணுவகை யுயர்ந்துபின்னும்
பிரியராம் அடியவர்க் கணியராய்ப் பணிவிலா தவருக்கென்றும்
அரியராய் அரிவையோ டிருப்பிடம் அம்பர்மா காளந்தானே. 9

சாக்கியக் கயவர்வன் தலைபறிக் கையரும் பொய்யினூல்
ஆக்கிய மொழியவை பிழையவை யாதலில் வழிபடுவீர்
வீக்கிய அரவுடைக் கச்சையா னிச்சையா னவர்கட்கெல்லாம்
ஆக்கிய அரனுறை அம்பர்மா காளமே யடைமின்நீரே. 10

செம்பொன்மா மணிகொழித் தெழுதிரை வருபுனல் அரிசில்சூழ்ந்த
அம்பர்மா காளமே கோயிலா அணங்கினோ டிருந்தகோனைக்
கம்பினார் நெடுமதிற்[6] காழியுள் ஞானசம் பந்தன்சொன்ன
நம்பிநாள்[7]மொழிபவர்க்கில்லையாம்வினைநலம்பெறுவர்[8]தாமே.11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—காளகண்டேசுவரர்; தேவி—பட்சநாயகி.

---

## 46. திருமீயச்சூர்*

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காயச் செவ்வி[1]க் காமற் காய்ந்து கங்கையைப்
பாயப் படர்புன் சடையிற் பதித்த பரமேட்டி
மாயச் சூர்[2] அன் றறுத்த மைந்தன் தாதைதன்
மீயச் சூரே தொழுது வினையை வீட்டுமே. 1

பூவார் சடையின் முடிமேற் புனலர் அனல்கொள்வர்
நாவார் மறையர் பிறையர் நறவெண் டலை[3]யேந்தி

---

[6] கம்பினார் நெடுமதில் - ஆகாயங் கீழ்ப்பட்டிருக்க மேற்பட்ட மதில்; [7] நாள் - நாளுநாளும். [8] வினை இல்லையாம்; நலம் பெறுவர் எனக் கூட்டுக. * இது சூரியன் சுவாமியையும் அம்மையாரையும் யானைமேல் வைத்து வழிபட்ட தலமாகும். இங்குக் கோயில் விமானம் யானை உட்கார்ந்திருப்பதுபோல் உள்ளதால், ஆனைமாடம் எனப் பெயர் பெறும். [1] செவ்வி - அழகு. [2] மாயச்சூர் - மாயம்வல்ல சூரர் (முதல்). [3] நகுவெண்டலை என்றும் பாடம்.

ஏவார் மலையே சிலையாக் கழியம் பெரிவாங்கி
மேவார் புரமூன் றெரித்தார் மீயச் சூராரே. 2

பொன்னேர் கொன்றை மாலை புரளும் அகலத்தான்
மின்னேர் சடைக ளுடையான் மீயச் சூரானைத்
தன்னேர் பிறரில் லானைத் தலையால் வணங்குவார்
அந்நே ரிமையோர் உலகம் எய்தல் அரிதன்றே.[4] 3

வேக மதநல் லியானை வெருவ வுரிபோர்த்துப்
பாகம் உமையோ டாகப் படிதம்[5] பலபாட
நாகம் அரைமே லசைத்து நடமா டியநம்பன்
மேகம் உரிஞ்சும் பொழில்சூழ் மீயச் சூரானே. 4

விடையார் கொடியார் சடைமேல் விளங்கும் பிறைவேடம்
படையார் பூதஞ் சூழப் பாட லாடலார்
பெடையார் வரிவண் டணையும் பிணைசேர் கொன்றையார்
விடையார் நடை[6]யொன் றுடையார் மீயச் சூராரே. 5

குளிருஞ் சடைகொள் முடிமேற் கோல மார்கொன்றை
ஒளிரும் பிறையொன் றுடையா னொருவன் கைகோடி[7]
நளிரும் மணிசூழ் மாலை நட்டம் நவில்நம்பன்
மிளிரும் அரவம் உடையான் மீயச் சூரானே. 6

நீலவடிவர் மிடறு[8] நெடியர் நிகரில்லார்
கோல வடிவு தமதாங் கொள்கை யறிவொண்ணார்[9]
காலர் கழலர் கரியின் உரியர் மழுவாளர்
மேலர் மதியர் விதியர் மீயச் சூராரே. 7

புலியின் உரிதோ லாடை பூசும் பொடிநீற்றர்
ஒலிகொள் புனலோர் சடைமேற் கரந்தார் உமையஞ்ச
வலிய திரள்தோள் வன்கண் அரக்கர் கோன்தன்னை
மெலிய வரைக்கீழ் அடர்த்தார் மீயச் சூராரே. 8

காதின் மிளிருங் குழையர் கரிய கண்டத்தார்
போதி லவனும் மாலுந் தொழப்பொங் கெரியானார்

---

[4] எய்தற்கரிதன்றே என்றும் பாடம். [5] படிதம் — பாடுதல்; இங்குப் பாட்டு. [6] விடையார் நடை - இடபத்தின்மேல் ஊர்ந்து வருதல். [7] கைகோடி - கைகூட்டிவளைத்து. [8] நீலவடிவாமிடறு என்றும் பாடம். [9] இயறிவண்ணார் என்றும் பாடம்.

கோதி வரிவண் டறைபூம் பொய்கைப் புனல்மூழ்கி
மேதி படியும் வயல்சூழ் மீயச் சூராரே. 9

கண்டார் நாணும் படியார் கலிங்க முடைபட்டைக்
கொண்டார் சொல்லைக் குறுகா ருயர்ந்த கொள்கையார்
பெண்டான் பாக முடையார் பெரிய வரைவில்லால்
விண்டார் புரமூன் றெரித்தார் மீயச் சூராரே. 10

வேட முடைய பெருமா னுறையும் மீயச்சூர்
நாடும் புகழார் புகலி ஞானசம் பந்தன்
பாட லாய தமிழீ ரைந்தும் மொழிந்துள்கி
ஆடும் அடியார் அகல்வா னுலகம் அடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—முயற்சிநாதேசுவரர்; தேவி—சுந்தரநாயகி.

---

## 47. திருத்திலதைப்பதி*

பண் - செவ்வழி [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொடிகள்பூசிப் பலதொண்டர்[1] கூடிப் புலர்காலையே
அடிகளாரத் தொழுதேத்த நின்றவ் வழகன்னிடம்
கொடிகளோங்கிக் குலவும் விழவார் திலதைப்பதி
வடிகொள்சோலை மலர் மணங்கமழும் மதிமுத்தமே.[2] 1

தொண்டர்மிண்டிப் புகைவிம்மு சாந்துங்கமழ் துணையலு[3]ம்
கொண்டுகண்டார் குறிப்புணர நின்ற குழகன்னிடம்
தெண்டிரைப்பூம் புனலரிசில் சூழ்ந்த திலதைப்பதி
வண்டுகெண்டுற் றிசை[4] பயிலுஞ் சோலை மதிமுத்தமே. 2

---

* இராம லட்சுமணர் தந்தைக்குத் திலதர்ப்பணம் செய்த பதி ஆதலின் இப்பெயர் பெற்றது என்பர். தற்போது இத்தலம் எழுத்து நிலைமாறிச் 'சிதலைப்பதி' என்று வழங்குகிறது. [1] பல தொண்டர் - கபாலம் - பாசுபதம் முதலிய பல வேடச் சைவர். [2] மதிமுத்தம் - கோயிலின் பெயர்; இது சந்திரன் பூசித்துப் பேறு பெற்றமையால் 'மதிமுத்தம்' என்னும் பெயர் பெற்றுள்ளது. [3] துணையல் - மாலை. [4] கெண்டிற்றிசை என்றும் பாடம்.

அடலுளேறுய்த் துகந்தான் அடியார் அமரர்தொழக்
கடலுள்நஞ்சம் அமுதாக வுண்ட கடவுள்ளிடம்
திடலடங்கச் செழுங்கழனி சூழ்ந்த திலதைப்பதி
மடலுள்வாழைக் கனிதேன் பிலிற்றும் மதிமுத்தமே. 3

கங்கைதிங்கள் வன்னிதுன் எருக்கின்றொடு கூவிளம்
வெங்கண்நாகம் விரிசடையில் வைத்த விகிர்தன்னிடம்
செங்கயல்பாய் புனலரிசில்[5] சூழ்ந்த திலதைப்பதி
மங்குல்தோயும் பொழில்சூழ்ந் தழகார் மதிமுத்தமே. 4

புரவியேழும் மணிபூண் டியங்குங்கொடித் தேரினன்[6]
பரவிநின்று வழிபாடு செய்யும்பர மேட்டியூர்
விரவிஞாழல் விரிகோங்கு வேங்கைசுர புன்னைகள்
மரவமவ்வல் மலருந் திலதைம் மதிமுத்தமே. 5

விண்ணர்வேதம் விரித்தோத வல்லார் ஒருபாகமும்
பெண்ணர்எண்ணார் எயில் செற்றுகந்த பெருமானிடம்
தெண்ணிலாவின் ஒளிதீண்டு சோலைத் திலதைப்பதி
மண்ணுளார்வந் தருள்பேண நின்றம் மதிமுத்தமே. 6

ஆறுசூடி யடையார்புரஞ் செற்றவர் பொற்றொடி
கூறுசேரும் உருவர்க் கிடமாவது கூறுங்கால்
தேறலாரும் பொழில் சூழ்ந்தழகார் திலதைப்பதி
மாறிலாவண் புனலரிசில் சூழ்ந்தம் மதிமுத்தமே. 7

கடுத்துவந்த கனல்மேனி யினன்கரு வரைதனை
எடுத்தவன்றன் முடிதோள் அடர்த்தார்க் கிடமாவது
புடைக்கொள்பூகத் திளம்பாளை புல்கும் மதுப்பாயவாய்
மடுத்துமந்தி யுகளுந் திலதைம் மதிமுத்தமே. 8

படங்கொள்நாகத் தணையானும் பைந்தா மரையின்மிசை
இடங்கொள்நால்வே தனுமேத்த நின்ற இறைவன்னிடம்
திடங்கொள்நாவின் இசைதொண்டர் பாடுந் திலதைப்பதி
மடங்கல்வந்து வழிபாடு செய்யும் மதிமுத்தமே. 9

புத்தர்தேரர் பொறியில் சமணர்க்கு வீறிலாப்
பித்தர்சொன்னம் மொழிகேட்கி லாத பெருமானிடம்

---

[5] அரிசில் - அரிசொல் ஆறு. [6] இவ்வடிகள் சூரியன் பூசித்துப் பேறு பெற்றதைக் குறிக்கும்.

பத்தர்சித்தர் பணிவுற் றிறைஞ்சுந் திலதைப்பதி
மத்தயானை வழிபாடு செய்யும் மதிமுத்தமே. 10

மந்தமாரும் பொழில் சூழ்திலதைம் மதிமுத்தர்மேல்
கந்தமாருங் கடற்காழி யுள்ளான் தமிழ்ஞானசம்
பந்தன்மாலை பழிதீர நின்றேத்த வல்லார்கள்போய்ச்
சிந்தைசெய்வார் சிவன்சேவடி சேர்வது திண்ணமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—முத்தீசுவரர், மதிமுத்தர்; தேவி—பொற்கொடிநாயகி.

## 48. திருப்பாம்புரம்*

பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சீர்ணிதிகழ்திரு மார்பில்வெண்ணூலர் திரிபுரமெரிசெய்த செல்வர், வாரணிவனமுலை மங்கையோர்பங்கர் மான்மறியேந்திய மைந்தர், காரணிமணிதிகழ் மிடறுடையண்ணல் கண்ணுதல் விண்ணவரேத்தும், பாரணிதிகழ்தரு நான்மறையாளர் பாம்புர நன்னகராரே. 1

கொக்கிறகோடு கூவிளமத்தம் கொன்றையொ டெருக்கணி சடையர், அக்கினொடாமை பூண்டழகாக அனலதுஆடுமெம் மடிகள், மிக்கநல்வேத வேள்வியுளெங்கும் விண்ணவர்விரைமலர் தூவப், பக்கம்பல்பூதம் பாடிடவருவார் பாம்புர நன்னகராரே. 2

துன்னலினாடை யுடுத்ததன்மேலோர் சூறை[1] நல்லரவது சுற்றிப், பின்னுவார்சடைகள் தாழவிட்டாடிப் பித்தராய்த்திரியும்எம் பெருமான், மன்னுமாமலர்கள் தூவிடநாளும் மாமலையாட்டியுந் தாமும், பன்னுநான்மறைகள் பாடிடவருவார் பாம்புர நன்னகராரே. 3

துஞ்சுநாள்துறந்து தோற்றமுமில்லாச் சுடர்விடுசோதியெம் பெருமான், நஞ்சுசேர்கண்டம் உடையஎன்நாதர் நள்ளிருள்நடஞ் செயும் நம்பர், மஞ்சுதோய்சோலை மாமயிலாட மாடமாளிகை

* பாம்பரசனாகிய ஆதிசேடன் பூசித்தனால் இப்பெயர்பெற்றது.
[1] சூறை - (உயிரைக்) கொள்ளைகொள்ளும்.

தன்மேலேறிப், பஞ்சுசேர்மெல்லடிப் பாவையர்பயிலும் பாம்புர நன்னகராரே. 4

நதியதன் அயலே நகுதலைமாலை நாண்மதிசடைமிசை யணிந்து, கதியதுவாகக் காளிமுன்காணக் கானிடைநடஞ்செய்த கருத்தர், விதியதுவழுவா வேதியர்வேள்வி செய்தவர்ஓத்தொலி ஓவாப், பதியதுவாகப் பாவையுந்தாமும் பாம்புர நன்னகராரே. 5

ஓதிநன்குணர்வார்க் குணர்வுடையொருவர் ஒளிதிகழுருவஞ் சேர் ஒருவர், மாதினையிடமா வைத்தஎம்வள்ளல் மான்மறியேந் திய மைந்தர், ஆதிநீ அருளென் றமரர்கள்பணிய அலைகடல் கடையஅன் றெழுந்த, பாதிவெண்பிறைசடை வைத்தஎம்பரமர் பாம்புர நன்னகராரே. 6

மாலினுக்கன்று சக்கரமீந்து மலரவற்கொருமுகம் ஒழித்து, ஆலின்கீழறமோர் நால்வருக்கருளி அனலதுஆடும்எம் மடிகள், காலனைக்காய்ந்து தம்கழலடியாற் காமனைப்பொடிபட நோக்கிப், பாலனுக்கருள்கள் செய்தஎம்அடிகள் பாம்புர நன்னகராரே. 7

விடைத்த[2]வல்லரக்கன் வெற்பினையெடுக்க மெல்லியதிருவிர லூன்றி, அடர்த்தவன்தனக்கன் றருள்செய்தஅடிகள் அனலது ஆடும்எம் மண்ணல், மடக்கொடியவர்கள் வருபுனலாட வந்திழி அரிசிலின் கரைமேல், படப்பை[3]யிற்கொணர்ந்து பருமணிசிதறும் பாம்புர நன்னகராரே. 8

கடிபடுகமலத் தயனொடுமாலுங் காதலோடடிமுடி தேடச், செடி[4] படுவினைகள் தீர்த்தருள்செய்யுந் தீவணரெம்முடைச் செல்வர், முடியுடையமரர் முனிகணத்தவர்கள் முறைமுறையடிபணிந் தேத்தப், பாடியதுவாகப் பாவையுந்தாமும் பாம்புர நன்னகராரே. 9

குண்டர்சாக்கியருங் குணமிலாதாருங் குற்றுவிட்டுடுக் கையர்[7] தாமுங், கண்டவாறுரைத்துக் கால்நிமிர்த்துண்ணும்[6] கையர்தாமுள்ளவா றறியார், வண்டுசேர்க்குழலி மலைமகள்நடுங்க

---

[2] விடைத்தல் - பெருங்கோபம். [3] படப்பை - வயல். [4] செடி - குற்றம். [5] குற்றுவிட்டுடுக்கையர் - தலைமயிரைப்பறித்து உடையை நீக்கியவர்கள். குற்றல் - பறித்தல். [6] கால்நிமிர்த்துண்ணும்-நின்று உண்ணும்.

வாரணமுரிசெய்து போர்த்தார், பண்டுநாம்செய்த பாவங்கள் தீர்ப்பார் பாம்புர நன்னகராரே. 10

பார்மலிந்தோங்கிப் பருமதில்சூழ்ந்த பாம்புர நன்னகராரைக், கார்[7]மலிந்தழகார் கழனிசூழ்மாடக் கழுமலமுதுபதிக் கவுணி, நார்மலிந்தோங்கும் நன்மறைஞான சம்பந்தன்செந்தமிழ் வல்லார், சீர்மலிந்தழகார் செல்வமதோங்கிச் சிவனடி நண்ணுவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பாம்புரேசுவரர்; தேவி—வண்டார்பூங்குழலி.

---

## 49. திருச்சிறுகுடி*

திருமுக்கால். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

திடமலி மதிலணி சிறுகுடி மேவிய
படமலி அரவுடை யீரே
படமலி அரவுடை யீருமைப் பணிபவர்
அடைவதும் அமருல கதுவே. 1

சிற்றிடை யுடன்மகிழ் சிறுகுடி மேவிய
சுற்றிய சடைமுடி யீரே
சுற்றிய சடைமுடி யீரும தொழுகழல்
உற்றவர் உறுபிணி யிலரே. 2

தெள்ளிய புனலணி சிறுகுடி மேவிய
துள்ளிய மானுடை யீரே
துள்ளிய மானுடை யீரும தொழுகழல்
உள்ளுதல் செயநலம் உறுமே. 3

செந்நெல வயலணி சிறுகுடி மேவிய
ஒன்னலர் புரமெரித் தீரே
ஒன்னலர் புரமெரித் தீருமை உள்குவார்
சொல்நலம் உடையவர் தொண்டே. 4

---

[7] கார்-மேகம். * இக்கோயில் மிகச் சிறியது. கருடன், செவ்வாய், கந்தருவர் முதலியோர் பூசித்தது.

செற்றினின் மலிபுனற் சிறுகுடி மேவிய
பெற்றிகொள் பிறைமுடி யீரே
பெற்றிகொள் பிறைமுடி யீருமைப் பேணிநஞ்
சற்றவர்[1] அருவினை யிலரே. 5

செங்கயல் புனலணி சிறுகுடி மேவிய
மங்கையை இடமுடை யீரே
மங்கையை இடமுடை யீருமை வாழ்த்துவார்
சங்கைய திலர்நலர் தவமே.[2] 6

செறிபொழில் தழுவிய சிறுகுடி மேவிய
வெறிகமழ் சடைமுடி யீரே
வெறிகமழ் சடைமுடி யீருமை விரும்பிமெய்ந்
நெறியுணர் வோருயர்ந் தோரே. 7

திசையவர் தொழுதெழு சிறுகுடி மேவிய
தசமுகன் உரநெரித் தீரே
தசமுகன் உரநெரித் தீருமைச் சார்பவர்
வசையறும் அதுவழி பாடே. 8

செருவரை வயலமர் சிறுகுடி மேவிய
இருவரை அசைவுசெய் தீரே
இருவரை அசைவுசெய் தீருமை யேத்துவார்
அருவினை யொடுதுய ரிலரே. 9

செய்த்தலை புனலணி சிறுகுடி மேவிய
புத்தரோ டமண்புறத் தீரே
புத்தரோ டமண்புறத் தீருமைப் போற்றுதல்
பத்தர்கள் தம்முடைப் பரிசே. 10

தேனமர் பொழிலணிசிறுகுடி மேவிய
மானமர் கரமுடை யீரே
மானமர் கரமுடை யீருமை வாழ்த்திய
ஞானசம் பந்தன தமிழே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மங்களநாதர் ; தேவி—மங்களநாயகி.

---

[1] நஞ்சு அற்றவர் - மனமுருகி இருவகைப் பற்றும் அற்றவர்.
[2] நலதவமே என்றும் பாடம்.

## 50. திருவீழிமிழலை*

**பண் - நட்டபாடை [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

சடையார்புன லுடையானொரு சரி[1] கோவணம் உடையான்
படையார்மழு வுடையான்பல பூதப்படை யுடையான்
மடமான்விழி யுமைமாதிடம் உடையானெனை யுடையான்
விடையார்கொடி யுடையானிடம் வீழிம்மிழலையே. 1

ஈருய்முத லொன்ருயிரு பெண்ணண்குண மூன்ருய்
மாருமறை நான்காய்வரு பூதம்அவை ஐந்தாய்
ஆருர்சுவை ஏழோசையொ டெட்டுத்திசை தாஞய்
வேருய்உடன் ஆனுன்இடம் வீழிம்மிழலையே.[2] 2

வம்மின்னடி யீர்நாண்மல ரிட்டுத்தொழு துய்ய
உம்மன்பினே டெம்மன்புசெய் தீசன்உறை கோயில்
மும்மென்றி[3]சை முரல்வண்டுகள் கெண்டித்திசை யெங்கும்
விம்மும்பொழில் சூழ்தண்வயல் வீழிம்மிழலையே. 3

பண்ணும்பதம் ஏழும்[4] பல வோசைத்தமி ழவையும்
உண்ணின்றதொர் சுவையும்உறு தாளத்தொலி பலவும்
மண்ணும்புனல் உயிரும்வரு காற்றுஞ்சுடர் மூன்றும்
விண்ணும்முழு தானுனிடம் வீழிம்மிழலையே. 4

ஆயாதன சமயம்பல அறியாதவனெறியின்
தாயானவன் உயிர்கட்குமுன் தலையானவன் மறைமுத்

---

* ஊரெங்கும் வீழிச்செடிகள் மிகுந்துள்ளமையால் இப்பெயர் பெற்றது. [1] சரித்தல் - நகருதல். [2] இச்செய்யுள் ஒன்று முதல் எட்டுவரை ஏறிவரும் எண்ணலங்காரம். இங்கு ஆய்என முன்வருபவை இறைவன் உலகுயிர்களேயாய் நிற்கும் முறைமையினை உணர்த்தும். வேருய் - இறைவன் அவற்றினின்றும் வேருயிருக்கும் முறைமையினையும், உடன் ஆனுன் - இவ்வாறு ஒன்ருயும் வேருயும் இருப்பினும் அதனேடு அமையாது அவற்ருேடு உடனுகிக் கலந்து நிற்கும் முறைமையினையும் உணர்த்தின. இம்மூன்று நிலைகளே அவையே(யாய்); தானே(யாய்) ; அவையே தானேயாய் என சிவஞான போதத்துள் கூறப்பட்டுள்ளன., இப்பாட்டுச் சைவத்தின் உயிர்நாடி ஆகும். [3] மும்மென்று - ஒலிக்குறிப்பு. [4] பதம் ஏழு - ஏழிசை.

தீயானவன் சிவனெம்மிறை செல்வத்திரு ஆரூர்
மேயானவன் உறையும்மிடம் வீழிம்மிழ லையே. 5

கல்லால்நிழற் கீழாயிடர் காவாயென வானோர்
எல்லாம்ஒரு தேராயயன் மறைபூட்டிநின் றுய்ப்ப
வல்லாய்[5] எரி காற்றீர்க்கரி கோல்வாசுகி நாண்கல்
வில்லால்எயில் எய்தானிடம் வீழிம்மிழ லையே. 6

கரத்தான்[6] மலி சிரத்தான்கரி யுரித்தாயதொர் படத்தான்
புரத்தார்பொடி படத்தன்னடி பணிமூவர்கட் கோவா
வரத்தான்மிக அளித்தானிடம் வளர்புன்னை முத் தரும்பி
விரைத்தாதுபொன் மணியீன்றணி வீழிம்மிழ லையே. 7

முன்னிற்பவர் இல்லாமுரண் அரக்கன்வட கயிலை
தன்னைப்பிடித் தெடுத்தான்முடி தடந்தோளிற வூன்றிப்
பின்னைப்பணிந் தேத்தப்பெரு வாள்பேரொடுங் கொடுத்த
மின்னிற்பொலி சடையானிடம் வீழிம்மிழ லையே. 8

பண்டேழுல குண்டானவை கண்டானு[7]முன் அறியா
ஒண்டீயுரு வானான்உறை கோயில்நிறை பொய்கை
வண்டாமரை மலர்மேல்மட அன்னந்நடை பயில
வெண்டாமரை செந்தாதுதிர் வீழிம்மிழ லையே. 9

மசங்கற்[8] சமண் மண்டைக்கையர் குண்டக்குண மிலிகள்
இசங்கும்[9] பிறப் பறுத்தானிட மிருந்தேன்களித் திரைத்துப்
பசும்பொற்கிளி களிமஞ்ஞைகள் ஒளிகொண்டெழு பகலோன்
விசும்பைப்பொலி விக்கும்பொழில் வீழிம்மிழ லையே. 10

வீழிம்மிழ லைம்மேவிய விகிர்தன்றனை விரைசேர்
காழிந்நகர்க் கலைஞானசம் பந்தன்தமிழ் பத்தும்
யாழின்இசை வல்லார்சொலக் கேட்டாரவ ரெல்லாம்
ஊழின்மலி[10] வினைபோயிட வுயர்வானடை வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

[5] வல்வாய் என்றும் பாடம். [6] கரத்தான் -(கண்டத்தில்) விடத்தையுடையவன்; கரம் - விஷம். [7] அவை கண்டான் - அவ்வேழுலகைப்படைத்த பிரமன். காணல் - படைத்தல். [8] மசங்கல் - மயங்கல். [9] இசங்கல் - இயங்கல். [10] ஊழின்வலி என்றும் பாடம்.

திருவிராகம். பண் - நட்டபாடை
திருச்சிற்றம்பலம்

நடமில வியமலை நிறுவிபொர் தழலுமிழ் தருபட அரவுகொ,
டடல்அசு ரரொடம ரர்கள்அலை கடல்கடை வுழியெழு மிகுசின,
விடம்அடை தருமிட றுடையவன் விடைமிசை வருமவ னுறைபதி,
திடமலி தருமறை முறையுணர் மறையவர் நிறைதிரு மிழலையே. 1

தரையொடு திவி[1] தல நலிதரு தகுதிற லுறுசல தரனது,
வரையன தலைவிசை யொடுவரு திகிரியை அரிபெற அருளினன்,
உரைமலி தருசுர நதிமதி பொதிசடை யவனுறை பதிமிகு, திரை
மலி கடல்மண லணிதரு பெறுதிடர் வளர்திரு மிழலையே. 2

மலைமகள் தனையிகழ் வதுசெய்த மதியறு[2] சிறுமன வனதுயர்,
தலையினொ டழலுரு வனகரம் அறமுனி வுசெய்தவ னுறைபதி,
கலைநில வியபுல வர்களிடர் களைதரு கொடைபயில் பவர்[3]மிகு,
சிலைமலி மதிள்புடை தழுவிய திகழ்பொழில் வளர்திரு மிழலையே.

மருவலர் புரமெரி யினின்மடி தரவொரு கணைசெல நிறுவிய,
பெருவலி யினன்நலம் மலிதரு கரனுர மிகுபிணம் அமர்வன,
இருளிடை யடையுற வொடுநட விசையுறு பரனினி துறைபதி,
தெருவினில் வருபெரு விழவொலி மலிதர வளர்திரு மிழலையே. 4

அணிபெறு வடமர நிழலினி லமர்வொடும் அடியிணை யிருவர்
கள், பணிதர அறநெறி மறையொடும் அருளிய பரனுறை விட
மொளி, மணிபொரு வருமர கதநில மலிபுன லணைதரு வயலணி,
திணிபொழில் தருமணம் மதுநுக ரறுபத முரல்திரு மிழலையே. 5

வசையறு வலிவன சரவுரு வதுகொடு நினைவரு தவமுயல்,
விசையன திறன்மலை மகளறி வுறுதிற லமர்மிடல் கொடுசெய்து,
அசைவில படையருள் புரிதரு மவனுறை பதியது மிகுதரு, திசை
யினின் மலர்குல வியசெறி பொலின்மலி தருதிரு மிழலையே. 6

நலமலி தருமறை மொழியொடு நதியுறு புனல்புகை யொளி
முதல், மலரவை கொடுவழி படுதிறன் மறையவ னுயிரது கொள
வரு, சலமலி தருமற லிதனுயிர் கெடவுதை செய்தவ னுறைபதி,
திலகமி தெனவுல குகள்புகழ் தருபொழி லணிதிரு மிழலையே. 7

---

[1] திவி - சுவர்க்கம். [2] மதியறு - அறிவு இழந்த. [3] கொடை யயில்பவர் — ஈகையாளர்.

அரனுறை தருகயி லையைநிலை குலைவது செய்ததச முகனது, கரமிரு பதுநெரி தரவிரல் நிறுவிய கழலடி யுடையவன், வரன் முறை யுலகவை தருமலர் வளர்மறை யவன்வழி வழுவிய, சிரமது கொடுபலி திரிதரு சிவனுறை பதிதிரு மிழலையே. 8

அயனொடும் எழிலமர் மலர்மகள் மகிழ்கணன் அளவிட[3] லொழியவொர், பயமுறு வகைதழல் நிகழ்வதொர் படியுரு வது வர வரன்முறை, சயசய வெனமிகு துதிசெய வெளியுரு வியவவ னுறைபதி, செயநில வியமதில் மதியது தவழ்தர வுயர்திரு மிழலையே. 9

இகழுரு வொடுபறி தலைகொடு மிழிதொழில் மலிசமண் விரகினர், திகழ்துவ ருடையுடல் பொதிபவர் கெடஅடி யவர்மிக அருளிய, புகழுடை யிறையுறை பதிபுன லணிகடல் புடைதழு வியபுவி, திகழ்சுரர் தருநிகர்[4] கொடையினர் செறிவொடு திகழ் திரு மிழலையே. 10

சினமலி கரியுரி செய்தசிவ னுறைதரு திருமிழ லையைமிகு, தனமனர் சிரபுர நகரிறை தமிழ்விர கனதுரை யொருபதும், மனமகிழ் வொடுபயில் பவரெழின் மலர்மகள் கலைமகள்சயமகள், இனமலி புகழ்மக ளிசைதர இருநில னிடையினி தமர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அரையார் விரிகோ வணஆடை
நரையார் விடையூர் திநயந்தான்
விரையார் பொழில்வீ ழிம்மிழலை
உரையால் உணர்வார் உயர்வாரே. 1

புனைதல் புரிபுன் சடைதன்மேல்
கனைதல் லொருகங் கைகரந்தான்
வினையில் லவர்வீ ழிம்மிழலை
நினைவில் லவர்நெஞ் சமும்நெஞ்சே.[1] 2

---

[3] மகிழ்வண னளவிட என்றும் பாடம். [4] நிகழ் என்றும் பாடம்.
[1] நெஞ்சமும் நெஞ்சே - நெஞ்சம் நெஞ்சாமோ? ஆகாது என வினு எதிர்மறை குறித்தது.

அழவல் லவரா டியும்பாடி
எழவல் லவரெந் தையடிமேல்
விழவல் லவர்[2] வீ ழிம்மிழலை
தொழவல் லவர்நல் லவர்தொண்டே. 3

உரவம் புரிபுன் சடைதன்மேல்
அரவம் அரையார்த் தஅழகன்
விரவும் பொழில்வீ ழிம்மிழலை
பரவும் அடியார் அடியாரே.[3] 4

கரிதா கியநஞ் சணிகண்டன்
வரிதா கியவண் டறைகொன்றை
விரிதார் பொழில்வீ ழிம்மிழலை
உரிதா நினைவார் உயர்வாரே. 5

சடையார் பிறையான் சரி[4]பூதப்
படையான் கொடிமே லதொர்பைங்கண்
விடையான் உறைவீ ழிம்மிழலை
அடைவார் அடியா ரவர்தாமே. 6

செறியார் கழலுஞ் சிலம்பார்க்க
நெறியார் குழலா ளொடுநின்றான்
வெறியார் பொழில்வீ ழிம்மிழலை
அறிவா ரவலம் அறியாரே. 7

உளையா வலியொல் கஅரக்கன்
வளையா விரலூன் றியமைந்தன்
விளையார் வயல்வீ ழிம்மிழலை
அளை[5]யா வருவார் அடியாரே. 8

மருள்செய் திருவர் மயலாக
அருள்செய் தவனார் அழலாகி
வெருள்செய் தவன்வீ ழிம்மிழலை
தெருள்செய் தவர்[6]தீ வினைதேய்வே. 9

---

[2] விழவல்லவர் - வணங்கவல்லவர். [3] உரவம் - வன்மை; அடியாரே - இது அடியாருள் சிறப்புக் குறித்தது. [4] சரி—வேகமாகச் சரிக்கின்ற. [5] விளை - விளைவுகள்; அளைதல் - நெருங்குதல். [6] தெருள்செய்தவர் - தெளிவடைந்தவர்.

துளங்கும் நெறியா ரவர்தொன்மை
வளங்கொள் ளன்மின் [7]புல் லமண்தேரை
விளங்கும் பொழில்வீ ழிம்மிழலை
உளங்கொள் பவர்தம் வினையோய்வே. 10

நளிர்கா ழியுள்ஞா னசம்பந்தன்
குளிரார் [8] சடையான் அடிகூற
மிளிரார் பொழில்வீ ழிம்மிழலை
கிளர்பா டல்வல்லார்க் கிலைகேடே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

இரும்பொன் மலை [1]வில்லா எரியம் பாநாணில்
திரிந்த புரமூன்றுஞ் செற்றான் உறைகோயில்
தெரிந்த அடியார்கள் சென்ற திசைதோறும்
விரும்பி யெதிர்கொள்வார் வீழி மிழலையே. 1

வாதைப் படுகின்ற வானோர் துயர்தீர
ஓதக் கடல்நஞ்சை உண்டான் உறைகோயில்
கீதத் திசையோடுங் கேள்விக் கிடை [2]யோடும்
வேதத் தொலியோவா வீழி மிழலையே. 2

பயிலும் மறையாளன் தலையிற் பலிகொண்டு
துயிலும் பொழுதாடுஞ் சோதி யுறைகோயில்
மயிலும் மடமானும் மதியும் மிளவேயும்
வெயிலும் போல்மாதர் [3] வீழி மிழலையே. 3

இரவன் பகலோனும் எச்சத் திமையோரை
நிரவிட் டருள்செய்த நிமலன் உறைகோயில்

---

[7] தொன்மைவளம் - பழமையாகிய தமிழ் வளம் முதலாயின; இவையே இன்றுவரை மக்களை மயக்கிவரும் தன்மையாம்; கொள் ளன்மின் — பொருளென்று மயங்காதீர்கள். [8] நளிர் - குளிர்ந்த. குளிர்ஆர் - நீர் நிறைந்த. குளிர்: ஆகுபெயர். [1] இரும்பொன்மலை - மேருமலை. [2] கிடை - வேதம் ஓதும் பள்ளி-வேதம் ஓதும் மாணவர். [3] போன்மாதர் என்றும் பாடம்.

குரவஞ் சுரபுன்னை குளிர்கோங் கிளவேங்கை
விரவும் பொழிலந்தண் வீழி மிழலையே. 4

கண்ணிற் கனலாலே காமன் பொடியாகப்
பெண்[4]ணுக் கருள்செய்த பெருமான் உறைகோயில்
மண்ணிற் பெருவேள்வி வளர்தீப் புகைநாளும்
விண்ணிற் புயல்காட்டும் வீழி மிழலையே. 5

மாலா யிரங்கொண்டு[5] மலர்க்கண் ணிடஆழி
ஏலார் வலயத்தோ டீந்தான் உறைகோயில்
சேலா கியபொய்கைச் செழுநீர்க் கமலங்கள்
மேலா லெரிகாட்டும் வீழி மிழலையே. 6

மதியால் வழிபட்டான்[6] வாணாள் கொடுபோவான்
கொதியா வருகூற்றைக் குமைத்தான் உறைகோயில்
நெதியான் மிகுசெல்வர் நித்த நியமங்கள்
விதியால் நிற்கின்றார் வீழி மிழலையே. 7

எடுத்தான் தருக்கினை இழித்தான் விரலூன்றிக்
கொடுத்தான் வாள்ஆளாக் கொண்டான் உறைகோயில்
படித்தார் மறைவேள்வி பயின்றார் பாவத்தை
விடுத்தார் மிகவாழும் வீழி மிழலையே. 8

கிடந்தான் இருந்தானுங்[7] கீழ்மேல் காணாது
தொடர்ந்தாங் கவரேத்தச் சுடரா யவன்கோயில்
படந்தாங் கரவல்குல் பவளத் துவர்வாய்மேல்
விடந்தாங் கியகண்ணார் வீழி மிழலையே. 9

சிக்கார் துவராடைச் சிறுதட் டுடையாரும்
நக்காங் கலர்தூற்றும் நம்பான் உறைகோயில்
தக்கார் மறைவேள்வித் தலையா யுலகுக்கு
மிக்கார் அவர்வாழும் வீழி மிழலையே. 10

மேனின் றிழிகோயில் வீழி மிழலையுள்
ஏனத் தெயிற்றா[8]னை யெழிலார் பொழில்காழி

---

[4] பெண் - இரதி. [5] ஆயிரங்கொண்டு - ஆயிரம் தாமரைப்பூக் கொண்டு (அர்ச்சிக்கும்போது அவற்றில் ஒன்று குறைய). [6] மதியால் வழிபட்டான் — மார்க்கண்டேயர். [7] கிடந்தான் - திருமால். இருந்தான் - பிரமன். [8] ஏனத்து எயிறு - பன்றிக்கொம்பு.

ஞானத் துயர்கின்ற நலங்கொள் சம்பந்தன்
வாய்மைத் திவை [9]சொல்ல வல்லோர் நல்லோரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருக்குக்குறள் பண் - குறிஞ்சி*

திருச்சிற்றம்பலம்

**வாசி** தீரவே, காசு நல்குவீர் [1]
மாசின் மிழலையீர், ஏச லில்லையே.[2] 1

இறைவ ராயினீர், மறைகொள் மிழலையீர்
கறை [3]கொள் காசினை, முறைமை [4] நல்குமே. 2

செய்ய மேனியீர், மெய்கொள் மிழலையீர்
பைகொள் அரவினீர், உய்ய நல்குமே. 3

நீறு பூசினீர், ஏற தேறினீர்
கூறு மிழலையீர், பேறும் அருளுமே. 4

காமன் வேவவோர், தூம [5]க் கண்ணினீர்
நாமம் [6] மிழலையீர், சேமம் நல்குமே. 5

பிணிகொள் சடையினீர், மணிகொள் மிடறினீர்
அணிகொள் மிழலையீர், பணிகொண் டருளுமே. 6

மங்கை பங்கினீர், துங்க [7] மிழலையீர்
கங்கை முடியினீர், சங்கை [8] தவிர்மினே. 7

அரக்கன் நெரிதர, இரக்க மெய்தினீர்
பரக்கும் மிழலையீர், கரக்கை [9] தவிர்மினே. 8

---

[9] வாய்மெய்த்திவை என்றும் பாடம். * இப்பதிகம் வாசி படாமல் (வட்டம் பெறாமல்) காசு நல்கவேண்டிப் பாடியருளிய தாகும். [1] இவ்வடி உட்குறிப்பாகிய விண்ணப்பத்தை எடுத்த எடுப்பில் விரைவாயும் சுருங்கவும் கூறியது இப்பதிகச் சிறப்பு ஆகும். [2] ஏசல் இல்லை - (கைத்தொண்டு இல்லாவிடினும் பாட்டினால் பரவும் தொண்டு அடியவனிடம் உண்மையால் உம்மை) ஏசுதல் (எவரும்) இல்லை என்றபடி. [3] கறை - வாசியாகிய குறைபாடு. [4] முறைமை - வாசிபடா முறை. [5] தூமம் - புகை; இங்குத் தீயைக் குறித்து நின்றது. [6] நாமம் — பெருமை. [7] துங்கம் - பெரிது. [8] சங்கை - (காசுவாசி படவேண்டுமென்ற) ஆசங்கை. [9] கரக்கை - (காசினது மதிப்பினின்றும் வாசியினளவு) கழிவித்தல்.

அயனும் மாலுமாய், முயலும் முடியினீர்
இயலும் மிழலையீர், பயனும் அருளுமே. 9
பறிகொள் தலையினார், அறிவ தறிகிலார்
வெறிகொள் மிழலையீர், பிறிவ தரியதே. 10
காழி மாநகர், வாழி சம்பந்தன்
வீழி மிழலைமேல், தாழும் மொழிகளே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவிராகம் பண்-வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அலர்மகள்[1] மலிதர அவனியில் நிகழ்பவர்
மலர்மலி குழலுமை தனையிடம் மகிழ்பவர்
நலம்மலி யுருவுடை யவர்நகர் மிகுபுகழ்
நிலம்மலி மிழலையை நினையவல் லவரே. 1
இருநில மிதன்மிசை யெழில்பெறும் உருவினர்
கருமலி தருமிகு புவிமுதல் உலகினில்
இருளறு மதியினர் இமையவர் தொழுதெழு
நிருபமன் மிழலையை நினையவல் லவரே. 2
கலைமகள்[2] தலைமகன் இவனென வருபவர்
அலைமலி தருபுனல் அரவொடு நகுதலை
இலைமலி யிதழியு மிசைதரு சடையினர்
நிலைமலி மிழலையை நினையவல் லவரே. 3
மாடமர் சனமகிழ் தரு[3]மனம் உடையவர்
காடமர் கழுதுக ள[4]வைமுழ வொடுமிசை
பாடலின் நவில்பவர் மிகுதரும் உலகினில்
நீடமர் மிழலையை நினையவல் லவரே. 4
புகழ்மகள் துணையினர் புரிகுழல் உமைதனை
இகழ்வுசெய் தவனு[5]டை யெழின்மறை வழிவளர்
முகமது சிதைதர[6] முனிவுசெய் தவன்மிகு
நிகழ்தரு மிழலையை நினையவல் லவரே. 5

---

[1] அலர்மகள் — திருமகள். [2] தலைமகள் என்றும் பாடம். [3] மகிழ்தர என்றும் பாடம். [4] கழுதுகள் - பேய்கள். [5] இகழ்வு செய்தவன். [6] முகமது சிதைதர - ஆட்டுக்கடா முகமாக.

அன்றினர் அரியென வருபவர் அரிதினில்
ஒன்றிய திரிபுரம் ஒருநொடி யினிலெரி
சென்றுகொள் வகைசிறு முறுவல்கொ டொளிபெற
நின்றவன் மிழலையை நினையவல் லவரே. 6

கரம்பயில் கொடையினர் கடிமல ரயனதோர்
சிரம்பயில் வறவெறி சிவனுறை செழுநகர்
வரம்பயில் கலைபல மறைமுறை யறநெறி[7]
நிரம்பினர் மிழலையை நினையவல் லவரே. 7

ஒருக்கிய வுணர்வினொ டொளிநெறி செலுமவர்
அரக்கன்றன் மணிமுடி யொருபதும் இருபது
கரக்கனல்நெரிதர மலரடி விரல்கொடு
நெருக்கினன் மிழலையை நினையவல் லவரே. 8

அடியவர் குழுமிட அவனியில் நிகழ்பவர்
கடிமலர் அயனரி கருதரு வகைதழல்
வடிவுரு வியல்பினொ டுலகுகள் நிறைதரு
நெடியவன் மிழலையை நினையவல் லவரே. 9

மன்மத னெனவொளி பெறுமவர் மருதமர்
வன்மலர் துவருடை யவர்களும் மதியிலர்
துன்மதி யமணர்கள் தொடர்வரு மிகுபுகழ்
நின்மலன் மிழலையை நினையவல் லவரே. 10

நித்திலன் மிழலையை நிகரிலி புகலியுள்
வித்தக[8] மறைமலி தமிழ்விர கனமொழி
பத்தியில் வருவன பத்திவை பயில்வொடு
கற்றுவல் லவருல கினிலடி யவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - மேகராகக்குறிஞ்சி** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**ஏ**ரிசையும் வடவாலின் கீழிருந்தங் கீரிருவர்க் கிரங்கிநின்று, நேரியநான் மறைப்பொருளை யுரைத்தொளிசேர் நெறியளித் தோன் நின்றகோயில், பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும்

---

[7] முறையறி நெறி என்றும் பாடம். [8] வித்தகம் - ஞானம்.

பயின்ருேதும் ஓசைகேட்டு, வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட்சொல்லும் மிழலையாமே. 1

பொறியரவம் அதுசுற்றிப் பொருப்பேமத் தாகப்புத் தேளிர்[1] கூடி, மறிகடலைக் கடைந்திட்ட விடமுண்ட கண்டத்தோன் மன்னும் கோயில், செறியிதழ்த்தா மரைத்[2] தவிசில் திகழ்ந்தோங்கும் இலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல், வெறிகதிர்ச்சா மரை யிரட்ட இள அன்னம் வீற்றிருக்கும் மிழலையாமே. 2

எழுந்துலகை நலிந்துழலும் அவுணர்கள்தம் புரமூன்றும் எழிற்கண்நாடி, உழுந்துருளும் அளவையின்ஒ[3]ள் ளெரிகொள வெஞ் சிலைவளைத்தோன் உறையுங் கோயில், கொழுந்தரளம் நகைகாட்டக் கோகநதம்[4] முகங்காட்டக் குதித்துநீர்மேல், விழுந்த கயல் விழிகாட்ட விற்பவளம் வாய்காட்டும் மிழலையாமே. 3

உரைசேரும்[5] எண்பத்து நான்குநூ றாயிரமாம் யோனிபேதம்,[6] நிரைசேர[7]ப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான் கோயில், வரைசேரும்[8] முகில்முழவ மயில்கள் பல நடமாட வண்டுபாட, விரைசேர்[9]பொன் இதழிதர மென்காந்தள் கையேற்கும் மிழலையாமே. 4

காணுமா றரியபெரு மானுகிக் காலமாய்க் குணங்கள் மூன்ருய்ப், பேணுமூன் றுருவாகிப் பேருலகம் படைத்தளிக்கும் பெருமான்[10] கோயில், தாணுவாய் நின்றபர தத்துவனை உத்தமனை இறைஞ்சீரென்று, வேணுவார் கொடிவிண்ணோர் தமைவிளிப்ப போலோங்கு மிழலையாமே. 5

அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற் றைம்புலனும் அடக்கிஞானம், புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்[11] துள்ளிருக்கும் புராணர்கோயில், தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குள

---

[1] புத்தேளிர் - தேவர்கள். [2] செறியிதட்டாமரைத் என்றும் பாடம். [3] உழுந்துருளும் அளவையின் - இது விரைவுக் குறிப்பை உணர்த்தும். [4] கோகநதம் - தாமரை. [5] உரைச்சேரும் என்றும் பாடம். [6] இவ்வடி உலகிலுள்ள சீவராசிகள் எண்பத்துநான்கு லட்சம் பேதம் என்ற தொகையினைக் குறிக்கும். [7] நிரைச்சேரப் [8] வரைச்சேரு. [9] விரைச்சேர் என்றும் பாடங்கள். [10] பெம்மான் என்றும் பாடம். [11] புண்டரீகம் - இருதயதாமரை.

வர்க் கந்திகழச் சலசத்தீயுள், மிகவுடைய புன்குமலர்ப் பொரி யட்ட மணஞ்செய்யும் மிழலையாமே. 6

ஆருடு சடைமுடியன் அனலாடும் மலர்க்கையன் இமயப் பாவை, கூருடு திருவுருவன் கூத்தாடுங் குணமுடையோன் குளி ருங் கோயில், சேருடு செங்கழுநீர்த் தாதாடி மதுவுண்டு சிவந்த வண்டு, வேருய வுருவாகிச் செவ்வழி[12] நற் பண்பாடும் மிழலையாமே. 7

கருப்பமிகும் உடலடர்த்துக் காலூன்றிக் கைமறித்துக் கயிலையென்னும், பொருப்பெடுக்க லுறும்அரக்கன் பொன்முடி தோள் நெரித்தவிரற் புனிதர்கோயில், தருப்பமிகு சலந்தரன்றன் உடல்தடிந்த சக்கரத்தை வேண்டியீண்டு, விருப்பொடுமால் வழி பாடு செய்யவிழி விமானஞ்[13]சேர் மிழலையாமே 8

செந்தளிர்மா மலரோனுந் திருமாலும் ஏனமோ டன்னமாகி, அந்தம்அடி காணுதே அவரேத்த வெளிப்பட்டோன்[14] அமருங் கோயில், புந்தியினல் மறைவழியே புற்பரப்பி நெய்சமிதை கையிற்கொண்டு, வெந்தழலின் வேட்டுலகின் மிகஅளிப்போர் சேருமூர் மிழலையாமே. 9

எண்ணிறந்த அமணர்களும் இழிதொழில்சேர் சாக்கியரும் என்றுந்தன்னை, நண்ணரிய வகைமயக்கித் தன்னடியார்க் கருள் புரியும் நாதன்கோயில், பண்ணமரும் மென்மொழியார் பால கரைப் பாராட்டும் ஓசைகேட்டு, விண்ணவர்கள் வியப்பெய்தி விமானத்தோ டும்மிழியும் மிழலையாமே. 10

மின்னியலும்[15] மணிமாடம் மிடைவீழி மிழலையான் விரை யார்பாதம், சென்னிமிசைக் கொண்டொழுகுஞ் சிரபுரக்கோன் செழுமறைகள் பயிலுநாவன், பன்னியசீர் மிகுஞான சம்பந்தன் பரிந்துரைத்த பத்துமேத்தி, இன்னிசையார் பாடவல்லார் இரு நிலத்தில் ஈசனெனும் இயல்பினேரே. 11

திருச்சிற்றம்பலம்

---

12 செவ்வழி—ஒருபண். 13 விழிவிமானம் - விண்ணிழி விமானம். 14 இவ்வடிகள் இலிங்கோற்பவ மூர்த்தியின் வடிவினைக் குறிப்ப தாகும். 15 மின்னியலும் - ஒளிபொருந்திய.

பண் - காந்தாரபஞ்சமம் [3-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

கேள்வியர் நாடொறும் ஓதும்நல் வேதத்தர் கேடிலா
வேள்விசெய் அந்தணர் வேதியர் வீழிமி ழலையார்
வாழியர் தோற்றமுங் கேடும்வைப் பாருயிர் கட்கெலாம்
ஆழியர் தம்மடி போற்றியென் பார்கட்க ணியரே. 1

கல்வின்நற் பாவையொர் பாகத்தர் காதலித் தேத்திய
மெல்லினத் தார்பக்கல் மேவினர் வீழிமி ழலையார்
நல்லினத் தார்செய்த வேள்விசெ குத்தெழு ஞாயிற்றின்
பல்லினைத் துந்தகர்த் தாரடி யார்பாவ நாசரே. 2

நஞ்சினை யுண்டிருள் கண்டர்பண் டந்தக னைச்செற்ற
வெஞ்சின மூவிலைச் சூலத்தர் வீழிமி ழலையார்
அஞ்சனக் கண்ணுமை பங்கினர் கங்கையங் காடிய
மஞ்சனச் செஞ்சடை யாரென வல்வினை மாயுமே. 3

கலையிலங் கும்மழு கட்டங்கங் கண்டிகை[1] குண்டலம்
விலையிலங் கும்மணி மாடத்தர் வீழிமி ழலையார்
தலையிலங் கும்பிறை தாழ்வடஞ் சூலந்த மருகம்
அலையிலங் கும்புன லேற்றவர்க் கும்அடி யார்க்குமே. 4

பிறையுறு செஞ்சடை யார்விடை யார்பிச்சை நச்சியே
வெறியுறு நாட்பலி தேர்ந்துழல் வீழிமி ழலையார்
முறைமுறை யாலிசை பாடுவா ராடிமுன் தொண்டர்கள்
இறையுறை வாஞ்சியம் அல்லதெப் போதுமென் உள்ளமே. 5

வசையறு மாதவங் கண்டுவ ரிசிலை வேடனாய்
விசையனுக் கன்றருள் செய்தவர் வீழிமி ழலையார்
இசைவர விட்டியல் கேட்பித்துக் கல்லவ டமி[2]ட்டுத்
திசைதொழு தாடியும் பாடுவார் சிந்தையுட் சேர்வரே 6

சேடர்[3]விண் ணோர்கட்குத் தேவர்நன் மூவிரு தொன்னூலர்
வீடர்முத் தீயர்நால் வேதத்தர் வீழிமி ழலையார்
காடரங் காவுமை காணஅண் டத்திமை யோர்தொழ
நாடக மாடிய்ய யேத்தவல் லார்வினை நாசமே. 7

---

[1] கட்டங்கம் — மழு; கண்டிகை - உருத்திராக்க மாலை.
[2] கல்லவடம் - கல்லால மரம். [3] சேடர் - நாகலோகத்தவர்.

எடுத்தவன் மாமலைக் கீழஇ ராவணன் வீழ்தர
விடுத்தருள் செய்திசை கேட்டவர் வீழிமி ழலையார்
படுத்துவெங் காலனைப் பால்வழி பாடுசெய் பாலற்குக்
கொடுத்தனர் இன்பங்கொ டுப்பர் தொழக்குறை வில்லையே. 8

திக்கமர் நான்முகன் மாலண்டம் மண்டலந் தேடிட
மிக்கமர் தீத்திர ளாயவர் வீழிமி ழலையார்
சொக்கம தாடியும் பாடியும் பாரிடஞ் சூழ்தரும்
நக்கர்தந் நாமம்ந மச்சிவா ய[4]வ்வென்பார் நல்லரே. 9

துற்றரை யார்துவ ராடையர் துப்புர வொன்றிலா
வெற்றரை யார்அறி யாநெறி வீழிமி ழலையார்
சொற்றெரி யாப்பொருள் சோதிக்கப் பால்நின்ற சோதிதான்
மற்றறி யாவடி யார்கள்தஞ் சிந்தையுள் மன்னுமே. 10

வேதியர் கைதொழு வீழிமி ழலைவி ரும்பிய
ஆதியை வாழ்பொழிற் காழியுள் ஞானசம் பந்தனுய்ந்
தோதிய வொண்டமிழ் பத்திவை யுற்றுரை செய்பவர்
மாதியல் பங்கன் மலரடி சேரவும் வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம் பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சீர்மருவு தேசினொடு தேசமலி செல்வமறை யோர்கள் பணி யத், தார்மருவு கொன்றையணி தாழ்சடையி னனமர்ச யங் கொள்பதிதான், பார்மருவு பங்கயமு யர்ந்தவயல் சூழ்பழன நீட அருகே, கார்மருவு வெண்கனக[1] மாளிகை கவின்பெருகு வீழி நகரே. 1

பட்டமுழ விட்டபணி லத்[2]தினொடு பன்மறைகள் ஓதுபணிநல், சிட்டர்கள்[3]ச யத்துதிகள் செய்யவருள் செய்தழல்கொள் மேனி யவனூர், மட்டுலவு செங்கமல வேலிவயல் செந்நெல்வளர் மன்னு பொழில்வாய், விட்டுலவு தென்றல்விரை நாறுபதி வேதியர்கள் வீழிநகரே. 2

---

[4] இது தூல பஞ்சாட்சரம். [1] வெண்களப என்றும் பாடம். [2] பணிலம் - சங்கு. [3] சட்டர்கள் என்றும் பாடம். சட்டம்-செப்பம்.

மண்ணிழிசு ரர்க்குவளம் மிக்கபதி மற்றுமுள மன்னுயிர் களுக், கெண்ணிழிவில் இன்பநிகழ் வெய்தஎழி லார்பொழில் இலங்கறுபதம், பண்ணிழிவி லாதவகை பாடமட மஞ்ஞைநட மாடஅழ கார், விண்ணிழிவி மானமுடை விண்ணவர்பி ரான் மருவு வீழிநகரே. 3

செந்தமிழர் தெய்வமறை நாவர்செழு நற்கலை தெரிந்த அவரோ, டந்தமில்கு ணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்யஅமர் கின்றஅர னூர், கொந்தலர்பொ ழிற்பழன வேலிகுளிர் தண் புனல்வ ளம்பெருகவே, வெந்திறல்வி ளங்கிவளர் வேதியர்வி ரும் புபதி வீழிநகரே. 4

பூதபதி யாகியபு ராணமுனி புண்ணியநன் மாதைமருவிப், பேதமதி லாதவகை பாகமிக வைத்தபெரு மானதிடமாம், மாத வர்க ளன்னமறை யாளர்கள்வ ளர்த்தமலி வேள்வியதனால், ஏத மதி லாதவகை இன்பம்அமர் கின்றஎழில் வீழிநகரே. 5

மண்ணின்மறை யோர்மருவு வைதிகமும் மாதவமும் மற்று முலகத், தெண்ணில்பொரு ளாயவை படைத்தஇமை யோர்கள் பெரு மான திடமாம், நண்ணிவரு நாவலர்கள்[4] நாடொறும்வ ளர்க்கநிகழ் கின்ற புகழ்சேர், விண்ணுலவு மாளிகைநெ ருங்கி வளர் நீள்புரிசை வீழிநகரே. 6

மந்திரநன் மாமறையி னோடுவளர் வேள்விமிசை மிக்கபுகை போய், அந்தரவி சும்பணவி அற்புதமெ னப்படரும் ஆழியிருள் வாய், மந்தரம்நன் மாளிகைநி லாவுமணி நீடுகதிர் விட்டஒளி போய், வெந்தழல்வி ளக்கெனவி ரும்பினர்தி ருந்துபதி வீழி நகரே. 7

ஆனவலி யில்தசமு கன்தலைய ரங்க[5]வணி யாழிவிரலால், ஊனமரு யர்ந்தகுரு திப்புனலில் வீழ்தரவு ணர்ந்தபரனூர், தேன மர்தி ருந்துபொழில் செங்கனக மாளிகைதி கழ்ந்தமதிளோ, டானதிரு வுற்றுவளர் அந்தணர்நி றைந்தஅணி வீழிநகரே. 8

ஏனவுரு வாகிமண் இடந்தஇமை யோனும்[6]எழி லன்னவுரு வம், ஆனவனும் ஆதியினொ டந்தமறி யாதஅழல் மேனியவனூர்,

---

[4] நாவலர்கள் - புலவர்கள். [5] அரங்கல் - அழிதல். [6] இமை யோன் - இங்குத் திருமால்.

வானணவு மாமதில்ம ருங்கலர்நெ ருங்கியவ ளங்கொள்பொழில் வாய், வேனலமர்[6] வெய்திடவி ளங்கொளியின் மிக்கபுகழ் வீழி நகரே. 9

குண்டமண ராகியொரு கோலமிகு பீலியொடு குண்டிகை பிடித், தெண்திசையு மில்லதொரு தெய்வமுள தென்பரது வென்னபொருளாம், பண்டையய னன்னவர்கள் பாவனைவி ரும்புபரன் மேவுபதிசீர், வெண்தரள வாள்நகைநன் மாதர்கள்வி ளங்குமெழில் வீழிநகரே. 10

மத்தமலி கொன்றைவளர் வார்சடையில் வைத்தபரன் வீழிநகர்சேர், வித்தகனை வெங்குருவில் வேதியன்வி ரும்புதமிழ் மாலைகள்வல்லார், சித்திரவி மானம்அமர் செல்வம்மலி கின்றசிவ லோகமருவி, அத்தகுகு ணத்தவர்க ளாகியனு போகமொடியோ கம்மவரதே.[7] 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவிராகம். பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

மட்டொளி விரிதரு மலர்நிறை சுரிகுழல் மடவரல்
பட்டொளி மணியல்குல் உமையமை யுருவொரு பாகமாக்
கட்டொளிர் புனலொடு கடியர வுடனுறை முடிமிசை
விட்டொளி யுதிர்பிறை மதியவர் பதிவிழி மிழலையே.[1] 1

ஒண்ணிற வரிவளை நெறிகுழல் எழில்மொழி யிளமுலைப்
பெண்ணுரும் உடலினர்[2] பெருகிய கடல்விட மிடறினர்
கண்ணுறு நுதலினர் கடியதொர் விடையினர் கனலினர்
விண்ணுறு பிறையணி சடையினர் பதிவிழி மிழலையே. 2

மைத்தகு மதர்விழி மலைமகள் உருவொரு பாகமா
வைத்தவர் மதகரி யுரிவைசெய் தவர்[3] தமை மருவினர்

---

[6] வேனமலர் என்றும் வேனன்மலர் என்றும் பாடம். [7] யோகரவரே என்றும் பாடம். [1] வீழிமிழலையே என்பது மொன்று. [2] எண்ணிற என்றும் பாடம்; இவ்வடிகள் அர்த்தநாரீசுவரர் வடிவினைக் குறிக்கும். [3] மதர்-செழிப்பு. உரிவை செய்தவர் - உரித்தலைச் செய்தவர். உரிவை : தொழிற் பெயர்.

தெத்தென இசைமுரல் சரிதையர் திகழ்தரும் அரவினர்[4]
வித்தக நகுதலை யுடையவர் இடம்விழி மிழலையே. 3

செவ்வழ லெனநனி பெருகிய வுருவினர் செறிதரு
கவ்வழல் அரவினர் கதிர்முதிர் மழுவினர் தொழுவிலா[5]
மூவ்வழல் நிசிசரர் விறலவை யழிதர முதுமதிள்
வெவ்வழல் கொளநனி முனிபவர் பதிவிழி மிழலையே. 4

பைங்கண தொருபெரு மழலைவெ ளேற்றினர் பலியெனா
எங்கணும் உழிதர்வர் இமையவர் தொழுதெழும் இயல்பினர்
அங்கணர் அமரர்கள் அடியிணை தொழுதெழ ஆரமா[6]
வெங்கண அரவினர் உறைதரு பதிவிழி மிழலையே. 5

பொன்னன[7] புரிதரு சடையினர் பொடியணி வடிவினர்
உன்னினர் வினையவை களைதலை மருவிய ஒருவனார்
தென்னென[8] விசைமுரல் சரிதையர் திகழ்தரு மார்பினில்
மின்னென மிளிர்வதோர் அரவினர் பதிவிழி மிழலையே. 6

அக்கினொ டரவரை யணிதிகழ் ஒளியதொ ராமைபூண்
டிக்குக மலிதலை கலனென இடுபலி யேகுவர்
கொக்கரை குழல்முழ விழவொடு மிசைவதொர் சரிதையர்
மிக்கவர் உறைவது விரைகமழ் பொழில்விழி மிழலையே. 7

பாதமொர் விரலுற மலையடர் பலதலை நெரிதரப்
பூதமொ டடியவர் புனைகழல் தொழுதெழு புகழினர்
ஓதமொ டொலிதிரை படுகடல் விடமுடை மிடறினர்
வேதமொ டுறுதொழில் மதியவர் பதிவிழி மிழலையே. 8

நீரணி மலர்மிசை உறைபவன் நிறைகடல் உறுதுயில்
நாரண னெனஇவர் இருவரும் நறுமல ரடிமுடி
ஓருணர்[9] வினர்செல லுறலரு முருவினொ டொளிதிகழ்
வீரணர் உறைவது வெறிகமழ் பொழில்விழி மிழலையே. 9

இச்சைய ரினிதென இடுபலி படுதலை மகிழ்வதோர்
பிச்சையர் பெருமையை யிறைபொழு தறிவென வுணர்விலர்

---

[4] திகடருமராவினர் என்றும் பாடம். [5] தொழுவிலா - தொழுதலில்லாத. [6] தொழுவாரமர் என்றும் பாடம். [7] பொன்னன - பொன்னைப்போல. [8] தென்னென—ஒலிக் குறிப்பு. [9] ஓருணர்வு - அடிமுடியை அறியவேண்டும் என்னும் கருத்து.

மொச்சைய அமணரும் முடைபடு துகிலரும் அழிவதோர்
விச்சைய ரு[5]றைவது விரைகமழ் பொழில்விழி மிழலையே. 10

உன்னிய அருமறை யொலியினை முறைமிகு பாடல்செய்
இன்னிசை யவருறை யெழில்திகழ் பொழில்விழி மிழலையை
மன்னிய புகலியுள் ஞானசம் பந்தன வண்டமிழ்
சொன்னவர் துயரிலர் வியனுல குறுகதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருமுக்கால் பண் - சாதாரி

திருச்சிற்றம்பலம்

வெண்மதி தவழ்மதில் மிழலையு ளீர்சடை
ஒண்மதி அணியுடை யீரே
ஒண்மதி அணியுடை யீருமை உணர்பவர்
கண்மதி மிகுவது கடனே. 1

விதிவழி மறையவர் மிழலையு ளீர்நடம்
சதிவழி வருவதோர் சதிரே
சதிவழி வருவதோர் சதிரு[1]டை யீருமை
அதிகுணர் புகழ்வதும் அழகே. 2

விரைமலி பொழிலணி மிழலையு ளீரொரு
வரைமிசை உறைவதும் வலதே
வரைமிசை யுறைவதொர் வலதுடை யீருமை
உரைசெயும் அவைமறை யொலியே. 3

விட்டெழில் பெறுபுகழ் மிழலையு ளீர்கையில்
இட்டெழில் பெறுகிற தெரியே
இட்டெழில் பெறுகிற தெரியுடை யீர்புரம்
அட்டது வரைசிலை யாலே. 4

வேனிகர்[2] கண்ணியர் மிழலையு ளீர்நல
பானிகர் உருவுடை யீரே
பானிகர் உருவுடை யீரும துடனுமை
தான்மிக உறைவது தவமே. 5

---

[5] விச்சையர் - கல்வியுடையவர். [1] சதிர்—அறிவு; பெருமையு மாம். [2] வேல் நிகர், நிகர் : உவமவுருபு.

விரைமலி பொழிலணி மிழலையு ளீர்சேனி
நிரையுற அணிவது நெறியே
நிரையுற அணிவதொர் நெறியுடை யீருமை
தரையுற அணிவன அரவே. 6

விசையுறு புனல்வயல் மிழலையு ளீர்அர
வசைவுற அணிவுடை யீரே
அசைவுற அணிவுடை யீருமை அறிபவர்
நசையுறு நாவினர் தாமே. 7

விலங்கலொண் மதிளணி மிழலையு ளீரன்றவ்
இலங்கைமன் இடர்கெடுத் தீரே
இலங்கைமன் இடர்கெடுத் தீருமை யேத்துவார்
புலன்களை [3] முனிவது பொருளே. 8

வெற்பமர் பொழிலணி மிழலையு ளீருமை
அற்புதன் அயனறி யானே
அற்புதன் அயனறி யாவகை நின்றவன் [4]
நற்பதம் அறிவது நயமே. 9

வித்தக மறையவர் மிழலையு ளீரன்று
புத்தரொ டமணழித் தீரே
புத்தரொ டமணழித் தீருமைப் போற்றுவார்
பத்திசெய் மனமுடை யவரே. 10

விண்பயில் பொழிலணி மிழலையுள் ஈசனைச்
சண்பையுள் ஞானசம் பந்தன
சண்பையுள் ஞானசம் பந்தன தமிழிவை
ஒண்பொருள் உணர்வதும் உணர்வே. 11

திருச்சிற்றம்பலம்

---

ஈரடி. பண் - பழம்பஞ்சுரம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வே**லின்நேர்தரு கண்ணினாளுமை பங்கன் அங்கணன் மிழலைமாநகர், ஆலநீழலின் மேவினான்அடிக் கன்பர்துன் பிலரே. 1

---

[3] புலன்கள் - ஐம்புலங்கள். [4] நின்றவ என்றும் பாடம்.

விளங்கும்நான்மறை வல்லவேதியர் மல்குசீர்வளர் மிழலை யானடி, உளங்கொள்வார்தமை உளங்கொள்வார்வினை ஒல்லையா சறுமே. 2

விசையினேடெழு பசையுநஞ்சினை யசைவுசெய்தவன் மிழலைமாநகர், இசையுமீசனை நசையின்மேவினன் மிசைசெயா வினையே. 3

வென்றிசேர்கொடி மூடுமாமதிள் மிழலைமாநகர் மேவினா டொறும், நின்றஆதி[1] தன் அடிநினைப்பவர் துன்பமொன் றிலரே. 4

போதகந்தனை யுரிசெய்தோன்புயல் நேர்வரும்பொழில் மிழலைமாநகர், ஆதரஞ்செய்த அடிகள்பாதம லாலொர்பற் றிலமே. 5

தக்கன்வேள்வியைச் சாடினார்மணி தொக்கமாளிகை மிழலை மேவிய, நக்கனாரடி தொழுவர்மேல்வினை நாடொறுங் கெடுமே. 6

போரணவுமுப் புரமெரித்தவன் பொழில்கள்சூழ்தரு மிழலை மாநகர்ச், சேருமீசனைச் சிந்தைசெய்பவர் தீவினை கெடுமே. 7

இரக்கமிஃறொழில்[2] அரக்கனுருடல் நெருக்கினன்மிகு மிழலை யானடி, சிரக்கொள்பூவென ஒருக்கினார்புகழ் பரக்குமீள் புவியே. 8

துன்றுபூமகன்[3] பன்றியானவன் ஒன்றுமோர்கிலா மிழலை யானடி, சென்றுபூம்புனல்[4] நின்றுதூவினர் நன்றுசேர் பவரே. 9

புத்தர்கைச்சமண் பித்தர்பொய்க்குவை வைத்தவித்தகன் மிழலைமாநகர், சித்தம்வைத்தவர் இத்தலத்தினுள் மெய்த்தவத் தவரே. 10

சந்தமார்பொழில் மிழலையீசனைச் சண்பைஞானசம் பந்தன் வாய்நவில் பந்தமார்தமிழ் பத்தும்வல்லவர் பத்தரா குவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவியமகம். பண் - பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

துன்று கொன்றைநஞ் சடையதே தூய கண்டம்நஞ் சடையதே
கன்றின் மானிடக் கையதே கல்லின் மானிடக் கையதே

---

[1] ஆதி—முதல்வன். [2] இரக்கம் இஃறொழில் - இரக்கமில்லாத தொழில். [3] பூமகன்—பிரமன். [4] பூம்புனல் - பூவும் நீரும்.

என்று மேறுவ திடவமே யென்னி டைப்பலி யிடவமே
நின்ற தும்மிழலை யுள்ளுமே நீரெனைச் சிறிதும் உள்ளுமே. 1

ஓதி வாயதும் மறைகளே உரைப்ப தும்பல மறைகளே
பாதி கொண்டதும் மாதையே பணிகின் றேன்மிகு மாதையே
காது சேர்கனங் குழையரே காத லார்கனங் குழையரே
வீதி வாய்மிகும் வேதியா மிழலை மேவிய வேதியா. 2

பாடு கின்றபண் டாரமே பத்த ரன்னபண் டாரமே
சூடு கின்றது மத்தமே தொழுத என்னையுன் மத்தமே
நீடு செய்வதுந் தக்கதே நின்ன ரைத்திகழ்ந் தக்கதே
நாடு சேர்மிழலை யூருமே நாகம் நஞ்சமலை யூருமே. 3

கட்டுகின்ற கழல்நாகமே காய்ந்ததும் மதனன் ஆகமே
இட்டமாவ திசை பாடலே யிசைந்த நூலினமர் பாடலே
கொட்டுவான் முழவம் வாணனே குலாயசீர் மிழலை வாணனே
நட்ட மாடுவது சந்தியே நானுய்தற் கிரவு சந்தியே. 4

ஓவி[1] லாதிடுங் கரணமே யுன்னு மென்னுடைக் கரணமே
ஏவு சேர்வுநின் ஆணையே யருளி னின்ன[2] பொற் றாணையே
பாவி யாதுரை மெய்யிலே பயின்ற நின்னடி மெய்யிலே
மேவி னுன்விறற் கண்ணனே மிழலை மேயமுக் கண்ணனே. 5

வாய்ந்த மேனியெரி வண்ணமே மகிழ்ந்து பாடுவது வண்ணமே
காய்ந்து வீழ்ந்தவன் காலனே கடுநடஞ் செயுங் காலனே
போந்த தெம்மிடை யிரவிலே யும்மிடைக் கள்வ மிரவிலே
ஏய்ந்த தும்மிழலை யென்பதே விரும்பியே யணிவ தென்பதே. 6

அப்பி யன்றகண் ணயனுமே யமரர் கோமகனு மயனுமே
ஒப்பி லின்றமரர் தருவதே ஒண்கையா லமரர் தருவதே
மெய்ப்ப யின்றவ ரிருக்கையே மிழலை யூரும திருக்கையே
செப்புமின் னெருது மேயுமே சேர்வுமக் கெருது மேயுமே. 7

தான வக்குலம் விளக்கியே தாரகை[3]ச் செல விளக்கியே
வான டர்த்த கயிலாயமே வந்து மேவு கயிலாயமே
தானெ டுத்தவல் லரக்கனே தடமுடித் திரள ரக்கனே
மேன டைச்செல விருப்பனே மிழலை நற்பதி விருப்பனே. 8

---

[1] ஓவு: முதனிலைத் தொழிற் பெயர். [2] ஏவுசேர நின்னாணையே யிருளினின்ன என்றும் பாடம். [3] தாரகை - நட்சத்திரம்.

காய மிக்கதொரு பன்றியே கலந்த நின்னவுரு பன்றியே
ஏய விப்புவி மயங்கவே யிருவர் தாமனம் மயங்கவே
தூய மெய்த்திரள் அகண்டனே தோன்றி நின்றமணி கண்டனே
மேய வித்துயில் விலக்கணா மிழலை மேவிய விலக்கணா. 9

கஞ்சியைக் குலவு கையரே கலக்கமா ரமணர் கையரே
அஞ்ச வாதிலருள் செய்யநீ யணைந்திடும் பரிசு செய்யநீ
வஞ்சனே வரவும் வல்லையே மதித்தெ னைச்சிறிதும் வல்லையே
வெஞ்ச வின்றிவரு வித்தகா மிழலைசே ரும்விறல் வித்தகா. 10

மேய செஞ்சடையின் அப்பனே மிழலைமே வியவெ னப்பனே
ஏயு மாசெய விருப்பனே இசைந்த வாசெய விருப்பனே
காய வர்க்கசம் பந்தனே காழி ஞானசம்பந்தனே
வாயுரைத்த தமிழ் பத்துமே வல்லவர்க்கு மிவை பத்துமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - புறநீர்மை [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

புள்ளித்தோ லாடை பூண்பது நாகம் பூசுசாந் தம்பொடி நீறு, கொள்ளித்தீ விளக்குக் கூளிகள் கூட்டங் காளியைக் குணஞ்செய்கூத் துடையோன், அள்ளற்கா ராமை அகடுவான் மதியம் ஏய்க்க முட்டாமை களாலே, வெள்ளைக் கொம்பினும் விரிபொழில் வீழி மிழலையானெனவினை கெடுமே. 1

இசைந்தவா றடியா ரிடுதுவல் வானோர் இழுகுசந் தனத்திளங் கமலப், பசும்பொன்வா சிகைமேற் பரப்புவாய் கரப்பாய் பத்தி செய் யாதவர் பக்கல், அசும்புபாய் கழனி[1] யலர்கயன் முதலோ டடுத்தரிந் தெடுத்தவான் சும்மை, விசும்புதூர்ப் பனபோல் விம்மிய வீழி மிழலையானெனவினை கெடுமே. 2

நிருத்தன் ஆறங்கன் நீற்றன்நான் மறையன் நீலமார் மிடற்றன்நெற் றிக்கண், ஒருத்தன்மற் றெல்லா வுயிர்கட்கும் உயிரா யுளனிலன் கேடிலி யுமைகோன், திருத்தமாய் நாளும் ஆடுநீர்ப் பொய்கை சிறியவர் அறிவினின் மிக்க, விருத்தரை யடிவீழ்ந் திடம்புகும் வீழி மிழலையா னெனவினை கெடுமே. 3

---

[1] அசும்புவாய் கழனி என்றும் பாடம். அசும்பு - ஊற்று.

தாங்கருங் காலந் தவிரவன் திருவர் தம்மொடுங் கூடினு ரங்கம், பாங்கினல் தரித்துப் பண்டுபோ லெல்லாம் பண்ணிய கண்ணுதற் பரமர், தேங்கொள்பூங் கமுகு தெங்கிளங் கொடிமாச் செண்பகம் வண்பலா இலுப்பை, வேங்கைபூ மகிழால் வெயிற் புகா வீழி மிழலையா னெனவினை கெடுமே. 4

கூசுமா மயானங் கோயில்வா யிற்கட் குடவயிற் றனசில பூதம், பூசுமா சாந்தம் பூதிமெல் லோதி பாதிநற் பொங்கர வரை யோன், வாசமாம் புன்னை மௌவல்செங் கழுநீர் மலரணைந் தெழுந்தவான் தென்றல், வீசுமாம் பொழில்தேன் துவலைசேர் வீழி மிழலையா னெனவினை கெடுமே. 5

பாதியோர் மாதர் மாலுமோர் பாகர் பங்கயத் தயனுமோர் பாலர்,[2] ஆதியாய் நடுவாய் அந்தமாய் நின்ற அடிகளார் அமரர் கட் கமரர், போதுசேர் சென்னிப் புரூரவாப் பணிசெய் பூசுரர் பூம்கன் அணைய, வேதியர் வேதத் தொலியறு வீழி மிழலையா னெனவினை கெடுமே. 6

தன்தவம் பெரிய சலந்தர னுடலந் தடிந்தசக் கரமெனக் கருளென், றன்றரி வழிபட் டிழிச்சிய[3] விமானத் திறையவன் பிறையணிசடையன், நின்றநாள் காலை யிருந்தநாள் மாலை கிடந்தமண் மேல்வரு கலியை, வென்றவே தியர்கள் விழாவறு வீழி மிழலையா னெனவினை கெடுமே. 7

கடுத்தவா ளரக்கன் கைலையன் றெடுத்த கரமுரஞ் சிரம் நெரிந்தலற, அடர்த்ததோர் விரலால் அஞ்செழுத் துரைக்க அரு ளினன் தடமிகு நெடுவாள், படித்தநான் மறைகேட் டிருந்தபைங் கிளிகள் பதங்களை யோதப்பா டிருந்த, விடைக்குலம் பயிற்றும் விரிபொழில வீழி மிழலையா னெனவினை கெடுமே. 8

அளவிட லுற்ற அயனொடு மாலும் அண்டமண் கெண்டியுங் காணு, முளையெரி யாய மூர்த்தியைத் தீர்த்த முக்கண்எம் முதல் வனை முத்தைத், தளையவிழ் கமலத் தவிசின்மேல் அன்னந் தன் னிளம் பெடையொடும் புல்கி, விளைகதிர்க் கவரி வீசவீற் றிருக் கும் மிழலையா னெனவினை கெடுமே. 9

---

[2] பங்கயத் தயனுமோர் பாலர்-இது திரிபாதத் திரிமூர்த்தியின் வடிவைக் குறிக்கும். [3] இழிச்சிய-தேவலோகத்திலிருந் து இறக்கிய.

**க**ஞ்சிப்போ துடையார் கையிற்கோ சாரக் கலதிகள் கட்டுரை விட்டு, அஞ்சித்தே விரிய எழுந்தநஞ் சதனை யுண்டமரர்க்கமு தருளி, இஞ்சிக்கே கதலிக் கனிவிழக் கமுகின் குலையொடும் பழம்விழத் தெங்கின், மிஞ்சுக்கே மஞ்சு சேர்பொழில் வீழி மிழலையா னெனவினை கெடுமே. 10

வேந்தர்வந் திறைஞ்ச [3] வேதியர் வீழி மிழலையுள் விண்ணிழி விமானத், தேய்ந்ததன் தேவி யோடுறை கின்ற ஈசனை யெம்பெருமானைத், தோய்ந்தநீர்த் தோணி புரத்துறை மறையோன் தூமொழி ஞானசம் பந்தன், வாய்ந்தபா மாலை வாய்நவில் வாரை வானவர் வழிபடு வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வீழியழகேசுவரர் ; தேவி—சுந்தரகுசாம்பிகை.

---

## 51. திருப்பேணுபெருந்துறை*

**பண் - தக்கராகம்** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**பை**ம்மாநாகம் பன்மலர் [1] கொன்றை பன்றிவெண்கொம் பொன்று பூண்டு, செம்மாந்தையம் பெய்கென்றுசொல்லிச் செய்தொழில்பேணியோர் செல்வர், அம்மானேக்கிய அந்தளிர்மேனி யரிவையோர் பாகம் அமர்ந்த, பெம்மான்நல்கிய தொல்புகழாளர்பேணு பெருந்துறையாரே. 1

மூவருமாகி இருவரு [2] மாகி முதல்வனுமாய்நின்ற மூர்த்தி, [3] பாவங்கள்தீர்தர நல்வினைநல்கிப் பல்கணம்நின்று பணியச், சாவம் [4] தாகிய மால்வரைகொண்டு தண்மதிள்மூன்றும் எரித்த, தேவர்கள்தேவர் எம்பெருமானூர் தீதில் பெருந்துறையாரே. 2

செய்பூங்கொன்றை கூவிளமாலை சென்னியுட்சேர்புனல் சேர்த்திக், கொய்பூங்கோதை மாதுமைபாகம் கூடியோர்பீடுடை

---

[3] வேந்தர் வந்திறைஞ்சும் என்றும் பாடம். *'திருப்பந்துறை' என வழங்கப்பெறும். [1] பன்மலர் - தும்பை எருக்கு ஊமத்தை முதலியன. [2] இருவர் - சிவம்சத்தி என இருவர். [3] மூர்த்தி - வடிவுடையவன். [4] சாவம் - வில் - (சாபம்).

வேடர், கைபோனு[5]ன்ற கனிகுலைவாழைக் காய்குலையிற்கமு கினைப், பெய்பூம்பாளை பாய்ந்திழிதேறல் மல்கு பெருந்துறை யாரே. 3

நிலனெடுவானும் நீரொடுதீயும் வாயுவுமாகியோ ரைந்து புலனெடுவென்று பொய்ம்மைகள்தீர்ந்த புண்ணியர்வெண் பொடிப்பூசி, நலனெடுதீங்குந் தானலதின்றி நன்கெழுசிந்தைய ராகி, மலனெ[6]டுமாசு[7]ம் இல்லவர்வாழும் மல்கு பெருந்துறை யாரே. 4

பணிவாயுள்ள நன்கெழுநாவின் பத்தர்கள்பத்திமை செய் யத், துணியார் தங்கள் உள்ளமிலாத சுமடர்கள்[8] சோதிப் பரி யார், அணியார்நீல மாகியகண்டர் அரிசிலுரிஞ்சு கரைமேல் மணிவாய்நீலம் வாய்கமழ்தேறல் மல்கு பெருந்துறையாரே. 5

எண்ணார் தங்கள் மும்மதிள்[9] வேவ ஏவலங்காட்டிய எந்தை விண்ணோர்சாரத் தன்னருள்செய்த வித்தகர்வேத முதல்வர், பண் ணார்பாடல் ஆடல்அரூத பசுபதியீசனோர் பாகம், பெண்ணாண் ஆய வார்சடையண்ணல் பேணுபெருந்துறையாரே. 6

விழையாருள்ளம் நன்கெழுநாவில் வினைகெடவேதமா றங் கம், பிழையாவண்ணம் பண்ணியவாற்றல் பெரியோரேத்தும் பெருமான், தழையார்மாவின் தாழ்கனியுந்தித் தண்ணரிசில் புடை சூழ்ந்து, குழையார்சோலை மென்னடையன்னங் கூடு பெருந்துறையாரே. 7

பொன்னங்கானல்[10] வெண்டிரைசூழ்ந்த பொருகடல்வேலி இலங்கை, மன்னன்ஒல்க மால்வரையூன்றி மாமுரண்ஆகமுந் தோளும், முன்னவைவாட்டிப் பின்னருள்செய்த மூவிலை வேலுடை மூர்த்தி, அன்னங்கன்னிப் பேடையொடாடி யணவு[11] பெருந்துறையாரே. 8

புள்வாய்போழ்ந்து மாநிலங்கீண்ட பொருகடல்வண்ணனும் பூவின், உள்வாயல்லி மேலுறைவானும் உணர்வரியான்உமை கேள்வன், முள்வாய்தாளின் தாமரைமொட்டின் முகமலரக்கயல்

---

[5] கைபோல் - யானைத்துதிக்கைபோல். [6] மலன் - மூலமலம். [7] மாசு - கன்மமலம். [8] சுமடர்கள் - கயவர்கள். [9] மதிள் - மதில்: போலி. [10] கானல் - கடற்கரைச் சோலை. [11] அணவும் - கூடுகின்ற.

பாயக், கள்வாய்நீலங் கண்மலரேய்க்குங் காமர் பெருந்துறை யாரே. 9

குண்டுந்தேருங் கூறைகளைந்துங் கூப்பிலர்செப்பில ராகி, மிண்டும்மிண்டர் மிண்டவைகண்டு மிண்டுசெயாது[9] விரும்பும், தண்டும்பாம்பும் வெண்டலைசூலந் தாங்கியதேவர் தலைவர், வண்டுந்தேனும் வாழ்பொழிற்சோலை மல்கு பெருந்துறையாரே. 10

கடையார்மாடம் நன்கெழுவீதிக் கழுமலவூரன் கலந்து, நடையார்இன்சொல் ஞானசம்பந்தன் நல்லபெருந்துறை மேய, படையார்சூலம் வல்லவன்பாதம் பரவியபத்திவை வல்லார், உடையாராகி உள்ளமும்ஒன்றி உலகினில்மன்னுவர் தாமே.[10] 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சிவானந்தேசுவரர்; தேவி—மங்களநாயகி, மலையரசி.

---

## 52. திருநறையூர்ச்சித்தீச்சரம்*

பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஊரு லாவு பலிகொண் டுலகேத்த
நீரு லாவு நிமிர்புன் சடையண்ணல்
சீரு லாவு மறையோர் நறையூரில்[1]
சேருஞ் சித்தீச் சரஞ்சென் றடைநெஞ்சே. 1

காடும் நாடுங் கலக்கப் பலிநண்ணி
ஓடு கங்கை யொளிர்புன் சடைதாழ
வீடு மாக[2] மறையோர் நறையூரில்
நீடுஞ் சித்தீச் சரமே நினைநெஞ்சே. 2

கல்வி யாளர் கனகம் அழல்மேனி
புல்கு கங்கை புரிபுன் சடையானூர்

---

[9] மிண்டுசெயாது - வெறுப்புக்கொண்டுவிடாது. [10] உடையாராகி- திருவருட் பேறுடையவராய்; உள்ளமும் ஒன்றி - சித்தவிருத்தி யின்றி; உலகினில் - வீட்டுலகில். * நறையூர் - ஊர்ப்பெயர். சித்தீச்சரம் - கோயிலின் பெயர். [1] மறையோர் நறையூர் - அந்தணர் சிறந்து விளங்கும் ஊர். [2] வீடமாக என்றும் பாடம்.

மல்கு திங்கள் பொழில்சூழ் நறையூரில்
செல்வர் சித்தீச் சரஞ்சென் றடைநெஞ்சே. 3

நீட வல்ல நிமிர்புன் சடைதாழ
ஆட வல்ல அடிக ளிடமாகும்
பாடல் வண்டு பயிலும் நறையூரில்
சேடர்[3] சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 4

உம்ப ராலும் உலகின் னவராலும்
தம்பெ ருமைய ளத்தற் கரியானூர்
நண்பு லாவு மறையோர் நறையூரில்
செம்பொன் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 5

கூரு லாவு படையான் விடையேறி
போரு லாவு மழுவான் அனலாடி
பேரு லாவு பெருமான் நறையூரில்
சேருஞ் சித்தீச் சரமே யிடமாமே. 6

அன்றி நின்ற[4] அவுணர் புரமெய்த
வென்றி வில்லி விமலன் விரும்புமூர்
மன்றில் வாசம்[5] மணமார் நறையூரில்
சென்று சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 7

அரக்கன் ஆண்மை அழிய வரைதன்னால்
நெருக்க வூன்றும் விரலான் விரும்புமூர்
பரக்குங் கீர்த்தி யுடையார் நறையூரில்
திருக்கொள் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 8

ஆழி யானும் அலரின் உறைவானும்
ஊழி நாடி உணரார் திரிந்துமேல்
சூழு நேட எரியாம் ஒருவன்சீர்
நீழல் சித்தீச் சரமே நினைநெஞ்சே. 9

மெய்யின் மாசர் விரிநுண் துகிலிலார்[6]
கையி லுண்டு கழறும் உரைகொள்ளேல்

---

[3] நீடவல்ல - நீள; நீடுதல்-நீளுதல்; சேடர்-அறிவு திருமேனியாக உடையவர். [4] அன்றி நின்ற-பகைகொண்டு நின்ற; அன்றல்-பகைத்தல். [5] மன்றல் வாசம் என்றும் பாடம். [6] நுண் துகிலினார் என்றும் பாடம்.

உய்ய வேண்டில் இறைவன் நறையூரில்
செய்யுஞ் [7] சித்தீச் சரமே தவமாமே. 10

மெய்த்து [8] லாவு மறையோர் நறையூரில்
சித்தன் [9] சித்தீச் சரத்தை உயர்காழி
அத்தன் பாதம் அணிஞான சம்பந்தன்
பத்தும் பாடப் பறையும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - தக்கேசி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பிறைகொள்சடையர் புலியினுரியர் பேழ்வாய் [1] நாகத்தர்
கறைகொள்கண்டர் கபாலமேந்துங் கையர்கங்காளர்
மறைகொள்கீதம் பாடச்சேடர் மனையில்மகிழ்வெய்திச்
சிறைகொள்வண்டு தேனார்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 1
பொங்கார்சடையர் புனலர்அனலர் பூதம்பாடவே
தங்காதலியுந் தாமும்உடனாய்த் தனியோர்விடையேறிக்
கொங்கார்கொன்றை வன்னிமத்தஞ் சூடிக்குளிர்பொய்கைச்
செங்கால்அனமும் பெடையுஞ்சேருஞ் சித்தீச்சரத்தாரே. 2
முடிகொள்சடையர் முளைவெண்மதியர் மூவாமேனிமேல்
பொடிகொள்நூலர் புலியினதளர் புரிபுன்சடைதாழக்
கடிகொள்சோலை வயல்சூழ்மடுவிற் கயலாரினம்பாயக்
கொடிகொள்மாடக் குழாமார்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 3
பின்தாழ்சடைமேல் நகுவெண்டலையர் பிரமன்தலையேந்தி
மின்தாழுருவிற் சங்கார்குழைதான் மிளிரும்ஒருகாதர்
பொன்தாழ்கொன்றை செருந்திபுன்னை பொருந்துசெண்பகம்
சென்றார்செல்வத் திருவார்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 4
நீரார்முடியர் கறைகொள்கண்டர் மறைகள்நிறைநாவர்
பாரார்புகழால் பத்தர்சித்தர் பாடியாடவே

---

[7] செய்யும் - நன்மை செய்யும். [8] மெய்த்து - மெய்ப்பித்து; உண்மை யுணரக்காட்டி. [9] சித்தன் - இங்குச் சித்தர்கள் பூசிக்க இறைவரும் சித்தராய் எழுந்தருளினர் என்பதைக் குறிப்பதாம்.
[1] பேழ்வாய் - பிளந்தவாய்.

தேரார்வீதி முழவார்விழவின் ஒலியுந்திசைசெல்லச்
சீரார்கோலம் பொலியும்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 5

நீண்டசடையர் நிரைகொள்கொன்றை விரைகொள்மலர்மாலை
தூண்டுசுடர்பொன் னொளிகொள்மேனிப் பவளத்தெழிலார்வந்
தீண்டுமாடம் எழிலார்சோலை யிலங்குகோபுரம்
தீண்டுமதியந் திகழும்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 6

குழலார்சடையர் கொக்கின் இறகர் கோலநிறமத்தம்
தழலார்மேனித் தவளநீற்றர் சரிகோவணக்கீளர்
எழிலார்நாகம் புலியின்உடைமேல் இசைத்து[2] விடையேறிக்
கழலார்சிலம்பு புலம்ப[3] வருவார் சித்தீச்சரத்தாரே. 7

கரையார்கடல்சூழ் இலங்கைமன்னன் கயிலைமலைதன்னை
வரையார்தோளா லெடுக்கமுடிகள் நெரித்துமனமொன்றி
உரையார்கீதம் பாடநல்ல வுலப்பில[4] ருள்செய்தார்
திரையார்புனல்சூழ் செல்வநறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 8

நெடியான்பிரமன் நேடிக்காணார் நினைப்பார்மனத்தாராய்
அடியாரவரும் அருமாமறையும் அண்டத்தமரரும்
முடியால்வணங்கிக் குணங்களேத்தி முதல்வா அருளென்னச்
செடியார்செந்நெல் திகழும்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 9

நின்றுண்சமணர் இருந்துண்தேரர் நீண்டபோர்வையார்
ஒன்றுமுணரா ஊமர்[5] வாயில் உரைகேட்டுழல்வீர்காள்
கன்றுண்பயப்பா லுண்ணமுலையில் கபாலமயல்பொழியச்[6]
சென்றுண்டார்ந்து சேரும்நறையூர்ச் சித்தீச்சரத்தாரே. 10

குயிலார்கோல மாதவிகள் குளிர்பூஞ்சுரபுன்னை
செயிலார்[7] பொய்கை சேரும்நறையூர்ச் சித்தீச்சரத்தாரை
மயிலார்சோலை சூழ்ந்தகாழி மல்குசம்பந்தன்
பயில்வார்க்கினிய[8] பாடல்வல்லார் பாவநாசமே. 11

திருச்சிற்றம்பலம்

---

[2] இசைந்து என்றும் பாடம். [3] புலம்ப - ஒலிக்க. [4] உலப்பில்-குறையாத. [5] ஊமர் - பேசினும் பயனற்றவர். [6] மயல்வழியச் என்றும் பாடம். [7] செயிலார் - செய்(வயல்)களில் நிறைந்த. [8] இனிய - இன்பம்செய்கின்ற.

பண் - பியந்தைக்காந்தாரம் [2-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

நேரிய னாகுமல்ல னொருபாலு மேனி யரியான்[1] முனாய வொளியான், நீரியல் காலுமாகி நிறைவானு மாகி யுறுதீயு மாய விமலன்[2], ஊரியல் பிச்சைபேணி யுலகங்க ளேத்த நல்குண்டு[3] பண்டு சுடலை, நாரியொர் பாகமாக நடமாட வல்ல நறையூ ரின் நம்ப னவனே. 1

இடமயி லன்னசாயல் மடமங்கை தன்கை யெதிர்நாணி பூண அரையில், கடும்அயி லம்புகோத்து எயில்[4] செற் றுகந்து அமரர்க் களித்த தலைவன், மடமயில் ஊர்திதாதை யெனநின்று தொண்டர் மனநின்ற மைந்தன் மருவும், நடம்மயி லாலநீடு குயில்கூவு சோலை நறையூரின் நம்ப னவனே. 2

சூடக முன்கைமங்கை யொருபாகமாக அருள்கார ணங்கள் வருவான், ஈடக மானநோக்கி யிடுபிச்சை கொண்டு படுபிச்ச னென்று பரவத், தோடக மாயொர்காதும் ஒருகா திலங்கு குழைதாழ வேழ வுரியன், நாடக மாகவாடி மடவார்கள்பாடும் நறையூரின் நம்ப னவனே. 3

சாயல்நன் மாதொர்பாகன் விதியாய சோதி கதியாக நின்ற கடவுள், ஆயக மென்னுள்வந்த அருளாய செல்வன் இருளாய கண்டன் அவனித், தாயென நின்றுகந்த தலைவன் விரும்பு மலையின்கண் வந்து தொழுவார், நாயக னென்றிறைஞ்சி மறையோர்கள் பேணும் நறையூரின் நம்ப னவனே. 4

நெதி[5] படு மெய்யெம்ஐயன் நிறை[6] சோலை சுற்றி நிகழும் பலத்தின் நடுவே, அதிர்பட ஆடவல்ல அமரர்க் கொருத்தன் எமர்சுற்ற மாய இறைவன், மதிபடு சென்னிமன்னு சடைதாழ வந்து விடையேறி இல்பலி கொள்வான், நதிபட வுந்திவந்து வயல்வாளை பாயும் நறையூரின் நம்ப னவனே. 5

---

[1] நேரியன்......அரியன - ஒன்றாய மேனியல்லன்; ஒருபால் அரி என ஆவர். [2] தீயுமான விமலன் என்றும், தீயுமாய வொருவன் என்றும் பாடம். [3] நலகண்டு என்றும் பாடம், [4] கோத்த எயில் என்றும் பாடம். [5] நெதி - நன்மை (நியதி). [6] நெதிபடு மெய்ய மைய நிறை என்றும் பாடம்.

கணிகையொர் சென்னிமன்னு மதுவன்னி கொன்றை மலர் துன்று செஞ்சடை யினன், பணிகையின் முன்னிலங்க வருவேட மன்னு பலவாகி நின்ற பரமன், அணுகிய வேதவோசை யகலங் கம் ஆறின் பொருளான ஆதி யருளான், நணுகிய தொண்டர் கூடி மலர்தூவி யேத்து நறையூரின் நம்ப னவனே. 6

ஒளிர்தரு கின்றமேனி[7] யுருவெங்கு மங்க மவையார ஆட லரவம், மிளிர்தரு கையிலங்க அனலேந்தி யாடும் விகிர்தன் விடங்கொள் மிடறன், துளிதரு சோலையாலை தொழில்மேவ வேதம் எழிலார வென்றி யருளும், நளிர்மதி சேருமாடம் மட வார்க ளாரும் நறையூரின் நம்ப னவனே. 7

அடலெரு தேறுகந்த அதிருங்கழற்கள் எதிருஞ் சிலம்பொ டிசையக், கடலிடை நஞ்சமுண்டு கனிவுற்ற கண்டன் முனிவுற் றிலங்கை யரையன், உடலொடு தோளனைத்து முடிபத் திறுத்தும் இசைகேட் டிரங்கி யொருவாள், நடலைகள்[8] தீர்த்து நல்கி நமை யாள வல்ல நறையூரின் நம்ப னவனே. 8

குலமலர் மேவினானும் மிகுமாய னாலும் எதிர்கூடி நேடி நினைவுற், றிலபல எய்தொணாமை யெரியா யுயர்ந்த பெரியா னிலங்கு சடையன், சிலபல தொண்டர்நின்று பெருமைக்கள் பேச வருமைத் திகழ்ந்த பொழிலின், நலமலர் சிந்தவாச மண நாறு வீதி நறையூரின் நம்ப னவனே. 9

துவருறு கின்றஆடை யுடல்போர்த் துழன்ற வவர்தாமும் அல்ல சமணும், கவரு[9] று சிந்தையாள ருரைநீத் துகந்த பெரு மான் பிறங்கு சடையன், தவமலி பத்தர் சித்தர் மறையாளர் பேண முறைமாதர் பாடி மருவும், நவமணி துன்றுகோயில் ஒளி பொன்செய் மாட நறையூரின் நம்ப னவனே. 10

கான லுலாவியோதம் எதிர்மல்கு காழி மிகுபந்தன் முந்தி யுணர, ஞான முலாவுசிந்தை யடிவைத் து[10] கந்த நறையூரின்நம்ப னவனை, ஈனமி லாதவண்ணம் இசையா லுரைத்த தமிழ்மாலை

---

[7] ஒளிதருகின்ற மேனி என்றும் பாடம்; ஒளிதருகின்ற மேனி - சத்தியினால் தோற்றுவித்திருந்த திருமேனி என்பது பொருள். [8] நடலைகள் - வஞ்சம்; துன்பம். [9] கவர் - பொய்மை. [10] சிந்தை அடி வைத்து - சிந்தையில் திருவடியைப் பதித்து.

பத்தும் நினைவார், வானம் நிலாவவல்லர் நிலமெங்கு நின்று வழி
பாடு செய்யு மிகவே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சித்தநாதேசுவரர் ; தேவி—அழகாம்பிகை.

---

## 53. திருஅரிசிற்கரைப்புத்தூர்*

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மின்னுஞ் சடைமேல் இளவெண் திங்கள் விளங்கவே
துன்னுங் கடல்நஞ் சிருள்தோய் கண்டர் தொன்மூதூர்
அன்னம் படியும் புனலார் அரிசில் அலைகொண்டு
பொன்னும் மணியும் பொருதென் கரைமேற் புத்தூரே. 1

மேவா [1] அசுரர் மேவெயில் வேவ மலைவில்லால்
ஏவார் எரிவெங் கணையா லெய்தான் எய்துமூர்
நாவால் நாதன் நாமம் ஓதி நாடோறும்
பூவால் நீராற் பூசுரர் போற்றும் புத்தூரே. 2

பல்லார் தலைசேர் மாலை சூடிப் பாம்பும்பூண்
டெல்லா விடமும் வெண்ணீ றணிந்தோ ரேறேறிக்
கல்லார் [2] மங்கை பங்க ரேனுங் காணுங்கால்
பொல்லா ரல்லர் அழகிய புத்தூர்ப் புனிதரே. 3

வரியேர் வளையாள் அரிவை யஞ்ச வருகின்ற
கரியேர் உரிவை போர்த்த கடவுள் கருதுமூர்
அரியேர் கழனிப் பழனஞ் சூழ்ந்தங் கழகாய
பொரியேர் புன்கு சொரிபூஞ் சோலைப் புத்தூரே. 4

என்போ டரவம் ஏனத் தெயிறோ டெழிலாமை
மின்போற் புரிநூல் விரவிப் பூண்ட மணிமார்பர் [3]
அன்போ டுருகும் அடியார்க் கன்பர் அமருமூர்
பொன்போ தலர்கோங் கோங்கு சோலைப் புத்தூரே. 5

---

* அழகார்புத்தூர் என்றும் திருப்புத்தூர் என்றும் வழங்கப்பெறும். அரிசில் - (அரிசொல்) ஒரு நதி. அரிசொல்ல வந்தமையால் இப்பெயர்பெற்றது. [1] மேவா-பகைமைபூண்ட. [2] கல்லார்-மலையரசன். [3] பூண்டவரைமார்பர் என்றும் பாடம்.

வள்ளி முலைதோய் குமரன் தாதை வான்தோயும்
வெள்ளி மலைபோல் விடையொன் றுடையான் மேவுமூர்
தெள்ளி வருநீர் அரிசில் தென்பாற் சிறைவண்டும்
புள்ளும் மலிபூம் பொய்கை சூழ்ந்த புத்தூரே. 6

நிலந்தண் நீரோ டனல்கால் விசும்பின் நீர்மையான்
சிலந்தி செங்கட் சோழ னாகச்[4] செய்தானூர்
அலந்த அடியான் அற்றைக் கன்றோர் காசெய்திப்
புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே.[5] 7

இத்தேர் ஏக[6] இம்மலை பேர்ப்பன் என்றேந்தும்
பத்தோர் வாயான் வரைக்கீழ் அலறப் பாதந்தான்
வைத்தா ரருள்செய் வரதன் மருவும் ஊரான
புத்தூர் காணப் புகுவார் வினைகள் போகுமே. 8

முள்ளார் கமலத் தயன்மால் முடியோ டடிதேட
ஒள்ளா ரெரியா யுணர்தற் கரியான் ஊர்போலும்
கள்ளார் நெய்தல் கழுநீ ராம்பல் கமலங்கள்
புள்ளார் பொய்கைப் பூப்பல தோன்றும் புத்தூரே. 9

கையார் சோறு கவர்குண் டர்களுந் துவருண்ட
மெய்யார் போர்வை மண்டையர் சொல்லும் மெய்யல்ல
பொய்யா மொழி[7] யா லந்த ணர்போற்றும் புத்தூரில்
ஐயா என்பார்க் கையுற வின்றி யழகாமே. 10

நறவங் கமழ்பூங் காழி ஞான சம்பந்தன்
பொறிகொள் அரவம் பூண்டான் ஆண்ட புத்தூர்மேல்
செறிவண் டமிழ்செய் மாலை செப்ப வல்லார்கள்
அறவன்[8] கழல்சேர்ந் தன்போ டின்பம் அடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—படிக்காசுவைத்தபரமர்; தேவி—அழகாம்பிகை.

---

[4] செங்கோழ்சோழனாகச் என்னும் பாடம். [5] இவ்வடிகள் புகழ்த்துணை நாயனாருக்கு இறைவன் அருளியமையைக் குறிக்கும். [6] ஏக- தடையின்றி ஏகும பொருட்டு, இத்தேர்போக என்றும் பாடம். [7] பொய்யாமொழி - வேதம். [8] அறவன் - அறவாழியந்தணன்.

## 54. திருச்சிவபுரம்*

### திருவிராகம். பண் - நட்டபாடை [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

புவம்[1]வளி கனல்புனல் புவிகலை யுரைமறை திரிகுணம் அமர்நெறி
திவமலி தருசுரர் முதலியர் திகழ்தரும் உயிரவை யவைதம
பவமலி தொழிலது நினைவொடு பதுமநன் மலரது மருவிய
சிவனது சிவபுரம் நினைபவர் செழுநில னினில்நிலை பெறுவரே. 1

மலைபல வளர்தரு புவியிடை மறைதரு வழிமலி மனிதர்கள்
நிலைமலி சுரர்முதல் உலகுகள் நிலைபெறு வகைநினை வொடுமிகும்
அலைகடல் நடுஅறி துயிலமர் அரியுரு வியல்பர னுறைபதி
சிலைமலி மதிள்சிவ புரநினை பவர்திரு மகளொடு திகழ்வரே. 2

பழுதில கடல்புடை தழுவிய படிமுத லியவுல குகள்மலி
குழுவிய சுரர்பிறர் மனிதர்கள் குலம்மலி தருமுயி ரவையவை
முழுவதும் அழிவகை நினைவொடு முதலுரு வியல்பர னுறைபதி
செழுமணி யணிசிவ புரநகர் தொழுமவர் புகழ்மிகு முலகிலே. 3

நறைமலி தருமள றொடுமுகை நகுமலர் புகைமிகு வளரொளி
நிறைபுனல் கொடுதனை நினைவொடு நியதமும் வழிபடும் அடியவர்
குறைவில பதம்அணை தரஅருள் குணமுடை யிறையுறை வனபதி
சிறைபுன லமர்சிவ புரமது நினைபவர் செயமகள் தலைவரே. 4

சினமலி யறுபகை மிகுபொறி சிதைதரு வகைவளி நிறுவிய
மனனுணர் வொடுமலர் மிசையெழு தருபொருள் நியதமும் உணர்பவர்
தனதெழி லுருவது கொடுஅடை தகுபர னுறைவது நகர்மதிள்
கனமரு வியசிவ புரம்நினை பவர்கலை மகள்தர நிகழ்வரே. 5

சுருதிகள் பலநல முதல்கலை துகளறு வகைபயில் வொடுமிகு
உருவிய லுலகவை புகழ்தர வழியொழு குமெயுறு பொறியொழி
அருதவ முயல்பவர்[2] தனதடி யடைவகை நினையர னுறைபதி
திருவருள்[3] சிவபுரம் நினைபவர் திகழ்குலன் நிலனிடை நிகழுமே. 6

கதமிகு கருவுரு வொடுவுகி ரிட[4] வட வரைகண கணவென
மதமிகு நெடுமுக னமர்வளை மதிதிக ழெயிறதன் நுதிமிசை

---

* சண்பகவனம் எனவும் பெயர் பெறும்; இது திருமால் வராக அவதாரத்தில் வழிபட்ட தலம். [1] புவம்-ஆகாயம். [2] தருதவமுயல்பவர் என்றும் பாடம். [3] திருவளர் என்றும் பாடம். [4] வுகிரிடை என்றும் பாடம்.

இத்தமர் புவியது நிறுவிய எழிலரி வழிபட[5] அருள்செய்த
பதமுடை யவனமர் சிவபுரம் நினைபவர் நிலவுவர் படியிலே. 7
அசைவுறுதவமுயல்வினில் அயன் அருளினில்வருவலி[6]கொடுசிவன்
இசைகயி லையையெழு தருவகை[7] யிருபது கரமவை நிறுவிய
நிசிசரன் முடியுடை தரவொரு விரல்பணி கொளுமவ னுறைபதி
திசைமலி சிவபுரம் நினைபவர் செழுநில னினில்நிகழ் வுடையரே. 8
அடல்மலி படையரி அயனொடும் அறிவரி யதொரழல் மலிதரு
சுடருரு வொடுநிகழ் தரவவர் வெருவொடு துதியது செயவெதிர்
விடமலி களநுத லமர்கண துடையுரு வெளிபடு மவன்நகர்
இடமலி பொழிலெழில் சிவபுரம் நினைபவர் வழிபுவி திகழுமே. 9
குணமறி வுகள்நிலை யிலபொரு ளுரைமரு வியபொருள் களுமில
திணமெனு மவரொடு செதுமதி[8] மிகுசம ணருமலி தமதுகை
உணலுடை யவருணர் வருபர னுறைதரு பதியுல கினில்நல
கணமரு வியசிவ புரம்நினை பவரெழி லுருவுடை யவர்களே. 10
நிகழ்சிவ புரநகர் மருவிய சிவனடி யிணைபணி சிரபுர
நகரிறை தமிழ்விர கனதுரை நலமலி யொருபதும் நவில்பவர்
நிகழ்குல நிலநிறை திருவுரு நிகரில கொடைமிகு சயமகள்
புகழ்புவி வளர்வழி யடிமையின் மிகைபுணர் தரநலம் மிகுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

இன்குர லிசைகெழும் யாழ்முரலத்
தன்கரம் மருவிய சதுரன்நகர்
பொன்கரை பொருபழங் காவிரியின்
தென்கரை மருவிய சிவபுரமே. 1
அன்றடற் காலனைப் பாலனுக்காய்ப்
பொன்றிட வுதைசெய்த புனிதன்நகர்

---

5 இவ்வடிகள் திருமால் வெள்ளைப் பன்றி வடிவுகொண்டு, கடலில் மூழ்கிய உலகினைத் தனது கொம்பின்மேல் ஏந்தி நிறுத்திப் பூசித்த வரலாற்றைக் குறிக்கும். 6 அயன்...வலி-பிரமன் அருளிய வரத்தின் வலிமை. 7 எழுதருவகை - நிலைபெயரும்படி. 8 செது மதி — துன்மதி.

வென்றிகொ ளெயிற்றுவெண் பன்றி[1] முன்னாள்
சென்றடி வீழ்தரு சிவபுரமே. 2

மலைமகள் மறுகிட மதகரியைக்
கொலைமல்க வுரிசெய்த குழகன்நகர்
அலைமல்கும் அரிசிலின் அதன் அயலே
சிலைமல்கும் மதிளணி சிவபுரமே. 3

மண்புனல் அனலொடு மாருதமும்
விண்புனை மருவிய விகிர்தன்நகர்
பண்புனை குரல்வழி வண்டுகிண்டிச்
செண்பக மலர்பொழிற்[2] சிவபுரமே. 4

வீறுநன் குடையவள் மேனிபாகம்
கூறுநன் குடையவன் குளிர்நகர்தான்
நாறுநன் குரவிரி வண்டுகிண்டித்
தேறலுண் டெழுதரு சிவபுரமே. 5

மாறெதிர் வருதிரி புரமெரித்து
நீறது வாக்கிய நிமலன்நகர்
நாறுடை நடுபவர்[3] உழவரொடும்
சேறுடை வயலணி சிவபுரமே. 6

ஆவிலைந் தமர்ந்தவன் அரிவையொடு
மேவிநன் கிருந்ததோர் வியன்நகர்தான்
பூவில்வண் டமர்தரு பொய்கையன்னச்
சேவல்தன் பெடைபுல்கு சிவபுரமே. 7

எழில்மலை யெடுத்தவல் இராவணன்தன்
முழுவலி யடக்கிய முதல்வன்நகர்
விழவினில் எடுத்தவெண் கொடிமிடைந்து
செழுமுகில் அடுக்கும்[4] வண் சிவபுரமே. 8

சங்கள விய[5] கையன் சதுர்முகனும்
அங்கள வறிவரி யவன்நகர்தான்
கங்குலும் பறவைகள் கமுகுதொறும்
செங்கனி நுகர்தரு சிவபுரமே. 9

---

[1] வெண்பன்றி—இங்குத் திருமால். [2] சண்பகமலர்பொழில் - இத்தலத்தின் மரம். [3] நடுவளா என்றும் பாடம். [4] எடுக்கும் என்றும் பாடம். [5] அளவிய - ஏந்திய.

மண்டயிற் குண்டிகை மாசுதரும்[6]
மிண்டரை விலக்கிய விமலன்நகர்
பண்டமர் தருபழங் காவிரியின்
தெண்டிரை பொருதெழு சிவபுரமே. 10

சிவனுறை தருசிவ புரநகரைக்
கவுணியர் குலபதி காழியர்கோன்
தவமல்கு தமிழிவை சொல்லவல்லார்
நவமொடு சிவகதி நண்ணுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம்: பண் - வியாழக்குறிஞ்சி
திருச்சிற்றம்பலம்

கலைமலி யகலல்குல் அரிவைதன் உருவினன்
முலைமலி தருதிரு வுருவம துடையவன்
சிலைமலி மதில்பொதி சிவபுர நகர்தொழ
இலைநலி வினையிரு மையுமிடர் கெடுமே. 1

படரொளி சடையினன் விடையினன் மதிலவை
சுடரெரி கொளுவிய சிவனவன் உறைபதி
திடலிடு புனல்வயல் சிவபுரம் அடையநம்
இடர்கெடும் உயர்கதி பெறுவது திடனே. 2

வரைதிரி தரவர வகடழ லெழவரு
நுரைதரு கடல்விடம் நுகர்பவன் எழில்திகழ்
திரைபொரு புனலரி சிலதடை சிவபுரம்
உரைதரும் அடியவர் உயர்கதி யினரே. 3

துணிவுடை யவர்சுடு பொடியினர் உடலடு
பிணியடை விலர்பிற வியுமற விசிறுவர்
தணிவுடை யவர்[1] பயில் சிவபுரம் மருவிய
மணிமிட றனதடி யிணைதொழு மவரே. 4

மறையவன் மதியவன் மலையவன் நிலையவன்
நிறையவன் உமையவள் மகிழ்நடம் நவில்பவன்

---

[6] மாசுதூரும் என்றும் பாடம்; தூர்தல் - நிறைதல். [1] விசிறு-தல் - நீங்குதல்; திணியுடையவர் என்றும் பாடம்.

இறையவன் இமையவர் பணிகொடு சிவபுரம்
உறைவென வுடையவன் எமையுடை யவனே. 5

முதிர்சடை யிளமதி நதிபுனல் பதிவுசெய்
ததிர்கழல் ஒலிசெய வருநடம் நவில்பவன் [2]
எதிர்பவர் புரமெய்த இணையிலி யணைபதி
சதிர்பெறும் உளமுடை யவர்சிவ புரமே. 6

வடிவுடை மலைமகள் சலமக ளுடன்அமர்
பொடிபடும் உழையதள் [3] பொலிதிரு வுருவினன்
செடிபடு பலிதிரி சிவனுறை சிவபுரம்
அடைதரும் அடியவர் அருவினை யிலரே. 7

கரம்இரு பதுமுடி யொருபதும் உடையவன்
உரம்நெரி தரவரை யடர்வுசெய் தவனுறை
பரனென அடியவர் பணிதரு சிவபுர
நகரது புகுதல்நம் உயர்கதி யதுவே. 8

அன்றிய லுருவுகொள் அரியய னெனுமவர்
சென்றள விடலரி யவனுறை சிவபுரம்
என்றிரு பொழுதுமுன் வழிபடு மவர்துயர்
ஒன்றிலர் புகழொடும் உடையரிவ் வுலகே. 9

புத்தரொ டமணர்கள் அறவுரை புறவுரை
வித்தக மொழிகில விடையுடை யடிகள்தம்
இத்தவ முயல்வுறில் இறைவன சிவபுரம்
மெய்த்தக வழிபடல் விழுமிய குணமே. 10

புந்தியர் மறைநவில் புகலிமன் ஞானசம்
பந்தன தமிழ்கொடு சிவபுர நகருறை
எந்தையை யுரைசெய்த இசைமொழி பவர்வினை
சிந்திமு னுறவுயர் கதிபெறு வர்களே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சிவபுரநாதர், பிரமபுரிநாதர்;
தேவி—சிங்காரவல்லி, பெரியநாயகி.

---

[2] நவில்வோன் என்றும் பாடம். [3] உழைஅதள்–**மான்தோல்;** பொடிபடும் இழையதன் என்றும் பாடம். இழை - **பூணூல்.**

## 55. திருக்கருக்குடி*

**பண் - காந்தாரபஞ்சமம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நனவிலுங் கனவிலும் நாளுந் தன்னொளி
நினைவிலும் எனக்குவந் தெய்தும் நின்மலன்[1]
கனைகடல் வையகந் தொழுக ருக்குடி
அனலெரி யாடுமெம் அடிகள் காண்மினே. 1

வேதியன் விடையுடை விமலன் ஒன்னலர்
மூதெயில் எரியெழ முனிந்த முக்கணன்
காதியல் குழையினன் கருக்கு டியமர்
ஆதியை அடிதொழ அல்லல் இல்லையே. 2

மஞ்சுறு பொழில்வளம் மலிக ருக்குடி
நஞ்சுறு திருமிட றுடைய நாதனார்
அஞ்சுரும் பார்குழல் அரிவை யஞ்சவே
வெஞ்சுரந் தனில்விளை யாட லென்கொலோ. 3

ஊனுடைப் பிறவியை அறுக்க வுன்னுவீர்
கானிடை யாடலான் பயில்க ருக்குடிக்
கோனுயர் கோயிலை வணங்கி வைகலும்
வானவர் தொழுகழல் வாழ்த்தி வாழ்மினே. 4

சூடுவர் சடையிடைக் கங்கை நங்கையைக்
கூடுவ ருலகிடை யையங் கொண்டொலி
பாடுவர் இசைபறை கொட்ட நட்டிருள்
ஆடுவர் கருக்குடி அண்ணல் வண்ணமே. 5

இன்புடை யாரிசை வீணை பூணரா
என்புடை யாரெழில் மேனி மேலெரி
முன்புடை யார்முத லேத்தும் அன்பருக்
கன்புடை யார்கருக் குடியெம் அண்ணலே. 6

காலமும் ஞாயிறுந் தீயு மாயவர்
கோலமும் முடியர வணிந்த கொள்கையர்

---

* மருதாந்த நல்லூர் என வழங்கப்பெறும்; இது சற்குணன் என்ற அரசன் பூசித்துப் பேறுபெற்ற தலம். [1] இவ்வடிகள் ஞானசம்பந்தரின் பக்தி அனுபவத்தைக் குறிப்பன.

சீலமும் உடையவர் திருக்க ருக்குடிச்
சாலவும் இனிதவ ருடைய தன்மையே. 7

எறிகடல் புடைதழு இலங்கை மன்னனை
முறிபட வரையிடை யடர்த்த மூர்த்தியார்
கறைபடு பொழில்[1] மதி தவழ்க ருக்குடி
அறிவொடு தொழுமவர் ஆள்வர் நன்மையே. 8

பூமனுந் திசைமுகன் தானும் பொற்பமர்
வாமனன் அறிகிலா வண்ண மோங்கெரி
ஆமென வுயர்ந்தவன் அணிக ருக்குடி
நாமன னினில்வர நினைதல் நன்மையே. 9

சாக்கியர் சமண்படு கையர் பொய்ம்மொழி
ஆக்கிய வுரைகொளேல் அருந்தி ரு[2] நமக்
காக்கிய அரனுறை யணிக ருக்குடிப்
பூக்கமழ் கோயிலே புடைபட் டுய்ம்மினே. 10

கானலில் விரைமலர் விம்மு காழியான்
வானவன் கருக்குடி மைந்தன் தன்னொளி
ஆனமெய்ஞ் ஞானசம் பந்தன் சொல்லிய
ஊனமில் மொழிவலார்க் குயரும் இன்பமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சற்குணலிங்கேசுவரர்; தேவி—அத்துவித நாயகி.

---

## 56. திருவாஞ்சியம்*

பண் - இந்தளம்

திருச்சிற்றம்பலம்

வன்னி கொன்றை மதமத்தம் எருக்கொடு கூவிளம்
பொன்னி யன்றசடை யிற்பொலி வித்தபு ராணனார்[1]

---

[1] கறைபடுபொழில் - இருள் உண்டாகின்ற சோலை. கறைபடு மதிதவழ்பொழிற் கருக்குடி என மாற்றியும் பொருள் கொள்ளலாம். [2] அருந்திரு - அருட்செல்வம். * 'ஸ்ரீவாஞ்சியம்' என வழங்கப் பெறும். இது திருமால் இலக்குமியை விரும்பி இறைவனைப் பூசித்ததால் பெற்ற பெயர். [1] புராணனார் - பழமையானவர்.

தென்ன வென்றுவரி வண்டிசை செய்திரு வாஞ்சியம்
என்னை யாளுடை யானிட மாக[2]வு கந்ததே. 1

காலகா லர்கரி கானி[3]டை மாநட மாடுவர்
மேலர்வே லைவிட முண்டிருள் கின்றமி டற்றினர்
மாலைகோ லமதி மாடமன் னுந்திரு வாஞ்சியம்
ஞாலம்வந் துபணி யப்பொலி கோயில் நயந்ததே. 2

மேவிலொன் றர்விரி வுற்ற இரண்டினர் மூன்றுமாய்
நாவின்நா லர்உடலஞ்சினர் ஆறர் ஏழோசையர்
தேவில்எட் டர்[4] திரு வாஞ்சிய மேவிய செல்வனார்
பாவந்தீர்ப் பர்பழி போக்குவர் தம்அடி யார்கட்கே. 3

சூலமேந் திவளர் கையினர் மெய்சுவண் டா[5]கவே
சாலநல் லபொடிப் பூசுவர் பேசுவர் மாமறை
சீலமே வுபுக ழாற்பெரு குந்திரு வாஞ்சியம்
ஆலமுண் டஅடி கள்ளிட மாக அமர்ந்ததே. 4

கையிலங் குமறி யேந்துவர் காந்தளம் மெல்விரல்[6]
தையல்பா கமுடை யார்அடை யார்புரஞ் செற்றவர்
செய்யமே னிக்கரி யம்மிடற் றார்திரு வாஞ்சியத்
தையர்பா தம்அடை வார்க்கடை யாஅரு நோய்களே. 5

அரவம்பூண் பரணி யுஞ்சிலம் பார்க்க அகந்தொறும்
இரவில்நல் லபலி பேணுவர் நாணிலர் நாமமே
பரவு வார்வினை தீர்க்கநின் றார்திரு வாஞ்சியம்
மருவியேத் தமட மாதொடு நின்றஎம் மைந்தரே. 6

விண்ணி லானபிறை[7] சூடுவர் தாழ்ந்து விளங்கவே
கண்ணி னால்அநங் கனுட லம்பொடி யாக்கினார்
பண்ணி லானஇசை பாடல்மல் குந்திரு வாஞ்சியத்
தண்ணலார் தம்அடி போற்றவல் லார்க்கில்லை அல்லலே. 7

---

[2] தென்ன - ஒலிக்குறிப்பு; தென்னனே எனினுமாம்; இடமாக - (காசிக்குச் சமமாகிய தலங்கள் ஆறனுள்) ஒன்றாக. [3] கரிகான் - சுடுகாடு. [4] இவ்வடிகளில் ஒன்று முதல் எட்டுவரை வரும் எண்ணலங்காரம் வருதலை அறிக. [5] சுவண்டு - பொருத்தம்; அடையாளமுமாம். [6] காந்தள் மெல்விரல் என்றும் பாடம். [7] விண்ணில் வான் பிறை என்றும் பாடம்.

மாடநீ டுகொடி மன்னிய தென்னிலங் கைக்குமன்
வாடியூ டவ்வரை யாலடர்த் தன்றருள் செய்தவர்
வேடவே டர்[8] திரு வாஞ்சியம் மேவிய வேந்தரைப்
பாடநீ டுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. 8

செடிகொள்நோ யின்அடை யார்திறம் பார்செறு தீவினை
கடியகூற் றமுங் கண்டக லும்புகல் தான்வரும்
நெடியமா லொடயன் ஏத்தநின் றார்திரு வாஞ்சியத்
தடிகள்பா தம்அடைந் தாரடி யாரடி யார்கட்கே. 9

பிண்டமுண் டுதிரி வார்பிரி யுந்துவ ராடையார்
மிண்டர்மிண் டும்மொழி மெய்யல பொய்யிலை யெம்இறை
வண்டுகெண் டிமரு வும்பொழில் சூழ்திரு வாஞ்சியத்
தண்டவா ணன்அடி கைதொழு வார்க்கில்லை அல்லலே.[9] 10

தென்றல்துன் றும்பொழில் சென்றணை யுந்திரு வாஞ்சியத்
தென்றுநின் றஇறை யானையு ணர்ந்தடி யேத்தலால்
நன்றுகா ழிமறை ஞானசம் பந்தன செந்தமிழ்
ஒன்றுமுள் ளமு[10] டை யாரடை வாருயர் வானமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வாஞ்சியநாதர்; தேவி—வாழவந்த நாயகி.

---

## 57. திருப்பனையூர்*

பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அரவச் சடைமேல் மதிமத்தம்
விரவிப் பொலிகின் றவனூர்ராம்
நிரவிப் பலதொண் டர்கள்நாளும்
பரவிப் பொலியும் பனையூரே. 1

எண்ணொன் றி[1] நினைந் தவர்தம்பால்
உண்ணின் றுமகிழ்ந் தவனூராம்

---

[8] வேடவேடர்-வேடராக வேடம் பூண்டவர். [9] அல்லல் இல்லை என்பது பொய் இல்லை என்க. [10]ஒன்றும் உள்ளம்-பிறழாத நினைவு.
* இங்குப் பனை மரம் தலமரமாதலால் இப்பெயர் பெற்றது.
[1] எண் - எண்ணம்; ஒன்றி - ஒருமைப்பட்டு.

கண்ணின் றெழு[2] சோலையில்வண்டு
பண்ணின் றொலிசெய் பனையூரே. 2

அலரும் எறிசெஞ் சடைதன்மேல்
மலரும் பிறையொன் றுடையானூர்
சிலரெ[3]ன் றுமிருந் தடிபேணப்
பலரு[4]ம் பரவும் பனையூரே. 3

இடியார் கடல்நஞ் சமுதுண்டு
பொடியா டியமே னியினானூர்
அடியார் தொழமன் னவரேத்தப்
படியார்[5] பணியும் பனையூரே. 4

அறையார் கழல்மேல் அரவாட
இறையார் பலிதேர்ந் தவனூராம்
பொறை[6]யார் மிகுசீர் விழமல்கப்
பறையா ரொலிசெய் பனையூரே. 5

அணியார் தொழவல் லவரேத்த
மணியார் மிடறொன் றுடையானூர்
தணியார் மலர்கொண் டிருபோதும்
பணிவார் பயிலும் பனையூரே. 6

அடையா தவர்மூ எயில்சீறும்
விடையான் விறலார் கரியின்தோல்
உடையான் அவனெண்[7] பலபூதப்
படையா னவனூர் பனையூரே. 7

இலகும் முடிபத் துடையானை
அலல்[8] கண் டருள்செய் தஎம்மண்ணல்
உலகில் லுயிர்நீர் நிலமற்றும்
பலகண் டவனா[9]ர் பனையூரே. 8

[2] கண்ணன்றெழு என்றும் பாடம். [3] சிலர் - அணுக்கத் தொண்டர். [4] பலர் - வழிபடுவோர். [5] படியார் - உலகோர். [6] பொறை - பொருட்பொலிவு. [7] அவனெண் என்றும் பாடம். [8] அலல்-அல்லல்; துன்பம்; அல்லல் என்பது எதுகை நோக்கி அலல் என நின்றது செய்யுள் விகாரம். [9] பலகண்டவன்-பல சிருட்டி காலங்கள் கண்டவன்; அழியாதவன்.

வரமுன் னிமகிழ்ந் தெழுவீர்காள்
சிரமுன் னடிதா ழவணங்கும்
பிரமன் றெடுமா லறியாத
பரமன் உறையும் பனையூரே. 9

அழிவல் அமண ரொடுதேரர்
மொழிவல் லனசொல் லியபோதும்
இழிவில் லதொர்செம் மையினார்
பழியில் லவர்சேர் பனையூரே. 10

பாரார் விடையர்ன் பனையூர்மேல்
சீரார் தமிழ்ஞா னசம்பந்தன்
ஆரா தசொன்மா லைகள்பத்தும்
ஊரூர் நினைவா ருயர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சௌந்தரியநாதர், அழகியநாதர்;
தேவி—பெரியநாயகியம்மை.

## 58. திருவிற்குடிவீரட்டம் *

பண் - நட்டராகம் ** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வடிகொள் மேனியர் வானமா மதியினர் நதியினர் மது வார்ந்த, கடிகொள் கொன்றையஞ் சடையினர் கொடியினர் உடைபுலி யதளார்ப்பர், விடைய தேறும்எம் மான[1]மர்ந் தினிதுறை விற்குடி வீரட்டம், அடிய ராகிநின் றேத்தவல் லார்தமை அருவினை யடையாவே. 1

களங்கொள்[2] கொன்றையுங் கதிர்விரி மதியமுங் கடிகமழ் சடைக்கேற்றி, உளங்கொள் பத்தர்பால் அருளிய பெருமையர்

* இஃது அட்ட வீரத் தலங்களுள் ஒன்று; சலந்தரனை அழித்த பதி. சுவாமி கோயில் மாடக் கோயில்போல் கட்டுமலையின் மேல் உள்ளது. ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1] உடை - உடையாக; அம்மான் என்றும் பாடம். [2] களங்கொள் - கள - தேன்; அம்சாரியை.

பொருகரி யுரிபோர்த்து, விளங்கும் மேனியர் எம்பெரு மானுறை விற்குடி வீரட்டம், வளங்கொள் மாமல ரால்வினைந் தேத்துவார் வருத்தம தறியாரே. 2

கரிய கண்டத்தர் வெளியவெண் பொடியணி மார்பினர் வலங்கையில்[3], எரியர் புன்சடை யிடம்பெறக் காட்டகத் தாடிய வேடத்தர், விரியும் மாமலர்ப் பொய்கைசூழ் மதுமலி விற்குடி வீரட்டம், பிரிவி லாதவர் பெருந்தவத் தோரெனப் பேணுவ ருலகத்தே. 3

பூதஞ் சேர்ந்திசை பாடலர் ஆடலர் பொலிதர நலமார்ந்த, பாதஞ் சேரிணைச் சிலம்பினர் கலம்[4] பெறு கடலெழு விடமுண் டார், வேதம் ஓதிய நாவுடை யானிடம் விற்குடி வீரட்டம், சேரும் நெஞ்சினார்க் கல்லதுண் டோ[5] பிணி தீவினை கெடுமாறே. 4

கடிய ஏற்றினர் கனலன மேனியர் அனலெழ வூர்மூன்றும், இடிய மால்வரை கால்வளைத் தான்றன தடியவர் மேலுள்ள, வெடிய வல்வினை வீட்டுவிப் பானுறை விற்குடி வீரட்டம், படிய தாக[6] வே பரவுமின் பரவினாற் பற்றறும் அருநோயே. 5

பெண்ணொர் கூறினர் பெருமையர் சிறுமறிக் கையினர் மெய்யார்ந்த, அண்ணலன் புசெய் வாரவர்க் கெளியவர் அரியவர் அல்லார்க்கு, விண்ணி லார்பொழில் மல்கிய மலர்விரி விற்குடி வீரட்டம், எண்ணி லாவிய சிந்தையி னார்தமக் கிடர்கள்வந் தடையாவே. 6-7

இடங்கொள் மாகடல் இலங்கையர் கோன்றனை யிகலழி தரவூன்று, திடங்கொள் மால்வரை யானுரை யார்தரு பொருளி னன்[7] இருளார்ந்த, விடங்கொள் மாமிட றுடையவ னுறைபதி விற்குடி[8] வீரட்டம், தொடங்கு மாறிசை பாடிநின் றார்தமைத் துன்பம்நோ யடையாவே. 8

செங்கண் மாலொடு நான்முகன் தேடியுந் திருவடி யறி யாமை, எங்கு மாரெரி யாகிய இறைவனை யறைபுனல் முடி

---

[3] வல் அங்கை - வலிய அங்கை. எரி இடதுகையில் ஏற்றப் படுதலால் வலதுகை என்றல் பொருள். [4] கலம் - கப்பல் [5] உண்டோ, ஓ: எதிர்மறை. [6] படியதாக - முன்னிலையாக. [7] உரையார்தருபொருளினன் - சொற்பொருளாவார். [8] னுறை திருவிற்குடி என்றும் பாடம்.

யார்ந்த, வெங்கண் மால்வரைக் கரியுரித் துகந்தவன் விற்குடி வீரட்டம், தங்கை யால்தொழு தேத்தவல் லாரவர் தவமல்கு குணத்தாரே. 9

பிண்ட முண்டுழல் வார்களும் பிரிதுவ ராடைய ரவர் வார்த்தை, பண்டு மின்றுமோர் பொருளெனக் கருதன்மின் பரிவுறு வீர்கேண்மின், விண்ட மாமலர்ச் சடையவ னிடமெனில் விற்குடி வீரட்டம், கண்டு கொண்டடி காதல்செய் வாரவர் கருத்துறுங் குணத்தாரே. 10

விலங்க லேசிலை யிடமென வுடையவன் விற்குடி வீரட்டத், திலங்கு சோதியை யெம்பெரு மான்றனை யெழில்திகழ் கழல்பேணி, நலங்கொள் வாழ்பொழிற் காழியுள் ஞானசம் பந்தனற் றமிழ்மாலை, வலங்கொ டேயிசை மொழியுமின் மொழிந்தக்கால் மற்றது வரமாமே.[9] 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வீரட்ட நாதர்; தேவி—ஏலவார் குழலி.

---

## 59. திருப்புகலூர்*

பண் - நட்டபாடை** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

குறிகலந்தஇசை பாடலி[1]னன்நசை யாலிவ்வுலகெல்லாம்
நெறிகலந்ததொரு நீர்மையனெருதேறிப்பலிபேணி[2]
முறிகலந்ததொரு தோலரைமேலுடை யானிடம்மொய்ம்மலரின்
பொறிகலந்தபொழில் சூழ்ந்தயலேபுய லாரும்புகலூரே. 1

---

[9] மற்றது வரமாமே - திருப்பதிகத்தை மொழிதலே எல்லா வரங்களையும் தரும். * இது பிறவிக்கஞ்சிய உயிர்கள் புகலடையத் தக்கதாதலின் புகலூர் எனப் பெயர் பெற்றது. தீக்கடவுள் வழிபட்டதனால் அக்கினீசம் எனவும், இறைவன் திருமேனி சாய்ந்திருத்தலினால் கோணேசம் எனவும் பெயர் பெறும். ** இப்பதிகம் அப்பர், முருகர், நீலநக்கர், சிறுத்தொண்டர் இவர்களோடு இருந்து திருப்புகலூரைச் சிறப்பித்துப் பாடியருளியது ஆகும். [1] குறி - குறிக்கோள். இசைபாடல் - புகழைப்பாடல். [2] நெறிகலந்ததொரு நீர்மையனெருதேறும் பலிபேணி என்றும் பாடம்.

காதிலங்குகுழை யுன் இழைசேர்திரு மார்பன்ஒருபாகம்
மாதிலங்குதிரு மேனியினன்கரு மானின்உரியாடை
மீதிலங்கஅணிந் தானிமையோர்தொழ மேவும்இடஞ்சோலைப்
போதிலங்குநசை யால்வரிவண் டிசை பாடும்புகலூரே. 2

பண்ணிலாவும்மறை பாடலினானிறை[3] சேரும்வளையங்கைப்
பெண்ணிலாவவுடை யான்பெரியார்கழ லென்றுந்தொழுதேத்த
உண்ணிலாவியவர் சிந்தையுள்நீங்கா வொருவன்னிடமென்பர்
மண்ணிலாவும் அடி யார்குடிமை[4]த்தொழில் மல்கும்புகலூரே. 3

நீரின்மல்குசடை யன்விடையன் அடை யார்தம் அரண்மூன்றுஞ்
சீரின்மல்குமலை யேசிலையாகமு னிந்தானுலகுய்யக்
காரின்மல்குகடல் நஞ்சமதுண்ட கடவுள்ளிடமென்பர்
ஊரின்மல்கிவளர் செம்மை[5]யினாலுயர் வெய்தும்புகலூரே. 4

செய்யமேனிவெளி யபொடிப்பூசுவர் சேரும்அடியார்மேல்
பைய[6]நின்றவினை பாற்றுவர்போற்றிசைத் தென்றும்பணிவாரை
மெய்யநின்றபெரு மானுறையும்மிட மென்பரருள்பேணிப்
பொய்யிலாதமனத் தார்பிரியாதுபொ ருந்தும்புகலூரே. 5

கழலின்ஓசைசிலம் பின்னொலிஓசை கலிக்கப்பயில்கானில்
குழலின்ஓசைகுறட் பாரிடம்போற்றக் குனித்தாரிடமென்பர்
விழவின்ஓசையடி யார்மிடைவுற்று விரும்பிப்பொலிந்தெங்கும்
முழவின்ஓசைமுந் நீர்[7]யர்வெய்த முழங்கும்புகலூரே. 6

வெள்ளமார்ந்துமிளிர் செஞ்சடைதன்மேல் விளங்கும்மதிசூடி
உள்ளமார்ந்தஅடி யார்தொழுதேத்த வுகக்கும்அருள்தந்தெம்
கள்ளமா[8]ர்ந்துகழி யப்பழிதீர்த்த கடவுள்ளிடமென்பர்[9]
புள்ளையார்ந்தவய லின்விளைவால்வளம் மல்கும்புகலூரே. 7

தென்னிலங்கையரை யன்வரைபற்றி யெடுத்தான்முடிதிண்தோள்
தன்னிலங்குவிர லால்நெரிவித்திசை கேட்டன்றருள்செய்த
மின்னிலங்குசடை யான்மடமாதொடு மேவும்இடமென்பர்
பொன்னிலங்குமணி மாளிகைமேல்மதி தோயும்புகலூரே. 8

---

[3] இறை - முன்கை. [4] குடிமை-வழி வழியடிமை. [5] செம்மை-முத்தித்தன்மை. [6] பைய-வருந்த. [7] முந்நீர் - கடல்; முன்னீர் என்றும் பாடம். [8] கள்ளம் - ஆணவமலம்; கள்ளஞ் செய்து மறைப்பதனைக் கள்ளம் என்பது உபசார வழக்கு. [9] கடவுட்கிடமென்பர் என்றும் பாடம்.

நாகம்வைத்தமுடி யானடிகைதொழு தேத்தும்அடியார்கள்
ஆகம்வைத்தபெரு மான்பிரமனொடு மாலுந்தொழுதேத்த
ஏகம்வைத்த[10] எரி யாய்மிகவோங்கிய எம்மானிடம்போலும்
போகம்வைத்தபொழி லின்நிழலான் மது வாரும்புகலூரே. 9

செய்தவத்தர்[11] மிகு தேரர்கள்சாக்கியர் செப்பிற்பொருளல்லாக்
கைதவத்தர்மொழி யைத்தவிர்வார்கள் கடவுள்ளிடம்போலும்
கொய்துபத்தர்மல ரும்புனலுங்கொடு தூவித்துதிசெய்து
மெய்தவத்தின்முயல் வாருயர்வானக மெய்தும்புகலூரே. 10

புற்றில்வாழும்அர வம்அரையார்த்தவன் மேவும்புகலூரைக்
கற்றுநல்லவர் காழியுள்ஞானசம் பந்தன்தமிழ்மாலை
பற்றியென்றும்இசை பாடியமாந்தர் பரமன் அடிசேர்ந்து
குற்றமின்றிக்குறை பாடொழியா[12]ப்புக ழோங்கிப்பொலிவாரே.

திருச்சிற்றம்பலம்

---

பண் - செவ்வழி [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வெங்கள் விம்மு குழலிளைய ராடவ்வெறி விரவுநீர்ப்
பொங்குசெங்கட் கருங்கயல்கள் பாயும்புக லூர்தனுள்
திங்கள்சூடித் திரிபுரம்மோ ரம்பால்எரி யூட்டிய
எங்கள்பெம்மான் அடிபரவ நாளும்இடர் கழியுமே. 1

வாழ்ந்தநாளும் இனிவாழு நாளும்இவை யறிதிரேல்
வீழ்ந்தநாளெம் பெருமானை யேத்தா[1] விதி யில்லிர்காள்
போழ்ந்ததிங்கட் புரிசடையி னான்றன் புகலூரையே
சூழ்ந்தவுள்ளம் உடையீர்கள் உங்கள்துயர் தீருமே. 2

மடையின்நெய்தல் கருங்குவளை செய்யம்மலர்த் தாமரை
புடைகொள்செந்நெல் விளைகழனி மல்கும்புக லூர்தனுள்
தொடைகொள்கொன்றை புனைந்தானோர் பாகம்மதி சூடியை
அடையவல்லார் அமருலகம் ஆளப்பெறு வார்களே. 3

---

[10] ஏகம்வைத்த - ஒப்பற்ற. [11] செய்தவத்தர் - தவமென்று தவமல் லாதனசெய்பவர். [12] ஒழியா - ஒழித்து; நீக்கி. [1] ஏத்தா நாள் - வீழ்ந்த நாள் என்க; வீழ்தல் - சாதல்; "பேசாத நாளெல் லாம் பிறவா நாளே" (தேவாரம்).

பூவுந்நீரும் பலியுஞ் சுமந்து புகலூரையே
நாவினாலே நவின்றேத்த லோவார்செவித் துளைகளால்
யாவுங்கேளார் அவன்பெருமை யல்லால்அடி யார்கள்தாம்
ஓவுநாளும் உணர்வொழிந்த நாளென் றுள்ளங்கொள்ளவே.[2] 4

அன்னங்கன்னிப் பெடைபுல்கி யொல்கியணி நடையவாய்ப்
பொன்னங்காஞ்சி மலர்ச்சின்ன மாலும்புக லூர்தனுள்
முன்னம்மூன்று மதிலெரித்த மூர்த்திதிறங் கருதுங்கால்
இன்னரென்னப் பெரிதரியர் ஏத்தச்சிறி தெளியரே. 5

குலவரா[3]கக் குலம்இலரு மாகக்குணம் புகழுங்கால்
உலகில்நல்ல கதிபெறுவ ரேனும்மலர் ஊறுதேன்
புலவமெ[4]ல்லாம் வெறிகமழும் அந்தண் புகலூர்தனுள்
நிலவமல்கு சடையடிகள் பாதம் நினைவார்களே. 6

ஆணும்பெண்ணும் மெனநிற்ப ரேனும்அர வாரமாப்
பூணுமேனும் புகலூர் தனக்கொர்பொரு ளாயினான்
ஊணும்ஊரார் இடுபிச்சை யேற்றுண்டுடை கோவணம்
பேணுமேனும் பிரானென்ப ரால்எம்பெரு மானையே. 7

உய்யவேண்டில் எழுபோத நெஞ்சேயுயர் இலங்கைக்கோன்
கைகளொல்கக் கருவரை யெடுத்தானை யோர்விரலினால்
செய்கைதோன்ற[5]ச் சிதைத்தருள வல்லசிவன் மேயபூம்
பொய்கைசூழ்ந்த[6] புகலூர் புகழப் பொருளாகுமே. 8

நேமியானும் முகநான் குடையந்நெறி யண்ணலும்
ஆமிதென்று தகைந்தேத்தப் போயாரழ லாயினான்
சாமி[7] தாதை சரணாகு மென்றுதலை சாய்மினோ
பூமியெல்லாம் புகழ்செல்வம் மல்கும் புகலூரையே. 9

வேர்த்தமெய்யர் உருவத் துடைவிட் டுழல்வார்களும்[8]
போர்த்தகூறை[9]ப் போதிநீழ லாரும் புகலூர்தனுள்

---

[2] ஓவார் - நீங்கார்; இச்செய்யுள் சிவனடியார் இலக்கணத்தைக் குறிப்பிக்கும். [3] குலவர் - நற்குலத்தவர். [4] புலம் - புலவம்; புறவு-இடம். [5] செய்கைதோன்ற - அழித்தலும் அருளலும் யாவர்க்கும் வெளிப்பட. [6] பொய்கை சூழ்ந்த - நீர்நிலை திருக்கோயிலைச் சூழ்ந்த. [7] சாமி - முருகன். [8] உருவத்துடை விட்டுழல்வார்-சமணகுருமார். [9] போர்த்த கூறை - இது புத்தர்கள் மரபு.

தீர்த்தமெல்லாஞ் சடைக்கரந்த தேவன்திறங் கருதுங்கால்
ஓர்த்துமெய்யென் றுணராது பாதந்தொழா துய்ம்மினே. 10

புந்தியார்ந்த பெரியோர்கள் ஏத்தும் புகலூர்தனுள்
வெந்த[10] சாம்பற் பொடிப்பூச வல்லவிடை யூர்தியை
அந்தமில்லா அனலாட லானையணி ஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாடி யாடக்கெடும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அக்கினீசுவரர், கோணப்பிரான்;
தேவி—கருந்தார்க்குழலம்மை.

---

## 60. திருப்புகலூர்வர்த்தமானீச்சரம் *

பண் - பியந்தைக்காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பட்டம்[1] பால்நிற மதியம் படர்சடைச் சுடர்விடு பாணி[2]
நட்டம் நள்ளிருள் ஆடும் நாதனார் நவின்றுறை கோயில்
புட்டன் பேடையொ டாடும் பூம்புக லூர்த்தொண்டர்[3] போற்றி
வட்டஞ் சூழ்ந்தடி பரவும் வர்த்தமா னீச்சரத் தாரே. 1

முயல்[4] வ ளாவிய திங்கள் வாண்முகத் தரிவையில் தெரிவை
இயல்வ ளாவிய துடைய இன்னமு தெந்தையெம் பெருமான்
கயல்வ ளாவிய கழனிக் கருநிறக் குவளைகள் மலரும்
வயல்வ ளாவிய புகலூர் வர்த்தமா னீச்சரத் தாரே. 2

தொண்டர் தண்கயம் மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையும்
கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன்செய் கோலம்
கண்டு கண்டுகண் குளிரக் களிபரந் தொளிமல்கு கள்ளார்
வண்டு பண்செயும் புகலூர் வர்த்தமா னீச்சரத் தாரே.[5] 3

---

[10] வெந்த-உலகம் வெந்ததனால் விளைந்த. * புகலூர் ஆலயத்துள் வர்த்தமானலிங்கம் எழுந்தருளியிருக்கும் தனியிடம். இது சுவாமி சந்நிதிக்கு அடுத்த வடபுறம் உள்ளது. [1] பட்டம் - சிறப்பு; முதிர்வு. [2] பாணி - தாளம். [3] தொண்டர் - முருகநாயனாரின் குறிப்பும் கொள்ளலாம். [4] முயல் - சந்திரனிடத்துத் தோன்றும் களங்கம். [5] இச்செய்யுள் முருகநாயனாரின் தொண்டின் சிறப்புக் குறித்தது; குறிப்பறிதல் - திருத்தொண்டின் முதிர்ந்தநிலை.

பண்ண வண்ணத்[6] த ராகிப் பாடலொ டாடல ருத
விண்ண வண்ணத்த ராய விரிபுக லூரரொர் பாகம்
பெண்ண வண்ணத்த ராகும் பெற்றிபொ டாணிணை[7] பிணைந்த
வண்ண வண்ண[8]த்தெம் பெருமான் வர்த்தமா னீச்சரத் தாரே. 4

ஈசன் ஏறமர் கடவுள் இன்னமு தெந்தையெம் பெருமான்
பூசு மாசில்வெண் ணீற்றர் பொலிவுடைப் பூம்புக லூரில்
மூசு வண்டறை கொன்றை முருகன்முப் போதுஞ்செய் முடிமேல்
வாச மாமல ருடையார் வர்த்தமா னீச்சரத் தாரே.[9] 5

தளிரி ளங்கொடி வளரத் தண்கயம் இரியவண் டேறிக்
கிளரி ளம்முழை நுழையக் கிழிதரு பொழிற்புக லூரில்
உளரி ளஞ்சுனை மலரும் ஒளிதரு சடைமுடி யதன்மேல்
வளரி ளம்பிறை யுடையார் வர்த்தமா னீச்சரத் தாரே. 6

தென்சொல் விஞ்சமர்[10] வடசொல் திசைமொழி யெழில்நரம் பெடுத்துத்
துஞ்சு நெஞ்சிருள் நீங்கத் தொழுதெழு தொல்புக லூரில்
அஞ்ச னம்பிதிர்ந் தனைய அலைகடல் கடைய அன்றெழுந்த
வஞ்ச நஞ்சணி கண்டர் வர்த்தமா னீச்சரத் தாரே. 7

சாம வேதமொர் கீதம் ஓதிஅத் தசமுகன் பரவும்
நாம தேயம துடையார் நன்குணர்ந் தடிகளென் றேத்தக்
காம தேவனை வேவக் கனலெரி கொளுவிய கண்ணர்
வாம தேவர்[11] தண் புகலூர் வர்த்தமா னீச்சரத் தாரே. 8

சீர ணங்குறநின்ற செருவுறு திசைமுக னோடு
நார ணன்கருத் தழிய நகைசெய்த சடைமுடி நம்பர்
ஆர ணங்குறும் உமையை அஞ்சுவித் தருளுதல் பொருட்டால்
வார ணத்துரி போர்த்தார் வர்த்தமா னீச்சரத் தாரே. 9

கையி லுண்டுழல் வாருங் கமழ்துவ ராடையி னுல்தம்
மெய்யைப் போர்த்துழல் வாரும் உரைப்பன மெய்யென விரும்பேல்
செய்யில் வாளைக ளோடு செங்கயல் குதிகொளும் புகலூர்
மைகொள் கண்டத்தெம் பெருமான் வர்த்தமா னீச்சரத் தாரே. 10

---

[6] வண்ணம்-கிலை. [7] ஆணிணை-பிரமவிட்டுணுக்கள். [8] வண்ண வண்ணம் - மிக்க அழகு. [9] இச்செய்யுள் முருகநாயனாரின் தொண்டின் சிறப்பைக் குறிக்கும். [10] விஞ்சமர்-தென்சொல்லுக்கும் அடையாக்குக. விஞ்சுதல் - மேம்பாடல். [11] வாமதேவர்-இறைவன்.

பொங்கு தண்புனல் சூழ்ந்து போதணி பொழிற்புக லூரில்
மங்குல் மாமதி தவழும் வர்த்தமா னீச்சரத் தாரைத்
தங்கு சீர்திகழ் ஞான சம்பந்தன் தண்டமிழ் பத்தும்
எங்கும் ஏத்தவல் லார்கள் எய்துவர் இமையவ ருலகே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வர்த்தமானீச்சுவரர்; தேவி—கருந்தார்க்குழலி.

---

## 61. திருஇராமனதீச்சரம்*

பண் - வியாழக்குறிஞ்சி ** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சங்கொளிர் முன்கையர் தம்மிடையே
அங்கிடு பலிகொளும் அவன் [1] கோபப்
பொங்கர வாடலோன் புவனியோங்க
எங்குமன் இராமன தீச்சரமே. 1

சந்தநன் மலரணி தாழ்சடையன்
தந்தம தத்தவன் [2] தாதையோதான்
அந்தமில் பாடலோன் அழகன்நல்ல
எந்தவன் இராமன தீச்சரமே. 2

தழைமயி லேறவன் [3] தாதையோதான்
மழைபொழி [4] சடையவன் மன்னுகாதில்
குழையது இலங்கிய கோலமார்பின்
இழையவன் இராமன தீச்சரமே. 3

சத்தியு ளாதியோர் தையல் [5] பங்கன்
முத்திய தாகிய மூர்த்தியோதான்

---

* இராமன் பூசித்த காரணத்தால் இப்பெயர் பெற்றது.
** இப்பதிகத்தின் 11-ம் பாட்டில் மற்றைய அடிகள் மறைந்து போயின. [1] மகன் என்றும் பாடம். [2] தந்தமத்தவன் - கணபதி. [3] தழைமயில்ஏறவன் - முருகன். [4] மழைபொதி என்றும் பாடம். [5] சத்தியுளாதியோர் தையல்-சத்தியாகக் கருதப்படுகின்ற முதன்மையுடைய தையல் என்க; ஆதிசத்தியாகிய தையல் எனினுமாம்; சத்தியுள்ளாகியயொர் தையல் என்றும் பாடம்.

அத்திய கையினில் அழகுசூலம்
வைத்தவன் இராமன தீச்சரமே. 4

தாழ்ந்தகு ழற்சடை முடியதன்மேல்
தோய்ந்த இளம்பிறை துளங்குசென்னிப்
பாய்ந்த கங்கையொடு படஅரவம்
ஏய்ந்தவன் இராமன தீச்சரமே. 5

சரிகுழல் இலங்கிய தையல்காணும்
பெரியவன் காளிதன் பெரியகூத்தை
அரியவன் ஆடலோன் அங்கையேந்தும்
எரியவன் இராமன தீச்சரமே. 6

மாறிலா மாதொரு பங்கன்மேனி
நீறது ஆடலோன் நீள்சடைமேல்
ஆறது சூடுவான் அழகன்விடை
ஏறவன் இராமன தீச்சரமே. 7

தடவரை யரக்கனைத் தலைநெரித்தோன்
படஅர வாட்டிய படர்சடையன்
நடமது ஆடலான் நான்மறைக்கும்
இடமவன்[6] இராமன தீச்சரமே. 8

தனமணி தையல்தன் பாகன்றன்னை
அனமணி அயன்அணி முடியுங்காணான்
பனமணி அரவரி பாதங்காணான்
இனமணி இராமன தீச்சரமே. 9

தறிபோலாஞ் சமணர்சாக் கியர்சொற்கொளேல்
அறிவோரால் நாமம் அறிந்துரைமின்
மறிகையோன் தன்முடி மணியார்கங்கை
எறிபவன்[7] இராமன தீச்சரமே. 10

தேன்மலர்க் கொன்றையோன்* *
* * முந்தமக் கூனமன்றே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—இராமநாதர் ; தேவி—சரிவார்குழலி.

---

[6] இடம் அவன்—இடமானவன். [7] எறியவன் என்றும் பாடம்.

# 62. திருச்செங்காட்டங்குடி*

**பண் - பழந்தக்கராகம் [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாடோறும்
முறை[1] கொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்யச்
சிறைகொண்ட வண்டறையுஞ் செங்காட்டங் குடியதனுள்
கறைகொண்ட கண்டத்தான் கணபதீச் சரத்தானே. 1

வாரேற்ற பறையொலியுஞ் சங்கொலியும் வந்தியம்ப
ஊரேற்ற செல்வத்தோ டோங்கியசீர் விழவோவாச்
சீரேற்றம் உடைத்தாய செங்காட்டங் குடியதனுள்
காரேற்ற கொன்றையான் கணபதீச் சரத்தானே. 2

வரந்தை[2] யான் சோபுரத்தான் மந்திரத்தான் தந்திரத்தான்
கிரந்தை[3] யான் கோவணத்தான் கிண்கிணியான் கையதோர்
சிரந்தை[4] யான் செங்காட்டங் குடியான்செஞ் சடைசேரும்
கரந்தையான் வெண்ணீற்றான் கணபதீச் சரத்தானே. 3

தொங்கலுங் கமழ்சாந்தும் அகிற்புகையுந் தொண்டர்கொண்
டங்கையால் தொழுதேத்த அருச்சுனற்கன் றருள்செய்தான்
செங்கயல்பாய் வயலுடுத்த செங்காட்டங் குடியதனுள்
கங்கைசேர் வார்[5] சடையான் கணபதீச் சரத்தானே. 4

பாலினால் நறுநெய்யாற் பழத்தினாற் பயின்றாட்டி
நூலினால் மணமாலை கொணர்ந்தடியார் புரிந்தேத்தச்
சேலினார் வயல்புடைசூழ் செங்காட்டங் குடியதனுள்
காலினாற் கூற்றுதைத்தான் கணபதீச் சரத்தானே. 5

---

* கணபதி (விநாயகக் கடவுள்) கயமுகாசுரனை அழித்தபோது அவனது இரத்த வெள்ளம் பெருகிச் செங்காடாய் இருந்தமையால் இப்பெயர் பெற்றது; கோயிலின் பெயர் கணபதீச்சரம் என்பதாம்; இங்குக் கணபதி சிவபெருமானைப் பூசித்துப் பேறுபெற்றதால் இப்பெயர் பெற்றது; சிறுத்தொண்டர் சோழனுக்காகச் சேனையுடன் சென்று வாதாவி நகரின் அரணை அழித்து அங்கிருந்து கொண்டு வந்து தாபித்த கணபதி ஒன்றும் இத்தலத்தில் உள்ளது. [1] முறை- ஆகமமுறை; முறையிட்டு. [2] வரந்தை - ஓர் ஊர், [3] கிரந்தை - ஓர் ஊர். [4] சிரந்தை - உடுக்கை. [5] கங்கையோர்வார் என்றும் பாடம்.

நுண்ணியான் மிகப்பெரியான்[6] ஓவுளார் வாயுளான்[7]
தண்ணியான் வெய்யான்நம் தலைமேலான் மனத்துளான்
திண்ணியான் செங்காட்டங் குடியான்செஞ் சடைமதியக்
கண்ணியான் கண்ணுதலான் கணபதீச் சரத்தானே. 6

மையினார் மலர்நெடுங்கண் மலைமகளோர் பாகமாம்
மெய்யினான் பையரவம் அரைக்கசைத்தான் மீன்பிறழச்
செய்யினார் தண்கழனிச்[8] செங்காட்டங் குடியதனுள்
கையினார் கூரெரியான் கணபதீச் சரத்தானே. 7

தோடுடையான் குழையுடையான் அரக்கன்தன் தோளடர்த்த
பீடுடையான் போர்விடையான் பெண்பாகம் மிகப்பெரியான்
சேடு[9]டையான் செங்காட்டங் குடியுடையான் சேர்ந்தாடும்
காடுடையான் நாடுடையான் கணபதீச் சரத்தானே. 8

ஆனூரா வுழிதருவான் அன்றிருவர் தேர்ந்துணரா
வானூரான் வையகத்தான் வாழ்த்துவார் மனத்துளான்
தேனூரான் செங்காட்டங் குடியான்சிற் றம்பலத்தான்
கானூரான் கழுமலத்தான் கணபதீச் சரத்தானே. 9

செடிநுகருஞ் சமணர்களுஞ் சீவரத்த சாக்கியரும்
படி[10] நுகரா தயருழப்பார்க் கருளாத பண்பினான்
பொடிநுகருஞ் சிறுத்தொண்டர்க் கருள்செய்யும் பொருட்டாகக்
கடிநகராய் வீற்றிருந்தான்[11] கணபதீச் சரத்தானே. 10

கறையிலங்கு மலர்க்குவளை கண்காட்ட[12]க் கடிபொழிலின்
நறையிலங்கு வயற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்

---

[6] நுண்ணியான் மிகப்பெரியான் - அணுவுக்கணுவும் மேருவுக்கு மேருவு மாவான்; இது வேதத்தின் உட்கருத்து. [7] ஓவுளார் வாயுளான் - பிரணவம் உள்ளேபொருந்திய வாயின்கண்ணுள்ளான்; பிரிதலைக் கருதாதார் மாட்டுள்ளான்; இப்பொருளுக்கு ஓ முதனிலை; நோயுளார் வாயுளான் என்றும் பாடம்; இதற்கு நோயுளார் வந்தமையும் இயல்பும் என்பது பொருள். [8] செய்யினார் அகன்கழனிச் என்றும் பாடம். [9] சேடு - ஒளி. [10] படி - உண்மைத் தன்மை. [11] இவ்வடிகள் சிறுத்தொண்டரது தொண்டின் பெருமையைக் குறிப்பன; பொடி நுகர்தல் - திருநீற்றுநெறி நின்று தொண்டுபடுதல். [12] கண்காட்ட - கண் போலமிளிர; காட்ட - உவம உருபு.

சிறையிலங்கு புனற்படப்பைச் செங்காட்டங் குடிசேர்த்தும்
மறையிலங்கு தமிழ்வல்லார் வானுலகத் திருப்பாரே. 11
திருச்சிற்றம்பலம்.

---

**பண் - பஞ்சமம்** * [3-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

**பை**ங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந்[1] தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டு[2]ள் அனலேந்தி விளையாடும் பெருமானே. 1

பொன்னம்பூ[3]ங் கழிக்கானற் புணர்துணையோ டுடன்வாழும்
அன்னங்காள் அன்றில்காள் அகன்றும்போய் வருவீர்காள்
கன்னவில்தோள் சிறுத்தொண்டன் கணபதீச் சரம்மேய
இன்னமுதன் இணையடிக்கீழ் எனதல்லல் உரையீரே. 2

குட்டத்[4]துங் குழிக்கரை[5]யுங் குளிர்பொய்கைத் தடத்தகத்தும்
இட்டத்தால் இரைதேரும் இருஞ்சிறகின் மடநாராய்
சிட்டன்[6] சீர்ச் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
வட்டவார் சடையார்க்கென் வருத்தஞ்சென் றுரையாயே. 3

கானருகும் வயலருகுங் கழியருகுங் கடலருகும்
மீனிரிய வருபுனலில் இரைதேர்வெண் மடநாராய்
தேனமர்தார்ச் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
வானமருஞ் சடையார்க்கென் வருத்தஞ்சென் றுரையாயே. 4

ஆரலாஞ் சுறவமேய்ந் தகன்கழனிச் சிறகுலர்த்தும்
பாரல்வாய்ச் சிறுகுருகே பயில்தூவி மடநாராய்
சீருலாஞ் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
நீருலாஞ் சடையார்க்கென் நிலைமைசென் றுரையீரே. 5

---

* இப்பதிகம் சிறுத்தொண்டரின் தொண்டின் சிறப்பினைக் குறிக்கும்; இப்பதிகம் அன்னம், அன்றில், நாரை முதலிய பறவைகளைத் தூது போகும்படி கூறியதாகும். * இதில் 10-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1] பயப்பூர - பசலை (தேமல்) படர; சங்காட்டம் - சங்கு வளையல் ஒலிக்க நடத்தல். [2] வெங்காடு - சுடுகாடு. [3] பொன்னம்பூ-தாழை. [4] குட்டம்-சிறுகுளம். [5] குழிக்கரை - குழிகளின் அருகு. [6] சிட்டன் - ஒழுக்கமுடையவன்.

குறைக்கொண்டார் இடர்தீர்த்தல் கடனன்றே குளிர்பொய்கைத்
துறைக்கெண்டை கவர்குருகே துணைபிரியா மடநாராய்
கறைக்கண்டன் பிறைச்சென்னிக் கணபதீச் சரம்மேய
சிறுத்தொண்டன் பெருமான்சீர் அருளொருநாட் பெறலாமே. 6
கருவடிய பசுங்கால்வெண் குருகேயொண் கழிநாராய்
ஒருவடியாள் இரந்தாளென் றொருநாட்சென் றுரையீரே
செருவடிதோட் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
திருவடிதன் திருவருளே பெறலாமோ திறத்தவர்க்கே. 7
கூரார்ல் இரைதேர்ந்து குளமுலவி வயல்வாழும்
தாராவே மடநாராய் தமியேற்கொன் றுரையீரே
சீராளன் [7] சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
பேராளன் பெருமான்றன் அருளொருநாட் பெறலாமே. 8
நறப்பொலிபூங் கழிக்கானல் நவில்குருகே யுலகெல்லாம்
அறப்பலிதேர்ந் துழல்வார்க்கென் அலர்கோடல் அழகியதே
சிறப்புலவன் [8] சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
பிறப்பிலிபேர் பிதற்றிநின் றிழக்கோவெம் பெருநலமே. 9-10
செந்தண்பூம் புனல்பரந்த செங்காட்டங் குடிமேய
வெந்தநீ றணிமார்பன் சிறுத்தொண்ட னவன்வேண்ட
அந்தண்பூங் கலிக்காழி அடிகளையே அடிபரவும்
சந்தங்கொள் சம்பந்தன் தமிழுரைப்போர் தக்கோரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—கணபதீச்சுரர்; தேவி—திருக்குழனன்மாது.

## 63. திருமருகல்*

[திருமருகலும் திருச்செங்காட்டங்குடியும்]

வினாவுரை. பண் - நட்டபாடை** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அங்கமும் வேதமும் ஓதுநாவர் அந்தணர் நாளும் அடிபரவ,
மங்குல் மதிதவழ் மாடவீதி மருகல் நிலாவிய மைந்தசொல்லாய்,

[7] சீராளன் - சிறுத்தொண்டரின் திருமகனார். [8] சிறப்புலவன்- சிறந்த புலவன். * இதில் 7-ம் செய்யுள் மறைந்து போயிற்று. ** மருகல் - வாழை; இங்கு வாழை தலமரம்; ஆதலால், இப்பெயர் பெற்றது.

செங்கய லார்புனற் செல்வமல்கு சீர்கொள்செங் காட்டங் குடியதனுள், கங்குல் விளங்கெரி யேந்தியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே.[1] 1

நெய்தவழ் மூவெரி காவலோம்பும் நேர்புரி நான்மறை யாளரேத்த, மைதவழ் மாட மலிந்தவீதி மருகல் நிலாவிய மைந்தசொல்லாய், செய்தவ நான்மறை யோர்களேத்துஞ் சீர்கொள்செங் காட்டங் குடியதனுள், கைதவழ் கூரெரி யேந்தியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 2

தோலொடு நூலிழை சேர்ந்தமார்பர் தொகுமறை யோர்கள் வளர்த்தசெந்தீ, மால்புகை போய்விம்மு மாடவீதி மருகல் நிலாவிய மைந்தசொல்லாய், சேல்புல்கு தண்வயற் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள், கால்புல்கு பைங்கழ லார்க்க ஆடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 3

நாமரு கேள்வியர்[2] வேள்வியோவா நான்மறை யோர்வழி பாடுசெய்ய, மாமரு வும்மணிக் கோயில்மேய மருகல் நிலாவிய மைந்த சொல்லாய், தேமரு பூம்பொழிற் சோலைசூழ்ந்த சீர்கொள் செங் காட்டங் குடியதனுள், காமரு சீர்மகிழ்ந் தெல்லியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 4

பாடல் முழவும் விழவும்ஓவாப் பன்மறை யோரவர் தாம் பரவ, மாட நெடுங்கொடி விண்தடவும் மருகல் நிலாவிய மைந்த சொல்லாய், சேடக மாமலர்ச் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள், காடக மே[3] யிட மாகஆடுங் கணபதி யீச் சரங் காமுறவே. 5

புனையழ லோம்புகை அந்தணாளர் பொன்னடி நாடொறும் போற்றிசைப்ப, மனைகெழு மாட மலிந்தவீதி மருகல் நிலாவிய மைந்தசொல்லாய், சினைகெழு தண்வயற் சோலைசூழ்ந்த சீர் கொள்செங் காட்டங் குடியதனுள், கனைவளர் கூரெரி யேந்தி யாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 6-7

பூண்டங்கு மார்பின் இலங்கைவேந்தன் பொன்னெடுந் தோள்வரை யாலடர்த்து, மாண்டங்கு நான்மறை யோர்பரவ

---

[1] காமுறவு-விரும்பியிருந்த தன்மை. [2] நாமருகேள்வியர்-வழி வழியாகச் சொல்லியும் கேட்டும்வரும் மறைவல்லவர். [3] காடயலே என்றும் பாடம்.

மருகல் நிலாவிய மைந்தசொல்லாய், சேண்டங்கு ம்மாமலர்ச் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள், காண்டங்கு தோள்பெயர்த் தெல்லி[2] யாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 8

அந்தமும் ஆதியும் நான்முகனும் அரவணை யானும் அறி வரிய, மந்திர வேதங்க ளோதுநாவர் மருகல் நிலாவிய மைந்த சொல்லாய், செந்தமி ழோர்கள் பரவியேத்துஞ் சீர்கொள்செங் காட்டங் குடியதனுள், கந்தம் அகிற்புகை யேகமழுங் கணபதி யீச்சரங் காமுறவே. 9

இலைமரு தேயழ காகநாளு மிடுதுவர்க் காயொடு சுக்குத் தின்னும்,[3] நிலையமண் தேரரை நீங்கிநின்று[4] நீதரல் லார்தொழு மாமருகல், மலைமகள் தோள்புணர் வாயருளாய் மாசில்செங் காட்டங் குடியதனுள், கலைமல்கு தோலுடுத் தெல்லியாடுங் கண பதி யீச்சரங் காமுறவே. 10

நாலுங் குலைக்கமு கோங்குகாழி ஞானசம் பந்தன் நலந்திக ழும், மாலின் மதிதவழ் மாடமோங்கும் மருகலின் மற்றதன் மேல் மொழிந்த, சேலுங் கயலுந் திளைத்தகண்ணார் சீர்கொள்செங் காட்டங் குடியதனுள், சூலம்வல் லான்கழ லேத்துபாடல் சொல்லவல் லார்வினை யில்லையாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - இந்தளம்* [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சடையா யெனுமால் சரண்நீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ[1] இவள்உள் மெலிவே. 1

---

[2] எல்லி—இரவு; பெயர்ந்தெல்லி என்றும் பாடம். [3] இவ்வடி சமணர்கள் நாடோறும் துவர்க்காய், சுக்கு முதலியன தின்பவர் என்பதைக் குறிப்பிடும். [4] நீங்கிநின்ற என்றும் நீங்க நின்று என்றும் பாடம். * இப்பதிகம் விடம் தீண்டி இறந்த வணிகனை உயிர்ப்பித்தருளியதாகும்; ஆதலால், இது விடந்தீர்த்த பதிகம் எனப் பெயர்பெறும். [1] தகுமோ - தகாது: ஓகாரம் எதிர்மறை.

சிந்தா யெ[2] னுமால் சிவனே யெனுமால்
முந்தா யெனுமால் முதல்வா எனுமால்
கொந்தார் குவளை குலவும் மருகல்
எந்தாய் தகுமோ இவள்ஏ சறவே. 2

அறையார் கழலும் அழல்வா யரவும்
பிறையார் சடையும் உடையாய் பெரிய
மறையார் மருகல் மகிழ்வா யிவளை
இறையார் வளைகொண் டெழில்வவ் வினையே. 3

ஒலிநீர் சடையிற் கரந்தா யுலகம்
பலிநீ திரிவாய் பழியில் புகழாய்
மலிநீர் மருகல் மகிழ்வா யிவளை
மெலிநீர் மையளாக் கவும்வேண் டினையே. 4

துணி[3] நீலவண்ணம் முகில்தோன் றியன்ன[4]
மணிநீ லகண்டம் உடையாய் மருகல்
கணிநீ லவண்டார் குழலாள் இவள்தன்
அணிநீ லவொண்கண் அயர்வாக் கினையே. 5

பலரும் பரவப் படுவாய் சடைமேல்
மலரும் பிறையொன் றுடையாய் மருகல்
புலருந் தனையும்[5] துயிலாள் புடைபோந்[6]
தலரும் படுமோ[7] அடியா ளிவளே. 6

வழுவாள் பெருமான் கழல்வாழ் கவெனா
எழுவாள் நினைவாள்[8] இரவும் பகலும்
மழுவா ளுடையாய் மருகற் பெருமான்
தொழுவா ளிவளைத் துயராக் கினையே. 7

இலங்கைக் கிறைவன் விலங்கல் எடுப்பத்
துலங்கவ்[9] விரலூன் றலுந்தோன் றலனாய்

---

[2] சிந்தாய் - சிந்தையில் இடங்கொள்பவனே; சிந்தமாட்டாய் என்றலுமாம்; சிந்துதல் - அழிதல். [3] துணி - துண்டம். [4] தோன்றிய நன் என்றும் பாடம். [5] தனையும் - அளவும். [6] புடைபோந்து என்பது வணிகன்பின் வந்ததைக் குறிக்கும். [7] அலரும்படுமோ - பழிச் சொல்லும் உண்டாகுமோ. [8] எழுவான் நினைவாள் என்றும் பாடம். [9] துலங்கல் என்றும் பாடம்.

வலங்கொள் மதில்சூழ் மருகற் பெருமான்
அலங்கல் இவளை அலராக் கினையே.[10] 8

எரியார் சடையும் மடியும் மிருவர்
தெரியா ததொர்தீத் திரளா யவனே
மரியார்[11] பிரியா மருகற் பெருமான்
அரியாள் இவளை அயர்வாக் கினையே. 9

அறிவில் சமணும் மலர்சாக் கியரும்
நெறியல் லனசெய் தனர்நின் றுழல்வார்
மறியேந் துகையாய் மருகற் பெருமான்
நெறியார் குழலி நிறைநீக் கினையே. 10

வயஞா னம்[12] வல்லார் மருகற் பெருமான்
உயர்ஞா னமுணர்ந் தடியுள் குதலால்
இயன்ஞா னசம்பந் தனபா டல்வல்லார்
வியன்ஞா லமெல்லாம் விளங்கும் புகழே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—மாணிக்க வண்ணர்; தேவி—வண்டுவார்குழலி.

## 64. திருச்சாத்தமங்கை*

பண் - பஞ்சமம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

திருமலர்க் கொன்றைமாலை திளைக் கும்மதி சென்னிவைத்தீர்
இருமலர்க் கண்ணி[1] தன்னோ டுடனாவது மேற்பதொன்றே
பெருமலர்ச் சோலைமேகம் உரிஞ் சும்பெருஞ் சாத்தமங்கை[2]
அருமல ராதிமூர்த்தி அய வந்தி[3] ய மர்ந்தவனே. 1

பொடிதனைப் பூசுமார்பிற் புரி நூலொரு பாற்பொருந்தக்
கொடியன சாயலாளோ டுட னாவதுங் கூடுவதே

[10] அயர்வாக்கினையே என்றும் பாடம். [11] மரியார் - இறவாதவர். [12] வயஞானம் - சிவன்வயமாகிய ஞானம். வயம் - வெற்றியுமாம். * 'செய்யாத்த மங்கை' என வழங்கப்பெறும். ** இப்பதிகம் முழுமையும் இறைவன் அம்மையோடு உடனாதல் போற்றப்பட்டுள் ளது. [1] மலர்க்கண்ணி - தல அம்மையின் பெயர். [2] சாத்தமங்கை-தலத்தின் பெயர். [3] அயவந்தி - ஆலயத்தின் பெயர்.

கடிமணம் மல்கிநாளுங் கம ழும்பொழிற் சாத்தமங்கை
அடிகள்நக் கன்பரவ அய வந்திய மர்ந்தவனே.[4] 2

தூனலந் தங்குமார்பில் நுகர் நீறணிந் தேறதேறி
மானன் னோக்கிதன்னோ டுட னுவது மாண்பதுவே
தானலங் கொண்டுமேகந் தவ ழும்பொழிற் சாத்தமங்கை
ஆனலந் தோய்ந்தஎம்மான் அய வந்திய மர்ந்தவனே. 3

மற்றவின் மால்வரையா மதி லெய்துவெண் ணீறுபூசிப்
புற்றர வல்குலாளோ டுட னுவதும் பொற்பதுவே
கற்றவர் சாத்தமங்கை நகர் கைதொழச் செய்தபாவம்
அற்றவர்[5] நாளுமேத்த அய வந்திய மர்ந்தவனே. 4

வெந்தவெண் ணீறுபூசி விடை யேறிய வேதகீதன்
பந்தண வும்விரலாள் உட னுவதும் பாங்கதுவே
சங்கமா றங்கம்வேதந் தரித் தார்தொழுஞ் சாத்தமங்கை
அந்தமாய் ஆதியாகி அய வந்திய மர்ந்தவனே. 5

வேதமாய் வேள்வியாகி விளங் கும்பொருள் வீடதாகிச்
சோதியாய் மங்கைபாகந் நிலை தான்சொல்ல லாவதொன்றே
சாதியால் மிக்கசீரால் தகு வார்தொழுஞ் சாத்தமங்கை
ஆதியாய் நின்றபெம்மான்[6] அய வந்திய மர்ந்தவனே. 6

இமயமெல் லாம்இரிய மதி லெய்துவெண் ணீறுபூசி
உமையையொர் பாகம்வைத்த நிலை தானுன்ன லாவதொன்றே
சமயமா றங்கம்வேதந் தரித் தார்தொழுஞ் சாத்தமங்கை
அமையவே றேங்குசீரான் அய வந்திய மர்ந்தவனே. 7

பண்ணுலாம் பாடல்வீணை பயில் வானோர்ப ரமயோகி
விண்ணுலா மால்வரையான் மகள் பாகமும் வேண்டினையே
தண்ணிலா வெண்மதியந் தவ ழும்பொழிற் சாத்தமங்கை
அண்ணலாய் நின்றஎம்மான் அய வந்திய மர்ந்தவனே. 8

பேரெழில் தோளரக்கன் வலி செற்றதும் பெண்ணொர்பாகம்
ஈரெழிற் கோல[7] மாகி யுட னுவதும் ஏற்பதொன்றே

---

[4] இச்செய்யுள் திருநீலநக்க நாயனர் வழிபாட்டின் சிறப்பினைக் கூறும். [5] பாவமற்றவர் - தொழுதலினால் பாவம் விலகப்பெற்ற அடியவர். [6] நின்ற எம்மான் என்றும் பாடம். [7] ஈரெழிற் கோலம்- உமையொருபாகத் திருவுருவம்.

காரெழில் வண்ணனோடு கன கம்மனை யானு[8]ங்காணா
ஆரழல் வண்ணமங்கை அய வந்திய மர்ந்தவனே. 9

கங்கையோர் வார்சடைமேல் அடை யப்புடை யேகமழும்
மங்கையோ டொன்றிநின் றம் மதி தான்சொல்ல லாவதொன்றே
சங்கையில் லாமறையோர் அவர் தாந்தொழு சாத்தமங்கை
அங்கையிற் சென்னிவைத்தாய் அய வந்திய மர்ந்தவனே. 10

மறையினார் மல்குகாழித் தமிழ் ஞானசம் பந்தன்மன்னும்
நிறையினார் நீலநக்கன் நெடு மாநக ரென்று தொண்டர்
அறையுமூர் சாத்தமங்கை அய வந்திமே லாய்ந்தபத்தும்
முறைமையா லேத்தவல்லார் இமை யோரிலும் முந்துவரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—அயவந்திநாதர்; தேவி—மலர்க்கண்ணம்மை.

## 65. திருநாகைக்காரோணம் *

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

புனையும் விரிகொன்றைக் கடவுள் புனல்பாய
நனையுஞ் சடைமேலோர் நகுவெண் டலைசூடி
வினையில் லடியார்கள் விதியால் வழிபட்டுக்[1]
கனையுங் கடல்நாகைக் காரோ ணத்தானே. 1

பெண்ணாண் எனநின்ற பெம்மான்[2] பிறைச்சென்னி
அண்ணா மலைநாடன் ஆரூ ருறையம்மான்
மண்[3]ணார் முழவோவா மாடந் நெடுவீதிக்
கண்ணார் கடல்நாகைக் காரோ ணத்தானே. 2

---

[8] கனகமனையான்-பிரமன். * 'நாகைப்பட்டினம்' என வழங்கப்பெறும். ஆதிசேடன் பூசித்தமையால் 'நாகை' எனவும், புண்டரீக மகாமுனிவரை இறைவன் தனது திருமேனியுள் ஏற்றுக்கொண்டு அருளினமையால், 'காயாரோகணம்' (காயம்-உடல்; ஆரோகணம்-ஏற்றுக்கொள்ளுதல்) எனவும் பெற்று, நாகைக் காயாரோகணம் என்பது நாகைக் காரோணம் என மருவி வழங்குவதாயிற்று. [1] பட்டு-பட: எச்சத்திரிபு; வழிபட என்றும் பாடம். [2] பெண் ஆண் என நின்ற பொருள்—அர்த்தநாரீசுவரரின் வடிவம். [3] மண் - மார்ச்சனை.

பாரோர் தொழவிண்ணோர் பணியம் மதில்மூன்றும்
ஆரார் அழலூட்டி அடியார்க் கருள்செய்தான்
தேரார் விழவோவாச் செல்வன் திரைசூழ்ந்த[4]
காரார் கடல்நாகைக் காரோ ணத்தானே. 3

மொழிசூழ் மறைபாடி முதிருஞ் சடைதன்மேல்
அழிசூழ் புனலேற்ற அண்ணல் லணியாய
பழிசூழ் விலராய பத்தர் பணிந்தேத்தக்
கழிசூழ் கடல்நாகைக் காரோ ணத்தானே. 4

ஆணும் பெண்ணுமாய் அடியார்க் கருள்நல்கிச்
சேணின் றவர்க்கின்னஞ் சிந்தை செயவல்லான்
பேணி வழிபாடு பிரியா தெழுந்தொண்டர்
காணுங் கடல்நாகைக் காரோ ணத்தானே. 5

ஏனத் தெயிறோடும் அரவம் மெய்பூண்டு
வானத் திளந்திங்கள் வளருஞ் சடையண்ணல்
ஞானத் துரைவல்லார் நாளும் பணிந்தேத்தக்
கானற் கடல்நாகைக் காரோ ணத்தானே. 6

அரையார் அழல்நாகம் அக்கோ[5] டசைத்திட்டு
விரையார் வரைமார்பின் வெண்ணீ றணியண்ணல்
வரையார் வனபோல வளரும் வங்கங்கள்
கரையார் கடல்நாகைக் காரோ ணத்தானே. 7

வலங்கொள் புகழ்பேணி வரையா லுயர்திண்தோள்
இலங்கைக் கிறைவாட அடர்த்தங் கருள்செய்தான்
பலங்கொள் புகழ்மண்ணிற் பத்தர் பணிந்தேத்தக்
கலங்கொள் கடல்நாகைக் காரோ ணத்தானே. 8

திருமா லடிவீழத் திசைநான் முகனேத்தப்
பெருமா னெனநின்ற பெம்மான் பிறைச்சென்னிச்
செருமால் விடையூருஞ் செல்வன் திரைசூழ்ந்த
கருமால் கடல்நாகைக் காரோ ணத்தானே. 9

நல்லா ரறஞ்சொல்லப் பொல்லார் புறங்கூற
அல்லா ரலர்தூற்ற அடியார்க் கருள்செய்வான்

[4] செல்வத் திரைசூழ்ந்த என்றும் பாடம். [5] அக்கு - உருத்திராக்கம்; என்புமாம்.

பல்லார் தலைமாலை யணிவான் பணிந்தேத்தக்
கல்லார் கடல்நாகைக் காரோ ணத்தானே. 10

கரையார் கடல்நாகைக் காரோ ணம்மேய
நரையார் விடையானை நவிலுஞ் சம்பந்தன்
உரையார் தமிழ்மாலை பாடு மவரெல்லாம்
கரையா வுருவாகிக் கலிவான் அடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - செவ்வழி [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கூனல்திங்கட் குறுங்கண்ணி கான்றநெடு வெண்ணிலா
ஏனற்பூத்தம் மராங்கோதை யோடும்விரா வுஞ்சடை
வானநாடன் அமரர்பெரு மாற்கிட மாவது
கானல்வேலி கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 1

விலங்கலொன்று சிலையாமதில் மூன்றுடன் வீட்டினான்
இலங்குகண்டத் தெழிலாமை பூண்டாற் கிடமாவது
மலங்கியோங்கிவ் வருவெண்டிரை மல்கிய மால்கடல்
கலங்கலோதங்[1] கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 2

வெறிகொளாருங் கடற்கைதை நெய்தல்விரி பூம்பொழில்
முறிகொள்ஞாழல் முடப்புன்னை முல்லைம்முகை வெண்மலர்
நறைகொள்கொன்றை நயந்தோங்கும் நாதற் கிடமாவது
கறைகொளோதங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 3

வண்டுபாடவ் வளர்[2] கொன்றை மாலைம்மதி யோடுடன்
கொண்டகோலங் குளிர்கங்கை தங்குங்குருள் குஞ்சியுள்[3]
உண்டுபோலும் மெனவைத்து கந்தவ்வொரு வற்கிடம்
கண்டல்வேலி கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 4

வார்கொள்கோலம் முலைமங்கை நல்லார்மகிழ்ந் தேத்தவே
நீர்கொள்கோலச் சடைநெடு வெண்டிங்கள் நிகழ்வெய்தவே
போர்கொள்சூலப் படைபுல்கு கையார்க் கிடமாவது
கார்கொளோதங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 5

---

[1] கலங்கள் ஓதம் என்றும் பாடம். [2] வண்டு பாடல் வளர் என்றும் பாடம். [3] குளிர் குஞ்சியுள் என்றும் பாடம்.

விடையதேறிவ் விடவர வசைத்தவ் விகிர்தரவர்
படைகொள்பூதம் பலபாட ஆடும்பர மாயவர்[4]
உடைகொள் வேங்கை யுரிதோ லுடையார்க் கிடமாவது
கடைகொள்செல்வங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 6

பொய்துவாழ்வார் மனம்பாழ் படுக்கும் மலர்ப்பூசனை
செய்துவாழ்வார் சிவன்சேவடிக்கே செலுஞ் சிந்தையார்
எய்தவாழ்வார் எழில்நக்க ரெம்மாற் கிடமாவது
கைதல்வேலி கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 7

பத்திரட்டி திரள்தோ ளுடையான் முடிபத்திற
அத்திரட்டி விரலால் அடர்த்தார்க் கிடமாவது
மைத்திரட்டிவ் வருவெண் டிரை மல்கிய மாகடல்
கைத்திரட்டுங்[5] கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 8

நல்லபோதி[6]ல் உறைவானும் மாலுந்நடுக் கத்தினால்
அல்லராவ ரென[7] நின்ற பெம்மாற் கிடமாவது
மல்லலோங்கிவ் வருவெண் டிரை மல்கிய மாகடல்
கல்லலோதங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 9

உயர்ந்தபோதின் னுருவத் துடைவிட் டுழல்வார்களும்
பெயர்ந்தமண்டை யிடுபிண்ட மாவுண் டுழல்வார்களும்
நயந்துகாணா வகைநின்ற நாதர்க் கிடமாவது
கயங்கொளோதங் கழிசூழ் கடல்நாகைக் காரோணமே. 10

மல்குதண்பூம் புனல்வாய்ந் தொழுகும்வயற் காழியான்
நல்லகேள்வித் தமிழ்ஞான சம்பந்தன்நல் லார்கள்முன்
வல்லவாறே புனைந்தேத்துங் காரோணத்து வண்டமிழ்
சொல்லுவார்க்கும் இவைகேட்ப வர்க்குந்துய ரில்லையே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—காயாரோகணேசுவரர் ; தேவி—நீலாயதாட்சியம்மை.
தியாகர்—சுந்தரவிடங்கர்.

---

[4] ஆடும் பரமாயவர் - தியாகர்: பரமரவர் என்றும் பாடம். [5] மல்கியவார் கடல், கைத்திரட்டும் என்றும் பாடம். [6] நல்லபோது- அழகிய தாமரை. [7] அல்லலாவரென என்றும் பாடம்.

## 66. திருச்சிக்கல் *

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வா**னுலா வும்மதி வந்துலா வும்மதில் மாளிகை, தேனுலா வும்மலர்ச் சோலைமல் குந்திகழ் சிக்கலுள், வேனல்வே ளைவிழித் திட்டவெண் ணெய்ப்பெரு மான[1]டி, ஞானமா கந்நினை வார்வினை யாயின நையுமே. 1

மடங்கொள்வா ளை[2]குதி கொள்ளும் மணமலர்ப் பொய்கைசூழ், திடங்கொள் மாமறை யோரவர் மல்கிய சிக்கலுள், விடங்கொள் கண்டத்துவெண் ணெய்ப்பெரு மானடி மேவியே, அடைந்துவா ழும்அடி யாரவர் அல்லல் அறுப்பரே. 2

நீலநெய் தல்[3]நில விம்மல ருஞ்சுனை நீடிய, சேலுமா லுங்கழனிவ் வளம் மல்கிய சிக்கலுள், வேலவொண் கண்ணியி னாளை[4]யொர் பாகன்வெண் ணெய்ப்பிரான், பாலவண் ணன்கழலேத்தநம் பாவம்ப றையுமே. 3

கந்தமுந் தக்கைதை பூத்துக்க மழ்ந்துசே ரும்பொழிற், செந்துவண் டின்னிசை பாடல்மல் குந்திகழ் சிக்கலுள், வெந்தவெண் ணீற்றண்ணல் வெண்ணெய்ப் பிரான்விரை யார்கழல், சிந்தைசெய் வார்வினை யாயின தேய்வது திண்ணமே. 4

மங்குல்தங் கும்மறை யோர்கள்மா டத்தய லேமிகு, தெங்குதுங் கப்பொழிற் செல்வமல் குந்திகழ் சிக்கலுள், வெங்கண்வெள் ளேறுடை வெண்ணெய்ப்பி ரானடி மேவவே, தங்குமேன்மைசர தங்[5] திரு நாளுந்த கையுமே. 5

---

* வசிஷ்டர் காமதேனுவின் வெண்ணெயை எடுத்துச் சிவலிங்கமாக்கிப் பூசித்துப் பின், அந்த லிங்கத் திருவுருவத்தை வேறு இடத்தில் வைக்க எடுக்கும்போது அது வாராமல் சிக்கியதால் இப்பெயர் பெற்றது. இங்கு முருகக்கடவுள் சிங்காரவேலர் என்ற பெயருடன் அமர்ந்துள்ளார். [1] வெண்ணெய்ப் பெருமான் - தலத்துச் சுவாமியின் பெயர். [2] மடங் கொள்வாளை - உடல் பெருத்தும் அறிவு நிலைகுறைந்தும் உள்ள வாளை மீன். [3] நெய்தல் - ஆம்பல்; நெய்தல் நிலக் கருப்பொருள். [4] வேலவொண் கண்ணியினாள் - தல அம்மையின் பெயர். [5] மேற்சரதங் என்றும் பாடம்.

வண்டிரைத் தும்மது விம்மிய மாமலர்ப் பொய்கைசூழ், தெண்டிரைக் கொள்புனல் வந்தொழு கும்வயற் சிக்கலுள், விண்டிலரத் தம்மல ராற்றிகழ் வெண்ணெய்ப் பெருமானடி, கண்டிரைத் தும்மன மேமதி யாய்கதி யாகவே. 6

முன்னுமா டம்மதில் மூன்றுட னேயெரி யாய்விழத், துன்னுவார் வெங்கணை யொன்றுசெ லுத்திய சோதியான், செங்கெலாரும்வயற் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடி, உன்னி[6] நீடம்மனமேநினை யாய்வினை ஓயவே. 7

தெற்ற லா[7]கிய தென்னிலங் கைக்கிறை வன்மலை, பற்றினான்முடி பத்தொடு தோள்கள் நெரியவே, செற்ற தேவன்நஞ் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மானடி, உற்று நீநினை யாய்வினை யாயின ஓயவே. 8

மாலி னோடரு மாமறை வல்லமு னிவனும்,[8] கோலி னார்குறுகச்சிவன் சேவடி கோலியும், சீலந் தாமறி யார்திகழ் சிக்கல் வெண் ணெய்ப்பிரான், பாலும் பன்மலர் தூவப்ப றையும்[9] நம் பாவமே. 9

பட்டை நல்துவ் ராடையி னாரொடும் பாங்கிலாக், கட்டமண் கழுக் கள்சொல்லி னைக்கரு தாதுநீர், சிட்டன் சிக்கல்வெண் ணெய்ப்பெரு மான்செழு மாமறைப், பட்டன் சேவடி யேபணி மின்பிணி[10] போகவே. 10

கந்த மார்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன்நல், செந் தண் பூம்பொழிற் சிக்கல்[11] வெண் ணெய்ப்பெரு மானடிச், சந்த மாச்சொன்ன செந்தமிழ் வல்லவர் வானிடை, வெந்த நீறணி யும்பெரு மானடி[12] மேவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வெண்ணெய்ப் பெருமான் (நவநீதநாதர்) ;
தேவி—வேல்நெடுங்கண்ணி.

---

[6] உன்னல் - நினைத்தல். [7] தெற்றல் - உறுதி. [8] மாமறை வல்ல முனிவன் - பிரமதேவன். [9] பறைதல் - நீங்குதல். [10] பிணி - பிறவிப்பிணி. [11] பூம்புனற் சிக்கல் என்றும் பாடம். [12] வெந்த நீறணியும் பெருமான் - சிவபெருமான்.

# 67. திருக்கீழ்வேளூர்*

*பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]*

திருச்சிற்றம்பலம்

மின்னு லாவிய சடையினர் விடையினர் மிளிர்தரும் அரவோடும்
பன்னு[1] லாவிய மறையொலி நாவினர் கறையணி கண்டத்தர்
பொன்னு லாவிய கொன்றையந் தாரினர் புகழ்மிகு கீழ்வேளூர்
உன்[2]னு லாவிய சிந்தையர் மேல்வினை யோடிட[3] வீடாமே. 1

நீரு லாவிய சடையிடை யரவொடு மதிசிர நிரைமாலை
வாரு லாவிய வனமுலை யவளொடு மணிசிலம் பவையார்க்க
ஏரு லாவிய இறைவன துறைவிடம் எழில்திகழ் கீழ்வேளூர்
சீரு லாவிய சிந்தைசெய் தணைபவர் பிணியொடு வினைபோமே. 2

வெண்ணி லாமிகு விரிசடை யரவொடு வெள்ளெருக் கலர்மத்தம்
பண்ணி லாவிய பாடலோ டாடலர் பயில்வுறு கீழ்வேளூர்ப்
பெண்ணி லாவிய பாகனைப் பெருந்திருக் கோயிலே[4]ம் பெருமானை
உண்ணி லாவிநின் றுள்கிய சிந்தையார் உலகி[5]னில் உள்ளாரே. 3

சேடு லாவிய கங்கையைச் சடையிடைத் தொங்கவைத் தழகாக
நாடு லாவிய பலிகொளும் நாதனூர் நலமிகு கீழ்வேளூர்ப்
பீடு லாவிய பெருமையர் பெருந்திருக் கோயிலுட் பிரியாது
நீடு லாவிய நிமலனைப் பணிபவர் நிலைமிகப் பெறுவாரே. 4

துன்று வார்சடைச் சுடர்மதி நகுதலை வடமணி சிரமாலை
மன்று லாவிய மாதவர் இனிதியல் மணமிகு[6] கீழ்வேளூர்
நின்று நீடிய பெருந்திருக் கோயிலின் நிமலனை நினைவோடும்
சென்று லாவிநின் றேத்தவல் லார்வினை தேய்வது திணமாமே. 5

கொத்து லாவிய குழல்திகழ் சடையனைக் கூத்தனை மகிழ்ந்துள்கித்
தொத்து லாவிய நூலணி மார்பினர் தொழுதெழு கீழ்வேளூர்ப்
பித்து லாவிய பத்தர்கள் பேணிய பெருந்திருக் கோயில்மன்னும்
முத்து லாவிய வித்தினை யேத்துமின் முடுகிய இடர்போமே. 6

---

* இங்கு வேள் - முருகப்பெருமான் வழிபட்ட காரணத்தால் இப்பெயர் பெற்றது. [1] பன்னுதல் - பலமுறை சொல்லுதல். [2] உன் - நினைதல். [3] ஓடிட - ஓடுதலால். [4] பெருந்திருக்கோயில் - அழகிய மாடக்கோயில். [5] உலகு - வீட்டுலகு. [6] மணிமிகு என்றும் பாடம்.

பிறை நிலாவிய சடையிடைப் பின்னலும் வன்னியுந் துன்றும்
கறை நிலாவிய கண்டர்எண் தோளினர் காதல்செய் கீழ்வேளூர்
மறை நிலாவிய[7] அந்தணர் மலிதரு பெருந்திருக் கோயில்மன்னும்
இறை[8] நிலாவிய ஈசனை நேசத்தால் நினைபவர் வினைபோமே. 7

மலை நிலாவிய மைந்தன் அம் மலையினை யெடுத்தலும் அரக்கன்றன்
தலை யெலாம்நெரிந் தலறிட வூன்றினான் உறைதரு கீழ்வேளூர்க்
கலை நிலாவிய நாவினர் காதல்செய் பெருந்திருக் கோயிலுள்
நிலை நிலாவிய ஈசனை நேசத்தால் நினையவல் வினைபோமே. 8

மஞ்சு லாவிய கடற்கிடந் தவனொடு மலரவன் காண்பொண்ணாப்
பஞ்சு லாவிய மெல்லடிப் பார்ப்பதி பாகனைப் பரிவோடும்
செஞ்சொ லார்பலர் பரவிய தொல்புகழ் மல்கிய கீழ்வேளூர்
நஞ்சு லாவிய கண்டனை நணுகுமின் நடலைகள் நணுகாவே. 9

சீறு லாவிய தலையினர் நிலையிலா அமணர்கள் சீவரத்தார்
வீறி லாதவெஞ் சொற்பல விரும்பன்மின் சுரும்பமர் கீழ்வேளூர்
ஏறு லாவிய கொடியனை யேதமில் பெருந்திருக் கோயில்மன்னு
பேறு லாவிய பெருமையன் திருவடி பேணுமின் தவமாமே. 10

குருண்ட வார்குழற் சடையுடைக் குழகனை அழகமர் கீழ்வேளூர்த்
திரண்ட மாமறை யவர்தொழும் பெருந்திருக் கோயிலெம் பெருமானை
இருண்ட மேதியின் இனம்மிகு வயல்மல்கு புகலிமன் சம்பந்தன்
தெருண்ட[9] பாடல்வல் லாரவர் சிவகதி பெறுவது திடமாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அட்சயநாதர், கேடிலியப்பர்; தேவி—வனமுலைநாயகி.

---

## 68. திருத்தேவூர் *

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பண்ணி லாவிய மொழியுமை பங்கனெம் பெருமான்
விண்ணில் வானவர் கோன்விம லன்விடை யூர்தி

---

[7] மறையுலாவிய, நிறையுலாவிய என்றும் பாடம். [8] நிறை - நிறைவுடன். [9] தெருண்ட-ஞானம் நிறைந்த. * தேவர்கள் பூசித்து மந்திரம் உபதேசிக்கப் பெற்றமையால் இப்பெயர் பெற்றது.

தெண்ணி லாமதி தவழ்தரு மாளிகைத் தேவூர்
அண்ணல் சேவடி யடைந்தனம் அல்லலொன் றிலமே. 1

ஓதி மண்டலத் தோர்முழு துய்யவெற் பேறு
சோதி வானவன்[1] துதிசெய மகிழ்ந்தவன் தூநீர்த்
தீதில் பங்கயந் தெரிவையர் முகம்மலர் தேவூர்
ஆதி சேவடி யடைந்தனம் அல்லலொன் றிலமே. 2

மறைக ளால்மிக வழிபடு மாணியைக் கொல்வான்
கறுவு கொண்டவக் காலனைக் காய்ந்தவெங் கடவுள்
செறுவில் வாளைகள் சேலவை பொருவயல் தேவூர்
அறவன் சேவடி யடைந்தனம் அல்லலொன் றிலமே. 3

முத்தன்[2] சில்பலிக் கூர்தொறும் முறைமுறை திரியும்
பித்தன் செஞ்சடைப் பிஞ்ஞகன் தன்னடி யார்கள்
சித்தன் மாளிகை செழுமதி தவழ்பொழில் தேவூர்
அத்தன் சேவடி யடைந்தனம் அல்லலொன் றிலமே. 4

பாடு வாரிசை பல்பொருட் பயன்உகந் தன்பால்[3]
கூடு வார்துணைக் கொண்டதம் பற்றறப் பற்றித்
தேடு வார்பொரு ளானவன் செறிபொழில் தேவூர்
ஆடு வானடி யடைந்தனம் அல்லலொன் றிலமே. 5

பொங்கு பூண்முலைப் புரிகுழல் வரிவளைப் பொருப்பின்[4]
மங்கை பங்கினன் கங்கையை[5] வளர்சடை வைத்தான்
திங்கள் சூடிய தீநிறக் கடவுள்தென் தேவூர்
அங்க ணன்றனை யடைந்தனம் அல்லலொன் றிலமே. 6

வன்பு யத்தவத் தானவர் புரங்களை யெரியத்
தன்பு யத்துறத் தடவரை வளைத்தவன் தக்க
தென்த மிழ்க்கலை தெரிந்தவர் பொருந்திய தேவூர்[6]
அன்பன் சேவடி யடைந்தனம் அல்லலொன் றிலமே. 7

---

1 வெற்பேறு சோதி வானவன் - சூரியன். இது சூரியன் பூசித்தமையைக் குறிக்கும். 2 முத்தன்-மேலானவன். 3 பயனகத் தன் பால் என்றும், பயனகந்தன் பால் என்றும் பாடம். 4 பொருப்பன் என்றும் பாடம். 5 பங்கன் தண் கங்கை என்றும் பாடம். 6 இவ்வடியினால் தேவூர் தமிழ்ப் புலவர்களுக்கு இருப்பிடம் என்பதை அறியலாம்.

தருவு யர்ந்தவெற் பெடுத்தஅத் தசமுகன் நெரிந்து
வெருவ வூன்றிய திருவிரல் நெகிழ்த்துவாள் பணித்தான்
தெருவு தோறும்நல் தென்றல்வந் துலவிய தேவூர்
அரவு சூடியை அடைந்தனம் அல்லலொன் றிலமே. 8

முந்திக் கண்ணனும் நான்முக னும்அவர் காணா
எந்தை திண்டிறல் இருங்களி றுரித்தஎம் பெருமான்
செந்தி னத்திசை யறுபதம் முரல்திருத் தேவூர்
அந்தி வண்ணனை யடைந்தனம் அல்லலொன் றிலமே. 9

பாறு புத்தருந் தவமணி சமணரும் பலநாள்
கூறி வைத்ததோர் குறியினைப் பிழையெனக் கொண்டு
தேறி மிக்கநஞ் செஞ்சடைக் கடவுள்தென் தேவூர்
ஆறு சூடியை யடைந்தனம் அல்லலொன் றிலமே. 10

அல்ல லின்றிவிண் ணாள்வர்கள் காழியர்க் கதிபன்
நல்ல செந்தமிழ் வல்லவன் ஞானசம் பந்தன்
எல்லை யில்புகழ் மல்கிய எழில்வளர் தேவூர்த்
தொல்லை நம்பனைச் சொல்லிய பத்தும்வல் லாரே.[7] 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - சாதாரி* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காடுபயில் வீடுமுடை யோடுகலன்[1] மூடுமுடை[2] யாடைபுலி தோல், தேடுபலி யூண துடை வேடமிகு வேதியர்தி ருந்துபதிதான், நாடகம தாடமஞ்ஞை பாடவரி கோடல்[3] கைம றிப்பநலமார், சேடுமிகு பேடையனம் ஊடிமகிழ் மாடமிடை தேவூரதுவே. 1

கோளரவு கொன்றைநகு வெண்டலையெ ருக்குவன்னி கொக் கிறகொடும், வாளரவு தண்சலம கட்குலவு செஞ்சடைவ ரத்திறை வனூர், வேளரவு கொங்கையிள மங்கையர்கள் குங்குமம்வி ரைக் குமணமார், தேளரவு தென்றல்தெரு வெங்கும்நிறை வொன்றி வரு தேவூரதுவே. 2

---

[7] வல்லோரே என்றும் பாடம். * இப்பதிகத்தில் 10-ம் செய்யுளில் மற்றைய அடிகள் சிதைந்து போயின. [1] கலன் - ஓடு. [2] முடை - நாற்றம். [3] கோடல் - வெண்காந்தள்.

பண்தடவு சொல்லின்மலை வல்லியுமை பங்கன்எமை யாளும் இறைவன், எண்தடவு வானவரி றைஞ்சுகழ லோன்இனிதி ருந்த இடமாம், விண்தடவு[4] வார்பொழிலு குத்தநற வாடிமலர் சூடி விரையார், செண்[5] தடவு மாளிகைசெ றிந்துதிரு வொன்றிவளர் தேவூரதுவே. 3

மாசில்மன நேசர்தம தாசைவளர் சூலதரன் மேலையிமை யோர், ஈசன்மறை யோதியெரி யாடிமிகு பாசுபதன் மேவுபதி தான், வாசமலர் கோதுகுயில் வாசகமும்[6] மாதரவர் பூவை மொழியும், தேசவொலி வீணையொடு கீதமது வீதிநிறை தேவூரதுவே. 4

கானமுறு மான்மறியன் ஆனையுரி போர்வைகன லாடல்புரி வோன், ஏனஎயி றுமையிள நாகம்வளர் மார்பினிமை யோர்தலை வனூர், வானணவு சூதமிள வாழை[7] மகிழ் மாதவிப லாநிலவி வார், தேனமுது உண்டுவரி வண்டுமருள் பாடிவரு தேவூ ரதுவே. 5

ஆறினொடு கீறுமதி யேறுசடை யேறன்அடை யார்நகர்கள் தான், சீறுமவை வேறுபட நீறுசெய்த நீறன்நமை யாளும் அரனூர், வீறுமல ரூறுமது வேறிவளர் வாயவிளை கின்றகழனிச் சேறுபடு செங்கயல்வி ளிப்பஇள வாளைவரு தேவூரதுவே. 6

கன்றியெழ வென்றிநிகழ் துன்றுபுரம் அன்றவிய நின்று நகைசெய், என்றனது சென்றுநிலைபெந்தைதன தந்தையமர் இன் பநகர்தான், முன்றின்மிசை நின்றபல வின்கனிகள் தின்றுகற வைக்குருளைகள், சென்றிசைய நின்றுதுளி யொன்றவிளை யாடி வளர் தேவூரதுவே. 7

ஓதமலி கின்றதென் இலங்கையரை யன்மலிபு யங்கள் நெரியப், பாதமலி கின்றவிர லொன்றினில டர்த்தபர மன்தன திடம், போதமலி கின்றமட வார்கள்நட மாடலொடு பொங்கு முழவம்,[8] சேத[9] மலி கின்றகரம் வென்றிதொழி லாளர்புரி தேவூ ரதுவே. 8

---

[4] வண்டடவு என்றும் பாடம். [5] சேண் என்பது செண் எனக் குறைகிற்று; சேண் - ஆகாயம். [6] குயில் வாசகம் - குயில் பாட்டு. [7] சூதமினவாழை என்றும் பாடம். [8] முழவம் - மத்தளம். [9] சேதம் - கூத்தின் ஓர் உறுப்பு.

வண்ணமுகி லன்னஎழில் அண்ணலொடு சுண்ணமலி வண்ண[10] மலர்மேல், நண்ணவனும் எண்ணரிய விண்ணவர்கள் கண்ணவன் நலங்கொள்பதிதான், வண்ணவன நுண்ணிடையின் எண்ணரிய அன்ன நடை யின்மொழியினார், திண்ணவண மாளிகைசெ றிந்தஇசை யாழ்மருவு தேவூரதுவே. 9

பொச்சமமர் பிச்சைபயில் அச்சமணு மெச்சமறு போதியருமா, மொச்சைபயி லிச்சைகடி பிச்சன்மிகு நச்சரவன் மொச்சநகர்தான், மைச்சின்முகில் வைச்சபொழில் * * 10

துங்கமி[11]கு பொங்கரவு தங்குசடை நங்களிறை துன்றுகுழலார், செங்கயல்கள் மங்கையுமை நங்கையொரு பங்கனமர் தேவூரதன்மேல், பைங்கமல மங்கணிகொள் திண்புகலி ஞானசம்பந்தனுரைசெய், சங்கமலி செந்தமிழ்கள் பத்துமிவை வல்லவர்கள் சங்கை[12] யிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—தேவகுருநாதர்; தேவி—மதுரபாடணியம்மை.

---

## 69. திருஆரூர்

### திருவிருக்குக்குறள்

பண் - குறிஞ்சி* [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சித்தந் தெளிவீர்காள், அத்தன் ஆரூரைப்
பத்தி மலர்தூவ, முத்தி யாகுமே. 1

பிறவி யறுப்பீர்காள், அறவன் ஆரூரை
மறவா தேத்துமின், துறவி யாகுமே. 2

துன்பந் துடைப்பீர்காள், அன்பன் அணியாரூர்
நன்பொன் மலர்தூவ, இன்ப மாகுமே. 3

உய்ய லுறுவீர்காள், ஐயன்[1] ஆரூரைக்
கையி னல்தொழ, நையும் வினைதானே. 4

---

10 சுண்ணம் - பொற்சுண்ணம்; வண்ணம் - பொன்னிறம். 11 துங்கம்-உயர்வு. 12 சங்கை - மயக்கம். * இப்பதிகம் மக்களுக்குக் கூறிய உபதேசமாகும். 1 ஐயன் - தலைவன்.

பிண்டம்[2] அறுப்பீர்காள், அண்டன் ஆரூரைக்
கண்டு மலர்தூவ, விண்டு வினைபோமே. 5

பாசம் அறுப்பீர்காள், ஈசன் அணியாரூர்
வாச மலர்தூவ, நேச மாகுமே. 6

வெய்ய வினைதீர, ஐயன் அணியாரூர்
செய்ய மலர்தூவ, வையம் உமதாமே. 7

அரக்கன் ஆண்மையை, நெருக்கி னான்ஆரூர்
கரத்தி னால்தொழத், திருத்த மாகுமே. 8

துள்ளும் இருவர்க்கும், வள்ளல் ஆரூரை
உள்ளு மவர்தம்மேல், விள்ளும் வினைதானே. 9

கடுக்கொள் சீவரை, அடக்கி னான்ஆரூர்
எடுத்து வாழ்த்துவார், விடுப்பர் வேட்கையே. 10

சீரூர் சம்பந்தன், ஆரூ ரைச்சொன்ன
பாரூர் பாடலார், பேரா ரின்பமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - வியாழக்குறிஞ்சி* [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாடலன் நான்மறையன் படிபட்ட கோலத்தன் திங்கள்
சூடலன் மூவிலைய சூலம் வலனேந்திக்
கூடலர்[1] மூவெயிலும் எரியுண்ணக் கூரெரிகொண் டெல்லி
ஆடலன் ஆதிரையன் ஆரூர் அமர்ந்தானே. 1

சோலையில் வண்டினங்கள் சுரும்போ டிசைமுரலச் சூழ்ந்த
ஆலையின் வெம்புகைபோய் முகில்தோயும் ஆரூரில்
பாலொடு நெய்தயிரும் பயின்றாடும் பரமேட்டி பாதம்
காலையும் மாலையும்போய்ப் பணிதல் கருமமே. 2

உள்ளமோர் இச்சையினால் உகந்தேத்தித் தொழுமின்தொண்டீர்மெய்யே
கள்ளம் ஒழிந்திடுமின் கரவா திருபொழுதும்
வெள்ளமோர் வார்சடைமேற் கரந்திட்ட வெள்ளேற்றான் மேய
அள்ளல்[2] அகன்கழனி ஆரூர் அடைவோமே. 3

---

[2] பிண்டம் - கரு ; பிறவி. * இப்பதிகத்தில் 8-ம் செய்யுள் சிதைந்துபோயிற்று. [1] கூடலர் - பகைவர். [2] அள்ளல் - சேறு.

வெந்துறு வெண்மழுவாட் படையான் மணிமிடற்றன் அரையின்
ஐந்தலை யாடரவம் அசைத்தான் அணியாரூர்ப்
பைந்தளிர்க் கொன்றையந்தார்ப் பரமன் அடிபரவ[3]ப் பாவம்
நைந்தறும் வந்தணையும் நாடொறும் நல்லனவே. 4

வீடு பிறப்பெளிதாம் அதனை வினவுதிரேல் வெய்ய
காடிட மாகநின்று கனலேந்திக் கைவீசி
ஆடும் அவிர்சடையான் அவன்மேய ஆரூரைச் சென்று
பாடுதல் கைதொழுதல் பணிதல் கருமமே. 5

கங்கையோர் வார்சடைமேற் கரந்தான் கிளிமழலைக் கேடில்
மங்கையோர் கூறுடையான் மறையான் மழுவேந்தும்
அங்கையினான் அடியே பரவி யவன்மேய ஆரூர்
தங்கையினால் தொழுவார் தடுமாற் றறுப்பாரே. 6

நீறணி மேனியனாய் நிரம்பா மதிசூடி நீண்ட
ஆறணி வார்சடையான் ஆரூர் இனிதமர்ந்தான்
சேறணி மாமலர்மேற் பிரமன் சிரமரிந்த செங்கண்
ஏற[4]ணி வெல்கொடியான் அவன்எம் பெருமானே. 7 - 8

வல்லியந்[5] தோலுடையான்வளர்திங்கட் கண்ணி[6]யினான் வாய்த்த
நல்லியல் நான்முகத்தோன் தலையின் அறவேற்றான்
அல்லியங் கோதை[7] தன்னை யாகத் தமர்ந்தருளி ஆரூர்ப்
புல்லிய புண்ணியனைத் தொழுவாரும் புண்ணியரே. 9

செந்துவர் ஆடையினார் உடைவிட்டு நின்றுழல்வார் சொன்ன
இந்திர ஞாலமொழிந் தின்புற வேண்டுதிரேல்
அந்தர மூவெயிலும் அரணம்[8] எரியூட்டி ஆரூர்த்
தந்திர மாவுடையான் அவன்எந் தலைமையனே. 10

நல்ல புனற்புகலித் தமிழ்ஞான சம்பந்தன் நல்ல
அல்லி மலர்க்கழனி ஆரூர் அமர்ந்தானை
வல்லதோ ரிச்சையினால் வழிபாடிவை பத்தும் வாய்க்கச்
சொல்லுதல் கேட்டல்வல்லார் துன்பந் துடைப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

[3] பரவ - துதிக்க. [4] செங்கண் ஏறு - இடபம். [5] வல்லியம் - புலி. [6] கண்ணி - தலைமாலை. [7] அல்லியங்கோதை - இத்தலத்து அம்மையின் பெயர். [8] அரணம் - கோட்டை.

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

பவனமாய்ச் சோடையாய் நாவெழாப் பஞ்சுதோய்ச் சட்ட வுண்டு, சிவனதாட் சிந்தியாப் பேதைமார் போலநீ வெள்கி னையே, கவனமாய்ப் பாய்வதோர் ஏறுகந் தேறிய காள கண்டன், அவனதா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நேஞ்சே. 1

தந்தையார் போயினார் தாயரும் போயினார் தாமும் போவார், கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றார் கொண்டுபோ வார்[1], எந்தநாள் வாழ்வதற் கேமனம் வைத்தியால் ஏழை நெஞ்சே, அந்தணா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே.[2] 2

நிணங்குடர் தோல்நரம் பென்புசேர் ஆக்கைதான் நிலாய தன்றால், குணங்களார்க் கல்லது குற்றநீங் காதெனக் குலுங்கி னையே, வணங்குவார் வானவர் தானவர் வைகலும் மனங்கொ டேத்தும்,[3] அணங்கனா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 3

நீதியால் வாழ்கிலை நாள்செலா நின்றன நித்த நோய்கள், வாதியா ஆதலால் நாளும்நாள் இன்பமே மருவி னையே, சாதியார் கின்னரர் தருமனும் வருணனும் ஏத்தும் முக்கண், ஆதியா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 4

பிறவியால் வருவன கேடுள ஆதலாற் பெரிய இன்பத், துறவியார்க் கல்லது துன்பநீங் காதெனத் தூங்கி னையே, மறவல்நீ மார்க்கமே நண்ணினாய் தீர்த்தநீர் மல்கு சென்னி, அறவனா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 5

செடி[4]கொள்நோ யாக்கையம் பாம்பின்[5] வாய்த் தேரைவாய்ச் சிறுபறவை, கடிகொள்பூந் தேன்சுவைத் தின்புற லாமென்று கருதி னையே, முடிகளால் வானவர் முன்பணிந் தன்பரா யேத்தும் முக்கண் அடிகளா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 6

---

[1] கொண்டு போவான் என்றும் பாடம். [2] இச்செய்யுள் மனத்திற்குக் கூறும் தேறுதல் மொழி ஆகும். [3] மணங்கொடேத்தும் என்றும், மணங்கொண்டேத்தும் என்றும் பாடம். [4] செடி - துன்பம். [5] யாக்கையைம் பாம்பின் என்றும் பாடம்.

ஏறுமால் யானையே சிவிகையந் தளகமீச் சோப்பி வட்டில்,[4] மாறிவா ழுடம்பினர் படுவதோர் நடலைக்கு மயங்கி னையே, மாறிலா வனமுலை மங்கையோர் பங்கினர் மதியம் வைத்த, ஆறனா ரூர் தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 7

என்பினாற் கழிநிரைத் திறைச்சிமண் சுவரெறிந் திதுநம் இல்லம், புன்புலால் நாறுதோல் போர்த்துப்போல் லாமையான் முகடு கொண்டு, முன்பெலாம் ஒன்பது வாய்தலார் குரம்பையின் மூழ்கிடாதே, அன் பனா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 8

தந்தைதாய் தன்னுடன் தோன்றினார் புத்திரர் தாரமென்னும், பந்தம்நீங் காதவர்க் குய்ந்துபோக் கில்லெனப் பற்றி னையே, வெந்தநீ றாடியார் ஆதியார் சோதியார் வேதகீதர், எந்தையா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 9

நெடியமால் பிரமனும் நீண்டுமண் ணிடந்தின்னம் நேடிக் காணாப், படியனார் பவளம்போல் உருவனார் பனிவளர் மலையாள் பாக, வடிவனார் மதிபொதி சடையனார் மணியணி கண்டத் தெண்டோள், அடிகளா ரூர்தொழு துய்யலாம் மையல்கொண் டஞ்சல் நெஞ்சே. 10

பல்லிதழ் மாதவி அல்லிவண் டியாழ்செயுங் காழி யூரன், நல்லவே நல்லவே சொல்லிய ஞானசம் பந்தன் ஆரூர், எல்லியம் போதெரி யாடும்எம் ஈசனை யேத்து பாடல், சொல்லவே வல்ல வர் தீதிலர் ஓதநீர் வைய கத்தே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பருக்கையானை மத்தகத் தரிக்குலத் துகிர்ப்புக
நெருக்கிவாய[1] நித்திலந் நிரக்குநீள் பொருப்பனூர்
கருக்கொள்சோலை சூழநீடு மாடமாளி கைக்கொடி
அருக்கன்மண்ட லத்தணவும்[2] அந்தணாரு ரென்பதே. 1

---

[4] சேர்ப்பில் வட்டி என்றும், சேர்ப்பிவட்டி என்றும் பாடம். [1] நெருக்குவாய என்றும் பாடம். [2] அருக்கன் மண்டலம் - சூரிய மண்டலம்; அணவும் - தடவும்.

விண்டவெள் ளெருக்கலர்ந்த வன்னிகொன்றை மத்தமும்
இண்டை[3] கொண்ட செஞ்சடை முடிச்சிவ னிருந்தவூர்
கெண்டைகொண் டலர்ந்தகண்ணி னார்கள்கீத வோசைபோய்
அண்டரண்டம் ஊடறுக்கும் அந்தணாரு ரென்பதே. 2

கறுத்தநஞ்சம் உண்டிருண்ட கண்டர்காலன் இன்னுயிர்
மறுத்தமாணி தன்றன் ஆகம் வண்மைசெய்த மைந்தனூர்
வெறித்துமேதி யோடிமூசு[4] வள்ளை வெள்ளை நீள்கொடி
அறுத்துமண்டி யாவிபாயும் அந்தணாரு ரென்பதே. 3

அஞ்சுமொன்றி ஆறுவீசி நீறுபூசி மேனியில்
குஞ்சியார வந்திசெய்ய அஞ்சலென்னி மன்னுமூர்
பஞ்சியாரு மெல்லடிப் பணைத்தகொங்கை நுண்ணிடை
அஞ்சொலார் அரங்கெடுக்கும் அந்தணாரு ரென்பதே. 4

சங்குலாவு திங்கள்சூடி தன்னையுன்னு வார்மனத்
தங்குலாவி நின்றஎங்க ளாதிதேவன் மன்னுமூர்
தெங்குலாவு சோலைநீடு தேனுலாவு செண்பகம்
அங்குலாவி யண்டநாறும் அந்தணாரு ரென்பதே. 5

கள்ளநெஞ்ச வஞ்சகக் கருத்தைவிட் டருத்தியோ
டுள்ளமொன்றி யுள்குவார் உளத்துளான் உகந்தவூர்
துள்ளிவாளை பாய்வயற் சுரும்புலாவு நெய்தல்வாய்
அள்ளல்நாரை ஆரல்[5] வாரும் அந்தணாரு ரென்பதே. 6

கங்கைபொங்கு செஞ்சடைக் கரந்தகண்டர் காமனை
மங்கவெங்க ணல்விழித்த மங்கைபங்கன் மன்னுமூர்
தெங்கினூடு போகி[6] வாழை கொத்திறுத்து மாவின்மேல்
அங்கண்மந்தி முந்தியேறும் அந்தணாரு ரென்பதே. 7

வரைத்தலம் எடுத்தவன் முடித்தலம் உரத்தொடும்
நெரித்தவன் புரத்தைமுன் எரித்தவன் இருந்தவூர்
நிரைத்தமாளி கைத்திருவின் நேரனார்கள் வெண்ணகை
அரத்தவாய் மடந்தைமார்கள் ஆடுமாரு ரென்பதே. 8

இருந்தவன் கிடந்தவன் இடந்துவிண் பறந்துமெய்
வருந்தியும் அளப்பொணாத வானவன் மகிழ்ந்தவூர்

---

[3] இண்டை - தலைமாலை. [4] மூசி என்றும் பாடம். [5] ஆரல் - ஒருவகை மீன். [6] கொங்கினூடு பொங்கி என்றும் பாடம்.

செருந்திஞாழல் புன்னைவன்னி செண்பகஞ் செழுங்குரா
அரும்புசோலை வாசநாறும் அந்தணூரு ரென்பதே. 9

பறித்த[7] வெண் டலைக்கடுப் படுத்தமேனி யார்தவம்
வெறித்தவேடன் வேலைநஞ்சம் உண்டகண்டன் மேவுமூர்
மறித்துமண்டு வண்டல்வாரி மிண்டுநீர் வயற்செநெல்
அறுத்தவா யசும்பு[8] பாயு மந்தணூரு ரென்பதே. 10

வல்லிசோலை சூத[9] நீடு மன்னுவீதி பொன்னுலா
அல்லிமா த[10]மர்ந்திருந்த அந்தணூரு ராதியை
நல்லசொல்லும் ஞானசம் பந்தன்நாவின் இன்னுரை
வல்லதொண்டர் வானமாள வல்லர்வாய்மை யாகவே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - கௌசிகம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அந்த மாயுல காதியு மாயினான்
வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்
சிந்தை யேபுகுந் தான்திரு வாரூரெம்
எந்தை தானெனை யென்றுகொ லுங்கொலோ. 1

கருத்த னேகரு தார்புரம் மூன்றெய்த
ஒருத்த னேஉமை யாளொரு கூறனே
திருத்த னேதிரு ஆரூரெந் தீவண்ண
அருத்த வென்னெனை யஞ்சலென் னாததே. 2

மறையன் மாமுனி வன்மரு வார்புரம்
இறையின் மாத்திரை யில்லெரி யூட்டினான்
சிறைவண் டார்பொழில் சூழ்திரு ஆரூரெம்
இறைவன் தானெனை யேன்றுகொ ளுங்கொலோ. 3

பல்லில் ஓடுகை யேந்திப் பலிதிரிந்
தெல்லி வந்திடு காட்டெரி யாடுவான்
செல்வம் மல்கிய தென்திரு ஆரூரான்
அல்லல் தீர்த்தெனை யஞ்சலெ னுங்கொலோ. 4

---

[7] பறித்த - பிரமன் தலையினின்று கொய்த. [8] அசும்பு - நீர் ஊற்று. [9] சூதம் - மாமரம். [10] அல்லிமாது - திருமகள்.

குருந்த மேறிக் கொடிவிடு மாதவி
விரிந்த லர்ந்த விரைகமழ் தேன்கொன்றை
திருந்து மாடங்கள் சூழ்திரு ஆரூரான்
வருந்தும் போதெனை வாடலெ னுங்கொலோ. 5

வார்கொள் மென்முலை யாளொரு பாகமா
வூர்க ளாரிடு பிச்சைகொள் உத்தமன்
சீர்கொள் மாடங்கள் சூழ்திரு ஆரூரான்
ஆர்க ணாவெனை அஞ்சலெ னாததே.[1] 6

வளைக்கை மங்கைநல் லாளையோர் பாகமாத்
துளைக்கை யானை துயர்படப் போர்த்தவன்
திளைக்குந் தண்புனல் சூழ்திரு ஆரூரான்
இளைக்கும் போதெனை யென்றுகொ ளுங்கொலோ. 7

இலங்கை மன்னன் இருபது தோளிறக்
கலங்கக் கால்விர லாற்கடைக் கண்டவன்
வலங்கொள் மாமதில் சூழ்திரு ஆரூரான்
அலங்கல் தந்தெனை யஞ்சலெ னுங்கொலோ. 8

நெடிய மாலும் பிரமனும் நேர்கிலாப்
படிய வன்பனி மாமதிச் சென்னியான்
செடிகள் நீக்கிய தென்திரு ஆரூரெம்
அடிகள் தானெனை யஞ்சலெ னுங்கொலோ. 9

மாசு மெய்யினர் வண்டுவ ராடைகொள்
காசை போர்க்குங் கலதி[2] கள் சொற்கொளேல்
தேசம் மல்கிய தென்திரு ஆரூரெம்
ஈசன் தானெனை யென்றுகொ ளுங்கொலோ. 10

வன்னி கொன்றை மதியொடு கூவிளம்
சென்னி வைத்த பிரான்திரு ஆரூரை
மன்னு காழியுள் ஞானசம் பந்தன்வாய்ப்
பன்னு பாடல்வல் லார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—வன்மீகநாதர், (புற்றிடங்கொண்டநாதர்), வீதிவிடங்கர்;
தேவி—அல்லியங்கோதை.

---

[1] அஞ்சலெனுங்கொலோ என்றும் பாடம். [2] கலதி - மூதேவி.

## 70. திருவிளமர்

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மத்தக மணிபெற மலர்வதோர் மதிபுரை நுதல்கரம்
ஒத்தக நகமணி மிளிர்வதோர் அரவினர்[1] ஒளிகிளர்
அத்தகவு[2] டிதொழ அருள்பெறு கண்ணொடும்[3] உமையவள்
வித்தகர் உறைவது விரிபொழில் வளநகர் விளமரே. 1

பட்டில கியமுலை அரிவையர் உலகினில் இடுபலி
ஒட்டில கிணைமர வடி[4] யினர் உமையுறு வடிவினர்
சிட்டி[5] ல கழகிய பொடியினர் விடைமிசை சேர்வதோர்
விட்டில கழகொளி பெயரவர் உறைவது விளமரே. 2

அங்கதிர் ஒளியினர் அரையிடை மிளிர்வதோர் அரவொடு
செங்கதி ரெனநிற மனையதோர் செழுமணி மார்பினர்
சங்கதிர் பறைகுழல் முழவினொ டிசைதரு சரிதையர்
வெங்கதி ருறுமழு வுடையவ ரிடமெனில் விளமரே. 3

மாடம தெனவளர் மதிலவை[6] யெரிசெய்வர் விரவுசீர்ப்
பீடென வருமறை யுரைசெய்வர் பெரியபல் சரிதைகள்
பாடலர் ஆடிய சுடலையில் இடமுற நடம்நவில்
வேடம துடையவர் வியன்நக ரதுசொலில் விளமரே. 4

பண்டலை மழலைசெ யாழென மொழியுமை பாகமாக்
கொண்டலை குரைகழ லடிதொழு மவர்வினை குறுகிலர்
விண்டலை யமரர்கள் துதிசெய அருள்புரி விறலினர்
வெண்டலை பலிகொளும் விமலர்தம் வளநகர் விளமரே. 5

மனைகள்தொ றிடுபலி யதுகொள்வர் மதிபொதி சடையினர்
கனைகடல் அடுவிடம் அமுதுசெய் கறையணி மிடறினர்
முனைகெட வருமதிள் எரிசெய்த அவர்கழல் பரவுவார்
வினைகெட அருள்புரி தொழிலினர் செழுநகர் விளமரே. 6

---

1 அரவினர் - பதஞ்சலி என்ற குறிப்பு. 2 அத்தகவு - அத்தன்மைத்தாகிய. 3 கணனொடும் என்றும் பாடம். 4 மரஅடி - மரத்தால் செய்த பாதக்குறடு. 5 சிட்டு - சிட்டம்; தூய்மை; ஞானம். 6 மதிலவை - முப்புரத்தொருதி. அவை - தொகுதி; சுட்டுப் பெயருமாம்.

நெறிகமழ் தருமுரை யுணர்வினர்[7] புணர்வுறு மடவரல்
செறிகமழ் தருமுரு வுடையவர் படைபல பயில்பவர்
பொறிகமழ் தருபட அரவினர் விரவிய சடைமிசை
வெறிகமழ் தருமலர் அடைபவர் இடமெனில் விளமரே. 7

தெண்கடல் புடையணி நெடுமதில் இலங்கையர் தலைவனைப்
பண்பட வரைதனில் அடர்செய்த பைங்கழல் வடிவினர்
திண்கட லடைபுனல் திகழ்சடை புகுவதொர் சேர்வினர்
விண்கடல் விடமலி யடிகள்தம் வளநகர் விளமரே. 8

தொண்டசை யுறவரு துயருறு காலனை மாள்வுற
அண்டல்செய் தி[8]ருவரை வெருவுற ஆரழ லாயினர்
கொண்டல்செய் தருதிரு மிடறின ரிடமெனில் அளியினம்
விண்டிசை யுறுமலர் நறுமது விரிபொழில் விளமரே. 9

ஒள்ளியர் தொழுதெழ வுலகினில் உரைசெயும் மொழிபல
கொள்ளிய களவினர்[9] குண்டிகை யவர்தவம் அறிகிலார்[10]
பள்ளி[11]யை மெய்யெனக் கருதன்மின் பரிவொடு பேணுவீர்
வெள்ளிய பிறையணி சடையினர் வளநகர் விளமரே. 10

வெந்தவெண் பொடியணி யடிகளை விளமருள் விகிர்தரைச்
சிந்தையுள் இடைபெற வுரைசெய்த தமிழிவை செழுவிய
அந்தணர் புகலியுள் அழகமர் அருமறை ஞானசம்
பந்தன மொழியிவை உரைசெயு மவர்வினை பறையுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பதஞ்சலிமனோகரர்; தேவி—யாழினுமென்மொழியாள்.

---

[7] நெறிகமழ் தருமுரை உணர்வினர் - சைவத்தவ நெறியில் விளங்கும் உரையிலும் உணர்விலும் இருப்பவர். [8] தொண்டு அசைவுற - தொண்டராகிய மார்க்கண்டேயர் வருந்தும்படி; அண்டல் செய்து - கால் ஒற்றி உதைத்து. [9] ஒள்ளியர் - தெளிந்த ஒழுக்கமும் அறிவும் உடையோர்; மொழிபல கொள்ளிய களவினர் - வடமொழி, தமிழ்மொழி முதலிய பல மொழிகளிலும் உள்ள உயர்ந்த பொருள்களைக் களவு செய்து தம்மதாகக் காட்டும் திருட்டுத் தவமுடையார். [10] அறிவிலார் என்றும் பாடம். [11] பள்ளி - சமண குருமார் வாழும் இடம்.

# 71. திருக்கரவீரம்*

**பண் - பழந்தக்கராகம் [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

அரியும் நம்வினை யுள்ளன ஆசற
வரிகொள் மாமணி போற்கண்டம்
கரிய வன்திக ழுங்கர வீரத்தெம்
பெரிய வன்கழல் பேணவே. 1

தங்கு மோ[1] வினை தாழ்சடை மேலவன்
திங்க ளோடுடன் சூடிய
கங்கை யான்திக ழுங்கர வீரத்தெம்
சங்க ரன்கழல் சாரவே. 2

ஏதம் வந்தடை யாஇனி நல்லன
பூதம் பல்படை யாக்கிய
காத லான்திக ழுங்கர வீரத்தெம்
நாதன் பாதம் நணுகவே. 3

பறையும் நம்வினை யுள்ளன பாழ்பட
மறையும் மாமணி போற்கண்டம்
கறைய வன்திக ழுங்கர வீரத்தெம்
இறைய வன்கழ லேத்தவே. 4

பண்ணி னார்மறை பாடலன் ஆடலன்
விண்ணி னார்மதி லெய்தமுக்
கண்ணி னன்உறை யுங்கர வீரத்தை
நண்ணு வார்வினை நாசமே. 5

நிழலி னார்மதி சூடிய நீள்சடை[2]
அழலி னாரழ லேந்திய
கழலி னாருறை யுங்கர வீரத்தைத்
தொழவல் லார்க்கில்லை துக்கமே. 6

வண்டர்[3] மும்மதில் மாய்தர எய்தவன்
அண்டன் ஆரழல் போலொளிர்

---

* 'கரையபுரம்' என வழங்கப்பெறும். இது, கரம் (கழுதை) பூசித்தமையால் பெற்ற பெயர் ஆகும். கௌதமர் பூசித்துப் பேறு பெற்ற தலமுமாம். [1] தங்குமோ-தங்காது; ஓ: எதிர்மறை. [2] சூடினன் நீள்சடை என்றும் பாடம். [3] வண்டர் - தீயோர்.

கண்ட னுரு[4] றை யுங்கரவீ ரத்துத்
தொண்டர் மேல்துயர் தூரமே. 7

புனலி லங்கையர் கோன்முடி பத்திறச்
சினவ லாண்மை செகுத்தவன்
கனல வன்உறைகின்ற கரவீரம்
எனவல் லார்க்கிட ரில்லையே. 8

வெள்ளத் தாமரை யானொடு மாலுமாய்த்
தெள்ளத் தீத்திர ளாகிய
கள்ளத் தான்உறை யுங்கர வீரத்தை
உள்ளத் தான்வினை ஓயுமே. 9

செடி[5] அமணொடு சீவரத் தாரவர்
கொடிய வெவ்வுரை கொள்ளேன்மின்[6]
கடிய வன்[7] உறைகின்ற கரவீரத்
தடிய வர்க்கில்லை யல்லலே. 10

வீடி லான்[8] விளங் குங்கர வீரத்தெம்
சேடன் மேற்கசி வா[9] ல்தமிழ்
நாடு ஞானசம் பந்தன சொல்லிவை
பாடு வார்க்கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கரவீரநாதர்; தேவி—பிரத்தியட்சமின்னம்மை.

---

## 72. திருப்பெருவேளூர் *

பண் - பஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அண்ணா[1] வுங் கழுக்குன்றும் ஆயமலை யவைவாழ்வார்
விண்ணோரும் மண்ணோரும் வியந்தேத்த அருள்செய்வார்

---

[4] கண்டனார் - கழுத்தை யுடையவர்; பாசச்சேதம் செய்பவர். [5] செடி - கீழாயின. [6] கொள்ளன்மின் என்றும் பாடம். [7] கடியவன் - தீயோருக்குக் கடுமையாக விளங்குபவன். [8] வீடிலான் - அழியாதவன். [9] கசிவு - உள்ளூறும் அன்பு. * 'காட்டூர் ஐயன்பேட்டை' என வழங்கப்பெறும். [1] அண்ணா - திருவண்ணாமலை.

கண்ணவார் உலகுக்குக் கருத்தானார்[2] புரமெரித்த
பெண்ஆணும் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 1
கருமானின் உரியுடையர் கரிகாடர் இமவானார்
மருமானார் இவரென்றும் மடவாளோ டுடனாவர்
பொருமான விடையூர்வ துடையார்வெண் பொடிப்பூசும்
பெருமானார் பிஞ்ஞகனார் பெருவேளூர் பிரியாரே. 2
குணக்குந்தென் திசைக்கண்ணுங் குடபாலும் வடபாலும்
கணக்கென்ன அருள்செய்வார் கழிந்தோர்க்கு மொழிந்தோர்க்கும்[3]
வணக்கஞ்செய் மனத்தராய் வணங்காதார் தமக்கென்றும்
பிணக்கஞ்செய் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 3
இறைக்கொண்ட வளையாளோ டிருகூறு யொருகூறு
மறைக்கண்டத் திறைநாவர்[4] மதிலெய்த சிலைவலவர்
கறைக்கொண்ட மிடறுடையர் கனல்கிளருஞ் சடைமுடிமேல்
பிறைக்கொண்ட பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 4
விழையாதார் விழைவார்போல் விகிர்தங்கள்[5] பலபேசிக்
குழையாதார் குழைவார்போற் குணநல்ல பலகூறி
அழையாவும் அரற்றுவும் அடிவீழ்வார் தமக்கென்றும்
பிழையாத பெருமானார் பெருவேளூர் பிரியாரே.[6] 5
விரித்தார்நான் மறைப்பொருளை உமையஞ்ச விறல்வேழம்
உரித்தாராம் உரிபோர்த்து மதில்மூன்றும் ஒருகணையால்
எரித்தாராம் இமைப்பளவில் இமையோர்கள் தொழுதிறைஞ்சப்
பெருத்தாரெம் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 6
மறப்பிலா அடிமைக்கண் மனம்வைப்பார் தமக்கெல்லாம்
சிறப்பிலார் மதிலெய்த சிலைவல்லார் ஒருகணையால்
இறப்பிலார் பிணியில்லார் தமக்கென்றுங் கேடிலார்
பிறப்பிலாப் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 7
எரியார்வேற் கடற்றானை யிலங்கைக்கோன் தனைவீழ
முரியார்ந்த தடந்தோள்கள் அடர்த்துகந்த முதலாளர்

---

[2] உலகுக்கோர் கருத்தனார் என்றும் பாடம். [3] கழிந்தோர்-மலம் நீங்கிய முத்தர். ஒழிந்தோர் - பெத்தான்மாக்கள். [4] கண்டத்தொரு நாவர் என்றும் பாடம். [5] விகிர்தங்கள் - வேறுபாடான மொழிகள். [6] இச்செய்யுள், கடவுளை வழிபட்டால் பொய் அன்புக்கும் பரிசு உண்டு என்பதை அறிவிக்கும்.

வரியார்வெஞ் சிலைபிடித்து மடவாளை யொருபாகம்
பிரியாத பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 8

சேணியலும் நெடுமாலுந் திசைமுகனுஞ் செருவெய்திக்
காணியல்பை யறிவிலராய்க் கனல்வண்ணா அடியிணைக்கீழ்
நாணியவர் தொழுதேத்த நாணமே யருள்செய்து
பேணிய[9] எம் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 9

புற்றேறி யுணங்குவார் புகையார்ந்த துகில்போர்ப்பார்
சொற்றேற வேண்டாம்நீர் தொழுமின்கள் சுடர்வண்ணம்
மற்றேரும்[10] பரிமாவும் மதகளிறும் இவையொழியப்
பெற்றே[11] றும் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 10

பைம்பொன்சீர் மணிவாரிப் பலவுஞ்சேர் கனியுந்தி
அம்பொன்செய் மடவரலார் அணிமல்கு பெருவேளூர்
நம்பன்றன் கழல்பரவி நவில்கின்ற மறைஞான
சம்பந்தன் தமிழ்வல்லார்க் கருவினைநோய் சாராவே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பிரியாதநாதர், பேணினார்; தேவி—ஏலவார்குழலி.

---

## 73. திருக்குடவாயில் *

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

திகழுந் திருமா லொடுநான் முகனும்
புகழும் பெருமான் அடியார் புகல
மகிழும் பெருமான் குடவாயில் மன்னி
நிகழும் பெருங்கோ யில்[1] நிலா யவனே. 1

ஓடுந் நதியும் மதியோ டுரகம்[2]
சூடுஞ் சடையன் விடைதொல் கொடிமேல்

---

[9] பேணிய - பேணினார்; தலத்துச்சுவாமியின் பெயர். [10] மற்றேரும் - மல்தேரும் - போருக்கு அங்கமாகிய தேரும். [11] பெற்று - இடபம். * தம்மை வழிபட்ட திருணபிந்து முனிவருக்கு இறைவன் குடத்தின் வாயிலிருந்து வெளிப்பட்டு, அவருடைய குட்டநோயைத் தீர்த்தருளிய காரணம்பற்றி, குடவாயில் எனப் பெயர் பெற்றது. [1] பெருங்கோயில் - மாடக்கோயில். [2] உரகம் - பாம்பு.

கூடுங் குழகன் குடவா யில்தனில்
நீடும் பெருங்கோ யில்நிலா யவனே. 2

கலை[3] யான் மறையான் கனலேந் துகையான்
மலையா ளவள்பா கம்மகிழ்ந்த பிரான்
கொலையார் சிலையான் குடவா யில்தனில்
நிலையார் பெருங்கோ யில்நிலா யவனே. 3

சுலவுஞ் சடையான் சுடுகா டிடமா
நலமென் முலையாள் நகைசெய் யநடம்
குலவுங் குழகன் குடவா யில்தனில்
நிலவும் பெருங்கோ யில்நிலா யவனே. 4

என்றன் உளமே வியிருந் தபிரான்
கன்றன் மணிபோல் மிடறன் கயிலைக்
குன்றன் குழகன் குடவா யில்தனில்
நின்ற பெருங்கோ யில்நிலா யவனே. 5

அலைசேர் புனலன் அனலன் அமலன்
தலைசேர் பலியன் சதுரன்[4] விதிரும்
கொலைசேர் படையன் குடவா யில்தனில்
நிலைசேர் பெருங்கோ யில்நிலா யவனே. 6

அறையார் கழலன் அழலன் இயலின்
பறையாழ் முழவும் மறைபா டநடம்
குறையா அழகன் குடவா யில்தனில்
நிறையார் பெருங்கோ யில்நிலா யவனே. 7

வரையார் திரள்தோள் அரக்கன் மடியவ்
வரையா ரவொர்கால் விரல்வைத் தபிரான்
வரையார் மதில்சூழ் குடவா யில்மன்னும்
வரையார் பெருங்கோ யில்மகிழ்ந் தவனே. 8

பொன்னொப் பவனும் புயலொப் பவனும்
தன்னொப் பறியாத் தழலாய் நிமிர்ந்தான்
கொன்னற் படையான் குடவா யில்தனில்
மன்னும் பெருங்கோயில் மகிழ்ந் தவனே. 9

---

[3] கலை - மான்; ஞானக் கலையுமாம். [4] தலைசேர் பலியார் சதுரன் என்றும் பாடம். சதுரன் - முழுவலிமை யுடையவன்.

வெயிலின் நிலையார் விரிபோர் வையினர்[5]
பயிலும் உரையே[6] பகர்பா விகள்பால்
குயிலன் குழகன்[7] குடவா யில்தனில்
உயரும் பெருங்கோ யிலுயர்ந் தவனே. 10

கடுவாய்[8] மலிநீர் குடவா யில்தனில்
நெடுமா பெருங்கோ யில்நிலா யவனைத்
தடமார் புகலித் தமிழார் விரகன்
வடமார் தமிழ்வல் லவர்நல் லவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரம்* [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கலைவாழும் அங்கையீர் கொங்கையாருங் கருங்கூந்தல்
அலைவாழுஞ் செஞ்சடையில் அரவும்பிறையும் அமர்வித்தீர்
குலைவாழை கமுகம்பொன் பவளம்பழுக்குங் குடவாயில்
நிலைவாழுங் கோயிலே[1] கோயிலாக நின்றீரே.[2] 1

அடியார்ந்த பைங்கழலுஞ் சிலம்பும்ஆர்ப்ப[3] அங்கையில்
செடியார்ந்த[4] வெண்டலையொன் றேந்தியுலகம் பலிதேர்வீர்
குடியார்ந்த மாமறையோர் குலாவியேத்துங் குடவாயில்
படியார்ந்த கோயிலே கோயிலாகப் பயின்றீரே. 2

கழலார்பூம் பாதத்தீர் ஓதக்கடலில் விடமுண்டன்
றழலாருங் கண்டத்தீர் அண்டர்போற்றும் அளவினீர்
குழலார வண்டினங்கள் கீதத்தொலிசெய் குடவாயில்
நிழலார்ந்த கோயிலே[5] கோயிலாக நிகழ்ந்தீரே. 3

---

[5] வெயிலின் நிலையார் - சமணர். வெயிலில் நிற்றல், சுடுபாறையில் கிடத்தல் முதலாகிய சமணரது தவநிலையாம். விரிபோர்வையர்-புத்தர். [6] முறையே என்றும் பாடம். [7] குயிலன் - குயிலான் - பதிதல் இல்லாதவன்; குயிலின் குழகன் என்றும் பாடம். [8] கடுவாய் - ஆற்றின் பெயர்; இதனைக் குடமுருட்டி என்பர். *இப்பதிகத்தில் 9-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1] கோயிலே, ஏ: தோற்றம்; பிரிநிலையுமாம். [2] நின்றீரே - நிலைபெற்று விளங்க வீற்றிருந்தீரே; ஏ: தேற்றம். [3] ஆர்க்க என்றும் பாடம். [4] செடியார்ந்த - இழிவடைந்த. [5] நிழலாருங் கோயிலே என்றும் பாடம்.

மறியாருங் கைத்தலத்தீர் மங்கைபாக மாகச்சேர்ந்
தெறியாரும் மாமழுவும் எரியுமேந்துங் கொள்கையீர்
குறியார வண்டினங்கள் தேன்மிழற்றுங் குடவாயில்
நெறியாருங் கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே.[6] 4

இழையார்ந்த கோவணமுங் கீளும்எழிலார் உடையாகப்
பிழையாத சூலம்பெய் தாடல்பாடல் பேணினீர்
குழையாரும் பைம்பொழிலும் வயலுஞ்சூழ்ந்த குடவாயில்
விழவார்ந்த கோயிலே கோயிலாக மிக்கீரே. 5

அரவார்ந்த திருமேனி யானவெண்ணீ றாடினீர்
இரவார்ந்த பெய்பலிகொண் டிமையோரேத்த நஞ்சுண்டீர்
குரவார்ந்த பூஞ்சோலை வாசம்வீசுங் குடவாயில்
திருவார்ந்த கோயிலே கோயிலாகத் திகழ்ந்தீரே. 6

பாடலார் வாய்மொழியீர் பைங்கண்வெள்ளே றூர்தியீர்
ஆடலார் மாநடத்தீர் அரிவைபோற்றும் ஆற்றலீர்
கோடலார் தும்பிமுரன் றிசைமிழற்றுங் குடவாயில்
நீடலார் கோயிலே கோயிலாக நிகழ்ந்தீரே. 7

கொங்கார்ந்த பைங்கமலத் தயனுங்குறளாய்[7] நிமிர்ந்தானும்
அங்காந்து தள்ளாட அழலாய்நிமிர்ந்தீர் இலங்கைக்கோன்
தங்காதல் மாமுடியுந் தாளும்அடர்த்தீர் குடவாயில்
பங்கார்ந்த கோயிலே கோயிலாகப் பரிந்தீரே. 8-9

தூசார்ந்த சாக்கியருந் தூய்மையில்லாச் சமணரும்
ஏசார்ந்த புன்மொழிநீத் தெழில்கொள்மாடக் குடவாயில்
ஆசாரஞ் செய்மறையோர் அளவிற்குன்றா தடிபோற்றத்
தேசார்ந்த கோயிலே கோயிலாகச் சேர்ந்தீரே. 10

நளிர்பூந் திரைமல்கு காழிஞான சம்பந்தன்
குளிர்பூங் குடவாயிற் கோயில்மேய கோமானை
ஒளிர்பூந் தமிழ்மாலை உரைத்தபாடல் இவைவல்லார்
தளர்வா[8]ன தானொழியத் தகுசீர்வானத்[9] திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கோணேச்சுவரர்; தேவி—பெரியநாயகி.

---

[6] நினைந்தீரே என்றும் பாடம். [7] குறளாய் - வாமனனாய்.
[8] தளர்வு-மலநோய். [9] தகுசீர்வானம் - சிவனுலகு.

## 74. திருச்சேறை *

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முறியுறு நிறமல்கு முகில்முலை மலைமகள் வெருவமுன்
வெறியுறு மதகரி யதள்பட வுரிசெய்த விறலினர்
நறியுறும் இதழியின் மலரொடு நதிமதி நகுதலை
செறியுறு சடைமுடி யடிகள்தம் வளநகர் சேறையே. 1

புனமுடை நறுமலர் பலகொடு தொழுவதொர் புரிவினர்
மனமுடை யடியவர் படுதுயர் களைவதொர் வாய்மையர்
இனமுடை மணியினொ டரசிலை யொளிபெற மிளிர்வதோர்
சினமுதிர் விடையுடை யடிகள்தம் வளநகர் சேறையே. 2

புரிதரு சடையினர் புலியதள் அரையினர் பொடிபுல்கும்
எரிதரும் உருவினர் இடபம தேறுவ ரீடுலா
வரிதரு வளையின ரவரவர் மகிழ்தர மனைதொறும்
திரிதரு சரிதையர் உறைதரு வளநகர் சேறையே. 3

துடிபடும் இடையுடை மடவர ளுடனொரு பாகமா
இடிபடு குரலுடை விடையினர் படமுடை யரவினர்
பொடிபடும் உருவினர் புலியுரி பொலிதரும் அரையினர்
செடிபடு சடைமுடி யடிகள்தம் வளநகர் சேறையே. 4

அந்தர முழிதரு திரிபுர மொருநொடி யளவினில்
மந்தர வரிசிலை யதனிடை யரவரி வாளியால்
வெந்தழி தரவெய்த விடலையர் விடமணி மிடறினர்
செந்தழல் நிறமுடை யடிகள்தம் வளநகர் சேறையே. 5

மத்தர[1] முறுதிறன் மறவர்தம் வடிவுகொ டுருவுடைப்
பத்தொரு பெயருடை விசயனை[2] அசைவுசெய் பரிசினல்
அத்திரம்[3] அருளும்நம் அடிகள தணிகிளர் மணியணி
சித்திர வளநகர் செறிபொழில் தழுவிய சேறையே. 6

---

* 'உடையார் கோவில்' என வழங்கப்பெறும். [1] மத்தரம் - கொடுமை. [2] பத்தொருபெயருடை விசயனை - பத்துப் பேர்களை யுடைய அருச்சுனனை; இவனை வில்லிப்புத்தூராரும், 'ஐயிருநாமத் தோனும்' என்று கூறியுள்ளார்; "பெயர்கள் பத்துடை மன்னன்" (தேவாரம் - கோகரணம்). [3] அத்திரம் - பாசுபதாத்திரம்.

பாடினர் அருமறை முறைமுறை பொருளென அருநடம்
ஆடினர் உலகிடை அலர்கொடும் அடியவர் துதிசெய
வாடினர் படுதலை யிடுபலி யதுகொடு மகிழ்தரும்
சேடர்தம் வளநகர் செறிபொழில் தழுவிய சேறையே. 7

கட்டுர மதுகொடு கயிலைநன் மலைநலி[4] கரமுடை
நிட்டுரன் உடலொடு நெடுமுடி யொருபதும் நெரிசெய்தார்
மட்டுர மலரடி யடியவர் தொழுதெழ அருள்செயும்
சிட்டர்தம் வளநகர் செறிபொழில் தழுவிய சேறையே. 8

பன்றியர் பறவையர் பரிசுடை வடிவொடு படர்தர
அன்றிய அவரவர் அடியொடு முடியவை யறிகிலார்
நின்றிரு புடைபட நெடுவெரி நடுவெயொர் நிகழ்தரச்
சென்றுயர் வெளிபட அருளிய அவர்நகர் சேறையே. 9

துகடுறு விரிதுகில் உடையவர் அமணெனும் வடிவினர்
விகடம துறுசிறு மொழியவை நலமில வினவிடல்
முகிழ்தரும் இளமதி யரவொடும் அழகுற முதுநதி
திகழ்தரு சடைமுடி யடிகள்தம் வளநகர் சேறையே. 10

கற்றநன் மறைபயில் அடியவர் அடிதொழு கவினுறு
சிற்றிடை யவளொடு மிடமென வுறைவதொர் சேறைமேல்
குற்றமில் புகலியுள் இகலறு ஞானசம் பந்தன
சொற்றக வுறமொழி பவரழி விலர்துயர் தீருமே.[5] 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—செந்நெறியப்பர் ; தேவி—ஞானவல்லி.

## 75. திருநாலூர்மயானம் *

பண் - சீகாமரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**பா**லூரும் மலைப்பாம்பும் பனிமதியும் மத்தமும்
மேலூருஞ் செஞ்சடையான் வெண்ணூல்சேர் மார்பினன்

[4] மலைமலி என்றும் பாடம். [5] துயர்தீர்வரே என்றும் பாடம்.

* இது நாலூர் எனவும், நாலூர்மயானம் எனவும் இரண்டு பதிகளாகவும் உள்ளது. நாலூர் மயானத்திற்குத் தெற்கே ஒரு மைலில் நாலூர் என்னும் ஊர் உள்ளது.

நாலூர் மயானத்து நம்பான்றன் அடிநினைந்து
மாலூருஞ்[1] சிந்தையர்பால் வந்தூரா மறுபிறப்பே. 1

சூடும் பிறைச்சென்னிச் சூழ்கா டிடமாக
ஆடும் பறைசங் கொலி[2]யோ டழகாக
நாடுஞ் சிறப்போவா நாலூர் மயானத்தைப்
பாடுஞ் சிறப்போர்பாற் பற்ருவாம் பாவமே. 2

கல்லால் நிழல்மேவிக் காமுறுசீர் நால்வர்க்கன்
றெல்லா அறனுரையும் இன்னருளாற் சொல்லினன்[3]
நல்லார் தொழுதேத்தும் நாலூர் மயானத்தைச்
சொல்லா தவரெல்லாஞ் செல்லாதார் தொல்நெறிக்கே.[4] 3

கோலத்தார் கொன்றையான் கொல்புலித்தோ லாடையான்
நீலத்தார் கண்டத்தான் நெற்றியோர் கண்ணினன்
ஞாலத்தார் சென்றேத்தும் நாலூர் மயானத்தில்
சூலத்தா னென்பார்பால் சூழாவாந் தொல்வினையே. 4

கறையார் மணிமிடற்றன் காபாலி கட்டங்கன்[5]
பிறையார் வளர்சடையான் பெண்பாகன் நண்பாய
நறையார் பொழில்புடைசூழ் நாலூர் மயானத்தெம்
இறையானென் றேத்துவார்க் கெய்துமாம் இன்பமே. 5

கண்ணார் நுதலான் கனலா டிடமாகப்
பண்ணார் மறைபாடி யாடும் பரஞ்சோதி
நண்ணார் புரமெய்தான் நாலூர் மயானத்தை
நண்ணா தவரெல்லாம் நண்ணாதார் நன்னெறியே. 6

கண்பாவு வேகத்தாற் காமனைமுன் காய்ந்துகந்தான்
பெண்பாவு பாகத்தான் நாகத்தோல் ஆகத்தான்
நண்பாவு குணத்தோர்கள்[6] நாலூர் மயானத்தை
எண்பாவு சிந்தையார்க் கேலா இடர்தானே. 7

பத்துத் தலையோனைப் பாதத் தொருவிரலால்
வைத்து மலையடர்த்து வாளோடு நாள்கொடுத்தான்

---

[1] மாலூர்தல் - விருப்பமிகுதல். [2] பறைச்சங்கொலி என்றும் பாடம். [3] இவ்வடிகள் தட்சிணாமூர்த்தியின் திருவுருவத்தைக் குறிப்பன. [4] தொல்நெறி - பழமையாகிய சிவநெறி. [5] கட்டங்கம் - மழு. [6] நண்பார் குணத்தோர்கள் என்றும் பாடம்.

நத்தின் ஒலியோவா நாலூர் மயானத்தென்
அத்தன் அடிநினைவார்க் கல்லல் அடையாவே. 8
மாலோடு நான்முகனும் நேட வளரெரியாய்
மேலோடு கீழ்காணா மேன்மையான் வேதங்கள்
நாலோடும் ஆறங்கம் நாலூர் மயான[7]த்தெம்
பாலோடு நெய்யாடி பாதம் பணிவோமே. 9
துன்பாய மாசார்[8] துவராய போர்வையார்
புன்பேச்சுக் கேளாதே புண்ணியனை நண்ணுமின்கள்
நண்பாற்[9] சிவாய[10] வெனா நாலூர் மயானத்தே
இன்பா யிருந்தானை யேத்துவார்க் கின்பமே. 10
ஞாலம் புகழ்காழி ஞானசம் பந்தன்றான்
நாலு மறையோது நாலூர் மயானத்தைச்
சீலம் புகழாற் சிறந்தேத்த வல்லாருக்
கேலும் புகழ்வானத் தின்பா யிருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—பலாசவனநாதர்; தேவி—பெரியநாயகி.

## 76. திருவிரும்பூளை*

விஞவுரை

பண் - இந்தளம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சீரார் கழலே தொழுவீ ரிதுசெப்பீர்
வாரார் முலைமங் கையொடும் முடனாகி

[7] வேதங்கள் நாலோடும் ஆறங்க நாலூர் மயானம் - சங்கார காலத்தின் பின் உலகங்களைப் படைக்கும் பொருட்டு வீணை ஒலி செய்து வேதங்களைத் தோற்றுவிக்கும் இடமாய் உள்ள நாலூர் மயானம். [8] மாசார் - அழுக்குடையவர். [9] நண்பால் - அன்பினால். [10] சிவாய - இது சுத்த பஞ்சாக்கரம். எனா - என்று துதித்து. அன்பாற் சிவாய என்றும் பாடம். * 'ஆலங்குடி' என வழங்கப் பெறும். பூளை என்ற செடி தலமரமாதலால் இப்பெயர் பெற்றது. இது பூளைவனம் எனவும் பெயர் பெறும். ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் மறைந்துபோயிற்று. ஒவ்வொரு பாடல்தோறும் வினாவும் உரையும் வருதலைக் காண்க.

ஏரா ரிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
காரார் கடல்நஞ் சமுதுண் டகருத்தே. 1

தொழலார் கழலே தொழுதொண் டர்கள்சொல்லீர்
குழலார் மொழிக்கோல் வளையோ டுடனாகி
எழிலா ரிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
கழல்தான் கரிகா னி[1] டையா டுகருத்தே. 2

அன்பா லடிகை தொழுவீ ரறியீரே[2]
மின்போல் மருங்குல் மடவா ளொடுமேவி
இன்பா யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
பொன்போற் சடையிற் புனல்வைத்த பொருளே. 3

நச்சி[3] த் தொழுவீர் கள்நமக் கிதுசொல்லீர்
கச்சிப் பொலிகா மக்கொடி[4] யுடன்கூடி
இச்சித் திரும்பூ ளையிடங் கொண்டஈசன்
உச்சித் தலை[5] யிற் பலிகொண் டுழலூணே. 4

சுற்றார்ந் தடியே தொழுவீ ரிதுசொல்லீர்
நற்றாழ் குழல்நங் கையொடும் உடனாகி
எற்றே யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
புற்றா டரவோ டென்பூண் டபொருளே. 5

தோடார் மலர்தூய்த் தொழுதொண் டர்கள்சொல்லீர்
சேடார் குழற்சே யிழையோ டுடனாகி
ஈடா யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
காடார் கடுவே டுவனா னகருத்தே. 6-7

ஒருக்கும்[6] மனத்தன் பருள்ளீ ரிதுசொல்லீர்
பருக்கைம் மதவே ழமுரித் துமையோடும்
இருக்கை யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
அரக்கன் உரந்தீர்த் தருளாக் கியவாறே. 8

துயரா யினநீங் கி[7]த்தொழுந் தொண்டர்சொல்லீர்
கயலார் கருங்கண் ணியொடும் உடனாகி

---

[1] கரிகான் - சுடுகாடு. [2] தொழுவீரறிரென என்றும் பாடம். [3] நச்சி-விரும்பி. [4] காமக்கொடி - காமாட்சியம்மை. [5] உச்சித்தலை - (கபாலம்) மண்டையோடு. [6] ஒருக்கும் - ஒன்றுபடுத்தும். [7] துயராயின நீங்கி - துன்பந்தரும் யான் எனது என்னும் செருக்குநீங்கி.

இயல்பா யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
முயல்வா ரிருவர்[7]க் கெரியா கியமொய்ம்பே. 9

துணைநன் மலர்தூய்த் தொழுந்தொண் டர்கள்சொல்லீர்
பணைமென் முலைப்பார்ப் பதியோ டுடனாகி
இணையில் லிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
அணைவில் சமண்சாக் கியமாக் கியவாறே. 10

எந்தை யிரும்பூ ளையிடங் கொண்டஈசன்
சந்தம் பயில்சண் பையுண்ஞா னசம்பந்தன்
செந்தண் தமிழ்செப் பியபத் திவைவல்லார்
பந்தம் மறுத்தோங் குவர்பான் மையினாலே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—காசியாரணியர்; தேவி—உமையம்மை, ஏலவார்குழலி.

---

## 77. திருஅரதைப்பெரும்பாழி *

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பைத்தபாம் போடரைக் கோவணம் பாய்புலி
மொய்த்தபேய் கண்முழக் கம்முது காட்டிடை
நித்தமா கந்நட மா[1]டிவெண் ணீறணி
பித்தர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 1

கயலசே லகருங் கண்ணியர் நாடொறும்
பயலை[2]கொள் ளப்பலி தேர்ந்துழல் பான்மையார்
இயலைவா னோர்நினைந் தோர்களுக் கெண்ணரும்
பெயரர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 2

கோடல்சா லவ்வுடை யார்கொலை யானையின்
மூடல்[3]சா லவ்வுடை யார்முளி[4] கானிடை

---

[7] இருவர் - பிரமவிஷ்ணு என்னும் இருவர். * 'அரித்துவார மங்கலம்' என வழங்கப்பெறும். வராகமூர்த்தியின் கொம்பைச் சிவன் பறித்தணிந்த பதி என்றும், அவ்வராகமூர்த்தி பூசித்துப் பேறுபெற்ற இடம் என்றும் வரலாறு கூறும். [1] நடம்-ஐந்தொழில் நடனம். [2] பயலை - பசலை; வேட்கை முதலியவற்றால் மெய்பசத்தல். [3] மூடல் - உரிப்போர்வை. [4] முளி - வெந்த.

ஆடல்சா லவ்வுடை யாரழ காகிய
பீடர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 3

மண்ணார்நீ ரார்அழ லார்மலி காலினர்
விண்ணார்வே தம்விரித் தோதுவார் மெய்ப்பொருள்
பண்ணார்பா டலுடை யாரொரு பாகமும்
பெண்ணார்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 4

மறைவர்வா யின்மொழி மானொடு வெண்மழுக்
கறைகொள்சூ லம்முடைக் கையர்கா ரார்தரும்
நறைகொள்கொன் றைநயந் தார்தருஞ்[5] சென்னிமேல்
பிறையர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 5

புற்றர வம்புலித் தோலரைக் கோவணம்
தற்றிர வில்நட மாடுவர் தாழ்தரு
சுற்றமர் பாரிடந் தொல்கொடி யின்மிசைப்
பெற்றர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 6

துணையிறுத் தஞ்[6] சுரி சங்கமர்[7] வெண்பொடி
இணையிலேற் றையுகந் தேறுவ ரும்மெரி
கணையினால் முப்புரஞ் செற்றவர் கையினில்
பிணை[8] யர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 7

சரிவிலா வல்லரக் கன்தடந் தோள்தலை
நெரிவிலா ரவ்வடர்த் தார்நெறி மென்குழல்
அரிவைபா கம்அமர்ந் தாரடி யாரொடும்
பிரிவில்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 8

வரியரா என்பணி மார்பினர் நீர்மல்கும்
எரியரா வுஞ்சடை மேற்பிறை யேற்றவர்
கரியமா லோடயன் காண்பரி தாகிய
பெரியர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 9

நாணிலா தசமண் சாக்கியர் நாள்தொறும்
ஏணி[9] லா தம்மொழி யவ்வழி லாயவர்
சேணுலா மும்மதில் தீயெழச் செற்றவர்
பேணுகோ யில்லர தைப்பெரும் பாழியே. 10

---

[5]நயந்தார் தருஞ் என்றும் பாடம். [6]தத்தம்-எழிசையுள் ஒன்று.
[7] சங்குஅமர் - சங்குபோன்ற. [8] பிணை - மான். [9] ஏண் - நன்மை.

நீரினார் புன்சடை நிமலனுக் கிடமெனப்
பாரினார் பரவரை தைப்பெரும் பாழியைச்
சீரினார் காழியுள் ஞானசம் பந்தன்செய்
ஏரினார் தமிழ்வல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சாக்ஷிநாதர்; தேவி—சௌந்தரநாயகி.

---

## 78. திருஅவளிவணல்லூர்*

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கொம்பிரிய வண்டுலவு கொன்றைபுரி நூலொடுகு லாவித்
தம்பரிசி னொடுசுடு நீறுதட வந்தி[1] டப மேறிக்
கம்பரிய[2] செம்பொன்நெடு மாடமதில் கல்வரைவி லாக
அம்பெரிய வெய்தபெரு மானுறைவ தவளிவண லூரே. 1

ஓமை[3] யன கள்ளியன வாகையன கூகைமுர லோசை
ஈமஎரி சூழ்சுடலை வாசமுது காடுநட மாடித்
தூய்மையுடை அக்கொடர வம்விரவி மிக்கொளிது ளங்க
ஆமையொடு பூணும்அடி கள்ளுறைவ தவளிவண லூரே. 2

நீறுடைய மார்பில்இம வான்மகளொர் பாகம்நிலை செய்து
கூறுடைய வேடமொடு கூடியழ காயதொரு கோலம்
ஏறுடைய ரேனுமிடு காடிரவில் நின்றுநட மாடும்
ஆறுடைய வார்சடையி னானுறைவ தவளிவண லூரே. 3

பிணியுமிலர் கேடுமிலர் தோற்றமில ரென்றுலகு பேணிப்
பணியும்அடி யார்களன பாவம்அற இன்னருள்ப யந்து
துணியுடைய தோலுமுடை கோவணமும் நாகமுடல் தொங்க
அணியுமழ காகவுடை யானுறைவ தவளிவண லூரே. 4

---

* தீர்த்தயாத்திரை சென்றுவந்த ஆதிசைவர், தன் மனைவியின் தங்கையைத் தன் மனைவி என்று வழக்கிட்டபோது, இறைவன் வெளிப்பட்டு, 'உன் மனைவி அவள் அன்று; இவளே' என்று காட்டியதால் இப்பெயர் பெற்றது என்பர். [1] தடவந்து-தடவி; பூசி. [2] கம் - மேகம். [3] ஓமை-ஒருவ்கைமரம்.

குழலின்[4] வரி வண்டுமுரல் மெல்லியன பொன்மலர்கள் கொண்டு
கழலின்மிசை யிண்டைபுனை வார்கடவு ளென்றமரர் கூடித்
தொழலும்வழி பாடுமுடை யார்துயரு நோயுமில ராவர்
அழலுமழு ஏந்துகையி னுறைவ தவளிவண லூரே. 5

துஞ்சலி[5] ல ராயமரர் நின்றுதொழு தேத்த அருள் செய்து
நஞ்சுமிட றுண்டுகரி தாயஎளி தாகியொரு நம்பன்
மஞ்சுறநி மிர்ந்துமைந டுங்க அக லத்தொடுவ ளாவி
அஞ்சமத வேழவுரி யானுறைவ தவளிவண லூரே. 6

கூடரவ மொந்தை[6] குழல் யாழ்முழவி னோடும்இசை செய்யப்
பீடரவ மாகுபட ரம்புசெய்து பேரிடப மோடும்
காடரவம் ஆகுகனல் கொண் டிரவில் நின்றுநட மாடி
ஆடரவம் ஆர்த்தபெரு மானுறைவ தவளிவண லூரே. 7

ஒருவரையும் மேல்வலிகொ டேனென எழுந்தவிற லோன்இப்
பெருவரையின் மேலொர்பெரு மானுமுள னோவெனவெ குண்ட
கருவரையும் ஆழ்கடலும் அன்னதிறல் கைகளுடை யோனை
அருவரையி லூன்றியடர்த் தானுறைவ தவளிவண லூரே. 8

பொறிவரிய நாகமுயர் பொங்கணைய ணைந்தபுக ழோனும்
வெறி[7] வரிய[8] வண்டறைய விண்டமலர் மேல்விழுமி யோனும்
செறிவரிய தோற்றமொடு ஆற்றல்மிக நின்றுசிறி தேயும்
அறிவரிய னையபெரு மானுறைவ தவளிவண லூரே. 9

கழியருகு பள்ளியிட மாகவடு மீன்கள்கவர் வாரும்[9]
வழியருகு சாரவெயில் நின்றடிசி லுள்கிவரு வாரும்[10]
பழியருகி னாரொழிக பான்மையொடு நின்றுதொழு தேத்தும்
அழியருவி தோய்ந்தபெரு மானுறைவ தவளிவண லூரே. 10

ஆனமொழி யானதிற லோர்[11] பரவும் அவளிவண லூர்மேல்
போனமொழி நன்மொழிக ளாயபுகழ் தோணிபுர வூரன்

---

[4] குழலின்-குழல்போல; இன் : உவமவுருபு. [5] துஞ்சல்-சாதல்; தூங்குதலுமாம். [6] கூடு அரவ மொந்தை - பேரொலி செய்யும் மொந்தை என்னும் இயம். [7] வெறி - இன்பமேலீடு. [8] வரிய-வரிகளையுடைய. [9] மீன்கள் கவர்வார் - இது புத்தரைக்குறிக்கும். [10] வெயில்நின்று அடிசில் உள்கிவருதல் - இஃது அமண குருமார் வழக்கு. [11] ஆனமொழி யாயதிறலோர் என்னும் பாடம்.

ஞானமொழி மாலைநல நாடுபுகழ் ஞானசம் பந்தன்
தேனமொழி மாலைபுகழ் வார்துயர்கள் தீயதிலர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சாட்சிநாயகேசுவரர்; தேவி—சௌந்தரநாயகி.

## 79. திருப்பரிதிநியமம் *

பண் - பழம்பஞ்சுரம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விண்கொண்ட தூமதி சூடிநீடு விரிபுன் சடைதாழப்
பெண்கொண்ட மார்பில்வெண் ணீறுபூசிப் பேணார் பலிதேர்ந்து
கண்கொண்ட சாயலோ டேர்கவர்ந்த[1] கள்வர்க் கிடம்போலும்
பண்கொண்ட வண்டினம் பாடியாடும் பரிதிந் நியமமே. 1

அரவொலி வில்லொலி அம்பினொலி அடங்கார் புரமூன்றும்
நிரவவல்லார் நிமிர்புன் சடைமேல் நிரம்பா மதிசூடி
இரவில்[2] புகுந்தென் எழில்கவர்ந்த இறைவர்க் கிடம்போலும்
பரவவல் லார்வினை பாழ்படுக்கும் பரிதிந் நியமமே. 2

வாண்முக வார்குழல் வாள்நெடுங்கண் வளைத்தோள் மாதஞ்ச
நீண்முக மாகிய[3] பைங்களிற்றின் உரிமேல் நிகழ்வித்து
நாண்முகங்[4] காட்டி நலங்கவர்ந்த நாதர்க் கிடம்போலும்
பாண்முக வண்டினம் பாடியாடும் பரிதிந் நியமமே. 3

வெஞ்சுரஞ்[5] சேர்விளை யாடல்பேணி விரிபுன் சடைதாழத்
துஞ்சிருள் மாலையும் நண்பகலுந்[6] துணையார் பலிதேர்ந்து

---

* 'பருதியப்பர் கோயில்' என வழங்கப்பெறும்; இது சூரியன் பூசித்துப் பேறுபெற்ற காரணத்தால் இப்பெயர் பெற்றது; நியமம் - கோயில்; அடைந்த இடம் எனினுமாம். [1] ஏர் கவர்தல் - பசுத்தன்மையைக் கவர்ந்து சிவத்தன்மையை விளக்கல். [2] இரவு - கருவி உணர்வு அற்றநிலை. கருவிகளால் உணர்வு விளங்கும் சகல நிலையைப் பகல் எனவும், கருவி உணர்வு கழன்றநிலையை இரவு என்றும் கூறுவது சைவ நூன்மரபாகும். [3] நீண்முகடாகிய என்றும் பாடம். [4] நாண்முகம் - புதிய அருள் முகம்; நாணம் விளைக்கும் முகமுமாம். [5] வெஞ்சுரம்-சுடலை. [6] நன்பகலுந் என்றும் பாடம்; நன்பகல் - நடுப்பகல்.

அஞ்சுரும் பார்குழல் சோரவுள்ளங் கவர்ந்தார்க் கிடம்போலும்
பஞ்சுரம்[9] பாடிவண் டியாழ்முரலும் பரிதிந் நியமமே. 4

நீர்புல்கு புன்சடை நின்றிலங்க நெடுவெண் மதிசூடித்
தார்புல்கு மார்பில்வெண் ணீறணிந்து தலையார் பலிதேர்வார்
ஏர்புல்கு சாய லெழில்கவர்ந்த இறைவர்க் கிடம்போலும்
பார்புல்கு தொல்புக ழால்விளங்கும் பரிதிந் நியமமே. 5

வெங்கடுங் காட்டகத் தாடல்பேணி விரிபுன் சடைதாழத்
திங்கள் திருமுடிமேல் விளங்கத் திசையார் பலிதேர்வார்
சங்கொடு சாயல் எழில்கவர்ந்த சைவர்க் கிடம்போலும்
பைங்கொடி முல்லை படர்புறவிற் பரிதிந் நியமமே. 6

பிறைவளர் செஞ்சடை பின்தயங்கப் பெரிய மழுவேந்தி
மறையொலி பாடிவெண் ணீறுபூசி மனைகள் பலிதேர்வார்
இறைவளை சோர எழில்கவர்ந்த இறைவர்க் கிடம்போலும்
பறையொலி சங்கொலி யால்விளங்கும் பரிதிந் நியமமே. 7

ஆசடை வானவர் தானவரோ டடியார் அமர்ந்தேத்த
மாசடை யாதவெண் ணீறுபூசி மனைகள் பலிதேர்வார்
காசடை மேகலை சோரவுள்ளங் கவர்ந்தார்க் கிடம்போலும்[10]
பாசடைத் தாமரை வைகுபொய்கைப் பரிதிந் நியமமே. 8

நாடினர் காண்கிலர் நான்முகனுந் திருமால் நயந்தேத்தக்
கூடலர் ஆடல ராகிநாளுங் குழகர் பலிதேர்வார்
ஏடலர் சோர எழில்கவர்ந்த இறைவர்க் கிடம்போலும்
பாடலர் ஆடல ராய்வணங்கும் பரிதிந் நியமே. 9

கல்வளர் ஆடையர்[11] கையிலுண்ணுங் கழுக்கள் இழுக்கான
சொல்வள மாக நினைக்க வேண்டா சுடு[12] நீ றதுவாடி
நல்வளை சோர நலங்கவர்ந்த நாதர்க் கிடம்போலும்
பல்வளர்[13] முல்லையங் கொல்லைவேலிப் பரிதிந் நியமமே. 10

பையர வம்விரி காந்தள்விம்மு பரிதிந் நியமத்துத்
தையலொர் பாகம் அமர்ந்தவனைத் தமிழ்ஞான சம்பந்தன்

---

[9] பஞ்சுரம் - பதிகப்பண் - பழம்பஞ்சுரம் என்ற குறிப்பு.
[10] கவர்ந்தாரிடம் போலும் என்றும் பாடம். [11] கல்வளர் ஆடையர் - புத்தர். கல் - காவிக்கல். [12] வேண்டாஞ்சுடு என்றும் பாடம்.
[13] பல்வளர் - பல்போன்ற உருவுடன் வளர்கின்ற.

பொய்யிலி மாலை புனைந்தபத்தும் பரவிப் புகழ்ந்தேத்த
ஐயுற வில்லை பிறப்பறுத்தல் அவலம் அடையாவே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—பருதியப்பர்; தேவி—மங்களநாயகி.

## 80. திருவெண்ணியூர்*

**பண் - இந்தளம் [2-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

சடையானைச் சந்திர னோடுசெங் கண்அரா
உடையானை உடைதலை யிற்பலி கொண்டூரும்
விடையானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியை
உடையானை யல்லதுள் காதென துள்ளமே. 1

சோதியைச் சுண்ணவெண் ணீலணிந் திட்டஎம்
ஆதியை ஆதியும் அந்தமு மில்லாத
வேதியை வேதியர் தாந்தொழும் வெண்ணியில்
நீதி[1]யை நினையவல் லார்வினை நில்லாவே. 2

கனிதனைக் கனிந்தவ ரைக்கலந் தாட்கொள்ளும்
முனிதனை மூவுல குக்கொரு மூர்த்தியை
நனிதனை[2] நல்லவர் தாந்தொழும் வெண்ணியில்
இனிதனை யேத்துவ ரேதமி லாதாரே. 3

மூத்தானை மூவுல குக்கொரு மூர்த்தியாய்க்
காத்தானைக் கனிந்தவ ரைக்கலந் தாளாக
ஆர்த்தானை யழகமர் வெண்ணியம் மான்தன்னை
ஏத்தாதா ரென்செய்வார் ஏழையப் பேய்களே.[3] 4

நீரானை நிறைபுனல் சூழ்தரு நீள்[4] கொன்றைத்
தாரானைத் தையலோர் பாகமு டையானைச்

---

* 'கோயில் வெண்ணி' என்றும் 'இட்சுபுரி' என்றும் வழங்கப்பெறும். இட்சு (இக்கு) - கரும்பு. இங்குச் சிவலிங்கத்திருவுருவம் கரும்புக் கழிபோன்ற அடையாளங்களுடன் விளங்கும் சுயம்பு ஆகும். [1] நீதி - நியதியின் முதல்வன். [2] நனிதன் - நன்மையை உடையவன். [3] ஏழைப்பேய்களே என்றும் பாடம். [4] நீள்- மாலைபோலக் கொத்தாய் நீளும்.

சீரானைத் திகழ்தரு வெண்ணிய மர்ந்துறை
ஊரானை உள்கவல் லார்வினை ஓயுமே. 5

முத்தினை[5] முழுவயி ரத்திரள் மாணிக்கத்
தொத்தினைத் துளக்கமில் லாதவி ளக்காய
வித்தி[6]னை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
அத்தனை யடையவல் லார்க்கில்லை அல்லலே. 6

காய்ந்தானைக் காமனை யுஞ்செறு காலனைப்
பாய்ந்தானைப் பரியகை மாவுரித் தோன்மெய்யில்
மேய்ந்தானை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
நீந்தானை நினையவல் லார்வினை நில்லாவே. 7

மறுத்தானை மாமலை யைமதி யாதோடிச்
செறுத்தானைத் தேசழி யந்திகழ் தோள்முடி
இறுத்தானை யெழிலமர் வெண்ணியெம் மானெனப்
பொறுத்தானைப் போற்றுவார் ஆற்றலு டையாரே. 8

மண்ணினை[7] வானவ ரோடு மனிதர்க்குங்
கண்ணினைக் கண்ணனும் நான்முக னுங்காணா
விண்ணினை விண்ணவர் தாந்தொழும் வெண்ணியில்
அண்ணலை அடையவல் லார்க்கில்லை அல்லலே. 9

குண்டருங் குணமிலா தசமண் சாக்கிய[8]
மிண்டர்கள் மிண்டவை கேட்டுவெ குளேன்மின்[9]
விண்டவர் தம்புரம் எய்தவன் வெண்ணியில்
தொண்டரா யேத்தவல் லார்துயர் தோன்றாவே. 10

மருவாரு மல்குகா ழித்திகழ் சம்பந்தன்
திருவாருந் திகழ்தரு வெண்ணி யமர்ந்தானை
உருவாரும் ஒண்டமிழ் மாலையி வைவல்லார்
பொருவாகப் புக்கிருப் பார்புவ லோகத்தே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—வெண்ணிநாதர்; தேவி—அழகியநாயகி.

---

[5] முத்தனை என்றும் பாடம். [6] விளக்காயவித்து-அறிவு. [7] மண்ணினை - மண் என்னும் பூதத்துள் விளங்குபவனை. [8] குணமிலாச் சமணசாக்கிய என்றும் பாடம். [9] வெகுளன்மின் என்றும் பாடம்

# 81. திருப்பாதாளீச்சரம்

**பண் - வியாழக்குறிஞ்சி** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மின்னியல் செஞ்சடை[1] மேல் விளங்கும்மதி மத்தமொடு நல்ல
பொன்னியல் கொன்றையினன் புனல்சூடிப் பொற்பமரும்[2]
அன்னம் அனநடையாள் ஒருபாகத் தமர்ந்தருளி நாளும்
பன்னிய பாடலினன் உறைகோயில் பாதாளே. 1

நீடலர் கொன்றையொடு நிரம்பா மதிசூடி வெள்ளைத்
தோடமர் காதில்நல்ல குழையான் சுடுநீற்றன்
ஆடர வம்பெருக அனலேந்திக் கைவீசி வேதம்
பாடலி னல்இனியான் உறைகோயில் பாதாளே. 2

நாகமும் வான்மதி[3] யுந் நலம்மல்கு செஞ்சடையான் சாமம்[4]
போகநல் வில்வரையாற் புரமூன் றெரித்துகந்தான்
தோகைநன் மாமயில்போல் வளர்சாயல் தூமொழியைக் கூடப்
பாகமும் வைத்துகந்தான் உறைகோயில் பாதாளே. 3

அங்கமும் நான்மறையும் அருள்செய் தழகார்ந்த அஞ்சொல்
மங்கையோர் கூறுடையான் மறையோன் உறைகோயில்
செங்கயல் நின்றுகளுஞ் செறு[5] வில் திகழ்கின்ற சோதிப்
பங்கயம் நின்றலரும் வயல்சூழ்ந்த பாதாளே. 4

பேய்பல வுந்நிலவப் பெருங்காடரங் காகவுன்னி நின்று
தீயொடு மான்மறியும் மழுவுந் திகழ்வித்துத்
தேய்பிறை யும்அரவும் பொலிகொன்றைச் சடைதன்மேற் சேரப்
பாய்புன லும்உடையான் உறைகோயில் பாதாளே. 5

கண்ணமர்நெற்றியினல்கமழ்கொன்றைச்சடைதன்மேல்நின்றும்[6]
விண்ணியல் மாமதியும் உடன்வைத் தவன்விரும்பும்
பெண்ணமர் மேனியினன் பெருங்கா டரங்காக ஆடும்
பண்ணியல் பாடலினன் உறைகோயில் பாதாளே. 6

---

* 'பாம்பணி' எனவும் 'பாமணி' எனவும், வழங்கப்பெறும்; இது பாம்புருவுள்ள தனஞ்சய முனிவர் பூசித்த தலம். [1] மன்னிய செஞ்சடை என்றும் பாடம். [2] போதமரும் என்றும் பாடம். [3] வாண் மதி என்றும் பாடம். [4] சாபம் என்றும் பாடம். [5] செறு - சிறு வயல். [6] சடைதன் மேனன்று என்றும் பாடம்.

விண்டலர் மத்தமொடு மிளிரும்இள நாகம்வன் னி[8] திகழ்
வண்டலர் கொன்றைநகு மதிபுல்கு வார்சடையான்
விண்டவர் தம்புரம்மூன் றெரிசெய்துரை வேதநான் கும்அவை
பண்டிசை பாடலினான் உறைகோயில் பாதாளே. 7

மல்கிய நுண்ணிடையாள் உமைநங்கை மறுகஅன் றுகையால்
தொல்லை மலையெடுத்த அரக்கன்தலை தோள்நெரித்தான்
கொல்லை விடையுகந்தான் குளிர்திங்கள் சடைக்க ணிந்தோன்[9]
பல்லிசை பாடலினான் உறைகோயில் பாதாளே. 8

தாமரை மேலயனும் அரியுந்தம தாள்வினை[10] யால் தேடிக்
காமனை வீடுவித்தான்[11] கழல்காண் பில ராயகன்றார்
பூமரு வுங்குழலாள் உமைநங்கை பொருந்தியிட்ட நல்ல
பாமரு வுங்குணத்தான் உறைகோயில் பாதாளே. 9

காலையில் உண்பவருஞ் சமண்கையருங் கட்டுரை விட்டன்[12]
றால விடம்நுகர்ந்தான் அவன்றன் அடி யேபரவி
மாலையில் வண்டினங்கள் மதுவுண் டிசைமுரல வாய்த்த
பாலையாழ்ப் பாட்டுகந்தான் உறைகோயில் பாதாளே. 10

பன்மலர் வைகுபொழில் புடைசூழ்ந்த பாதாளைச் சேரப்
பொன்னியன் மாடமல்கு புகலிந்நகர் மன்னன்
தன்னொளி மிக்குயர்ந்த தமிழ்ஞான சம்பந்தன் சொன்ன
இன்னிசை பத்தும்வல்லார் எழில்வானத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சர்ப்பபுரீசுவரர்; தேவி—அமுதநாயகி.

---

## 82. திருக்களர் *

பண் - சீகாமரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீரு ளார்கயல் வாவி சூழ்பொழில்
நீண்ட மாவய லீண்டு மாமதில்[1]

---

[8] வன்னி - வன்னிப்பத்திரம். [9] சடைக்கணிந்தொலி என்றும் பாடம். [10] தாள்வினை - முயற்சி. [11] வீடுவித்தல் - அழிதல். [12] விட்டன்று - விட்டு. * இது பாரிசாத வனம் என்று சொல்லப் பெறும். [1] மா - மாமரம்.

தேரினார் மறுகில் விழாமல்கு திருக்களருள்
ஊரு ளாரிடு பிச்சை பேணும்
ஒருவ னேயொளிர் செஞ்ச டைம்மதி
ஆரநின் றவனே அடைந்தார்க் கருளாயே.[2] 1

தோளின் மேலொளி நீறு தாங்கிய
தொண்டர் வந்தடி போற்றி மிண்டிய
தாளினார்[3] வளரும் தவம்மல்கு திருக்களருள்
வேளி[4]ன் நேர்விச யற்க ருள்புரி
வித்த காவிரும் பும்அ டியாரை
ஆளுகந் தவனே அடைந்தார்க் கருளாயே. 2

பாட வல்லநல் மைந்த ரோடு
பனிம லர்பல கொண்டு போற்றிசெய்
சேடர்[5] வாழ் பொழில்சூழ் செழுமாடத் திருக்களருள்
நீடவல்ல நிமல னேயடி
நிரைக ழல்சிலம் பார்க்க மாநடம்
ஆடவல் லவனே அடைந்தார்க் கருளாயே. 3

அம்பின் நேர்தடங் கண்ணினா ருடன்
ஆட வர்பயில் மாட மாளிகை
செம்பொனார் பொழில்சூழ்ந் தழகாய திருக்களருள்
என்பு பூண்டதோர் மேனி யெம்மிறை
வார்இ ணையடி போற்றி நின்றவர்க்
கன்பு செய்தவனே அடைந்தார்க் கருளாயே. 4

கொங்கு லாமலர்ச் சோலை வண்டினங்
கிண்டி மாமது வுண்டி சைசெயத்
தெங்கு பைங்கமுகம் புடைசூழ்ந்த திருக்களருள்
மங்கை தன்னொடுங் கூடிய மண
வாள னேபிணை கொண்டோர் கைத்தலத்
தங்கை யிற்படை[6] யாய் அடைந்தார்க் கருளாயே. 5

---

[2] ஆர - பெருக; நிறைய. 'அடைந்தார்க்கருளாயே' என்பது தலத்துச் சுவாமியின் பெயர்க் குறிப்பு. [3] தாளினார் - தவமுயற்சி யுடைய பெரியோர். [4] வேள் - மன்மதன். [5] சேடர் - அறிவுடை யோர். [6] படை-மழு.

கோல மாமயில் ஆல[7]க் கொண்டல்கள்
சேர்பொ ழிற்குல வும்வ யலிடைச்
சேலிளங் கயலார் புனல்சூழ்ந்த திருக்களருள்
நீலம் மேவிய கண்ட னேநிமிர்
புன்ச டைப்பெரு மானெ னப்பொலி
ஆல நீழலுளாய் அடைந்தார்க் கருளாயே. 6

தம்ப லம்[8] மறி யாதவர் மதில்[9]
தாங்கு மால்வரை யாலழ லெழத்
திண்பலங் கெடுத்தாய் திகழ்கின்ற திருக்களருள்
வம்ப லர்மலர் தூவி நின்னடி[10]
வானவர் தொழக் கூத்து கந்துபேர்
அம்பலத்[11] துறைவாய் அடைந்தார்க் கருளாயே. 7

குன்ற டுத்தநன் மாளி கைக்கொடி
மாட நீடுயர் கோபு ரங்கள் மேல்
சென்ற டுத்துயர்வான் மதிதோயுந் திருக்களருள்
நின்ற டுத்துயர் மால்வ ரைத்திரள்
தோளி னாலெடுத் தான்றன் நீள்முடி
அன்றடர்த் துகந்தா யடைந்தார்க் கருளாயே. 8

பண்ணி யாழ்பயில் கின்ற மங்கையர்
பாட லாடலொ டார வாழ்பதி
தெண்ணி லாமதியம் பொழில்சேருந் திருக்களருள்
உண்ணி லாவிய வொருவ னே[12] இரு
வர்க்கு நின்கழல் காட்சி யாரழல்
அண்ண லாயஎம்மான் அடைந்தார்க் கருளாயே. 9

பாக்கி யம்பல செய்த பத்தர்கள்
பாட்டொ டும்பல பணிகள் பேணிய

---

[7] ஆல - ஆட; மயில் ஆலுதல் மரபு. [8] தம் பலம்-தமது பலக் குறைவை. [9] யாதவரெயில் என்றும் பாடம். [10] வம்புலர் மலர்தூவி நின்றடி என்றும் பாடம். [11] பேரம்பலம் - ஞான அம்பலம்; இது சிதம்பரத்தில் உள்ள ஐந்து சபைகளில் ஒன்று. இச்சபை தற்போது பொது மத்திய சபையாகவும் விளங்குகிறது. [12] வுருவனே என்றும் பாடம்.

தீக்கியல் குணத்[13] தார் சிறந்தாருந் திருக்களருள்
வாக்கின் நான்மறை யோதி னையமண்
தேரர் சொல்லிய சொற்க ளானபொய்
ஆக்கி நின்றவனே அடைந்தார்க் கருளாயே. 10

இந்து[14] வந்தெழு மாட வீதியெ
ழில்கொள் காழிந் நகர்க் கவுணியன்
செந்து[15] நேர்மொழியா ரவர்சேருந் திருக்களருள்
அந்தி யன்னதொர் மேனி யானை
அமரர் தம்பெரு மானை ஞானசம்
பந்தன் சொல்லிவை பத்தும்பாடத் தவமாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—களர்முளை நாதர், அடைந்தார்க்கருள் நாதர்;
தேவி—இளங்கொம்பன்னாள்.

---

## 83. திருச்சிற்றேமம்*

பண் - கொல்லிக்கௌவாணம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நிறைவெண்டிங்கள் வாண்முக மாதர்பாட நீள்சடைக்
குறைவெண்டிங்கள் சூடியோர் ஆடல்மேய கொள்கையான்
சிறைவண்டியாழ்செய் பைம்பொழிற் பழனஞ்[1] சூழ்சிற் றேமத்தான்
இறைவனென்றே யுலகெலாம் ஏத்தநின்ற பெருமானே. 1

மாகத்[2] திங்கள் வாண்முக மாதர்பாட வார்சடைப்
பாகத்திங்கள் சூடியோ ராடல்மேய பண்டங்கன்
மேகத்தாடு சோலைசூழ் மிடைசிற்றேமம் மேவினான்
ஆகத்தேர்கொள் ஆமையைப் பூண்டஅண்ணல் அல்லனே. 2

நெடுவெண்டிங்கள் வாண்முக மாதர்பாட நீள்சடைக்
கொடுவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்

---

13 தீக்கியல் குணம் - நன்மையே பார்க்கும் இயல்புடைய தன்மை. 14 இந்து - சந்திரன். 15 செந்து - பெரும் பண்களுள் ஒன்று. *சிற்றும்பூர் என்றும், சிற்றுய்மூர் என்றும், எழிலூர்சேமம் என்றும் வழங்கப்பெறும். 1 பழனம் - வயல். 2 மாகம் - ஆகாயம்.

படுவண்டியாழ்செய் பைம்பொழிற் பழனஞ்சூழ்சிற் றேமத்தான்
கடுவெங்கூற்றைக் காலினாற் காய்ந்தகடவுள் அல்லனே. 3

கதிரார்திங்கள் வாண்முக மாதர்பாடக் கண்ணுதல்
முதிரார்திங்கள் சூடியோ ராடல்மேய முக்கணன்[3]
எதிரார்புனலம் புன்சடை யெழிலாருஞ்சிற் றேமத்தான்
அதிரார்பைங்கண் ஏறுடை யாதிமூர்த்தி யல்லனே. 4

வானார்திங்கள் வாண்முக மாதர்பாட வார்சடைக்
கூனார்திங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
தேனார்வண்டு பண்செயுந் திருவாருஞ்சிற் றேமத்தான்
மானார்விழிநன் மாதொடும் மகிழ்ந்தமைந்தன் அல்லனே. 5

பனிவெண்டிங்கள் வாண்முக மாதர்பாடப் பல்சடைக்
குனிவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
தனிவெள்விடையன் புள்ளினத் தாமஞ்[4] சூழ்சிற் றேமத்தான்
முனிவு[5] மூப்பும் நீக்கிய[6] முக்கண்மூர்த்தி யல்லனே. 6

கிளருந்திங்கள் வாண்முக மாதர்பாடக் கேடிலா
வளருந்திங்கள் சூடியோ ராடல்மேய மாதவன்
தளிருங்கொம்பும் மதுவுமார் தாமஞ்சூழ்சிற் றேமத்தான்
ஒளிரும்வெண்ணூல்மார்பனென் னுள்ளத்துள்ளான் அல்லனே. 7

சூழ்ந்ததிங்கள் வாண்முக மாதர்பாடச் சூழ்சடைப்
போழ்ந்ததிங்கள் சூடியோ ராடல்மேய புண்ணியன்
தாழ்ந்தவயற்சிற் றேமத்தான் தடவரையைத்தன் தாளினால்
ஆழ்ந்த அரக்கன் ஒல்க அன் றடர்த்த அண்ணல் அல்லனே. 8

தனிவெண்டிங்கள் வாண்முக மாதர்பாடத் தாழ்சடைத்
துணிவெண்டிங்கள் சூடியோ ராடல்மேய தொன்மையான்
அணிவண்ணச்சிற் றேமத்தான் அலர்மேலந்த ணாளனும்
மணிவண்ணனுமுன் காண்கிலா மழுவாட்செல்வன் அல்லனே. 9

வெள்ளைத்திங்கள் வாண்முக மாதர்பாட வீழ்சடைப்[7]
பிள்ளைத்திங்கள்[8] சூடியோ ராடல்மேய பிஞ்ஞகன்

---

[3] முக்கணான் என்றும் பாடம். [4] புள்ளினத்தாமம்-வண்டின் கூட்டங்களையுடைய மாலை. [5] முனிவு - வெறுப்பு; கோபமுமாம். [6] நீங்கிய என்றும் பாடம். [7] விரிசடைப் என்றும் பாடம். [8] பிள்ளைத் திங்கள் - பிறைச் சந்திரன்.

உள்ளத்தார்சிற் றேமத்தான் உருவார்புத்தர் ஒப்பிலாக்
கள்ளத்தாரைத் தானாக்கியுட் [9] கரந்துவைத்தான் அல்லனே. 10

கல்லிலோதம் மல்குதண் கானல்சூழ்ந்த காழியான்
நல்லவாய வின்தமிழ் நவிலும்ஞான சம்பந்தன்
செல்வனூர்சிற் றேமத்தைப் பாடல்சீரார் நாவினால்
வல்லராகி வாழ்த்துவார் அல்லலின்றி வாழ்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பொன்வைத்தநாதர்; தேவி—அகிலாண்டநாயகி.

---

## 84. திருவுசாத்தானம்*

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீரிடைத் துயின்றவன் [1] தம்பி [2] நீள் சாம்புவான்
போருடைச் சுக்கிரீ வன்அநு மான்தொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தஎம்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே.[3] 1

கொல்லையே றுடையவன் கோவண ஆடையன்
பல்லையார் படுதலைப் பலிகொளும் பரமனார்
முல்லையார் புறவணி முதுபதி நறைகமழ்
தில்லையான் உறைவிடந் திருவுசாத் தானமே. 2

தாமலார் போலவே தக்கனார் வேள்வியை
ஊமனார் தங்கனா வாக்கினான் [4] ஒருநொடிக்

---

9 தனாதியுட் என்றும் பாடம். * ‘திருக்கோயிலூர்’ என வழங்கப்பெறும். இங்கு இராமபிரான் மந்திரோபதேசம் பெற்ற காரணத்தால் இப்பெயர் பெற்றது. (உசாவுதல் - கேட்டல்.) 1 நீரிடைத் துயின்றவன் - திருமால்; இராமன். 2 தம்பி - இலக்குமணன். 3 இச்செய்யுள் இத்தலத்தில் இராமன், இலக்குமணன், சாம்புவான், சுக்கிரீவன், அனுமான் முதலியோர் பூசித்ததைக் குறிக்கின்றது. 4 ஊமனார் தம்கனா ஆக்கினான் - ஊமையன் கனாக் கண்டால் சொல்லமாட்டாததுபோலத் தக்கனும் தன் வேள்வி அழிவுபட்டுத் தானும் பட்டதைச் சொல்லமாட்டாது ஆட்டுத்தலை பெற்றனன் என்பது குறிப்பு.

காமனு ருடல்கெடக் காய்ந்தஎங் கண்ணுதல்
சேமமா உறைவிடந் திருவுசாத் தானமே. 3

மறிதரு கரத்தினன் மால்விடை யேறியான்
குறிதரு[6] கோலநற் குணத்தினர் அடிதொழ
நெறிதரு வேதியர் நித்தலும் நியமஞ்செய்
செறிதரு பொழிலணி திருவுசாத் தானமே. 4 - 6

பண்டிரைத் தயனும்மா லும்பல பத்தர்கள்
தொண்டிரைத் தும்மலர் தூவித்தோத் திரஞ்சொலக்
கொண்டிரைக் கொடியொடுங் குருகினின் நல்லினம்
தெண்டிரைக் கழனிசூழ்[7] திருவுசாத் தானமே. 7

மடவரல் பங்கினன் மலைதனை மதியாது
சடசட எடுத்தவன் தலைபத்தும் நெரிதர
அடர்தர வூன்றியங் கேயவற் கருள்செய்தான்
திடமென வுறைவிடந் திருவுசாத் தானமே. 8

ஆணலார் பெண்ணலார் அயனொடு மாலுக்குங்
காணொணா வண்ணத்தான் கருதுவார் மனத்துளான்
பேணுவார் பிணியொடும் பிறப்பறுப் பானிடம்
சேணுலா மாளிகைத் திருவுசாத் தானமே. 9

கானமார் வாழ்க்கையான்[8] காரமண் தேரர்சொல்
ஊனமாக் கொண்டுநீர் உரைமின்உய் யவெனில்
வானமார் மதிலணி மாளிகை வளர்பொழில்
தேனமா மதியந்தோய் திருவுசாத் தானமே. 10

வரைதிரிந் திழியுநீர் வளவயற் புகலிமன்
திரைதிரிந் தெறிகடல் திருவுசாத் தானரை
உரைதெரிந் துணருஞ்சம் பந்தனெண் தமிழ்வல்லார்
நரைதிரை யின்றியே நன்னெறி சேர்வரே.[9] 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மந்திரபுரீசுவரர்; தேவி—பெரியநாயகி.

---

[6] குறிதரு-யோகக்குறி. [7] கழிகள்சூழ் என்றும் பாடம். [8] வாட்கையான் என்றும் பாடம். [9] இப்பதிகத்தில் 5, 6-ம் செய்யுட்கள் மறைந்து போயின.

## 85 திருஇடும்பாவனம் *

**பண் - நட்டபாடை** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மனமார்தரு மடவாரொடு மகிழ்மைந்தர்கள் மலர்தூய்த்
தனமார்தரு சங்கக்கடல் வங்கத்திர ளுந்திச்
சினமார்தரு திறல்வாளெயிற் றரக்கன்[1] மிகு குன்றில்[2]
இனமாதவர் இறைவர்க்கிடம் இடும்பாவன மிதுவே. 1

மலைபார்தரு மடவாளொரு பாகம்மகிழ் வெய்தி
நிலையார்தரு நிமலன்வலி நிலவும்புக ழொளிசேர்
கலையார்தரு புலவோரவர்[3] காவல்மிகு குன்றில்
இலையார்தரு பொழில்சூழ்தரும் இடும்பாவன மிதுவே. 2

சீலம்மிகு சித்தத்தவர் சிந்தித்தெழும்[4] எந்தை
ஞாலம்மிகு கடல்சூழ்தரும் உலகத்தவர் நலமார்
கோலம்மிகு மலர்மென்முலை மடவார்மிகு குன்றில்
ஏலங்கமழ் பொழில்சூழ்தரும் இடும்பாவன மிதுவே. 3

பொழிலார்தரு குலைவாழைகள் எழிலார்திகழ் போழ்தில்
தொழிலான்[5] மிகு தொண்டரவர் தொழுதாடிய முன்றில்
குழலார்தரு மலர்மென்முலை மடவார்மிகு குன்றில்
எழிலார்தரும் இறைவர்க்கிடம் இடும்பாவன மிதுவே. 4

பந்தார்விரல் உமையாளொரு பங்காகங்கை முடிமேல்
செந்தாமரை மலர்மல்கிய செழுநீர்வயற் கரைமேல்
கொந்தார்மலர் புன்னைமகிழ் குரவங்கமழ் குன்றில்
எந்தாயென இருந்தானிடம் இடும்பாவன மிதுவே. 5

நெறி[6] நீர்மையர் நீள்வானவர் நினையும்நினை வாகி
அறிநீர்மை[7] யி லெய்தும்அவர்க் கறியும்அறி வருளிக்

---

* இடும்பாசுரன் பூசித்துப் பேறு பெற்றதனால் இப்பெயர் பெற்றது; இடும்பனது தலைநகர் குன்றளூர்; இவ்விரண்டும் சேர்ந்து பதிகத்துள் வருதலை அறிக. [1] அரக்கன் - இடும்பன். [2] குன்றில் - குன்றளூரில். [3] கலையார் தரு புலவோர் அவர் - கலைவல்ல புலமையோர்; புலவோர் - தேவர் என்ற குறிப்புமாம். [4] சித்தரவர் சிந்தித்தொழும் என்றும் பாடம். [5] தொழில் - சிவனடிமைத் தொழில். [6] நெறி-சிவநெறி. [7] அறிநீர்மை - தியானம்.

குறிநீர்மை[8] யர் குணமார்தரு[9] மணமார்தரு குன்றில்
எறிநீர்வயல் புடைசூழ்தரும் இடும்பாவன மிதுவே. 6

நீறேறிய திருமேனியர் நிலவும்உல கெல்லாம்
பாறேறிய படுவெண்டலை கையிற்பலி வாங்காக்[10]
கூறேறிய மடவாளொரு பாகம்மகிழ் வெய்தி
ஏறேறிய இறைவர்க்கிடம் இடும்பாவன மிதுவே. 7

தேரார்தரு திகழ்வாளெயிற் றரக்கன்சிவன் மலையை
ஓராதெடுத் தார்த்தான்முடி யொருபஃதவை நெரித்துக்
கூரார்தரு கொலைவாளொடு குணநாமமுங் கொடுத்த
ஏரார்தரும் இறைவர்க்கிடம் இடும்பாவன மிதுவே. 8

பொருளார்தரு மறையோர்புகழ் விருத்தர்பொலி மலிசீர்த்
தெருளார்தரு சிந்தையொடு சந்தம்மலர் பலதூய்
மருளார்தரு மாயன்அயன் காணார்மய லெய்த
இருளார்தரு கண்டர்க்கிடம் இடும்பாவன மிதுவே. 9

தடுக்கையுடன் இடுக்கித்தலை பறித்துச்சமண் டப்பார்[11]
உடுக்கைபல துவர்க்கூறைகள் உடம்பிட்டுழல் வாரும்
மடுக்கண்மலர் வயல்சேர்செந்நெல் மலிநீர்மலர்க் கரைமேல்
இடுக்கண்பல களைவானிடம் இடும்பாவன மிதுவே. 10

கொடியார்நெடு மாடக்குன்ற ளூரிற்[12] கரைக் கோல
இடியார்கட லடிவீழ்தரும் இடும்பாவனத் திறையை
அடியாயு[13]மந் தணர்காழியுள் அணிஞானசம் பந்தன்
படியாற்சொன்ன[14] பாடல்சொலப் பறையும்வினை தானே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சற்குணநாதர்; தேவி—மங்களநாயகி.

---

[8] குறிநீர்மை-யோகம். [9] குளமார்தரு என்றும் பாடம். [10] பலி பாங்காய்க் என்றும் பாடம். [11] சமண்டப்பார் - சமணசமய நெறியில் ஒழுகுவோர். சமண் கடப்பார் என்றும் பாடம். [12] கொடியார் மாடக் குன்றளூர் - இடும்பனது தலை நகரம் என்ற குறிப்பு. [13] அடி ஆயும்- அடிபோற்றும். [14] படியால் - உலகர் அறியும் வழியால். படியார் சொன்ன என்றும் பாடம்.

## 86. திருக்கடிக்குளம்*

**பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

**பொ**டிகொள் மேனிவெண் ணூலினர் தோலினர் புலியுரி யதளாடை, கொடிகொள் ஏற்றினர் மணிகிணின் எனவரு குரை கழல் சிலம்பார்க்கக், கடிகொள் பூம்பொழில் சூழ்தரு கடிக்குளத் துறையுங்கற் பகத்[1]தைத்தம், முடிகள் சாய்த்தடி வீழ்தரும் அடி யரை முன்வினை[2] மூடாவே. 1

விண்க ளார்[3]தொழும் விளக்கினைத் துளக்கிலா விகிர்தனை விழவாரும், மண்க ளார்[4]துதித் தன்பரா யின்புறும் வள்ளலை மருவித்தம், கண்க ளார்தரக் கண்டுநங் கடிக்குளத் துறைதரு கற் பகத்தைப், பண்க ளார்தரப் பாடுவார் கேடிலர் பழியிலர் புகழாமே. 2

பொங்கு நற்கரி யுரியது போர்ப்பது புலியதள் அழல்நாகம், தங்க மங்கையைப் பாகம துடையவர் தழல்புரை திருமேனிக், கங்கை சேர்தரு சடையினர் கடிக்குளத் துறைதரு கற்பகத்தை, எங்கு மேத்திநின் றின்புறும் அடியரை இடும்பைவந் தடையாவே. 3

நீர்கொள் நீள்சடை முடியனை நித்திலத் தொத்தி[5]னை நிகரில் லாப், பார்கொள் பாரிடத் தவர்தொழும் பவளத்தைப் பசும் பொனை விசும்பாரும், கார்கொள் பூம்பொழில் சூழ்தரு கடிக் குளத் துறையுங்கற் பகந்தன்னைச், சீர்கொள் செல்வங்க ளேத் தவல் லார்வினை தேய்வது திணமாமே. 4

சுரும்பு சேர்சடை முடியினன் மதியொடு துன்னிய தழல் நாகம், அரும்பு தாதவிழ்ந் தலர்ந்தன மலர்பல கொண்டடி யவர் போற்றக், கரும்பு கார்மலி கொடிமிடை கடிக்குளத் துறைதரு கற்பகத்தை, விரும்பு வேட்கையோ டுளமகிழ்ந் துரைப்பவர் விதி யுடை யவர்தாமே. 5

---

* 'கற்பகநாதர் கோயில்' எனவும் 'கற்பகனு கோயில்' என வும், 'கற்பகனூர் குளம்' எனவும் வழங்கப்பெறும். கற்பக விநாய கர் பூசித்து மாம்பழம் பெற்றனமையால் இப்பெயர் பெற்றது என்பர். [1] கற்பகம் - இத்தலத்துச் சுவாமியின் பெயர். [2] முன்வினை - பழ வினை. [3] விண்களார் - தேவர். [4] மண்களார் - மக்கள். [5] தொத்து - கொத்து.

மாதி லங்கிய பாகத்தன் மதியமொ டலைபுனல் அழல்நாகம், போதி லங்கிய கொன்றையும் மத்தமும் புரிசடைக் கழகாகக், காதி லங்கிய குழையினன் கடிக்குளத் துறைதரு கற்பகத்தின், பாதங் கைதொழு தேத்தவல் லார்வினை பற்றறக் கெடுமன்றே. 6

குலவு கோலத்த கொடிநெடு மாடங்கள் குழாம்பல குளிர் பொய்கை, உலவு புள்ளினம் அன்னங்கள் ஆலிடும் பூவைசே ருங்கூந்தல், கலவை சேர்தரு கண்ணியன் கடிக்குளத் துறையுங் கற் பகத்தைச்சீர், நிலவி நின்றுநின் றேத்துவார் மேல்வினை நிற் ககில் லாதானே. 7

மடுத்த வாளரக் கன்னவன் மலைதன்மேல் மதியிலா மையி லோடி, எடுத்த லும்முடி தோள்கரம் நெரிந்திற இறைபவன் விர லூன்றக், கடுத்து வாயொடு கையெடுத் தலறிடக் கடிக்குளந் தனில்மேவிக், கொடுத்த பேரருட் கூத்தனை யேத்துவார் குண மு[6] டை யவர்தாமே. 8

நீரி னார்கடல் துயின்றவன் அயனொடு நிகழடி முடிகாணார், பாரி னார்விசும் புறப்பரந் தெழுந்ததோர் பவளத்தின் படியாகிக், காரி னார்பொழில் சூழ்தரு கடிக்குளத் துறையுங்கற் பகத்தின்றன், சீரி னார்கழல் ஏத்தவல் லார்களைத் தீவினை யடையாவே. 9

குண்டர் தம்மொடு சாக்கியர் சமணருங் குறியினில்நெறி நில்லா, மிண்டர் மிண்டுரை கேட்டவை மெய்யெனக் கொள்ளன் மின் விடமுண்ட, கண்டர் முண்டநன் மேனியர் கடிக்குளத் துறைதரும் எம்மீசர், தொண்டர் தொண்டரைத் தொழுதடி பணிமின்கள் தூநெறி யெளிதாமே.[7] 10

தனமலி புகழ்தயங் குபூந்த ராயவர் மன்னன்நற் சம்பந்தன், மனமலி புகழ்வண் தமிழ்மா லைகள் மாலதாய்[8] மகிழ்வோடும், கனம லிகட லோதம்வந் துலவிய கடிக்குளத் தமர்வானை, இனம லிந்திசை பாடவல் லார்கள்போ யிறைவனோ டுறைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கற்பகநாதர்; தேவி—சௌந்தரநாயகி.

---

[6] குணம் - நற்குணம். [7] இவ்வடிகள் அடியார் பெருமையினைக் கூறும். [8] மால் - மயக்கம்; இஃது அன்பின் முதிர்ச்சியால் ஏற்படும் மெய்ப்பாடு. மாலதாய் - விருப்பமாக எனினுமாம்.

## 87. திருத்தண்டலைநீணெறி*

**பண் - கௌசிகம்**** [3-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

விரும்புந் திங்களுங் கங்கையும் விம்மவே[1]
சுரும்புந் தும்பியுஞ் சூழ்சடை யார்க்கிடம்
கரும்புஞ் செந்நெலுங் காய்கமு கின்வளம்
நெருங்குந் தண்டலை நீணெறி காண்மினே. 1

இகழுங் காலன் இதயத்தும் என்னுளும்[2]
திகழுஞ் சேவடி யான்திருந் தும்மிடம்
புகழும் பூமக ளும்புணர் பூசுரர்
நிகழுந் தண்டலை நீணெறி காண்மினே. 2

பரந்த நீலப் படரெரி வல்விடம்
கரந்த கண்டத்தி னன்கரு தும்மிடம்
சுரந்த மேதி[3] துறைபடிந் தோடையில்
நிரந்த தண்டலை நீணெறி காண்மினே. 3

தவந்த என்புந் தவளப் பொடியுமே
உவந்த மேனியி னன்உறை யும்மிடம்
சிவந்த பொன்னுஞ் செழுந்தர ளங்களும்
நிவந்த தண்டலை நீணெறி காண்மினே. 4 - 7

இலங்கை வேந்தன் இருபது தோளிற
விலங்க வில்லடர்த் தான்விரும் பும்மிடம்
சலங்கொள் இப்பி தரளமுஞ் சங்கமும்
நிலங்கொள் தண்டலை நீணெறி காண்மினே. 8

கருவர் உந்தியின் நான்முகன் கண்ணனென்
றிருவ ருந்தெரி யாவொரு வன்னிடம்
செருவ ருந்திய[4] செம்பியன் கோச்செங்கண்
நிருபர் தண்டலை நீணெறி காண்மினே. 9

---

* 'தண்டலைச்சேரி' என வழங்கப்பெறும்; இது கோச்செங்கட் சோழர் அமைத்த 78 மாடக்கோயில்களுள் ஒன்று. ** இப்பதிகத்தில் 5, 6, 7-ம செய்யுட்கள் சிதைந்து போயின. [1] விம்முதல்-மிகுதல். [2] இதயம் - மார்பு; என்உ(ள்)ளும் - எனது உள்ளத் தாமரையிடத்தும். [3] மேதி - எருமை. [4] செருஅருந்திய - போர் இல்லாமல் தீர்த்திடும்.

கலவு சீவரத் தார்கையில் உண்பவர்
குலவ மாட்டாக் குழகன் உறைவிடம்
சுலவு[5] மாமதி லுஞ்சுதை மாடமும்
நிலவு தண்டலை நீணெறி காண்மினே. 10

நீற்றர் தண்டலை நீணெறி நாதனை[6]த்
தோற்று மேன்மையர் தோணி புரத்திறை
சாற்று ஞானசம் பந்தன் தமிழ்வல்லார்
மாற்றில் செல்வர்[7] மறப்பர் பிறப்பையே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—நீணெறிநாதர்; தேவி—ஞானம்பிகை.

## 88. திருக்கோட்டூர்

பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீல மார்தரு கண்டனே நெற்றியோர் கண்ணனே யொற்றைவிடைச், சூல மார்தரு கையனே துன்றுபைம் பொழில்கள் சூழ்ந்தழகாய, கோல மாமலர் மணங்கமழ் கோட்டூர்நற் கொழுந்தே[1] யென்றெழுவார்[2] கள், சால நீள்தல மதனிடைப் புகழ்மிகத் தாங்குவர் பாங்காலே. 1

பங்க யம்மலர்ச் சீறடிப் பஞ்சுறு மெல்விர லரவல்குல், மங்கை மார்பலர் மயில்குயில் கிளியென மிழற்றிய மொழியார்மென், கொங்கை யார்குழாங் குணலைசெய்[3] கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவார்கள், சங்கை யொன்றில ராகிச்சங் கரன்[4] திரு அருள்பெறல் எளிதாமே. 2

---

[5] சுலவு - சூழும். [6] நீணெறிநாதா - தலத்துச் சுவாமியின் பெயர். [7] மாற்றில் செல்வர் - முத்திச் செல்வததினை உடையராவர். மாறில் என்பது மாற்றில் என ஆகியது. [1] கொழுந்து - தலத்துச்சுவாமியின் பெயர். [2] எழுதல் - எத்தொழிலும் செய்தல், முயலுதல், துயிலெழுதலுமாம். [3] குணலை செய்தல் - ஆரவாரத்துடன் செய்யும் ஒரு கூத்து. [4] ராகிநற்சங்கரன் என்றும், ராகின்றசங்கரன் என்றும் பாடம்.

நம்ப னார்நல மலர்கொடு தொழுதெழும் அடியவர் தமக்கெல்லாம், செம்பொ னார்தரும் எழில்திகழ் மூலையவர்[5] செல்வமல்கியநல்ல, கொம்ப னார்தொழு தாடிய கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவார்கள், அம்பொ னார்தரு முலகினில் அமரரோடமர்ந்தினி திருப்பாரே. 3

பலவு நீள்பொழில் தீங்கனி தேன்பலா மாங்கனி பயில்வாய, கலவ மஞ்ஞைகள் நிலவுசொற் கிள்ளைகள் அன்னஞ்சேர்ந் தழகாய, குலவு நீள்வயற் கயலுகள் கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவார்கள், நிலவு செல்வத்த ராகிநீள் நிலத்திடை நீடிய புகழாரே. 4

உருகு வாருள்ளத் தொண்சுடர்தனக்கென்றும் அன்பராம் அடியார்கள், பருகும் ஆரமு தெனநின்று பரிவொடு பத்திசெய்தெத்திசையும், குருகு வாழ்வயல் சூழ்தரு கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவார்கள், அருகு சேர்தரு வினைகளும் அகலும்போய் அவனருள் பெறலாமே. 5

துன்று வார்சடைத் தூமதி மத்தமுந் துன்னெருக் கார்வன்னி, பொன்றி னார்தலைக் கலனொடு பரிகலம் புலியுரி யுடையாடை, கொன்றை பொன்னென மலர்தரு கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவாரை,[6] என்று மேத்துவார்க் கிடரிலை கேடிலை ஏதம்வந் தடையாவே. 6

மாட மாளிகை கோபுரங் கூடங்கள் மணியரங் கணிசாலை, பாடு சூழ்மதிற் பைம்பொன்செய் மண்டபம் பரிசொடு பயில்வாய, கூடு பூம்பொழில் சூழ்தரு கோட்டூர்நற் கொழுந்தேயென் றெழுவார்கள், கேட தொன்றில ராகிநல் லுலகினிற் கெழுவுவர் புகழாலே. 7

ஒளிகொள் வாளெயிற் றரக்கனவ் வுயர்வரை யெடுத்தலும் உமையஞ்சி[7]ச், சுளிய வூன்றலுஞ் சோர்ந்திட வாளொடு நாளவற் கருள்செய்த, குளிர்கொள் பூம்பொழில் சூழ்தரு கோட்டூர் நற் கொழுந்தினைத் தொழுவார்கள், தளிர்கொள் தாமரைப் பாதங்கள் அருள்பெறுந் தவமுடை யவர்தாமே. 8

---

[5] எழில்திகழ் முலையவர் - இங்குத் திருமகள், கலைமகள், மலைமகள் என்ற மூவர். [6] எழுவாரை ஏத்துவார் - அடியாரைத் துதிப்பவர்; அடியார்க்கடியார். [7] அஞ்சி - அஞ்ச.

பாடி யாடுமெய்ப் பத்தர்கட் கருள்செயும் முத்தினைப் பவ் ளத்தைத், தேடி மாலயன் காணவொண் ணாதஅத் திருவினைத் தெரிவைமார், கூடி ஆடவர் கைதொழு கோட்டூர்நற் கொழுந் தேயென் றெழுவார்கள், நீடுசெல்வத்த ராகியிவ் வுலகினில் நிகழ்தரு புகழாரே. 9

கோணல் வெண்பிறைச் சடையனைக் கோட்டூர்நற் கொழுந் தினைச் செழுந்திரளைப், பூணல்செய்தடி பொற்றுமின் பொய் யிலா மெய்யன்நல் லருளென்றும், காண லொன்றிலாக் கார மண் தேரர்குண் டாக்கர்சொற் கருதாதே, பேணல் செய்தர னைத்தொழும் அடியவர் பெருமையைப் பெறுவாரே. 10

பந்து லாவிரற் பவளவாய்த் தேன்மொழிப் பாவை[8]யோ டுருவாரும், கொந்து லாமலர் விரிபொழிற் கோட்டூர்நற் கொழுந் தினைச் செழும்பவளம், வந்து லாவிய காழியுள் ஞானசம் பந்தன் வாய்ந் துரைசெய்த, சந்து லாந்தமிழ் மாலைகள் வல்லவர் தாங்கு வர் புகழாலே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—கொழுந்து நாதர்;
தேவி—தேன்மொழிப்பாவையம்மை (மதுரவசனியம்மை.)

## 89. திருவெண்டுறை*

பண் - பஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**ஆ**தியன் ஆதிரையன் அனல் ஆடிய ஆரழகன்
பாதியொர் மாதினொடும் பயி லும்பர மாபரமன்
போதி[1]ய லும்முடிமேற் புன லோடர வம்புனைந்த
வேதியன் மாதிமையால் விரும் பும்மிடம் வெண்டுறையே. 1

---

[8] தேன்மொழிப்பாவை-தலத்து அம்மையின் பெயர். * 'திரு வண்டுறை' என வழங்கப்பெறும். பிருங்கி முனிவர் வண்டுவடிவு கொண்டு சுவாமிக்கும் அவரைப்பாகம் பிரியாத அம்மைக்கும் இடையே ஊடுருவிச் சென்று தம் நியமப்படி இறைவனை மட்டும் வலம்வந்து வழிபட்டமையால் இப்பெயர் பெற்றது; (பிருங்கம் - வண்டு). [1] போது - கொன்றை.

காலனை யோருதையில் உயிர் வீடுசெய் வார்கழலான்
பாலொடு நெய்தயிரும் பயின் றாடிய பண்டரங்கன்
மாலைம தி[2] யொடுநீர் அர வம்புனை வார்சடையான்
வேலன கண்ணி[3] யொடும் விரும் பும்மிடம் வெண்டுறையே. 2

படைநவில் வெண்மழுவான் பல பூதப்ப டையுடையான்
கடை[4] நவில் மும்மதிலும் எரி யூட்டிய கண்ணுதலான்
உடைநவி லும்புலித்தோல் உடை யாடையி னான்கடிய
விடைநவி லுங்கொடியான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 3

பண்ணமர் வீணையினான் பர விப்பணி தொண்டர்கள்தம்
எண்ணமர் சிந்தையினான் இமை யோர்க்கும் அறிவரியான்
பெண்ணமர் கூறுடையான் பிர மன்தலை யிற்பலியான்
விண்ணவர் தம்பெருமான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 4

பாரிய லும்பலியான் படி[5] யார்க்கும் அறிவரியான்
சீரிய லும்மலையாள் ஒரு பாகமுஞ் சேரவைத்தான்
போரிய லும்புரமூன் றுடன் பொன்மலை யேசிலையா
வீரிய[6] நின்றுசெய்தான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 5

ஊழிக ளாயுலகா யொரு வர்க்கும் உணர்வரியான்
போழிள வெண்மதியும் புன லும்மணி புன்சடையான்
யாழின் மொழியுமையாள் வெரு வவ்வெழில் வெண்மருப்பின்
வேழம் உரித்தபிரான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 6

கன்றிய[7] காலனையும் உரு ளக்கனல் வாயலறிப்
பொன்றமுன் நின்றபிரான் பொடி யாடிய மேனியினான்
சென்றிமை யோர்பரவுந் திகழ் சேவடி யான்புலன்கள்
வென்றவன்[8] எம்மிறைவன் விரும் பும்மிடம் வெண்டுறையே. 7

கரமிரு பத்தினாலுங் கடு வன்சின மாயெடுத்த
சிரமொரு பத்துமுடை அரக் கன்வலி செற்றுகந்தான்
பரவவல் லார்வினைகள் அறுப் பானொரு பாகமும்பெண்
விரவிய வேடத்தினான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 8

---

[2] மாலைமதி - பிறைச்சந்திரன். [3] வேலனகண்ணி - தலத்து அம்மையின் பெயர். [4] கடை - கீழ்மை. [5] படி - தன்மை. [6] வீரியம் - வீரத்தன்மை. [7] கன்றுதல் - கோபித்தல். [8] புலன்கள்வென்றவன் - இறைவன் : 'பொறிவாயி லைந்தவித்தான்' - குறள்.

கோல மலரயனுங் குளிர் கொண்டல் நிறத்தவனும்
சீலம் அறிவரிதாய்த் திகழ்ந் தோங்கிய செந்தழலான்
மூல[9] மதாகிநின்றான் முதிர் புன்சடை வெண்பிறையான்
வேலை விடமிடற்றான் விரும் பும்மிடம் வெண்டுறையே. 9

நக்குரு வாயவருந் துவ ராடைந யந்துடையாம்
பொக்கர்கள்[10] தம்முரைகள் அவை பொய்யென எம்மிறைவன்
திக்கு நிறைபுகழார் தரு தேவர்பி ரான்கனகம்
மிக்குயர் சோதியவன் விரும் பும்மிடம் வெண்டுறையே. 10

திண்ணம ரும்புரிசைத் திரு வெண்டுறை மேயவனைத்
தண்ணம ரும்பொழில்சூழ் தரு சண்பையர் தந்தலைவன்
எண்ணமர் பல்கலையான் இசை ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணமர் பாடல்வல்லார் வினை யாயின பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வெண்டுறைநாதர்; தேவி—வேனெடுங்கண்ணியம்மை.

---

## 90. திருக்கொள்ளம்பூதூர்*

ஈரடிமேல்வைப்பு

பண்-காந்தாரபஞ்சமம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கொட்ட மேகமழுங் கொள்ளம் பூதூர்
நட்டம் ஆடிய நம்பனை யுள்க[1]ச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 1

கோட்ட கக்கழனிக் கொள்ளம் பூதூர்
நாட்ட கத்துறை நம்பனை யுள்கச்

---

9 மூலம் - முதன்மை; உலகின் நிமித்த காரணன். 10 பொக்கர்கள் - இழிசொற்செயலுடையார். பொக்கம் - பொய் என்றலுமாம். * ‘திருக்களம்பூர்’ என வழங்கப்பெறும். ** இப்பதிகம் முள்ளிவாய் என்னும் ஆற்றில் ஓடம் விடுவாரின்றிக் கிடந்த ஓடத்தை அடியார்களை ஏற்றி அக்கரையில் செலுத்தித் திருக்கொள்ளம்பூதூரை அடைவித்தது. 1 கொட்டம் - வாசனைப் பண்டம். உள்க - நினைத்து.

செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 2

குலையினார் தெங்குசூழ் கொள்ளம் பூதூர்
விலையி லாட்கொண்ட விகிர்தனை [2] யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 3

குவளை கண்மலருங் கொள்ளம் பூதூர்த்
தவள [3] நீறணி தலைவனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 4

கொன்றைபொன் சொரியும் கொள்ளம் பூதூர்
நின்ற புன்சடை நிமலனை [4] யுள்கச்
சொல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 5

ஓடம்வந் தணையுங் கொள்ளம் பூதூர்
ஆடல் பேணிய [5] அடிகளை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே.[6] 6

ஆறுவந் தணையுங் கொள்ளம் பூதூர்
ஏறு தாங்கிய இறைவனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 7

குரக்கி [7] னம் பயிலுங் கொள்ளம் பூதூர்
அரக்கனைச் செற்ற ஆதியை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 8

பருவரால் உகளுங் கொள்ளம் பூதூர்
இருவர் காண்பரி யான்கழ லுள்கச்

---

[2] விகிர்தன் - மேலானவன். [3] தவளம்-வெண்மை. [4] நிமலன்-பரிசுத்தன். [5] ஆடல் பேணிய - ஆடலை விரும்பிய. [6] இச்செய்யுள் பெருவெள்ளத்தில் ஓடம் அக்கரை சென்றதைக் கூறும். [7] குரக்கு-குரங்கு: வலித்தல் விகாரம்.

செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 9

நீரகக் கழனிக் கொள்ளம் பூதூர்த்
தேரமண் செற்ற செல்வனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே. 10

கொன்றைசேர் சடையான் கொள்ளம் பூதூர்
நன்று காழியுள் ஞானசம் பந்தன்
இன்றுசொன் மாலைகொண் டேத்தவல் லார்போய்
என்றும் வானவ ரோடிருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வில்வவனநாதர்; தேவி—சௌந்தரநாயகி.

---

## 91. திருக்கொள்ளிக்காடு *

பண் - காந்தாரபஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நிணம்படு சுடலையின் நீறு பூசிநின்
றிணங்குவர் பேய்களோ டிடுவர் மாநடம்
உணங்கல்[1] வெண் டலைதனில் உண்ப ராயினும்
குணம்பெரி துடையர்நங் கொள்ளிக் காடரே. 1

ஆற்றநல் அடியிணை யலர்கொண் டேத்துவான்[2]
சாற்றிய அந்தணன் தகுதி கண்டநாள்
மாற்றல னாகிமுன் அடர்த்து வந்தணை
கூற்றினை யுதைத்தனர் கொள்ளிக் காடரே. 2

அத்தகு வானவர்க் காக மால்விடம்
வைத்தவர் மணிபுரை கண்டத் தின்னுளே
மத்தமும் வன்னியும் மலிந்த சென்னிமேல்
கொத்தலர் கொன்றையர் கொள்ளிக் காடரே. 3

---

* தீக்கடவுள் (கொள்ளி - தீ) பூசித்தமையால் இப்பெயர் பெற்றது. இங்குச் சனிபகவான் சந்நிதி விளக்கமாக உள்ளது.
[1] உணங்கல் - பலிச்சோறு. உணங்கு என்றும் பாடம். [2] ஆற்றனல் லடியிணை யலர்கொ டேத்தவான் என்றும் பாடம்.

பாவணம் மேவுசொல் மாலை[3] யிற்பல
நாவணங் கொள்கையில் நவின்ற செய்கையர்
ஆவணங் கொண்டெமை யாள்வ ராயினும்[4]
கோவணங் கொள்கையர் கொள்ளிக் காடரே. 4

வாரணி வனமுலை மங்கை யாளொடும்
சீரணி திருவுருத் திகழ்ந்த சென்னியர்
நார[5]ணி சிலைதனால் நணுக லார்எயில்
கூரெரி கொளுவினர் கொள்ளிக் காடரே. 5

பஞ்சுதோய் மெல்லடிப் பாவை[6] யாளொடும்
மஞ்சுதோய் கயிலையுள் மகிழ்வர் நாடொறும்
வெஞ்சின மருப்பொடு விரைய வந்தடை
குஞ்சரம் உரித்தனர் கொள்ளிக் காடரே. 6

இறையுறு வரிவளை யிசைகள் பாடிட
அறையுறு கழலடி ஆர்க்க ஆடுவர்
சிறையுறு விரிபுனல் சென்னி யின்மிசைக்
குறையுறு[7] மதியினர் கொள்ளிக் காடரே. 7

எடுத்தனன் கயிலையை யியல் வலியினால்
அடர்த்தனர் திருவிர லால் அலறிடப்
படுத்தன ரென்றவன் பாடல் பாடலும்
கொடுத்தனர் கொற்றவாள் கொள்ளிக் காடரே. 8

தேடினா ரயன்முடி மாலுஞ் சேவடி
நாடினா ரவரென்று நணுக கிற்றிலர்[8]
பாடினார் பரிவொடு பத்தர் சித்தமும்
கூடினார்க் கருள்செய்வர் கொள்ளிக் காடரே. 9

நாடிநின் றறிவில்நா ணிலிகள் சாக்கியர்
ஓடிமுன் ஓதிய வுரைகள் மெய்யல

---

3 சொல்மாலை-வேதங்கள். 4 நாவணம் கொள்கையில் - நாவின் இசைக்கும் சுரபேதங்களால் இசைக்கும்படி; ஆவணம் - அடிமை; ஆள்வாராயினும் - ஆளும் தலைவராயினும். 5 நார் - வில்லின் நாண். 6 பஞ்சுதோய்மெல்லடிப்பாவை-தலத்து அம்மையின் பெயர். 7 குறை உறும் - குறைந்து வந்து அடைக்கலம் புகுந்த. 8 நண்ணுகிற்றிலர் என்றும் பாடம்.

பாடுவர் நான்மறை பயின்ற மாதொடும்
கூடுவர் திருவுருக் கொள்ளிக் காடரே. 10

நற்றவர் காழியுள் ஞானசம் பந்தன்
குற்றமில் பெரும்புகழ்க் கொள்ளிக் காடரைச்
சொற்றமிழ் இன்னிசை மாலை சோர்வின்றிக்
கற்றவர் கழலடி காண வல்லரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அக்கினீசுவரர் : தேவி—பஞ்சினுமெல்லடியாள்.

---

## 92. திருத்தெங்கூர் *

பண் - பியந்தைக்காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**பு**ரை[1] செய் வல்வினை தீர்க்கும் புண்ணியர் விண்ணவர் போற்றக், கரைசெய் மால்கடல் நஞ்சை உண்டவர் கருதலர் புரங்கள், இரைசெய் தாரழ லூட்டி யழல்பவர் இடுபலிக் கெழில்சேர், விரைசெய் பூம்பொழில் தெங்கூர் வெள்ளியங் குன்ற[2] மமர்ந் தாரே. 1

சித்தந் தன்னடி நினைவார் செடிபடு கொடுவினை தீர்க்கும், கொத்தின்[3] தாழ்சடை முடிமேற் கோளெயிற் றரவொடு பிறை யன், பத்தர் தாம்பணிந் தேத்தும் பரம்பரன் பைம்புனல் பதித்த, வித்தன்[4] தாழ்பொழில் தெங்கூர் வெள்ளியங் குன்றமமர்ந் தாரே. 2

அடையும் வல்வினை யகல அருள்பவர் அனலுடை மழுவாட், படையர் பாய்புலித் தோலர் பைம்புனற் கொன்றையர் படர்புன், சடையில் வெண்பிறை சூடித் தார்மணி யணிதரு தறுகண், விடையர் வீங்கெழில் தெங்கூர் வெள்ளியங் குன்றமமர்ந் தாரே. 3

---

* 'தேங்கூர்' என்றும் சிலபிரதிகளில் காணப்படுகிறது.
[1] புரை - துன்பம். [2] வெள்ளியங்குன்று - தேங்கூர்க் கோயிலின் பெயர். [3] கொத்து - முடிச்சு. கொத்தன் என்றும் பாடம். [4] வித்தன் - வித்தையுடையவன். வித்து - மூலம்: மூலகாரணன் என்றலுமாம்.

பண்டு நான்செய்த[5] வினைகள் பறையவோர் நெறியருள் பயப்பார், கொண்டல் வான்மதி சூடிக் குரைகடல் விடமணி கண்டர், வண்டு மாமல ரூதி மதுவுண் இதழ்மறி வெய்தி, விண்ட வார்பொழில் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 4

சுழித்த வார்புனற் கங்கை சூடியோர் காலனைக் காலால், தெழித்து வானவர் நடுங்கச் செற்றவர் சிறையணி பறவை,[6] கழித்த வெண்டலை யேந்திக் காமன துடல்பொடி யாக, விழித்த வர்திருத் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 5

தொல்லை வல்வினை தீர்ப்பார் சுடலைவெண் பொடியணி சுவண்டர்,[7] எல்வி[8] சூடி[9] நின் றுடும் இறையவர் இமையவ ரேத்தச், சில்லை மால்விடை யேறித் திரிபுரந் தீயெழச் செற்ற, வில்லி னர்திருத் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 6

நெறிகொள் சிந்தைய ராகி நினைபவர்[10] வினைகெட நின்றார், முறிகொள் மேனிமுக் கண்ணர் முளைமதி நடுநடுத் திலங்கப், பொறிகொள் வாளர வணிந்த புண்ணியர் வெண்பொடிப் பூசி, வெறிகொள் பூம்பொழில் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 7

எண்ணி லாவிறல் அரக்கன் எழில்திகழ் மால்வரை யெடுக்கக், கண்ணெ லாம்பொடிந் தலறக் கால்விர லூன்றிய கருத்தர், தண்ணு லாம்புனற் கண்ணி[11] தயங்கிய சடைமுடிச் சதுரர், விண்ணு லாம்பொழில் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 8

தேடித் தானயன் மாலுந் திருமுடி யடியிணை காணார், பாடத் தான்பல பூதப் படையினர் சுடலையிற் பலகால், ஆடத் தான்மிக வல்லர் அருச்சுனற் கருள்செயக் கருதும், வேடத் தார்திருத் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே. 9

சடங்கொள் சீவரப் போர்வைச் சாக்கியர் சமணர்சொல் தவிர, இடங்கொள் வல்வினை தீர்க்கும் ஏத்துமின் இருமருப்

---

[5] நாம்செய்த என்றும் பாடம். [6] பறவை - இங்குக் கழுகு. [7] சுவண்டர் - அடையாளமுடையவர். [8] எல்வி - எல் - இரவு: இரவில் வரும் சந்திரன். [9] சுவண்டார் அல்லிசூடி என்றும் பாடம். [10] நினைப்பவர் என்றும் பாடம். [11] புனற்கண்ணி - புனலாகிய (கங்கை) தலைமாலை.

பொருகை[12]க், கடங்கொள் மால்களிற் றுரியர் கடல்கடைந் திடக்கனன் றெழுந்த, விடங்கொள் கண்டத்தர் தெங்கூர் வெள் ளியங் குன்றமர்ந் தாரே. 10

வெந்த நீற்றினர் தெங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரைக், கந்த மார்பொழில் சூழ்ந்த காழியுள் ஞானசம் பந்தன், சந்த மாயின பாடல் தண்டமிழ் பத்தும்வல் லார்மேல், பந்த மாயின பாவம் பாறுதல் தேறுதல் பயனே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—வெள்ளிமலைநாதர்; தேவி—பெரியநாயகி.

## 93. திருநெல்லிக்கா *

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அறத்தா லுயிர்கா வலமர்ந் தருளி
மறத்தால்[1] மதில்மூன் றுடன்மாண் பழித்த
திறத்தால் தெரிவெய் தியதீவெண் டிங்கள்
நிறத்[2]தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 1

பதிதா னிடுகா டுபைங்கொன் றைதொங்கல்
மதிதா னதுசூ டியமைந் தனுந்தான்
விதிதான் வினைதான் விழுப்பம் பயக்கும்
நெதிதான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 2

நலந்தா னவன்நான் முகன்றன் தலையைக்
கலந்தா னதுகொண் டகபா லியுந்தான்
புலந்தான் புகழா லெரிவிண் புகழும்
நிலந்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 3

தலைதா னதுஏந் தியதம் அடிகள்
கலைதான் திரிகா டிடம்நா டிடமா

---

[12] ஒருகை - துதிக்கை. * இங்கு நெல்லிமரம் தலமாரமாத லால் இப்பெயர் பெற்றது. [1] மறத்தால் - மறக்கருணை செய்து. [2] தீவெண் திங்கள் நிறத்தான் - தீயினையும் சந்திரனையும் திருவுடம் பிற் கொண்டவன்; நிறம் - உடம்பு.

மலைதா னெடுத்தான் மதில்மூன் று[3] டைய
நிலைதான்[4] நெல்லிக்கா வுள்நிலா யவனே. 4

தவந்தான் கதிதான் மதிவார் சடைமேல்
உவந்தான் சுரவேந் தனுரு வழியச்
சிவந்தான் செயச்செய் துசெறுத் துலகில்
நிவந்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 5

வெறியார் மலர்க்கொன் றையந்தார் விரும்பி
மறியார் மலைமங் கைமகிழ்ந் தவன்றான்
குறியாற் குறிகொண் டவர்போய்க் குறுகும்
நெறியான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 6

பிறைதான் சடைச்சேர்த் தியஎந் தைபெம்மான்
இறைதான் இறவாக் கயிலைம் மலையான்
பறைதான்[5] புனலொண் மதிமல் குசென்னி
நிறைதான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 7

மறைத்தான் பிணிமா தொருபா கந்தன்னை
மிறைத்தான் வரையா லரக்கன் மிகையைக்
குறைத்தான் சடைமேற் குளிர்கோல் வளையை
நிறைத்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 8

தழல்தா மரையான் வையந்தா யவனும்
கழல்தான் முடிகா ணியநா ணொளிரும்
அழல்தான் அடியார்க் கருளாய்ப் பயக்கும்
நிழல்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 9

கனத்தார் திரைமாண் டழற்கான் றநஞ்சை[6]
எனத்தா வெனவாங் கியதுண் டகண்டன்
மனத்தாற் சமண்சாக் கியர்மாண் பழிய
நினைத்தான் நெல்லிக்கா வுள்நிலா யவனே. 10

புகரே[7] துமிலா தபுத்தே ளுலகில்
நிகரா நெல்லிக்கா வுள்நிலா யவனை

---

[3] மதில்மூன்று - சிவபூசையில் தானங்காக்க ஆகம மந்திரங்களால் வகுக்கும் மூன்று காவல்கள். [4] நிலைதான்-அந்நிலையுள் நின்று அருள் புரிபவன். [5] மறைதான் - வேதங்களே உருவமானவர். [6] நஞ்சை, ஐ : அசை. [7] புகர் - குற்றம்; தீமை.

நகரா நல[8] ஞா னசம்பந் தன்சொன்ன
பகர்வா ரவர்பா வமிலா தவரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—நெல்லிவனநாதர்; தேவி—மங்களநாயகி.

## 94. திருக்காருயில்*

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீரானே நீள்சடை மேலொர் நிரை[1] கொன்றைத்
தாரானே தாமரை மேலயன் தான்தொழும்
சீரானே சீர்திக ழுந்திருக் காருயில்
ஊரானே யென்பவர் ஊனமி லாதாரே. 1

மதியானே வரியர வோடுடன் மத்தஞ்சேர்
விதியானே விதியுடை வேதியர் தாங்தொழும்
நெதி[2] யானே நீர்வயல் சூழ்திருக் காருயிற்
பதியானே யென்பவர் பாவமி லாதாரே. 2

விண்ணானே விண்ணவ ரேத்திவி ரும்புஞ்சேர்
மண்ணானே மண்ணிடை வாழுமு யிர்க்கெல்லாம்
கண்ணானே கடிபொழில் சூழ்திருக் காருயில்
எண்ணானே யென்பவர் ஏதமி லாதாரே. 3

தாயானே தந்தையு மாகிய தன்மைகள்
ஆயானே ஆயநல் ல்ன்பர்க்க ணியானே
சேயானே சீர்திக ழுந்திருக் காருயில்[3]
மேயானே யென்பவர் மேல்வினை மேவாவே. 4

---

[8] நகரா - வணங்கி. நகரினைப்பற்றிச் சொன்ன என்றலுமாம். நகரானல என்றும் பாடம். * 'திருக்காறைவாசல்' என வழங்கப் பெறும். இது சப்தவிடங்கத் தலங்களில் ஒன்று. [1] மேலோர்நிறை என்றும், மேலொருநிறை என்றும் பாடம். [2] நெதி - நன்மை; நியதிப்பாடு. [3] தாயும்தந்தையும் சேயும் ஆகிய காருயில் - இது சோமாஸ்கந்த மூர்த்தியின் உருவைக் குறிக்கும் குறிப்பு; இவர் ஆதி விடங்கர் என்னும் தியாகேசர்.

கலையானே கலைமலி செம்பொற்[4] கயிலாய
மலையானே மலைபவர் மும்மதில் மாய்வித்த
சிலையானே சீர்திக ழுந்திருக் காருயில்
நிலையானே யென்பவர் மேல்வினை நில்லாவே. 5

ஆற்றானே ஆறணி செஞ்சடை யாடர
வேற்றானே யேழுல கும்இமை யோர்களும்
போற்றானே பொழில்திக ழுந்திருக் காருயில்
நீற்றானே யென்பவர் மேல்வினை நில்லாவே. 6

சேர்த்தானே தீவினை தேய்ந்தறத் தேவர்கள்
ஏத்தானே யேத்துநன் மாமுனி வர்க்கிடர்[5]
காத்தானே கார்வயல் சூழ்திருக் காருயில்
ஆர்த்தானே[6] யென்பவர் மேல்வினை யடராவே. 7

கடுத்தானே காலனைக் காலாற் கயிலாயம்
எடுத்தானை யேதமா கம்முனி வர்க்கிடர்
கெடுத்தானே கேழ்கிள ருந்திருக் காருயில்
அடுத்தானே யென்பவர் மேல்வினை யடராவே. 8

பிறையானே பேணிய பாடலொ டின்னிசை
மறையானே மாலொடு நான்முகன் காணாத
இறையானே யெழில்திக ழுந்திருக் காருயில்
உறைவானே யென்பவர் மேல்வினை ஓடுமே. 9

செடியாரும் புன்சமண் சீவரத் தார்களும்
படியாரும் பாவிகள் பேச்சுப் பயனில்லை
கடியாரும் பூம்பொழில் சூழ்திருக் காருயில்
குடியாருங் கொள்கையி னார்க்கில்லை குற்றமே. 10

ஏய்ந்தசீ ரெழில்திக ழுந்திருக் காருயில்
ஆய்ந்தசீ ரானடி யேத்தி அருள்பெற்ற
பாய்ந்தநீர்க் காழியுள் ஞானசம் பந்தன்சொல்
வாய்ந்தவா றேத்துவார் வானுல காள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கண்ணாயிரநாதர்; தேவி—கயிலாயநாயகி.

---

[4] செம்பொன் - செப்பமாகிய வெண்பொன். [5] முனிவற்கிடர் என்றும் பாடம். [6] ஆர்த்தான் - விளங்குபவன்.

# 95. திருவலிவலம்*

**பண் - பழந்தக்கராகம்** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஒல்லையாறி உள்ளம்ஒன்றிக் கள்ளம்ஒழிந் துவெய்ய
சொல்லையாறித் தூய்மைசெய்து காமவினை யகற்றி
நல்லவாறே யுன்றன்நாமம் நாவில்நவின் றேத்த[1]
வல்லவாறே வந்துநல்காய் வலிவலம்மே யவனே.[2] 1

இயங்குகின்ற இரவிதிங்கள் மற்றுநல்தே வரெல்லாம்
பயங்களாலே பற்றிநின்பால் சித்தந்தெளி கின்றிலர்
தயங்குசோதீ சாமவேதா காமனைக்காய்ந் தவனே
மயங்குகின்றேன் வந்துநல்காய் வலிவலம்மே யவனே. 2

பெண்டிர்மக்கள் சுற்றமென்னும் பேதைப்பெருங் கடலை
விண்டுபண்டே வாழமாட்டேன் வேதனைநோய் நலியக்
கண்டுகண்டே யுன்றன்நாமங் காதலிக்கின்ற துள்ளம்
வண்டுகிண்டிப் பாடுஞ்சோலை வலிவலம்மே யவனே. 3

மெய்யராகிப் பொய்யைநீக்கி வேதனையைத் துறந்து
செய்யரானார் சிந்தையானே தேவர்குலக் கொழுந்தே
நைவன்[3] நாயேன் உன்றன்நாமம் நாளும்நவிற் றுகின்றேன்
வையம்முன்னே வந்துநல்காய் வலிவலம்மே யவனே. 4

துஞ்சும்போதுந் துற்றும்போதுஞ் சொல்லுவனுன் திறமே
தஞ்சமில்லாத் தேவர்வந்துன் தாளிணைக்கீழ்ப் பணிய
நஞ்சை யுண்டாய்க் கென்செய்கேனோ நாளும்நினைந் தடியேன்
வஞ்சமுண்டென் றஞ்சுகின்றேன் வலிவலம்மே யவனே. 5

புரிசடையாய் புண்ணியனே நண்ணலார்மூ வெயிலும்
எரியஎய்தாய் எம்பெருமான் என்றிமையோர் பரவும்

---

* 'வலியான்' என்னும் கரிக்குருவி பூசித்துப்பேறுபெற்ற மையால் இப்பெயர்பெற்றது; இது மாடக்கோயில்; கோயிலைச் சுற்றி அகழி சூழ்ந்துள்ளது; இங்குக் கணபதி சந்நிதி மிகச் சிறப்புள்ளது. ** இப்பதிகத்தில் 1, 2, 4, 5, 9 ம் செய்யுள்கள் ஞானசம்பந்தரின் வேண்டுகோள் ஆகும். [1] நாவினவிற்றுகின்றேன் என்றும் பாடம். [2] வல்லவாறே நல்குகண்டாய் வலிவலமேயானே என்றும் பாடம். [3] நைவன் - வருந்துகின்றேன்.

கரியுரியாய் காலகாலா நீலமணி மிடற்று
வரியரவா வந்துநல்காய் வலிவலம்மே யவனே. 6

தாயுநீயே தந்தைநீயே சங்கரனே யடியேன்
ஆயுநின்பால் அன்புசெய்வான் ஆதரிக்கின் றதுள்ளம்
ஆயமாய காயந்தன்னுள் ஐவர்[4] நின்றொன் றலொட்டார்
மாயமேயென் றஞ்சுகின்றேன் வலிவலம்மே யவனே. 7

நீரொடுங்குஞ் செஞ்சடையாய் நின்னுடையபொன் மலையை
வேரொடும்பீழ்ந் தேந்தலுற்ற வேந்தன் இரா வணனைத்
தேரொடும்போய் வீழ்ந்தலறத் திருவிரலால் அடர்த்த
வாரொடுங்குங் கொங்கைபங்கா வலிவலம்மே யவனே. 8

ஆதியாய நான்முகனும் மாலும்அறி வரிய
சோதியானே நீதியில்லேன் சொல்லுவன்நின் திறமே[5]
ஓதிநாளும் உன்னையேத்தும் என்னை[6] வினை அவலம்
வாதியாமே வந்துநல்காய் வலிவலம்மே யவனே. 9

பொதியிலா[7]னே பூவணத்[8]தாய் பொன்திகழுங் கயிலைப்
பதியிலானே பத்தர்சித்தம் பற்றுவிடா தவனே
விதியிலாதார் வெஞ்சமணர் சாக்கியரென் றிவர்கள்
மதியிலாதா ரென்செய்வாரோ வலிவலம்மே யவனே. 10

வன்னிகொன்றை மத்தஞ்சூடும் வலிவலம்மே யவனைப்
பொன்னிநாடன் புகலிவேந்தன் ஞான சம்பந்தன் சொன்ன
பன்னுபாடல் பத்தும்வல்லார் மெய்த்தவத்தோர் விரும்பும்
மன்னுசோதி யீசனோடே மன்னியிருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவிராகம்

பண் - வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பூவியல் புரிகுழல் வரிசிலை நிகர்நுதல்
ஏவியல் கணைபிணை யெதிர்[1] விழி யுமையவள்

---

[4] ஐவர் - ஐம்பொறிகள். [5] சொல்லுவதுன்றிறமே என்றும் பாடம். [6] எத்தனென்னை என்றும் பாடம். [7] பொதியில் - பொதிய மலை. [8] பூவணம் - ஒரு சிவத்தலம். [1] கணை - அம்பு; பிணை - மான்; எதிர்: உவமவுருபு.

மேவிய திருவுரு வுடையவன் விரைமலர்
மாவியல் பொழில்வலி வலம்உறை யிறையே. 1

இட்டம தமர்பொடி யிசைதலின் நசைபெறு
பட்டவிர் பவளநன் மணியென அணிபெறு
விட்டொளிர் திருவுரு வுடையவன் விரைமலர்
மட்டமர் பொழில்வலி வலம்உறை யிறையே. 2

உருமலி கடல்கடை வழிவுல கமருயிர்
வெருவுறு வகையெழு விடம்வெளி மலையணி
கருமணி நிகர்களம் உடையவன் மிடைதரும்
மருமலி பொழில்வலி வலம்உறை யிறையே. 3

அனல்நிகர் சடையழல் அவியுற வெனவரு
புனல்நிகழ் வதுமதி நனைபொறி அரவமும்
எனநினை வொடுவரு மிதுமெல முடிமிசை
மனமுடை யவர்வலி வலம்உறை யிறையே. 4

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர்[2] பயில்வலி வலம்உறை யிறையே.[3] 5

தரைமுதல் உலகினில் உயிர்புணர் தகை[4] மிக
விரைமலி குழலுமை யொடுவிர வதுசெய்து
நரைதிரை கெடுதகை யது[5] அரு ளினன்எழில்
வரைதிகழ் மதில்வலி வலம்உறை யிறையே. 6

நலிதரு தரைவர[6] நடைவரும் இடையவர்
பொலிதரு மடவர லியர்மனை யதுபுகு
பலிகொள வருபவன் எழில்மிகு தொழில்வளர்
வலிவரு மதில்வலி வலம்உறை யிறையே. 7

---

[2] மிகுகொடை வடிவினர்-அங்கு வாழ்வோர் மிக ஈகையாளர்கள். [3] இச்செய்யுள் கணபதி திருவவதார வரலாறும், அவரது பெருமையும் கூறுகின்றது. [4] உயிர் புணர் தகை - உமையொடு விரவது செய்து - உயிர்கள் போகம் புசித்தற் பொருட்டுத் தாமும் போகியாயிருந்து. [5] நரைதிரை கெடு தகையது - இறப்பும் பிறப்பும் இல்லாமை; கெடுதகவது என்றும் பாடம். [6] கரைவர என்றும் பாடம்.

இரவணன் இருபது கரமெழில் மலைதனில்
இரவண நினைதர அவன்முடி பொடிசெய்து
இரவணம் அமர்பெயர் அருளின னகநெதி
இரவண நிகர்[7] வலி வலம்உறை யிறையே. 8

தேனமர் தருமலர் அணைபவன் வலிமிகும்
ஏனம தாய்நிலம் அகழ் அரி யடிமுடி
தானணை யாவுரு வுடையவன் மிடைகொடி
வானணை மதில்வலி வலம்உறை யிறையே. 9

இலைமலி தரமிகு துவருடை யவர்களும்
நிலைமையில் உணல்உடை யவர்களும் நினைவது
தொலைவலி நெடுமறை தொடர்வகை யுருவினன்
மலைமலி மதில்வலி வலம்உறை யிறையே. 10

மன்னிய வலிவல நகருறை யிறைவனை
இன்னியல் கழுமல நகரிறை யெழில்மறை
தன்னியல் கலைவல தமிழ்விர கனதுரை
உன்னிய வொருபதும் உயர்பொருள்[8] தருமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மனத்துணைநாதர்; தேவி—மாழையங்கண்ணி.

---

## 96. திருக்கைச்சினம்*

பண் - சீகாமரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தையலோர் கூறுடையான் தண்மதிசேர் செஞ்சடையான்
மையுலா மணிமிடற்றான் மறைவிளங்கு பாடலான்

---

[7] இரவணனிகர் என்றும் பாடம். [8] உயர்பொருள் - சிவபதம்.
* இந்திரன் மணலால் சிவலிங்கம் அமைத்துப் பூசித்து, ஒடுக்கி எடுக்க முயன்றபோது, எடுக்க வராமல் அவனது கைச்சின்னம் (கை அடையாளம்) திருவுருவத்தில் பதிந்த காரணத்தால் இப்பெயர் பெற்றது. கைச்சின்னம் - கைச்சினம் என வழங்குவதாயிற்று. (தற்போது கச்சினம் என்பர்). ** இப்பதிகத்துள் 10-ம் செய்யுள் மறைந்துபோயிற்று.

நெய்யுலா மூவிலைவே லேந்தி நிவந்தொ[1]ளிசேர்
கையுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே. 1
விடமல்கு கண்டத்தான் வெள்வளை[2]யோர் கூறுடையான்
படமல்கு பாம்பரையான் பற்றாதார் புரமெரித்தான்
நடமல்கும் ஆடலினான் நான்மறையோர் பாடலினான்
கடமல்கு மா[3]வுரியான் உறைகோயில் கைச்சினமே. 2
பாடலார் நான்மறையான் பைங்கொன்றை பாம்பினொடும்
சூடலான் வெண்மதியந் துன்று கரந்தையொடும்
ஆடலான் அங்கை அனலேந்தி ஆடரவக்
காடலான் மேவியுறை கோயில் கைச்சினமே. 3
பண்டமரர் கூடிக் கடைந்த படுகடல்நஞ்
சுண்டபிரான் என்றிறைஞ்சி உம்பர் தொழுதேத்த
விண்டவர்கள்[4] தொல்நகரம் மூன்றுடனே வெந்தவியக்
கண்ட[5]பிரான் மேவியுறை கோயில் கைச்சினமே. 4
தேய்ந்துமலி வெண்பிறையான் செய்யதிரு மேனியினான்
வாய்ந்திலங்கு வெண்ணீற்றான் மாதினையோர் கூறுடையான்
சாய்ந்தமரர் வேண்டத் தடங்கடல்நஞ் சுண்டனங்கை[6]க்
காய்ந்தபிரான் மேவியுறை கோயில் கைச்சினமே. 5
மங்கையோர் கூறுடையான் மன்னு மறைபயின்றான்
அங்கையோர் வெண்டலையான் ஆடரவம் பூண்டுகந்தான்
திங்களொடு பாம்பணிந்த சீரார் திருமுடிமேல்
கங்கையினான் மேவியுறை கோயில் கைச்சினமே. 6
வரியரவே நாணாக மால்வரையே வில்லாக
எரிகணையால் முப்புரங்கள் எய்துகந்த எம்பெருமான்
பொரிசுடலை யீமப் புறங்காட்டான் போர்த்ததோர்
கரியுரியான் மேவியுறை கோயில் கைச்சினமே. 7
போதல்வு கொன்றை புனைந்தான் திருமுடிமேல்
மாதுமையா ளஞ்ச மலையெடுத்த வாளரக்கன்

---

[1] நிவந்து - வளர்ந்து. [2] வெள்வளை - தலத்து அம்மையின் பெயர். [3] கடம் மல்கு மா - யானை. [4] விண்டவர்கள் - அறநெறியை விட்டு நீங்கியவர்கள். [5] கண்ட - இருந்தாங்கிருந்தபடி நினைப்பினால் தொழில் முற்றச் செய்த. [6] அனங்கு - காமன்.

நீதியினா லேத்த நிகழ்வித்து நின்றாடும்
காதலினான் மேவியுறை கோயில் கைச்சினமே. 8

மண்ணினைமுன் சென்றிரந்த மாலும் மலரவனும்[7]
எண்ணறியா வண்ணம் எரியுருவ மாயபிரான்
பண்ணிசையா லேத்தப் படுவான்றன் நெற்றியின்மேல்
கண்ணுடையான் மேவியுறை கோயில் கைச்சினமே. 9 - 10

தண்வயல்சூழ் காழித் தமிழ்ஞான சம்பந்தன்
கண்ணுதலான் மேவியுறை கோயில் கைச்சினத்தைப்
பண்[8]ணிசையா லேத்திப் பயின்ற இவைவல்லார்
விண்ணவரா யோங்கி வியனுலகம்[9] ஆள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—கைச்சினநாதர்; தேவி—வெள்வளைநாயகி.

## 97. திருக்கோளிலி *

பண் - பழந்தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நாளாய போகாமே[1] நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாய அன்புசெய்வோம் மடநெஞ்சே அரன்நாமம்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத் திறம்அருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலியெம் பெருமானே. 1

ஆடரவத் தழகாமை அணிகேழற் கொம்பார்த்த
தோடரவத் தொருகாதன் துணைமலர்நற் சேவடிக்கே
பாடரவத் திசைபயின்று பணிந்தெழுவார் தம்மனத்தில்
கோடரவம் தீர்க்குமவன் கோளிலியெம் பெருமானே. 2

நன்றுநகு நாண்மலரால் நல்லிருக்கு மந்திரங்கொண்
டொன்றிவழி பாடுசெய லுற்றவன்தன் ஓங்குயிர்மேல்
கன்றிவரு காலனுயிர் கண்டவனுக் கன்றளித்தான்
கொன்றைமலர் பொன்திகழுங் கோளிலியெம் பெருமானே. 3

---

7 மறையவனும் என்றும் பாடம். 8 பண் - இங்குச் சீகாமரம். 9 வியனுலகம்-சிவலோகம். * 'திருக்குவளை' என வழங்கப்பெறும், இது சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று. 1 நாளாய போகாமே - வாழ்நாள் வீணே கழிந்து போகாமல்.

வந்தமண லால்இலிங்கம் மண்ணியின்கட் பாலாட்டும்
சிந்தைசெய்வோன் தன்கருமந் தேர்ந்துசிதைப் பான்வருமத்
தந்தைதனைச் சாடுதலுஞ் சண்டீச னென்றருளிக்
கொந்தணவும் மலர்கொடுத்தான் கோளிலியெம் பெருமானே.[2] 4

வஞ்சமனத் தஞ்சொ[3]டுக்கி வைகலும்நற் பூசனையால்
நஞ்சமுது செய்தருளும் நம்பியென வேநினையும்
பஞ்சவரிற் பார்த்தனுக்குப் பாசுபதம் ஈந்துகந்தான்
கொஞ்சுகிளி மஞ்ச[4]ணவுங் கோளிலியெம் பெருமானே.[5] 5

தாவியவ[6]னுடனிருந்துங் காணாத தற்பரனை
ஆவிதனி லஞ்சொடுக்கி அங்கணனென் றாதரிக்கும்
நாவியல்சீர் நமிநந்தி யடிகளுக்கு நல்குமவன்
கோவியலும் பூவெழுகோற் கோளிலியெம் பெருமானே.[7] 6

கல்நவிலு மால்வரையான் கார்திகழு மாமிடற்றான்
சொல்நவிலும் மாமறையான் தோத்திரஞ்செய்[8] வாயினுளான்
மின்நவிலுஞ் செஞ்சடையான் வெண்பொடியான் அங்கையினில்
கொன்னவிலுஞ் சூலத்தான் கோளிலியெம் பெருமானே. 7

அந்தரத்தில் தேரூரும் அரக்கன்மலை அன்றெடுப்பச்
சுந்தரத்தன் திருவிரலால் ஊன்றஅவன் உடல்நெரிந்து
மந்திரத்த மறை[9] பாட வாளவனுக் கீந்தானும்
கொந்தரத்த மதிச்சென்னிக் கோளிலியெம் பெருமானே. 8

நாணமுடை வேதியனும் நாரணனும் நண்ணவொணாத்
தாணுஎனை யாளுடையான் தன்னடியார்க் கன்புடைமை
பாணன்[10] இசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்[11]
கோணல்இளம் பிறைச்சென்னிக் கோளிலியெம் பெருமானே. 9

---

[2] மண்ணி - மண்ணியாறு; தந்தை - எச்சதத்தன்: இச்செய்யுள் சண்டீசர் தொண்டின் சிறப்பைக் கூறுகிறது. [3] அஞ்சு - ஐம்புலன். [4] மஞ்சு - மேகமண்டலம். [5] இச்செய்யுள் அருச்சுனனது சிவ வழிபாட்டின் சிறப்பினைக்கூறும். [6] காவியவன் என்றும் பாடம். [7] இச்செய்யுள் நமிநந்தியடிகள் தொண்டின் சிறப்பைக் கூறுகிறது. [8] தோத்திரஞ் சேர் என்றும், தோத்திரஞ்சொல் என்றும் பாடம். [9] மந்திரத்தமறை - மந்திரங்களையுடைய சாமவேதம். [10] பாணன் - பாணபத்திரன். [11] பரிந்தளித்தான் - இது திருமுகங்கொடுத்த வரலாற்றைக் குறிக்கும்.

தடுக்கமருஞ் சமணரொடு தர்க்கசாத் திரத்தவர்[12] சொல்
இடுக்கண்வரும் மொழிகேளா தீசனையே ஏத்துமின்கள்
நடுக்கமிலா அமருலகம் நண்ணலுமாம் அண்ணல்கழல்
கொடுக்ககிலா வரங்கொடுக்குங் கோளிலியெம் பெருமானே. 10

நம்பனைநல் அடியார்கள் நாமுடைமா டெ[13]ன்றிருக்குங்
கொம்பனையாள் பாகனெழிற் கோளிலியெம் பெருமானை
வம்பமருந் தண்காழிச் சம்பந்தன் வண்டமிழ்கொண்
டின்பமர வல்லார்க ளெய்துவர்கள் ஈசனையே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கோளிலிநாதர்; தேவி—வண்டமர் பூங்குழலி.

---

## 98. திருவாய்மூர்*

### பண் - நட்டராகம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தளிரிள வளரென உமைபாடத் தாளம் மிடவோர் கழல் வீசிக்,[1] கிளரிள மணியர வரையார்த் தாடும் வேடக் கிறிமை[2] யார், விளரி[3]ள முலையவர்க் கருள்நல்கி வெண்ணீ றணிந்தோர் சென்னியின்மேல், வளரிள மதியமொ டிவராணீர்[4] வாய்மூ ரடிகள் வருவாரே. 1

வெந்தழல் வடிவினர் பொடிப்பூசி விரிதரு கோவண வுடை மேலோர், பந்தஞ்செய் தரவசைத் தொலிபாடிப் பலபல கடை தொறும் பலிதேர்வார், சிந்தனை புகுந்தெனக் கருள்நல்கிச் செஞ் சுடர் வண்ணர்தம் அடிபரவ, வந்தனை பலசெய இவராணீர் வாய்மூரடிகள் வருவாரே. 2

---

12 சாத்திரத்தவர் - புத்தர். 13 மாடு - செல்வம். * 'தென் திருவாய்மூர்' என வழங்கப்பெறும். இது சப்தவிடங்கத் தலங்களில் ஒன்று. ** இப்பதிகம் வாய்மூர் அடிகளது ஆடலைத் தாங் கண்டு தரிசித்து அப்பருக்கும் காட்டியபோது பாடியருளியதாகும். 1 வோர்தழல்வீசிக் என்றும் பாடம். 2 கிறிமை - மாயம். 3 விளர் - விளர்த்த - பயலைக்கொண்ட. 4 இவராணீர் - இவர்காணீர். இவர் ஆள் நீர் - இவர்ஆளும் நீர்மையுடையவர் என்றுமாம்.

பண்ணிற் பொலிந்த வீணையர் பதினெண் கணமு முணராநஞ், சுண்ணப் பொலிந்த மிடற்றினர் உள்ளமுருகி னுடனாவார், சுண்ணப் பொடிநீ றணிமார்பர் சுடர்பொற் சடைமேல் திகழ்கின்ற, வண்ணப் பிறையோ டிவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 3

எரிகிளர் மதியமொ டெழில்நுதன்மேல் எறிபொறி யரவினொடாறுமூழ்க, விரிகிளர் சடையினர் விடையேறி வெருவவந்திடர் செய்த விகிர்தனர், புரிகிளர் பொடியணி திருவகலம் பொன்செய்த வாய்மையர் பொன்மிளிரும், வரியர வரைக்கசைத் திவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 4

அஞ்சன மணிவணம் எழில்நிறமா வகமிட றணிகொளவுடல்திமில, நஞ்சினை யமரர்கள் அமுதமென நண்ணிய நறுநுதல் உமைநடுங்க, வெஞ்சின மால்களி யானையின்தோல் வெருவுறப் போர்த்ததன்நிறமுமஃதே, வஞ்சனை வடிவினொ டிவராணீர் வாய்மூரடிகள் வருவாரே. 5

அல்லிய மலர்புல்கு விரிகுழலார் கழலிணை யடிநிழலவை பரவ, எல்லியம் போதுகொண் டெரியேந்தி யெழிலொடு தொழிலவை யிசையவல்லார், சொல்லிய அருமறை யிசைபாடிச் சூடிள மதியினர் தோடுபெய்து, வல்லியந் தோலுடுத் திவராணீர் வாய்மூரடிகள் வருவாரே. 6

கடிபடு கொன்றைநன் மலர்திகழுங் கண்ணியர் விண்ணவர் கனமணிசேர், முடியில்கும் இறை[5] யவர் மறுகின்நல்லார் முறைமுறை பலிபெய முறுவல்செய்வார், பொடியணி வடிவொடு திருவகலம் பொன்னென மிளிர்வதொர் அரவினொடும், வடிநுனை மழுவினொ டிவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 7

கட்டிணை புதுமலர்க் கமழ்கொன்றைக் கண்ணியர் வீணையர் தாமுமஃதே, எட்டுணை சாந்தமொ டுமைதுணையா இறைவனுறைவதொர் இடம்வினவில், பட்டிணை யகலல்குல் விரிகுழலார் பாவையர் பலியெதிர் கொணர்ந்துபெய்ய, வட்டணை யாடலொ[6] டிவராணீர் வாய்மூரடிகள் வருவாரே. 8

---

[5] முடிபுல்குபிறை என்றும் பாடம். [6] வட்டணை ஆடல் - கூத்துவகை.

ஏன மருப்பினொ டெழிலாமை யிசையப் பூண்டோ ரேறே றிக், கான மதிடமா வுறைகின்ற கள்வர் கனவில் துயர்செய்து, தேனுண மலர்கள் உந்திவிம்மித் திகழ்பொற் சடைமேல் திகழ் கின்ற, வானநன் மதியினொ டிவராணீர் வாய்மூ ரடிகள் வரு வாரே. 9

சூடல்வெண் பிறையினர் சுடர்முடியர் சுண்ணவெண் ணீற் றினர் சுடர்மழுவர், பாடல்வண் டிசைமுரல் கொன்றையந்தார் பாம்பொடு நூலவை பசைந்திலங்கக், கோடனன் முகிழ்விரல் கூப்பிநல்லார் குறையுறு பலியெதிர் கொணர்ந்துபெய்ய, வாடல் வெண் டலைபிடித் திவராணீர் வாய்மூ ரடிகள் வருவாரே. 10

திங்களொ டருவரைப் பொழிற்சோலைத் தேனலங் கானலந் திருவாய்மூர், அங்கமொ டருமறை யொலிபாடல் அழல்நிற வண் ணர்தம் அடிபரவி, நங்கள்தம் வினைகெட மொழியவல்ல ஞானசம் பந்தன் தமிழ்மாலை, தங்கிய மனத்தினால் தொழுதெழுவார் தமர் நெறி யுலகுக்கோர் தவநெறியே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வாய்மூர்நாதர்; தேவி—பாலினுநன்மொழியாள்.
தியாகர்—நீலவிடங்கர்.

---

## 99. திருமறைக்காடு*

### திருவிராகம். பண் - நட்டபாடை [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சிலை[1] தனை நடுவிடை நிறுவியொர் சினமலி அரவது கொடு திவி, தலம்[2] மலி சுரரசு ரர்களொலி சலசல கடல்கடை வுழிமிகு, கொலைமலி விடமெழ அவருடல் குலைதர வதுநுகர் பவனெழில், மலைமலி மதில்புடை தழுவிய மறைவனம் அமர்தரு பரமனே.[3] 1

கரமுத லியஅவ யவமவை கடுவிட அரவது கொடுவரு, வரன்முறை யணிதரும் அவனடல் வலிமிகு புலியத ளுடையினன்,

---

* 'வேதாரண்யம்' என வழங்கப்பெறும். இது வேதங்கள் பூசித்த காரணத்தால் பெற்ற பெயர்; சப்தவிடங்கத் தலங்களில் ஒன்று. [1] சிலை - மந்தர மலை. [2] திவிதலம் - விண்ணுலகம். [3] இச் செய்யுள் இறைவன் நஞ்சுண்ட வரலாற்றைக் கூறும்.

இரவலர் துயர்கெடு வகைநினை யிமையவர் புரமெழில் பெற வளர், மரம்நிகர்[4] கொடைமனி தர்கள்பயில் மறைவனம் அமர்தரு பரமனே. 2

இழைவளர் தருமுலை மலைமக ளினிதுறை தருமெழி லுரு வினன், முழையினின் மிகுதுயி லுறுமரி முசிவொடும்[5] எழுமுள ரியொடெழு, கழைநுகர் தருகரி யிரிதரு கயிலையின் மலிபவ னிரு ளுறும் மழைதவழ் தருபொழில் நிலவிய மறைவனம் அமர்தரு பரமனே. 3

நலம்மிகு திருவித ழியின்மலர் நகுதலை யொடுகன கி[6]யின் முகை, பலசுரம் நதிபட அரவொடு மதிபொதி சடைமுடி யினன் மிகு, தலம்நில வியமனி தர்களொடு தவமுயல் தருமுனி வர்கள் தம, மலம்அறு வகைமனம் நினைதரு மறைவனம் அமர்தரு பரமனே. 4

கதிமலி களிறது பிளிறிட வுரிசெய்த அதிகுண னுயர்பசு, பதி[7]யதன் மிசைவரு பசுபதி பலகலை யவைமுறை முறையுணர், விதியறி தருநெறி யமர்முனி கணனொடு மிகுதவம் முயல்தரும், அதிநிபு ணர்கள்[8]வழி படவளர் மறைவனம் அமர்தரு பரமனே.5

கறைமலி திரிசிகை படை[9]யடல் கனல்மழு வெழு[10]தர வெறிமறி, முறைமுறை யொலிதம ருகமுடை தலைமுகிழ் மலிகணி வடமுகம், உறைதரு கரனுல கினிலுய ரொளிபெறு வகைநினை வொடுமலர் மறையவன் மறைவழி வழிபடு மறைவனம் அமர்தரு பரமனே. 6

இருநில னதுபுன லிடைமடி தரஎரி புகஎரி யதுமிகு, பெரு வளி யினில்அவி தரவளி கெடவிய னிடைமுழு வதுகெட, இரு வர்களுடல்பொறை யொடுதிரி யெழிலுரு வுடையவன் இனமலர், மருவிய அறுபதம் இசைமுரல் மறைவனம் அமர்தரு பரமனே. 7

சனம்வெரு வுறவரு தசமுக னொருபது முடியொடும் இருபது, கனமரு வியபுயம் நெரிவகை கழலடி யிலொர்விரல் நிறுவினன்,

---

[4] மரம் நிகர் - கற்பகம் ஒத்த. [5] முசிவொடும் - களைப்பொடும். [6] கனகி - ஊமத்தை. [7] உயர் பசுபதி - உயர்ந்த இடபம். [8] மதி நிபுணர்கள் என்றும் பாடம். [9] திரிசிகைப்படை - முத்தலைச் சூலம். [10] எழு - ஓர் ஆயுதம்.

இனமலி கணநிசி சரன்[11] மகிழ் வுறஅருள் செய்தகரு ணையனென, மனமகிழ் வொடுமறை முறையுணர் மறைவனம் அமர்தரு பரமனே. 8

அணிமலர் மகள்[12] தலை மகன்அயன் அறிவரி யதொர்பரிசினிலெரி, திணிதரு திரளுரு வளர்தர அவர்வெரு வுறலொடு துதிசெய்து, பணியுற வெளியுரு வியபர னவனுரை மலிகடல் திரளெழும், மணிவள ரொளிவெயில் மிகுதரு மறைவனம் அமர்தரு பரமனே. 9

இயல்வழி தரவிது செலவுற இனமயி லிறகுறு தழையொடு, செயல்மரு வியசிறு கடமுடி யடைகையர் தலைபறி செய்துதவம், முயல்பவர் துவர்படம் உடல்பொதி பவரறி வருபரன் அவனணி, வயலினில் வளைவளம் மருவிய மறைவனம் அமர்தரு பரமனே. 10

வசையறு மலர்மகள்[13] நிலவிய மறைவனம் அமர்பர மனைநினை, பசை[14] யொடு மிகுகலை பலபயில் புலவர்கள் புகழ்வழி வளர்தரு, இசையமர் கழுமல நகரிறை தமிழ்விர கனதுரையியல்வல, இசைமலி தமிழொரு பதும்வல அவருல கினிலெழில் பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - இந்தளம் * [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சதுரம் மறை[1] தான் துதிசெய் துவணங்கும்
மதுரம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
இதுநன் கிறை[2] வைத் தருள்செய்க எனக்குன்
கதவந் திருக்காப் புக்கொள்ளுங் கருத்தாலே.[3] 1

சங்கந் தரளம் மவைதான் கரைக்கெற்றும்
வங்கக் கடல்சூழ் மறைக்காட் டுறைமைந்தா

---

[11] நிசிசரன் - அரக்கன். [12] மலர்மகள் - இலக்குமி. [13] மலர்மகள் - ஞானவாணி; சரசுவதி. [14] பசை - அன்பு. * இப்பதிகம் மறைக்கதவு அடைக்கப் பாடியதாகும். [1] சதுரம் மறை - நான்கு வேதங்கள். [2] இறை - விரைவாக. [3] பின் இரண்டடிகள் சம்பந்தரின் விண்ணப்பம்.

மங்கை உமைபா கமுமா கவிதென்கொல்
கங்கை சடைமே லடைவித் தகருத்தே. 2

குரவங் குருக்கத் திகள்புன் னைகள்ஞாழல்
மருவும் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
சிரமு[4]ம் மலருந் திகழ்செஞ் சடைதன்மேல்
அரவம் மதியோ டடைவித் தலழகே. 3

படர்செம் பவளத் தொடுபன் மலர்முத்தம்
மடலம் பொழில்சூழ் மறைக்காட் டுறைமைந்தா
உடலம் உமைபங் கமதா கியு[5]மென்கொல்
கடல்நஞ் சமுதா அதுவுண் டகருத்தே. 4

வானோர் மறைமா தவத்தோர் வழிபட்ட
தேனார் பொழில்சூழ் மறைக்காட் டுறைசெல்வா
ஏனோர்[6] தொழுதேத்த இருந்தநீ யென்கொல்
கானார் கடுவே டுவனா னகருத்தே. 5

பலகா லங்கள்வே தங்கள்பா தங்கள்போற்றி
மலரால் வழிபா டுசெய்மா மறைக்காடா
உலகே முடையாய் கடைதோ றும்முன்னென்கொல்
தலைசேர் பலிகொண் டதிலுண் டதுதானே. 6

வேலா வலயத்[7] தயலே மிளிர்வெய்தும்
சேலார் திருமா மறைக்காட் டுறைசெல்வா
மாலோ டயன்இந் திரன்அஞ் சமுன்என்கொல்
காலார்[8] சிலைக்கா மனைக்காய்ந் தகருத்தே. 7

கலங்கொள் கடலோ தம்உலா வுங்கரைமேல்
வலங்கொள் பவர்வாழ்த் திசைக்கும் மறைக்காடா
இலங்கை யுடையான் அடர்ப்பட் டிடரெய்த
அலங்கல் விரலூன் றியருள் செய்தவாறே. 8

கோனென் றுபல்கோ டியுருத் திரர்போற்றும்
தேனம் பொழில்சூழ் மறைக்காட் டுறைசெல்வா

---

4 சிரம் - நகுசிரம். 5 பாகமதாகியு என்றும் பாடம். 6 ஏனோர்-சிறந்தோர். 7 வேலாவலயம் - கடல். 8 காலார் - கால் - காற்று; தென்றல் என்ற பொருளில் வந்தது; காலார் - தென்றலைத் தேராகக் கொண்டு செலுத்தும்.

ஏனங் கழுகா னவருன் னைமுன்என்கொல்
வானந் தலமண் டியுங்கண் டிலாவாறே. 9

வேதம் பலவோ மம்ஙியங் கடிபோற்ற
ஓதம் உலவும் மறைக்காட் டிலுறைவாய்
ஏதில் சமண்சாக் கியர்வாக் கிவையென்கொல்
ஆத ரோ[9] டுதா மலர்தூற் றியவாறே. 10

காழிந் நகரான் கலைஞா னசம்பந்தன்
வாழிம் மறைக்கா டனைவாய்ந் தறிவித்த
ஏழின் இசைமா லையீரைந் திவைவல்லார்
வாழி யுலகோர் தொழவான் அடைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - பியந்தைக்காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொங்கு வெண்மணற் கானற் பொருகடல் திரைதவழ் முத்தம்
கங்கு லாரிருள் போழுங் கலிமறைக் காடமர்ந் தார்தாம்
திங்கள் சூடின ரேனுந் திரிபுரம் எரித்தன ரேனும்
எங்கும் எங்கள் பிரானார் புகழல திகழ்பழி யிலரே. 1

கூனி ளம்பிறை சூடிக் கொடுவரித் தோலுடை யாடை
ஆனி லங்கிள ரைந்து[1]ம் ஆடுவர் பூண்பதும் அரவம்
கான லங்கழி யோதங் கரையொடு கதிர்மணி ததும்பத்
தேன்ந லங்கமழ் சோலைத் திருமறைக் காடமர்ந் தாரே. 2

நுண்ணி தாய்வெளி தாகி நூல்கிடந் திலங்குபொன் மார்பில்
பண்ணி யாழென முரலும் பணிமொழி[2] யுமையொரு பாகன்
தண்ணி தாயவெள் ளருவி சலசல நுரைமணி ததும்பக்
கண்ணி தானுமோர் பிறையார் கலிமறைக் காடமர்ந் தாரே. 3

ஏழை வெண்குரு கயலே யிளம்பெடை தனதெனக் கருதித்
தாழை வெண்மடற் புல்குந் தண்மறைக் காடமர்ந் தார்தாம்
மாழை யங்கய லொண்கண் மலைமகள் கணவன தடியின்
நீழ லேசர ணாக நினைபவர் வினைநலி விலரே. 4

---

9 ஆதர் - கீழ்மக்கள். 1 ஆனிலங்கிளர் ஐந்து - ஆனைந்து; பஞ்சகௌவியம். 2 பனிமொழி என்றும் பாடம்.

அரவம் வீக்கிய அரையும் அதிர்கழல் தழுவிய அடியும்
பரவ நாஞ்செய்த பாவம் பறைதர அருள்பவர் பதிதான்
மரவ நீடுயர் சோலை மழலைவண் டியாழ்செயும் மறைக்காட்
டிரவும் எல்லியும் பகலும் ஏத்துதல் குணமென லாமே. 5

பல்வி லோடுகை யேந்திப் பாடியும் ஆடியும் பலிதேர்
அல்லல் வாழ்க்கைய ரேனும் அழகிய தறிவரெம் அடிகள்
புல்லம் ஏறுவர் பூதம் புடைசெல வுழிதர்வர்க் கிடமாம்
மல்கு வெண்திரை[3] யோத மாமறைக் காடது தானே. 6

நாகந் தான்கயி றாக நளிர்வரை யதற்குமத் தாகப்
பாகந் தேவரொ டசுரர் படுகடல் அளறெழக் கடைய
வேக நஞ்செழ ஆங்கே வெருவொடும் இரிந்தெங்கும் ஓட
ஆகந் தன்னில்வைத் தமிர்தம் ஆக்குவித் தான்மறைக் காடே.[4] 7

தக்கன் வேள்வியைத் தகர்த்தோன் தனதொரு பெருமையை ஓரான்
மிக்கு மேற்சென்று மலையை யெடுத்தலும் மலைமகள் நடுங்க
நக்குத் தன்திரு விரலால் ஊன்றலும் நடுநடுத் தரக்கன்
பக்க வாயும்விட் டலறப் பரிந்தவன் பதிமறைக் காடே. 8

விண்ட மாமல ரோனும் விளங்கொளி யரவணை யானும்
பண்டுங் காண்பரி தாய பரிசினன் அவனுறை பதிதான்
கண்ட லங்கழி யோதங் கரையொடு கதிர்மணி ததும்ப
வண்ட லங்கமழ் சோலை மாமறைக் காடது தானே. 9

பெரிய வாகிய குடையும் பீலியும் அவைவெயிற் கரவாக்
கரிய மண்டைகை யேந்திக் கல்லென வுழிதருங் கழுக்கள்
அரிய வாகவுண் டோதும் அவர்திறம் ஒழிந்துநம் அடிகள்
பெரிய சீர்மறைக் காடே பேணுமின் மனமுடை யீரே. 10

மையு லாம்பொழில் சூழ்ந்த மாமறைக் காடமர்ந் தாரைக்
கையி னால்தொழு தெழுவான் காழியுள் ஞானசம் பந்தன்
செய்த செந்தமிழ் பத்துஞ் சிந்தையுட் சேர்க்கவல் லார்போய்ப்
பொய்யில் வானவ ரோடும் புகவலர் கொளவலர் புகழே. 11

திருச்சிற்றம்பலம்

---

[3] மல்கு தெண்டிரை என்றும் பாடம். [4] இச்செய்யுள் கடல் விடம் அருந்தின் சரிதம் கூறும்.

திருவிராகம். பண் - சாதாரி* [3-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

கூற்பொலிசு ரத்திநெறி கானினிடை மாநடம தாடிமடவார், இற்பலி[1] கொ ளப்புகுதும் எந்தைபெரு மானதிடம் என்பர்புவி மேல், மற்பொலிக லிக்கடன்ம லைக்குவடெ னத்திரைகொ ழித்த மணியை, விற்பொலிநு தற்கொடியி டைக்கணிகை மார்கவரும் வேதவனமே.[2] 1

பண்டிரைப வப்புணரி யிற்கனக மால்வரையை நட்டர வினைக், கொண்டுகயி றிற்கடைய வந்தவிட முண்டகுழ கன்றனிட மாம், வண்டிரைநி ழற்பொழிலின் மாதவியின் மீதணவு தென்றல்வெறியார், வெண்டிரைகள் செம்பவளம் உந்துகடல் வந்தமொழி வேதவனமே. 2

காரியன்மெல் லோதிநதி மாதைமுடி வார்சடையில் வைத்துமலையார், நாரி[3]யொரு பால்மகிழு நம்பருறை வென்பர்நெடு மாடமறுகில், தேரியல்வி ழாவினொலி திண்பணில மொண்படக நாளுமிசையால், வேரிமலி வார்குழல்நன் மாதரிசை பாடலொலி வேதவனமே. 3

நீறுதிரு மேனியின்மி சைத்தொளிபெ றத்தடவி வந்திடபமே, ஏறியுல கங்கடொறும் பிச்சைநுகர் இச்சையர் இருந்தபதியாம், ஊறுபொரு ளின்தமிழி யற்கிளவி தேருமட மாதருடனார், வேறுதிசை யாடவர்கள் கூறஇசை தேருமெழில் வேதவனமே. 4

கத்திரிகை துத்திரிக றங்குதுடி தக்கையொடி டக்கைபடகம்[4] எத்தனையு லப்பில்கரு வித்திரள லம்பஇமை யோர்கள்பரச, ஒத்தற[5]மி தித்துநட மிட்டவொரு வர்க்கிடம தென்பருலகில், மெய்த்தகைய பத்தரொடு சித்தர்கள்மி டைந்துகளும் வேதவனமே. 5

மாலைமதி வாளரவு கொன்றைமலர் துன்றுசடை நின்றுசுழலக், காலையிலெ ழுந்தகதிர் தாரகைம டங்கஅன லாடும்அரனூர், சோலையின்ம ரங்கடொறும் மிண்டியின வண்டுமது வுண்

* இப்பதிகத்துள் 10ம் செய்யுள் மறைந்து போயிற்று. [1] இற்பொலி என்றும் பாடம். பொலி - தூற்றாதநெல். [2] வேதவனம் - திருமறைக்காடு. [3] மலையார்நாரி - பார்வதி. [4] இவ்வடி வாத்தியங்களின் வகையினைக் கூறும். [5] ஒத்து - தாளஒத்து இலயம்பட.

டிசைசெய, வேலையொலி சங்குதிரை வங்கசுற வங்கொணரும் வேதவனமே. 6

வஞ்சகம னத்தவுணர் வல்லரணம் அன்றவிய வார்சிலை வளைத், தஞ்சகம வித்த[6] அம ரர்க்கமர ருதிபெரு மானதிடமாம், கிஞ்சுகஇ தழ்க்கனிகள் ஊறியசெவ் வாயவர்கள் பாடல்பயில, விஞ்சகஇ யக்கர்முனி வக்கணம்நி றைந்துமிடை வேதவனமே. 7

முடித்தலைகள் பத்துடைமு ருட்டுரு அ ரக்கனைநெ ருக்கிவிர லால், அடித்தலமுன் வைத்தலம ரக்கருணை வைத்தவனி டம்பலதுயர், கெடுத்தலைநி னைத்தறவி யற்றுதல்கி ளர்ந்துபுல வாணர்வறுமை, விடுத்தலைம தித்துநிதி நல்குமவர் மல்குபதி வேதவனமே. 8

வாசமலர் மேவியுறை வானும்நெடு மாலுமறி யாதநெறியைக், கூசுதல்செ யாதஅம ணாதரொடு தேரர்குறு காதஅரனூர், காசுமணி வார்கனகம் நீடுகட லோடுதிரை வார்துவலைமேல், வீசுவலை வாணரவை வாரிவலை பேசுமெழில் வேதவனமே. 9 - 10

மந்தமுர வங்கடல்வ ளங்கெழுவு காழிபதி மன்னுகவுணி, வெந்தபொடி நீறணியும் வேதவனம் மேவுசிவன் இன்னருளினால், சந்தமிவை தண்டமிழின் இன்னிசையெ னப்பரவு பாடலுலகில், பந்தனுரை கொண்டுமொழி வார்கள்பயில் வார்களுயர் வானுலகமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மறைக்காட்டுமணாளர், வேதாரண்யேசுவரர்;
தேவி—யாழைப்பழித்தமொழியாள்.

---

## 100. திருஅகத்தியான்பள்ளி*

**பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

வாடிய வெண்டலை மாலைசூடி மயங்கிருள்
நீடெரி கொள்ளி[1] விளக்குமாக நிவந்தெரி

---

[6] அஞ்சகமவித்த - ஐம்புலனடக்கிய. * இறைவனது மணக்கோலங்காணும் பொருட்டு அகத்தியர் தங்கித்தவஞ்செய்த இடமாதலால் இப்பெயர் பெற்றது. [1] கொள்ளி - சுடுகாட்டின் எரியும் தீ.

ஆடிய எம்பெருமான் அகத்தியான் பள்ளியைப்
பாடிய சிந்தையி னார்கட்கில்லையாம் பாவமே. 1

துன்னங்[2]கொண்ட வுடையான் துதைந்தவெண் ணீற்றினன்
மன்னுங்கொன்றை மதமத்தஞ் சூடினன் மாநகர்
அன்னந்தங்கும் பொழில்சூழ் அகத்தியான் பள்ளியை
உன்னஞ்[3] செய்த மனத்தார்கள் தம்வினை யோடுமே. 2

உடுத்ததுவும் புலித்தோல் பலிதிரிந் துண்பதுங்
கடுத்துவந்த கழற்காலன் தன்னையுங் காலினால்
அடுத்ததுவும்[4] பொழில்சூழ் அகத்தியான் பள்ளியான்
தொடுத்தது வுஞ்சரம் முப்புரந் துகளாகவே. 3

காய்ந்ததுவும் அன்றுகாமனை நெற்றிக் கண்ணினால்
பாய்ந்ததுவுங் கழற்காலனைப் பண்ணினன்மறை
ஆய்ந்ததுவும் பொழில்சூழ் அகத்தியான் பள்ளியான்
ஏய்ந்ததுவும் இமவான் மகளொரு பாகமே.[5] 4

போர்த்ததுவுங் கரியின் உரிபுலித் தோலுடை
கூர்த்ததோ[6]ர் வெண்மழு வேந்திக்கோளர வம்மரைக்
கார்த்ததுவும் பொழில்சூழ் அகத்தியான் பள்ளியான்
பார்த்ததுவும் அரணம் படஎரி மூழ்கவே. 5

தெரிந்ததுவுங் கணையொன்று முப்புரஞ் சென்றுடன்
எரிந்ததுவும் முன்னெழிலார் மலருறை வான்றலை
அரிந்ததுவும் பொழில்சூழ் அகத்தியான் பள்ளியான்
புரிந்ததுவும்[7] உமையாளோர் பாகம் புனைதலே. 6

ஓதியெல்லாம் உலகுக்கொர் ஒண்பொரு ளாகிமெய்ச்
சோதியென்று தொழுவார் அவர்துயர் தீர்த்திடும்
ஆதியெங்கள் பெருமான் அகத்தியான் பள்ளியை
நீதியால் தொழுவார் அவர்வினை நீங்குமே. 7

செறுத்ததுவும்[8] தக்கன் வேள்வியைத்திருந் தார்புரம்
ஒறுத்ததுவும் ஒளிமா மலருறை வான்சிரம்

---

[2] துன்னம் - தைத்தல். [3] உன்னம் - நினைத்தல். [4] அடர்த்ததுவும் என்றும் பாடம். [5] இவ்வடிகள் அகத்தியர்கண்ட மணக்கோலத்தைக் குறிக்கும். [6] கூர்த்தது-கூர்மையுடையது. [7] புரிந்ததுவும் - நினைத்ததுவும். [8] செறுத்தல் - அழித்தல்.

அறுத்ததுவும் பொழில்சூழ் அகத்தியான் பள்ளியான்
இறுத்ததுவும் அரக்கன்றன் தோள்கள் இருபதே[9] 8

சிரமுநல்ல மதிமத்த முந்திகழ் கொன்றையும்
அரவமல்குஞ் சடையான் அகத்தியான் பள்ளியைப்
பிரமனோடு திருமாலுந் தேடிய பெற்றிமை[10]
பரவவல்லார் அவர்தங்கள் மேல்வினை பாறுமே. 9

செந்துவ ராடையிருரும் வெற்றரை யேதிரி
புத்தியி லார்களும் பேசும்பேச்சவை பொய்ம்மொழி
அந்தணன் எங்கள்பிரான் அகத்தியான் பள்ளியைச்
சிந்திமின் நும்வினை யானவைசிதைந் தோடுமே. 10

ஞாலம் மல்குந்தமிழ் ஞானசம்பந்தன் மாமயில்
ஆலுஞ்சோலை புடைசூழ் அகத்தியான் பள்ளியுள்
சூல நல்லபடையான் அடிதொழு தேத்திய
மாலைவல்லா ரவர்தங்கள் மேல்வினை மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அகத்தீசுவரர்; தேவி—பாகம்பிரியாநாயகி.

---

## ஈழநாட்டில் உள்ள தலங்கள்

°°°°°°°○○ ✶ ○○°°°°°°°

## 1. திருக்கோணமலை* [திரிகோணமலை]

**பண்-புறநீர்மை**** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நிரைகழல் அரவஞ் சிலம்பொலி யலம்பும்[1] நிமலர்நீ றணி திருமேனி, வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த வடிவினர் கொடியணி விடையர், கரைகெழு சந்துங் காரகிற் பிளவும் அளப்

---

[9] இச்செய்யுள் இறைவன்செய்த வீரங்களைப் போற்றியதாகும். [10] பெற்றியைப் என்றும் பாடம். * திருக்கோணமாமலை என்றும் பாடம்; இதனைத் 'திருக்கணுமலை' என வழங்குவர்; இது தட்சிண கயிலாசம் மூன்றனுள் ஒன்று. கோணம் - வளைவு; கூரிய நுனி - முனை; சிகரத்தைக் குறித்தது. ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் மறைந்துபோயிற்று. [1] அலம்பும்-ஒலிக்கும்.

பருங் கனமணி வரன்றிக், குரைகடல் ஓதம் நித்திலங்[2] கொழிக்கும் கோணமா மலையமர்ந் தாரே. 1

கடிதென வந்த கரிதனை யுரித்து அவ்வுரி மேனிமேற் போர்ப்பர், பிடியன நடையாள் பெய்வளை மடந்தை பிறைநுத லவளொடும் உடனாய்க், கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து கொள்ளமுன் நித்திலஞ் சுமந்து, குடிதனை நெருங்கிப்[3] பெருக்கமாய்த் தோன்றுங் கோணமா மலையமர்ந் தாரே. 2

பனித்திளந் திங்கட் பைந்தலை நாகம் படர்சடை முடியிடை வைத்தார், கனித்திளந் துவர்வாய்க் காரிகை பாக மாகமுன் கலந்தவர் மதில்மேல், தனித்தபே ருருவ விழித்தழல் நாகந் தாங்கிய மேருவெஞ் சிலையாக், குனித்த[4] தோர் வில்லார் குரைகடல் சூழ்ந்த கோணமா மலையமர்ந் தாரே. 3

பழித்தி[5] ளங் கங்கை சடையிடை[6] வைத்துப் பாங்குடை மதனனைப் பொடியா, விழித்தவன் தேவி[7] வேண்டமுன் கொடுத்த விமலனார் கமலமார் பாதர், தெழித்துமுன் அரற்றுஞ் செழுங்கடல் தரளஞ் செம்பொனும் இப்பியுஞ் சுமந்து, கொழித்துவன் திரைகள் கரையிடைச் சேர்க்குங் கோணமா மலையமர்ந் தாரே. 4

தாயினும் நல்ல தலைவரென் றடியார் தம்மடி போற்றிசைப்பார்கள், வாயினும் மனத்தும் மருவிநின் றகலா மாண்பினர் காண்பல வேடர், நோயிலும் பிணியுந் தொழிலர்பால் நீக்கி நுழைதரு நூலினர் ஞாலம், கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த கோணமா மலையமர்ந் தாரே. 5

பரிந்துநன் மனத்தால் வழிபடும் மாணி[8] தன்னுயிர் மேல் வருங் கூற்றைத், திரிந்திடா வண்ணம்[9] உதைத்தவற் கருளுஞ் செம்மையார் நம்மையா ளுடையார், விரிந்துயர் மௌவல் மாதவி புன்னை வேங்கைவண் செருந்திசெண் பகத்தின், குருந்தொடு முல்லை கொடிவிடும் பொழில்சூழ் கோணமா மலையமர்ந் தாரே. 6-7

[2] கடல் ஓதம் - கடல் அலை; நித்திலம் - முத்து. [3] நெருக்கி என்றும் பாடம். [4] குனித்த - வளைத்த. [5] பழித்து - பழித்தது போல. [6] சடைமுடி என்றும் பாடம். [7] தேவி - இரதிதேவி. [8] மாணி - பிரமசாரி; மார்க்கண்டேயர். [9] திரிந்திடா வண்ணம் - வரம்பு கடந்து செல்லாதபடி.

எடுத்தவன்[10] தருக்கை யிழித்தவர் விரலால் ஏத்திட வாத்த மா[11]ம் பேறு, தொடுத்தவர் செல்வந் தோன்றிய பிறப்பும் இறப் பறி யாதவர் வேள்வி, தடுத்தவர் வனப்பால் வைத்ததோர் கருணை தன்னருட் பெருமையும் வாழ்வும், கொடுத்தவர் விரும் பும் பெரும்புக ழாளர் கோணமா மலையமர்ந் தாரே. 8

அருவரா தொருகை வெண்டலை யேந்தி யகந்தொறும் பலி யுடன் புக்க, பெருவரா யுறையும் நீர்மையர் சீர்மைப் பெருங் கடல் வண்ணனும் பிரமன், இருவரும் அறியா வண்ணமொள் ளெரியாய் உயர்ந்தவர் பெயர்ந்தநன் மாற்கும், குருவராய் நின்றார் குரைகழல் வணங்கக் கோணமா மலையமர்ந் தாரே. 9

நின்றுணுஞ் சமணும் இருந்துணுந் தேரும் நெறியலா தன புறங்கூற, வென்றுநஞ் சுண்ணும் பரிசினர் ஒருபால் மெல்லிய லொடும்உட னாகித், துன்றுமொண் பௌவ மவ்வலுஞ் சூழ்ந்து தாழ்ந்துறு திரைபலமோதிக், குன்றுமொண் கானல்[12] வாசம்வந் துலவுங் கோணமா மலையமர்ந் தாரே. 10

குற்றமி லாதார் குரைகடல் சூழ்ந்த கோணமா மலையமர்ந் தாரைக், கற்றுணர் கேள்விக் காழியர் பெருமான் கருத்துடை[13] ஞானசம் பந்தன், உற்றசெந் தமிழார் மாலையீ ரைந்தும் உரைப் பவர் கேட்பவர் உயர்ந்தோர், சுற்றமு மாகித் தொல்வினை யடை யார் தோன்றுவர் வானிடைப் பொலிந்தே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கோணேசுவரர்; தேவி—மாதுமையாள்.

---

## 2. திருக்கேதீச்சரம்

பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விருது[1] குன்றமா மேருவில் நாணர வாஅனல் எரிஅம்பாற், பொருது மூவெயில் செற்றவன் பற்றிநின் றுறைபதி யெந்நாளும்,

---

10 எடுத்தவன் - இங்கு இராவணன். 11 ஆத்தம் - ஆப்தம்; அன்பு. 12 கானல் - கடற்கரைச் சோலை. 13 கருத்துடன் என்றும் பாடம். 1 விருது - வெற்றிச்சின்னம் அமைந்த.

கருது கின்றவூர் கனைகடற் கடிகமழ் பொழிலணி மாதோட்டம்,[2]
கருத நின்றகே தீச்சரங்[3] கைதொழக் கடுவினை யடையாவே. 1

பாடல் வீணையர் பலபல சரிதையர் எருதுகைத் தருநட்டம்,
ஆடல் பேணுவர் அமரர்கள் வேண்டநஞ் சுண்டிருள் கண்டத்தர்,
ஈட மா[4]வது இருங்கடற் கரையினில் எழில்திகழ் மாதோட்டம்,
கேடி லாதகே தீச்சரந் தொழுதெழக்[5] கெடுமிடர் வினைதானே. 2

பெண்ணொர் பாகத்தர் பிறைதவழ் சடையினர் அறைகழல் சிலம்பார்க்கச், சுண்ண மாதரித் தாடுவர் பாடுவர் அகந்[6] தொறும் இடுபிச்சைக், குண்ண லாவதோர் இச்சையி னுழல்பவர் உயர்தரு மாதோட்டத், தண்ணல் நண்ணுகே தீச்சரம் அடைபவர்க் கருவினை யடையாவே. 3

பொடிகொள் மேனியர் புலியத ளரையினர் விரிதரு கரத்தேந்தும், வடிகொள் மூவிலை வேலினர் நூலினர் மறிகடல் மாதோட்டத், தடிக ளாதரித் திருந்தகே தீச்சரம் பரிந்தசிந் தையராகி, முடிகள் சாய்த்தடி பேணவல் லார்தம்மேல் மொய்த்தெழும் வினைபோமே. 4

நல்ல ராற்றவும் ஞானநன் குடையர்தம் மடைந்தவர்க் கருளிய, வல்லர் பார்மிசை வான்பிறப் பிறப்பிலர் மலிகடல் மாதோட்டத், தெல்லையில்புகழ் எந்தைகே தீச்சரம் இராப்பகல் நினைந்தேத்தி, அல்லல் ஆசறுத் தரனடி யிணைதொழும் அன்பராம் அடியாரே. 5

பேழை[7] வார்சடைப் பெருந்திரு மகள்தனைப் பொருந்த வைத் தொருபாகம், மாழை[8] யங்கயற் கண்ணிபா லருளிய பொருளினர் குடிவாழ்க்கை, வாழை யம்பொழில் மந்திகள் களிப்புற மருவிய மாதோட்டக், கேழல் வெண்மருப் பணிந்தநீள் மார்பர்கே தீச்சரம் பிரியாரே. 6

---

[2] மாதோட்டம் - நகரின் பெயர்; இங்குத் துவட்டா என்ற முனிவர் தவஞ்செய்ததால் இப்பெயர்பெற்றது. மகாதுவட்டாபுரம் என்பது மாதோட்டம் என மருவியது. [3] கேதீச்சரம் - கோயிலின் பெயர்; மாதோட்டக்கேதீச்சரம் என்பது பதிகம். [4] ஈடம் - இடம்: நீட்டல்விகாரம். [5] கேதீச்சரங் கைதொழக் என்றும் பாடம். [6] அகம் - வீடு. [7] பேழை - பெருமை. [8] மாழை-மாவடு; அழகு.

பண்டு நால்வருக் கறமுரைத் தருளிப்பல் லுலகினில் உயிர் வாழ்க்கை, கண்ட நாதனார் கடலிடங் கைதொழக் காதலித் துறை கோயில், வண்டு பண்செயு மாமலர்ப் பொழில்மஞ்ஞை நடமிடு மாதோட்டம், தொண்டர் நாடொறுந் துதிசெயஅருள் செய்கே தீச்சர மதுதானே. 7

தென்னி லங்கையர் குலபதி மலைநலிந் தெடுத்தவன் முடிதிண் தோள், தன்ன லங்கெட அடர்த்தவற் கருள்செய்த தலைவனார் கடல்வாயட், பொன்னி லங்கிய முத்துமா மணிகளும் பொருந்திய மாதோட்டத், துன்னி யன்பொடும் அடியவ ரிறைஞ்சுகே தீச்சரத் துள்ளாரே. 8

பூவு ளானுமப் பொருகடல் வண்ணனும் புவியிடந் தெழுந் தோடி, மேவி நாடிநின் அடி[10]யிணை காண்கிலா வித்தக மென்[11]னாகும், மாவும் பூகமுங் கதலியும் நெருங்குமா தோட்டநன் னகர் மன்னித், தேவி தன்னொடுந் திருந்துகே தீச்சரத் திருந்தஎம் பெருமானே. 9

புத்த ராய்ச்சில புனைதுகி லுடையவர் புறனுரைச் சமண் ஆதர், எத்த ராகிநின் றுண்பவ ரியம்பிய ஏழைமை[12] கேளேன் மின், மத்த யானையை மறுகிட உரிசெய்து போர்த்தவர் மாதோட்டத், தத்தர் மன்னுபா லாவி[13]யின் கரையிற்கே தீச்சரம் அடைமின்னே. 10

மாடெ லாம்மண முரசென[14]க் கடலின தொலிகவர் மாதோட்டத், தாட லேறுடை அண்ணல்கே தீச்சரத் தடிகளை யணிகாழி, நாடு ளார்க்கிறை ஞானசம் பந்தன்சொல் நவின்றெழு பாமாலைப், பாட லாயின பாடுமின் பத்தர்கள் பரகதி பெறலாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கேதீச்சுவரர்; தேவி—கௌரியம்மை.

---

[10] எழுந்தோடுதல் - மேலெழுந்து பறத்தல். நுன்னடி என்றும் பாடம். [11] வித்தகம் - அதிசயம். [12] ஏழைமை - சிறுபுன் சொல். [13] பாலாவி - ஒரு நதி. [14] மணமுரசு என - இங்கு மேல் கடலாதலின் சிறுமுழக்கமேயுள்ள குறிப்பு.

◦◦○ ★ ○◦◦

## 1. திருஆலவாய்*

### திருவிருக்குக்குறள்

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீல மாமிடற், றால வாயிலான்
பால தாயினார், ஞாலம் ஆள்வரே. 1

ஞாலம் ஏழுமாம், ஆல வாயிலார்
சீல மே[1] சொலீர், காலன் வீடவே. 2

ஆல நீழலார், ஆல வாயிலார்
கால காலனார், பால தாமினே. 3

அந்த மில்புகழ், எந்தை யாலவாய்
பந்தி யார்கழல், சிந்தை செய்ம்மினே. 4

ஆட லே[2] ற்றினான், கூட லாலவாய்
பாடி யேமனம், நாடி வாழ்மினே. 5

அண்ணல் ஆலவாய், நண்ணி னான்றனை
எண்ணி யேதொழத், திண்ணம் இன்பமே. 6

அம்பொன் ஆலவாய், நம்ப னார்கழல்
நம்பி[3] வாழ்பவர், துன்பம் வீடுமே. 7

அரக்க னார்வலி[4], நெருக்கன் ஆலவாய்
உரைக்கு முள்ளத்தார்க், கிரக்கம் உண்மையே. 8

அருவன் ஆலவாய், மருவி னான்றனை
இருவ ரேத்தநின், றுருவம் ஓங்குமே. 9

ஆரம் நாகமாம், சீரன் ஆலவாய்த்
தேர மண்செற்ற[5], வீர னென்பரே. 10

---

* ஆலவாய் - மதுரையிலுள்ள ஆலயத்தின் பெயர்: காரணப் பெயர். இது நான்மாடக்கூடல், கடம்பவனம், துவாதசாந்தத் தலம், பூலோக கயிலாயம், சிவராசதானி, வெள்ளியம்பலம் எனப் பல பெயர்களை யுடையது. [1] சீலம் - புகழ்; சரிதை. [2] ஆடல் - வலிமை. [3] நம்பி - விரும்பி. [4] அரக்கனார்வலி என்றும் பாடம். [5] செற்ற: காலவழுவமைதி.

அடிகள் ஆலவாய்ப், படிகொள் சம்பந்தன்
முடிவி லின்தமிழ், செடிகள்[6] நீக்குமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரம்* [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மந்திர மா[1]வது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மா[2]வது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன்[3] திருஆல வாயான் திருநீறே. 1

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந்[4] தருவது நீறு புன்மை[5] தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 2

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது[6] நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ இனியது நீறு
சித்தி தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 3

காண இனியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி அணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகை[7]வது நீறு மதியைத் தருவது நீறு
சேணந்[8] தருவது நீறு திருஆல வாயான் திருநீறே. 4

பூச இனியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச இனியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்

---

[6] செடிகள் - துன்பங்கள். * திருவெண்ணீற்றினால் பாண்டியனது சுரப்பிணியைத் தீர்த்தமையால், இது **திருநீற்றுப் பதிகம்** எனப் பெயர் பெறும். [1] மந்திரம் - வேதம்; நினைப்பவனைக் காப்பதுமாம். [2] தந்திரம் - சிவாகமம். [3] செந்துவர் வாயுமை பங்கன் - இறைவன் மீனாட்சிசுந்தரராய் வீற்றிருக்கும் திருக்கோலம். [4] போதம்-சிவஞானம். [5] புன்மை-ஆணவ மலம். [6] சத்தியமாவது என்றும் பாடம். [7] மாணம் - மாண்பு; தகை-மேம்பாடு. [8] சேணம் - விண்ணுலக வின்பம்.

ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருஆல வாயான் திருநீறே. 5

அருத்தம[9] தாவது நீறு அவலம் அறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வானம் அளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே. 6

எயிலது அட்டது நீறு இருமைக்கும் உள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கியமாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தால வாயான் திருநீறே. 7

இராவணன் மேலது நீறு எண்ணத் தகுவது நீறு
பராவண[10] மாவது நீறு பாவம் அறுப்பது நீறு
தராவண[11] மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி ஆல வாயான் திருநீறே. 8

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்கள் தங்கள் மெய்யது வெண்பொடி நீறு
ஏல உடம்பிடர் தீர்க்கும் இன்பந் தருவது நீறு
ஆலம துண்ட[12] மிடற்றெம் ஆல வாயான் திருநீறே. 9

குண்டிகைக் கையர்[13]க ளோடு சாக்கியர் கூட்டமுங் கூடக்[14]
கண்டிகைப் பிப்பது நீறு கருத இனியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளார் ஏத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்தும் ஆல வாயான் திருநீறே. 10

ஆற்றல் அடல்விடை யேறும் ஆலவா யான்திரு நீற்றைப்
போற்றிப் புகலி நிலாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்ன னுடலுற்ற தீப்பிணி[15] யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

9 அருத்தம்-செல்வம். 10 பராவணம் - பராசக்தியின் வண்ணம். 11 தராவணம்-பூதேவியின் நிறம். 12 ஆலமுதுண்ட என்றும் பாடம். 13 குண்டிகைக் கையர்-சமண குருமார். 14 கூடாக் என்றும் பாடம். 15 தீப்பிணி - தீயபிணி; தீயினால் விளைந்த பிணி; அமணர் இட்ட தீயும் ஆணவமாகிய பிணியும் என்றலுமாம்.

பண் - கொல்லி* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மானினேர்விழி மாதராய்வழு திக்குமாபெருந் தேவிகேள்
பானல்வாயொரு பாலன்[1] ஈங்கிவன் என்றுநீபரி வெய்திடேல்
ஆனை மாமலை யாதி[2] யாய இடங்களிற்பல அல்லல்[3] சேர்
ஈனர்கட்கெ[4] ளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 1

ஆகமத்தொடு மந்திரங்க ளமைந்தசங்கத பங்கமாப்
பாகதத்[5]தொ டிரைத்துரைத்த சனங்கள்வெட்குறு பக்கமா
மாகதக்கரி போல்திரிந்து புரிந்துநின்றுணும் மாசுசேர்
ஆகதர்[6]க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 2

அத்தகுபொருள் உண்டுமில்லையு மென்றுநின்றவர்க் கச்சமா
ஒத்தொவ்வாமை மொழிந்துவாதி லழிந்தெழுந்த கவிப்பெயர்ச்
சத்திரத்தின் மடிந்தொடிந்து சனங்கள்வெட்குற நக்கமே
சித்திரர்க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 3

சந்துசேனனு[7]ம் இந்துசேனனுந் தருமசேனனுங் கருமைசேர்
கந்துசேனனு[8]ங் கனகசேனனும் முதலதாகிய பெயர்கொளா
மந்திபோல்திரிந் தாரியத்தொடு செந்தமிழ்ப்பயன் அறிகிலா
அந்தகர்[9]க்கெளி யேனலேன்திரு ஆலவாயரன் நிற்கவே. 4

கூட்டினார்கிளி யின்விருத்தம் உரைத்ததோரொலி யின்தொழிற்
பாட்டு[10]மெய்சொலிப் பக்கமேசெலும் எக்கர்தங்களைப் பல்லறம்

---

* இப்பதிகம் தம்மைப் பாலன் எனப் பயந்த மங்கையர்க்கரசியாரை நோக்கிக் கூறித் தேற்றியதாகும். இஃது ஒன்றே தனிப்பட்டவரை முன்னிலைப்படுத்திக் கூறிய பதிகம் ஆகும். [1] பானல் - பால் நல்; பானல்வாய் ஒருபாலன் - இளமைப்பருவம் குறித்தது. பாலருவாயர் என்ற குறிப்புமாம். [2] ஆதி என்றதனால் பன்றிமலை, நாகமலை, பசுமலை முதலியனவும்கொள்க. [3] பல அல்லல் - சுடுபாறையில் கிடத்தல், மயிர்பறித்தல் முதலிய உடற்றுன்பங்கள். [4] தீனர்கட்கு என்றும் பாடம். [5] சங்கத பங்கம்-பாகதத்தோடு வடமொழிச் சிதைவுகள்; பாகதம்-பிராகிருதம். [6] ஆகதர்-சமணர். [7] சேனன் - சமணர் பட்டப்பெயர். [8] கந்திசேனன் என்றும் பாடம். [9] அந்தகர் - அறிவுக்கண் இழந்தவர். [10] கிளிவிருத்தம், எலிப்பாட்டு-இவை சமணரின் சமயச்சிறு நூல்கள்; இவை, நரிவிருத்தம் போல, நிலையாமையைக் குறிப்பன.

காட்டியேவரு மாடெலாங்கவர் கையரைக்கநி வொன்றிலாச்
சேட்டைகட்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. 5
கனகநந்தி[11] யும் புட்பநந்தியும் பவணநந்தியுங் குமணமா
சுனகநந்தியுங் குனகநந்தியுந் திவணநந்தியும் மொழிகொளா
அனகநந்தியர் மதுவொழிந்தவ மேதவம்புரி வோமெனும்
சினகரு[12] க்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. 6
பந்தணம்[13] மவை யொன்றிலம்பரி வொன்றிலம்மென வாசக
மந்தணம்[14] பல பேசிமாசறு சீர்மையின்றிய நாயமே
அந்தணம்மரு கந்தணம்மது புத்தணம்மது சித்தணச்[15]
சிந்தணர்[16] க்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. 7
மேலெனக்கெதி ரில்லையென்ற அரக்கனார்மிகை செற்றதீப்
போலி[17]யைப்பணி யக்கிலாதொருபொய்த்தவங்கொடு குண்டிகை
பீலிகைக்கொடு பாயிடுக்கி நடுக்கியேபிறர் பின்செலும்
சீலி[18] கட்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. 8
பூமகற்கும் அரிக்குமோர்வரு புண்ணியன் அடி போற்றிலார்
சாமவத்தையினார்கள்[19]போல்தலையைப்பறித்தொருபொய்த்தவம்
வேமவத்தைசெ லுத்திமெய்ப்பொடி யட்டிவாய் சகதி[20] க்குநேர்
ஆமவர்க்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. 9
தங்களுக்குமச் சாக்கியர்க்குந் தரிப்பொணாதநற் சேவடி
எங்கள்நாயகன் ஏத்தொழிந்திடுக் கே[21]மடுத்தொரு பொய்த்தவம்
பொங்குநூல்வழி யன்றியேபுல வோர்களைப்பழிக் கும்பொலா
அங்கதர்க்கெளி யேனலேன் திரு ஆலவாயரன் நிற்கவே. 10
எக்கரா[22] ம்அமண் கையருக்கெளி யேனலேன் திரு ஆலவாய்ச்
சொக்கனென்னு ளிருக்கவேதுளங் கும்முடித்தென்னன் முன்னிவை

---

[11] நந்தி - சமணருள்ளும் புத்தருள்ளும் குருமார்கொள்ளும் பட்டப்பெயர். [12] சினகர் - சமணர். [13] பந்தணம் - கட்டு. [14] மந்தணம்-இரகசியம். [15] இவ்வடி சமணர்களின் பரிபாஷைகள். [16] சிந்தணர் - சமணர். [17] தீப்போலி - சிவன். [18] சீலி - ஒழுக்கு. [19] சாமவத்தையினார்கள் - சாகும் அவத்தையுள்ளோர். [20] சகதி - சேறு. [21] இடுக்கே - வஞ்சமே. [22] எக்கர் - வஞ்சகர். [23] துளங்கும் முடித்தென்னன் முன்னிவை - உரைசெய்த - வெப்புநோயால் தலைதூக்கமுடியாமல் கிடந்த பாண்டியன்முன்பு இப்பதிகம் பாடப்பட்டது என்பதாம்.

தக்கசீர்ப்புக லிக்குமன்தமிழ் நாதன்ஞானசம் பந்தன்வாய்
ஒக்கவேயுரை செய்த[23]பத்தும் உரைப்பவர்க்கிடர் இல்லையே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - கௌசிகம்* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

காட்டு மாவ து[1]ரித்துரி போர்த்துடல்
நாட்ட மூன்றுடை யாயுரை செய்வனான்
வேட்டு வேள்விசெய் யாஅமண் கையரை
ஓட்டி[2] வாதுசெ யத்[3] திரு வுள்ளமே. 1

மத்த யானையின் ஈருரி மூடிய
அத்த னேயணி ஆலவா யாய்பணி
பொய்த்த வன்தவ வேடத்த ராஞ்சமண்
சித்த ரை[4] யழிக் கத்திரு வுள்ளமே. 2

மண்ண கத்திலும் வானிலும் எங்குமாம்
திண்ண கத்[5] திரு ஆலவா யாயருள்
பெண்ண கத்[6] தெழிற் சாக்கியப் பேயமண்
தெண்ணர்[7] கற்பழிக் கத்திரு வுள்ளமே. 3

ஓதி யோத்த[8]றி யாஅமண் ஆதரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
ஆதி யேதிரு ஆலவா யண்ணலே
நீதி யாக நினைந்தருள் செய்திடே. 4

வைய மார்புக ழாயடி யார்தொழும்
செய்கை யார்திரு ஆலவா யாய்செப்பாய்

---

* இப்பதிகம் சமணரை வாதில் வெல்ல இறைவனது திருவுள்ளத்தின் அருட் குறிப்பினை அறியப் பாடியதாகும். [1] காட்டுமா - யாகத்தில் எழுந்து பகை காட்டிவந்த யானை; காட்டுயானையுமாம். அது பகுதிப் பொருள் விகுதி. [2] ஓட்டி - ஒட்டி. [3] செய்ய என்றும் பாடம். [4] சமண் சித்தர் - சமண சமயமே மெய்ச் சமயம் என்னும் சித்தத்தை யுடையோர்; சமணருள் சித்திபெற்றோர் எனினுமாம். [5] திண்ணகம் - செறிந்து பிரியா நிறைவுடைமை. [6] பெண்ணகம் - பெண் துறவியரிடையில். [7] தெண்ணர் - கொடியர். [8] ஓத்து - வேதம்.

கையி லுண்டுழ லும்அமண் கையரைப்
பைய [9] வாதுசெ யத்திரு வுள்ளமே. 5

நாறு சேர்வயல் தண்டலை மிண்டிய
தேற லார்திரு ஆலவா யாய்செப்பாய்
வீறி லாத்தவ மோட்டமண் [10] வேடரைச்
சீறி வாதுசெ யத்திரு வுள்ளமே. 6

பண்ட டித்தவத் தார்பயில் வாற்றெழும்
தொண்ட ருக்கெளி யாய்திரு ஆலவாய்
அண்ட னேயமண் கையரை [11] வாதினில்
செண்ட டித்து [12] ள ற [13] த்திரு வுள்ளமே. 7

அரக்கன் றன்கிரி யேற்றவன் தன்முடிச்
செருக்கி னைத்தவிர்த் தாய்திரு ஆலவாய்ப்
பரக்கும் மாண்புடை யாயமண் பாவரைக்
கரக்க வாதுசெ யத்திரு வுள்ளமே. 8

மாலும் நான்முக னும்அறி யாநெறி
ஆல வாயுறை யும்அண்ண லேபணி
பேலை வீடுண ராவெற்ற ரையரைச்
சால வாதுசெ யத்திரு வுள்ளமே. 9

கழிக்க ரைப்படு மீன்கவர் வார [14] மண்
அழிப்ப ரையழிக் கத்திரு வுள்ளமே
தெழிக்கும் பூம்புனல் சூழ்திரு ஆலவாய்
மழுப்ப டையுடை மைந்தனே நல்கிடே. 10

செந்தெ ஞ [15] முர லுந்திரு ஆலவாய்
மைந்த னேயென்று வல்லம ணைசறச்
சந்த மார்தமிழ் கேட்டமெய்ஞ் ஞானசம்
பந்தன் சொற்பக ரும்பழி நீங்கவே. 11

திருச்சிற்றம்பலம்

---

[9] பைய - கெட. [10] மோட்டமண் - முருடாகிய அமண். [11] கள்ளரை என்றும் பாடம். [12] செண்டடித்தல்-இலகுவில் வெற்றி பெறுதல். [13] துழற என்றும் பாடம். [14] மீன் கவர்வார் - மீன்பிடித் தின்பவர். [15] செந்தண என்றும் பாடம்.

பண் - கௌசிகம் *

திருச்சிற்றம்பலம்

செய்ய னே[1] திரு ஆலவாய் மேவிய
ஐய னே அஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராம் அம ணர்கொளு வுஞ்சுடர்[2]
பைய வேசென்று[3] பாண்டியற் காகவே.[4] 1

சித்த னே திரு ஆலவாய் மேவிய
அத்த னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எத்த ராம் அம ணர்கொளு வுஞ்சுடர்
பத்திமன்[5] தென்னன் பாண்டியற் காகவே. 2

தக்கன் வேள்வி தகர்த்தருள் ஆலவாய்ச்
சொக்க னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எக்க ரா[6] ம் அம ணர்கொளு வுஞ்சுடர்
பக்க மே[7] சென்று பாண்டியற் காகவே. 3

சிட்ட னே திரு ஆலவாய் மேவிய
அட்ட மூர்த்திய னேயஞ்ச லென்றருள்
துட்ட ராம் அம ணர்கொளு வுஞ்சுடர்
பட்டி மன்[8] தென்னன் பாண்டியற் காகவே. 4

நண்ண லார்புரம் மூன்றெரி ஆலவாய்
அண்ண லேயஞ்ச லென்றருள் செய்யெனை
எண்ணி லா அம ணர்கொளு வுஞ்சுடர்
பண்ணி யல்தமிழ்[9] ப் பாண்டியற் காகவே. 5

---

* இப்பதிகம் திருமடத்தில் சமணர் கொளுவிய தீயை வெப்பு நோயாகப் பாண்டியன்மீது ஏவியதாகும். 1 செய்யனே - எரி போன்ற சிவந்த மேனியனே. 2 கொளுவுஞ்சுடர் - மிகுந்த தழலைக் கையினிற் கொண்டுகொளுவிய தீ. 3 பையவே சென்று - அருட் குறிப்பு; தீயின் உருவாய் அன்றிவெப்புநோயின் உருவுடன் மெல்லச்சென்று. 4 ஆகவே - ஆக - ஆசிமொழி. 5 பத்திமன் - பத்தி சேரும் மன்னவன். 6 எக்கர் - கொடியர். 7 பக்கமே - அவர்பக்கமேயாக; 'தீத்திறத்தார் பக்கமே சேர்க' (சிலப்பதிகாரம்). 8 பாண்டி மன் என்பது பண்டியன், பட்டிமன் என ஆயது. 9 பண் இயல்தமிழ்- இசைத்தமிழ், இயற்றமிழ்; இனம்பற்றி நாடகத் தமிழும்கொள்க.

தஞ்ச மென்றுன் சரண்புகுந் தேனையும்
அஞ்ச லென்றருள் ஆலவா யண்ணலே
வஞ்சஞ் செய்தம ணர்கொளு வுஞ்சுடர்
பஞ்ச வன்தென்னன் பாண்டியற் காகவே. 6

செங்கண் வெள்விடை யாய்திரு ஆலவாய்
அங்க ணாஅஞ்ச லென்றருள் செய்யெனைக்
கங்கு லார்அமண் கைய ரிடுங்கனல்[10]
பங்கமில் தென்னன் பாண்டியற் காகவே. 7

தூர்த்தன்[11] வீரந் தொலைத்தருள் ஆலவாய்
ஆத்த னே[12] அஞ்ச லென்றருள் செய்யெனை
ஏத்தி லாஅம ணர்கொளு வுஞ்சுடர்
பார்த்தி வன்தென்னன் பாண்டியற் காகவே. 8

தாவி னான்[13] அயன் தானறி யாவகை
மேவி னாய்திரு ஆலவா யாயருள்
தூவி லா[14] அம ணர்கொளு வுஞ்சுடர்
பாவி னான்தென்னன் பாண்டியற் காகவே. 9

எண்டி சைக்கெழில் ஆலவாய் மேவிய
அண்ட னேயஞ்ச லென்றருள் செய்யெனைக்
குண்ட ராம்அம ணர்கொளு வுஞ்சுடர்
பண்டிமன் தென்னன் பாண்டியற் காகவே. 10

அப்பன் ஆலவா யாதி யருளினால்
வெப்பந்[15] தென்னவன் மேலுற மேதினிக்
கொப்ப[16] ஞானசம் பந்தன் உரைபத்தும்
செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

[10] இவ்வடி இரவில் அமணர் தீ இட்டனர் என்பதை அறிவிக்கும். [11] தூர்த்தன் - தீயோன்; இராவணன். [12] ஆத்தன் - (ஆப்தன்) உற்றவன்; ஆர்த்தனே என்றும் பாடம். [13] தாவினன்-உலகத்தை யளந்ததிருமால்; தாவுதல்-இங்கு அளத்தல். [14] தூ விலா-தூய்மை இல்லாத. [15] வெப்பம் - சுடர் வெப்பு நோயாகமாறி. [16] மேதினிக் கொப்ப - உலகத்திற்கு நன்மைஉண்டாக.

திருவிராகம். பண் - கௌசிகம்*

திருச்சிற்றம்பலம்

வீடலால வாயிலாய்[1] விழுமியார்கள் நின்கழல்
பாடலால வாயிலாய்[2] பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே. 1

பட்டிசைந்த அல்குலாள் பாவையாளோர் பாகமா
ஒட்டி[3] சைந்த தன்றியும் உச்சியாளொ[4] ருத்தியாக்
கொட்டிசைந்த ஆடலாய் கூடல்ஆல வாயிலாய்
எட்டிசைந்த மூர்த்தி[5] யா யிருந்தவாறி தென்னையே. 2

குற்றம்நீ குணங்கள்நீ கூடல்ஆல வாயிலாய்
சுற்றம்நீ பிரானும்நீ தொடர்ந்திலங்கு சோதிநீ[6]
கற்றநூற் கருத்தும்நீ அருத்தமின்ப மென்றிவை
முற்றும்நீ புகழ்ந்துமுன் உரைப்பதென்மு கம்மனே.[7] 3

---

* இப்பதிகம், சமணரை வென்று சைவத்தை நிலைநாட்டியபின் அரசனும், தேவியும், மந்திரியும் உடன்வர ஆலவாய் அண்ணலிடம் சென்று தமக்குச் செய்த அருட்டிறனை வியந்து பாடியதாகும். [1] வீடு - அல் - ஆல - வாய் - இலாய்: கரியவிடத்தையுடைய பாம்பினால் காட்டப்பட்ட இடத்தை வீடாக உடையவரே. [2] பாடலால்-அ-வாயிலாய்: பாடுதலினால் அந்த வாக்கினிடத்தில் விளங்குபவரே. [3] ஒட்டுதல் - பிரிப்பின்றிப் பொருந்துதல். [4] உச்சியாள் - கங்கை. [5] கொட்டு இசைந்த ஆடல் - தாளம் முதலியவற்றிற்கு இசைந்தபடி ஆடல்; கொட்டியாடலுமாம். இது திரிபுரம் எரித்தபோது ஆடிய ஆடல்; எட்டு இசைந்த மூர்த்தி - அட்டமூர்த்தம். [6] குற்றம்நீ குணங்கள்நீ—"அவையே தானே யாயிரு வினையின்......ஆணையின் நீக்கமின்றி நிற்கும்" (சிவஞானபோதம்) என்பார் இவ்வாறு கூறினர். சுற்றம்நீ......சோதிநீ—சுற்றம் - இறைவன் உலகெலாமாய் அவையேயாயிருக்கும் நிலையினையும், பிரான் - அவற்றின் வேறாய்த் தானேயாய் இருக்கும் நிலையினையும், தொடர்ந்து இலங்கு சோதி - அவற்றோடு உடனாகி நிற்கின்ற நிலையினையும் உணர்த்தின. [7] கற்றநூற் கருத்து - வேத சிவாகமங்கள். அருத்த இன்பம் - இருவினைக்கு ஈடாக உயிர்கள் போகங்களை நுகரச்செய்யும் தன்மை. புகழ்ந்து......முகம்மனே-இவ்வுண்மைகளை எப்போதும் மனத்துட்கொண்டு மறவாது ஒழுகி அன்பு செய்தல் அன்றி முகமனாக உரைத்தலில் பயனில்லை என்பதாம்.

முதிருநீர்ச் சடைமுடி முதல்வநீ முழங்கழல்
அதிரவீசி யாடுவாய் அழகன்நீ புயங்கன்நீ
மதுரன்நீ மணாளன்[8] நீ மதுரையால வாயிலாய்
சதுரன்[9] நீ சதுர்முகன் கபாலம்ஏந்து சம்பு[10]வே. 4
கோலமாய நீள்மதிற் கூடல் ஆல வாயிலாய்
பாலனாய தொண்டுசெய்து பண்டுமின்றும் உன்னையே[11]
நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலும்
சீலமாய சிந்தையில் தேர்வதில்லை தேவரே. 5
பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க[12] ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடல்ஆல வாயிலாய்
நின்றயங்கி யாடலே[13] நினைப்பதே நியமமே. 6
ஆதியந்த மாயினாய் ஆலவாயில் அண்ணலே
சோதியந்த மாயினாய் சோதியுள்ளொர் சோதியாய்
கீதம்வந்த வாய்மையால் கிளர்தருக்கி னார்க்கலால்
ஓதிவந்த வாய்மையால் உணர்ந்துரைக்க லாகுமே. 7
கறையிலங்கு கண்டனே கருத்திலாக் கருங்கடல்
துறையிலங்கை மன்னனைத் தோளடர வூன்றினாய்
மறையிலங்கு பாடலாய் மதுரையால வாயிலாய்
நிறையிலங்கு நெஞ்சினால்[14] நினைப்பதே நியமமே. 8
தாவணவ் விடையினாய் தலைமையாக நாடொறும்
கோவணவ் வுடையினாய் கூடல் ஆல வாயிலாய்
தீவணம் மலர்மிசைத் திசைமுகனும் மாலும்நின்
தூவணம் அளக்கிலார் துளக்கமெய்து வார்களே. 9
தேற்றமில் வினைத்தொழில் தேருஞ் சமணரும்
போற்றிசைத்து நின்[15]கழற் புகழ்ந்துபுண் ணியங்கொளார்

---

[8] மதுரன் - இன்பம் செய்பவன்; மணாளன் - தலைவன். [9] சதுரன் - வெற்றிப்பாடு உடையவன். [10] சம்பு-இன்பத்தை ஆக்குபவன். [11] உன்னை - உனக்கு: உருபு மயக்கம். [12] பின் தயங்க - பின்புறம் அசைந்தாடி விளங்க. [13] நின் தயங்கி ஆடல் - ஆனந்தக் கூத்து. [14] நிறை இலங்கு நெஞ்சு - பிறி தொன்றனுக்கும் இடமின்றி இறைவனையே நினைக்கும் நெஞ்சு. [15] போற்றி செய்தநின் என்றும் பாடம்.

கூற்றுதைத்த தாளிணைக் கூடல்ஆல வாயிலாய்
நாற்றிசைக்கும் மூர்த்தியாகி நின்றதென்ன நன்மையே. 10

போயநீர் வளங்கொளும் பொருபுனற் புகலியான்
பாயகேள்வி ஞானசம் பந்தன்நல்ல பண்ணினால்
ஆயசொல்லின் மாலைகொண் டாலவாயில் அண்ணலைத்
தீயதீர[17] எண்ணுவார்கள் சிந்தையாவர்[18] தேவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

நாலடிமேல்வைப்பு

பண் - பழம்பஞ்சுரம்* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி[1] அமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
பாதி மாதுட னாய பரமனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 1

வைதி கத்தின் வழியொழு காதவக்
கைத வ[2] முடைக் காரமண் தேரரை
எய்தி வாது[3] செ யத்[4] திரு வுள்ளமே
மைதி கழ்தரு மாமணி கண்டனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 2

மறைவ ழக்கமி லாதமா பாவிகள்
பறித லைக்கையர் பாயுடுப் பார்களை
முறிய வாதுசெ யத்திரு வுள்ளமே
மறியு லாங்கையில் மாமழு வாளனே

---

[17] தீயதீர - தீயவை எல்லாம் தீரும்படி. [18] சிந்தையார்வர் என்றும் பாடம். * இப்பதிகம், சமணரை வாதில்வெல்லவும் இறைவன் புகழ்மலியவும் வேண்டிப் பாடியதாகும். [1] ஆதமில்லி-அறிவிலி. [2] கைதவம் - பொய். [3] எய்தவாது என்றும் பாடம். [4] செய்யத் என்றும் பாடம்; இதனை இப்பதிகம் முழுமையுங் கொள்க.

ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 3

அறுத்த வங்கமா று[5] யின நீர்மையைக்
கறுத்த[6] வாழமண் கையர்கள்[7] தம்மொடும்
செறுத்து வாதுசெ யத்திரு வுள்ளமே
முறித்த[8] வாண்மதிக் கண்ணி முதல்வனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 4

அந்த ணாளர் புரியும் அருமறை
சிந்தை செய்யா அருகர் திறங்களைச்
சிந்த வாதுசெ யத்திரு வுள்ளமே
வெந்த நீற தணியும் விகிர்தனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 5

வேட்டு வேள்விசெ யும்பொரு ளைவிளி
மூட்டு சிந்தை முருட்டமண் குண்டரை
ஓட்டி[9] வாதுசெ யத்திரு வுள்ளமே
காட்டி லானை உரித்தஎங் கள்வனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 6

அழல தோம்பும் அருமறை யோர்திறம்
விழல தென்னும் அருகர் திறத்திறம்[10]
கழல வாதுசெ யத்திரு வுள்ளமே
தழல்இ லங்கு திருவுருச் சைவனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 7

நீற்று மேனிய ராயினர் மேலுற்ற
காற்றுக் கொள்ளவும் நில்லா அமணரைத்

---

[5] அங்கம் ஆறு - வேதாங்கம். [6] கறுத்த-வெறுத்த. கறுத்து என்றும் பாடம். [7] ஆழ் அமண் - பாவக்குழியில் ஆழும் அமணர். கையர் - கீழ்கள். [8] முறித்த - தளிர்த்த. [9] விளி மூட்டு சிந்தை - இகழும் மனம். ஓட்டி - ஒட்டி. [10] திறங்களைக் என்றும் பாடம்.

தேற்றி வாதுசெ யத்திரு வுள்ளமே
ஆற்ற வ்ாள ரக்கற்கும் அருளிணுய்
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 8

நீல மேனி அமணர் திறத்துநின்
சீலம்[11] வாதுசெ யத்திரு வுள்ளமே
மாலும் நான்முக னுங்காண் பரியதோர்
கோல மேனிய தாகிய குன்றமே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே. 9

அன்று முப்புரஞ் செற்ற அழகநின்
துன்று பொற்கழல் பேணு அருகரைத்
தென்ற[12] வாதுசெ யத்திரு வுள்ளமே
கன்று சாக்கியர் காணுத் தலைவனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே. 10

கூடல் ஆலவாய்க் கோனை விடைகொண்டு
வாடல் மேனி அமணரை வாட்டிட
மாடக் காழிச்சம் பந்தன் மதித்தஇப்
பாடல் வல்லவர் பாக்கிய வாளரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவியமகம்

பண் - பழம்பஞ்சுரம்* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**ஆ**லநீழ லுகந்த திருக்கையே யானபாட லுகந்த திருக்கை[1]யே, பாலின் நேர்மொழி யாளொரு பங்கனே பாதமோதலர் சேர்புர பங்கனே[2], கோலநீறணி மேதகு பூதனே கோதிலார்

11 சீலம் - பெருமைவிளங்க. 12 தென்ற-அழிய. * இப்பதிகம் திருநீலகண்டப்பாணாது திருவருட் பேற்றைச் சிறப்பித்துப் பாடியதாகும். 1 இருக்கை - இருப்பிடம்; இருக்கு-இருக்கு வேதம். ஐ: இரண்டனுருபு. 2 புரபங்கன் - புரத்தை அழித்தவன்.

மனம் மேவிய பூதனே, ஆலநஞ்சமு துண்டக ளத்தனே ஆலவா யுறை அண்டர்கள் அத்தனே. 1

பாதியாயுடன் கொண்டது மாலே[3]யே பாம்புதார்மலர்க் கொன்றைநன் மாலேயே, கோதில்நீறது பூசிடு மாகனே[4] கொண்டநற்கையின் மானிட மாகனே, நாதன்நாடொறும் ஆடுவ தானேயே நாடியன்றுரி செய்ததும் ஆனேயே, வேதநூல் பயில் கின்றது வாயிலே விகிர்தனூர் திரு ஆலநல் வாயிலே. 2

காடுநீட துறப்பல கத்தனே காதலால்நினே வார்தம் அகத்தனே, பாடுபேயொடு பூதம சிக்கவே பல்பிணத்தசை நாடிய சிக்கவே, நீடுமாநட மாடவி ருப்பனே நின்னடித்தொழ நாளும் இருப்பனே, ஆடல்நீள்சடை மேவிய அப்பனே[5] ஆலவாயினின் மேவிய அப்பனே. 3

பண்டயன்தலே யொன்றும் அறுத்தியே பாதமோதினர் பாவம் அறுத்தியே, துண்டவெண்பிறை சென்னியி ருத்தி[6]யே தூயவெள்ளெரு தேறியி ருத்தியே, கண்டுகாமனே வேவ விழித்தியே காதலில்லவர் தம்மை யிழித்தியே, அண்டநாயக னேமிகு கண்டனே ஆலவாயினின் மேவிய கண்டனே.[7] 4

சென்றுதாதை யுகுத்தனன் பாலேயே சீறியன்பு செகுத்தனன் பாலேயே, வென்றிசேர்மழுக் கொண்டுமுன் காலேயே வீடவெட்டிடக் கண்டுமுன் காலேயே, நின்றமாணியை யோடின கங்கையால் நிலவமல்கி யுதித்தன கங்கையால், அன்றுநின்னுரு வாகத் தடவியே ஆலவாயர னகத் தடவியே.[8] 5

நக்கமேகுவர் நாடுமோர் ஊருமே நாதன்மேனியின் மாசுணம் ஊருமே, தக்கபூமனேச் சுற்றக் கருளொடே தாரமுய்த்தது பாணற் கருளொடே,[9] மிக்கதென்னவன் தேவிக் கணியையே மெல்லநல்கிய

[3] மாலே - திருமாலே. [4] ஆகன் - உடம்பினன். [5] அப்பன் - அப்பு - நீர். [6] இருத்தி - செல்வம். [7] மிகுகண்டனே - சிறந்த கழுத்தினேயுடையவனே; கண்டனே - புறசமய கண்டனஞ் செய் தவனே. [8] இச்செய்யுள் சண்டீசர் சரிதம் ஒன்றே கூறுவது. [9] தாரம் உய்த்தது பாணற்கருளொடே - இதனேத் "திருநீலகண்டப்பாணர்க்கருளிய திறமும் போற்றி" என்றார் பரஞ்சோதியார். தாரம் - இசை; அரிய பண்டமுமாம். அது பொற்பலகை.

தொண்டர்க்கணியை[10]யே, அக்கினாரமு துண்கல னோடுமே ஆல வாயர னுருமை யோடுமே. 6

வெய்யவன்பல் உகுத்தது குட்டியே வெங்கண்மா சுணங்கை யது குட்டியே, ஐயனேயன லாடிய மெய்யனே அன்பினால்நினை வார்க்கருள் மெய்யனே, வையமுய்ய அன்றுண்டது காளமே[11] வள்ளல்கையது மேவுகங் காளமே[12], ஐபமேற்ப துரைப்பது வீணையே ஆலவாயரன் கையது வீணையே. 7

தோள்கள்பத்தொடு பத்து மயக்கியே தொக்கதேவர் செருக்கை மயக்கியே, வாளரக்கன் நிலத்துக் களித்துமே வந்த மால்வரை கண்டு களித்துமே, நீள்பொருப்பை யெடுத்தவுன் மத்தனே நின்விரற்றலை யான்மத மத்தனே, ஆளுமாதி முறித்தது மெய்கொலோ ஆலவாயர னுய்த்தது மெய்கொலோ. 8

பங்கயத்துள நான்முகன் மாலொடே பாதம்நீண்முடி நேடிட மாலொடே, துங்கநற்றழ லின்உரு வாயுமே தூயபாடல் பயின் றது வாயுமே, செங்கயற்கணி னாரிடு பிச்சையே சென்றுகொண் டுரை செய்வது பிச்சையே, அங்கியைத்திகழ் விப்ப திடக்கையே ஆலவாயர னார திடக்கையே. 9

தேரரோடம ணார்க்குநல் கானையே[13] தேவர்நா டொறுஞ் சேர்வது கானையே, கோரமட்டது புண்ட ரிகத்தையே கொண்ட நீள்கழல்புண்ட ரிகத்தையே, கேரிலூர்கள் அழித்தது நாகமே நீள்சடைத்திகழ் கின்றது நாகமே, ஆரமாக வுகந்தது மென்பதே ஆலவாயர னாரிட மென்பதே. 10

ஈனஞானிகள் தம்மொடு விரகனே[14] யேறுபல்பொருள் முத் தமிழ் விரகனே, ஆனகாழியுள் ஞானசம் பந்தனே ஆலவாயினின் மேயசம் பந்தனே, ஆனவானவர் வாயினுள் அத்தனே அன்ப ரானவர் வாயினுள் அத்தனே, நானுரைத்தன செந்தமிழ் பத் துமே வல்லவர்க்கிவை நற்றமிழ் பத்துமே. 11

திருச்சிற்றம்பலம்

---

10 அணி - திருமங்கிலியத்தை; அணியை - எளிமையாக இருப்பவன். 11 காளம் - விஷம். 12 கங்காளம் - எலும்புக்கூடு. 13 நல்கானையே - அருள் நல்காதவனையே. 14 விரகன் - கூடிப் பழகாமல் முனிபவன்.

பண் - புறநீர்மை* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மட மானி,[1] பங்கயச் செல்வி[2] பாண்டிமா தேவி பணிசெய்து நாடொறும் பரவப், பொங்கழ லுருவன் பூதநா யகனால் வேதமும் பொருள்களும் அருளி, அங்கயற் கண்ணி[3] தன்னொடும் அமர்ந்த ஆலவா யாவதும் இதுவே. 1

வெற்றவே[4] அடியார் அடிமிசை வீழும் விருப்பினன் வெள்ளைநீ றணியும், கொற்றவன் தனக்கு மந்திரி யாய குலச்சிறை குலாவினின் றேத்தும், ஒற்றைவெள் விடையன் உம்பரார் தலைவன் உலகினில் இயற்கையை யொழிந்திட், டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற ஆலவா யாவதும் இதுவே. 2

செந்துவர் வாயாள் சேலன கண்ணாள் சிவன்திரு நீற்றினை வளர்க்கும், பந்தணை விரலாள் பாண்டிமா தேவி பணிசெயப் பாரிடை நிலவும்,[5] சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தந் தண்ணெருக் கம்மலர் வன்னி, அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ணல் ஆலவா யாவதும் இதுவே. 3

கணங்களாய் வரினுந் தமியராய் வரினும் அடியவர் தங்களைக் கண்டால், குணங்கொடு பணியும் குலச்சிறை குலாவும்[6] கோபுரஞ் சூழ்மணிக் கோயில், மணங்கமழ் கொன்றை வாளரா மதியம் வன்னிவண் கூவிள மாலை, அணங்கு[7] வீற் றிருந்த சடைமுடி யண்ணல் ஆலவா யாவதும் இதுவே. 4

---

* இப்பதிகம், குலச்சிறையார் திருஆலவாயைக் காட்ட ஞானசம்பந்தர் கண்டு, பாண்டிமாதேவியார், குலச்சிறையார் இவர்களது தொண்டைவைத்துச் சிறப்பித்துப் பாடியதாகும். இதில் 1-3-5-7-9-ம் பாட்டுக்களில் மங்கையர்க்கரசியார் பணியையும், 2-4 6-8-10-ம் பாட்டுக்களில் குலச்சிறையார் பணியையும் 11-ம் பாட்டில் இருவர் பணிகளையும் பாராட்டியுள்ளமை அறிக. [1] மானி - பெருமையுடைய அம்மையார். [2] பங்கயச்செல்வி - ஆயிரம் இதழ்த் தாமரையில் வீற்றிருக்கும் உமையம்மை போல்வார். [3] அங்கயற் கண்ணி - தலத்து அம்மையின் பெயர். [4] வெற்றவே - வேறொரு பயனும் வேண்டாமலே. [5] பாரிடநிலவும் என்றும் பாடம். [6] பா வும் என்றும் பாடம். [7] அணங்கு - கங்கை.

செய்யதா மரைமேல் அன்னமே யனைய சேயிழை திருநுதற் செல்வி, பையர வல்குற் பாண்டிமா தேவி நாடொறும் பணிந்தினி தேத்த, வெய்யவேற் சூலம் பாசம்அங் குசமான் விரிகதிர் மழு வுடன் தரித்த, ஐயனார் உமையோ டின்புறு கின்றஆலவா யாவதும் இதுவே. 5

நலமில ராக நலமதுண் டாக நாடவர் நாடறி கின்ற, குலமில ராகக் குலமதுண் டாகத் தவம்பணி குலச்சிறை பரவும், கலைமலி கரத்தன் மூவிலை வேலன் கரியுரி மூடிய கண்டன், அலைமலி புனல்சேர் சடைமுடி யண்ணல் ஆலவா யாவதும் இதுவே. 6

முத்தின்தாழ் வடமுஞ் சந்தனக் குழம்பும் நீறுந்தன் மார்பினின் முயங்கப், பத்தியார் கின்ற பாண்டிமா தேவி பாங்கொடு பணிசெய நின்ற, சுத்தமார் பளிங்கின் பெருமலை யுடனே சுடர்மர கதம்அடுத் தாற்போல்,[8] அத்தனார் உமையோ டின்புறு கின்ற ஆலவா யாவதும் இதுவே. 7

நாவணங் கியல்பாம் அஞ்செழுத் தோதி[9] நல்லராய் நல்லியல் பாகும், கோவணம் பூதி சாதனங் கண்டால் தொழுதெழு குலச் சிறை போற்ற, ஏவணங் கியல்பாம் இராவணன் திண்டோள் இரு பதும் நெரிதர வூன்றி, ஆவணங் கொண்ட சடைமுடி யண்ணல் ஆலவா யாவதும் இதுவே. 8

மண்ணெலாம் நிகழ மன்னனாய் மன்னும் மணிமுடிச் சோழன்[10] றன் மகளாம், பண்ணினேர் மொழியாள் பாண்டிமா தேவி பாங்கிறை பணிசெய்து பரவ, விண்ணுளார் இருவர் கீழொடு மேலும் அளப்பரி தாம்வகை நின்ற, அண்ணலார் உமையோ டின்புறு கின்ற ஆலவா யாவதும் இதுவே. 9

தொண்டரா யுள்ளார் திசைதிசை தோறுந் தொழுதுதன் குணத்தினைக் குலாவக், கண்டுநா டோறும் இன்புறுகின்ற குலச்

[8] இவ்வடி இறைவர் பளிங்குமலை போலவும், அம்மை மரகதக் கொடி போலவும் உள்ளார் என்பதை அறிவிக்கும். [9] நாவணங்கு இயல்பாம் அஞ்செழுத்து - பஞ்சாட்சரம் ஓதுதல் நாவிற்கு இயற்கையால் அமைந்தது; 'நாவினுக்கருங்கலம் நமச்சிவாயவே' என்பது தேவாரம். [10] இவ்வடியினால் மங்கையர்க்கரசியார் சோழன் மகளார் என்பதை அறியலாம்.

சிறை கருதிநின் றேத்தக், குண்டரா யுள்ளார் சாக்கியர் தங்கள்
குறியின்கண் நெறியிடை வாரா, அண்டநா யகன்றான் அமர்ந்து
வீற் றிருந்த ஆலவா யாவதும் இதுவே. 10

பன்னலம் புணரும்[11] பாண்டிமா தேவி குலச்சிறை யெனு
மிவர்பணியும், அந்நலம் பெறுசீர் ஆலவா யீசன் திருவடி யாங்
கவை போற்றிக், கன்னலம் பெரிய காழியுள் ஞான சம்பந்தன்
செந்தமி ழிவைகொண், டின்னலம்[12] பாட வல்லவர் இமையோர்
ஏத்தவீற் றிருப்பவர் இனிதே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சொக்கலிங்கப்பெருமான்; தேவி—மீனாட்சியம்மை.

---

## 2. திருஆப்பனூர்*

**பண் - குறிஞ்சி** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முற்றுஞ் சடைமுடிமேன் முதிரா இளம்பிறையன்
ஒற்றை[1]ப் படஅரவம் அதுகொண் டரைக்கணிந்தான்
செற்றமில் சீரானைத் திருஆப்ப னூரானைப்
பற்றும் மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 1

குரவங் கமழ்குழலாள்[2] குடிகொண்டு நின்றுவிண்ணோர்
விரவுந் திருமேனி விளங்கும் வளையெயிற்றின்
அரவம் அணிந்தானை அணியாப்ப னூரானைப்
பரவும் மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 2

முருகு விரிகுழலார் மனங்கொள் அநங்கனைமுன்[3]
பெரிதும் முனிந்துகந்தான் பெருமான் பெருங்காட்டின்

---

[11] பன்னலம் புணர்தலைக் குலச்சிறைக்குங் கூட்டுக. [12] இன்னலம் - இனிய நன்மைபெறும்படி. * 'திருவாப்புடையார் கோயில்' என வழங்கப்பெறும்; ஒரு பாண்டியனுக்காக இறைவன் ஆப்பினிடத்தில் வெளிப்பட்டருளிய காரணத்தால் இப்பெயர் பெற்றது. இதனைக் 'கன்றாப்பூர் நடுதறி' என்பது போலக்காண்க. [1] ஒற்றை—ஒன்று. [2] குரவங்கமழ்குழலாள் - தலத்து அம்மையின் பெயர். [3] அநங்கனைப் என்றும் பாடம்.

அரவம் அணிந்தானை அணியாப்ப னூரானைப்
பரவும் மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 3

பிணியும்[4] பிறப்பறுப்பான் பெருமான் பெருங்காட்டில்
துணியின் உடைதாழச் சுடரேந்தி யாடுவான்
அணியும் புனலானை அணியாப்ப னூரானைப்
பணியும் மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 4

தகர ம[5] ணியருவித் தடமால் வரைசிலையா
நகரம் ஒருமூன்றும் நலங்குன்ற வென்றுகந்தான்
அகர முதலானை[6] அணியாப்ப னூரானைப்
பகரும் மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 5

ஓடுந் திரிபுரங்கள் உடனே யுலந்தவியக்
காட திடமாகக் கனல்கொண்டு நின்றிரவில்
ஆடுந் தொழிலானை அணியாப்ப னூரானைப்
பாடும் மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 6

இயலும் விடையேறி யெரிகொள் மழுவீசிக்
கயலி னிணைக்கண்ணாள் ஒருபால் கலந்தாட
இயலும் இசையானை எழிலாப்ப னூரானைப்
பயிலும் மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 7

கருக்கும் மணிமிடறன் கதநாகக் கச்சையினான்
உருக்கும் அடியவரை ஒளிவெண் பிறைசூடி
அரக்கன் திறலழித்தான் அணியாப்ப னூரானைப்
பருக்கும்[7] மனமுடையார் வினைபற் றறுப்பாரே. 8

கண்ணன் கடிக்கமல மலர்மே லினிதுறையும்
அண்ணற் களப்பரிதாய் நின்றங் கடியார்மேல்
எண்ணில் வினைகளைவான் எழிலாப்ப னூரானைப்
பண்ணின் இசைபகர்வார் வினைபற் றறுப்பாரே. 9

---

[4] பிணியும்-பிணித்தலைச் செய்யும். [5] தகரம் - மலர் முதலிய வாசனைப் பண்டங்கள். [6] அகரமுதலானை - அக்கரங்களுக்கு அகரம் முதலாயினாற்போல, உலகுக்கு முதலானவனை: “அகர முதல வெழுத்தெல்லா மாதி - பகவன் முதற்றே உலகு” என்பது திருக்குறள். [7] பருகும் - பருக்கும்: விரித்தல் விகாரம். பருகுதல் - ஆரஅனுபவித்தல்; பாக்கு என்றும் பாடம்.

செய்ய கலிங்க[8] த்தார் சிறுதட் டுடையார்கள்
பொய்யர் புறங்கூறப் புரிந்த[9] அடியாரை
ஐயம் அகற்றுவான் அணியாப்ப னூரானைப்
பைய[10] நினைந்தெழுவார் வினைபற் றறுப்பாரே. 10

அந்தண் புனல்வைகை அணியாப்ப னூர்மேய
சந்த மலர்க்கொன்றை சடைமே லுடையானை
நந்தி[11] யடிபரவும் நலஞான சம்பந்தன்
சந்த மிவைவல்லார் தடுமாற் றறுப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—ஆப்பனூர்க்காரணர்; தேவி—குரவங்கமழ்குழலம்மை.

## 3. திருப்பரங்குன்றம்*

பண் - குறிஞ்சி** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீடலர்சோதி வெண்பிறையோடு நிரைகொன்றை
சூடலன்[1] அந்திச் சுடரெரியேந்திச் சுடுகானில்
ஆடலன் அஞ்சொல் அணியிழையாளை யொருபாகம்
பாடலன்மேய நன்னகர்போலும் பரங்குன்றே. 1

அங்கமொராறும் அருமறைநான்கும் அருள்செய்து
பொங்குவெண்ணூலும் பொடியணிமார்பிற் பொலிவித்துத்
திங்களும்பாம்புந் திகழ்சடைவைத்தோர் தேன்மொழி[2]
பங்கினன்மேய நன்னகர்போலும் பரங்குன்றே. 2

நீரிடங்கொண்ட நிமிர்சடைதன்மேல் நிரைகொன்றை
சீரிடங்கொண்ட எம்மிறைபோலுஞ் சேய்தாய

---

8 செய்யகலிங்கம் - கல்லாடை. 9 புரிந்த - இடைவிடாது நினைந்த. 10 பைய-சிறிது சிறிதாகத்தமக்கியன்றவாறு. 11 நந்தி - சிவன். * 'திருப்பரங்கிரி' என்றும் வழங்கப்பெறும். இது முருகக் கடவுளின் முதற்றிருப்படை வீடுமாம். ** இப்பதிகத்தில் 1, 2, 3, 4, 9-ம் பாட்டுக்களில் இறைவன் அம்மையோடிருக்கும் நிலையினைப் போற்றி அருளியவாறு காண்க. 1 சூடலன் - சூடலை உடையவன். 2 தேன்மொழி-உமையம்மையார்.

ஓருடம்புள்ளே உமையொருபாகம் உடனாகிப்
பாரிடம்பாட இனிதுறைகோயில் பரங்குன்றே. 3

வளர்பூங்கோங்கம் மாதவியோடு மல்லிகைக்
குளிர்பூஞ்சாரல் வண்டறைசோலைப் பரங்குன்றம்
தளிர்போல்மேனித் தையல்நல்லாளோ டொருபாகம்
நளிர்பூங்கொன்றை சூடினன்மேய நகர்தானே. 4

பொன்னியல்கொன்றை பொறிகிளர்நாகம் புரிசடைத்
துன்னியசோதி யாகியஈசன் தொன்மறை
பன்னியபாடல் ஆடலன்மேய பரங்குன்றை
உன்னியசிந்தை உடையவர்க்கில்லை உறுநோயே. 5

கடைநெடுமாடக் கடியரண்மூன்றுங் கனல்மூழ்கத்
தொடைநவில்கின்ற[3] வில்லினன் அந்திச் சுடுகானில்
புடைநவில்பூதம் பாடநின்றாடும் பொருசூலப்
படைநவில்வான்றன் நன்னகர்போலும் பரங்குன்றே. 6

அயிலுடைவேலோர் அனல்புல்குகையின் அம்பொன்றால்
எயில்படஎய்த எம்மிறைமேய இடம்போலும்
மயில்பெடைபுல்கி மாநடமாடும் வளர்சோலைப்
பயில்பெடைவண்டு பாடலறாத பரங்குன்றே. 7

மைத்தகுமேனி வாளரக்கன்றன் மகுடங்கள்
பத்தினதிண்தோள் இருபதுஞ்செற்றான் பரங்குன்றைச்
சித்தமதொன்றிச் செய்கழலுன்னிச் சிவனென்று
நித்தலுமேத்தத் தொல்வினைநம்மேல் நில்லாவே.[4] 8

முந்தியிவ்வையந் தாவியமாலும் மொய்யொளி
உந்தியில்வந்திங் கருமறையீந்த உரவோனும்[5]
சிந்தையினாலுந் தெரிவரிதாகித் திகழ்சோதி
பந்தியல்அங்கை மங்கையொர்பங்கன் பரங்குன்றே. 9

குண்டாய்முற்றுந் திரிவார்கூறை மெய்போர்த்து
மிண்டாய்[6] மிண்டர் பேசியபேச்சு மெய்யல்ல

---

[3] தொடை நவில்கின்ற - தொடுத்த அளவாலே செயல் விளைகின்ற. [4] இவ்வடிகள் பரங்குன்றத்தினைச் சிவனே என்று வழிபடுக என்பதைக் குறிப்பிடும். [5] இவ்வடிகள் பிரமன் திருமால் உந்தியினின்று வந்தவன் என்பதை அறிவிக்கும். [6]மிண்டு-வன்மை.

பண்டால்நீழல் மேவியஈசன் பரங்குன்றைத்
தொண்டாலேத்தத் தொல்வினைநம்மேல் நில்லாவே. 10

தடமலிபொய்கைச் சண்பைமன்ஞான சம்பந்தன்
படமலிநாகம் அரைக்கசைத்தான்றன் பரங்குன்றைத்
தொடைமலிபாடல் பத்தும்வல்லார்தந் துயர்போகி
விடமலிகண்டன் அருள்பெறுந்தன்மை மிக்கோரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பரங்கிரி நாதர்; தேவி—ஆவுடை நாயகி.

---

## 4. திருஏடகம்*

பண் - கொல்லி ** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வ**ன்னியும் மத்தமும் மதிபொதி சடையினன்
பொன்னியல்[1] திருவடி புதுமல ர்[2] வைகொடு
மன்னிய மறையவர் வழிபட அடியவர்
இன்னிசை பாடலர் ஏடகத் தொருவனே. 1

கொடிநெடு மாளிகை கோபுரங் குளிர்மதி
வடிவுற அமைதர மருவிய ஏடகத்
தடிகளை யடிபணிந் தரற்றுமின் அன்பினால்
இடிபடும்[3] வினைகள்போய் இல்லைய தாகுமே. 2

குண்டலந் திகழ்தரு காதுடைக் குழகனை
வண்டலம் பும்மலர்க் கொன்றைவான் மதியணி[4]
செண்டலம் பும்விடைச் சேடனா[5]ர் ஏடகம்
கண்டுகை தொழுதலுங் கவலைநோய் கழலுமே.[6] 3

---

* இது வைகையாற்றின் வடகரையில் உள்ளது; பழமையான கோயில்; ஞானசம்பந்தர் வைகையாற்றில்விட்ட ஏடு எதிரேறிச் சென்று அணைந்த இடமாதலால் இப்பெயர் சிறப்பாக வழங்கலாயிற்று.

** இப்பதிகம், வைகையில் எதிரேறிச்சென்ற ஏடு தங்கப்பாடியதாகும். இதில் 7-ம் பாட்டுச் சிதைந்து போயிற்று. [1] பொன் இயல்- பொன்போன்ற ஒளியுடைய. [2] புதுமலர் - அன்று அலர்ந்த மலர். [3] இடி - துன்பம். [4] வாண்மதியணி என்றும் பாடம். [5] சேடன் - பேரறிவுடையவன். [6] நோயகலுமே என்றும் பாடம்.

ஏலமார் தருகுழல் ஏழையோ டெழில்பெறும்
கோலமார் தருவிடைக் குழகனுர் உறைவிடம்
சாலமா தவிகளுஞ் சந்தனஞ் சண்பகம்
சீலமார் ஏடகஞ் சேர்தலாஞ் செல்வமே. 4

வரியணி நயனிநன் மலைமகள் மறுகிடக்
கரியினை யுரிசெய்த கறையணி மிடறினன்
பெரியவன் பெண்ணினே டாணலி யாகிய
எரியவன் உறைவிடம் ஏடகக் கோயிலே. 5

பொய்கையின் பொழிலுறு புதுமலர்த் தென்றலார்
வைகையின் வடகரை மருவிய ஏடகத்
தையனை யடிபணிந் தரற்றுமின் அடர்தரும்
வெய்யவன் பிணி [8]கெட வீடெளி தாகுமே. 6 - 7

தடவரை யெடுத்தவன் தருக்கிறத் தோளடர்
படவிரல் ஊன்றியே பரிந்தவற் கருள்செய்தான்
மடவரல் [9] எருக்கொடு வன்னியும் மத்தமும்
இடமுடைச் சடையினன் ஏடகத் திறைவனே. 8

பொன்னுமா மணிகளும் பொருதிரைச் சந்தகில்
தன்னுளார் வைகையின் கரைதனிற் சமைவுற
அன்னமாம் அயனும்மா லடிமுடி தேடியும்
இன்னவா றெனவொணுன் ஏடகத் தொருவனே. 9

குண்டிகைக் கையினர் குணமிலாத் தேரர்கள்
பண்டியைப் பெருக்கிடும் பளகர்கள் பணிகிலர்
வண்டிரைக் கும்மலர்க் கொன்றையும் வன்னியும்
இண்டைசேர்க் குஞ்சடை ஏடகத் தெந்தையே. 10

கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீர்
ஏடுசென் றணைதரும் [10] ஏடகத் தொருவனை
நாடுதென் புகலியுள் ஞானசம் பந்தன
பாடல்பத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—ஏடகநாதர்; தேவி—உமாதேவியார், ஏலவார்குழலி.

---

[8] வெய்ய வன் பிணி - கொடிய ஆணவ மலம். [9] மடவரல் - கங்கை. [10] ஏடுசென்று அணைதரும் - இது சரிதக்குறிப்பு.

## 5. திருக்கொடுங்குன்றம்*

**பண் - நட்டபாடை** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வா**னிற்பொலி வெய்தும்மழை மேகங்கிழித் தோடிக்
கூனற்பிறை சேருங்குளிர் சாரற்கொடுங் குன்றம்
ஆனிற்பொலி ஐந்தும்[1] அமர்ந் தாடியுல கேத்தத்
தேனிற்பொலி மொழியாளொடு மேயான்திரு நகரே. 1

மயில்புல்குதண் பெடையோடுடன் ஆடும்வளர் சாரல்
குயிலின்இசை பாடுங்குளிர் சோலைக்கொடுங் குன்றம்
அயில்வேல்மலி நெடுவெஞ்சுடர் அனலேந்திநின் றாடி
எயில்மூன்பட எய்தானவன் மேயவ்வெழில் நகரே. 2

மிளிரும்மணி பைம்பொன்னொடு விரைமாமல ருந்திக்
குளிரும்புனல் பாயுங்குளிர் சாரற்கொடுங் குன்றம்
கிளர்கங்கையொ டிளவெண்மதி கெழுவுஞ்சடை தன்மேல்
வளர்கொன்றையும் மதமத்தமும் வைத்தான்வள நகரே. 3

பருமாமத கரியோடரி யிழியும்[2] விரி சாரல்
குருமாமணி பொன்னோடிழி யருவிக்கொடுங் குன்றம்
பொரும்மாஎயில் வரைவில்தரு கணையிற்பொடி செய்த
பெருமானவன் உமையாளொடும் மேவும்பெரு நகரே. 4

மேகத்திடி குரல்வந்தெழ வெருவிவ்வரை யிழியும்
கூகை[3] க்குலம் ஓடித்திரி சாரற்கொடுங் குன்றம்
நாகத்தொடும் இளவெண்பிறை சூடிநல மங்கை
பாகத்தவன் இமையோர்தொழ மேவும்பழ நகரே. 5

கைம்மாமத கரியின்இனம் இடியின்குர லதிரக்
கொய்ம்மாமலர்ச் சோலைபுக மண்டுங்கொடுங் குன்றம்
அம்மானென வுள்கித்தொழு வார்கட்கருள் செய்யும்
பெம்மானவன் இமையோர்தொழ மேவும்பெரு நகரே. 6

---

* 'பிரான்மலை' என வழங்கப்பெறும்; இதனை ஆராய்ச்சியாளர் பாரியின் 'பறம்புமலை' என்பர். [1] சாரல்-சிறு தூரல்; மலைப் பக்கமுமாம். ஆனிற்பொலி ஐந்து - பஞ்சகௌவியம்; ஆனிற் பொலிவு ஐந்தும் என்றும் பாடம். [2] யிரியும் என்றும் பாடம். [3] கூகை - கோட்டான்.

மரவத்தொடு மணமாதவி மௌவல்லது விண்ட
குரவத்தொடு விரவும்பொழில் சூழ்தண்கொடுங் குன்றம்
அரவத்தொடும் இளவெண்பிறை விரவும்மலர்க் கொன்றை
நிரவச்சடை முடிமேலுடன் வைத்தான்நெடு நகரே. 7

முட்டாமுது கரியின்இனம் முதுவேய்[4] களை முனிந்து
குட்டாச்சுனை[5] யவைமண்டிநின் றுடுங்கொடுங் குன்றம்
ஒட்டாஅரக் கன்றன்முடி யொருபஃதவை யுடனே
பிட்டானவன் உமையாளொடு மேவும்பெரு நகரே. 8

அறையும்அரி[6] குரலோசையை யஞ்சியடும் ஆனை
குறையும்மன மாகிம்முழை வைகுங்கொடுங் குன்றம்
மறையும்அவை யுடையானென நெடியானென இவர்கள்
இறையும்அறி வொண்ணாதவன் மேயவ்வெழில் நகரே. 9

மத்தக்களி றுளிவ்வர வஞ்சிம்மலை தன்னைக்
குத்திப்பெரு முழைதன்னிடை வைகுங்கொடுங் குன்றம்
புத்தரொடு பொல்லாமனச் சமணர்புறங் கூறப்
பத்தர்க்கருள் செய்தானவன் மேயபழ நகரே. 10

கூனற்பிறை சடைமேல்மிக வுடையான்கொடுங் குன்றைக்
கானற்கழு மலமாநகர்த் தலைவன்நல கவுணி
ஞானத்துயர் சம்பந்தன நலங்கொள்தமிழ் வல்லார்
ஊனத்தொடு துயர்தீர்ந்துல கேத்தும்எழி லோரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—கொடுங்குன்றீசர்; தேவி—குயிலமுதநாயகி.

## 6. திருப்புத்தூர் *

பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வெங்கள்[1] விம்மு வெறியார் பொழிற்சோலை
திங்க ளோடு திளைக்குந் திருப்புத்தூர்க்

---

[4] வேய் - மூங்கில். [5] குட்டச்சுனை என்பது எதுகை நோக்கிக் குட்டாச்சுனை எனப்பட்டது. குட்டச்சுனை - ஆழமான நீர்நிலை. [6] அரி - சிங்கம். * இக்கோயில் 'ஸ்ரீ தளி' எனப்படும். இலக்குமி பூசித்ததால் இப்பெயர் பெற்றது. [1] வெம் கள்-வெம்மை.

கங்கை தங்கு முடியா ரவர்போலும்
எங்கள் உச்சி உறையும் இறையாரே. 1

வேனல் விம்மு வெறியார் பொழிற்சோலைத்
தேனும் வண்டுந் திளைக்குந் திருப்புத்தூர்
ஊனம் இன்றி யுறைவா ரவர்போலும்
ஏன முள்ளும் எயிறும்[2] புனைவாரே. 2

பாங்கு நல்ல வரிவண் டிசைபாடத்
தேங்கொள் கொன்றை[3] திளைக்குந் திருப்புத்தூர்
ஓங்கு கோயில் உறைவா ரவர்போலும்
தாங்கு திங்கள் தவழ்புன் சடையாரே. 3

நாற விண்ட நறுமா மலர் கவ்வித்
தேறல் வண்டு திளைக்குந் திருப்புத்தூர்
ஊறல் வாழ்க்கை[4] யுடையா ரவர்போலும்
ஏறு கொண்ட கொடியெம் இறையாரே. 4

இசைவி ளங்கும் எழில்சூழ்ந் தியல்பாகத்
திசைவி ளங்கும் பொழில்சூழ் திருப்புத்தூர்
பசைவி ளங்கப் படித்தா ரவர்போலும்
வசைவி ளங்கும் வடிசேர்[5] நுதலாரே. 5

வெண்ணி றத்த விரையோ டலருந்தித்
தெண்ணி றத்த புனல்பாய் திருப்புத்தூர்
ஒண்ணி றத்த ஒளியா ரவர்போலும்
வெண்ணி றத்த விடைசேர் கொடியாரே. 6

நெய்த லாம்பல் கழுநீர் மலர்ந்தெங்கும்
செய்கண் மல்கு சிவனார் திருப்புத்தூர்த்
தையல் பாகம் மகிழ்ந்தா ரவர்போலும்
மையுள் நஞ்ச மருவும் மிடற்றாரே. 7

கருக்கம்[6] எல்லாங் கமழும் பொழிற்சோலைத்
திரு[7]க்கொள் செம்மை[8] விழவார் திருப்புத்தூர்

---

[2] வெறி-வாசனை; ஏனம் முள்-முள்ளம்பன்றியின் முள்; எயிறு-பன்றியின் கொம்பு. [3] கொன்றை - தலமரமுமாம். [4] ஊறல் வாழ்க்கை - இங்குக் கருணையே சுரக்கும் தன்மையைக் குறித்தது. [5] மடிசேர் என்றும் பாடம். [6] கருக்கம் - கார்மேகம். [7] திரு - முத்திச்செல்வம். [8] செம்மை - நன்மை.

இருக்க வல்ல இறைவ ரவர்போலும்
அரக்கன் ஒல்க விரலால் அடர்த்தாரே. 8

மருவி யெங்கும் வளரும் மடமஞ்ஞை
தெருவு தோறுந் திளைக்குந் திருப்புத்தூர்ப்
பெருகி வாழும் பெருமா னவன்போலும்
பிரமன் மாலும் அறியாப் பெரியோனே. 9

கூறை போர்க்குந் தொழிலா ரமண்கூறல்
தேறல் வேண்டா தெளிமின் திருப்புத்தூர்
ஆறும் நான்கும்[9] அமர்ந்தா ரவர்போலும்
ஏறு கொண்ட கொடியெம் இறையாரே. 10

நல்ல கேள்வி ஞான சம்பந்தன்
செல்வர் சேடர் உறையுந் திருப்புத்தூர்ச்
சொல்லல் பாடல் வல்லார் தமக்கென்றும்
அல்லல் தீரும் அவலம் அடையாவே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—புத்தூரீசர், திருத்தளிநாதர்; தேவி—சிவகாமியம்மை.

---

## 7. திருப்புனவாயில்*

பண் - காந்தாரபஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**மி**ன்னியல் செஞ்சடை வெண்பிறை யன்விரி நூலினன்[1]
பன்னிய நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
அன்னம்அன் னந்நடை யாளொடும்[2] அம ரும்இடம்
புன்னை[3] நன் மாமலர் பொன்னுதிர்க் கும்புன வாயிலே. 1

விண்டவர் தம்புரம் மூன்றெரித் துவிடை யேறிப்போய்
வண்ட மருங்குழல் மங்கையொ டும்மகிழ்ந் தானிடம்

---

[9] ஆறு - வேதாங்கம். நான்கு - வேதம். * 'பழம்பதி' (விருத்தபுரி) என வழங்கப்பெறும். [1] மின்னிய செஞ்சடை என்றும் பாடம்; விரிநூலினன்-வேத சிவாகமங்களை அருளியவன்; மார்பில் விரியும் பூணூலை யுடையவனுமாம். [2] நடையாளொடுமே என்றும் பாடம். [3] புன்னை - நெய்தற்கருப்பொருள்: இங்குத் தலமரமுமாம்.

கண்டலும் ஞாழலும் நின்றுபெ ருங்கடற் கானல்வாய்ப்
புண்டரீ கம்மலர்ப் பொய்கை[4] சூழ்ந் தபுன வாயிலே. 2

விடையுடை வெல்கொடி யேந்தின னும்விறற் பாரிடம்
புடைபட வாடிய வேடத்தா னும்புன வாயிலில்
தொடைநவில் கொன்றையந் தாரின னுஞ்சுடர் வெண்மழுப்
படைவலன் ஏந்திய பால்நெய்யா டும்பர மனன்றே. 3

சங்கவெண் தோடணி காதின னுஞ்சடை தாழவே
அங்கையி லங்கழ லேந்தின னும்அழ காகவே
பொங்கர வம்மணி மார்பின னும்புன வாயிலில்
பைங்கண்வெள் ளேற்றண்ண லாகிநின் றபர மேட்டியே. 4

கலிபடு தண்கடல் நஞ்சமுண் டகறைக் கண்டனும்
புலியதள் பாம்பரைச் சுற்றின னும்புன வாயிலில்
ஒலிதரு தண்புன லோடெருக் கும்மத மத்தமும்
மெலிதரு[5] வெண்பிறை சூடிநின் றவிடை யூர்தியே. 5

வாருறு மென்முலை மங்கைபா டநட மாடிப்போய்க்
காருறு கொன்றைவெண் திங்களா னுங்கனல் வாயதோர்
போருறு வெண்மழு வேந்தின னும்புன வாயிலில்
சீருறு செல்வ[6]மல் கவ்விருந் தசிவ லோகனே. 6

பெருங்கடல் நஞ்சமு துண்டுகந் துபெருங் காட்டிடைத்
திருந்தின மென்முலைத் தேவிபா டந்நட மாடிப்போய்ப்
பொருந்தலர் தம்புரம் மூன்றுமெய் துபுன வாயிலில்
இருந்தவன் தன்கழ லேத்துவார் கட்கிட ரில்லையே. 7

மனமிகு வேலனவ் வாளரக் கன்வலி யொல்கிட
வனமிகு மால்வரை யாலடர்த் தானிட மன்னிய
இனமிகு தொல்புகழ் பாடலா டல்லெழின் மல்கிய
புனமிகு கொன்றை[7]யந் தென்றலார்ந் தபுன வாயிலே. 8

திரு[8]வளர் தாமரை மேவின னுந்திகழ் பாற்கடற்
கருநிற வண்ணனுங் காண்பரி யகட வுள்ளிடம்

---

[4] புண்டரீக மலர்ப் பொய்கை - இலக்குமி தீர்த்தம். [5] மெலிதரு - சாபத்தால் கலை குறைந்து அடைந்த. [6] செல்வம் - முத்திச் செல்வம். [7] கொன்றை - இங்குத்தலமரமுமாம். [8] திரு - கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்; அழகு.

நரல்சுரி சங்கொடும் இப்பி[9] யுந் திரைநலம் மல்கிய
பொருகடல் வெண்டிரை வந்தெறி யும்புன வாயிலே. 9

போதியெ னப்பெய ராயினா ரும்பொறி யில்சமண்
சாதியு ரைப்பன கொண்டயர்ந் துதளர் வெய்தன்மின்
போதவிழ் தண்பொழில் மல்குமந் தண்புன வாயிலில்
வேதனை நாடொறும் ஏத்துவார் மேல்வினை வீடுமே. 10

பொற்றொடி யாளுமை பங்கன்மே வும்புன வாயிலைக்
கற்றவர்[10] தாந்தொழு தேத்தநின் றகடற் காழியான்
நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன் னதமிழ் நன்மையால்
அற்றமில் பாடல்பத் தேத்தவல் லாரருள் சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—பழம்பதிநாதர்; தேவி—கருணைநாயகி.

## 8. திருஇராமேச்சுரம்*

பண் - காந்தாரபஞ்சமம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

அலைவளர் தண்மதி யோடய லேயடக் கியுமை
முலைவளர் பாகம்மு யங்கவல் லமுதல் வன்முனி[1]
இலைவளர் தாழைகள் விம்முகா னல்இரா மேச்சுரம்
தலை[2] வளர்கோலநன் மாலையன் தானிருந் தாட்சியே. 1

தேவி[3] யை வவ்விய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல்[4] செய் தஇரா மேச்சுரம்
மேவிய சிந்தையி னார்கள்தம் மேல்வினை வீடுமே.[5] 2

---

[9] சங்கமொடிப்பி என்றும் பாடம். [10] கற்றவர் - மனமிறக்கக் கற்றவர். * இராவணனைக்கொன்ற பாதகம் நீங்கும்பொருட்டு இராமனால் தாபித்து வழிபட்ட தலமாதலால் இப்பெயர்பெற்றது. **இப்பதிகத்துள் 9-ம் செய்யுள் மறைந்து போயிற்று. [1] முதல்வன் முனி - முதல்வனுகியும் முனிவனுவான். [2] தலை-இறந்தார் தலைகள். [3] தேவி - சீதை. [4] ஏவியலும் சிலை அண்ணல் - இராமன். [5] இச்செய்யுள் இராமன் இராவணனைக்கொன்ற கொலைப்பாதகம் நீங்க வழிபட்டதை அறிவிக்கும்.

மானன நோக்கிவை தேகிதன் னையொரு மாயை[6] யால்
கானதில்[7] வவ்விய காரரக் கன்னுயிர் செற்றவன்
ஈனமி லாப்புக ழண்ணல்செய் தஇரா மேச்சுரம்
ஞானமும் நன்பொரு ளாகிநின் றதொரு நன்மையே. 3

உரையுண ராதவன் காமமென் னும்முறு வேட்கையால்
வரைபொரு தோளிறச் செற்றவில் லிமகிழ்ந் தேத்திய
விரைமரு வுங்[8] கட லோதமல் கும்இரா மேச்சுரத்
தரையர வாடநின் றாடல்பே ணும்அம்மான் அல்லனே. 4

ஊறுடை[9] வெண்டலை கையிலேந் திப்பல வூர்தொறும்
வீறுடை மங்கையர் ஐயம்பெய் யவிற லார்ந்ததோர்
ஏறுடை வெல்கொடி யெந்தைமே யஇரா மேச்சுரம்
பேறுடை யான்பெய ரேத்துமாந் தர்பிணி பேருமே. 5

அணையலை சூழ்கடல் அன்றடைத் துவழி செய்தவன்
பணையிலங் கும்முடி பத்திறுத் தபழி போக்கிய
இணையிலி யென்றுமி ருந்தகோ யில்இரா மேச்சுரம்
துணையிலி[10] தூமலர்ப் பாதமேத் தத்துயர் நீங்குமே.[11] 9

சனிபுதன் ஞாயிறு வெள்ளிதிங் கட்பல தீயன
முனிவது செய்து[12] கந் தானை[13] வென் றவ்வினை மூடிட
இனியருள் நல்கிடென் றண்ணல்செய் தஇரா மேச்சுரம்
பனிமதி சூடிநின் றாடவல் லபர மேட்டியே. 7

பெருவரை யன்றெடுத் தேந்தினன் தன்பெயர் சாய்கெட[14]
அருவரை யாலடர்த் தன்றுநல் கியயன் மாலெனும்
இருவரும் நாடிநின் றேத்துகோ யில்இரா மேச்சுரத்
தொருவனு மேபல வாகிநின் றதொரு வண்ணமே. 8-9

---

[6] வைதேகி - சீதை; தத்திதாந்தநாமம்; மாயை-மாயமானைக் காட்டி வஞ்சித்துக் கவர்ந்த வஞ்சனை. [7] கானதில் - தண்டகாரணியத்தில். [8] விரைமருவும் - சிவமணங் கமழும். [9] ஊறுஉடை - உடைதலையுடைய. [10] இணையிலி - சிவன்; துணையிலி - சிவன். [11] துயர் தீருமே என்றும் பாடம். [12] முனிவன செய்து என்றும் பாடம். [13] இவ்வடிகள் இராவணன் கோள்களைத் தனது இச்சைப் படி நிற்கப் பணித்து ஏவல்கொண்டதை அறிவிக்கும். [14] பெயர்சாய்கெட - கீர்த்தி சாய்ந்து கெட; சாய்ந்து கெடுதல் - பின்னர்த் தோன்றாதழிதல்.

சாக்கியர் வன்சமண் கையர்மெய் யில்தடு மாற்றத்தார்
வாக்கிய லும்உரை பற்றுவிட் டுமதி யொண்மையால்
ஏக்கிய லுஞ்சிலை யண்ணல்செய் தஇரா மேச்சுரம்
ஆக்கிய செல்வனை யேத்திவாழ் மின்அரு ளாகவே. 10

பகலவன் மீதியங் காமைக்காத் தபதி யோன்றனை[15]
இகலழி வித்தவன் ஏத்துகோ யில்இரா மேச்சுரம்
புகலியுள் ஞானசம் பந்தன்சொன் னதமிழ் புந்தியால்
அகலிட மெங்குநின் றேத்தவல் லார்க்கில்லை அல்லலே.[16] 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - பழம்பஞ்சுரம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

திரிதரு மாமணி நாகம்ஆடத் திளைத்தொரு தீயழல்வாய்
கரிகதிக்க[1] எரியேந்தி யாடும் நலமே தெரிந்துணர்வார்
எரிகதிர் முத்தம் இலங்குகானல் இராமேச் சுரமேய
விரிகதிர் வெண்பிறை மல்குசென்னி விமலர் செயுஞ்செயலே. 1

பொறிகிளர் பாம்பரை யார்த்தயலே புரிவோ டுமைபாடத்
தெறி[2] கிள ரப்பெயர்ந் தெல்லியாடுந் திறமே தெரிந்துணர்வார்
எறிகிளர் வெண்டிரை வந்துபேரும் இராமேச் சுரமேய
மறிகிளர் மான்மழுப் புல்குகையெம் மணாளர் செயுஞ்செயலே. 2

அலைவளர் தண்புனல் வார்சடைமேல் அடக்கி யொருபாகம்
மலைவளர் காதலி[3] பாடஆடி மயக்கா[4] வருமாட்சி
இலைவளர் தாழை முகிழ்விரியும் இராமேச் சுரமேயார்
தலைவளர் கோலநன் மாலைசூடுந் தலைவர் செயுஞ்செயலே. 3

மாதன[5] நேரிழை யேர்தடங்கண் மலையான் மகள்பாடத்
தேதெரி[6] அங்கையில் ஏந்தியாடுந் திறமே தெரிந்துணர்வார்

---

15 இவ்வடி சூரியன் கடும்பகலாய்த் தன் நகரத்தின்மீது செல்லாது இராவணன் ஏவல்கொண்ட வரலாற்றைக்கூறும். 16 அல்லல்-பழிபாவம்; பிறவியுமாம். 1 கதிக்க - ஓசை செய்ய. 2 தெறி - பாட்டுடன் வீணை முதலியவற்றைத் தட்வுதல். 3 மலைவளர் காதலி-தலத்து அம்மையின் பெயர். 4 மயக்கா-உயிர்களைத் தமது மறைப்பாகிய திரோதானசத்தியுள் அகப்படுத்தி. 5 மாதென என்றும் பாடம்; மாது-அழகு. 6 தேதெரி - ஒளியுடைய; தேது - தேசு.

ஏதமி லார்தொழு தேத்திவாழ்த்தும் இராமேச் சுரமேயார்
போதுவெண் டிங்கள்பைங் கொன்றைசூடும் புனிதர் செயுஞ்செயலே. 4

சூலமோ டொண்மழு நின்றிலங்கச் சுடுகா டிடமாகக்
கோலநன் மாதுடன் பாடஆடுங் குணமே குறித்துணர்வார்
ஏல நறும்பொழில் வண்டுபாடும் இராமேச் சுரமேய
நீலமார் கண்ட முடையவெங்கள் நிமலர் செயுஞ்செயலே. 5

கணைபிணை வெஞ்சிலை கையிலேந்திக் காமனைக் காய்ந்தவர்தாம்
இணைபிணை [7] நோக்கிநல் லாளொடாடும் இயல்பின ராகிநல்ல
இணைமலர் [8] மேலன்னம் வைகுகானல் இராமேச் சுரமேயார்
அணைபிணை [9] புல்கு[10] கரந்தைசூடும் அடிகள் செயுஞ்செயலே. 6

நீரினார் புன்சடை பின்புதாழ நெடுவெண் மதிசூடி
ஊரினார் துஞ்சிருள் பாடியாடும் உவகை தெரிந்துணர்வார்
ஏரினார் பைம்பொழில் வண்டுபாடும் இராமேச் சுரமேய
காரினார் கொன்றைவெண் டிங்கள்சூடுங் கடவுள் செயுஞ்செயலே. 7

பொன்றிகழ்[11] சுண்ணவெண் ணீறுபூசிப் புலித்தோ லுடையாக
மின்றிகழ் சோதியர் பாடலாடல் மிக்கார் வருமாட்சி
என்றுநல் லோர்கள் பரவியேத்தும் இராமேச் சுரமேயார்
குன்றினு லன்றரக் கன்தடந்தோள் அடர்த்தார்கோளுங்கொள்கையே. 8

கோவலன் [12] நான்முகன் நோக்கொணாத குழகன் அழகாய
மேவலன் ஒள்ளெரி யேந்தியாடும் இமையோர் இறைமெய்ம்மை
ஏவல னார்புகழ்ந் தேத்திவாழ்த்தும் இராமேச் சுரமேய
சேவல[13] வெல்கொடியேந்துகொள்கையெம்மிறைவர்செயுஞ்செயலே.[14]

பின்னொடு முன்னிடு தட்டை[15]ச்சாத்திப் பிரட்டே[16] திரிவாரும்[17]
பொன்னெடுஞ் சீவரப் போர்வையார்கள் புறங்கூறல் கேளாதே
இன்னெடுஞ் சோலைவண் டியாழ்முரலும் இராமேச் சுரமேய
பன்னெடு வெண்டலை கொண்டுழலும் பரமர் செயுஞ்செயலே. 10

7 பிணை-மான். இணை-ஒத்த; இரண்டு. 8 இணைமலர்-பொருந்திய மலர். 9 அணைபிணை-சேரப்பிணித்த. 10 அணைமணமல்கு என்றும், அணைபிணைமல்கு என்றும் பாடம். 11 பொன்றினார் என்றும் பாடம். 12 கோவலன்-திருமால். 13 சே-இடபம்; வல - வல்லமையுடைய. 14 யெம்மிறைசெய்செயலே என்றும் பாடம். 15 தட்டை-தட்டுடை. 16 பிரட்டு-பொய். 17 பிறகே திரிவாரும் என்றும் பாடம்.

தேவியை வவ்விய தென்னிலங்கை யரையன் திறல்வாட்டி
ஏவியல் வெஞ்சிலை யண்ணல்நண்ணும் இராமேச் சுரத்தாரை
நாவியன் ஞானசம் பந்தன்நல்ல மொழியால் நவின்றேத்தும்
பாவியன் மாலைவல்லா ர்வர்தம்வினை யாயின பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி–இராமநாதர் ; தேவி-மலைவளர்காதலி (பருவதவர்த்தனி).

---

## 9. திருஆடானை*

பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மாதோர்கூறுகந் தேறதேறிய
ஆதியானுறை ஆடானை
போதி[1] னாற்புனைந் தேத்துவார்தமை
வாதியாவினை மாயுமே. 1

வாடல்வெண்டலை அங்கையேந்திநின்
றாடலானுறை ஆடானை
தோடுலாமலர் தூவிக்கைதொழ
வீடும்நுங்கள் வினைகளே. 2

மங்கைகூறினன் மான்மறியுடை
அங்கையானுறை ஆடானை
தங்கையால்தொழு தேத்தவல்லவர்
மங்குநோய்பிணி[2] மாயுமே. 3

சுண்ணநீறணி மார்பில்தோல்புனை
அண்ணலானுறை ஆடானை

---

* இது வடமொழியில் 'அஜகஜபுரம்' என வழங்கும். (அஜம்-ஆடு; கஜம் - யானை.) தூர்வாச முனிவரை அவமதித்ததால், 'ஆட்டுத் தலையும் யானையுடலுமாக' என்று சாபம்பெற்ற பிருகு முனிவர் அவ்வுருவத்துடனே வந்து பூசித்துச் சாபம் நீங்கப்பெற்ற தலமாதலின் இப்பெயர் பெற்றது; சூரியன், நீலமணியைச் சிவலிங்கமாகத் தாபித்து வழிபட்ட தலமுமாம். [1] போது-புதுமலர். [2] பிணி-நோயின் மூலமாகிய பிணிப்பு.

வண்ணமாமலர் தூவிக்கைதொழ
எண்ணுவாரிடர் ஏகுமே. 4

கொய்[3] யணிம்மலர்க் கொன்றைசூடிய
ஐயன்மேவிய ஆடானை
கை[4] யணிம்மல ரால்வணங்கிட
வெய்யவல்வினை வீடுமே. 5

வானிளம்மதி மல்குவார்சடை
ஆனஞ்சாடலன் ஆடானை
தேனணிம்மலர் சேர்த்தமுன்செய்த
ஊன[5] முள்ள[6] வொழியுமே. 6

துலங்குவெண்மழு வேந்திச்சூழ்சடை
அலங்கலானுறை ஆடானை
நலங்கொள்மாமலர் தூவிநாடொறும்
வலங்கொள்வார்வினை மாயுமே.[7] 7

வெந்தநீறணி மார்பில்தோல்புனை
அந்தமில்லவன் ஆடானை
கந்தமாமலர் தூவிக்கைதொழும்
சிந்தையார்வினை தேயுமே. 8

மறைவல்லாரொடு வானவர்தொழு
தறையுந்தண்புனல் ஆடானை
உறையும்ஈசனை யேத்தத்தீவினை
பறையும்நல்வினை பற்றுமே. 9

மாயனும்மல ரானுங்கைதொழ
ஆயஅந்தணன் ஆடானை
தூயமாமலர் தூவிக்கைதொழத்
தீயவல்வினை தீருமே. 10

வீடினார்மலி வேங்கடத்து[8] நின்
றாடலானுறை ஆடானை.

---

[3] கொய் - பறிக்கும். [4] கை-கையிற்கொண்ட. [5] முன் செய்த ஊனம் - பழவினை. [6] உள்ள - உள்ளவை. [7] இவ்வடிகளினாலும் பிற பாடலாலும் இப்பதிகம் தலத்தின் புறத்தே அருளப்பட்டது என்பது குறிப்பு. [8] வெங்கடம் என்றும் பாடம். வேங்கடம் - சுடுகின்ற சுடலை.

நாடிஞானசம் பந்தன்செந்தமிழ்
பாடநோய்பிணி பாறுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—ஆடானைநாதர் (அஜகஜேசுவரர்), ஆதிரத்தினேசுவரர்;
தேவி—அம்பாயிரவல்லி.

---

## 10. திருக்கானப்பேர்*

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா[1] மலர்தழீஇ
விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடும்[2]
கடியுலாம் பூம்பொழிற் கானப்பேர் அண்ணல்நின்
அடியலால் அடைசரண் உடையரோ அடியரே. 1

நுண்ணிடைப் பேரல்குல் நூபுரம் மெல்லடிப்
பெண்ணின்நல் லாளையோர் பாகமாப் பேணினான்
கண்ணுடை நெற்றியான் கருதிய கானப்பேர்
விண்ணிடை வேட்கையார் விரும்புதல் கருமமே. 2

வாசிவாய்த் தங்கிய நுண்சிறை வண்டினங்
காவிவாய்ப் பண்செயுங் கானப்பேர் அண்ணலை
நாவிவாய்ச் சாந்துளும் பூவுளும் ஞானநீர்[3]
தூவிவாய்ப் பெய்துநின் றூட்டுவார் தொண்டரே. 3

நிறையுடை[4] நெஞ்சுளும் நீருளும் பூவுளும்
பறையுடை முழவுளும் பலியுளும் பாட்டுளும்

---

* 'காளையார் கோயில்' என வழங்கப்பெறும். [1] பெருங்கைமா-ஐராவதம். [2] இவ்வடிகள் தேவேந்திரனது வெள்ளையானை சாப நீக்கத்தின் பொருட்டுத் தன் பிடியுடன் வந்து பூசித்துப் பேறு பெற்றதைக் குறிப்பிடும்; 7-ம் செய்யுளும் இக்கருத்தினதே ஆகும். [3] நாவி - கஸ்தூரி; ஞானநீர் - உரிய மந்திரம் கிரியை பாவனை இம்மூன்றுகளால் - தூய்மையாக்கப்பட்ட நீர்; அபிமந்திரித்த நீர் என்பதாம். [4] நிறையுடை - அன்பின் நிறைவுடைய. நிறைவு - வேறொன்றுக்கும் இடந்தராமை.

கறையுடை மிடற்றண்ணல் கருதிய கானப்பேர்
குறையுடை யவர்க்கலாற் களைகிலார் குற்றமே. 4

ஏனப்[5] பூண் மார்பின்மேல் என்புபூண் டீறிலா
ஞானப்பே ராயிரம் பேரினான் நண்ணிய
கானப்பே ரூர்தொழுங் காதலார் தீதிலர்
வானப்பே ரூர்புகும் வண்ணமும் வல்லரே. 5

பள்ளமே படர்சடைப் பாற்படப் பாய்ந்தநீர்
வெள்ளமே தாங்கினான் வெண்மதி சூடினான்
கள்ளமே செய்கிலார் கருதிய கானப்பேர்
உள்ளமே கோயிலா உள்குமென் உள்ளமே. 6

மானமா மடப்பிடி வன்கையால் அலகிடக்
கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்
ஊனமாம் உடம்பினில் உறுபிணி கெடஎண்ணில்[6]
ஞானமா மலர்[7] கொடு நணுகுதல் நன்மையே. 7

வாளினான் வேலினான் மால்வரை யெடுத்ததிண்
தோளினான் நெடுமுடி தொலையவே யூன்றிய
தாளினான் கானப்பேர் தலையினால் வணங்குவார்
நாளுநாள் உயர்வதோர் நன்மையைப் பெறுவாரே.[8] 8

சிலையினால் முப்புரந் தீயெழச் செற்றவன்
நிலை[9] யிலா இருவரை நிலைமைகண் டோங்கினான்
கலையினார்[10] புறவில்தேன் கமழ்தரு கானப்பேர்
தலையினால் வணங்குவார் தவமுடை யார்களே. 9

உறித்தலைச் சுரையொடு குண்டிகை பிடித்துச்சி
பறித்தலும் போர்த்தலும் பயனிலை பாவிகாள்
மறித்தலை மடப்பிடி வளரிளங் கொழுங்கொடி
கறித்தெழு கானப்பேர் கைதொழல் கருமமே. 10

காட்டகத் தாடலான் கருதிய கானப்பேர்
கோட்டகத் திளவரால் குதிகொளுங் காழியான்

---

[5] ஏனம் - பன்றி. [6] என்னில் என்றும் பாடம். [7] ஞானமா மலர் - செபித்துச் சாத்தும்பூ. [8] இவ்வடி பக்குவமுறையில் நாடோறும் அருள் நலம் வளரும் என்பதை அறிவிக்கும். [9] நிலை - பணிதல். [10] கலையினார் - நூல்களால் பேசப்படுபவர்.

நாட்டகத் தோங்குசீர் ஞானசம் பந்தன
பாட்டகத் திவைவலார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—காளீசுவரர், சுந்தரேசுவரர், சேமேசுவரர்;
தேவி—சொர்ணவல்லி, மீனாட்சி, சௌந்தரநாயகி.

---

## 11. திருப்பூவணம்*

**பண் - தக்கேசி [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

அறையார்புனலுமா மலரும் ஆடரவார் சடைமேல்
குறையார்மதியஞ் சூடிமாதோர் கூறுடையானிடமாம்
முறையால்[1] முடிசேர் தென்னர்சேரர் சோழர்கள் தாம்வணங்கும்
திறையாரொளி[2]சேர் செம்மையோங்குந் தென்திருப்பூவணமே.[3] 1

மருவார்மதில்மூன் றொன்றஎய்து மாமலையான்மடந்தை
ஒருபால்பாக மாகச்செய்த வும்பர்பிரானவனூர்
கருவார்சாலி யாலை[4] மல்கிக் கழல்மன்னர்[5] காத்தளித்த
திருவால்மலிந்த சேடர்[6] வாழுந் தென்திருப்பூவணமே. 2

போரார்மதமா வுரிவைபோர்த்துப் பொடியணிமேனியனைக்
காரார்கடலின் நஞ்சமுண்ட கண்ணுதல்விண்ணவனூர்
பாரார்வைகைப்புனல்வாய்பரப்பிப் பன்மணிபொன்கொழித்துச்
சீரார்வாரி சேரநின்ற[7] தென்திருப்பூவணமே. 3

---

* இங்கு ஒரு அடியார் சிறப்பாக நந்தவனம் வைத்து இறைவனை வழிபட்டமையால் 'பூவணம்' எனப் பெயர்பெற்றது என்பர். இது காசிக்குச் சமானமான தலம் ஆகும். [1] முறையார் என்றும் பாடம். [2] ஒளி - ஞான ஒளி. [3] தென் - அழகு: தெற்குமாம். பூவணமே ஏ: தேற்றம். [4] சாலி - நெல் வகை. ஆலை-கரும்பாலை. [5] மன்னர் - மூவேந்தர். [6] சேடர் - அறிவுடையோர்; [7] வாரி-கடல்; சேரநின்ற - சேர்தல் - அடுத்தல்: சேரநின்ற என்றதனால் அணிமையில் நின்றதேஅன்றி கடலில் சேர்தலில்லை என்பது குறிப்பு. வைகை கடலோடு சேராமல் இராமநாதபுரம் ஜில்லாவின் கோடியில் ஓர் ஏரியின்கண் பாய்ந்து முடிகின்றதாம்.

கடியாரலங்கற் கொன்றைசூடிக் காதிலொர்வார்குழையன்
கொடியார்வெள்ளை யேறுகந்த கோவணவன்னிடமாம்
படியார்கூடி நீடியோங்கும் பல்புகழாற்பரவச்
செடியார்வைகை சூழநின்ற தென்திருப்பூவணமே. 4

கூரார்வாளி சிலைபிற்கோத்துக் கொடிமதில்கூட்டழித்த
போரார்வில்லி மெல்லியலாளோர் பால்மகிழ்ந்தானிடமாம்
ஆரா அன்பில் தென்னர்சேரர் சோழர்கள்போற்றிசைப்பத்
தேரார்வீதி மாடநீடுந் தென்திருப்பூவணமே. 5

நன்றுதீதென் றொன்றிலாத நான்மறையோன் [8] கழலே
சென்றுபேணி யேத்தநின்ற தேவர்பிரானிடமாம்
குன்றிலொன்றி ஓங்கமல்கு குளிர்பொழில்சூழ்மலர்மேல்
தென்றலொன்றி முன்றிலாருந் தென்திருப்பூவணமே. 6

பைவாயரவம் அரையிற்சாத்திப் பாரிடம்போற்றிசைப்ப
மெய்வாய்மேனி நீறுபூசி ஏறுகந்தானிடமாம்
கைவாழ்வளையார் மைந்தரோடுங் கலவியினால்நெருங்கிச்
செய்வார்தொழிலின் பாடலோவாத் தென்திருப்பூவணமே.[9] 7

மாடவீதி மன்னிலங்கை மன்னனை மாண்பழித்துக்
கூடவென்றி வாள்கொடுத்தாள் கொள்கையினார்க்கிடமாம்
பாடலோடும் ஆடலோங்கிப் பன்மணிபொன்கொழித்து
ஓடநீரால் [10] வைகைசூழும் உயர்திருப்பூவணமே. 8

பொய்யாவேத நாவினானும் பூமகள் காதலனும்
கையால்தொழுது கழல்கள்போற்றக் கனலெரியானவனூர்
மையார்பொழிலின் வண்டுபாட வைகைமணிகொழித்துச்
செய்யார்கமலம் தேன்அரும்புந் தென்திருப்பூவணமே. 9

அலையார்புனலை நீத்தவருந் தேரரும் அன்புசெய்யா
நிலையாவண்ணம் மாயம்வைத்த நின்மலன்தன்னிடமாம்

---

[8] இவ்வடி கடவுளுக்கு நன்மை தீமை இல்லை என்பதை அறிவிக்கும். [9] கைவாழ்வினையார் என்றும் பாடம்; இவ்வடிகள் மறுமை இன்பச் சாதனங்களே அன்றி இம்மை இன்பங்களாலும் குறைவில்லாதவர் வாழும் நகர் என்பதைக் குறிப்பிடும். [10] ஓடநீர் - ஓட்டத்தால் கலக்கும்படி செழித்து ஓடும் நீர்; ஓடி நீரால் என்றும் பாடம்.

மலைபோல்துன்னி வென்றியோங்கு மாளிகைசூழ்ந்தயலே
சிலையார்புரிசை[11] பரிசுபண்ணுந் தென்திருப்பூவணமே. 10

திண்ணார்[12] புரிசை மாடமோங்குந் தென்திருப்பூவணத்துப்
பெண்ணார்மேனி யெம்மிறையைப் பேரியல்இன்தமிழால்
நண்ணாருட்கக்[13] காழிமல்கு ஞானசம்பந்தன்சொன்ன
பண்ணார்பாடல் பத்தும்வல்லார் பயில்வதுவானிடையே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - காந்தாரபஞ்சமம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மாத[1]மர் மேனிய னாகி வண்டொடு
போதமர் பொழிலணி பூவ ணத்துறை
வேதனை விரவலர் அரணம் மூன்றெய்த
நாதனை யடிதொழ நன்மை யாகுமே. 1

வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு
தேனணி பொழில்திருப் பூவ ணத்துறை
ஆனநல் லருமறை யங்கம்[2] ஓதிய
ஞானனை யடிதொழ நன்மை யாகுமே. 2

வெந்துய ருறுபிணி வினைகள் தீர்வதோர்
புந்தியர் தொழுதெழு பூவ ணத்துறை
அந்திவெண் பிறையினோ டாறு சூடிய
நந்தி[3]யை யடிதொழ நன்மை யாகுமே. 3

வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்
பூசனைப் பொழில்திகழ் பூவ ணத்துறை
ஈசனை மலர்புனைந் தேத்து வார்வினை
நாசனை[4] யடிதொழ நன்மை யாகுமே. 4

குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை
பொருந்திய பொழில்திருப் பூவ ணத்துறை

---

[11] புரிசை - மதில்கள். [12] திண்ணார் - அருகர், புத்தர் முதலிய புறவுரையாளர்கள். [13] உட்குதல் - அஞ்சியொழிதல். [1] மாது - அழகு. [2] அங்கம் - வேதாங்கம். [3] நந்தி - சிவன். [4] வினைநாசன் - தீவினைகளை நாசஞ்செய்பவன்.

அருந்திறல் அவுணர்தம் அரணம் மூன்றெய்த
பெருந்தகை யடிதொழப் பீடை யில்லையே. 5

வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய
பொறியர வணிபொழிற் பூவ ணத்துறை
கிறிபடு முடையினன் கேடில் கொள்கையன்
நறுமலர் அடிதொழ நன்மை யாகுமே. 6

பறைமல்கு முழவொடு பாடல் ஆடலன்
பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை
மறைமல்கு பாடலன் மாதோர் கூறினன்
அறைமல்கு கழல்தொழ அல்லல்[5] இல்லையே. 7

வரைதனை யெடுத்தவல் அரக்கன் நீள்முடி
விரல்தனில் அடர்த்தவன் வெள்ளை நீற்றினன்
பொருபுனல்[6] புடையணி பூவ ணந்தனைப்
பரவிய அடியவர்க் கில்லை பாவமே. 8

நீர்மல்கு மலருறை வானும் மாலுமாய்ச்
சீர்மல்கு திருந்தடி சேர கிற்கிலர்
போர்மல்கு மழுவினன் மேய பூவணம்
ஏர்மல்கு மலர்புனைந் தேத்தல் இன்பமே. 9

மண்டைகொண் டுழிதரு மதியில் தேரரும்
குண்டருங் குணமல[7] பேசுங் கோலத்தர்
வண்டமர் வளர்பொழில் மல்கு பூவணம்
கண்டவர் அடிதொழு தேத்தல் கன்மமே. 10

புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை
அண்ணலை யடிதொழு தந்தண் காழியுள்
நண்ணிய அருமறை ஞானசம் பந்தன்
பண்ணிய தமிழ்சொலப் பறையும்[8] பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பூவணநாதர்; தேவி—மின்னம்மை.

---

[5] அல்லல்-பிறவித் துன்பம். [6] பொருபுனல்-கங்கை. [7] குணம் பல என்றும் பாடம். [8] பறையும் - நீங்கும்.

# 12. திருக்குற்றாலம்*

பண் - குறிஞ்சி ** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வம்பா[1]ர்குன்றம் நீடுயர்சாரல் வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக் கோலவண்டியாழ்செய் குற்றாலம்
அம்பால்நெய்யோ டாடல்அமர்ந்தான் அலர்கொன்றை
நம்பான்மேய நன்னகர்போலும் நமரங்காள்.[2] 1

பொடிகள்பூசித் தொண்டர்பின்செல்லப் புகழ்விம்மக்
கொடிகளோடும் நாள்விழமல்கு குற்றாலம்
கடிகொள்கொன்றை கூவிளமாலை காதல்செய்
அடிகள்மேய நன்னகர்போலும் அடியீர்காள். 2

செல்வம்[3] மல்கு செண்பகம்வேங்கை சென்றேறிக்
கொல்லைமுல்லை மெல்லரும்பீனுங் குற்றாலம்
வில்லின்ஒல்க மும்மதிலெய்து வினைபோக
நல்கும்நம்பான் நன்னகர்போலும் நமரங்காள். 3

பக்கம்வாழைப் பாய்கனியோடு பலவின்தேன்
கொக்கின்கோட்டு[4]ப் பைங்கனிதூங்கும்[5] குற்றாலம்
அக்கும்பாம்பும் ஆமையும் பூண்டோர் அனலேந்தும்
நக்கன்மேய நன்னகர்போலும் நமரங்காள். 4

மலையார்சாரல் மகவுடன்வந்த மடமந்தி
குலையார்வாழைத் தீங்கனிமாந்துங் குற்றாலம்
இலையார்சூலம் ஏந்தியகையான் எயிலெய்த
சிலையான்மேய நன்னகர்போலுஞ் சிறுதொண்டீர். 5

---

* கூத்தர்கோயில் (அழகிய பழங்கோயில்) என வழங்கப்பெறும்; ஐம்பெருஞ்சபைகளுள் 'சித்திரசபை' இதனைச் சேர்ந்தது. இது குறும்பலாவின் வடக்கில் நகரத்தினுள் உள்ளது. குத்தாலம் - பாவத்தைப் போக்குவதற்குத் தீயின் நாக்குப்போல்வது: கு-பாவம்; தாலம்-(தீயின்) நாக்கு; குத்தாலம் என்பது குற்றாலம் எனத்திரிந்தது. ** இப்பதிகம் அடியார்களை நோக்கி வினவிய அமைப்புடையது. [1] வம்பு - மணம். [2] நமரங்காள் - நம்மவர்களே. [3] செல்வம் - இங்குச் செழிப்பைக் குறிப்பது. [4] கொக்கின்கோட்டு-மாமரக் கிளைகளில். [5] தூங்கும் - தொங்கும்.

மைம்மாநீலக்[6] கண்ணியர்சாரல் மணிவாரிக்
கொய்ம்மாஏனல்[7] உண்கிளியோப்புங் குற்றாலம்
கைம்மாவேழத் தீருரிபோர்த்த கடவுள்எம்
பெம்மான்மேய நன்னகர்போலும் பெரியீர்காள். 6

நீலநெய்தல் தண்சுனைசூழ்ந்த நீள்சோலைக்
கோலமஞ்ஞை பேடையொடாடுங் குற்றாலம்
காலன்தன்னைக் காலாற்காய்ந்த கடவுள்எம்
சூலபாணி நன்னகர்போலுந் தொழுவீர்காள். 7

போதும்பொன்னும் உந்தியருவி புடைசூழக்
கூதன்மாரி நுண்துளிதூங்குங் குற்றாலம்[8]
மூதூரிலங்கை முட்டியகோனை மிறை[9] செய்த
நாதன்மேய நன்னகர்போலும் நமரங்காள். 8

அரவின்வாயின் முள்ளெயிறேய்ப்ப அரும்பீன்று[10]
குரவம்பாவை[11] முருகமர்சோலைக் குற்றாலம்
பிரமன்னோடு மாலறியாத பெருமையெம்
பரமன்மேய நன்னகர்போலும் பணிவீர்காள். 9

பெருந்தண்சாரல் வாழ்சிறைவண்டு பெடைபுல்கிக்
குருந்தம்ஏறிச் செவ்வழி[12] பாடுங் குற்றாலம்
இருந்துண்தேரும் நின்றுண்சமணும எடுத்தார்ப்ப
அருந்தண்[13] மேய நன்னகர்போலும் அடியீர்காள். 10

மாடவீதி வருபுனற்காழி யார்மன்னன்
கோடலீன்று கொழுமுனைகூம்புங் குற்றாலம்
நாடவல்ல நற்றமிழ்ஞான சம்பந்தன்
பாடல்பத்தும் பாடநம்பாவம் பறையுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

[சுவாமி—கூத்தர் ; தேவி—சிவகாமியம்மை.]

---

[6] மைமமானீலக் என்றும் பாடம். [7] ஏனல்-தினை. [8] இவ்வ குற்றாலத்தின் பருவச்சிறப்பைக் குறிக்கும். [9] மிறை - தண்டனை. [10] இவ்வடி குராமலரின் தன்மையினைக் குறிக்கும். [11] குரவம்பாவை- உருவகத்தால் மலருக்கு வழங்கும் பெயர். [12] செவ்வழி - ஒருபண். [13] அருந்தண் - அரிய (தட்பம்) தண்ணளியுடையவன்.

## [திருக்குறும்பலா] *

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

திருந்த மதிசூடித் தெண்ணீர் சடைக்கரந்து தேவிபாகம் பொருந்திப் பொருந்தாத[1] வேடத்தாற் காடுறைதல் புரிந்தசெல்வர், இருந்த இடம்வினவில் ஏலங்கமழ் சோலையின[2] வண்டுயாழ் செய்,[3] குருந்த மணம்நாறுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே. 1

நாட்பலவுஞ் சேர்மதியஞ்[4] சூடிப் பொடியணிந்த நம்பான் நம்மை, ஆட்பலவுந் தானுடைய அம்மா னிடம்போலும் அந்தண் சாரல், கீட்பலவுங் கீண்டுகிளை கிளையன்[5] மந்திபாய்ந் துண்டு விண்ட, கோட்பலவின் தீங்கனியை மாக்கடுவன் உண்டுகளுங் குறும்பலாவே. 2

வாடல் தலைமாலை சூடிப் புலித்தோல் வலித்துவீக்கி, ஆட லரவசைத்த அம்மா னிடம்போலும் அந்தண்சாரல், பாடற் பெடைவண்டு போதலர்த்தத் தாதவிழ்ந்து பசும்பொனுந்திக், கோடன் மணங்கமழுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே. 3

பால்வெண் மதிசூடிப் பாகத்தோர் பெண்கலந்து பாடியாடிக், கால னுடல்கிழியக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ்வெற்பில், நீல மலர்க்குவளை கண்திறக்க வண்டரற்றும் நெடுந்தண்சாரல், கோல மடமஞ்ஞை பேடையொ டாட்டயருங் குறும்பலாவே 4

---

* இது குற்றால நீர்வீழ்ச்சியினை அடுத்து வடகரையில் உள்ளது; இதுவே குற்றாலம் ஆகும். இங்குஉள்ள தலமரம் 'குறும்பலா' ஆதலின் இப்பெயர் பெற்றது; குறும்பலா - பலாவின் ஒரு வகை. முன்னர் இக்கோயில் 'திருமுற்றம்' என்ற பெயருடைய திருமால் கோயிலாக இருந்தது; பின்னர் அகத்திய முனிவர் அங்குள்ள திருமால் வடிவினைச் சிவலிங்க வடிவாக ஆக்கினர். அது முதல் அசகோயில் சிவாலயமாகியது. [1] பொருந்ாத - தேவி பாகத்தோடு பொருந்தாத. [2] சோலையின் என்றும் பாடம். [3] யாழ் செய்தல் - யாழ்இசைபோலப் பாடுதல். [4] நாட்பலவுஞ்சேர்மதியம் - க்ஷயநோய் முதிர்ந்து இறக்கும் நிலை வரும்வரை உள்ள நாட்கள் பலவும் கூடிய சந்திரன். [5] கிளைகிளையின் என்றும் பாடம்.

தலைவாண் மதியங் கதிர்விரியத் தண்புனலைத் தாங்கித்தேவி, முலைபாகங் காதலித்த மூர்த்தி யிடம்போலும் முதுவேய்சூழ்ந்த, மலைவாய் அசும்பு[6] பசும்பொன் கொழித்திழியும் மல்குசாரல், குலைவாழைத் தீங்கனியும் மாங்கனியுந் தேன்பிலிற்றுங் குறும்பலாவே. 5

நீற்றே துதைந்திலங்கு வெண்ணூலர் தண்மதியர் நெற்றிக் கண்ணர், கூற்றேர் சிதையக் கடிந்தா ரிடம்போலுங் குளிர்சூழ் வெற்பில், ஏற்றேனம் ஏன மிவையோ டவைவிரவி யிழிபூஞ் சாரல், கோற்றேன் இசைமுரலக் கேளாக் குயில்பயிலுங் குறும்பலாவே. 6

பொன்றொத்த[7] கொன்றையும் பிள்ளை மதியும் புனலுஞ் சூடிப், பின்றொத்த வார்சடையெம் பெம்மா னிடம்போலும் பிலயங்[8]தாங்கி, மன்றத்து மண்முழவம் ஓங்கி மணிகொழித்து வயிரம் உந்திக், குன்றத் தருவி யயலே புனல்ததும்புங் குறும்பலாவே. 7

ஏந்து திணிதிண்டோள் இராவணனை மால்வரைக்கீழ் அடர வூன்றிச், சாந்தமென நீறணிந்த சைவ ரிடம்போலுஞ் சாரற் சாரல், பூந்தண் நறுவேங்கைக் கொத்திறுத்து மத்தகத்திற் பொலியஏந்திக், கூந்தற் பிடியுங் களிறு முடன்வணங்குங் குறும்பலாவே. 8

அரவின் அணையானும் நான்முகனுங் காண்பரிய அண்ணல் சென்னி, விரவி மதியணிந்த விகிர்தர்க் கிடம்போலும் விரிபூஞ் சாரல், மரவம் இருகரையும் மல்லிகையுஞ் சண்பகமும் மலர்ந் துமாந்தக், குரவம் முறுவல்செய்யுங் குன்றிடஞ்சூழ்[9] தண்சாரற் குறும்பலாவே. 9

மூடிய சீவரத்தர் முன்கூறுண் டேறுதலும் பின்கூறுண்டு, காடி[10] தொடுசமணைக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ்வெற்பில், நீடுயர் வேய்குனியப் பாய்கடுவன் நீள்கழைமேல் நிருத்தஞ்செய் யக், கூடிய வேடுவர்கள் கூய்விளியாக்[11] கைமறிக்கும்[12] குறும்பலாவே. 10

6 அசும்பு - நீர்ஊற்று. 7 தொத்த - கொத்தாகிய. 8 பிலயம் - நீர்ப்பெருக்கு; இது பிரளயம் என்பதன் மரூஉ. 9 குன்றிடைசூழ் என்றும் பாடம். 10 காடி - புளித்தகஞ்சி. 11 குய்விளியாக் என்றும் பாடம். 12 கைமறித்தல்-கைகொட்டி மகிழ்தல்.

கொம்பார் பூஞ்சோலைக் குறும்பலா மேவிய கொல்லேற் றண்ணல், நம்பான் அடிபரவும் நான்மறையான் ஞானசம் பந்தன் சொன்ன, இன்பாய பாடலிவைபத்தும் வல்லார் விரும்பிக்கேட் பார், தம்பால தீவினைகள் போயகலும் நல்வினைகள் தளரா வன்றே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—குறும்பலாநாதர்; தேவி—குழல்வாய்மொழியம்மை.

## 13. திருநெல்வேலி*

பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மருந்தவை மந்திரம் மறுமைநன் னெறியவை மற்றுமெல் லாம், அருந்துயர் கெடுமவர் நாமமே[1] சிந்தைசெய் நன்னெஞ் சமே, பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன் சொரிதரத் துன்றுபைம்பூம்,[2] செருந்திசெம் பொன்மலர்[3] திருநெல்வே லியுறை செல்வர்[4] தாமே. 1

என்றுமோ ரியல்பின ரெனநினை வரியவ ரேறதேறிச், சென்றுதாஞ் செடிச்சியர்[5] மனைதொறும் பலிகொளும் இயல் பதுவே, துன்றுதண் பொழில்நுழைந் தெழுவிய கேதகை[6]ப் போதளைந்து, தென்றல்வந் துலவிய திருநெல்வே லியுறை செல் வர் தாமே. 2

---

* வேதசருமர் என்ற அன்பர் இறைவனது திருவமுதுக்காகக் கட்டியிருந்த நெல்லை வெள்ளம் அடித்துப்போகாவண்ணம் வேலி கட்டியபடி இறைவன் காத்தமையால் இப்பெயர்பெற்றது. இவ்வா லாற்றல் இத்தலத்து இறைவனை 'நெல்லுக்கு வேலியிட்ட நெல்லை யப்பர்' என வழங்குவர். இஃது ஐம்பெருஞ்சபைகளுள் தாமிரசபை ஆகும். இங்கு இறைவன் மூங்கிலடியில் முளைத்து வெளிப்பட்ட காரணத்தால் இத்தலம் 'வேணுவனம்' எனவும் பெயர்பெறும். [1] நாமம் - நாமங்கள். [2] துன்னுதண்பூம் என்றும் பாடம். [3] பொன் மலர் - பொன்போல மலர்கின்ற. [4] செல்வர் - முத்திச் செல்வ முடையவர். [5] செடிச்சியர் - இழிந்த பெண்கள். [6] கேதகை - தாழை.

பொறிகிளர்[7] அரவமும் போழிள மதியமுங் கங் கையென் னும், நெறிபடு குழலியைச் சடைமிசைச் சுலவிவெண் ணீறு பூசிக், கிறி[8] பட நடந்துநற் கிளிமொழி யவர்மனங் கவர்வர் போலும், செறிபொழில் தழுவிய திருநெல்வே லியுறை செல்வர் தாமே. 3

காண்டகு மலைமகள் கதிர்நிலா முறுவல்செய் தருளவேயும், பூண்டநா கம்புறங் காடரங் காநட மாடல்பேணி,[9] ஈண்டுமா மாடங்கள் மாளிகை மீதெழு கொடிமதியம், தீண்டிவந் துலவிய திருநெல்வே லியுறை செல்வர் தாமே. 4

ஏனவெண் கொம்பொடும் எழில்திகழ் மத்தமும் இளஅர வும், கூனல்வெண் பிறைதவழ் சடையினர் கொல்புலித்[10] தோலுடையார், ஆனின்நல் லைந்துகந் தாடுவர் பாடுவர் அருமறை கள், தேனில்வண் டமர்பொழில் திருநெல்வே லியுறை செல்வர் தாமே. 5

வெடிதரு தலையினர் வேனல்[11] வெள் ளேற்றினர் விரிசடை யர், பொடியணி மார்பினர் புலியதள் ஆடையர் பொங்கரவர், வடிவுடை மங்கையோர் பங்கினர் மாதரை மையல்செய்வார், செடிபடு பொழிலணி திருநெல்வே லியுறை செல்வர் தாமே. 6

அக்குலாம் அரையினர் திரையுலாம் முடியினர் அடிக ளன்று, தக்கனார் வேள்வியைச் சாடிய சதுரனார்[12] கதிர்கொள் செம்மை, புக்கதோர் புரிவினர் வரிதரு வண்டுபண் முரலுஞ் சோலைத், திக்கெலாம் புகழுறுந் திருநெல்வே லியுறை செல்வர் தாமே. 7

முந்திமா விலங்கலன் றெடுத்தவன் முடிகள்தோள் நெரி தரவே, உந்திமா மலரடி யொருவிரல் உகிர்நுதி யாலடர்த்தார், கந்தமார் தருபொழில் மந்திகள் பாய்தர மதுத்திவலை, சிந்துபூந் துறை[13] கமழ் திருநெல்வே லியுறை செல்வர் தாமே. 8

---

[7] பொறிவளர் என்றும் பாடம். [8] கிறி - மாயம். [9] பேணி - பேணுபவர். [10] கோட்புலித் என்றும் பாடம். [11] வேனல் - சினமுடைய. [12] இவ்வடி வீரபத்திரமூர்த்தியினைக் குறிக்கும். [13] சிந்துபூந்துறை - இது தாமிரபருணியின் படித்துறை; இங்குச் சிந்திய எலும்புகள் பூக்களாயினமையால் இப்பெயர் பெற்றது.

பைங்கண்வாள் அரவணை யவனொடு பனிமல ரோனுங் காணா, அங்கணா[14] அருளென அவரவர் முறைமுறை யிறைஞ்ச நின்றார், சங்கநான் மறையவர் நிறைதர அரிவையர் ஆடல் பேணத், திங்கள்நாள் விழ[15] மல்கு திருநெல்வே லியுறை செல்வர் தாமே. 9

துவருறு விரிதுகில் ஆடையர் வேடமில் சமணரென்னும், அவருறு சிறுசொலை யவமென நினையுமெம் அண்ணலார்தாம், கவருறு கொடிமல்கு மாளிகைச் சூளிகை மயில்கள் ஆலத், திவருறு மதிதவழ் திருநெல்வே லியுறை செல்வர் தாமே. 10

பெருந்தண்மா மலர்மிசை அயனவன் அனையவர் பேணு கல்வித், திருந்துமா மறையவர் திருநெல்வே லியுறை செல்வர் தம்மைப், பொருந்துநீர்த் தடம்மல்கு புகலியுள் ஞானசம் பந்தன் சொன்ன, அருந்தமிழ் மாலைகள் பாடியா டக்கெடும் அருவினையே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—நெல்லையப்பர், வேணுவனநாதர்;
தேவி—காந்திமதியம்மை.

## கொங்குநாட்டில் உள்ள தலங்கள்

◦◦○ ★ ○◦◦

### 1. திருநணா * [பவாநி]

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பந்தார் விரல்மடவாள்[1] பாகமா நாகம்பூண் டேறதேறி[2], அந்தார் அரவணிந்த அம்மா னிடம்போலும் அங்கண்சாரல்,

[14] காணா - தங்கண் என்றும் பாடம். [15] திங்கள்நாள்விழ - மாதந்தோறும் நிகழும் பருவ விழாக்கள். * வழிபடுவோர்க்கு யாதொருதீங்கும் நண்ணாத தலம் ஆதலால் இப்பெயர் பெற்றது. ந(ண்)ணாதவூர் என்பது நணா என ஆயிற்று. பவாநி என்றும் பாடம். இது பவாநிகூடல் என்றும், பவாநி முக்கூடல் என்றும் வழங்கப்பெறும். பவாநி-காவிரியின் உபநதிகளுள்ஒன்று. [1] மடவார் என்றும் பாடம். [2] பூண்டெருதேறி என்றும், பூண்டேறுமேறி என்றும் பாடம்.

வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில் வண்டுபாடச், செந் தேன் தெளியொளிரத் தேமாக் கனியுதிர்க்குந் திருநணாவே.[3] 1

நாட்டம் பொலிந்திலங்கு நெற்றியினான் மற்றொருகை வீணை யேந்தி, ஈட்டுந் துயரறுக்கும் எம்மான் இடம்போலும் இலைசூழ் கானில், ஓட்டந் தரும்அருவி வீழும் விசைகாட்ட முந்தூழோ[4] சைச், சேட்டார்[5] மணிகள் அணியுந் திரைசேர்க்குந் திருநணாவே. 2

நன்றாங் கிசைமொழிந்து நன்னுதலாள் பாகமாய் ஞால மேத்த, மின்தாங்கு செஞ்சடையெம் விகிர்தர்க் கிடம்போலும் விரைசூழ்வெற்பில், குன்றோங்கி வன்திரைகள் மோத மயிலா லுஞ் சாரற்செவ்வி, சென்றோங்கி வானவர்க ளேத்தி யடிபணி யுந் திருநணாவே. 3

கையில் மழுவேந்திக் காலிற் சிலம்பணிந்து கரித்தோல் கொண்டு, மெய்யில் முழுதணிந்த விகிர்தர்க் கிடம்போலும் மிடைந்துவானோர், ஐய அரனே பெருமான்[6] அருளென்றென் றோதரிக்கச், செய்ய கமலம் பொழில்தேன் அளித்தியலுந்[7] திரு நணாவே. 4

முத்தேர் நகையாள் இடமாகத் தம்மார்பில் வெண்ணூல் பூண்டு, தொத்தேர் மலர்சடையில் வைத்தா ரிடம்போலுஞ் சோலை சூழ்ந்த, அத்தேன் அளியுண் களியா லிசைமுரல ஆலத்தும்பி, தெத்தே[8] யெனமுரலக் கேட்டார் வினைகெடுக்குந் திருநணாவே. 5

வில்லார் வரையாக மாநாகம் நாணாக வேடங்கொண்டு, புல் லார் புரமூன் றெரித்தார்க் கிடம்போலும் புலியுமானும், அல்லாத சாதிகளும் அங்கழல்மேற் கைகூப்ப[9] அடியார்கூடிச், செல்லா வருநெறிக்கே செல்ல அருள்புரியுந் திருநணாவே. 6

கானார் களிற்றுரிவை மேல்மூடி யாடரவொன் றரைமேற் சாத்தி, ஊனார் தலையோட்டில் ஊணுகந்தான் தானுகந்த கோயி

---

[3] பின்னிரண்டடிகள் தற்குறிப்பேற்றம் என்னும் அணி ஆகும். [4] ஈட்டுந்துயர் - தேடப்படும் வினை ; துயர் - துன்பத்திற்குக் காரண மாகிய வினை. முந்தூழ் - மூங்கில். [5] சேடு - ஒளி. [6] ஐயரவெம் பெருமான் என்றும் பாடம். [7] இழித்தியலும் என்றும் பாடம். [8] தெத்தே - ஒலிக்குறிப்பு. [9] புலியும.... கைகூப்ப - புலி, மான், யானை, எறும்பு, ஈ முதலிய பகுத்தறிவிலாத உயிர்களும் வழிபடுதல் என்பது குறிப்பு.

லெங்கும், காறு விதத்தால் விரதிகள் [10] நல்நாமமே யேத்திவாழ்த் தத், தேனார் மலர்கொண் டடியார் அடிவணங்குந் திருநணாவே. 7

மன்னீர் இலங்கையர்தங் கோமான் வலிதொலைய விரலா லூன்றி, முந்நீர்க் கடல்நஞ்சை யுண்டார்க் கிடம்போலும் முனை சேர்சீயம், அன்னீர் மை [11] குன்றி யழலால் விழிகுறைய வழியு முன்றிற், செந்நீர் பரப்பச் சிறந்து கரியொளிக்குந் திருநணாவே. 8

மையார் மணிமிடறன் மங்கையோர் பங்குடையான் மனை கடோறும், கையார் பலியேற்ற கள்வன் இடம்போலுங் கழல் கள்நேடிப், பொய்யா மறையானும் பூமி யளந்தானும் போற்ற மன்னிச், செய்யார் எரியாம் [12] உருவ முறவணங்குந் திரு நணாவே. 9

ஆடை யொழித்தங் கமணே திரிந்துண்பார் அல்லல்பேசி, மூடுருவம் உகந்தார் உரை யகற்றும் மூர்த்திகோயில், ஓடு நதி சேரும் நித்திலமும் மொய்த்தகிலுங் கரையிற்சாரச், சேடர் சிறந் தேத்தத் தோன்றி யொளிபெருகுந் திருநணாவே. 10

கல்வித் தகத் [13] தால் திரைசூழ் கடற்காழிக் கவுணிசீரார், நல்வித் தகத் [14] தால் இனிதுணரும் ஞானசம் பந்தன்எண்ணும், சொல்வித் தகத் [15] தால் இறைவன் திருநணா ஏத்துபாடல், வல்வித் தகத் [16] தான் மொழிவார் பழியிலரிம் மண்ணின்மேலே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சங்கமுகநாதர் ; தேவி—வேதமங்கை.

---

[10] நானாவிதத்தால் விரதிகள்-காபாலம் பாசுபதம் முதலிய விரதியர்; இவர்கள் அகப்புறச் சமயத்தார் ஆதலின், 'நாமமே ஏத்தி வாழ்த்தி' என்று கூறினார் ; அடியார் - இவர் அகச் சமயத்தார் ஆத லின் 'மலர் கொண்டடி வணங்கும்' என்று கூறினார். [11] சீயம் - சிங்கம் ; அல் நீர்மை - பகைச் செயலின் தன்மை. [12] செய் - செம்மையாகிய; செய்யா எரியா என்றும் பாடம். [13] கல்வித்தகம் - கற்களின் வடிவின் செம்மையினைப்பற்றி ; [14] நல்வித்தகம் - நல்ல சிவஞானம் ; [15] சொல் வித்தகம் - சொல்லின் திருத்தம் ; [16] வல்வித் தகம் - வன்மையுடைய உறுதிப்பாடு ; சொற்பின் வருநிலை அணி.

## 2. திருக்கொடிமாடச்செங்குன்றூர்*

### பண் - வியாழக்குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வெந்தவெண் நீறணிந்து விரிநூல் திகழ்மார்பின் நல்ல
பந்தணவும்விரலாள் ஒருபாகம் அமர்ந்தருளிக்[1]
கொந்தணவும்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
அந்தணனைத்தொழுவார் அவலம்[2] அறுப்பாரே. 1

அலைமலி தண்புனலோ டரவஞ் சடைக்கணிந் தாகம்[3]
மலைமகள் கூறுடையான் மலையார் இளவாழைக்
குலைமலி தண்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
தலைமகனைத்தொழுவார் தடுமாற் றறுப்பாரே. 2

பாலன நீறு[4] புனை திகழ்மார்பிற்[5] பல்வளைக்கை நல்ல
ஏல மலர்க்குழலாள் ஒருபாகம் அமர்ந்தருளிக்
கோல மலர்ப்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் மல்கும்
நீலநன் மாமிடற்றன் கழலேத்தல் நீதி[6]யே. 3

வாருறு கொங்கைநல்ல மடவாள் திகழ்மார்பில் நண்ணும்
காருறு கொன்றையொடுங் கதநாகம் பூண்டருளிச்
சீருறும் அந்தணர்வாழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
நீருறு செஞ்சடையான் கழலேத்தல் நீதியே. 4

பொன்திகழ் ஆமையொடு புரிநூல் திகழ்மார்பில் நல்ல
பன்றியின் கொம்பணிந்து பணைத்தோளியோர் பாகமாகக்
குன்றன மாளிகைசூழ் கொடிமாடச் செங்குன்றூர் வானில்
மின்திகழ் செஞ்சடை[7]யான் கழலேத்தல் மெய்ப்பொருளே. 5

---

* 'திருச்செங்கோடு' என வழங்கப்பெறுப; இங்கு மலை சிவந்த நிறமாய் இருப்பதால் இப்பெயர் பெற்றது; கோடு - மலை. இது திருச்செங்குன்றூர் எனவும், மலை நாகம்போல் இருத்தலால் நாகாசலம் எனவும் பெயர்பெறும்; ஆலயம் மலைமேல் உள்ளது. இத்தலம் முருகனுக்குச் சிறப்பாயுரிய குன்றுதோறாடல்களுள் ஒன்று. 1 இவ்வடி அர்த்தநாரீசுவர வடிவைக் குறிக்கும். 2 அவலம் - பிறவித் துன்பம். 3 ஆகம் - உடல். 4 பாலன நீறு - வெண்ணீறு; விபூதி. 5 திருமார்பில் என்றும் பாடம். 6 நீதி - நியதி. 7 மின்...சடை - மின்போன்ற சடை; மின்வண்ணம் - சடை.

ஓங்கிய மூவிலைநற் சூல மொருகையன் சென்னி
தாங்கிய கங்கையொடு மதியஞ் சடைக்கணிந்து
கோங்கண வும்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் வாய்ந்த
பாங்கன தாள்தொழுவார் வினையாய பற்றறுமே. 6

நீடலர் கொன்றையொடு நிமிர்புன் சடைதாழ வெள்ளை
வாட லுடைதலையிற் பலிகொள்ளும் வாழ்க்கையனைக்
கோடல் வளம்புறவிற் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
சேடன[8] தாள்தொழுவார் வினையாய[9] தேயுமே. 7

மத்தம்நன் மாமலரும் மதியும்வளர் கொன்றையுடன் துன்று
தொத்தலர் செஞ்சடைமேல் துதைய வுடன்சூடிக்
கொத்தலர் தண்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் மேய
தத்துவ னைத்தொழுவார் தடுமாற் றறுப்பாரே. 8

செம்பொனின் மேனியனும் பிரமன்திரு மாலுந்தேட நின்ற
அம்பவ ளத்திரள்போல் ஒளியாய ஆதிபிரான்[10]
கொம்பண வும்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் மேய
நம்பன தாள்தொழுவார் வினையாய நாசமே. 9

போதியர் பிண்டியரெ[11]ன் றிவர்கள் புறங்கூறும் பொய்ந்நூல்
ஓதிய கட்டுரைகேட் டுழல்வீர் வரிக்குயில்கள்
கோதிய தண்பொழில்சூழ் கொடிமாடச் செங்குன்றூர் நின்ற
வேதிய னைத்தொழநும் வினையான வீடுமே. 10

அலைமலி தண்புனல்[12] சூழ்ந் தழகார் புகலிந்நகர் பேணும்
தலைமக னாகிநின்ற தமிழ்ஞான சம்பந்தன்
கொலைமலி மூவிலையான் கொடிமாடச் செங்குன்றூ ரேத்தும்
நலமலி பாடல்வல்லார் வினையான நாசமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி - தேவி—அர்த்தநாரீசுவரர் (மாதிருக்கும்பாதியன்)
முருகன்—செங்கோட்டுவேலர்.

---

8 சேடன் - ஞானத்திற்கு இருப்பிடமானவன். 9 வினையான என்றும் பாடம். 10 ஆதிப்பிரான் என்றும் பாடம். 11 பிண்டியர்-சமணர். பிண்டி-அசோகு. 12 அலைமலிதண் பொழில் என்றும் பாடம்.

# 3. திருப்பாண்டிக்கொடுமுடி*

**பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

பெண்ணமர் மேனியி னாரும் பிறைபுல்கு செஞ்சடை யாருங்
கண்ணமர்[1] நெற்றியி னாருங் காதம ருங்[2]குழை யாரும்
எண்ணம ருங்குணத் தாரும் இமையவ ரேத்தநின் றாரும்
பண்ணமர் பாடலி னாரும் பாண்டிக் கொடிமுடி யாரே. 1

தனைக்கணி[3] மாமலர் கொண்டு தாள்தொழு வாரவர் தங்கள்
வினைப்பகை[4] யாயின தீர்க்கும் விண்ணவர் விஞ்சையர் நெஞ்சில்
நினைத்தெழு வார்துயர்[5] தீர்ப்பார் திரிபுர மூன்றையும் வேவக் -- 
பனைக்கைப் பகட்டு[6]ரி போர்த்தார் பாண்டிக் கொடுமுடி யாரே. 2

சடையமர் கொன்றையி னாருஞ் சாந்தவெண் ணீறணிந் தாரும்
புடையமர் பூதத்தி னாரும் பொறிகிளர் பாம்பசைத் தாரும்
விடையம ருங்கொடி யாரும் வெண்மழு மூவிலைச் சூலப்
படையமர் கொள்கையி னாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 3

நறைவளர் கொன்றையி னாரும் ஞாலமெல் லாந்தொழு தேத்தக்
கறைவளர் மாமிடற் றாருங் காடரங் காக்கன லேந்தி
மறைவளர் பாடலி னோடு மண்முழ வங்குழல் மொந்தை
பறைவளர் பாடலி னாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 4

---

* 'கொடுமுடி' என வழங்கப்பெறும். மாமேருவின் சிகரங்களுள் ஒன்று என்பது இதன் வரலாறு. பிரமவிஷ்ணுக்கள் வழிபட்டுத் தனித்தனியே இவ்வாலயத்தினுள் கோயில்கொண்டமர்ந்துள்ளனர்; இவ்வாறு அமைந்துள்ளதை அறியாதார் இத்தலத்தைத் திரிமூர்த்தி சந்நிதி என்றும் வழங்குகின்றனர்; இங்கு ஒரு பாண்டியனுக்குக் கறை (குற்ற) நீங்தகாரணத்தால் இது 'கறையூர்' எனவும் வழங்கப்படும் என்பர்; 'கறையூறிற் பாண்டிக் கொடுமுடி' என்பது சுந்தரர் தேவாரம். [1] பெண் அமர் மேனி - அருள்வளம் என்பதன் குறிப்பு. கண் அமர் - அறக்கருணை, மறக்கருணை என்னும் இருநோக்கமுள்ள. [2] காது அமர் - முறைகேட்டு அருளும் காது. [3] தனை - தன்னை; கணி - கண்ணி; நினைந்து. தொகுத்தல் விகாரங்கள்; தனக்கணி என்றும் பாடம். [4] வினைப்பகை - பழவினையாகிய பகை. [5] வினை என்றும் பாடம். [6] பனைக்கைப்பகடு - யானை.

போகமும் இன்பமு[7] மாகிப் போற்றியென் பாரவர் தங்கள்
ஆகமும்[8] உறைவிட மாக அமர்ந்தவர் கொன்றையி னோடும்
நாகமுந் திங்களுஞ் சூடி நன்னுதல் மங்கைதன் மேனிப்
பாகம் உகந்தவர் தாமும் பாண்டிக் கொடுமுடி யாரே. 5

கடிபடு கூவிளம் மத்தங் கமழ்சடை மேலுடை யாரும்
பொடிபட முப்புரஞ் செற்ற பொருசிலை யொன்றுடை யாரும்
வடிவுடை மங்கைதன் னோடு மணம்படு கொள்கை[9] யி னாரும்
படிபடு கோலத்தி னாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 6

ஊனமர் வெண்டலை யேந்தி உண்பலிக் கென்றுழல் வாரும்
தேனம ருமொழி மாது சேர்திரு மேனியி னாரும்
கானமர் மஞ்ஞைக ளாலுங் காவிரிக் கோலக் கரைமேல்
பானல நீற[10]ணி வாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 7

புரந்தரன் தன்னொடு வானோர் போற்றியென் றேத்தநின் றாரும்
பெருந்திறல் வாளரக் கன்னைப் பேரிடர் செய்துகந் தாரும்
கருந்திரை மாமிடற் றாருங் காரகில் பன்மணி யுந்திப்
பரந்திழி[11] காவிரிப் பாங்கர்ப் பாண்டிக் கொடுமுடி யாரே. 8

திருமகள் காதலி னானுந் திகழ்தரு மாமலர் மேலைப்
பெருமக னும்மவர் காணாப் பேரழ லாகிய பெம்மான்
மருமலி மென்மலர்ச் சந்து வந்திழி காவிரி மாடே
பருமணி நீர்த்துறை யாரும் பாண்டிக் கொடுமுடி யாரே. 9

புத்தரும் புந்தியி லாத சமணரும் பொய்ம்மொழி யல்லால்
மெய்த்தவம் பேசிட மாட்டார் வேடம் பலபல[12] வற்றால்
சித்தருந் தேவருங் கூடிச் செழுமலர் நல்லன கொண்டு
பத்தர்கள் தாம்பணிந் தேத்தும் பாண்டிக் கொடுமுடி யாரே. 10

கலமல்கு தண்கடல் சூழ்ந்த காழியுள் ஞானசம் பந்தன்
பலமல்கு வெண்டலை யேந்திப் பாண்டிக் கொடுமுடி தன்னைச்

---

[7] போகமும் இன்பமும்-அனுபவிக்கப்படும் பொருளும் அதனால் வரும் இன்பமும். [8] ஆகம் - நினைப்பவர்மனம். [9] கொள்கை - தத்துவம். [10] பால் ந(ல்)ல நீறு - பால்போன்ற வெள்ளிய நல்ல விபூதி. [11] பரந்திழி - அகத்தியரது குண்டிகையினின்று வெளியே இழிந்து கீழே பரந்து செல்லும். [12] வேடம்பலபல - காபாலம், மாவிரதம், பாசுபதம் முதலிய பல வேடங்கள்.

சொலமல்கு பாடல்கள் பத்துஞ் சொல்லவல் லார்துயர் தீர்ந்து
நலமல்கு சிந்தைய ராகி நன்னெறி[12] யெய்துவர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கொடுமுடிநாதர்; தேவி—பண்மொழியம்மை.

---

## 4. திருக்கருவூரானிலை

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தொண்டெ[1] லாம்மலர் தூவி ஏத்தநஞ்
சுண்ட லாருயி ராய தன்மையர்
கண்ட னார்[2] கரு வூரு ளானிலை
அண்ட னாரரு ளீயும் அன்பரே. 1

நீதி யார்நினைந் தாய நான்மறை
ஓதி யாரொடுங் கூட லார்[3] குழைக்
காதி னார்கரு வூரு ளானிலை
ஆதி யாரடி யார்தம் அன்பரே. 2

விண்ணு லாமதி சூடி வேதமே
பண்[4]ணு ளார்பர மாய பண்பினர்
கண்[5]ணு ளார்கரு வூரு ளானிலை
அண்ண லாரடி யார்க்கு நல்லரே. 3

முடியர் மும்மத யானை யீருரி
பொடியர் பூங்கணை வேவ[6]ச் செற்றவர்
கடியு ளார்கரு வூரு ளானிலை
அடிகள் யாவையு மாய ஈசரே. 4

பங்க யம்மலர்ப் பாதர் பாதியோர்
மங்கை யர்மணி நீல கண்டர்வான்

---

[12] நன்னெறி - சிவநெறி. * கருவூர-ஊரின் பெயர். இது தற்போது 'கரூர்' என வழங்கி வருகிறது. ஆனிலை - கோயிலின் பெயர். [1] தொண்டு - தொண்டர். [2] கண்டனார் - வீரமுடையவர். [3] கூடிலார் என்றும் பாடம். [4] வேதமே பண் - வேதப் பாடல். [5] கண் - அருட்கண். [6] பூங்கணை வேள்-மன்மதன்.

கங்கை யர்கரு வூரு ளானிலை
அங்கை யாடர வத்தெம் அண்ணலே. 5

தேவர் திங்களும் பாம்புஞ் சென்னியில்
மேவர் மும்மதி லெய்த வில்லியர்
காவ லர்[7] கரு வூரு ளானிலை
மூவ ராகிய மொய்ம்ப ரல்லரே. 6

பண்ணி னார்படி யேற்றர் நீற்றர் மெய்ப்
பெண்ணி னார்பிறை தாங்கு நெற்றியர்
கண்ணி னார்கரு வூரு ளானிலை
நண்ணி னார்நமை யாளும் நாதரே. 7

கடுத்த வாளரக் கன்க யிலையை
எடுத்த வன்தலை தோளுந் தாளினால்
அடர்த்த வன்கரு வூரு ளானிலை
கொடுத்த வன்னருள் கூத்த னல்லனே. 8

உழுது[8] மாநிலத் தேன மா[9] கிமால்
தொழுது மாமல ரோனுங் காண்கிலார்
கழுதி[10] னன்கரு வூரு ளானிலை
முழுது மாகிய மூர்த்தி பாதமே. 9

புத்தர் புன்சமண் ஆதர் பொய்யுரைப்
பித்தர் பேசிய பேச்சை விட்டுமெய்ப்
பத்தர் சேர்கரு வூரு ளானிலை
அத்தர் பாதம் அடைந்து வாழ்மினே. 10

கந்தமார் பொழில் காழி ஞானசம்
பந்தன் சேர்கரு வூரு ளானிலை
எந்தை யைச்சொன்ன பத்தும் வல்லவர்
சிந்தை யில்துய ராய தீர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பசுபதீசுவரர்; தேவி—கிருபாநாயகி.

---

[7] காவலார் என்றும் பாடம். [8] உழுது-அகழ்ந்து; தோண்டி.
[9] ஏனம் - பன்றி. [10] கழுது - பேய்.

## நடுநாட்டில் உள்ள தலங்கள்

## 1. திருநெல்வாயில் அரத்துறை*

**பண் - பியந்தைக்காந்தாரம்**** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எந்தை யீசனெம் பெருமான் ஏறமர் கடவுளென் றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கந்த மாமல ருந்திக் கடும்புனல் நிவா[1] மல்கு கரைமேல்
அந்தண் சோலை நெல்வாயில் அரத்துறை யடிகள்தம் அருளே[2]. 1

ஈர வார்சடை தன்மேல் இளம்பிறை யணிந்தளம் பெருமான்
சீருஞ் செல்வமும் ஏத்தாச்[3] சிதடர்கள்[4] தொழச்செல்வ த[5]ன்றால்
வாரி மாமல ருந்தி வருபுனல் நிவாமல்கு கரைமேல்
ஆருஞ் சோலை நெல்வாயில் அரத்துறை யடிகள்தம் அருளே. 2

பிணி கலந்தபுன் சடைமேற் பிறையணி சிவனெனப் பேணிப்
பணி கலந்து[6] செய் யாத பாவிகள் தொழச்செல்வ தன்றால்
மணி கலந்துபொன் னுந்தி வருபுனல் நிவாமல்கு கரைமேல்
அணி கலந்தநெல் வாயில் அரத்துறை யடிகள்தம் அருளே. 3

துன்ன ஆடை[7] யொன் றுடுத்துத் தூயவெண் ணீற்றின ராகி
உன்னி[8] நைபவர்க் கல்லால் ஒன் றுங்கை கூடுவ தன்றால
பொன்னும் மாமணி யுந்திப் பொருபுனல் நிவாமல்கு கரைமேல்
அன்ன மாருநெல் வாயில் அரத்துறை யடிகள்தம் அருளே. 4

வெருகு[9] ரிஞ்சுவெங் காட்டில் ஆடிய விமலனென் றுள்கி
உருகி நைபவர்க் கல்லால் ஒன்றுங்கை கூடுவ தன்றால்
முருகு ரிஞ்சுபூஞ் சோலை மொய்ம்மலர் சுமந்திழி நிவாவந்
தருகு ரிஞ்சுநெல் வாயில் அரத்துறை யடிகள்தம் அருளே. 5

---

* 'திருவரத்துறை' என வழங்கப்பெறும். ** இப்பதிகம், முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்னம் பெற்றபேற்றை வியந்து பாடியதாகும். 1 நிவா - நதியின் பெயர். 2 அருளே - அருளே இதுவாம். 3 எய்தாச் என்றும் பாடம். 4 சிதடர் - கீழ்மக்கள் சித்தர்கள் என்றும் பாடம்; சித்தர்-சித்தத்தையுடையோர். 5 செல்வது - சென்று கைகூடுவது. 6 கலந்து - (மனமும்வாக்கும்) கூடி. 7 துன்ன ஆடை - தைத்த ஆடை. 8 உன்னி - சிவனது அருளை நினைந்து நினைந்து. 9 வெருகு - மரநாய்; காட்டுப்பூனையுமாம்.

உரவு நீர்ச்சடைக் கரந்த வொருவனென் றுள்குளிர்ந் தேத்திப்
பரவி நைபவர்க் கல்லாற் பரிந்துகை கூடுவ தன்றால்
குரவம் நீடுயர் சோலைக்[10] குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்
அரவ மா[11]ரு நெல்வாயில் அரத்துறை யடிகள்தம் அருளே. 6

நீல மாமணி மிடற்று நீறணி சிவனெனப் பேணும்
சீல[12] மாந்தர்கட் கல்லாற் சென்றுகை கூடுவ தன்றால்
கோல மாமல ருந்திக் குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்
ஆலுஞ்[13] சோலை நெல்வாயில் அரத்துறை யடிகள்தம் அருளே. 7

செழுந்தண் மால்வரை யெடுத்த செருவலி இராவணன் அலற
அழுந்த வூன்றிய விரலான் போற்றியென் பார்க்கல்ல தருளான்
கொழுங்க னிசுமந் துந்திக் குளிர்புனல் நிவாமல்கு கரைமேல்
அழுந்துஞ் சோலை நெல்வாயில் அரத்துறை யடிகள்தம் அருளே. 8

நுணங்கு நூல[14]யன் மாலும் இருவரும் நோக்கரி யானை
வணங்கி நைபவர்க் கல்லால் வந்துகை கூடுவ தன்றால்
மணங்க மழ்ந்துபொன் னுந்தி வருபுனல் நிவாமல்கு கரைமேல்
அணங்குஞ்[15] சோலைநெல்வாயில்அரத்துறையடிகள்தம்அருளே. 9

சாக்கி யப்படு வாரு[16]ஞ் சமண்படு வார்களும் மற்றும்
பாக்கி யப்பட கில்லாப் பாவிகள்[17] தொழச்செல்வ தன்றால்
பூக்க மழ்ந்துபொன் னுந்திப் பொருபுனல் நிவாமல்கு கரைமேல்
ஆர்க்குஞ் சோலை நெல்வாயில் அரத்துறை யடிகள்தம் அருளே. 10

கறையி னார்பொழில் சூழ்ந்த காழியுள் ஞானசம் பந்தன்
அறையும் பூம்புனல் பரந்த அரத்துறை யடிகள்தம் அருளை
முறைமை யாற்சொன்ன பாடல் மொழியும் மாந்தர்தம் வினைபோய்ப்
பறையும் ஐயுற வில்லைப் பாட்டிவை பத்தும்வல் லார்க்கே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—அரத்துறைநாதர்; தேவி—ஆனந்தநாயகி.

---

[10] குரவமாமலருந்திக் என்றும் பாடம். [11] அரவம் - ஓசை. [12] சீலம் - ஒழுக்கம். [13] ஆலும் - அசையும். [14] நுணங்கும்நூல் - அவளும் பூணூல். [15] அணங்கும்-செறிவினாற் பின்னிவளரும். [16] சாக்கியப்படுவார் - சாக்கியன் சமயத்துட்படுவோர். [17] பாவிகள்-சிவனை நினையாமையும் மறத்தலும் இகழ்தலும் உடையவர்கள்.

## 2. திருத்தூங்கானைமாடம் *

**பண் - பழந்தக்கராகம் [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

ஒடுங்கும்[1] பிணிபிறவி கேடென்றிவை யுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம், அடங்கும் மிடங்கருதி நின்றீரெல்லாம் அடிக ளடிநிழற்கீ ழாளாம்வண்ணம், கிடங்கும் மதிலுஞ் சுலாவி யெங்குங் கெழுமனைகள் தோறும் மறையின்ஒலி, தொடங்குங் கடந்தைத் தடங்கோயில்[2]சேர் தூங்கானை மாடம்தொழுமின்களே. 1

பிணிநீர[3] சாதல் பிறத்தலிவை பிரியப் பிரியாத பேரின்பத்தோ, டணிநீர மேலுல கம்எய்தலுறில் அறிமின் குறைவில்லை ஆனேறுடை, மணிநீல கண்டம் உடையபிரான் மலைமக ளுந்தானும் மகிழ்ந்துவாழும், துணிநீர்[4]க் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடம் தொழுமின்களே. 2

சாநாளும் வாழ்நாளுந் தோற்றம்இவை சலிப்பாய வாழ்க்கை யொழியத்தவம், ஆமா றறியா தலமந்துநீர்[5] அயர்ந்துங் குறைவில்லை ஆனேறுடைப், பூமாண் அலங்கல் இலங்குகொன்றை புனல்பொதிந்தபுன் சடையினான்உறையும், தூமாண் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடம் தொழுமின்களே. 3

ஊன்றும் பிணிபிறவி கேடென்றிவை யுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம், மான்று மனங்கருதி நின்றீரெல்லாம் மனந்திரிந்து மண்ணில் மயங்காதுநீர், மூன்று மதிலெய்த மூவாச்சிலை முதல்வர்க் கிடம்போலும் முகில்தோய்கொடி, தோன்றுங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடம் தொழுமின்களே. 4

---

* இது பெண்ணாகடத்திலுள்ள சிவாலயத்தின் பெயர்; இஃது ஒரு யானை படுத்திருப்பது போலும் வடிவாக அமைந்துள்ளதால் பெற்ற பெயர். [பெண்ணாகடம் - தேவகன்னியரும், காமதேனுவும், வெள்ளை யானையும் பூசித்தலால் பெற்ற பெயர். பெண்-தேவகன்னியர்; ஆ - காமதேனு; கடம் - வெள்ளையானை. [1] ஒடுங்கும்- கன்மத்திற்கு ஈடாய் உயிருடன் ஒடுங்கி நிற்கும். [2] கடந்தை: பெண்ணாகடத்தின் மரூஉப் பெயர்; தடங்கோயில் - யானை யமைப்பாய் அமைந்த பெருங்கோயில். [3] நீர - நீர்மையுடைய. [4] துணிநீர் - துள்ளிக் குதித்து ஓடும் நீவா நதிக்கரையில் உள்ள. [5] தலம் வந்து நீர் என்றும் பாடம்.

மயல்தீர்மை[6] யில்லாத் தோற்றம்மிவை மரணத்தொடொத் தழியு மாறுதலால், வியல்தீர மேலுக மெய்தலுறின் மிக்கொன் றும் வேண்டா விமலனிடம், உயர்தீர வோங்கிய நாமங்களா லோவாது நாளும் அடி பரவல்செய், துயர்தீர் கடந்தைத் தடங் கோயில்சேர் தூங்கானை மாடம் தொழுமின்களே. 5

பன்னீர்மை குன்றிச் செவிகேட்பிலா[7] படர்நோக்கிற்[8] கண் பவளந்நிற, நன்னீர்மை குன்றித் திரைதோலொடு நரைதோன் றுங்காலம் நமக்காதல்முன், பொன்னீர்மை துன்றப் புறந் தோன்றுநற் புனல்பொதிந்தபுன் சடையினன்உறையும், தொன் னீர்[9]க் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடம் தொழு மின்களே. 6

இறையூண் துகளோ டிடுக்கண்எய்தி யிழிப்பாய வாழ்க்கை யொழியத்தவம், நிறையூண் நெறிகருதி நின்றீரெல்லாம் நீள்கழ லேநாளும் நினைமின்சென்னிப், பிறைசூ டிலங்கல் இலங்கு கொன்றை பிணையும் பெருமான் பிரியாதநீர்த், துறை[10]சூழ் கடந் தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடம் தொழுமின்களே. 7

பல்வீழ்ந்து நாத்தளர்ந்து மெய்யில்வாடிப் பழிப்பாய வாழ்க் கை[11] யொழியத்தவம், இல்சூ ழிடங்கருதி நின்றீரெல்லாம் இறை யே[12] பிரியா தெழுந்துபோதும், கல்சூழரக்கன் கதறச் செய்தான் காதலியுந்தானுங் கருதிவாழும், தொல்சீர்க் கடந்தைத் தடங் கோயில்சேர் தூங்கானை மாடம் தொழுமின்களே. 8

நோயும் பிணியும் அருந்துயரமும் நுகருடைய வாழ்க்கை யொழியத்தவம், வாயும் மனங்கருதி நின்றீரெல்லாம் மலர் மிசைய நான்முகனும் மண்ணும் விண்ணும், தாய அடியளந்தான் காணமாட்டாத் தலைவர்க் கிடம்போலுந் தண்சோலைவிண், தோயுங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடம் தொழு மின்களே. 9

---

6 தீர்மை - தீர்வு; நீக்கம். 7 கேட்பிலா - செவிடுபட்டு. கேட்பு - கேட்டல்: தொழிற்பெயர். 8 படர்நோக்கில் - நெடுந்தூரம் சென்று காணுந் தன்மையில். 9 தொல்நீர் - நிவா நதி. 10 பிரியாத நீர்த்துறை - நீர் வற்றாத நிவா நதித்துறை. 11 இவ்வடி வயது முதிர்ந்த நிலையை அறிவிப்பது. 12 இல்சூழ் - இல்லம்போலக் குடி கொள்ளும்; இறையே - சிறிதும்.

பகடூர் பசி[13] நலிய நோய்வருதலாற் பழிப்பாய வாழ்க்கையொழியத்தவம், முகடூர் மயிர்[14] கடிந்த செய்கையாரும் மூடுதுவராடையரும் நாடிச் சொன்ன, திகழ்தீர்ந்த பொய்ம்மொழிகள் தேறவேண்டா திருந்திழையுந் தானும் பொருந்திவாழும், துகள்தீர் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடம் தொழுமின்களே. 10

மண்ணார் முழவதிரும் மாடவீதி வயற்காழி ஞானசம்பந்தன் நல்ல, பெண்ணா கடத்[15]துப் பெருங்கோயில்சேர் பிறையுரிஞ்சுந் தூங்கானை மாடமே[16] யான், கண்ணார் கழல்பரவு பாடல்பத்துங் கருத்துணரக் கற்றாருங் கேட்டாரும் போய், விண்ணோ ருலகத்து மேவிவாழும் விதியதுவே யாகும் வினை மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சுடர்க்கொழுந்து நாதர்; தேவி—கடந்தைநாயகி.

## 3. திருஎருக்கத்தம்புலியூர் *

பண் - குறிஞ்சி ** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

படையார் தருபூதப் பகடார் உரிபோர்வை
உடையான் உமையோடும் உடனா யிடுகங்கைச்
சடையான் எருக்கத்தம் புலியூர்த் தருகோயில்
விடையான் அடியேத்த மேவா வினைதானே. 1

இலையார் தருசூலப் படையெம் பெருமானாய்
நிலையார் மதில்மூன்று நீறாய் விழவெய்த

[13] பகடூர்பசி - பெரும்பசி. [14] முகடூர்மயிர் - தலைமயிர். [15] பெண்ணாகடம் - ஊரின் பெயர்; இது தற்போது ‘பெண்ணாடம்’ என வழங்குகிறது. [16] பெருங்கோயில் - ஆலயத்தின் பெயர். மாடம்-இறைவன் எழுந்தருளிய இடம். *‘இராசேந்திர பட்டினம்’ என வழங்கப்பெறும்; இங்கு எருக்குத் தலமரமாதலால் இப்பெயர் பெற்றது; இது திருநீலகண்ட யாழ்ப்பாணர் அவதரித்த பெருமை பெற்ற தலம். ** இப்பதிகம் பெரும்பாணரது திருப்பதி எனக் கேட்டுச் சென்று பாடியருளியதாகும்; இதனுள் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று.

சிலையான் எருக்கத்தம் புலியூர்த் திகழ்கோயில்
கலையான்[1] அடியேத்தக் கருதா வினைதானே. 2

விண்ணோர் பெருமானே விகிர்தா விடையூர்தீ
பெண்ணாண் அலியாகும் பித்தா பிறைசூடி
எண்ணார் எருக்கத்தம் புலியூ ருறைகின்ற
அண்ணா எனவல்லார்க் கடையா வினைதானே. 3

அரையார் தருநாகம் அணிவான் அலர்மாலை
விரையார் தருகொன்றை யுடையான் விடையேறி
வரையான் எருக்கத்தம் புலியூர் மகிழ்கின்ற
திரையார் சடையானைச் சேரத் திரு[2] வாமே. 4

வீறார் முலையாளைப் பாகம் மிகவைத்துச்
சீறா வருகாலன் சினத்தை யழிவித்தான்
ஏறா[3]ன் எருக்கத்தம் புலியூ ரிறையானை[4]
வேறா நினைவாரை விரும்பா வினைதானே. 5

நகுவெண் டலையேந்தி நாளுவிதம் பாடிப்
புகுவா னயம்பெய்ய[5]ப் புலித்தோல் பியற்கிட்டுத்
தகுவான் எருக்கத்தம் புலியூர்த் தகைந்தங்கே
தொகுவான் கழலேத்தத் தொடரா வினைதானே. 6-7

ஆவா வெனஅரக்கன் அலற அடர்த்திட்டுத்
தேவா எனஅருளார் செல்வங் கொடுத்திட்ட
கோவே யெருக்கத்தம் புலியூர் மிகுகோயில்
தேவே யெனஅல்லல் தீர்தல் திடமாமே. 8

மறையான் நெடுமால்காண் பரியான் மழுவேந்தி
நிறையா மதிசூடி நிகழ்முத் தின்தொத்தே
இறையான் எருக்கத்தம் புலியூ ரிடங்கொண்ட
கறையார் மிடற்றானைக் கருதக் கெடும்வினையே. 9

புத்தர் அருகர்தம் பொய்கள் புறம்போக்கிச்
சுத்தி தரித்து[6]றையுஞ் சோதி யுமையோடும்

---

[1] கலையான் - கலைகளின் பொருளாவான்; கலைமான் கன்றை யுடையன்; திங்கட்கலையினை யுடையவன். [2] திரு - முத்தித்திரு. [3] ஏறு - இடபம். [4] ஏறாரெருக்கத்தம் புலியூருறைவானை என்றும் பாடம். [5] அயம்பெய்ய-பெண்கள் ஐயம் இடும பொருட்டு. [6] சுத்தி தரித்து - உயிர்களைத் தூய்மைசெய்யத் திருவுளங்கொண்டு.

நித்தன் எருக்கத்தம் புலியூர் நிகழ்வாய
அத்தன் அறவன்தன் அடியே அடைவோமே. 10

ஏரார் எருக்கத்தம் புலியூர் உறைவானைச்
சீரார் திகழ்காழித் திருவார் சம்பந்தன்
ஆரா அருந்தமிழ் மாலை யிவைவல்லார்
பாரா ரவரேத்தப் பதிவான் உறைவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—திருநீலகண்டர்; தேவி—நீலமலர்க்கண்ணி.

---

## 4. திருச்சோபுரம்*

**பண் - பழந்தக்கராகம்**** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வெங்கண் ஆனை யீருரிவை போர்த்துவிளங் குமொழி[1]
மங்கைபாகம் வைத்துகந்த மாண்பதுஎன் னைகொலாம்
கங்கையோடு திங்கள்சூடிக் கடிகமழுங் கொன்றைத்
தொங்கலானே தூயநீற்றாய் சோபுரமே யவனே. 1

விடையமர்ந்து வெண்மழுவொன் றேந்திவிரிந் திலங்கு
சடையொடுங்கத் தண்புனலைத் தாங்கியதென் னைகொலாம்
கடையுயர்ந்த மும்மதிலுங் காய்ந்தனலுள் அழுந்தத்
தொடைநெகிழ்ந்த[2] வெஞ்சிலையாய் சோபுரமே யவனே. 2

தீயராய வல்லரக்கர் செந்தழலுள் அழுந்தச்
சாயஎய்து வானவரைத் தாங்கியதென் னைகொலாம்
பாயும்வெள்ளை ஏற்றையேறிப் பாய்புலித்தோல் உடுத்த
தூயவெள்ளை நீற்றினனே சோபுரமே யவனே. 3

பல்லிலோடு கையிலேந்திப் பல்கடையும் பலிதேர்ந்
தல்லல்வாழ்க்கை மேலதான ஆதரவென் னைகொலாம்

---

* 'தியாகவல்லி' என வழங்கப்பெறும். இத்தலம் மணலினல் மூடப்பட்டிருந்து சுமார் நூறு வருஷங்களுக்குமுன் கண்டுபிடிக்கப் பட்டது என்பர். ** இப்பதிகம் இறைவனது வீரச்செயலை வினைப் பொருளில் அமைத்துப் பாடியதாகும். [1] விளங்குமெழில் என்றும் பாடம். [2] நெகிழ்ந்த என்றும் பாடம்.

வில்லைவென்ற நுண்புருவ வேல்நெடுங்கண் ணியொடும்
தொல்லையூழி யாகிநின்றாய் சோபுரமே யவனே. 4

நாற்ற[3] மிக்க கொன்றைதுன்று செஞ்சடைமேல் மதியம்
ஏற்றமாக வைத்துகந்த காரணம்என் னைகொலாம்
ஊற்ற[4] மிக்க காலன்தன்னை யொல்க[5] வுதைத் தருளித்
தோற்றமீறு மாகிநின்றாய் சோபுரமே யவனே. 5

கொன்னவின்ற மூவிலைவேற் கூர்மழுவாட் படையன்
பொன்னைவென்ற கொன்றைமாலை சூடும்பொற்பென் னைகொலாம்
அன்னமன்ன மெல்நடையாள் பாகம்அமர்ந் தரைசேர்
துன்ன[6] வண்ண ஆடையினாய் சோபுரமே யவனே. 6

குற்றமின்மை யுண்மைநீயென் றுன்னடியார் பணிவார்
கற்றல்கேள்வி[7] ஞானமான காரணம்என் னைகொலாம்
வற்றலாமை வாளரவம் பூண்டயன்வெண் டலையில்
துற்றலா[8] ன கொள்கையானே சோபுரமே யவனே. 7

விலங்கலொ[9] ன்று வெஞ்சிலையாக் கொண்டுவிற லரக்கர்
குலங்கள்வாழும் ஊரெரித்த கொள்கையிதென் னைகொலாம்
இலங்கைமன்னு வாளவுணர் கோனையெழில் விரலால்
துலங்கவூன்றி வைத்துகந்தாய் சோபுரமே யவனே. 8

விடங்கொள்நாக மால்வரையைச் சுற்றிவிரி திரைநீர்
கடைந்தநஞ்சை யுண்டுகந்த காரணம்என் னைகொலாம்
இடந்து[10] மண்ணை யுண்டமாலு மின்மலர்[11] மேல் அயனும்
தொடர்ந்துமுன்னங் காணமாட்டாச் சோபுரமே யவனே. 9

புத்தரோடு புன்சமணர் பொய்யுரையே யுரைத்துப்
பித்தராகக் கண்டுகந்த பெற்றிமையென் னைகொலாம்
மத்தயானை யீருரிவை போர்த்துவளர் சடைமேல்
துத்தி[12] நாகஞ் சூடினானே சோபுரமே யவனே. 10

சோலைமிக்க தண்வயல்சூழ் சோபுரம்மே யவனைச்
சீலமிக்க தொல்புகழார் சிரபுரக்கோன் நலத்தால்

---

[3] நாற்றம் - வாசனை. [4] ஊற்றம் - வலிமை. [5] ஒல்க-தளர்வு அடைய. [6] துன்னம் - தைத்தல். [7] கற்றகேள்வி என்றும் பாடம். [8] துற்றல் - உண்ணல். [9] விலங்கல் - மேருமலை. [10] இடந்து - தோண்டி. [11] இன்மலர்-இனிய மலர்; தாமரை. [12] துத்தி - புள்ளி.

ஞாலமிக்க தண்டமிழால் ஞானசம் பந்தன்சொன்ன
கோலமிக்க மாலைவல்லார் கூடுவர்வா னுலகே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சோபுரநாதர்; தேவி—சோபுரநாயகி.

---

## 5. திருவதிகைவீரட்டானம்*

பண் - தக்கராகம்** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

குண்டைக் குறட்பூதங் குழும அனலேந்திக்
கெண்டைப் பிறழ்தெண்ணீர்க் கெடில[1] வடபக்கம்
வண்டு மருள்பாட வளர்பொன் விரிகொன்றை
விண்ட தொடையலா னாடும்வீரட் டானத்தே. 1

அரும்புங் குரும்பையு மலைத்த மென்கொங்கைக்
கரும்பின் மொழியாளோ டுடன்கை அனல்வீசிச்
சுரும்புண் விரிகொன்றைச் சுடர்பொற் சடைதாழ
விரும்பு மதிகையு ளாடும்வீரட் டானத்தே. 2

ஆடல் அழல்[2] நாக மரைக்கிட் டசைத்தாடப்
பாடல் மறைவல்லான் படுதம் பலிபெயர்வான்
மாட முகட்டின்மேல் மதிதோய் அதிகையுள்
வேடம் பலவல்லா னாடும்வீரட் டானத்தே. 3

எண்ணார் எயிலெய்தான் இறைவன் அனலேந்தி
மண்ணார் முழவதிர முதிரா மதிசூடிப்
பண்ணார் மறைபாடப் பரமன் அதிகையுள்
விண்ணோர் பரவநின் றாடும்வீரட் டானத்தே. 4

கரிபுன் புறமாய கழிந்தார் இடுகாட்டில்[3]
திருநின் றொருகையால் திருவாம் அதிகையுள்

---

* இஃது இறைவன் வீரஞ்செய்த எட்டுத் தலங்களுள் ஒன்று. அதிகை - தலம். வீர + அட்டானம் = வீரட்டானம். ** இப்பதிகம் இறைவன் காட்டிய திருநடனத்தைக் கண்டு தரிசித்துப் பாடியதாகும். [1] கெடிலம்-ஒரு நதி. [2] அழல் - நஞ்சு. [3] கரிகாடு, புன்காடு, புறமாய காடு, இடுகாடு எனத் தனித்தனியே கூட்டுக.

எரியேந் தியபெருமான் எரிபுன் சடைதாழ
விரியும் புனல்சூடி யாடும்வீரட் டானத்தே. 5

துளங்குஞ் சுடரங்கைத் துதைய விளையாடி
இளங்கொம் பனசாயல் உமையோ டிசைபாடி
வளங்கொள் புனல்சூழ்ந்த வயலா ரதிகையுள்
விளங்கும் பிறைசூடி யாடும்வீரட் டானத்தே. 6

பாதம் பலரேத்தப் பரமன் பரமேட்டி
பூதம் புடைசூழப் புலித்தோல் உடையாகக்
கீதம் உமைபாடக் கெடில வடபக்கம்
வேத முதல்வன்நின் றாடும்வீரட் டானத்தே. 7

கல்லார் வரையரக்கன் தடந்தோள் கவின்வாட
ஒல்லை யடர்த்தவனுக் கருள்செய் ததிகையுள்
பல்லார்[4] பகுவாய்[5] நகுவெண் டலைசூடி
வில்லால் எயில்எய்தான் ஆடும்வீரட் டானத்தே. 8

நெடியான் நான்முகனும் நிமிர்ந்தானைக் காண்கிலார்
பொடியாடு மார்பானைப் புரிநூ லுடையானைக்
கடியார்[6] கழுநீலம் மலரும் அதிகையுள்
வெடியார் தலையேந்தி யாடும்வீரட் டானத்தே. 9

அரை[7] யோ டலர்பிண்டி மருவிக் குண்டிகை
சுரையோ டுடன்ஏந்தி யுடைவிட் டுழல்வார்கள்
உரையோ டுரையொவ்வா துமையோ டுடனாகி
விரைதோ யலர்தாரான் ஆடும்வீரட் டானத்தே. 10

ஞாழல் கமழ்காழி யுள்ஞான சம்பந்தன்
வேழம் பொருதெண்ணீர் அதிகைவீரட் டானத்துச்
சூழுங் கழலானைச் சொன்ன தமிழ்மாலை
வாழுந் துணையாக நினைவார் வினையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வீரட்டேசுவரர்; தேவி—திரிபுரசுந்தரி.

---

[4] பல்லார் - பற்கள்நிறைந்த. [5] பகுவாய் - பெருவாய். [6] கடியார் - வாசனை பொருந்திய. [7] அரை - வெற்றரை.

## 6. திருமுதுகுன்றம்*

**பண் - நட்டபாடை** ** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மத்தாவரை நிறுவிக்கடல் கடைந்தவ்விடம் உண்ட
தொத்தார்தரு மணிநீள்முடிச் சுடர்வண்ணன திடமாம்
கொத்தார்மலர் குளிர்சந்தகில் ஒளிர்குங்குமங்[1] கொண்டு
முத்தாறு[2] வந் தடிவீழ்தரு முதுகுன்றடை வோமே. 1

தழையார்வட விய[3] வீதனில் தவமேபுரி சைவன்[4]
இழையாரிடை மடவாளொடும் இனிதாவுறை விடமாம்
மழைவானிடை முழவவ்வெழில் வளைவாளுகிர் எரிகண்
முழைவாளரி குமிறும்[5] முயர் முதுகுன் றடை வோமே. 2

விளையாததோர் பரிசில்வரு பசுபாசவே தனையொண்
தளையாயின தவிரவ்வருள்[6] தலைவன்னது சார்பாம்
களையார்தரு கதிராயிரம் உடையவ்வவ னோடு
முளைமாமதி தவழும்உயிர் முதுகுன்றடை வோமே. 3

சுரர்மாதவர் தொகுகின்னரர் அவரோதொலை வில்லா
நரரானபன் முனிவர்தொழ இருந்தானிடம் நலமார்
அரசார்வர அணி[7] பொற்கல னவைகொண்டுபன் னாளும்
முரசார்வரு மணமொய்ம்புடை முதுகுன்றடை வோமே. 4

---

* 'விருத்தாசலம்' என வழங்கப்பெறும்; பழமலை விருத்த கிரி எனவும் பெயர் பெறும். 'மூத்தா யுலகுக்கெல்லாம் முதுகுன் றம்' (சுந்தரர் தேவாரம்) என்றபடி உலகத்தில் மலைகள் படைக்கப் படுவதன் முன் சிவன் படைப்பிலே உண்டாக்கப்பட்ட மலை ஆத லின், 'முதுகுன்றம்' எனப் பெயர் பெற்றது. இத்தலத்தில் இறந் தார்க்கு முத்தியினை இறைவன் அளித்தலால் இது 'விருத்தகாசி' எனவும் படும். ** இப்பதிகம் முழுமையும் அடைவோமே என்ற ஈற்றுக் குறிப்பினால் முதுகுன்றத்தை அடையும்போது வழியில் பாடியருளியதாகும். [1] குங்குமம் - குங்குமப்பூ. [2] முத்தாறு - மணி முத்தாநதி. [3] வடவிய - வடவாலமரம். [4] சைவன் - சிவன். [5] அரி குமிறும் - சிங்கம் கர்ச்சிக்கும். [6] இவ்வடிகள் அநாதியாயுள்ள மூல கன்ம முதலிய மும்மலங்களையும் நீக்க அருளும் என வேண்டியதை அறிவிக்கும். [7] அரசாரவணி என்றும் பாடம்.

அறையார்கழல் அந்தன்றனை அயில்மூவிலை யழகார்
கறையார்நெடு வேலின்மிசை யேற்றானிடங் கருதில்[8]
மறையாயின பலசொல்லியொண் மலர்சாந்தவை கொண்டு
முறையால்மிகு முனிவர்தொழும் முதுகுன்றடை வோமே. 5

ஏவார்சிலை எயினன்உரு[9] வாகியெழில் விசயற்
கோவாதஇன் னருள்செய்தஎம் மொருவற்கிடம் உலகில்
சாவாதவர் பிறவாதவர் தவமேமிக வுடையார்
மூவாத[10] பன் முனிவர்தொழும் முதுகுன்றடை வோமே. 6

தழல்சேர்தரு திருமேனியர் சசி[11] சேர்சடை முடியர்
மழமால்விடை மிகவேறிய மறையோனுறை கோயில்
விழவோடொலி மிகுமங்கையர் தகுமாடக சாலை
முழவோடிசை நடமுன்செயும் முதுகுன்றடை வோமே. 7

செதுவாய்மைகள்[12] கருதிவ்வரை யெடுத்ததிற லரக்கன்
கது[13] வாய்கள்பத் தலறியிடக் கண்டானுறை கோயில்
மதுவாயசெங் காந்தள்மலர் நிறையக்குறை வில்லா[14]
முதுவேய்கள்முத் துதிரும்பொழில் முதுகுன்றடை வோமே. 8

இயலாடிய[15] பிரமன்னரி யிருவர்க்கறி வரிய
செயலாடிய தீயாருரு வாகியெழு செல்வன்
புயலாடுவண் பொழில்சூழ்புனற் படப்பை[16] த்தடத் தருகே
முயலோடவெண் கயல்பாய்தரு முதுகுன்றடை வோமே. 9

அருகரொடு புத்தரவ ரறியாஅரன் மலையான்
மருகன்வரும் இடபக்கொடி யுடையானிடம் மலரார்
கருகுகுழல் மடவார்கடி குறிஞ்சி[17] யது பாடி
முருகன்னது பெருமைபகர் முதுகுன்றடை வோமே. 10

முகில்சேர்தரு முதுகுன்றுடை யானைமிகு தொல்சீர்ப்
புகலிந்நகர் மறைஞானசம் பந்தன்உரை செய்த

---

[8] இவ்வடிகள் அந்தகாசுர சங்காரத்தைக் குறிப்பிடுகின்றன. [9] எயினன்உரு - வேடவடிவம். [10] மூவாத - மூப்படையாத. [11] சசி-சந்திரன். [12] செதுவாய்மைகள் - வலி குறையும் தனது வரங்கள். செகுத்தல் - ஒளி மங்குதல். [13] கது - கதுகின்ற. [14] குறையில்லா என்றும் பாடம். [15] இகலாடிய என்பது இயலாடிய என நின்றது. [16] படப்பை - தோட்டம். [17] குறிஞ்சி - ஒரு பண்.

நிகரில்லன தமிழ்மாலைகள் இசையோடிவை பத்தும்
பகரும்மடி யவர்கட்கிடர் பாவம்மடை யாவே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - பழந்தக்கராகம்*** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தேவராயும் அசுராயுஞ் சித்தர்செழு மறைசேர்
நாவராயும் நண்ணுபாரும் விண்ணெரிகால் நீரும்
மேவராய விரைமலரோன் செங்கண்மால் ஈசனென்னும்
மூவராய முதலொருவன் மேயதுமு துகுன்றே. 1

பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதிபார்
எற்றுநீர்தீக் காலுமேலை விண்இயமா னனோடு
மற்றுமாதோர் பல்லுயிராய் மாலயனும் மறைகள்
முற்றுமாகி வேறுமானான் மேயதுமு துகுன்றே.[1] 2

வாரிமாகம் வைகுதிங்கள் வாளரஞ் சூடி
நாரிபாகம்[2] நயந்துபூமேல் நான்முகன்றன் தலையில்
சீரிதாகப் பலிகொள்செல்வன் செற்றலு[3]ந்தோன் றியதோர்
மூரிநாகத்[4] துரிவைபோர்த்தான் மேயதுமு துகுன்றே. 3

பாடுவாருக் கருளும்எந்தை பனிமுதுபௌ வமுந்நீர்
நீடுபாரும் முழுதுமோடி யண்டர்நிலை கெடலும்
நாடுதானும் ஊடுமோடி ஞாலமும்நான் முகனும்
ஊடுகாண மூடும்வெள்ளத் துயர்ந்ததுமு துகுன்றே. 4

வழங்குதிங்கள் வன்னிமத்தம் மாசுணம்மீ சணவிச்
செழுங்கல்வேந்தன்[5] செல்விகாணத் தேவர்திசை வணங்கத்
தழங்குமொந்தை தக்கைமிக்க பேய்க்கணம்பூ தஞ்சூழ
முழங்குசெந்தீ யேந்தியாடி மேயதுமு துகுன்றே. 5

சுழிந்தகங்கை தோய்ந்ததிங்கட் டொல்லராநல் விதழி
சழிந்தசென்னிச் சைவவேடந் தான்நினைத்தைம்[6] புலனும்

---

* இப்பதிகத்தில் 7-ம் செய்யுளும் 11-ம் செய்யுளின் பின்னிரண்டடியும் சிதைந்து போயின. [1] இச்செய்யுள் கடவுளைப் பற்றினால் நம்பற்று அறும் எனக் கூறும். தீகாலும் என்றும் பாடம். [2] நாரிபாகர் என்றும் பாடம். [3] செற்றல் - பகைகொள்ளல். [4] நாகம் - யானை. [5] செழுங்கல் வேந்தன் - இமவான்.

அழிந்தசிந்தை யந்தணாளர்க் கறம்பொருளின் பம்வீடு
மொழிந்தவாயான் முக்கணாதி மேயதுமு துகின்றே. 6 - 7

மயங்கும்மாயம் வல்லராகி வானிநெடு நீரும்
இயங்குவோருக் கிறைவனாய இராவணன் தோள்நெரித்த
புயங்கராக மாநடத்தன் புணர்முலைமா துமையாள்
முயங்குமார்பன் முனிவரேத்த மேயதுமு துகுன்றே. 8

ஞாலமுண்ட மாலும்மற்றை நான்முகனும் அறியாக்
கோலமண்டர் சிந்தைகொள்ளா ராயினுங்கொய் மலரால்
ஏலஇண்டை கட்டிநாமம் இசையஎப்போ தும்ஏத்தும்
மூலமுண்ட நீற்றர்வாயான் மேயதுமு துகுன்றே. 9

உறிகொள்கையர் சீவரத்தர் உண்டுழல்மிண் டர்சொல்லை
நெறிகளென்ன நினைவுறாதே நித்தலுங்கை தொழுமின்
மறிகொள்கையன் வங்கமுந்நீர்ப் பொங்குவிடத் தையுண்ட
மறிகொள்மேனி மங்கைபங்கன் மேயதுமு துகுன்றே. 10

மொய்த்துவானோர் பல்கணங்கள் வணங்குமு துகுன்றைப்
பித்தர்வேடம் பெருமையென்னும் பிரமபுரத் தலைவன்
* * * * 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருக்குக்குறள்

### பண் - குறிஞ்சி* [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நின்று மலர்தூவி, இன்று[1] முதுகுன்றை
நன்றும் ஏத்துவீர்க், கென்றும் இன்பமே. 1

அத்தன் முதுகுன்றைப், பத்தி யாகிநீர்
நித்தம் ஏத்துவீர்க், குய்த்தல்[2] செல்வமே. 2

ஐயன் முதுகுன்றைப், பொய்கள் கெடநின்று
கைகள் கூப்புவீர், வையம் உமதாமே. 3

ஈசன் முதுகுன்றை, நேச மாகிநீர்
வாச மலர்தூவப், பாச வினைபோமே. 4

---

* இப்பதிகம் தலத்தை வலம்வரும்போது பாடியருளியதாகும்.
[1] இன்று - வலங்கொள்ளும் இன்று. [2] உய்த்தல் - பொருந்துதல்.

மணியார் முதுகுன்றைப், பணிவா ரவர்கண்டீர்
பிணியா யினகெட்டுத், தணிவா ரு[3] லகிலே. 5

மொய்யார் முதுகுன்றில், ஐயா வெனவல்லார்
பொய்யா ரிரவோர்[4] க்குச், செய்யாள்[5] அணியாளே. 6

விடையான் முதுகுன்றை, இடையா தே[6] த்துவார்
படையா யினசூழ, உடையா ருலகமே. 7

பத்துத் தலையோனைக், கத்த விரலூன்றும்
அத்தன் முதுகுன்றை, மொய்த்துப் பணிமினே. 8

இருவ ரறியாத, ஒருவன் முதுகுன்றை
உருகி நினைவார்கள், பெருகி நிகழ்வோரே. 9

தேரர் அமணரும், சேரும் வகையில்லான்
நேரின்[7] முதுகுன்றை, நீர்நின் றுள்குமே. 10

நின்று முதுகுன்றை, நன்று சம்பந்தன்
ஒன்றும் உரைவல்லார், என்றும் உயர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - மேகராகக்குறிஞ்சி [1-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

மெய்த்தாறு சுவையும் ஏழிசையும் எண்குணங்களும்[1] விரும்பு நால்வே, தத்தாலும் அறிவொண்ணு நடைதெளியப் பளிங்கேபோல்[2] அரிவைபாகம், ஒத்தாறு சமயங்[3] கட் கோரு தலைவன் கருதமூர் உலவு தெண்ணீர், முத்தாறு வெதிரு[4] திர நித் திலம்வா ரிக்கொழிக்கும் முதுகுன்றமே. 1

வேரி[5] மிகு குழலியொடு வேடுவனாய் வெங்கானில் விசயன் மேவு, போரின்மிகு பொறையளந்து பாசுபதம் புரிந்தளித்த புரா ணர்கோயில், காரின்மலி கடிபொழில்கள் கனிகள்பல மலருதிர்த்

---

[3] தணிவார் - ஆணவமலங் கெடப் பெறுவர். [4] இரவோர் - இரவலர். [5] செய்யாள் - திருமகள். [6] இடையாது-இடைவிடாமல். [7] வகையில்லா நேரின் என்றும் பாடம். [1] ஆறுசுவை - ஏழிசை - எண்குணங்கள் : எண்ணலங்காரம். [2] தெளிய பளிங்கேபோல் என்றும் பாடம். [3] ஆறுசமயம் - உட்சமயங்கள் ஆறு. [4] வெதிர் - மூங்கில். [5] வேரி - தேன்.

துக் கயமுயங்கி,[6] மூரிவளங் கிளர்தென்றல் திருமுன்றிற் புகுந் துலவும் முதுகுன்றமே. 2

தக்கனது பெருவேள்விச் சந்திரன் இந் திரன் எச்சன் அருக் கன் அங்கி, மிக்கவிதா தாவினொடும் விதிவழியே தண்டித்த[7] விம லர் கோயில், கொக்கி[8]னிய கொழும்வருக்கை கதலிகமு குயர் தெங்கின் குவை கொள்சோலை, முக்கனியின் சாறொழுகிச் சேறு லரா நீள்வயல்சூழ் முதுகுன்றமே. 3

வெம்மைமிகு புரவாணர் மிகைசெய்ய விறலழிந்து விண்ணு ளோர்கள், செம்மலரோன் இந்திரன்மால் சென்றிரப்பத் தேவர் களே தேரதாக, மைம்மருவு மேருவிலு மாசுணநாண் அரியெரி கால் வாளியாக, மும்மதிலும் நொடியளவிற் பொடிசெய்த முதல் வனிடம் முதுகுன்றமே.[9] 4

இழைமேவு கலையல்குல் ஏந்திழையாள் ஒருபாலா யொருபா லெள்கா,[10] குழைமேவும் உரி[11]யுடுத்த வொருவனிருப் பிடமென் பர் உம்பரோங்கு, கழைமேவு மடமந்தி மழைகண்டு மகவினொடும் புகவொண்கல்லின், முழைமேவும் மால்யானை[12] யிரைதேரும் வளர்சாரல் முதுகுன்றமே. 5

நகையார்வெண் டலைமாலை முடிக்கணிந்த நாதனிடம்நன் முத் தாறு, வகையாரும் வரைப்பண்டங் கொண்டிரண்டு கரையருகு மறியமோதித், தகையாரும் வரம்பிடறிச் சாலிகமு நீர்குவளை சாயப்பாய்ந்து, முகையார்செந் தாமரைகள் முகமலர வயல்தழுவு முதுகுன்றமே. 6

அறங்கிளரும் நால்வேத மாலின்கீழ் இருந்தருளி யமரர் வேண்ட, நிறங்கிளர்செந் தாமரையோன் சிரம்ஐந்தின் ஒன்ற றுத்த நிமலர் கோயில், திறங்கொள்மணித் தரளங்கள் வரத்

---

[6]கயமுயங்கி-தடாகங்களில் தவழ்ந்து. [7]விதிவழியே தண்டித்த-சிவாபராதம் செய்தோரும் அவர்க்கு உடன்பட்டோரும் கடுந் தண்டனைக் குட்படுவர் என்றவிதி. எச்சன்-யாகரூபியான தேவதை. எச்சம் - யாகம் என்பதன் திரிபு விதாதா - பிரமன். [8]கொக்கு - மாமரம். [9]இச்செய்யுள் திரிபுரசம்மாரத்தை விளக்குவது ஆகும். [10]யொருபால் வெள்கா என்றும் பாடம். [11]உழைமேவும் உரி - மான்தோல். [12]மாவானை என்றும் பாடம்.

திரண்டங் கெழிற்குறவர் சிறுமிமார்கள், முறங்களினாற் கொழித்துமணி செலவிலக்கி முத்துலைப்பெய் முதுகுன்றமே. 7

கதிரொளிய நெடுமுடிபத் துடையகடல் இலங்கையர்கோன் கண்ணும்வாயும், பிதிரொளிய கனல்பிறங்கப் பெருங்கயிலை மலையைநிலை பெயர்த்தஞான்று, மதிலளகைக் கிறை[13] முரல மலரடியொன் றூன்றிமறை பாடஆங்கே, முதிரொளிய சுடர்நெடுவாள் முன்னீந்தான் வாய்ந்தபதி முதுகுன்றமே. 8

பூவார்பொற் றவிசின்மிசை யிருந்தவனும் பூந்துழாய் புனைந்தமாலும், ஓவாது கழுகே[14]ன மாயுயர்ந்தாழ்ந் துறநாடி யுண்மைகாணாத், தேவாருந் திருவுருவன் சேருமலை செழுநிலத்தை மூடவந்த, மூவாத முழங்கொலிநீர் கீழ்தாழ மேலுயர்ந்த முதுகுன்றமே.[15] 9

மேனியிற்சீ வரத்தாரும் விரிதருதட் டுடையாரும் விரவலாகா, ஊனிகளா யுள்ளார்சொற் கொள்ளாதும் உள்ளுணர்ந்தங் குய்மின் தொண்டீர், ஞானிகளா யுள்ளார்கள் நான்மறையை முழுதுணர்ந்தைம் புலன்கள்செற்று, மோனிகளாய் முனிச்செல்வர் தனித்திருந்து தவம்புரியும் முதுகுன்றமே. 10

முழங்கொலிநீர் முத்தாறு வலஞ்செய்யும் முதுகுன்றத் திறையைமூவாப், பழங்கிழமைப் பன்னிருபேர் படைத்துடைய கழுமலமே பதியாக்கொண்டு, தழங்கெரிமூன் றோம்புதொழில்[16] தமிழ்ஞான சம்பந்தன் சமைத்தபாடல், வழங்கும்இசை கூடும்வகை பாடுமவர் நீடுலகம் ஆள்வர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - காந்தாரம்* [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தேவா சிறியோம் பிழையைப் பொறுப்பாய் பெரியோனே
ஆவா வென்றங் கடியார் தங்கட் கருள்செய்வாய்

---

13 கண்ணும்...பிறங்க - மிக்க சினக்குறி. அளகைக்கு இறை-குபேரன். 14 கழுகு-இங்கு இலக்கணையால் அன்னம். 15 இவ்வடிகள் முதுகுன்றம் ஊழியில் ஆழாது மேலுயர்ந்தது என்பதை அறிவிக்கும். 16 எரி மூன்று தொழில் - தீ மூன்று வளர்க்கும் மறையவர் தொழில். * இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று.

ஓவா உவரி கொள்ள உயர்ந்தா யெ[1]ன்றேத்தி
மூவா முனிவர்[2] வணங்குங் கோயில் முதுகுன்றே. 1

எந்தை யிவனென் றிரவி முதலா இறைஞ்சுவார்
சிந்தை யுள்ளே கோயி லாகத் திகழ்வானை
மந்தி யேறி யினமா மலர்கள் பலகொண்டு
முந்தித் தொழுது வணங்குங் கோயில் முதுகுன்றே. 2

நீடு மலரும் புனலுங் கொண்டு நிரந்தரம்
தேடும் அடியார் சிந்தை யுள்ளே திகழ்வானைப்
பாடுங் குயிலின் அயலே கிள்ளை பயின்றேத்த
மூடுஞ் சோலை முகில்தோய் கோயில் முதுகுன்றே. 3

தெரிந்த அடியார் சிவனே யென்று திசைதோறும்
குருந்த மலருங் குரவின் அலருங் கொண்டேந்தி
இருந்து நின்றும் இரவும் பகலும் ஏத்துஞ்சீர்
முரிந்து மேகந் தவழுஞ் சோலை முதுகுன்றே. 4

வைத்த நிதியே மணியே யென்று வருந்தித்தம்
சித்தம் நைந்து சிவனே யென்பார் சிந்தையார்
கொத்தார் சந்துங் குரவும் வாரிக் கொணர்ந்துந்தும்
முத்தா றுடைய முதல்வர் கோயில் முதுகுன்றே. 5

வம்பார் கொன்றை வன்னி மத்தம் மலர்தூவி
நம்பா வென்ன நல்கும்[3] பெருமான் உறைகோயில்
கொம்பார் குரவு கொகுடி முல்லை[4] குவிந்தெங்கும்
மொய்ம்பார் சோலை வண்டு பாடும் முதுகுன்றே. 6 - 7

வாசங் கமழும் பொழில்சூழ் இலங்கை வாழ்வேந்தை
நாசஞ் செய்த நங்கள் பெருமான் அமர்கோயில்
பூசை செய்த அடியார் நின்று புகழ்ந்தேத்த
மூசி வண்டு[5] பாடுஞ் சோலை முதுகுன்றே. 8

அல்லி மலர்மேல் அயனும் அரவின் அணையானும்
சொல்லிப் பரவித் தொடர வொண்ணாச் சோதியூர்

---

[1] உவரிகொள்ளஉயர்ந்தாய் - ஊழியில் அமிழ்ந்துபடாது உயர்தல். [2] மூவாமுனிவர் - சிவயோகத்தின் பலத்தை மூப்புப்பெறாத் திருமூலர் முதலிய முனிவர்கள். [3] நல்கும் - அருள்நல்கும். [4] கொகுடி முல்லை - முல்லையின்வகை. [5] மூசுவண்டு என்றும் பாடம்.

கொல்லை வேடர் கூடி நின்று கும்பிட
முல்லை யயலே முறுவல் செய்யும் முதுகுன்றே. 9

கருகும் உடலார் கஞ்சி யுண்டு கடுவேதின்
றுருகு சிந்தை யில்லார்க் கயலான் உறைகோயில்
திருகல் வேய்கள் [6] சிறிதே வளையச் சிறுமந்தி
முருகின் பணைமே லிருந்து நடஞ்செய் முதுகுன்றே. 10

அறையார் கடல்சூழ் அந்தண் காழிச் சம்பந்தன்
முறையால் முனிவர் வணங்கும் கோயில் முதுகுன்றைக்
குறையாப் பனுவல் கூடிப் பாட வல்லார்கள்
பிறையார் சடையெம் பெருமான் கழல்கள் பிரியாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வண்ணமா மலர்கொடு வானவர் வழிபட
அண்ணலார் ஆயிழை யாளொடும் அமர்விடம்
விண்ணின்மா மழைபொழிந் திழியவெள் ளருவிசேர்
திண்ணிலார் [1] புறவணி திருமுது குன்றமே. 1

வெறி [2] யுலாங் கொன்றையந் தாரினான் மேதகு
பொறியுலாம் அரவசைத் தாடியோர் புண்ணியன்
மறியுலாங் கையினான் மங்கையோ டமர்விடம்
செறியுளார் புறவணி திருமுது குன்றமே. 2

ஏறினார் [3] விடைமிசை யிமையவர் தொழவுமை
கூறனார் கொல்புலித் தோலினார் மேனிமேல்
நீறனார் நிறைபுனற் சடையனார் நிகழ்விடம்
தேறலார் பொழிலணி திருமுது குன்றமே. 3

உரை [4] யினார் உறுபொரு ளாயினான் [5] உமையொடும்
விரையினார் கொன்றைசேர் சடையினார் மேவிடம்

---

6 திருகல்வேய்கள் - வளைவுகளையுடைய மூங்கில்கள். 1 திண்ணிலார் - பெருமையுடைய. 2 வெறி - மணம். 3 ஏறனார் என்றும் பாடம். 4 உரை - உயர்ந்தசொல்; வேதம; வேதத்தினால் நுவலப்படும் பொருள். 5 பொருளாயவன் என்றும் பாடம்.

உரையினர் ஒலியென வோங்குமுத் தாறுமெய்த்
திரையினர் எறிபுனல் திருமுது குன்றமே. 4

கடியவா யினகுரற் களிற்றினைப் பிளிறவோர்
இடியவெங் குரலினோ டாளி[6] சென் றிடுநெறி[7]
வடியவாய் மழுவினன் மங்கையோ டமர்விடம்
செடியதார் புறவணி திருமுது குன்றமே. 5

கானமார் கரியின்ஈர் உரிவையார் பெரியதோர்
வானமார் மதியினோ டரவர்தாம் மருவிடம்
ஊனமா யினபிணி யவைகெடுத் துமையொடும்
தேனமார் பொழிலணி திருமுது குன்றமே. 6

மஞ்சர்[8] தாம் மலர்கொடு வானவர் வணங்கிட
வெஞ்சொலார் வேடரோ டாடவர் விரும்பவே
அஞ்சொலாள் உமையொடும் அமர்விட மணிகலைச்[9]
செஞ்சொலார் பயில்தருந் திருமுது குன்றமே. 7

காரினார் அமர்தருங் கயிலைநன் மலையினை
ஏரினார் முடியிரா வணனெடுத் தானிற
வாரினார் முலையொடும் மன்னினார் மருவிடம்
சீரினார் திகழ்தருந் திருமுது குன்றமே. 8

ஆடினார் கானகத் தருமறை யின்பொருள்[10]
பாடினார் பல[11] புகழ்ப் பரமனார் இணையடி
ஏடினார் மலர்மிசை அயனுமா லிருவரும்
தேடினார் அறிவொணார்[12] திருமுது குன்றமே. 9

மாசுமெய் தூசுகொண் டுழல்சமண் சாக்கியர்
பேசுமெய் யுளவல்ல பேணுவீர் காணுமின்
வாசமார் தருபொழில் வண்டினம் இசைசெயத்
தேசமார் புகழ்மிகுந் திருமுது குன்றமே. 10

---

6 ஆளி - சிங்கம். 7 யாளி சென்றடுநெறி என்றும் பாடம். 8 மஞ்சர் - மைந்தினை உடைய. மைந்து-வல்லமை. 9 வெஞ்சொல்- கடுஞ்சொல். மணிகலை - அழகிய ஆடை. 10 அருமறையின் பொருள் - கீதம். 11 பலர் என்றும் பாடம். 12 ஏடினார் - இதழ்கள் நிறைந்த; ஏடு - இதழ்கள். ஏடினார் அலர்மிசை என்றும் பாடம்; அறிவொணார் - அறிதற்கு ஒண்ணாதவர் - உறையுமிடம் என்க.

திண்ணினார் புறவணி திருமுது குன்றரை
நண்ணினான் காழியுள் ஞானசம் பந்தன்சொல்
எண்ணினான் ஈரைந்து மாலை[13] யும் இயலுமாப்
பண்ணினாற் பாடுவார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருமுக்கால்

பண் - சாதாரி* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முரசதிர்ந் தெழுதரு முதுகுன்ற மேவிய
பரசமர் படையுடை யீரே
பரசமர் படையுடை யீருமைப் பரவுவார்[1]
அரசர்கள் உலகில்ஆ வாரே. 1

மொய்குழ லாளொடு முதுகுன்ற மேவிய
பையர வம்அசைத் தீரே
பையர வம்அசைத் தீருமைப் பாடுவார்
நைவிலர்[2] நாடொறும் நலமே. 2

முழவமர் பொழிலணி முதுகுன்ற மேவிய
மழவிடை யதுவுடை யீரே
மழவிடை யதுவுடை யீருமை வாழ்த்துவார்
பழியொடு பகையிலர் தாமே. 3

முருகமர் பொழிலணி முதுகுன்ற மேவிய
உருவமர் சடைமுடி யீரே[3]
உருவமர் சடைமுடி யீருமை[4] யோதுவார்
திரு[5] வொடு தேசி[6] னர் தாமே. 4 - 7

---

[13] மாலை - பாட்டு. * இப்பதிகத்தில் 5, 6, 7-ம் செய்யுட்கள் மறைந்துபோயின. இப்பதிகம் இறைவரது திருமுன்னர் பாடியருளியதாகும். இப்பதிகத்தில் 1, 2, 3-ம் பாட்டுக்கள் இம்மைப் பயனும் 4-ம் பாட்டு மறுமைப்பயனும், 8, 9, 10-ம் பாட்டுக்கள் வீடாகியபயனும் அருளப்பட்டமை அறிக. [1] பாடுவார் என்றும் பாடம். [2] நைவிலர் - குறைதலிலர். [3] சடையுடையீரே என்றும் பாடம். [4] சடையுடையீருமை என்றும் பாடம். [5] திரு - கல்விச்செல்வம். [6] தேசு - அருள் விளக்கம்.

முத்தி தருமுயர் முதுகுன்ற மேவிய
பத்து முடியடர்த் தீரே
பத்து முடியடர்த் தீருமைப் பாடுவார்
சித்தநல் லவ்வடி யாரே. 8

முயன்றவர் அருள்பெறு முதுகுன்ற மேவியன்
றியன்றவ ரறிவரி யீரே
இயன்றவ ரறிவரி யீருமை யேத்துவார்
பயன்றலை நிற்பவர் தாமே. 9

மொட்டலர் பொழிலணி முதுகுன்றம் மேவிய
கட்டமண் தேரை[7]க்காய்ந் தீரே
கட்டமண் தேரை[8]க்காய்ந் தீருமைக் கருதுவார்
சிட்டர்[9]கள் சீர்[10]பெறு வாரே. 10

மூடிய சோலைசூழ் முதுகுன்றத் தீசனை
நாடிய ஞானசம் பந்தன்
நாடிய ஞானசம் பந்தன செந்தமிழ்
பாடிய அவர்பழி யிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பழமலைநாதர்; தேவி—பெரியநாயகி.

---

## 7. திருநெல்வெண்ணெய்*

### திருமுக்கால்

பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நல்வெணெய்[1] விழுது[2] பெய் தாடுதிர் நாடொறும்
நெல்வெணெய் மேவிய நீரே

---

[7]-[8] தேரரை என்றும் பாடம். [9] சிட்டர் - நல் ஒழுக்கத்தினர். [10] சீர் - முத்திப்பேறு. * 'நெய்வெண்ணெய்' என வழங்கப் பெறும். திருநெல்வெண்ணை என்றும் பாடம்; செய்யுளும் அவ்வாறே ஆகும். [1] நல்வெண்ணெய் என்பது நல்வெணெய் என இடைக் குறைந்து நின்றது; மற்றவைகளும் இவ்வாறேயாம். [2] வெண்ணெய் விழுது - வெண்ணெய்த் திரட்சி.

நெல்வெணெய் மேவிய நீருமை நாடொறும்
சொல்வணம் இடுவது சொல்லே.[3] 1

நிச்சலும்[4] அடியவர் தொழுதெழு நெல்வெணெய்க்
கச்சிள அரவசைத் தீரே
கச்சிள அரவசைத் தீருமைக் காண்பவர்
அச்சமொ டருவினை யிலரே. 2

நிரைவிரி தொல்புகழ் நெல்வெணெய் மேவிய
அரைவிரி கோவணத் தீரே
அரைவிரி கோவணத் தீருமை யலர்கொடு
உரைவிரிப் போருயர்ந் தோரே. 3

நீர்மல்கு தொல்புகழ் நெல்வெணெய் மேவிய
ஊர்மல்கி உறையவல் லீரே
ஊர்மல்கி உறையவல் லீருமை யுள்குதல்
பார்மல்கு புகழவர் பண்பே. 4

நீடிளம் பொழிலணி நெல்வெணெய் மேவிய
ஆடிளம் பாப்பசைத் தீரே[5]
ஆடிளம் பாப்பசைத் தீருமை[6] அன்பொடு
பாடுளம் உடையவர் பண்பே. 5

நெற்றியோர் கண்ணுடை நெல்வெணெய் மேவிய
பெற்றிகொள் பிறைநுத லீரே
பெற்றிகொள் பிறைநுத லீருமைப் பேணுதல்
கற்றறி வோர்கள்தங் கடனே.[7] 6

நிறையவர்[8] தொழுதெழு நெல்வெணெய் மேவிய
கறையணி மிடறுடை யீரே
கறையணி மிடறுடை யீருமைக் காண்பவர்
உறைவதும் உம்படிக் கீழே. 7

---

[3] இடுவதும் சொல்லே என்றும் பாடம். [4] நிச்சலும்-நாடொறும். [5] பாம்பசைத்தீரே என்றும் பாடம். [6] பாப்பசைத் தீருமை என்றும் பாடம்; பாம்பு என்பது பாப்பு என வலிந்து நின்றது. [7] இங்குக் 'கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்—நற்றாடொழாஅ ரெனின்' என்னும் திருக்குறள் சிந்திக்கற்பாலது. [8] நிறையவர்—மன நிறைவுடைய பெரியோர்.

நெருக்கிய பொழிலணி நெல்வெணெய் மேவியன்
றரக்கனை அசைவுசெய் தீரே
அரக்கனை யசைவுசெய் தீருமை அன்புசெய்
திருக்கவல் லாரிட ரிலரே. 8

நிரைவிரி சடைமுடி நெல்வெணெய் மேவியன்
றிருவரை யிடர்கள் செய்தீரே
இருவரை யிடர்கள்செய் தீருமை யிசைவொடு
பரவவல் லார்பழி யிலரே.[9] 9

நீக்கிய புனலணி நெல்வெணெய் மேவிய
சாக்கியச் சமண்கெடுத் தீரே
சாக்கியச் சமண்கெடுத் தீருமைச் சார்வது
பாக்கியம் உடையவர் பண்பே. 10

நிலமல்கு தொல்புகழ் நெல்வெண யீசனை
நலமல்கு ஞானசம் பந்தன்
நலமல்கு ஞானசம் பந்தன செந்தமிழ்
சொலமல்கு வார்துய ரிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வெண்ணெயப்பர்; தேவி—நீலமலர்க்கண்ணி.

---

## 8. திருக்கோவலூர்வீரட்டம்*

திருவிராகம். பண் - நட்டராகம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

படைகொள்கூற்றம் வந்துமெய்ப் பாசம்விட்ட போதின்கண்
இடைகொள்வா ரெமக்கிலை யெழுகபோது நெஞ்சமே
குடை[1] கொள்வேந்தன் மூதாதை குழகன்கோவ லூர்தனுள்[2]
விடையதேறுங் கொடியினன் வீரட்டானஞ் சேர்துமே. 1

---

[9] பழியிலவே என்றும் பாடம். * 'திருக்கோயிலூர்' என வழங்கப்பெறும். இது மேலூர், கீழூர் என இரண்டு பாகமுடையது; சிவாலயம் கீழூரில் இருக்கின்றது; வீரட்டானம் என்றும் பாடம். வீரட்டம் - ஞானமயமான தலம். [1] கொடை என்றும் பாடம். [2] லூர்தனில் என்றும் பாடம்; இதனை இப்பதிகமுற்றுங் கொள்க.

கரவலாளர்[3] தம்மனைக் கடைகள்தோறுங் கால்நிமிர்த்
திரவலாழி நெஞ்சமே இனியதெய்த வேண்டில்நீ
குரவமேறி வண்டினங் குழலொடியாழ்செய் கோவலூர்
விரவிநாறு கொன்றையான் வீரட்டானஞ் சேர்துமே. 2

உள்ளத்தீரே போதுமின் உறுதியாவ தறிதிரேல்
அள்ளற்சேற்றிற் காலிட்டிங் கவலத்துள் அழுந்தாதே
கொள்ளப்பாடு கீதத்தான் குழகன்கோவ லூர்தனுள்
வெள்ளந்தாங்கு சடையினான் வீரட்டானஞ் சேர்துமே. 3

கவனகொள்இருமல் சூலநோய் கம்பதாளி குன்மமும்
இவனையபலவும் மூப்பினோ டெய்திவந்து நலியாமுன்
பவனகளுலவு பைம்பொழிற் பழனஞ்சூழ்ந்த கோவலூர்
வினையைவென்ற வேடத்தான் வீரட்டானஞ் சேர்துமே. 4

உளங்கொள்போகம் உய்த்திடார்[4] உடம்பிழந்த போதின்கண்
துளங்கிநின்று நாடொறுந் துயரலாழி[5] நெஞ்சமே
வளங்கொள்பெண்ணை[6] வந்துலா வயல்கள்சூழ்ந்த கோவலூர்
விளங்குகோவ ணத்தினான் வீரட்டானஞ் சேர்துமே. 5

கேடுமூப்புச் சாக்காடு கெழுமிவந்து[7] நாடொறும்
ஆடுபோல நரைகளாய் யாக்கைபோக்க தன்றியும்
கூடிநின்று பைம்பொழிற் குழகன்கோவ லூர்தனுள்
வீடுகாட்டு நெறியினான் வீரட்டானஞ் சேர்துமே. 6

உரையும்பாட்டுந் தளர்வெய்தி உடம்புமூத்த போதின்கண்
நரையுந்திரையுங் கண்டெள்கி நகுவர்நமர்[8]கள் ஆதலால்
வரைகொள்பெண்ணை வந்துலா வயல்கள்சூழ்ந்த கோவலூர்
விரைகொள்சீர்[9] வெண் ணீற்றினான் வீரட்டானஞ் சேர்துமே. 7

ஏதமிக்க மூப்பினோ டிருமல்ஈளை யென்றிவை
ஊதலாக்கை[10] ஓம்புவீர் உறுதியாவ தறிதிரேல்

---

[3] கரவலாளர்-வஞ்சகர். [4] உய்த்திடர் என்றும் பாடம். [5] துயரல் ஆழி - துன்பத்தில் ஆழ்ந்துவிடாதே; துயரல் வாழி என்றும் பாடம். [6] பெண்ணை - பெண்ணைநதி. [7] கெழுமி நின்று என்றும் பாடம். [8] எள்கி நகுவர் - இகழ்ந்து சிரிப்பர்; நமர் - நம்மவர். [9] விரைகொள்சேர் என்றும் பாடம். சேர்தல் - எப்பொழுதும் நீங்கா திருத்தல். [10] ஈளை - கோழை; ஊதல்ஆக்கை - பெருவுடல்.

போதில்வண்டு பண்செயும் பூந்தண்கோவ லூர்தனுள்
வேதமோதும் நெறியினன் வீரட்டானஞ் சேர்துமே. 8

ஆறுபட்ட புன்சடை அழகன்ஆயி ழைக்கொரு
கூறுபட்ட மேனியான் குழகன்கோவ லூர்தனுள்
நீறுபட்ட கோலத்தான் நீலகண்டன் இருவர்க்கும்
வேறுபட்ட சிந்தையான் வீரட்டானஞ் சேர்துமே. 9

குறிகொளாழி நெஞ்சமே கூறை[11] துவரிட் டார்களும்
அறிவிலாத அமணர்சொல் அவத்தமாவ தறிதிரேல்
பொறிகொள்வண்டு பண்செயும் பூந்தண்கோவ லூர்தனுள்
வெறி[12] கொள்கங்கை தாங்கினன் வீரட்டானஞ் சேர்துமே. 10

கழியொடுலவு கானல்சூழ் காழிஞான சம்பந்தன்
பழிகள் தீரச் சொன்னசொல் பாவநாச மாதலால்
அழிவிலீர்கொண் டேத்துமின் அந்தண்கோவ லூர்தனுள்
விழிகொள்பூதப் படையினன் வீரட்டானஞ் சேர்துமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வீரட்டானேச்சுவரர்; தேவி—சிவானந்தவல்லி.

---

## 9. திருஅறையணிநல்லூர் *

**பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]**

திருச்சிற்றம்பலம்

பீடி[1] னற்பெரி யோர்களும் பேதமைகெடத் தீதிலா
வீடினலுயர்ந் தார்களும் வீடிலாரிள வெண்மதி
சூடினார்மறை பாடினார் சுடலைநீறணிந் தாரழல்
ஆடினார்அறை யணிநல்லூர் அங்கையால்தொழு வார்களே. 1

இலையினார்சூலம் ஏறுகந் தேறியேயிமை யோர்தொழ
நிலையினாலொரு காலுறச் சிலையினால்மதி லெய்தவன்
அலையினார்புனல் சூடிய அண்ணலார்அறை யணிநல்லூர்
தலையினால்தொழு தோங்குவார் நீங்குவார்தடு மாற்றமே. 2

---

[11] கூறை - ஆடை. [12] வெறி - வாசனை. * 'அறைகண்ட நல்லூர்' என வழங்கப்பெறும். இத்தலத்துக்கோயில் ஒரு சிறு குன்றின்மேல் பெண்ணை நதியின் வட கரையில் அமைந்துள்ளது.
[1] பீடு - பெருமை.

என்பினர்கனல் சூலத்தார் இலங்குமாமதி யுச்சியான்
பின்பினற்பிறங் குஞ்சடைப் பிஞ்ஞகன்பிறப் பிலியென்று
முன்பினர்மூவர் தாந்தொழு முக்கண்மூர்த்திதன் தாள்களுக்
கன்பினர்அறை யணிநல்லூர் அங்கையால்தொழு வார்களே. 3
விரவுநீறுபொன் மார்பினில் விளங்கப்பூசிய வேதியன்
உரவுநஞ்சமு தாகவுண் டுறுதிபேணுவ தன்றியும்
அரவுநீள்சடைக் கண்ணியார் அண்ணலார்அறை யணிநல்லூர்
பரவுவார்பழி நீங்கிடப் பறையுந்தாஞ்செய்த பாவமே. 4
தீயினர்திகழ் மேனியாய் தேவர்தாந்தொழு தேவன்நீ
ஆயினய்கொன்றை யாய்அன லங்கையாய்அறை யணிநல்லூர்
மேயினர்தம தொல்வினை வீட்டினய்வெய்ய காலனைப்
பாயினயதிர் கழலினய் பரமனேயடி பணிவனே. 5
விரையினர்கொன்றை சூடியும் வேகநாகமும்[2] வீக்கிய
அரையினர்அறை யணிநல்லூர் அண்ணலார்அழ காயதோர்
நரையினர்விடை யூர்தியார் நக்கனர்[3] நறும் போதுசேர்
உரையினலுயர்ந் தார்களும் உரையினலுயர்ந் தார்களே. 6
வீரமாகிய வேதியர் வேகமாகளி யானையின்
ஈரமாகிய வுரிவைபோர்த் தரிவைமேற்சென்ற எம்இறை
ஆரமாகிய பாம்பினர் அண்ணலாரறை யணிநல்லூர்
வாரமாய்நினைப் பார்கள்தம் வல்வினையவை மாயுமே. 7
தக்கனர்பெரு வேள்வியைத் தகர்த்துகந்தவன் தாழ்சடை
முக்கணன்மறை பாடிய முறைமையான்முனி வர்தொழ
அக்கி[4] னைடெழில் ஆமைபூண் அண்ணலார்அறை யணிநல்லூர்
நக்கனரவர் சார்வலால் நல்குசார்விலோம் நாங்களே. 8
வெய்யநோயிலர் தீதிலர் வெறியராய்ப்பிறர் பின்செலார்
செய்வதேயலங் காரமாம் இவையிவைதேறி யின்புறில்
ஐயமேற்றுணுந் தொழிலராம் அண்ணலார்அறை யணிநல்லூர்ச்
சைவனரவர் சார்வலால் யாதுஞ்சார்விலோம் நாங்களே. 9
வாக்கியஞ்சொல்லி யாரொடும் வகையலாவகை செய்யன்மின்
சாக்கியஞ்சம ணென்றிவை சாரேலும்மர ணம்பொடி

---

[2] வேதநாகமும் என்றும் பாடம். [3] நரையினர் விடை - வெண்ணிறமான இடபம்; நக்கன் - சிவன். [4] அக்கு - சங்குமணி.

ஆக்கியம்மமு வாட்படை யண்ணலாரறை யணிநல்லூர்ப்
பாக்கியங்குறை யுடையீரேற் பறையுமரஞ்செய்த பாவமே. 10

கழியுலாங்கடற் கானல்சூழ் கழுமலம்அமர் தொல்பதிப்
பழியிலாமறை ஞானசம் பந்தன்நல்லதோர் பண்பினார்
மொழியினால்[3] அறை யணிநல்லூர் முக்கண்மூர்த்திதன் தாள்தொழக்
கெழுவினாரவர் தம்மொடுங் கேடில்வாழ்பதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அறையணிநாதர்; தேவி—அருள்நாயகி.

---

## 10. திருவடுகூர்*

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சுடுகூ ரெரிமாலை யணிவர் சுடர்வேலர்
கொடுகூர் மழுவாளொன் றுடையார் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்
வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூ ரடிகளே. 1

பாலுந் நறுநெய்யுந் தயிரும் பயின்றாடி
ஏலுஞ் சுடுநீறும் என்பும் ஒளிமல்கக்
கோலம் பொழிற்சோலைக் கூடி மடஅன்னம்
ஆலும் வடுகூரில் ஆடும் மடிகளே. 2

சூடும் இளந்திங்கள் சுடர்பொற் சடைதன்மேல்
ஓடுங் களியானை உரிபோர்த் துமையஞ்ச
ஏடு மலர்மோந்தங் கெழிலார் வரிவண்டு
பாடும் வடுகூரில் ஆடும் மடிகளே.[1] 3

துவரும் புரிசையுந் துதைந்த மணிமாடம்
கவர வெரியோட்டிக்[2] கடிய மதிலெய்தார்

---

[3] மொழியினார் என்றும் பாடம். * 'ஆண்டார்கோயில்' என வழங்கப்பெறும்; வடுகனாகிய வைரவன் பூசித்துப் பேறுபெற்றமையால் வடுகூர் எனப் பெயர்பெற்றது; வைரவன் - சிவகுமாரர்களில் ஒருவர்; [1] உமை அஞ்ச வடுகூரில் ஆடும் அடிகள் என்க. [2] துவர்-செந்நிறம். வெரியூட்டிக் என்றும் பாடம்.

கவரு மணிகொல்லைக் கடிய முலைநல்லார்
பவரும் வடுகூரில் ஆடும் மடிகளே. 4

துணியா ருடையாடை துன்னி யரைதன்மேல்
தணியா அழல்நாகந் தரியா வகைவைத்தார்
பணியா ரடியார்கள் பலரும் பயின்றேத்த
அணியார் வடுகூரில் ஆடும் மடிகளே. 5

தளருங் கொடியன்னாள் தன்னோ டுடனாகிக்
கிளரும் அரவார்த்துக்[3] கிளரு முடிமேலோர்
வளரும் பிறைசூடி வரிவண் டிசைபாட
ஒளிரும் வடுகூரில் ஆடும் மடிகளே. 6

நெடியர் சிறிதாய நிரம்பா மதிசூடும்
முடியர் விடையூர்வர் கொடியர் மொழிகொள்ளார்[4]
கடிய தொழிற்காலன் மடிய வுதைகொண்ட
அடியர் வடுகூரில் ஆடும் மடிகளே. 7

பிறையும் நெடுநீருங்[5] பிரியா முடியினார்
மறையும் பலபாடி மயானத் துறைவாரும்
பறையும் அதிர்குழலும் போலப் பலவண்டாங்
கறையும் வடுகூரில் ஆடும் மடிகளே. 8

சந்தம்[6] மலர்வேய்ந்த சடையின் இடைவிம்மு
கந்தம் மிகுதிங்கள் சிந்து கதிர்மாலை
வந்து நயந்தெம்மை நன்றும் அருள்செய்வார்
அந்தண் வடுகூரில் ஆடும் மடிகளே. 9

திருமா லடிவீழத் திசைநான் முகனாய
பெருமான் உணர்கில்லாப்[7] பெருமான் நெடுமுடிசேர்
செருமால் விடையூருஞ் செம்மான் திசைவில்லா
அருமா வடுகூரில் ஆடும் மடிகளே. 10

படிநோன் பவையாவர் பழியில் புகழான
கடிநாண் நிகழ்சோலை கமழும்[8] வடுகூரைப்

---

[3] தளரும் - (பிருங்கி முனிவர் தம்மை வழிபடாமைக்கு) வருந்தும். அரவாட்டிக் என்றும் பாடம். [4] கொடிய மொழியுள்ளார் என்றும் பாடம். [5] நெடுநீர் - கங்கை. [6] சந்தம்-அழகு: நிறமுமாம். [7] உணர்கில்லான் என்றும் பாடம். [8] கமழும் - விளங்கும்.

படியா னசிந்தை மொழியார் சம்பந்தன்
அடிஞா னம்வல்லா ரடிசேர் வார்களே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—வடுகூர்நாதர்; தேவி—வடுவகிர்க் கண்ணியம்மை.

## 11. திருமாணிகுழி

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொன்னியல்[1] பொருப்பரையன் மங்கையொரு பங்கர் புனல் தங்குசடைமேல், வன்னியொடு மத்தமலர் வைத்தவிறல்[2] வித்தகர்ம கிழ்ந்துறைவிடம், கன்னியிள வாளைகுதி கொள்ளவிள வள்ளைபடர் அள்ளல்[3]வயல்வாய், மன்னியிள மேதி[4]கள் படிந்து மனை சேருதவி மாணிகுழியே. 1

சோதிமிகு நீறதுமெய் பூசியொரு தோலுடைபு னைந்து தெருவே, மாதர்மனை தோறும்இசை பாடிவசி[5] பேசும்அர னார் மகிழ்விடம், தாதுமலி தாமரைம ணங்கமழ வண்டுமுரல் தண் பழனமிக் கோதமலி வேலைபுடை சூழுலகில் நீடுதவி மாணி குழியே. 2

அம்பனைய கண்ணுமைம டந்தையவள் அஞ்சிவெருவச்சின முடைக், கம்பமத யானையுரி செய்தஅர னார்கருதி மேயவிடமாம்,[6] வம்புமலி சோலைபுடை சூழமணி மாடமது நீடி[7] யழகார், உம்ப ரவர் கோன்நகர மென்னமிக மன்னுதவி மாணிகுழியே. 3

நித்தநிய மத்தொழில னாகிநெடு மால்குறள னாகிமிகவும், சித்தமதொ ருக்கிவழி பாடுசெய நின்றசிவ லோகனிடமாம்,[8] கொத்தலர்ம லர்ப்பொழிலின் நீடுகுல மஞ்ஞைநடம் ஆடலதுகண், டொத்தவரி வண்டுகளு லாவியிசை பாடுதவி மாணிகுழியே. 4

---

[1] பொன் இயல் - பொன்போன்ற. [2] விறல் - வலிமை. [3] அள்ளல் - சேறு. [4] மேதி - எருமை. [5] வசி - வசியச்சொற்கள். [6] மேவுமிடமாம் என்றும் பாடம். [7] மதில் நீடி என்றும் பாடம். [8] இவ்வடிகள் திருமால் வாமனவதாரத்தில் பூசித்துப் பேறு பெற்றதை அறிவிக்கும்.

மாசில்மதி சூடுசடை மாமுடியர் வல்லசுரர்[9] தொல்நகரமுன், நாசமது செய்துநல வானவர்க ளுக்கருள்செய் நம்பனிடமாம், வாசமலி மென்குழல்ம டந்தையர்கள் மாளிகையின் மன்னியழகார், ஊசல்மிசை யேறியினி தாகஇசை பாடுதவி மாணிகுழியே. 5

மந்தமலர் கொண்டுவழி பாடுசெயும் மாணி[10]யுயிர் வவ்வமனமாய், வந்தவொரு காலனுயிர் மாளவுதை செய்தமணி கண்டனிடமாம், சந்தி[11]னொடு காரகில்சு மந்துதட மாமலர்கள் கொண்டுகெடிலம், உந்துபுனல் வந்துவயல் பாயும்மண மாருதவி மாணிகுழியே. 6

எண்பெரிய வானவர்கள் நின்றுதுதி செய்யஇறை யேகருணையாய், உண்பரிய நஞ்சதனை உண்டுலகம் உய்யஅருள் உத்தமனிடம், பண்[12]பயிலும் வண்டுபல கெண்டிமது வுண்டுநிறை பைம்பொழிலின்வாய், ஒண்பலவின் இன்கனிசொ ரிந்துமணம் நாறுதவி[13] மாணிகுழியே. 7

எண்ணம்அது வின்றியெழி லார்கைலை மாமலையெ டுத்ததிறலார், திண்ணியஅ ரக்கனைநெ ரித்தருள்பு ரிந்தசிவ லோகனிடமாம், பண்ணமரும் மென்மொழியி னார்பணைமு லைப்பவள வாயமுகதார், ஒண்ணுதல்ம டந்தையர்கு டைந்துபுன லாடுதவி மாணிகுழியே. 8

நேடும்அய னோடுதிரு மாலும்உண ராவகைநி மிர்ந்துமுடிமேல், ஏடுலவு திங்கள்மத மத்தமித ழிச்சடையெம் ஈசனிடமாம், மாடுலவு மல்லிகைகு ருந்துகொடி மாதவிசெ ருந்திகுரவின், ஊடுலவு புன்னைவிரை தாது[14]மலி சேருதவி மாணிகுழியே. 9

மொட்டையமண் ஆதர்முது தேரர்மதி யில்விகள்மு யன்றனபடும், முட்டைகள்மொ ழிந்தமொழி கொண்டருள்செய் யாதமுதல் வன்றனிடமாம், மட்டைமலி தாழை[15]யிள நீர்முதிய வாழை யில்வி ழுந்தஅதரில்[16], ஒட்டமலி பூகம்நிரை தாறுதிர வேறுதவி மாணிகுழியே. 10

---

[9] வல்லவுணர் என்றும் பாடம். [10] மாணி - மார்க்கண்டேயர். [11] சந்து - சந்தன மரங்கள். [12] பண் - இங்குச் சாதாரி. [13] மண மாருதவி என்றும் பாடம். [14] விரிதாது என்றும் பாடம். [15] தாழை - தென்னை (யிலுள்ள). [16] அதரில் - அதிர்ச்சியில்

உந்திவரு தண்கெடில மோடுபுனல் சூழ்தவி மாணிகுழிமேல், அந்திமதி சூடியஎம் மானையடி சேருமணி காழிநகரான், சந்தம் நிறை தண்தமிழ்தெ ரிந்துணரு ஞானசம் பந்தனதுசொல், முந்தி யிசைசெய்துமொழி வார்களுடை யார்கள்நெடுவானநிலனே[17]. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மாணிக்கவரதர்; தேவி—மாணிக்கவல்லி.

---

## 12. திருப்பாதிரிப்புலியூர் *

பண் - செவ்வழி [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முன்னம்நின்ற முடக்கால் முயற்கருள்[1] செய்துநீள்
புன்னைநின்று கமழ்பா திரிப்புலி யூருளான்
தன்னைநின்று வணங்குந் தனைத்தவ மில்லிகள்
பின்னைநின்ற பிணியாக் கையைப்பெறு வார்களே. 1

கொள்ளிநக்க பகுவாய பேய்கள் குழைந்தாடவே
முள்ளிலவம் முதுகாட் டுறையும் முதல்வன் இடம்
புள்ளினங்கள் பயிலும் பாதிரிப் புலியூர்தனை
உள்ள நம்மேல் வினையாயின ஒழியுங்களே. 2

மருளினல்லார் வழிபாடு செய்யும் மழுவாளர்மேல்
பொருளினல்லார் பயில் பாதிரிப் புலியூருளான்
வெருளின்மானின்[2] பிணை நோக்கல்செய்து வெறிசெய்தபின்
அருளிஆகத் திடைவைத் ததுவும் அழகாகவே. 3

போதிலும் புகை[3] யாலும் உய்த்தே அடியார்கள்தாம்
போதி[4] னாலே வழிபாடு செய்யப்·புலியூர்தனுள்

---

[17] வானுலகமே என்றும் பாடம். * பாதிரி - ஒருவகை மரம்; இங்குத் தலமரம். புலி - புலிக்கால் முனிவர். பாதிரி - பாடலம்: வடமொழி வழக்கு; இவ்வொற்றுமை கருதி இந்நகரத்தின் அருகில் பாடலிபுரம் என்ற பெயரால் சமணர்கள் தங்கள் நகரத்தைச் சமைத்தனர் என்பர். [1] இவ்வடி முடங்கிய காலுடைய முயல் வடிவாகச் சாபமிடப்பெற்ற மங்கணர் என்ற முனிவர் பூசித்துச் சாபம் நீங்கப்பெற்றதை அறிவிக்கும். [2] வெருளிமானின் என்றும் பாடம். [3] புகை - வாசனைத்தூபம். [4] போது - காலை மாலை.

ஆதிநாலும்[5] அவலம் மிலாதஅடி கள்மறை
ஓதிநாளும் இடும்பிச்சை யேற்றுண் டுணப்பாலதே. 4

ஆகநல்லார் அமுதாக்க வுண்டான் அழலேந்தலே
நாகநல்லார் பரவந்நயந் தங்கரை யார்த்தவன்
போகநல்லார் பயிலும் பாதிரிப் புலியூர்தனுள்
பாகநல்லா ளொடுந்நின்ற எம்பர மேட்டியே. 5

மதியமொய்த்த கதிர்போ லொளிம்மணற் கானல்வாய்ப்
புதியமுத்தந் திகழ் பாதிரிப் புலியூரெனும்
பதியில்வைக்கப் படுமெந்தை தன்பழந் தொண்டர்கள்
குதியுங்கொள்வர் விதியுஞ் செய்வர் குழகாகவே. 6

கொங்கரவப் படுவண் டறைகுளிர் கானல்வாய்ச்
சங்கரவப் பறையின் ஒலியவை சார்ந்தெழப்
பொங்கரவம் உயர் பாதிரிப் புலியூர்தனுள்
அங்கரவம் மரையில் அசைத்தானே அடைமினே. 7

வீக்கமெழும் இலங்கைக் கிறை விலங்கல்லிடை
ஊக்கமொழிந் தலறவ் விரலாலிறை யூன்றினன்
பூக்கமழும் புனற் பாதிரிப் புலியூர்தனே
நோக்கமெலிந் தணுகா வினைந் நுணுகுங்களே. 8

அன்னந்தாவும் அணியார் பொழில் மணியார்புன்னை[6]
பொன்னந்தாது சொரி பாதிரிப் புலியூர்தனுள்
முன்னந்தாவி அடிமூன் றளந்தவன்[7] நான்முகன்
தன்னந்தாளுற் றுணராத தோர் தவநீதியே. 9

உரிந்தகூறை யுருவ[8]த் தொடுதெருவத் திடைத்
திரிந்துதின்னுஞ் சிறுநோன் பரும்பெருந் தேரரும்
எரிந்துசொன்னவ் வுரைகொள் ளாதேயெடுத் தேத்துமின்
புரிந்த[9] வெண்ணீற் றண்ணல் பாதிரிப் புலியூரையே. 10

அந்தண்நல்லா ரகன் காழியுள் ஞானசம்
பந்தன்நல்லார் பயில் பாதிரிப் புலியூர்தனுள்

---

[5] ஆதிநாளும் என்றும் பாடம். [6] புன்னை-நெய்தல் நிலக் கருப்பொருள். [7] முன்னம் என்றது வாமனவதாரம். தாவி மூன்றடி அளந்தவன் - திருமால். [8] உரிந்த கூறை உருவம் - திருவாணம். [9] புரிந்து என்றும் பாடம்.

சந்தமாலைத் தமிழ்பத்தி வைதரித் தார்கள்மேல்
வந்துதியவ் வடையாமை யால்வினை மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—தோன்றுத்துணைநாதர், பாடலீசுவரர்;
தேவி—தோகைநாயகி, பெரியநாயகியம்மை.

---

## 13. திருப்புறவார்பனங்காட்டூர்*

பண் - சீகாமரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வி**ண்ண மர்ந்தன மும்ம தில்களை [1]
வீழ வெங்கணை யாலெய் தாய்விரி
பண்ணமர்ந் தொலிசேர் புறவார் பனங்காட்டூர்ப்
பெண்ண மர்ந்தொரு பாக மாகிய
பிஞ்ஞ காபிறை சேர்நு தலிடைக்
கண்ணமர்ந் தவனே கலந்தார்க் கருளாயே. 1

நீடல் கோடல் [2] அலரவெண் முல்லை
நீர்ம லர்நிரைத் தாத ளஞ்செயப்
பாடல் வண்டறையும் புறவார் பனங்காட்டூர்த்
தோடி லங்கிய காத யல்மின்
துளங்க [3] வெண்குழை துள்ள நள்ளிருள்
ஆடுஞ் சங்கரனே அடைந்தார்க் கருளாயே. 2

வாளை யுங்கய லும்மிளிர் பொய்கை
வார்பு னற்கரை யருகெ லாம்வயற்
பாளை யொண்கமுகம் புறவார் பனங்காட்டூர்ப்
பூளை [4] யும்நறுங் கொன்றை யும்மத
மத்த மும்புனை வாய்க ழலிணைத்
தாளையே பரவுந் தவத்தார்க் கருளாயே. 3

---

* 'பனையபுரம்' என வழங்கப்பெறும். [1] விண் அமர்ந்தன மும்மதில்கள் - வானில் திரிந்து கொண்டுள்ள முப்புரங்கள்; திரிபுரம். [2] நீடல் கோடல் - நீண்ட வெண் காந்தள். [3] துலங்க என்றும் பாடம். [4] பூளை - ஒரு செடி.

மேய்ந்தி ளஞ்செந்நெல் மென்க திர்கவ்வி
மேற்ப டுதலின்[5] மேதி வைகறை
பாய்ந்த தண்பழனப் புறவார் பனங்காட்டூர்
ஆய்ந்த நான்மறை பாடி யாடும்
அடிக ளென்றென் றரற்றி நன்மலர்
சாய்ந்தடி பரவுந் தவத்தார்க் கருளாயே. 4

செங்க யல்லொடு சேல்செ ருச்செயச்
சீறி யாழ்முரல் தேனி னத்[6] தொடு
பங்கயம் மலரும் புறவார் பனங்காட்டூர்க்
கங்கை யும்மதி யுங்க மழ்சடைக்
கேண்மை யாளொடுங் கூடி மான்மறி
அங்கை யாடலனே அடியார்க் கருளாயே. 5

நீரி னார்வரை[7] கோலி மால்கடல்
நீடி யபொழில் சூழ்ந்து வைகலும்
பாரினார் பிரியாப் புறவார் பனங்காட்டூர்க்
காரி னார்மலர்[8]க் கொன்றை தாங்கு
கடவு ளென்றுகை கூப்பி நாடொறும்
சீரினால் வணங்குந் திறத்தார்க் கருளாயே. 6

கைய ரிவையர் மெல்வி ரல்லவை
காட்டி யம்மலர்க் காந்த ளங்குறி
பையரா விரியும் புறவார் பனங்காட்டூர்
மெய்ய ரிவையொர் பாக மாகவும்
மேவி னாய்கழ லேத்தி நாடொறும்
பொய்யிலா அடிமை புரிந்தார்க் கருளாயே. 7

தூவி யஞ்சிறை மெல்ந டையன
மல்கி யொல்கிய தூமலர்ப் பொய்கைப்
பாவில் வண்டறையும் புறவார் பனங்காட்டூர்
மேவி யந்நிலை யாய ரக்கன
தோள டர்த்தவன் பாடல் கேட்டருள்
ஏவிய பெருமான் என்பவர்க் கருளாயே. 8

---

[5] மேற்படுதலின் என்றும் பாடம். [6] தேனினம் - வண்டுக் கூட்டம். [7] நீரினார் கரை என்றும் பாடம். [8] காரினார் மலர் - கார் காலத்தில் மலரும்.

அந்தண் மாதவி புன்னை நல்ல
 அசோக மும்மர விந்த[9] மல்லிகை
பைந்தண் ஞாழல்[10] கள் சூழ்புறவார் பனங்காட்டூர்
எந்தி எம்முகில் வண்ணன் நான்முகன்
 என்றி வர்க்கரி தாய்நி மிர்ந்ததொர்
சந்தம் ஆயவனே தவத்தார்க் கருளாயே. 9

நீண மார்முரு குண்டு வண்டினம்
 நீல மாமலர் கவ்வி நேரிசை[11]
பாணில் யாழ்[12] முரலும் புறவார் பனங்காட்டூர்
நாண ழிந்துழல் வார்ச மணரும்
 நண்பில்[13] சாக்கிய ருங்க கத்தலை
ஊணுரி யவனே உகப்பார்க் கருளாயே. 10

மையி னார்மணி போல்மி டற்றனை
 மாசில் வெண்பொடிப் பூசு மார்பனைப்
பைய தேன்பொழில்சூழ் புறவார் பனங்காட்டூர்
ஐய னைப்புக ழான காழியுள்
 ஆய்ந்த நான்மறை ஞான சம்பந்தன்
செய்யுள் பாடவல்லார் சிவலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—பனங்காட்டீச்சுவரர்; தேவி—புறவாம்பிகை.

## 14. திருஆமாத்தூர் *

பண் - சீகாமரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

துன்னம்பெய் கோவணமுந் தோலு முடையாடை
பின்னஞ் சடை[1] மேலோர் பிள்ளை மதிசூடி

---

[9] அரவிந்தம் - தாமரை. [10] ஞாழல்-கோங்க மரம். [11] நேரிசை - ஒருபண். [12] பாணியாழ் என்றும் பாடம். [13] நம்பில் என்றும் பாடம்; நம்பில் - நம்புதலில்லாத. * ஆமாத்தூர் - பசுக்களுக்குத் தாயாக இறைவன் அருளும் இடம்; பசுக்கள் - உயிர் வருக்கங்கள்; இத் தலம் வடமொழியில் 'கோமாதுருபுரம்' என வழங்கப்பெறும். [1] பின்னுஞ்சடை என்றும் பாடம்.

அன்னஞ்சேர் தண்கானல் ஆமாத்தூர் அம்மான்றன்
பொன்னங் கழல்பரவாப் பொக்கமும் பொக்கமே.[2] 1

கைம்மாவின் தோல்போர்த்த காபாலி வானுலகில்
மும்மா மதிலெய்தான் முக்கணன் பேர்பாடி
அம்மா மலர்ச்சோலை ஆமாத்தூர் அம்மான்எம்
பெம்மானென் றேத்தாதார் பேயரிற் பேயரே. 2

பாம்பரைச் சாத்தியோர் பண்டரங்கன்[3] விண்டதோர்
தேம்பல் இளமதியஞ் சூடிய சென்னியான்
ஆம்பலம் பூம்பொய்கை ஆமாத்தூர் அம்மான்றன்
சாம்பல் அகலத்தார் சார்பல்லாற் சார்பிலமே. 3

கோணாகப் பேரல்குற் கோல்வளைக்கை மாதராள்
பூணாகம் பாகமாப் புல்கி யவளோடும்
ஆணாகங் காதல்செய் ஆமாத்தூர் அம்மானைக்
காணாத கண்ணெல்லாங் காணாத கண்களே. 4

பாடல் நெறிநின்றான் பைங்கொன்றைத் தண்டாரே
சூடல் நெறிநின்றான் சூலஞ்சேர் கையினான்
ஆடல் நெறிநின்றான் ஆமாத்தூர் அம்மான்றன்
வேட நெறிநில்லா வேடமும் வேடமே. 5

சாமவரை வில்லாகச் சந்தித்த[4] வெங்கணையால்
காவல் மதிலெய்தான் கண்ணுடை நெற்றியான்
யாவருஞ் சென்றேத்தும் ஆமாத்தூர் அம்மானத்
தேவர் தலைவணங்குந் தேவர்க்குந் தேவனே. 6

மாறாத வெங்கூற்றை மாற்றி மலைமகளை
வேறாக நில்லாத வேடமே காட்டினான்
ஆறாத தீயாடி ஆமாத்தூர் அம்மானைக்
கூறாத நாவெல்லாங் கூறாத நாக்களே. 7

தாளால் அரக்கன்தோள் சாய்த்த தலைமகன்றன்
நாள்ஆதிரை[5] யென்றே நம்பன்றன் நாமத்தால்

---

[2] பொக்கமும் பொக்கமே - பொலிவும் பொய்யே ஆகும். [3] சார்த்தி என்றும் பாடம். பண்டரங்கன் - சிவன். [4] சாவவரை என்றும், சாவம்வரை என்றும் பாடம்; சாமம் - கருமை; வில்லாச் சந்தித்த என்றும், வில்லாற் சந்தித்த என்றும் பாடம். [5] ஆதிரை - ஒரு நட்சத்திரம்.

ஆளானார் சென்றேத்தும் ஆமாத்தூர் அம்மானைக்
கேளாச் செவியெல்லாங் கேளாச் செவிகளே.[6] 8

புள்[7]ளும் கமலமுங் கைக்கொண்டார் தாமிருவர்
உள்ளும் அவன்பெருமை ஒப்பளக்குந் தன்மையதே
அள்ளல் விளைகழனி ஆமாத்தூர் அம்மான்எம்
வள்ளல் கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே. 9

பிச்சை பிறர்பெய்யப் பின்சாரக் கோசாரக்
கொச்சை புலால்நாற ஈருரிவை போர்த்துகந்தான்
அச்சந்தன் மாதேவிக் கீந்தான்றன் ஆமாத்தூர்
நிச்சல்[8] நினையார்தார் நெஞ்சமும் நெஞ்சமே. 10

ஆட லரவசைத்த ஆமாத்தூர் அம்மானைக்
கோட லிரும்புறவிற் கொச்சை வயத்தலைவன்
நாட லரியசீர் ஞானசம் பந்தன்றன்
பாட லிவைவல்லார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - சீகாமரம்

திருச்சிற்றம்பலம்

குன்ற வார்சிலை நாண்அ ராஅரி[1]
வாளி கூரெ[2]ரி காற்றின் மும்மதில்
வென்றவா றெங்ஙனே விடையேறும் வேதியனே
தென்ற லார்மணி மாட மாளிகை
சூளி கைக்கெதிர் நீண்ட பெண்ணை[3]மேல்
அன்றில்[4] வந்தணையும் ஆமாத்தூர் அம்மானே. 1

பரவி வானவர் தான வர்[5] பல
ருங்க லங்கிட வந்த கார்விடம்
வெருவ உண்டுகந்த அருளென்கொல் விண்ணவனே
கரவின் மாமணி பொன்கொ ழித்திழி

---

[6] கேளாச்செவிகளே - பெருமையில்லாத காதுகளே ஆகும். [7] புள் - கருடன். [8] தன் மாதேவி - தனது உமாதேவி; நிச்சல் - நித்தம். [1] அரி - திருமால். [2] கூர் - கூர்மை. [3] பெண்ணை - பனைமரம். [4] அன்றில் - ஒரு பறவை. [5] தானவர் - அசுரர்.

சந்து[6] காரகில் தந்து பம்பை[7] நீர்
அருவி வந்தலைக்கும் ஆமாத்தூர் அம்மானே. 2

நீண்ட வார்சடை தாழ நேரிழை[8]
பாட நீறுமெய் பூசி மாலயன்
மாண்ட[9] வார்சுடலை நடமாடும் மாண்பதுஎன்
பூண்ட கேழல் மருப்ப ராவிரி
கொன்றை வாள்வரி யாமை பூணென
ஆண்ட நாயகனே ஆமாத்தூர் அம்மானே. 3

சேலின் நேரன கண்ணி வெண்ணகை
மான்வி ழித்திரு மாதைப் பாகம்வைத்
தேல மாதவம்நீ முயல்கின்ற வேடமிதென்
பாலின் நேர்மொழி மங்கை மார்நட
மாடி யின்னிசை பாட நீள்பதி
ஆலை[10] சூழ்கழனி ஆமாத்தூர் அம்மானே. 4

தொண்டர் வந்து வணங்கி மாமலர்
தூவி நின்கழ லேத்து வாரவர்
உண்டியால் வருந்த இரங்காத தென்னைகொலாம்
வண்ட லார்கழ னிக்க லந்தும
லர்ந்த தாமரை மாதர் வாண்முகம்
அண்டவாணர் தொழும் ஆமாத்தூர் அம்மானே. 5

ஓதி யாரண மாய நுண்பொருள்
அன்று நால்வர்முன் கேட்க நன்னெறி
நீதி யாலநீழ லுரைக்கின்ற நீர்மையதென்[11]
சோதி யேசுட ரேசு ரும்பமர்
கொன்றை யாய்திரு நின்றி யூரு[12] றை
ஆதியே அரனே ஆமாத்தூர் அம்மானே. 6

மங்கை வாணுதன் மான்ம னத்திடை
வாடி யூட[13] ம ணங்க மழ்சடைக்
கங்கையா ளிருந்த கருத்தாவ தென்னை[14] கொலாம்

---

[6] சந்து - சந்தனமரங்கள். [7] பம்பை - ஒரு நதி. [8] நேரிழை-உமாதேவி. [9] மாண்ட-இறந்த; மாள் : பகுதி. [10] ஆலை - கரும்பாலை. [11] இவ்வடிகள் தட்சிணாமூர்த்த வடிவினைக் குறிக்கும். [12] திருநின்றியூர்-ஒரு சிவத்தலம். [13] ஊட - சிறுபிணக்குக்கொள்ள.

பங்க யமது வுண்டு வண்டிசை
பாட மாமயி லாட விண்முழ
வங்கையா லதிர்க்கும் ஆமாத்தூர் அம்மானே. 7

மின்ற டர்த்திடும் ஐம்பு லன்நிலை
யாதவண்ணம் நினைந்து ளத்திடை
வென்றடர்த் தொருபால் மடமாதை விரும்புதலென்
குன்றெ டுத்தநி சாச ரன்திரள்
தோளி ருபது தான்நெ ரிதர
அன்றடர்த் துகந்தாய் ஆமாத்தூர் அம்மானே. 8

செய்ய தாமரை மேலி ருந்தவ
னோடு மாலடி தேட நீள்முடி
வெய்ய ஆரழலாய் நிமிர்கின்ற வெற்றிமையென்[15]
தைய லாளொடு பிச்சைக் கிச்சை
தயங்கு தோலரை யார்த்த வேடங்கொண்
டைய மேற்றுகந்தாய் ஆமாத்தூர் அம்மானே. 9

புத்தர் புன்சமண் ஆதர் பொய்ம்மொழி
நூல்பி டித்தலர் தூற்ற நின்னடி
பத்தர் பேணநின்ற பரமாய பான்மையதென்
முத்தை வென்ற முறுவ லாளுமை
பங்க னென்றிமை யோர்ப ரவிடும்
அத்தனே அரியாய் ஆமாத்தூர் அம்மானே. 10

வாடல் வெண்டலை மாலை யார்த்தும
யங்கி ருள்ளெரி யேந்தி மாநடம்
ஆடல் மேயதென்னென் றுமாத்தூர் அம்மானைக்
கோடல் நாகம்[16] அரும்பு பைம்பொழிற்
கொச்சை யாரிறை ஞான சம்பந்தன்
பாடல் பத்தும்வல்லார் பரலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அழகியநாதர்; தேவி—அழகியநாயகி.

---

[14] கருத்தாய தென்னை என்றும் பாடம். [15] இவ்வடிகள் இலிங்கோற்பவ மூர்த்தியினைக் குறிப்பிடும். வேற்றுமையென் என்றும் பாடம். [16] கோடல் - வெண்காந்தள். நாகம் - புன்னை.

## 15. திருவண்ணாமலை *

### பண் - நட்டபாடை ** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்[1] மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழ அதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ணம் அறுமே. 1

தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடு தீண்டித்
தூமாமழை துறுவல்மிசை[2] சிறுநுண்துளி சிதற
ஆமாம்பிணை[3] யணையும்பொழில் அண்ணாமலை அண்ணல்
பூமாங்கழல் புனைசேவடி நினைவார்வினை யிலரே. 2

பீலிம்மயில் பெடையோடுறை பொழில்சூழ்கழை முத்தம்[4]
சூலிம்மணி தரைமேல்நிறை சொரியும்விரி சாரல்
ஆலிம்மழை தவழும்பொழில் அண்ணாமலை அண்ணல்
காலன்வலி தொலைசேவடி[5] தொழுவாரன புகழே. 3

உதிரும்மயி ரிடுவெண்டலை கலனாவுல கெல்லாம்
எதிரும்பலி யுணலாகவும்[6] எருதேறுவ தல்லால்
முதிருஞ்சடை இளவெண்பிறை முடிமேல்கொள அடிமேல்
அதிருங்கழல் அடிகட்கிடம் அண்ணாமலை யதுவே. 4

மரவஞ்சிலை தரளம்[7] மிகு மணியுந்துவெள் ளருவி
அரவஞ்செய முரவம்படும் அண்ணாமலை அண்ணல்

---

* 'அருணாசலம்' எனவும், 'அருணகிரி' எனவும், அண்ணாமலை எனவும் வழங்கப்பெறும். அண்ணாமலை - பிரம விஷ்ணுக்களுக்கு அண்ணாத (அகப்படாத) மலை; தொண்டர் அல்லாதவர்க்கு அறியமுடியாத மலை எனினுமாம். ** இப்பதிகம் மலையின் இயற்கை வருணனையைக் குறிப்பிடுகின்றது. [1] பெண்ணாகிய பெருமான் - திருசிராமலையில் ஒரு செட்டிப்பெண்ணுக்குத் தாயாகிய பெருமான்; தாயுமானவர். [2] கடுவன்-ஆண் குரங்கு; துறுவல் - திரட்சி. துறுவண்டிசை என்றும் பாடம். [3] ஆமா - காட்டுப்பசு. பிணை - மான். [4] கழைமுத்தம் - மூங்கிலில் பிறக்கும் முத்து. [5] தொலைசேவடி: வினைத்தொகை. [6] யுணவாகவும் என்றும் பாடம். [7] மரவம் - குங்குமமரம்; சிலை தரளம் - ஒலியையுடைய முத்தம்.

உரவஞ்சடை யுலவும்புனல் உடனாவதும் ஓரார்
குரவங்கமழ் நறுமென்குழல் உமைபுல்குதல் குணமே. 5
பெருகும்புனல் அண்ணாமலை பிறைசேர்கடல் நஞ்சைப்
பருகுந்தனை [8] துணிவார்பொடி அணிவாரது பருகிக்
கருகும்மிட றுடையார்கமழ் சடையார்கழல் பரவி
உருகும்மனம் உடையார்தமக் குறுநோயடை யாவே. 6
கரிகாலன குடர்கொள்வன கழுகாடிய காட்டில்
நரியாடிய நகுவெண்டலை யுதையுண்டவை யுருள
எரியாடிய இறைவர்க்கிடம் இனவண்டிசை முரல
அரியாடிய [9] கண்ணாளொடும் அண்ணாமலை யதுவே. 7
ஒளிறூபுலி யதளாடையன் உமையஞ்சுதல் பொருட்டால்
பிளிறூகுரல் மதவாரண வதனம்பிடித் துரித்து
வெளிறூபட விளையாடிய விகிர்தன் இரா வணனை
அளறூபட அடர்த்தானிடம் அண்ணாமலை யதுவே. 8
விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும் வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்புக ழோனும்
அளவாவணம் அழலாகிய அண்ணாமலை அண்ணல்
தளராமுலை முறுவல்உமை தலைவன் அடி சரணே. 9
வேர்வந்துற மாசூர்தர வெயில்நின்றுழல் வாரும் [10]
மார்பம்புதை மலிசீவர மறையாவரு வாரும்
ஆரம்பர்தம் உரைகொள்ளன்மின் அண்ணாமலை அண்ணல்
கூர்வெண்மழுப் படையான்நல்ல கழல்சேர்வது குணமே. 10
வெம்பு [11] ந்திய கதிரோன்ஒளி விலகும்விரி சாரல்
அம்புந்திமூ வெயிலெய்தவன் அண்ணாமலை யதனைக்
கொம்புந்துவ குயிலாலுவ [12] குளிர்காழியுள் ஞான
சம்பந்தன தமிழ்வல்லவர் அடிபேணுதல் தவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

[8] பருகுந்தனை - உண்ணுமளவு; பருகுதல் - இங்கு உண்ணுதல். [9] அரிஆடிய - செவ்வரிபரந்த. [10] வேர் - வேர்வை; வெயில்நின்று உழல்வார் - வெய்யிலில் நின்று உடலை வருத்தித் தவம் புரியும் சமணர். [11] வெம்பு - வெப்பம். [12] குயில் ஆலுவ - குயில்கள் கூவும்.

பண் - தக்கேசி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பூவார்மலர்கொண் டடியார்தொழுவார் புகழ்வார்வானோர்கள்
மூவார்புரங்கள் எரித்தஅன்று மூவர்க்கருள்செய்தார்[1]
தூமாமழைநின் றதிரவெருவித் தொறுவின் நிரையோடும்[2]
ஆமாம்பிணைவந் தணையுஞ்சாரல் அண்ணாமலையாரே. 1

மஞ்சை[3]ப் போழ்ந்த மதியஞ்சூடும் வானோர்பெருமானார்
நஞ்சைக்கண்டத் தடக்கும்அதுவும் நன்மைப்பொருள்போலும்
வெஞ்சொற்[4] பேசும் வேடர்மடவார் இதணம்[5] அதுஏறி
அஞ்சொற்கிளிகள் ஆயோஎன்னும் அண்ணாமலையாரே. 2

ஞானத்திரளாய் நின்றபெருமான்[6] நல்லஅடியார்மேல்
ஊனத்திரளை நீக்கும்அதுவும் உண்மைப்பொருள்போலும்
ஏனத்திரளோ டினமான்கரடி இழியும்இரவின்கண்
ஆனை[7]த்திரள்வந் தணையுஞ்சாரல் அண்ணாமலையாரே. 3

இழைத்தஇடையாள் உமையாள்பங்கர் இமையோர்பெருமானார்
தழைத்தசடையார் விடையொன்றேறித் தரியார்புரமெய்தார்
பிழைத்த[8] பிடியைக் காணாதோடிப் பெருங்கைமதவேழம்
அழைத்துத்திரிந்தங் குறங்குஞ்சாரல் அண்ணாமலையாரே. 4

உருவில்திகழும் உமையாள்பங்கர் இமையோர்பெருமானார்
செருவில்ஒருகால் வளையவூன்றிச் செந்தீயெழுவித்தார்
பருவிற்குறவர் புனத்திற்குவித்த பருமாமணிமுத்தம்
அருவித்திரளோ டிழியுஞ்சாரல் அண்ணாமலையாரே. 5

எனைத்தோரூழி யடியாரேத்த இமையோர்பெருமானார்
நினைத்துத்தொழுவார் பாவந்தீர்க்கும் நிமலருறைகோயில்

---

[1] இவ்வடி திரிபுரத்தை அழித்து அவ்வசுரர் மூவர்க்கும் அருள்புரிந்ததை அறிவிக்கும்; அருள்புரிந்த முறையினைச் சுந்தரர் பாடியருளிய திருப்புன்கூர் தேவாரம் பண் - தக்கேசி - 8-ம் செய்யுளில் காண்க. [2] தொறுவல்நிரையோடும் - மிக்ககூட்டத்தோடும். [3] மஞ்சை - மேகத்தை. [4] வெஞ்சொல் - கடுஞ்சொல். [5] இதணம் - காவற் பரண். [6] ஞானத்திளாய்நின்ற பெருமான் - இது கடவுள் ஞானத்தலைவர் என்பதை அறிவிக்கும். [7] ஆனை - யானை. [8] பிழைத்த - திசைதவறிச்சென்ற; பிடி - பெண்யானை.

கவணத்தமேதி[9] காணாதாயன் கைம்மேற்குழல்ஊத[10]
அவணத்துஞ்சென்று திரளுஞ்சாரல் அண்ணாமலையாரே. 6

வந்தித்திருக்கும்[11] அடியார்தங்கள் வருமேல்வினையோடு
பந்தித்திருந்த பாவந்தீர்க்கும் பரமனுறைகோயில்
முந்தியெழுந்த முழவி[12]ன் ஓசை முதுகல்வரைகள்மேல்
அந்திப்பிறைவந் தணையுஞ்சாரல் அண்ணாமலையாரே. 7

மறந்தான்கருதி வலியைநினைந்து மாறாயெடுத்தான்தோள்
நிறந்[13]தான்முரிய நெரியவூன்றி நிறைய அருள்செய்தார்
திறந்தான்காட்டி யருளாயென்று தேவரவர்வேண்ட
அறந்தான்காட்டி அருளிச்செய்தார் அண்ணாமலையாரே. 8

தேடிக்காணார் திருமால்பிரமன் தேவர்பெருமானை
மூடியோங்கி முதுவேய்[14] உகுத்த முத்தம்பலகொண்டு
கூடிக்குறவர் மடவார்குவித்துக் கொள்ளவம்மினென்
றாடிப்பாடி யளக்குஞ்சாரல் அண்ணாமலையாரே. 9

தட்டை[15] யிடுக்கித் தலையைப்பறித்துச் சமணேநின்றுண்ணும்
பிட்டர்சொல்லுக் கொள்ளவேண்டா பேணித்தொழுமின்கள்
வட்டமுலையாள் உமையாள்பங்கர் மன்னியுறைகோயில்
அட்டமாளித் திரள்வந்தணையும் அண்ணாமலையாரே. 10

அல்லாடரவம்[16] இயங்குஞ்சாரல் அண்ணாமலையாரை
நல்லார்[17]பரவப் படுவான்காழி ஞானசம்பந்தன்
சொல்லால்மலிந்த பாடலான பத்தும் இவைகற்று
வல்லாரெல்லாம் வானோர்வணங்க மன்னிவாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அண்ணாமலையார், அருணாசலேசுவரர்;
தேவி—உண்ணாமுலையம்மை.

---

[9] மேதி - எருமை. [10] கைம்மேல்குழல்ஊத - கையில் புல்லாங்குழலை வைத்துக்கொண்டு ஊத. [11] வந்தித்திருக்கும் - துதித்துக் கொண்டிருக்கும். [12] முழவு-மத்தளம். [13] நிறம் - மார்பு. [14] வேய்-மூங்கில். [15] தட்டை - தட்டுடை. [16] அல் ஆடு அரவம் - விஷம் பொருந்திய பாம்பு. [17] நல்லார்-இறை பணியில் நிற்கும் அடியவர்கள்.

## தொண்டை நாட்டில் உள்ள தலங்கள்

◦◦○○ ★ ○○◦◦

# 1. திருக்கச்சியேகம்பம்*

**பண் - மேகராகக்குறிஞ்சி**** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வெந்தவெண் பொடிப்பூசு மார்பின்விரி நூலொருபால் பொருந்தக்
கந்தமல்கு குழலியோடுங் கடிபொழிற் கச்சி தன்னுள்
அந்தமில் குணத்தா ரவர்போற்ற அணங்கினொ டாடல்புரி
எந்தை மேவிய ஏகம்பந் தொழுதேத்த இடர்கெடுமே. 1

வரந்திகழும் அவுணர் மாநகர்மூன் றுடன்மாய்ந் தவியச்
சரந்துரந் தெரிசெய்த தாழ்சடைச் சங்கரன் மேயஇடம்
குருந்தம் மல்லிகை கோங்குமா தவிநல்ல குராமரவம்
திருந்துபைம் பொழிற்கச்சி யேகம்பஞ் சேர இடர்கெடுமே. 2

வண்ணவெண் பொடிப்பூசு மார்பின் வரியர வம்புனைந்து
பெண்ணமர்ந் தெரியாடல் பேணிய பிஞ்ஞகன் மேயவிடம்
விண்ணமர் நெடுமாட மோங்கி விளங்கிய கச்சி[1] தன்னுள்
திண்ணமாம் பொழில்சூழ்ந்த ஏகம்பஞ் சேர இடர்கெடுமே. 3

தோலும்நா லுந்துதைந்த வரைமார்பிற் சுடலைவெண் ணீறணிந்து
காலன்மாள் வுறக்காலாற் காய்ந்த கடவுள் கருதுமிடம்
மாலைவெண் மதிதோயும் மாமதிற் கச்சி மாநகருள்
ஏலம்நாறிய சோலைசூழ் ஏகம்பம் ஏத்த இடர்கெடுமே. 4

தோடணிம் மலர்க்கொன்றை சேர்சடைத் தூமதி யம்புனைந்து
பாடல்நான் மறையாகப் பல்கணப் பேய்க ளவைசூழ

---

* 'காஞ்சிபுரம்' என வழங்கப்பெறும் (காஞ்சிபுரம்-பிரமதேவனால் விரும்பப்பட்ட நகரம். க - பிரமன்: அஞ்சுதல் - விரும்புதல்.) 'திருவேகம்பம்' என்றும் பாடம்; இறைவி பூசை செய்யும்போது கம்பையாறு பெருகி வரக்கண்டு, நடுங்கி இறைவனைத் தழுவிக் கொண்ட காரணத்தால் ஏகம்பம் எனப் பெயர் பெற்றது. (கம்பம்-நடுக்கம்.) ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்துபோயிற்று.
[1] மாடமோங்கு விளங்கிய கச்சி என்றும் பாடம். ஓங்கு கச்சி, விளங்கிய கச்சி எனத் தனித்தனிக் கூட்டுக. விளங்குதல்-(முத்தி நகரத்துட் சிறந்தது என்று) விளங்குதல்.

வாடல்வெண் டலையோ டனலேந்தி மகிழ்ந்துட னுடல்புரி
சேடர்சேர் கலிக்கச்சி யேகம்பஞ் சேர இடர்கெடுமே. 5

சாகம்[2] பொன் வரையாகத் தானவர் மும்மதில் சாயவெய்து
ஆகம்பெண் ணொருபாக மாக அரவொடு நூலணிந்து
மாகந்தோய் மணிமாட மாமதிற் கச்சி மாநகருள்
ஏகம்பத் துறையீசன் சேவடி யேத்த இடர்கெடுமே. 6 - 7

வாணிலா மதிபுல்கு செஞ்சடை வாளர வம்அணிந்து
நாணிடத் தினில்வாழ்க்கை பேணி நகுதலையிற் பலிதேர்ந்
தேணிலா அரக்கன்றன் நீள்முடி பத்தும் இறுத்தவனூர்
சேணுலாம் பொழிற்கச்சி யேகம்பஞ் சேர இடர்கெடுமே. 8

பிரமனுந் திருமாலுங் கைதொழப் பேரழ லாயபெம்மான்
அரவஞ் சேர்சடை யந்தணன் அணங்கினொ டமருமிடம்
கரவில்வண் கையினார்கள் வாழ்கலிக் கச்சி மாநகருள்
மரவஞ்[3] சூழ் பொழிலேகம் பந்தொழ வல்வினை மாய்ந்தறுமே. 9

குண்டுபட் டமண யவரொடுங் கூறைதம் மெய்போர்க்கும்
மிண்டர் கட்டிய கட்டுரை யவைகொண்டு விரும்பேன்மின்
விண்டவர் புரம்மூன்றும் வெங்கணை யொன்றினால் அவியக்[4]
கண்டவன் கலிக்கச்சி யேகம்பங் காண இடர்கெடுமே. 10

ஏரி[5] னார் பொழில்சூழ்ந்த கச்சி யேகம்பம் மேயவனைக்
காரினார் மணிமாட மோங்கு கழுமல நன்னகருள்
பாரினார் தமிழ்ஞான சம்பந்தன் பரவிய பத்தும்வல்லார்
சீரினார் புகழோங்கி விண்ணவ ரோடுஞ் சேர்பவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மறையானை மாசிலாப் புன்சடை மல்குவெண்
பிறையானைப் பெண்ணொடா ணாகிய பெம்மானை
இறையானை யேர்கொள்கச் சித்திரு வேகம்பத்
துறைவானை யல்லதுள் காதென துள்ளமே. 1

---

[2] சாபம் என்பதை நோக்கிச் சாகம் எனப்பட்டது. [3] மரவம் - குங்குமமரம். [4] அவிய - அழிய. [5] ஏர் - அழகு.

நொச்சி[1] யே வன்னிகொன் றைமதி கூவிளம்
உச்சியே புனைதல்வே டம்விடை யூர்தியான்
கச்சியே கம்பம்மே யகறைக் கண்டனை
நச்சியே தொழுமின்நும் மேல்வினை நையுமே. 2

பாராரு முழவமொந் தைகுழல் யாழொலி
சீராலே பாடலா டல்சிதை வில்லதோர்
ஏரார்பூங் கச்சியே கம்பனை யெம்மானைச்
சேராதார் இன்பமா யந்நெறி[2] சேராரே. 3

குன்றேய்க்கு நெடுவெண்மா டக்கொடி கூடிப்போய்
மின்றேய்க்கும் முகில்கள்தோ யும்வியன் கச்சியுள்[3]
மன்றேய்க்கு மல்குசீ ரான்மலி யேகம்பம்
சென்றேய்க்குஞ் சிந்தையார் மேல்வினை சேராவே. 4

சடையானைத் தலைகைபேந் திப்பலி தருவார்[4] தம்
கடையேபோய் மூன்றுங்கொண் டான்[5] கலிக் கச்சியுள்
புடையேபொன் மலருங்கம் பைக்கரை யேகம்பம்
உடையானை யல்லதுள் காதென துள்ளமே. 5

மழுவாளோ டெழில்கொள்சூ லப்படை வல்லார்தம்
கெழுவாளோ ரிமையாருச் சியுமை யாள்கங்கை
வழுவாமே மல்குசீ ரால்வள ரேகம்பம்
தொழுவாரே விழுமியார் மேல்வினை துன்னாவே. 6

விண்ணுளார் மறைகள்வே தம்விரித் தோதுவார்
கண்ணுளார் கழலின்வெல் வார்கரி காலனை
நண்ணுவா ரெழில்கொள்கச் சிநக ரேகம்பத்
தண்ணலா ராடுகின் றஅலங் காரம்மே. 7

தூயானைத் தூயவா யம்மறை யோதிய
வாயானை வாளரக் கன்வலி வாட்டிய

---

[1] நொச்சி - வெண்நொச்சி. [2] இன்பமாய நன்னெறி என்றும் பாடம்; இதனை இன்பமாய் நன்னெறி என்றும் பாடமோதலாம் என்பர். [3] இவ்வடிகள் உயர்வுநவிற்சி அணி ஆகும். [4] பலிதருவார்-பிச்சையிடும் பெண்கள். [5] மூன்று - வஸ்திரம், வளை, மேகலை ஆகிய மூன்றும்; மூன்றுங்கொன்றான் என்றும் பாடம்; மூன்று - நாணம், மடம், அச்சம் என மூன்று; பயிர்ப்புத்தீண்டப் பெறுமையின் ஒழிக்கப்பட்டது.

தீயானைத் தீதில்கச் சித்திரு வேகம்பம்
மேயானை மேவுவா ரென்றலை மேலாரே. 8

நாகம்பூண் ஏறதே றல்நறுங் கொன்றைதார்
பாகம்பெண் பலியுமேற் பர்மறை பாடுவர்
ஏகம்பம் மேவியா டுமிறை யிருவர்க்கும்
மாகம்பம் அறியும்வண் ணத்தவ னல்லனே. 9

போதியார் பிண்டியா ரென்றிவர் பொய்ந்நூலை
வாதியா வம்மினம் மாவெனுங் கச்சியுள்
ஆதியார் மேவியா டுந்திரு வேகம்பம்
நீதியால் தொழுமின்நும் மேல்வினை நில்லாவே. 10

அந்தண்பூங் கச்சியே கம்பனை யம்மானைக்
கந்தண்பூங் காழியூ ரன்கலிக் கோவையால்
சந்தமே பாடவல் லதமிழ் ஞானசம்
பந்தன்சொற் பாடியா டக்கெடும் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவிருக்குக்குறள்

பண் - கொல்லி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கருவார்[1] கச்சித், திருவேகம்பத்
தொருவாவென்ன, மருவாவினையே. 1

மதியார்கச்சி, நதியேகம்பம்
விதியாலேத்தப், பதியாவாரே. 2

கலியார்கச்சி, மலியேகம்பம்
பலியாற்[2] போற்ற, நலியாவினையே. 3

வரமார்கச்சிப், புரமேகம்பம்
பரவா[3] ஏத்த, விரவாவினையே. 4

படமார்கச்சி, இடமேகம்பத்
துடையாயென்ன, அடையாவினையே. 5

---

[1] கருவார் - அருட்கருவை எல்லாவுயிர்களிடத்தும் வைத்திருக்கும் அம்மையார்க்கிடமாகப் பொருந்திய; கருவினுள் நிறைந்த எனினுமாம். [2] பலியார் என்றும் பாடம். [3] பரவா-பரவித்துதித்து.

நலமார்கச்சி, நிலவேகம்பம்
குலவாவேத்தக், கலவாவினையே. 6

கரியின்உரியன், திருவேகம்பன்
பெரியபுரமூன், றெரிசெய்தானே. 7

இலங்கையரசைத், துலங்கவூன்றும்
நலங்கொள்கம்பன், இலங்குசரணே. 8

மறையோன்அரியும், அறியாஅனலன்[4]
நெறியேகம்பம்,[5] குறியால்தொழுமே. 9

பறியாத்தேரர்,[6] நெறியில்கச்சிச்
செறிகொள்கம்பம், குறுகுவோமே. 10

கொச்சைவேந்தன், கச்சிக்கம்பம்
மெச்சுஞ் சொல்லை, நச்சும்[7] புகழே. 11

திருச்சிற்றம்பலம்

---

## திருவியமகம்

பண் - பழம்பஞ்சுரம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாயுமால்விடை மேலொரு பாகனே[1] பாவைதன்னுரு மேலொருபாகனே, தூயவானவர் வேதத் துவனியே சோதிமா லெரி வேதத் துவனியே, ஆயுநன்பொருள் நுண்பொரு ளாதியே ஆலநீழல் அரும்பொரு ளாதியே, காயவின்மதன்[2] பட்டது கம்பமே கண்ணுதற்பர மற்கிடங் கம்பமே. 1

சடையணிந்ததும் வெண்டலை[3] மாலையே தம்முடம்பிலும் வெண்டலை மாலையே, படையிலங்கையிற் சூலம தென்பதே பரந் திலங்கையிற் சூலம தென்பதே, புடைபரப்பன[4] பூதகணங்களே

---

[4] அனலன் - அக்கினிவடிவினன். [5] கம்பம் - ஏகம்பம்: முதற்குறை. [6] பறியர்தேரர் என்றும் பாடம்; பறியர் - தலைமயிர் பறித்தலைச் செய்யுஞ் சமணர்கள். [7] கொச்சை வேந்தன் - ஞானசம்பந்தர்; கொச்சை-சீகாழி; மெச்சும்-புகழும்; நச்சும் - விரும்பும்.
[1] பாகன் - நடத்துபவன். [2] நீழல்வரும் என்றும் பாடம்; காயவன் மதன் என்றும் பாடம். [3] சடையணிந்தது வெண்டலை என்றும் பாடம். [4] புடைபரப்பின என்றும் பாடம்.

போற்றிசைப்பன பூதக ணங்களே, கடைகள்தோறும் இரப்பது மிச்சை[5]யே கம்பமேவி யிருப்பது மிச்சையே. 2

வெள்ளெருக்கொடு தும்பைமிலைச்சியே வேறுமுன்செலத் தும்பைமிலைச்சியே, அள்ளிநீறது[6] பூசுவ தாகமே யானமாசுண மூசுவ தாகமே, புள்ளியாடை யுடுப்ப துகத்துமே போனவூழி யுடுப்ப துகத்துமே, கள்ளுலாமலர்க் கம்ப மிருப்பதே காஞ்சிமா நகர்க் கம்ப மிருப்பதே. 3

முற்றலாமை யணிந்த முதல்வரே மூரியாமை யணிந்த முதல்வரே, பற்றிவாளர வாட்டும் பரிசரே பாலுநெய்யுகந் தாட்டும் பரிசரே, வற்றலோடு கலம்பலி தேர்வதே வானிரேடு கலம்பலி தேர்வதே, கற்றிலாமனங் கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 4

வேடனுகி விசையற் கருளியே வேலைநஞ்ச மிசையற் கருளியே, ஆடுபாம்பரை யார்த்த துடையதே யஞ்சுபூதமு மார்த்த துடையதே, கோடுவான்மதிக்[7] கண்ணி யழகிதே குற்றமின்மதிக் கண்ணி யழகிதே, காடுவாழ்பதி யாவது மும்மதே கம்பமாபதி யாவது மும்மதே. 5

இரும்புகைக்கொடி தங்கழல் கையதே இமயமாமகள் தங் கழல் கையதே, அரும்புமொய்த்த மலர்ப்பொறை தாங்கியே ஆழியான்றன் மலர்ப்பொறை தாங்கியே, பெரும்பகல்நட மாடுதல் செய்துமே பேதைமார் மனம் வாடுதல் செய்துமே, கரும்பு மொய்த்தெழு கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 6

முதிரமங்கை தவஞ்செய்த காலமே முன்புமங்கை தவஞ் செய்த காலமே, வெதிர்[8]களோடகில் சந்தமு ருட்டியே வேழமோ டகில் சந்த முருட்டியே, அதிரவாறு வரத்தழு வத்தொடே ஆன் நெய்ஆடு வரத்தழு வத்தொடே, கதிர்கொள்பூண்முலைக் கம்பம் இருப்பதே காஞ்சிமாநகர்க் கம்பம் இருப்பதே. 7

பண்டரக்க னெடுத்த பலத்தையே பாய்ந்தரக்க னெடுத்த பலத்தையே, கொண்டரக்கிய துங்கால் விரலையே கோளரக்கிய

---

[5] மச்சை - மித்தை, பொய்; இல்லாமையினல் இரப்பது என்பது கருத்து. [6] அள்ளுநீறது என்றும பாடம். [7] வாண்மதிக் என்றும் பாடம். [8] வெதிர் - மூங்கில்.

துங்கால் விரலையே, உண்டுழன்றது முண்டத் தலையிலே யுடுபதிக் கிட முண்டத் தலையிலே, கண்டநஞ்சம் அடக்கினை கம்பமே கட வுள்நீயிடங் கொண்டது கம்பமே. 8

தூணியான சுடர்விடு சோதியே சுத்தமான சுடர்விடு சோதியே, பேணியோடு பிரமப் பறவையே பித்தனை பிரமப் பறவையே, சேணினேடு கீழுழி திரிந்துமே சித்தமோடு கீழுழி திரிந்துமே, காணநின்றனர் உற்றது கம்பமே கடவுள்நீயிடம் உற்றது கம்பமே. 9

ஒருடம்பினை யீருரு வாகவே யுன்பொருட்டிற மீருரு வாகவே, ஆருமெய்தற் கரிது பெரிதுமே ஆற்றவெய்தற் கரிது[9] பெரிதுமே, தேரரும்மறி யாது திகைப்பரே சித்தமும்மறி யாது திகைப்பரே, கார்மிறத்தம ணர்க்கொரு கம்பமே கடவுள்நீயிடங் கொண்டது கம்பமே. 10

கந்தமார் பொழில் சூழ்தரு கம்பமே காதல்செய்பவர் தீர்த் திடுகம்பமே, புந்திசெய்து விரும்பிப் புகலியே பூசுரன்றன் விரும் பிப்புகலியே, அந்தமில்பொரு ளாயின கொண்டுமே அண்ணலின் பொருளாயின கொண்டுமே, பந்தன்இன்னியல் பாடிய பத்துமே பாடவல்லவ ராயின பத்துமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—ஏகாம்பரநாதர், பெரியகம்பர் ;
தேவி—ஏவலார்குழலி, காமாட்சியம்மை.

## 2. திருக்கச்சிநெறிக்காரைக்காடு *

பண் - பஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வாரணவு முலைமங்கை பங்கினராய் அங்கையினில்
போரணவு மழுவொன்றங் கேந்திவெண் பொடியணிவர்
காரணவு மணிமாடங் கடைநவின்ற கலிக்கச்சி
நீரணவு மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே. 1

---

[9] ஆற்றவெய்தற்கரிது என்றும் பாடம். * திருநெறிக்காரைக் காடு என்றும் பாடம் ; இங்குக் காரைவனம் இருத்தலின், 'காரைக் காடு' என வழங்குகிறது ; இது திருக்காலீசுரன்கோயில் எனவும் வழங்கப்பெறும்.

காருரும் மணிமிடற்ருர்[1] கரிகாடர் உடைதலைகொண்
டூரூரன் பலிக்குழல்வார் உழைமானின் உரியதளர்
தேரூரும் நெடுவீதிச் செழுங்கச்சி மாநகர்வாய்
நீரூரும் மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே. 2

கூறணிந்தார் கொடியிடையைக் குளிர்சடைமேல் இளமதியோ
டாறணிந்தார் ஆடரவம் பூண்டுகந்தார் ஆன்வெள்ளை
ஏறணிந்தார் கொடியதன்மேல் என்பணிந்தார் வரைமார்பில்
நீறணிந்தார் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 3

பிறைநவின்ற செஞ்சடைகள் பின்தாழப் பூதங்கள்
மறைநவின்ற பாடலோ டாடலராய் மழுவேந்திச்
சிறைநவின்ற வண்டினங்கள் தீங்கனிவாய்த் தேன்கதுவும்
நிறைநவின்ற கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 4

அன்ருலின் கீழிருந்தங் கறம்புரிந்த அருளாளர்[2]
குன்ருத வெஞ்சிலையிற் கோளரவ நாண்கொளுவி
ஒன்ருதார் புரம்மூன்றும் ஓங்கெரியில் வெந்தவிய
நின்ருரும் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 5

பன்மலர்கள் கொண்டடிக்கீழ் வானோர்கள் பணிந்திறைஞ்ச
நன்மையிலா வல்லவுணர் நகர்மூன்றும் ஒருநொடியில்
வின்மலையின் நாண்கொளுவி வெங்கணையா லெய்தழித்த
நின்மலனூர்[3] கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 6

புற்றிடைவாள் அரவினெடு புனைகொன்றை மதமத்தம்
எற்றெழியா அலைபுனலோ டிளமதியம் ஏந்துசடைப்
பெற்றுடையார் ஒருபாகம் பெண்ணுடையார் கண்ணமரும்
நெற்றியினூர் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 7

ஏழ்கடல்சூழ் தென்னிலங்கைக் கோமானை யெழில்வரைவாய்த்
தாழ்[4] விரலால் ஊன்றியதோர் தன்மையினூர் நன்மையினூர்
ஆழ்கிடங்குஞ் சூழ்வயலு மதில்புல்கி யழகமரும்
நீள்மறுகிற் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 8

---

[1] மிடற்றர் என்றும் பாடம். [2] கறமுரைத்தவருளாளர் என்றும் பாடம்; இவ்வடி தட்சிணுமூர்த்தியின் திருவுருவத்தைக் குறிப்பது. [3] நின்மலனூர் - பரிசுத்தமுடையவர். [4] தாள் என்றது தாழ் என எதுகைநோக்கித் திரிந்தது.

ஊண்டானும் ஒலிகடல்நஞ் சுடைதலையிற் பலிகொள்வர்
மாண்டார்தம் எலும்பணிவர் வரியரவோ டெழிலாமை
பூண்டாரும் ஓரிருவர் அறியாமைப் பொங்கெரியாய்
நீண்டாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 9

குண்டாடிச் சமண்படுவார் கூறைதனை மெய்போர்த்து
மிண்டாடித் திரிதருவார் உரைப்பனகள் மெய்யல்ல
வண்டாருங் குழலாளை வரையாகத் தொருபாகம்
கண்டாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 10

கண்ணாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டுறையும்
பெண்ணாருந் திருமேனிப் பெருமான தடிவாழ்த்தித்
தண்ணாரும் பொழிற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
பண்ணாருந் தமிழ்வல்லார் பரலோகத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—காரைத்திருநாதர்; தேவி—காரார்குழலி.

---

## 3. திருக்குரங்கணில்முட்டம்*

பண் - தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விழுநீர்மழு வாள்படை அண்ணல் விளங்கும்
கழுநீர்குவ ளைம்மல ரக்கயல் பாயும்
கொழுநீர்வயல் சூழ்ந்த குரங்கணில் முட்டம்
தொழுநீர்மையர்[1] தீதுறு துன்ப மிலரே. 1

விடைசேர்கொடி அண்ணல் விளங்குயர் மாடக்
கடைசேர்கரு மென்குளத் தோங்கிய காட்டில்[2]
குடையார்புனல் மல்கு குரங்கணில் முட்டம்
உடையானெனை யாளுடை யெந்தை பிரானே. 2

சூலப்படை யான்விடை யான்சுடு நீற்றான்
காலன்றனை ஆருயிர் வவ்விய காலன்

---

* இது குரங்கும் (வாலியும்) அணிலும் காகமும் பூசித்துப் பேறுபெற்றதலம்; முட்டம்-காகம். [1] தொழுநீர்மையர் - வணங்கும் தன்மையுடையோர். [2] குளம் - நெற்றி; குழல்தொங்கிய காட்டில் என்றும் பாடம்.

கோலப்பொழில் சூழ்ந்த குரங்கணில் முட்டத்
தேலங்கமழ் புன்சடை யெந்தை பிரானே. 3

வாடாவிரி கொன்றை வலத்தொரு காதில்
தோடார்குழை யான்நல பாலன நோக்கிக்
கூடாதன செய்த குரங்கணில் முட்டம்
ஆடாவரு வாரவ ரன்புடை யாரே. 4

இறையார்வளை யாளையொர் பாகத் தடக்கிக்
கறையார்மிடற் றான்கரி கீறிய[3] கையான்
குறையார்மதி சூடி குரங்கணில் முட்டத்
துறைவானெமை யாளுடை யொண்சுட ரானே. 5

பலவும்பய னுள்ளன பற்றும் ஒழிந்தோம்
கலவம்[4] மயில் காமுறு பேடையொ டாடிக்
குலவும்பொழில் சூழ்ந்த குரங்கணில் முட்டம்
நிலவும்பெரு மானடி நித்தல் நினைந்தே. 6

மாடார்மலர்க் கொன்றை வளர்சடை வைத்துத்
தோடார்குழை தானொரு காதில் இலங்கக்[5]
கூடார்மதி லெய்து குரங்கணில் முட்டத்
தாடாரர வம்மரை யார்த்தமர் வானே. 7

மையார்நிறம் மேனி யரக்கர்தங் கோனை
உய்யாவகை யாலடர்த் தின்னருள் செய்த
கொய்யார்மலர் சூடி குரங்கணில் முட்டம்
கையால்தொழ வார்வினை காண்ட லரிதே. 8

வெறி[6]யார்மலர்த் தாமரை யானொடு மாலும்
அறியாதசைந் தேத்தவோர் ஆரழ லாகும்
குறி[7]யால்நிமிர்ந் தான்றன் குரங்கணில் முட்டம்
நெறியால்தொழ வார்வினை காண்ட லரிதே.[8] 9

கழுவார்[9] துவ ராடை கலந்துமெய் போர்க்கும்
வழுவாச்சமண் சாக்கியர் வாக்கவை[10] கொள்ளேல்

---

[3] கரிகீறிய - யானையைக் கிழித்த. [4] கலவம் - தோகை. [5] காதினில் இலங்கக் என்றும் பாடம். [6] வெறி - வாசனை. [7] அழலாகுங்குறி - இலிங்கோற்பவ மூர்த்தி. [8] நிற்கிலாவே என்றும் பாடம். [9] கழுவார் - உடல் கழுவாதவர். [10] வாக்கவை - சொற்களை.

குழுமின்சடை யண்ணல் குரங்கணில் முட்டத்
தெழில்வெண்பிறை யானடி சேர்வ தியல்பே. 10

கல்லார்மதிற் காழியுள் ஞானசம் பந்தன்
கொல்லார்மழு வேந்தி குரங்கணில் முட்டம்
சொல்லார்தமிழ் மாலை செவிக்கினி தாக
வல்லார்[11] க்கெளி தாம்பிற வாவகை வீடே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வாலீச்சுவரர்; தேவி—இறையார்வளையம்மை.

---

## 4. திருமாகறல்

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள்[1] பாடல்விளை யாடல் அரவம், மங்குலொடு நீள்கொடிகள் மாடமலி நீடுபொழில் மாக றலுளான், கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர் திங்க ளணி செஞ்சடையினன், செங்கண்விடை யண்ணலடி சேர்பவர் கள் தீவினைகள் தீருமுடனே. 1

கலையின்ஒலி மங்கையர்கள் பாடலொலி யாடல்கவின் எய்தி யழகார், மலையின்நிகர் மாடமுயர் நீள்கொடிகள் வீசுமலி[2] மாக றலுளான், இலையின்மலி வேல்நுனைய சூலம்வலன் ஏந்தியெரி புன்சடையினுள், அலைகொள்புன லேந்துபெரு மானடியை யேத்த வினை யகலுமிகவே. 2

காலையொடு துந்துபி[3] கள் சங்குகுழல் யாழ்முழவு காமருவுசீர், மாலைவழி பாடுசெய்து மாதவர்கள் ஏத்திமகிழ் மாகறலுளான், தோலையுடை பேணியதன் மேலொர்சுடர் நாகமசை யாஅழகி தாப், பாலையன நீறுபுனை வானடியை யேத்தவினை பறையு முடனே. 3

இங்குகதிர் முத்தினொடு பொன்மணிகள் உந்தியெழில் மெய் யுளுடனே, மங்கையரும் மைந்தர்களும் மன்னுபுன லாடிமகிழ்

---

[11] செவிக்கினிதாகவல்லார் - காதினால் (அன்போடு) கேட்டவர்.
[1] கடைசியர்கள் - உழத்தியர்கள். [2] வீசுமொலி என்றும் பாடம்.
[3] துந்துபி - ஒருவாத்தியம்.

மாகறலுளான், கொங்குவளர்கொன்றை குளிர்திங்கணி செஞ்சடையினனடியையே, நுங்கள்வினை தீரமிக ஏத்திவழி பாடுநுக ராளழுமினே. 4

துஞ்சுநறு நீலமிருள் நீங்க[4] வொளி தோன்றுமது வார்கழனி வாய், மஞ்சு[5] மலி பூம்பொழிலின் மயில்கள்நட மாடல்மலி[6] மாக றலுளான், வஞ்சமத யானையுரி போர்த்துமகிழ் வானொர்மழு வாளன்வளரும், நஞ்சமிருள் கண்டமுடை நாதனடி யாரைநலி யாவினைகளே. 5

மன்னுமறை யோர்களொடு பால்படிம[7] மாதவர்கள் கூடியுடனாய், இன்னவகை யாலினிதி றைஞ்சியிமை யோரிலெழு மாகற லுளான், மின்னைவிரி புன்சடையின் மேல்மலர்கள் கங்கையொடு திங்களெனவே, உன்னுமவர் தொல்வினைகள் ஒல்கவுயர் வானுலகம் ஏறலெளிதே. 6

வெய்யவினை நெறிகள்செல வந்தணையும் மேல்வினைகள் வீட்டலுறுவீர், மைகொள்விரி கானல்மது வார்கழனி மாகறலு ளான்எழிலதார், கையகரி கால்வரையின் மேலதுரி தோலுடைய மேனியழகார், ஐயனடி சேர்பவரை அஞ்சியடை யாவினைகள் அகலுமிகவே. 7

தூசுதுகில் நீள்கொடிகள் மேகமொடு தோய்வனபொன்[8] மாடமிசையே, மாசுபடு செய்கைமிக மாதவர்கள் ஓதிமலி மாகற லுளான், பாசுபத விச்சைவரி நச்சரவு கச்சையுடை பேணியழ கார், பூசுபொடி யீசனென ஏத்தவினை நிற்றலில போகுமுடனே. 8

தூயவிரி தாமரைகள் நெய்தல்கழு நீர்குவளை தோன்றமது வுண்,[9] பாயவரி வண்டுபல பண்முரலும் ஓசைபயில் மாகற லுளான், சாயவிர லூன்றியஇ ராவணன தன்மைகெட நின்ற பெருமான், ஆயபுக ழேத்தும்அடி யார்கள்வினை யாயினவும் அகல்வதெளிதே. 9

காலினல பைங்கழல்கள் நீள்முடியின் மேலுணர்வு காமுற வினார்,[10] மாலுமல ரானும்அறி யாமையெரி யாகியுயர் மாகற

---

[4] இங்க என்றும் பாடம். [5] மஞ்சு - மேகம். [6] மாடமலி என்றும் பாடம். [7] படிமம்-பரிசுத்தம். [8] தோய்வனபோல் என்றும் பாடம். [9] மருவுண் என்றும் பாடம். [10] காமுறவினால் என்றும் பாடம்.

லுளான், நாலுமெரி தோலுமுரி மாமணிய நாகமொடு கூடியுட ளுய், ஆலும்விடை யூர்தியுடை யடிகளடி யாரையடை யாவினை களே. 10

கடைகொள்நெடு மாடமிக வோங்குகமழ் வீதிமலி காழியவர் கோன், அடையும்வகை யாற்பரவி யரனையடி கூடுசம் பந்தன் உரையால், மடைகொள்[11]புன லோடுவயல் கூடுபொழில் மாகறலு ளான்அடியையே, உடையதமிழ் பத்துமுணர் வாரவர்கள் தொல் வினைகள் ஒல்குமுடனே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அடைக்கலங்காத்தநாதர் ; தேவி—புவனநாயகி.

---

## 5. திருவோத்தூர்*

**பண் - பழந்தக்கராகம்**** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி
ஏத்தா தாரில்லை யெண்ணுங்கால்
ஓத்தூர் மேய வொளிமழு வாள் அங்கைக்
கூத்தீ ரும்ம குணங்களே. 1

இடையீர் போகா இளமுலை யாளையோர்
புடையீ ரேபுள்ளி மானுரி
உடையீ ரேயும்மை யேத்துதும் ஓத்தூர்ச்
சடையீ ரேயும தாளே. 2

உள்வேர் போல நொடிமையி னார்திறம்
கொள்வீ ரல்குலோ[1]ர் கோவணம்
ஒள்வா ழைக்கனி தேன்சொரி யோத்தூர்க்
கள்வீ ரேயும காதலே. 3

---

[11] மடைகள் என்றும் பாடம். * இறைவன் வேதத்தின் உட்பொருளை முனிவர்களுக்கும், தேவர்களுக்கும் அருளிய காரணத்தால் 'ஓத்தூர்' எனப் பெயர் பெற்றது; ஓத்து - வேதம்; இஃது 'அனகாவூர்' என வழங்கப்பெறும். ** இப்பதிகம் ஆண்பனையைப் பெண்பனையாக்கிய தாகும். [1] அல்குல் - அரை.

தோட்ட ரேதுத்தி[2] யைந்தலை நாகத்தை
ஆட்ட ரேயடி யார்வினை[3]
ஓட்ட ரேயும்மை யேத்துதும்[4] ஓத்தூர்
நாட்ட ரேயருள் நல்குமே. 4

குழையார் காதீர்[5] கொடுமழு வாட்படை
உழையாள் வீர்திரு வோத்தூர்
பிழையா வண்ணங்கள் பாடிநின் றாடுவார்
அழையா மேயருள் நல்குமே. 5

மிக்கார் வந்து விரும்பிப் பலியிடத்
தக்கார் தம்மக்க ளீரென்[6]
றுட்கா தாருள ரோதிரு வோத்தூர்
நக்கீ ரேயருள் நல்குமே. 6

தாதார் கொன்றை தயங்கு முடியுடை
நாதா என்று நலம்புகழ்ந்
தோதா தாருள ரோதிரு வோத்தூர்
ஆதி ரேயருள் நல்குமே. 7

என்று நிம்மலை யென்ற அரக்கனை
வென்றார் போலும் விரலினால்
ஒன்றார் மும்மதி லெய்தவ னோத்தூர்
என்றார் மேல்வினை யேகுமே. 8

நன்று நான்மறை யானொடு மாலுமாய்ச்
சென்றார் போலுந் திசையெலாம்
ஒன்றா யொள்ளெரி யாய்மிக வோத்தூர்
நின்றீ ரே[7] யுமை நேடியே. 9

கார மண்கலிங் கத்[8] துவ ராடையர்
தேரர் சொல்லவை தேறன்மின்
ஓரம் பாலெயில் எய்தவ னோத்தூர்ச்
சீர வன்கழல் சேர்மினே. 10

---

[2] துத்தி-புள்ளி. [3] யடியார் வினையை என்றும் பாடம். [4] யுமை யேத்துதும் என்றும் பாடம். [5] காதா என்றும் பாடம். [6] தம்மடிகளீரென் என்றும், தம்மடியிர்களென் என்றும், தம்மகளீரென் என்றும் பாடம். [7] நின்றாரே என்றும் பாடம். [8] கலிங்கம்-ஆடை.

குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்[9]
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்பு கலியுள் ஞானசம்பந் தன்சொல்
விரும்பு வார்வினை வீடே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வேதநாதர்; தேவி—இளமுலைநாயகி.

---

## 6. திருவல்லம்*

**பண் - வியாழக்குறிஞ்சி**** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

எரித்தவன் முப்புரம் எரியின் மூழ்கத்
தரித்தவன் கங்கையைத் தாழ்சடைமேல்
விரித்தவன் வேதங்கள் வேறு வேறு
தெரித்தவன்[1] உறைவிடந் திருவல் லமே. 1

தாயவன்[2] உலகுக்குத் தன்னொப் பிலாத்
தூயவன் தூமதி சூடி யெல்லாம்
ஆயவன் அமரர்க்கும் முனிவர் கட்கும்
சேயவன் உறைவிடந் திருவல் லமே. 2

பார்த்தவன் காமனைப் பண்பழியப்
போர்த்தவன் போதகத்[3] தின்உரிவை
ஆர்த்தவன் நான்முகன் தலையை யன்று
சேர்த்தவன் உறைவிடந் திருவல் லமே. 3

கொய்தஅம் மலரடி கூடு வார்தம்
மைதவழ் திருமகள் வணங்க வைத்துப்
பெய்தவன் பெருமழை யுலகம் உய்யச்
செய்தவன் உறைவிடந் திருவல் லமே. 4

---

[9] இவ்வடி ஆண்பனைகள் எல்லாம் பெண்பனைகளாகிக் காய்த்தன என்பதை அறிவிக்கும். * திருவலம் என வழங்கப்பெறும். ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1] தெரித்தவன் - சொன்னவன். [2] தாயவன் - தாய் போன்றவன்; எல்லாப் பொருளிலும் தாவியுடன் இருந்தவன். [3] போதகம் - யானை.

சார்ந்தவர்க் கின்பங்கள் தழைக்கும் வண்ணம்
நேர்ந்தவன் நேரிழை யோடுங் கூடித்
தேர்ந்தவர் தேடுவார் தேடச் செய்தே
சேர்ந்தவன் உறைவிடந் திருவல் லமே. 5

பதைத்தெழு காலனைப் பாதம் ஒன்றால்
உதைத்தெழு மாமுனிக் குண்மை நின்று
விதிர்த்தெழு[4] தக்கன்றன் வேள்வியன்று
சிதைத்தவன் உறைவிடந் திருவல் லமே. 6 - 7

இகழ்ந்தரு வரையினை யெடுக்க லுற்றாங்
ககழ்ந்தவல் அரக்கனை யடர்த்த பாதம்
நிகழ்ந்தவர் நேடுவார் நேடச் செய்தே
திகழ்ந்தவன் உறைவிடந் திருவல் லமே. 8

பெரியவன் சிறியவர் சிந்தை செய்ய
அரியவன்[5] அருமறை யங்க மானான்
கரியவன் நான்முகன் காண வொண்ணாத்
தெரியவன் வளநகர்[6] திருவல் லமே. 9

அன்றிய அமணர்கள் சாக்கி யர்கள்
குன்றிய அறவுரை கூறா வண்ணம்
வென்றவன் புலனைந்தும் விளங்க எங்கும்
சென்றவன் உறைவிடந் திருவல் லமே. 10

கற்றவர் திருவல்லங் கண்டு சென்று
நற்றமிழ் ஞானசம் பந்தன் சொன்ன
குற்றமில் செந்தமிழ் கூற வல்லார்
பற்றுவர் ஈசன்பொற் பாதங்களே.[7] 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வல்லநாதர்; தேவி—வல்லாம்பிகை.

---

[4] நின்றவ-விதிர்த்தெழு என்றும், நின்ற-அதிர்த்தெழு என்றும், நின்றாங் - கதிர்த்தெழு என்றும் பாடம். [5] அரியவன் - அருமையானவன். [6] தெரியவன் உறைவிடம் என்றும் பாடம். [7] இவ் வடிகள் தேவாரம் ஓதும் பயனை அறிவிக்கும்.

## 7. திருமாற்பேறு*

**பண் - பழந்தக்கராகம்**** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஊறி யார்தரு நஞ்சினை யுண்டுமை
நீறு சேர்திரு மேனியர்
சேறு சேர்வயல் தென்திரு மாற்பேற்றின்
மாறி லாமணி கண்டரே.[1] 1

தொடையார் மாமலர் கொண்டிரு போதும்மை
அடைவா ராமடி கள்ளென
மடையார் நீர்மல்கு மன்னிய மாற்பே
றுடையீ ரேயுமை யுள்கியே. 2

பையா ரும்அர வங்கொடு ஆட்டிய
கையா னென்று வணங்குவர்
மையார் நஞ்சுண்டு மாற்பேற் றிருக்கின்ற
ஐயா நின்னடி யார்களே. 3

சால[2] மாமலர் கொண்டு சரணென்று
மேலை யார்கள் விரும்புவர்
மாலி னூர்[3] வழி பாடுசெய் மாற்பேற்று
நீல மார்கண்ட நின்னையே. 4

மாறி லாமணி யேயென்று வானவர்
ஏற வேமிக ஏத்துவர்
கூற னேகுல வுந்திரு மாற்பேற்றின்
நீற னேயென்று நின்னையே. 5

உரையா தாரில்லை யொன்றும்நின் தன்மையைப்
பரவா தாரில்லை நாள்களும்
திரையார் பாலி[4]யின் தென்கரை மாற்பேற்
றரையா னேயருள் நல்கிடே. 6 - 7

---

* திருமால் சக்கரம் பெறவேண்டித் தமது ஒருகண்ணைத் தோண்டி அருச்சித்துப் பேறுபெற்றமையால் இப்பெயர் பெற்றது. ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்துபோயிற்று. [1] மணிகண்டர் - நீலகண்டர். [2] சால - மிகுதி: உரிச்சொல். [3] மாலினூர் - திருமால். [4] பாலி - பாலாறு.

அரச ளிக்கும் அரக்கன் அவன்றனை
உரைகெ டுத்தவன் ஒல்கிட
வரமி குத்தஎம் மாற்பேற் றடிகளைப்
பரவி டக்கெடும் பாவமே. 8

இருவர் தேவருந் தேடித் திரிந்தினி [5]
ஒருவ ராலறி வொண்ணிலன் [6]
மருவு நீள்கழல் மாற்பேற் றடிகளைப்
பரவு வார்வினை பாறுமே.[7] 9

தூசு போர்த்துழல் வார்கையில் துற்று [8] ணும்
நீசர் தம்உரை கொள்ளலும் [9]
தேசம் மல்கிய தென்திரு மாற்பேற்றின் [10]
ஈச னென்றெடுத் தேத்துமே. 10

மன்னி மாலொடு சோமன் பணிசெயும் [11]
மன்னும் மாற்பேற் றடிகளை
மன்னு காழியுள் ஞானசம்பந் தன்சொல்
பன்ன வேவினை பாறுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

**பண் - வியாழக்குறிஞ்சி*** [1ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

குருந்தவன் குருகவன் கூர்மையவன்
பெருந்தகை பெண்ணவன் ஆணுமவன்
கருந்தடம் மலர்க்கண்ணி காதல்செய்யும்
மருந்தவன் [1] வளநகர் மாற்பேறே. 1

பாற [2] ணி வெண்டலை கையிலேந்தி
வேறணி பலிகொளும் வேட்கையனாய்

---

[5] திரிந்ததில் என்றும் பாடம். [6] லறிவுண்டிலன் என்றும், லறியுண்டிலன் என்றும் பாடம். [7] பாவிடக் கெடும்பாவமே என்றும் பாடம். [8] துற்று - உணவு. [9] கொள்ளலும் என்றும் பாடம். [10] மாற்பேற்ற என்றும் பாடம். [11] இவ்வடி திருமால், சந்திரன் இவர்கள் பூசித்துப் பேறுபெற்றதை அறிவிக்கும். * இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் மறைந்துபோயிற்று. [1] மருந்தவன் - அமிர்தம் போன்றவன். [2] பாறு - பருந்து.

நீறணிந் துமையொரு பாகம்வைத்த
மாறிலி வளநகர் மாற்பேறே. 2

கருவுடை யாருல கங்கள்வேவச்
செருவிடை யேறியுஞ் சென்றுநின் [3]
றுருவுடை யாளுமை யாளுந்தானும்
மருவிய வளநகர் மாற்பேறே. 3

தலையவன் தலையணி மாலைபூண்டு
கொலைநவில் கூற்றினைக் கொன்றுகந்தான்
கலை [4] நவின் றான்கயி லாயம் என்னும்
மலையவன் வளநகர் மாற்பேறே. 4

துறையவன் தொழிலவன் தொல்லுயிர்க்கும்
பிறையணி சடைமுடிப் பெண்ணொர்பாகன்
கறையணி மிடற்றண்ணல் காலற்செற்ற
மறையவன் வளநகர் மாற்பேறே. 5

பெண்ணினல் லாளையொர் பாகம்வைத்துக்
கண்ணினுற் காமனைக் காய்ந்தவன்றன்
விண்ணவர் தானவர் முனிவரொடு
மண்ணவர் வணங்குநன் மாற்பேறே. 6 - 7

தீதிலா மலையெடுத் தவ்வரக்கன் [5]
நீதியால் வேதகீ தங்கள்பாட
ஆதியா னாகிய அண்ணல் எங்கள்
மாதிதன் [6] வளநகர் மாற்பேறே. 8

செய்யதண் தாமரைக் கண்ணனொடும்
கொய்யணி நறுமலர் மேலயனும்
ஐயன்நன் சேவடி யதனையுள்க
மையல்செய் வளநகர் மாற்பேறே. 9

குளித்துணா அமணர்குண் டாக்கரென்றும் [7]
களித்துநன் கழலடி காணலுற்றார்
முளைத்தவெண் மதியினொ டரவஞ்சென்னி
வளைத்தவன் வளநகர் மாற்பேறே. 10

---

[3] யேறி முன்சென்று நின்று என்றும் பாடம். [4] கலை - கலை ஞானம். [5] யெடுத்தலை யரக்கன் என்றும் பாடம். [6] மாதிகன் என்றும் பாடம். [7] வமணர்கள் குண்டரென்றும் என்றும் பாடம்.

அந்தமில் ஞானசம் பந்தன்நல்ல
செந்திசை[8] பாடல்செய் மாற்பேர்றைச்
சந்தம்இன் றமிழ்கள்கொண் டேத்தவல்லார்
எந்தைதன் கழலடி யெய்துவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மால்வணங்கீசர், மணிகண்டேசர்;
தேவி—கருணைநாயகி, அஞ்சனாட்சியம்மை.

---

## 8. திருஊறல்*

பண் - வியாழக்குறிஞ்சி** [ ]-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மாறில் அவுணர்அரணம் அவைமாயவோர் வெங்கணையாலன்று
நீறெழ எய்தஎங்கள் நிமலன் இடம்வினவில்
தேறல்[1] இரும்பொழிலுந் திகழ்செங்கயல் பாய்வயலுஞ் சூழ்ந்த
ஊறல் அமர்ந்தபிரான் ஒலியார்கழல் உள்குதுமே. 1

மத்த மதக்கரியை மலையான்மகள் அஞ்ச அன்று கையால்
மெத்த உரித்தஎங்கள் விமலன் விரும்புமிடம்
தேர்த்தல நும்பொழில்சூழ் வயல்சேர்ந்தொளிர் நீலம்[2]நாளுந் நயனம்
ஒத்தல நுங்கழனித் திருவூறலை உள்குதுமே. 2

ஏன மருப்பினொடும் எழிலாமையும் பூண்டழகார் நன்றும்[3]
கானமர் மான்மறிக்கைக் கடவுள் கருதுமிடம்
வான மதிதடவும் வளர்சோலைகள் சூழ்ந்தழகார் நம்மை
ஊனம்[4] அறுத்தபிரான் திருவூறலை உள்குதுமே. 3

---

[8] செந்திசை - செந்துவாகிய இசை: இருபெயரொட்டு. செந்து - ஓசை; இசை. * 'தக்கோலம்' என வழங்கப்பெறும்; இத்தலத்தில் திருநந்திதேவரின் வாயிலிருந்து தண்ணீர் எப்பொழுதும் விழுந்துகொண்டிருத்தலால் 'திருஊறல்' எனப் பெயர் பெற்றது. ** இப்பதிகத்தில் 6, 7-ம் செய்யுட்கள் சிதைந்து போயின. [1] தேறல் - தேன். [2] நீலம் - நீலோற்பலம். [3] நன்றும் கருதுமிடம் என்க; நன்றும் - பெரிதும்: 'நன்று பெரிதாகும்' என்பது தொல்காப்பியம். [4] மான்மறி-கலைமான்; ஊனம் - பிறவி.

நெய்யணி மூவிலைவேல் நிறைவெண்மழு வும்அனலும் அன்று
கையணி கொள்கையினான் கடவுள் இடம்வினவில்
மையணி கண்மடவார் பலர்வந் திறைஞ்சமன்னி நம்மை
உய்யும் வகைபுரிந்தான் திருவூறலை உள்குதுமே. 4

எண்டிசை யோர்மகிழ எழில்மாலையும் போனகமும் பண்டு
சண்டி[5] தொழஅளித்தான் அவன்தாழும்[6] இடம்வினவில்
கொண்டல்கள் தங்குபொழிற்குளிர்பொய்கைகள்சூழ்ந்து நஞ்சை
உண்டபி ரான்அமருந் திருவூறலை உள்குதுமே. 5 - 7

கறுத்த[7] மனத்தினொடுங் கடுங்காலன்வந் தெய்துதலுங் கலங்கி
மறுக்குறும் மாணிக்கருள மகிழ்ந்தா னிடம்வினவில்
செறுத்தெழு வாளரக்கன் சிரந்தோளும் மெய்யுந்நெரிய அன்று
ஒறுத்தருள் செய்தபிரான் திருவூறலை உள்குதுமே. 8

நீரின் மிசைத்துயின்றோன் நிறைநான் முகனும்அறியா தன்று
தேரும் வகைநிமிர்ந்தான் அவன்[8]சேரும் இடம்வினவில்
பாரின் மிசையடியார் பலர்வந் திறைஞ்சமகிழ்ந் தாகம்
ஊரும்[9] அரவசைத்தான் திருவூறலை உள்குதுமே. 9

பொன்னியல் சீவரத்தார் புளித்தட்டையர் மோட்டமணர் குண்டர்
என்னு மிவர்க்கருளா ஈசனிடம் வினவில்
தென்னென[10] வண்டினங்கள் செறியார்பொழில் சூழ்ந்தழகார் தன்னை
உன்ன வினைகெடுப்பான் திருவூறலை உள்குதுமே. 10

கோட லிரும்புறவிற் கொடிமாடக் கொச்சையர்மன் மெச்ச
ஓடு புனல்சடைமேற் கரந்தான் திருவூறல்
நாட லரும்புகழான் மிகுஞானசம் பந்தன்சொன்ன நல்ல
பாடல்கள் பத்தும்வல்லார் பரலோகத் திருப்பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—உமாபதி ; தேவி—உமையம்மை.

---

[5] போனகம் - நைவேத்தியம் ; உணவு ; சண்டி-சண்டேசுவரர். [6] தாழ்தல் - தங்குதல், விரும்புதல். [7] கறுத்த - கோபங்கொண்ட. [8] நிமிர்ந்தான் அவன் - அக்கினிப் பிழம்பாய் நின்றவனாகிய சிவபெருமான். [9] ஆகம் ஊரும் - மார்பினால் நகரும். [10] தென்னென - ஒலிக் குறிப்பு.

# 9. திருஇலம்பையங்கோட்டூர்*

பண் - குறிஞ்சி ** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மலையினார்பருப்பதம் துருத்தி[1] மாற்பேறு மாசிலாச்சீர் மறைக்காடு நெய்த்தானம், நிலையினான்எனதுரை தனதுரையாக[2] நீறணிந்தேறுகந் தேறிய நிமலன், கலையினார்மடப்பிணை துணையொடுந்துயிலக் கானலம்பெடைபுல்கிக் கணமயிலாலும், இலையினார்பைம்பொழில் இலம்பையங்கோட்டூர் இருக்கையாப்பேணியென் எழில்கொள்வதியல்பே. 1

திருமலர்க்கொன்றையான் நின்றியூர்மேயான் தேவர்கள் தலைமகன் திருக்கழிப்பாலை, நிருமலன்எனதுரை தனதுரையாக நீறணிந்தேறுகந் தேறிய நிமலன், கருமலர்க்கமழ்சுனை நீள்மலர்க் குவளை கதிர்முலையிளையவர் மதிமுகத்துலவும், இருமலர்[3]த் தண்பொய்கை இலம்பையங்கோட்டூர் இருக்கையாப்பேணியென் எழில்கொள்வதியல்பே. 2

பாலனும்விருத்தனும் பசுபதிதானும் பண்டுவெங்கூற்றுதைத் தடியவர்க்கருளும், காலனும்எனதுரை தனதுரையாகக் கனலெரி அங்கையில் ஏந்தியகடவுள், நீலமாமலர்ச்சுனை வண்டுபண்செய்ய நீர்மலர்க்குவளைகள் தாதுவிண்டோங்கும்,[4] ஏலம்நாறும்பொழில் இலம்பையங்கோட்டூர் இருக்கையாப்பேணியென் எழில்கொள்வதியல்பே. 3

---

* திருவிலம்பயங்கோட்டூர் என்றும் பாடம்; செய்யுட்களும் அவ்வாறே. ** இப்பதிகம் 1 முதல் 10 வரை அகப்பொருள் பற்றியது; இது காமம்மிக்க கழிபடர்கிளவி ஆகும். [1] துருத்தி - குத்தாலம். [2] பேயினால் பிடிக்கப்பட்டவன் வாய்ச்சொற்களெல்லாம் பேயின் சொற்களே அன்றி அவன் சொற்கள் ஆகாவாறு போலச் சிவபெருமானால் அதிட்டிக்கப்பட்ட தான் கூறும் வாக்குக்கள் எல்லாம் அச்சிவபெருமான் வாக்குக்களே அன்றித் தன் வாக்கு ஆகாமையை அறிவிக்கும் பொருட்டு, 'எனதுரை தனதுரையாக நீறணிந்தேறுகந் தேறிய நிமலன்' என்றார் ஞானசம்பந்தர்; இது, தேவாரம் பதிவாக்கு என்பதை வலியுறுத்தும் சான்று. [3] இருமலர் - செந்தாமரைப்பூ, வெண்டாமரைப்பூ. [4] விண்டேங்கும் என்றும், விண்டெங்கும் என்றும் பாடம்.

உளங்கொள்வார்உச்சியார்[5] கச்சியேகம்பன் ஒற்றியூருறையும்
அண்ணாமலை யண்ணல், விளம்புவான்எனதுரை தனதுரையாக
வெள்ளநீர்விரிசடைத் தாங்கியவிமலன், குளம்புறக்கலித்துள மலை
களுஞ்சிலம்பக் கொழுங்கொடியெழுந்தெங்குங் கூவிளங்
கொள்ள, இளம்பிறை தவழ்பொழில் இலம்பையங்கோட்டூர்
இருக்கையாப்பேணியென் எழில்கொள்வதியல்பே. 4

தேனுமாய்அமுதுமாய்த் தெய்வமுந்தானாய்த் தீயொடுநீருடன்
வாயுவாந்தெரியில், வானுமாம்எனதுரை தனதுரையாக வரிஅரா
அரைக்கசைத் துழிதருமைந்தன், கானமான்வெருவுறக் கருவிர
லூகங்[6] கடுவனோடுகளுமூர் கற்கடுஞ்சாரல், ஏனமான்உழிதரும்
இலம்பையங்கோட்டூர் இருக்கையாப்பேணியென் எழில்கொள்வ
தியல்பே. 5

மனமுலாம் அடியவர்க்[7] கருள்புரிகின்ற வகையலாற்பலிதிரிந்
துண்பிலான்மற்றோர், தனமிலான்எனதுரை தனதுரையாகத் தாழ்
சடையிளமதி தாங்கியதலைவன், புனமெலாம்அருவிகள் இருவி
சேர்முத்தம் பொன்னொடுமணிகொழித் தீண்டிவந்தெங்கும், இன
மெலாம் அடைகரை இலம்பையங்கோட்டூர் இருக்கையாப்பேணி
யென் எழில்கொள்வதியல்பே. 6

நீருளான் தீயுளான் அந்தரத்துள்ளான் நினைப்பவர்மனத்துளான்
நித்தமாஏத்தும், ஊருளான் எனதுரை தனதுரையாக ஒற்றை வெள்
ளேறுகந் தேறியவொருவன், பாருளார்பாடலோ டாடல்அறாத
பண்முரன் றஞ்சிறை வண்டினம்பாடும், ஏருளார்பைம்பொழில்
இலம்பையங்கோட்டூர் இருக்கையாப்பேணியென் எழில்கொள்வ
தியல்பே. 7

வேருலாம்ஆழ்கடல் வருதிரையிலங்கை வேந்தனதடக்கை
கள் அடர்த்தவனுலகில், ஆருலாம்எனதுரை தனதுரையாக ஆக
மோர் அரவணிந் துழிதரும்அண்ணல், வாருலாநல்லன மாக்க
ளுஞ்சார வாரணம்உழிதரும் மல்லலங்கானல்,[8] ஏருலாம்பொழி

---

5 உச்சியார் - திருநெல்வாயிலில் எழுந்தருளிய இறைவர்.
6 கருவிரலூகம் - கரிய விரலையுடைய குரங்கு. 7 மனமுலா அடிய வர்க் என்றும் பாடம். 8 கானல் - இங்கு மலைப்புறச் சோலை; மல்லையங்கானல் என்றும் பாடம்.

லணி[9] இலம்பையங்கோட்டூர் இருக்கையாப்பேணியென் எழில் கொள்வதியல்பே. 8

கிளர்மழைதாங்கினான்[10] நான்முகமுடையோன் கீழடிமேல் முடி தேர்ந்தளக்கில்லா, உளமழை[11] யெனதுரை தனதுரையாக வொள்ளழல்அங்கையி லேந்தியவொருவன், வளமழையெனக் கழை வளர்துளிசோர[12] மாசுணமுழிதரு மணியணிமாலே, இள மழைதவழ்பொழில் இலம்பையங்கோட்டூர் இருக்கையாப்பேணி யென் எழில்கொள்வதியல்பே. 9

உரிஞ்சனகூறைகள் உடம்பினராகி உழிதருசமணருஞ்[13] சாக்கியப்பேய்கள், பெருஞ்செல்வன்எனதுரை தனதுரையாகப் பெய்பலிக்கென்றுழல் பெரியவர்பெருமான், கருஞ்சுனைமுல்லை நன் பொன்னடைவேங்கை களிமுகவண்டொடு தேன்இனம்முர லும், இருஞ்சுனை மல்கிய இலம்பையங்கோட்டூர் இருக்கையாப் பேணியென் எழில்கொள்வதியல்பே.* 10

கந்தனைமலிகனை கடலொலியோதம் கானலங்கழிவளர் கழு மலமென்னும், நந்தியாரு[14]றைபதிநான்மறைநாவன் நற்றமிழ்க்கின் துணை ஞானசம்பந்தன், எந்தையார்வளநகர் இலம்பையங்கோட் டூர் இசையொடுகூடிய பத்தும்வல்லார்போய், வெந்துயர்கெடுகிட விண்ணவரோடும் விடுபெற்றிம்மையின்[15] வீடெளிதாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—சந்திரசேகரர்; தேவி—கோடேந்துமுலையம்மை.

---

[9] ஏருலாம் பைம்பொழில் என்றும் பாடம். [10] கிளர்மழை தாங்கினான் - கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து இந்திரன் ஏவலால் பெய்வித்த கல் மழையைத் தடுத்த திருமால். [11] உளமனை என்பது உளமழை என எதுகைநோக்கித் திரிந்தது. [12] கழைவளர் துளி சோர - மூங்கில் முத்துக்களைச் சொரிய; கழை- மூங்கில்; துளி: உவமையாகுபெயராய் முத்தை உணர்த்திற்று. வளர்தல் - துளிக்குப் பருத்தல். [13] உழிதருமமணருஞ் என்றும் பாடம். [14] கானலங்கழி - உப்பங்கழி; கழுமலம் - சீகாழி; நந்தி யார் - சிவபெருமான். [15] வீடுபேற்றின்மையின் என்றும் பாடம்.

## 10. திருவிற்கோலம்*

பண் - காந்தாரபஞ்சமம்** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

உருவினார் உமையொடும் ஒன்றி நின்றதோர்
திருவினான் வளர்சடைத் திங்கள் கங்கையான்
வெருவிவா னவர்தொழ வெகுண்டு நோக்கிய
செருவினான் உறைவிடந் திருவிற் கோலமே.[1] 1

சிற்றிடை யுமையொரு பங்கன் அங்கையில்
உற்றதோர் எரியினன் ஒருச ரத்தினால்
வெற்றிகொள் அவுணர்கள் புரங்கள் வெந்தறச்
செற்றவன் உறைவிடந் திருவிற் கோலமே. 2

ஐயன்நல் அதிசயன்[2] அயன்விண் ணோர்தொழும்
மையணி கண்டனார் வண்ண வண்ணம்வான்[3]
பையர வல்குலாள் பாக மாகவும்[4]
செய்யவன் உறைவிடந் திருவிற் கோலமே. 3

விதைத்தவன் முனிவருக் கறமுன் காலனை
உதைத்தவன் உயிரிழந் துருண்டு வீழ்தரப்
புதைத்தவன் நெடுநகர்ப் புரங்கள் மூன்றையும்
சிதைத்தவன் உறைவிடந் திருவிற் கோலமே. 4

---

* 'கூவம்' என வழங்கப்பெறும்; இஃது இங்குள்ள தீர்த்தத்தால் பெற்ற பெயர் ஆகும். இத்தீர்த்தம் ஊருக்கு வடக்கே சுமார் ஒரு மைல் ஒரு திடலில் உள்ளது; இத்தீர்த்தத்தின் அருகு அசுசியுடன் செல்லலாகாது என்பர். ** இப்பதிகத்தில் 8 ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1] உறைதருந் திருவிற்கோலமே என்றும் பாடம்; இப்பாடத்தை இப்பதிகமுழுதுங்கொள்க; திருவிற்கோலத்தில் உறைதரும் என முற்றாக்குக; உறைதருதல் - உறைதல். [2] இத்தலத்துச்சுவாமி தீண்டாத்திருமேனி; அதிக மழை பெய்திறதாக இருந்தால் சுவாமியின்மேல் வெண்ணிறம் படர்தலும், யுத்தம் நேரிடுகிறதாக இருந்தால் செந்நிறம்படர்தலுமான அதிசயம் உடைமையால் 'ஐயன் நல் அதிசயன்' என்று அருளிச் செய்தார். [3] வண்ண வண்ணவான் என்றும், வண்ணம் வண்ணர்வான் என்றும் பாடம். [4] மாகமும் என்றும் பாடம்.

முந்தினான் மூவருள் முதல்வ னாயினான்
கொந்துலா மலர்ப்பொழிற் கூகம்[5] மேவினான்
அந்திவான் பிறையினான் அடியர் மேல்வினை
சிந்துவான் உறைவிடந் திருவிற் கோலமே. 5

தொகுத்தவன் அருமறை யங்கம் ஆகமம்
வகுத்தவன் வளர்பொழிற் கூகம் மேவினான்
மிகுத்தவன் மிகுத்தவர் புரங்கள் வெந்தறச்
செகுத்தவன் உறைவிடந் திருவிற் கோலமே. 6

விரித்தவன் அருமறை விரிச டைவெள்ளம்
தரித்தவன் தரியலர் புரங்கள் ஆசற
எரித்தவன் இலங்கையர் கோனி டர்படச்
சிரித்தவன் உறைவிடந் திருவிற் கோலமே. 7-8

திரிதரு புரமெரி செய்த சேவகன்
வரியர வொடுமதி சடையில் வைத்தவன்
அரியொடு பிரமன தாற்ற லால்உருத்
தெரியலன் உறைவிடந் திருவிற் கோலமே. 9

சீர்மையில் சமணொடு சீவ ரக்கையர்
நீர்மையில் உரைகள்கொள் ளாத நேசர்க்குப்
பார்மலி பெருஞ்செல்வம் பரிந்து நல்கிடும்
சீர்மையி னானிடந் திருவிற் கோலமே. 10

கோடல்வெண் பிறையனைக் கூகம் மேவிய
சேடன செழுமதில் திருவிற் கோலத்தை
நாடவல் லதமிழ்[6] ஞான சம்பந்தன
பாடல்வல் லார்களுக் கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—திரிபுராந்தகர், தீண்டாத் திருமேனி;
தேவி—திரிபுராந்தகி.

---

[5] கொந்தலர் மலர்ப்பொழிற்கூகம் என்றும் பாடம், கூகம் என்பது இப்போது கூவம் என வழங்குகிறது. [6] நாடவல்லார் தமிழ் என்றும், நாடவல்லைதமிழ் என்றும் பாடம்.

# 11. திருஆலங்காடு*

**பண் - தக்கராகம்**** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

துஞ்சவருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்தி வாணாள்கொள்ளும் வகைகேட்
டஞ்சும்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே.[1] 1

கேடும்பிறவியும் ஆக்கினாருங் கேடிலா
வீடுமாநெறி விளம்பினாரெம் விகிர்தனார்
காடுஞ்சுடலையுங் கைக்கொண்டெல்விற் கணப்பேயோ[2]
டாடும்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே. 2

கந்தங்கமழ்கொன்றைக் கண்ணி[3] சூடி கனலாடி
வெந்தபொடிநீற்றை விளங்கப்பூசும் விகிர்தனார்
கொந்தண்பொழிற்சோலை யரவில்தோன்றிக் கோடல்பூத்
தந்தண்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே. 3

பாலமதிசென்னி படரச்சூடிப் பழியோராக்
காலனுயிர்செற்ற காலனாய கருத்தனார்
கோலம்பொழிற்சோலைப் பெடையோடாடி மடமஞ்ஞை
ஆலும்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே. 4

ஈர்க்கும்புனல்சூடி இளவெண்டிங்கள் முதிரவே
பார்க்கும்அரவம்பூண் டாடிவேடம் பயின்றாரும்
கார்க்கொள்கொடிமுல்லை குருந்தமேறிக் கருந்தேன்மொய்த்
தார்க்கும்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே. 5

பறையுஞ்சிறுகுழலும் யாழும்பூதம் பயிற்றவே
மறையும்பலபாடி மயானத்துறையும் மைந்தனார்

---

* பழையனூர் ஆலங்காடு என்பதும் இதுவே. பழையனூர் - திருவாலங்காட்டுக்கு மிகச்சமீபத்தில் உள்ளது. இரத்தினசபையையுடையது இத்தலம். ** திருவாலங்காட்டைப் பாடுதற்கு மறந்தனையோ என்று இறைவன் உணர்த்த இப்பதிகம் பாடியதாகும். [1] இவ்வடிகள் ஆலங்காட்டு நீலியின் நிமித்தம் ஒரு வணிகனுக்கு வாக்களித்தபடி எழுபது வேளாளர்கள் எரியில் மூழ்கி உயிர்விட்டதை அறிவிக்கும். [2] எல்லி-இரவு; டல்விக்கணப்பேயோ என்றும் பாடம். [3] கண்ணி - சிரமாலை.

பிறையும்பெரும்புனல்சேர் சடையினரும் பேடைவண்
டறையும்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே. 6

நுணங்குமறைபாடி யாடிவேடம் பயின்றாரும்
இணங்குமலைமகளோ டிருகூறொன்றா யிசைந்தாரும்
வணங்குஞ்சிறுத்தொண்டர் வைகலேத்தும் வாழ்த்துங்கேட்
டணங்கும்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே. 7

கணையும்வரிசிலையும் எரியுங்கூடிக் கவர்ந்துண்ண
இணையில்எயில்மூன்றும் எரித்திட்டாரெம் இறைவனார்
பிணையுஞ்சிறுமறியுங் கலையுமெல்லாங் கங்குல்சேர்ந்
தணையும் பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே. 8

கவிழமலைதளரக் கடகக்கை[4] யால் எடுத்தான்தோள்
பவழநுனைவிரலாற் பையவூன்றிப் பரிந்தாரும்
தவழுங்கொடிமுல்லை புறவஞ்சேர நறவம்பூத்
தவிழும்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே. 9

பகலும்இரவுஞ்சேர் பண்பினாரும் நண்போரா
திகலும்இருவர்க்கும் எரியாய்த்தோன்றி நிமிர்ந்தாரும்
புகலும்[5] வழிபாடு வல்லார்க்கென்றுந் தீயபோய்
அகலும்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே. 10

போழம்பலபேசிப் போதுசாற்றித் திரிவாரும்
வேழம்வருமளவும் வெயிலேதுற்றித் திரிவாரும்
கேழல்வினைபோகக் கேட்பிப்பாருங் கேடிலா
ஆழ்வர்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே. 11

சாந்தங்கமழ்மறுகிற் சண்பைஞான சம்பந்தன்
ஆந்தண்பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளை
வேந்தன் அருளாலே விரித்தபாடல் இவைவல்லார்
சேர்ந்தஇடமெல்லாந் தீர்த்த[6]மாகச் சேர்வாரே. 12

திருச்சிற்றம்பலம்

சுவாமி—ஊர்த்ததாண்டவர்; தேவி—வண்டார்குழலியம்மை.

---

[4] மலைதாழக்கடகக்கை என்றும் பாடம்; தாழ் அக் கடகக்கை எனப்பிரித்து முழந்தாள் வரையுந் தாழ்ந்த அந்த உத்தம இலக்கணத்தையுடைய கடகக்கை எனப்பொருள்கொள்க. [5] புகழும் என்றும் பாடம். [6] தீர்த்தம் - பரிசுத்தம்.

## 12. திருப்பாசூர்*

பண் - காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சிந்தை யிடையார் தலையின் மிசையார் செஞ்சொல்லார்
வந்து மாலை வைகும் போழ்தென் மனத்துள்ளார்
மைந்தர் மணாள ரென்ன மகிழ்வா ரூர்போலும்
பைந்தண் மாதவி சோலை சூழ்ந்த பாசூரே. 1

பேரும் பொழுதும் பெயரும் பொழுதும் பெம்மானென்
றாருந் தனையும் அடியா ரேத்த அருள்செய்வார்
ஊரும் அரவம் உடையார் வாழும் ஊர்போலும்
பாரின் மிசையார் பாட லோவாப் பாசூரே. 2

கையால் தொழுது தலைசாய்த் துள்ளங் கசிவார்கள்
மெய்யார் குறையுந் துயருந் தீர்க்கும் விமலனார்[1]
நெய்யா டுதலஞ் சுடையார்[2] நிலாவும் ஊர்போலும்
பைவாய் நாகங் கோட லீனும் பாசூரே. 3

பொங்கா டரவும் புனலுஞ் சடைமேற் பொலிவெய்தக்
கொங்கா[3]ர் கொன்றை சூடியென் னுள்ளங் குளிர்வித்தார்
தங்கா தலியுந் தாமும் வாழும் ஊர்போலும்
பைங்கான் முல்லை பல்லரும் பீனும் பாசூரே. 4

ஆடற் புரியும் ஐவா யரவொன் றரைச்சாத்தும்
சேடச் செல்வர் சிந்தையு ளென்றும் பிரியாதார்
வாடல்[4] தலையிற் பலிதேர் கையார் ஊர்போலும்
பாடற் குயில்கள் பயில்பூஞ் சோலைப் பாசூரே. 5

கானின் றதிரக் கனல்வாய் நாகங் கச்சாகத்
தோலொன் றுடையார் விடையார் தம்மைத் தொழுவார்கள்
மால்கொண் டோட மையல் தீர்ப்பார் ஊர்போலும்
பால்வெண் மதிதோய் மாடஞ் சூழ்ந்த பாசூரே. 6

---

* இறைவன் மூங்கிலின் அடியில் முளைத்தெழுந்த காரணத்தால் இப்பெயர் பெற்றது; பாசு - மூங்கில். 1 விகிர்தனார் என்றும் பாடம். 2 நெய்யாடுதல் அஞ்சுடையார் - நெய் முதலாகக்கூடிய பஞ்சகௌவித்தை அபிடேகப்பொருளாக உடையவர். நிலந்துடையார் என்றும் பாடம். 3 கொங்கு-தேன். 4 வாடல்-பிணம்உலர்ந்த.

கண்ணின் அயலே கண்ணொன் றுடையார் கழலுன்னி
எண்ணுந் தனையும் அடியா ரேத்த அருள்செய்வார்
உண்ணின் றுருக உவகை[5] தருவார் ஊர்போலும்
பண்ணின் மொழியார் பாட லோவாப் பாசூரே. 7

தேசு குன்றாத் தெண்ணீ ரிலங்கைக் கோமானைக்
கூச அடர்த்துக் கூர்வாள் கொடுப்பார் தம்மையே
பேசிப் பிதற்றப் பெருமை தருவார் ஊர்போலும்
பாசித் தடமும் வயலுஞ் சூழ்ந்த பாசூரே. 8

நகுவாய் மலர்மேல் அயனும் நாகத் தணையானும்
புகுவா யறியார் புறநின் றோரார் போற்றோவார்
செகுவா யுகுபல் தலைசேர் கையார் ஊர்போலும்
பகுவாய் நாரை ஆரல் வாரும் பாசூரே. 9

தூய வெயில்நின் றுழல்வார் துவர்தோய் ஆடையார்
நாவில் வெய்ய சொல்லித் திரிவார் நயமில்லார்
காவல்[6] வேவக் கணையொன் றெய்தார் ஊர்போலும்
பாவைக் குரவம் பயில்பூஞ் சோலைப் பாசூரே. 10

ஞானம் உணர்வான் காழி ஞான சம்பந்தன்
தேனும் வண்டும் இன்னிசை பாடுந் திருப்பாசூர்க்
கானம் முறைவார் கழல்சேர் பாடல் இவைவல்லார்
ஊனம் இலராய் உம்பர் வானத் துறைவாரே.[7] 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பாசூர்நாதர்; தேவி—பசுபதிநாயகி.

---

## 13. திருக்கள்ளில்*

பண் - வியாழக்குறிஞ்சி [1 ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

முள்ளின்மேல் முதுகூகை[1] முரலுஞ் சோலை
வெள்ளின்மேல் விடுகூறைக் கொடி விளைந்த

---

[5] உகவை என்றும் பாடம். [6] காவல் - மும்மதில். [7] வானத் திருப்பாரே என்றும் பாடம். * 'திருக்கள்ளகம்' எனப் பெயர் பெறும். [1] கூகை - கோட்டான்.

கள்ளில்மேய அண்ணல் கழல்கள் நாளும்
உள்ளுமேல் உயர்வெய்தல் ஒரு தலையே. 1

ஆடலான் பாடலான் அரவங்கள் பூண்டான்
ஓடலாற் கலனில்லான் உறை பதியால்
காடலாற் கருதாத கள்ளில் மேயான்
பாடெலாம்[2] பெரியார்கள் பரசு வாரே. 2

எண்ணார்மும் மதிலெய்த இமையா முக்கண்
பண்ணார்நான் மறைபாடும் பரம யோகி
கண்ணார்நீ றணிமார்பன் கள்ளில்மேயான்
பெண்ணாணும் பெருமான்எம் பிஞ்ஞ கனே. 3

பிறைபெற்ற சடையண்ணல் பெடைவண் டாலும்
நறைபெற்ற விரிகொன்றைத் தார் நயந்த
கறை[3] பெற்ற மிடற்றண்ணல் கள்ளில் மேயான்
நிறைபெற்ற அடியார்கள்[4] நெஞ்சு ளானே. 4

விரை[5] யாலும் மலராலும் விழுமை குன்று
உரையாலும் எதிர்கொள்ள வூரா ரம்மாக்
கரையார்பொன் புனல்வேலிக் கள்ளில் மேயான்
அரையார்வெண் கோவணத்த அண்ணல்[6] தானே. 5

நலனாய பலிகொள்கை நம்பான் நல்ல
வலனாய மழுவாளும் வேலும் வல்லான்
கலனாய தலையோட்டான் கள்ளில் மேயான்
மலனாய தீர்த்தெ[7]ய்தும் மாதவத் தோர்க்கே. 6

பொடியார்மெய் பூசினும் புறவின் நறவம்
குடியாவூர் திரியினுங் கூப்பி டினும்
கடியார்பூம் பொழிற்சோலைக் கள்ளில் மேயான்
அடியார்பண் பிகழ்வார்கள் ஆதர்[8] களே. 7

திருநீல மலரொண்கண் தேவி பாகம்
புரிநூலுந் திருநீறும் புல்கு மார்பில்

---

[2] பாடலாம் என்றும் பாடம். [3] கறை - கருப்பு; விடம். [4] அடியார்தம் என்றும் பாடம். [5] விரை - வாசனை; தேனுமாம். [6] கோவணத்தண்ணல் என்றும் பாடம். [7] மலனாயதீர்த்து - ஆணவ முதலிய மலங்களைப்போக்கி. [8] ஆதர்-மூடர்.

கருநீல மலர்விம்மு கள்ளி லென்றும்
பெருநீல மிடற்றண்ணல் பேணு வதே. 8

வரியாய மலரானும் வையந் தன்னை
உரிதாய அளந்தானும் உள்ளு தற்கங்
கரியானும் அறியாத[9] கள்ளில் மேயான்
பெரியானென் றறிவார்கள் பேசு வாரே. 9

ஆச்சியப் பேய்களோ டமணர் குண்டர்
பேச்சிவை நெறியல்ல பேணு மின்கள்
மா[10]ச்செய்த வளவயல் மல்கு கள்ளில்
தீச்செய்த சடையண்ணல் திருந் தடியே. 10

திகை[11] நான்கும் புகழ்காழிச் செல்வம் மல்கு
பகல்போலும் பேரொளியான் பந்தன் நல்ல
முகைமேவும் முதிர்சடையான் கள்ளி லேத்தப்
புகழோடும் பேரின்பம் புகுது மன்றே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சிவாநந்தேசுவரர் ; தேவி—ஆனந்தவல்லியம்மை.

---

## 14. திருக்காளத்தி*

பண் - கொல்லி** [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சந்தமா[1]ர் அகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியி[2]ன் கரையினில் உமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையார் இணையடி யென்மனத் துள்ளவே. 1

ஆலமா மரவமோ[3] டமைந்தசீர்ச் சந்தனம்
சாலமா பீலியுஞ் சண்பக முந்தியே

---

[9] அரிதாய என்றும் பாடம். [10] மா-மேன்மை. [11] திகை - திசை
* இது 'சீகாளத்தி' எனவும் பெயர் பெறும். சிலந்தி, பாம்பு, யானை இம்மூன்றும் பூசித்துப் பேறுபெற்றதால் இப்பெயர் பெற்றது. சீ - சிலந்தி. காளம் - பாம்பு. அத்தி - யானை. ** இப்பதிகத்தில் 6, 7-ம் செய்யுட்கள் சிதைந்துபோயின. [1] சந்தம் - சந்தன மரம். [2] முகலி - பொன்முகலியாறு. [3] மரவம் - குங்கும மரம்.

காலமார் முகலிவந் தணைதரு காளத்தி
நீலமார் கண்டனை நினையுமா நினைவதே. 2

கோங்கமே குரவமே கொன்றையம் பாதிரி
மூங்கில்வந் தணைதரு முகலியின் கரையினில்
ஆங்கமர் காளத்தி யடிகளை அடிதொழ
வீங்குவெந் துயர்கெடும் வீடெளி தாகுமே. 3

கரும்புதேன் கட்டியுங் கதலி[4] யின் கனிகளும்
அரும்புநீர் முகலியின் கரையினி லணிமதி[5]
ஒருங்குவார் சடையினன் காளத்தி யொருவனை
விரும்புவார் அவர்கள்தாம் விண்ணுல காள்வரே. 4

வரைதரும் அகிலொடு மாமுத்தம் உந்தியே
திரைதரு முகலியின் கரையினில் தேமலர்
விரைதரு சடைமுடிக் காளத்தி விண்ணவன்
நிரைதரு கழலிணை நித்தலும் நினைமினே. 5 - 7

முத்துமா மணிகளும் முழுமலர்த் திரள்களும்
எத்து[6] மா முகலியின் கரையினில் எழில்பெறக்
கத்திட அரக்கனைக் கால்விரல் ஊன்றிய
அத்தன்றன் காளத்தி அணைவது கருமமே. 8

மண்ணுமா வேங்கையும் மருதுகள் பீழ்ந்துந்தி
நண்ணுமா முகலியின் கரையினில் நன்மைசேர்
வண்ணமா மலரவன்[7] மாலவன் காண்கிலா
அண்ணலார் காளத்தி ஆங்கணாந் தும்மினே. 9

வீங்கிய வுடலினர் விரிதரு துவருடைப்
பாங்கிலார் சொல்விடும் பரனடி பணியுமின்
ஓங்குவண் காளத்தி யுள்ளமோ டுணர்தர
வாங்கிடும் வினைகளை வானவர்க் கொருவனே. 10

அட்டமா சித்திகள்[8] அணைதரு காளத்தி
வட்டவார் சடையனை வயலணி காழியான்

---

[4] கதலி - வாழை. [5] லணிமணி என்றும் பாடம். [6] எற்று என்றது எத்து என நின்றது. [7] மலரயன் என்றும் பாடம். [8] அட்டமா சித்திகள் - அணிமா, மகிமா முதலிய அட்டசித்திகள்: இவற்றின் விரிவை யோகநூலில் கண்டுணர்க.

சிட்டநான் மறைவல ஞானசம் பந்தன்சொல்
இட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - சாதாரி* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வா**னவர்கள் தானவர்கள்[1] வாதைபட வந்ததொரு மாகடல்[2] விடம், தானமுது செய்தருள் புரிந்தசிவன் மேவுமலை தன்னைவினவில், ஏனமின[3] மானினொடு கிள்ளைதினை கொள்ளஎழி லார்கவணினால், கானவர்தம் மாமகளிர் கனகமணி விலகுகா ளத்திமலையே. 1

முதுசினவில் அவுணர்புரம் மூன்றுமொரு நொடிவரையின் மூளஎரிசெய், சதுரர்மதி போதிசடையர் சங்கரர்வி ரும்புமலை தன்னை வினவில், எதிரெதிர வெதிர்[4] பிணைய எழுபொறிகள் சிதறஎழி லேனமுழுத, கதிர்மணியின் வளரொளிகள் இருளகல நிலவுகா ளத்திமலையே 2

வல்லவரு காளியைவ குத்துவலி யாகிமிகு தாரகனை[5]நீ, கொல்லெனவி டுத்தருள் புரிந்தசிவன் மேவுமலை கூறிவினவில், பல்பல இருங்கனி பருங்கிமிக வுண்டவை நெருங்கியினமாய்க், கல்லதிர நின்றுகரு மந்திவிளை யாடுகா ளத்திமலையே. 3

வேயனைய தோளுமையொர் பாகமது வாகவிடை யேறிசடைமேல், தூயமதி சூடிசுடு காடில்நட மாடிமலை தன்னைவினவில், வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகுநயனம், காய்கணை யினாலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே.[6] 4

மலையின்மிசை தனில்முகில்போல் வருவதொரு மதகரியை மழை[7] யாலலறக், கொலைசெய்துமை யஞ்சவுரி போர்த்தசிவன்

---

* இப்பதிகம் மலையில் ஏறிச்செல்லும்போது பாடியருளியதாகும்; இதில் மலையின் இயற்கை வருணனை அழகுபட அமைந்துள்ளது.
[1] தானவர்கள் - அசுரர்கள். [2] மால்கடல் என்றும் பாடம். [3] இளம் என்றும் பாடம். [4] வெதிர் - மூங்கில். [5] தாரகன் - ஓர் அசுரர்; யானை முகமுடையவன். [6] இவ்வடிகள் கண்ணப்பநாயனார் தொண்டின் சிறப்பைக் கூறுவன. [7] மழை - இக்குஇடி.

மேவுமலை கூறிவினவில், அலைகொள்புனல் அருவிபல சுனைகள் வழி யிழியவயல் நிலவுமுதுவேய், கலகலென வொளிகொள்கதிர் முத்தமவை சிந்துகா ளத்திமலையே. 5

பாரகம் விளங்கிய பகீரதன் அருந்தவம் முயன்றபணிகண், டாரருள் புரிந்தலைகொள் கங்கைசடை யேற்றஅரன்[7] மலையை வினவில், வாரதர் இருங்குறவர் சேவலின் மடுத்தவர் எரித்தவிறகில், காரகில் இரும்புகை விசும்புகமழ் கின்றகா ளத்திமலையே. 6

ஆருமெதி ராதவலி யாகியசலந்தரனை ஆழியதனால், ஈரும் வகை செய்தருள் புரிந்தவன்[8] இருந்தமலை தன்னைவினவில், ஊரும் அரவம்மொளிகொள் மாமணியு மிழ்ந்தவையு லாவிவரலால், காரிருள் கடிந்துகன கம்மெனவி ளங்குகா ளத்திமலையே. 7

எரியனைய சுரிமயிர் இராவணனை யீடழிய எழில்கொள்விரலால், பெரியவரை யூன்றியருள் செய்தசிவன் மேவுமலை பெற்றிவினவில், வரியசிலை வேடுவர்கள் ஆடவர்கள் நீடுவரை யூடுவரலால், கரியினொடு வரியுழுவை அரியினமும் வெருவுகா ளத்திமலையே. 8

இனதளவி லிவனதடி யிணையும்முடி யறிதுமென இகலுமிருவர், தனதுருவம் அறிவரிய சகலசிவன் மேவுமலை தன்னைவினவில், புனவர்புன மயிலனைய மாதரொடு மைந்தரும ணம்புணரும்நாள், கனகமென மலர்களணி வேங்கைகள் நிலாவுகா ளத்திமலையே. 9

நின்றுகவ ளம்பலகொள் கையரொ[9]டு மெய்யிலிடு போர்வையவரும், நன்றியறி யாதவகை நின்றசிவன் மேவுமலை நாடிவினவில், குன்றில்மலி துன்றுபொழில் நின்றகுளிர் சந்தின்முறிதின்றுகுலவிக், கன்றினொடு சென்றுபிடி நின்றுவிளை யாடுகா ளத்திமலையே. 10

காடதி[10]ட மாகநட மாடுசிவன் மேவுகா ளத்திமலையை, மாடமொடு மாளிகைகள் நீடுவளர் கொச்சைவயம் மன்னுதலைவன்,

---

[7] இவ்வடிகள் இறைவன் பகீரதன் வேண்டுகோளின்படி கங்கையைச் சிரசில் ஏற்ற வரலாற்றைக் குறிப்பன. [8] இவ்வடிகள் சலந்தராசுரனை அழித்தமையைக் கூறும். [9] நின்று கவளம்பல கொள்கையர் - சமணர். [10] காடது - சுடுகாடு; அது: பகுதிப் பொருள் விகுதி.

நாடுபல[11] நீடுபுகழ் ஞானசம் பந்தனுரை நல்லதமிழின், பாடலொடு
பாடுமிசை வல்லவர்கள் நல்லர்பர லோகமெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—காளத்தீசுவரர், கணநாதர்; தேவி—ஞானப்பூங்கோதை.

## 15. திருவொற்றியூர்*

பண் - பஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வி**டையவன் விண்ணுமண்ணுந் தொழநின்றவன் வெண்மழுவாட்
படையவன் பாய்புலித்தோல் உடை கோவணம் பல்கரந்தை[1]ச்
சடையவன் சாமவேதன் சசி[2] தங்கிய சங்கவெண்தோ
டுடையவன் ஊனமில்லி யுறை யும்மிடம் ஒற்றியூரே. 1

பாரிடம்[3] பாணிசெய்யப் பறைக் கட்[4]செறு பல்கணப்பேய்
சீரொடும் பாடலாடல் இல யஞ்சிதை யாதகொள்கைத்
தாரிடும் போர்விடையன் தலை வன்தலை யேகலனா
ஊரிடும் பிச்சைகொள்வான் உறை யும்மிடம் ஒற்றியூரே. 2

விளிதரு நீருமண்ணும் விசும் போடனல் காலுமாகி
அளிதரு பேரருளான் அர னாகிய ஆதிமூர்த்தி
களிதரு வண்டுபண்செய் கமழ் கொன்றையி னோடணிந்த
ஒளிதரு வெண்பிறையான் உறை யும்மிடம் ஒற்றியூரே. 3

அரவமே கச்சதாக அசைத் தானலர் கொன்றையந்தார்
விரவிவெண் ணூல்கிடந்த விரை யார்வரை மார்பனெந்தை
பரவுவார் பாவமெல்லாம் பறைத் து[5]ப்படர் புன்சடைமேல்
உரவுநீ ரேற்றபெம்மான் உறை யும்மிடம் ஒற்றியூரே. 4

விலகினார் வெய்யபாவம் விதி யாலருள் செய்துநல்ல
பலகினார் மொந்தைதாளந் தகு ணிச்சமு[6]ம் பாணியாலே

---

[11] நாடுமெலி என்றும் பாடம். * பிரமனது தவமாகிய யோகத் தீயின் நடுவுள் இறைவன் தோன்றி, அத்தீயையே கோயிலாகக் கொண்டு ஊழி வெள்ளத்தைத் தடுத்தமையால் ஒற்றியூர் எனப் பட்டது என்பர். [1] கரந்தை - ஒரு வகைப்பூ [2] சசி - சந்திரன். [3] பாரிடம் - பூதகணம். [4] செய்வார் பறைக்கட் என்றும் பாடம். [5] பறைத்து - தேய்த்து. [6] தகுணிச்சம் - ஒருவகைத் தோற் கருவி.

அல்கினால் வீசுநீர்கொண் டடிமேல்அல ரிட்டுமுட்டா
துலகினோ ரேத்தநின்றான் உறை யும்மிடம் ஒற்றியூரே. 5
சமை[7] யொடு நின்றசீரான் கழ லுஞ்சிலம் பும்மொலிப்பச்
சுமையொடு மேலும்வைத்தான் விரி கொன்றையுஞ் சோமனையும்
அமையொடு நீண்டதிண்தோள் அழ காயபொற் றோடிலங்க
உமையொடுங் கூடிநின்றான் உறை யும்மிடம் ஒற்றியூரே. 6
நன்றியால் வாழ்வதுள்ளம் உல குக்கொரு நன்மையாலே
கன்றினார் மும்மதிலுங் கரு[8] மால்வரை யேசிலையாப்
பொன்றினார் வார்சுடலைப் பொடி நீறணிந் தாரழல்அம்
பொன்றினால் எய்தபெம்மான் உறை யும்மிடம் ஒற்றியூரே. 7
பெற்றியாற் பித்தனொப்பான் பெரு மான்கரு மானு[9] ரிதோல்
சுற்றியான் சுத்திசூலஞ் சுடர்க் கண்ணுதல் மேல்விளங்கத்
தெற்றியாற் செற்றரக்கன் உட லைச்செழு மால்வரைக்கீழ்
ஒற்றியான் முற்றுமாள்வான் உறை யும்மிடம் ஒற்றியூரே. 8
திருவினார் போதினானுந் திரு மாலுமொர் தெய்வமுன்னித்
தெரிவினாற் காணமாட்டார் திகழ் சேவடி சிந்தைசெய்து
பரவினார் பாவமெல்லாம் பறை யப்படர் பேரொளியோ
டொருவனாய் நின்றபெம்மான் உறை யும்மிடம் ஒற்றியூரே. 9
தோகையம் பீலிகொள்வார் துவர்க் கூறைகள் போர்த்துழல்வார்
ஆகம செல்வனாரை[10] அலர் தூற்றுதல் காரணமாக்
கூகையம் மாக்கள்[11]சொல்லைக் குறிக் கொள்ளன்மின் ஏழுலகும்
ஓகைதந் தாளவல்லான் உறை யும்மிடம் ஒற்றியூரே. 10
ஒண்பிறை மல்குசென்னி இறை வன்னுறை யொற்றியூரைச்
சண்பையர் தந்தலைவன் தமிழ் ஞானசம் பந்தன்சொன்ன
பண்புனை பாடல்பத்தும் பர விப்பணிந் தேத்தவல்லார்
விண்புனை மேலுலகம் விருப் பெய்துவர் வீடெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—படம்பக்கநாதர்; ஆதிபுரீசுவரர்; தியாகேசர்;
தேவி—வடிவுடையம்மை.

---

7 சமை-பொறுமை. 8 கருமை-பெருமை. 9 கருமான்-யானை.
10 ஆகம செல்வனார் - சிவாகமங்களைத் தோற்றுவித்த சிவபெருமான்.
11 கூகையம் மாக்கள் - இஃது இழிவு குறித்தது; வசை.

## 16. திருவலிதாயம்*

### பண் - நட்டபாடை [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பத்தரோடுபல ரும்பொலியம்மலர் அங்கைப்புனல்தூவி
ஒத்தசொல்லியுல கத்தவர்தாந்தொழு தேத்தஉயர்சென்னி
மத்தம்வைத்தபெரு மான்பிரியாதுறை கின்றவலிதாயம்
சித்தம்வைத்தஅடி யாரவர்மேலடை யாமற்றிடர்நோயே. 1

படையிலங்குகரம் எட்டுடையான்படி றாகக்கனலேந்திக்
கடையிலங்குமனை யிற்பலிகொண்டுணுங் கள்வன்உறைகோயில்
மடையிலங்குபொழி லின்நிழல்வாய்மது வீசும்வலிதாயம்
அடையநின்றஅடி யார்க்கடையாவினை அல்லல்துயர்தானே. 2

ஐயனொய்யன்[1] அணி யன்பிணியில்லவ ரென்றுந்தொழுதேத்தச்
செய்யன்வெய்யபடை யேந்தவல்லான்திரு மாதோடுறைகோயில்
வையம்வந்துபணி யப்பிணிதீர்த்துயர் கின்றவலிதாயம்
உய்யும்வண்ணம்நினை மின்நினைந்தால்வினை தீரும்நலமாமே. 3

ஒற்றைஏறதுடை யான்நடமாடியோர் பூதப்படைசூழப்
புற்றில்நாகம்அரை யார்த்துழல்கின்றஎம் பெம்மான்மடவாளோ
டுற்றகோயிலுல கத்தொளிமல்கிட உள்கும்வலிதாயம்
பற்றிவாழும்அது வேசரணாவது பாடும்அடியார்க்கே. 4

புந்தியொன்றிநினை வார்வினையாயின தீரப்பொருளாய
அந்தியன்னதொரு பேரொளியான் அமர் கோயில்அயலெங்கும்
மந்திவந்துகடு வன்னொடுங்கூடி[2] வணங்கும்வலிதாயஞ்
சிந்தியாதஅவர் தம்மடும்வெந்துயர் தீர்தலெளிதன்றே. 5

ஊனியன்றதலை யிற்பலிகொண்டுல கத்துள்ளவரேத்தக்
கானியன்றகரி யின்னுரிபோர்த்துழல் கள்வன்சடைதன்மேல்
வானியன்றபிறை வைத்தஎம்மாதி மகிழும்வலிதாயம்
தேனியன்றநறு மாமலர்கொண்டுநின் றேத்தத்தெளிவாமே. 6

கண்ணிறைந்தவிழி யின்அழலால்வரு காமன்உயிர்வீட்டிப்[3]
பெண்ணிறைந்தவொரு பால்மகிழ்வெய்திய பெம்மானுறைகோயில்[4]

---

* 'பாடி' என வழங்கப்பெறும். [1] நொய்யன் - எளியவன். [2] னொடுகூடி என்றும் பாடம். [3] காமன் உருவீட்டிப் என்றும் பாடம். [4] இவ்வடிகள் இறைவன் மன்மதனை எரித்து உமா தேவியை மணந்ததை அறிவிக்கும்.

மண்ணிறைந்தபுகழ் கொண்டடியார்கள் வணங்கும் வலிதாயத்
துண்ணிறைந்தபெரு மான்கழலேத்தநம் உண்மைக்கதியாமே. 7

கடலில்நஞ்சமமு துண்டிமையோர்தொழு தேத்தநடமாடி
அடலிலங்கையரை யன்வலிசெற்றருள் அம்மானமர்கோயில்
மடலிலங்குகமு கின்பலவின் மது விம்மும்வலிதாயம்
உடலிலங்கும்உயி ருள்ளளவுந்தொழ உள்ளத்துயர்போமே. 8

பெரியமேருவரை யேசிலையாமலை வுற்றுரெயில்மூன்றும்
எரியஎய்தவொரு வன் இருவர்க்கறி வொண்ணுவடிவாகும்
எரியதாகியுற வோங்கியவன்வலி தாயந்தொழுதேத்த
உரியராகவுடை யார்பெரியாரென உள்கும்உலகோரே. 9

ஆசியாரமொழி யாரமண்சாக்கிய ரல்லாதவர்கூடி
ஏசியீரமில ராய்மொழிசெய்தவர் சொல்லைப்பொருளென்னேல்
வாசிதீரஅடி யார்க்கருள்செய்து வளர்ந்தான்வலிதாயம்
பேசும்ஆர்வமுடை யாரடியாரெனப் பேணும்பெரியோரே. 10

வண்டுவைகும்மண மல்கியசோலை வளரும்வலிதாயத்
தண்டவாணனடி[5] யுள்குதலால்அருள் மாலைத்தமிழாகக்[6]
கண்டல்வைகுகடற் காழியுள்ஞானசம் பந்தன்தமிழ்பத்துங்[7]
கொண்டுவைகியிசை பாட[8]வல்லார்குளிர் வானத்துயர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—வலிதாயநாதர்; தேவி—தாயம்மை.

## 17. திருவேற்காடு

பண் - பழந்தக்கராகம் [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

ஒள்ளி துள்ளக் கதிக்கா மிவனொளி
வெள்ளி யானுறை வேற்காடு
உள்ளி யாருயர்ந் தாரிவ் வுலகினில்
தெள்ளி யாரவர் தேவரே. 1

---

5 அடி - திருவருள்; அடிஉள்குதல் - இறைபணி நிற்றல்.
6 அருள் தமிழ் மாலையாக - அருட்பாமாலையாக. 7 தமிழ்பத்தும் - தமிழ்ப் பாக்கள் பத்தையும். 8 இசைபாட - பண்ணோடு பாட.

ஆடல் நாகம் அசைத்தள வில்லதோர்
வேடங் கொண்டவன் வேற்காடு
பாடி யும்பணிந் தாரிவ் வுலகினில்
சேட ரா[1] கிய செல்வரே. 2

பூதம் பாடப் புறங்காட் டிடையாடி
வேத வித்தகன் வேற்காடு
போதுஞ் சாந்தும் புகையுங் கொடுத்தவர்க்
கேதம் எய்துத[2] லில்லையே. 3

ஆழ்க டலெனக் கங்கை கரந்தவன்
வீழ்ச டையினன் வேற்காடு
தாழ்வி டைமனத் தாற்பணிந் தேத்திடப்
பாழ்ப டும்அவர் பாவமே. 4

காட்டி னாலும் அயர்த்திடக் காலனை
வீட்டி னானுறை வேற்காடு
பாட்டி னாற்பணிந் தேத்திட வல்லவர்
ஓட்டி னார்வினை ஒல்லையே. 5

தோலி னாலுடை மேவவல் லான்சுடர்
வேலி னானுறை வேற்காடு
நூலி னாற்பணிந் தேத்திட வல்லவர்
மாலி னார்வினை மாயுமே. 6

மல்லல் மும்மதில் மாய்தர எய்ததோர்
வில்லி னான்உறை வேற்காடு
சொல்ல வல்ல சுருங்கா மனத்தவர்
செல்ல வல்லவர் தீர்க்கமே.[3] 7

மூரல் வெண்மதி சூடும் முடியுடை
வீரன் மேவிய வேற்காடு
வார[4] மாய்வழி பாடுநி னைந்தவர்
சேர்வர் செய்கழல் திண்ணமே. 8

பரக்கி னார்படு வெண்டலை யிற்பலி
இரக்கி னான்உறை வேற்காட்டூர்

---

[1] சேடர் - பேரறிவுடையவர். [2] ஏதம் - துக்கம். [3] வல்லவர் திக்கமே என்றும் பாடம். [4] மூரல் - மகிழ்ச்சி; வாரம் - அன்பு.

அரக்கன் ஆண்மை யடரப்பட் டான்இறை
நெருக்கி ஞனை யினையினே. 9

மாறி லாமல ராளெடு மாலவன்
வேற லானுறை வேற்காடு
ஈறி லாமொழி யேமொழி யாளழில்[5]
கூறி ஞர்க்கில்லை குற்றமே. 10

விண்ட மாம்பொழில் சூழ்தரு[6] வேற்காடு
கண்டு நம்பன் கழல்பேணிச்
சண்பை ஞானசம் பந்தன செந்தமிழ்
கொண்டு பாடக் குணமாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வேற்காட்டுநாதர்; தேவி—வேற்கண்ணியம்மை.

---

## 18. திருமயிலாப்பூர் *

பண் - சீகாமரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மட்டி[1]ட்ட புன்னை யங் கானல் மடமயிலைக்[2]
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரம்[3] அமர்ந்தான்

---

[5] மொழிவெம்மொழி என்றும் பாடம். [6] சூழ்திரு என்றும் பாடம். *உமாதேவியார் மயிலாயிருந்து பூசித்துப் பேறு பெற்றமையால் இப்பெயர் பெற்றது. ** இஃது என்பாகிய பூம்பாவையைப் பெண்ணாக எழுப்பிய திருப்பதிகம்; பூம்பாவை - மயிலாப்பூர் சிவநேசச் செட்டியார் மகள்; ஞானசம்பந்தருக்கென அர்ப்பணிக்கப் பட்டவள்; அரவு கடித்து இறந்தவள்; எலும்பாகச் சேமிக்கப்பட்டிருந்தவள்; பின்பு, ஞானசம்பந்தரால் எழுப்பப்பட்டவள்; சிவத்தை மேவியவள். இப்பதிகம் முதல் பத்துச் செய்யுட்கள் வரை புரட்டாசி முதல் ஆனி வரை நிகழும் பத்துத் திருவிழாக்களைக் குறிப்பதாகும்; ஆடி ஆவணி விழா இரண்டும் முதற்பாட்டிலேயே அடக்கப்பட்டது என்பர். [1] மட்டு - தேன். [2] கான மடமயிலைக் என்றும் பாடம். மயிலாப்பூர் மயிலை என மருவியது. [3] கபாலீச்சரம் - கோயிலின் பெயர்; மயிலைக் கட்டிய கபாலீச்சரம் என்க.

ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்[4]
கட்டிட்டல்[5] காணாதே போதியோ பூம்பாவாய். 1

மைப்பயந்த ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீச் சரம்அமர்ந்தான்
ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள்
துய்ப்பனவுங்[6] காணாதே போதியோ பூம்பாவாய். 2

வளைக்கை மடநல்லார் மாமயிலை வண்மறுகில்
துளக்கில் கபாலீச் சரத்தான்தொல் கார்த்திகைநாள்
தளத்தேந் திளமுலையார்[7] தையலார் கொண்டாடும்
விளக்கீடு[8] காணாதே போதியோ பூம்பாவாய். 3

ஊர்திரை வேலை யுலாவும் உயர்மயிலைக்
கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில்
கார்தரு சோலைக் கபாலீச் சரம்அமர்ந்தான்
ஆதிரைநாள்[9] காணாதே போதியோ பூம்பாவாய். 4

மைப்பூசும் ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பூசு நீற்றான் கபாலீச் சரம்அமர்ந்தான்
நெய்ப்பூசும் ஒண்புழுக்கல் நேரிழையார் கொண்டாடும்
தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய். 5

மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டு[10]க் கண்டான் கபாலீச் சரம்அமர்ந்தான்
அடல்ஆனே றூரும்அடிக ளடிபரவி
நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய். 6

---

[4] உருத்திரர்-சிவனடியார்; அவர் சரியையாளர் முதலாகப் பல்வேறு குழுவினராதலால் பல்கணத்தார் எனப்பட்டார். ஒட்டிட்ட பண்பு - அத்விதமாக இயைந்த இயைபு; சரியையாளர், கிரியையாளர், யோகிகள் என்னுமிவரும் பரம்பரையின் மெய்ஞ்ஞானம் பெற்றுச் சிவனோ டத்துவிதமாக வியைதல் உறுதியாதலால், அது பற்றி அவரை உளப்படுத்தி ஒட்டிட்ட என இறந்தகாலத்தால் கூறினர். [5] இடுதல்-கொடுத்தல். [6] ஓணம் - திருவோணம்; உய்ப்பனவும் என்றும் பாடம். [7] தளம் - சந்தனம். [8] விளக்கீடு - கார்த்திகைத் தீபம். [9] ஆதிரை நாள் - மார்கழித் திருவாதிரை நாள். [10] மாசிக்கடலாட்டு - மாசிமகத்தில் கடலில் ஸ்நானஞ்செய்து நள்ளிரவில் மகவோட்டம் காணும் விழா.

மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச் சரம்அமர்ந்தான்
பலிவிழாப் பாடல்செய் பங்குனி யுத்திரநாள்
ஒலிவிழாக் காணுதே போதியோ பூம்பாவாய். 7

தண்ணு அரக்கன்தோள் சாய்த்துகந்த தாளினன்
கண்ணார் மயிலைக் கபாலீச் சரம்அமர்ந்தான்
பண்ணார் பதினெண் கணங்கள்தம் அட்டமி[11]நாள்
கண்ணாரக் காணுதே போதியோ பூம்பாவாய். 8

நற்று மரைமலர்மேல் நான்முகனும் நாரணனும்
உற்றுங் குணர்கிலா மூர்த்தி திருவடியைக்
கற்றார்க ளேத்துங் கபாலீச் சரம் அமர்ந்தான்
பொற்றுப்பு[12]க் காணுதே போதியோ பூம்பாவாய். 9

உரிஞ்சாய வாழ்க்கை அமணுடையைப் போர்க்கும்
இருஞ்சாக் கியர்க ளெடுத்துரைப்ப நாட்டில்
கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரம்அமர்ந்தான்
பெருஞ்சாந்தி[13] காணுதே போதியோ பூம்பாவாய். 10

கானமர் சோலைக் கபாலீச் சரம்அமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்தன் நலம்புகழ்ந்த பத்தும்வலார்
வானசம் பந்தத் தவரோடும் வாழ்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கபாலீசுவரர் ; தேவி—கற்பகவல்லி.

---

## 19. திருவான்மியூர்*

**வினவுரை. பண் - இந்தளம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கரையு லாங்கட லிற்பொலி சங்கம்வெள் ளிப்பிவன்
திரையு லாங்கழி மீனுக ளுந்திரு வான்மியூர்

---

11 அட்டமி-சித்திரை மாத அட்டமி. 12 பொற்றுப்பு-திருமண விழா. பொன் + தாப்பு : தாப்பு என்பதன் வலித்தல். தாம்பு - மங்கலக்கயிறு. 13 பெருஞ்சாந்தி - பவித்திரோர்சவம் என்பர். *வான்மீக முனிவர் பூசித்துப் பேறுபெற்றமையால் இப்பெயர் பெற்றது.

உரையு லாம்பொரு ளாயுல காளுடை யீர்சொலீர்
வரையு லாமட மாதுட னாகிய மாண்பதே. 1

சந்து யர்த்தெழு காரகில்[1] தண்புனல் கொண்டுதம்
சிந்தை செய்தடி யார்பர வுந்திரு வான்மியூர்ச்
சுந்தரக் கழல் மேற்சிலம் பார்க்கவல் லீர்சொலீர்
அந்தி யின்னொளி யின்நிற மாக்கிய வண்ணமே. 2

கான யங்கிய தண்கழி சூழ்கட லின்புறம்
தேன யங்கிய பைம்பொழில் சூழ்திரு வான்மியூர்த்
தோன யங்கம ராடையி னீரடி கேள்சொலீர்
ஆனையங் கவ்வுரி போர்த்தன லாட வுகந்ததே. 3

மஞ்சு[2] லாவிய மாடம திற்பொலி மாளிகைச்
செஞ்சொ லாளர்கள்[3] தாம்பயி லுந்திரு வான்மியூர்த்
துஞ்சு வஞ்சிரு ளாடலு கக்கவல் லீர்சொலீர்
வஞ்ச நஞ்சுண்டு வானவர்க் கின்னருள் வைத்ததே. 4

மண்ணி னிற்புகழ் பெற்றவர் மங்கையர் தாம்பயில்
திண்ணெ னப்புரி சைத்தொழி லார்திரு வான்மியூர்த்
துண்ணெ னத்திரி யுஞ்சரி தைத்தொழி லீர்சொலீர்
விண்ணி னிற்பிறை செஞ்சடை வைத்த வியப்பதே. 5

போது லாவிய தண்பொழில் சூழ்புரி சைப்புறம்
தீதில் அந்தணர் ஓத்தொழி யாத்[4] திரு வான்மியூர்ச்
சூது லாவிய[5] கொங்கையொர் பங்குடை யீர்சொலீர்
மூதெ யில்லொரு மூன்றெரி யூட்டிய மொய்ம்பதே. 6

வண்டி ரைத்த தடம்பொழி லின்நிழற் கானல்வாய்த்
தெண்டி ரைக்கட லோதமல் குந்திரு வான்மியூர்த்
தொண்டி ரைத்தெழுந் தேத்திய தொல்கழ லீர்சொலீர்
பண்டி ருக்கொரு நால்வர்க்கு நீநுரை செய்ததே. 7

தக்கில் வந்த தசக்கிரி வன்தலை பத்திறத்
திக்கில் வந்தல றவ்வடர்த் தீர்திரு வான்மியூர்த்

---

[1] சந்து, அகில்- இவை தூபப் பொருள்கள். [2] மஞ்சு - மேகம். [3] செஞ்சொலாளர் - தமிழ்ப் புலமை யுடையோர். [4] ஓத்துஒழியா - வேதம் ஓதுதல் நீங்காத. [5] சூதுலாவிய - சூதாடுங் கருவி போன்ற.

தொக்க மாதொடும் வீற்றிருந் தீரரு ளென்சொலீர்
பக்க மேபல பாரிடம் பேய்கள் பயின்றதே. 8

பொருது வார்கட லெண்டிசை யுந்தருவாரியால்
திரித ரும்புகழ் செல்வமல் குந்திரு வான்மியூர்ச்
சுருதியாரிரு வர்க்கும்[6] அறிவரி யீர்சொலீர்
எருது மேல்கொ டுழன்றுகந் தில்பலி யேற்றதே. 9

மை[7] த ழைத்தெழு சோலையின் மாலைசேர் வண்டினம்
செய்த வத்தொழி லாரிசை சேர்திரு வான்மியூர்
மெய்த வப்பொடி பூசிய[8] மேனியி னீர்சொலீர்
கைதவச் சமண் சாக்கியர் கட்டுரைக் கின்றதே. 10

மாதொர் கூறுடை நற்றவ னைத்திரு வான்மியூர்
ஆதி யெம்பெரு மானருள் செய்த வினவுரை[9]
ஓதி யன்றெழு[10] காழியுள் ஞானசம் பந்தன்சொல்
நீதி யால்நினை வார்நெடு வானுல காள்வரே. 11

திருச்சிற்றம்பலம்

---

பண் - கௌசிகம்* [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

விரையார் கொன்றையினாய் விடமுண்ட மிடற்றினனே
உரையார் பல்புகழாய் உமைநங்கையொர் பங்குடையாய்
திரையார் தெண்கடல்சூழ் திருவான்மி யூருறையும்
அரையா வுன்னையல்லா லடையாதென தாதரவே.[1] 1

இடியார்[2] ஏறுடையாய் இமையோர்தம் மணிமுடியாய்
கொடியார் மாமதியோ டரவம்மலர்க் கொன்றையினாய்
செடியார் மாதவிசூழ் திருவான்மி யூருறையும்
அடிகேள் உன்னையல்லால் அடையாதென தாதரவே. 2

---

[6] சுருதியார் இருவர்க்கும் - பிரம விட்டுணு இருவர்களுக்கும். [7] மை - மேகம்; இருளுமாம். [8] பொடிப்பூசிய என்றும் பாடம். [9] வினவுரை - இது பதிகக் குறிப்பு. [10] ஓதி அன்று எழு - சிவ ஞானம் திருமுலைப்பால் உண்ட அப்பொழுதே தோன்றப்பெற்ற; ஓதி - சிவஞானம். * இப்பதிகத்தில் 8-ம் செய்யுள் சிதைந்து போயிற்று. [1] ஆதரவு - அன்பு. [2] இடியார் - இடிபோன்ற குரலை.

கையார் வெண்மழுவா கனல்போல்திரு மேனியனே
மையார் ஒண்கண்நல்லாள் உமையாள்வளர் மார்பினனே
செய்யார் செங்கயல்பாய் திருவான்மி யூருறையும்
ஐயா வுன்னையல்லால் அடையாதென தாதரவே. 3

பொன்போ லுஞ்சடைமேற் புனல்தாங்கிய புண்ணியனே
மின்போ லும்புரிநூல் விடையேறிய வேதியனே
தென்பால் வையமெலாந் திகழுந்திரு வான்மிதன்னில்
அன்பா வுன்னையல்லால் அடையாதென தாதரவே. 4

கண்ணா ருந்நுதலாய் கதிர்சூழொளி மேனியின்மேல்
எண்ணார் வெண்பொடிநீ றணிவாயெழில் வார்[3] பொழில்சூழ்
திண்ணார் வண்புரிசைத் திருவான்மி யூருறையும்
அண்ணா[4] வுன்னையல்லால் அடையாதென தாதரவே. 5

நீதீ நின்னையல்லால் நெறியாதும் நினைந்தறியேன்
ஓதீ நான்மறைகள் மறையோன்தலை யொன்றினையும்
சேதீ[5] சேதமில்லாத் திருவான்மி யூருறையும்
ஆதீ யுன்னையல்லால் அடையாதென தாதரவே. 6

வானார் மாமதிசேர் சடையாய்வரை போலவரும்
கானார் ஆனையின்தோல் உரித்தாய்கறை மாமிடற்றாய்
தேனார் சோலைகள்சூழ் திருவான்மி யூருறையும்
ஆனா யுன்னையல்லால் அடையாதென தாதரவே. 7 - 8

பொறிவாய் நாகணையா னொடுபூமிசை மேயவனும்
நெறியார் நீள்கழல்மேல் முடிகாண்பரி தாயவனே
செறிவார் மாமதில்சூழ் திருவான்மி யூருறையும்
அறிவே யுன்னையல்லால் அடையாதென தாதரவே. 9

குண்டா டுஞ்சமணர் கொடுஞ்சாக்கிய ரென்றிவர்கள்
கண்டார் காரணங்கள் கருதாதவர் பேசநின்றாய்
திண்டேர் வீதியதார் திருவான்மி யூருறையும்
அண்டா வுன்னையல்லால் அடையாதென தாதரவே. 10

கன்றா ருங்கமுகின் வயல்சூழ்தரு காழிதனில்
நன்றா னபுகழால் மிகுஞானசம் பந்தனுரை

---

[3] எழிலார் என்றும் பாடம். [4] அண்ணா-பெருமையுடையோனே.
[5] சேதீ - சேதித்தவனே ; சேதித்தல் - துண்டித்தல்.

சென்றார் தம்மிடர்தீர் திருவான்மி யூரதன்மேல்
குன்றா தேத்தவல்லார் கொடுவல்வினை போயறுமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—பால்வண்ணநாதர்; தேவி—சுந்தரநாயகி.

## 20. திருஇடைச்சுரம் *

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வ**ரிவளரவிரொளி யரவரைதாழ வார்சடைமுடிமிசை வளர்மதிசூடிக், கரிவளர்தருகழல் கால்வலனேந்திக் கனலெரியாடுவர் காடரங்காக, விரிவளர்தருபொழில் இளமயில்ஆல[1] வெண்ணிறத்தருவிகள் திண்ணெனவீழும், எரிவளரினமணி புனமணி சாரல் இடைச்சுரம்மேவிய இவர்வணமென்னே. 1

ஆற்றையும்ஏற்றதோர் அவிர்சடையுடையர் அழகினையருளுவர் குழகலதறியார், கூற்றுயிர்செகுப்பதோர் கொடுமையையுடையர் நடுவிருளாடுவர் கொன்றையந்தாரார், சேற்றயல்மிளிர்வன கயலிளவாளை செருச்செயவோர்ப்பன செம்முகமந்தி, ஏற்றை[2] யொடுழிதரும் எழில் திகழ்சாரல் இடைச்சுரம்மேவிய இவர்வணமென்னே. 2

கானமுஞ்சுடலையுங் கற்படுநிலனுங் காதலர்தீதிலர் கனல்மழு[3] வாளர், வானமும்நிலமையும்[4] இருமையுமானார் வணங்கவும் இணங்கவும் வாழ்த்தவும்படுவார், நானமும்புகையொளி விரையொடுகமழ நளிர்பொழில் இளமஞ்ஞை மன்னியபாங்கர், ஏனமும்பிணையலும் எழில்திகழ்சாரல் இடைச்சுரம்மேவிய இவர்வணமென்னே. 3

கடமணிமார்பினர் கடல்தனிலுறைவார் காதலர்தீதிலர் கனல்மழுவாளர், விடமணிமிடறினர் மிளிர்வதோர் அரவர் வேறுமோர்சரிதையர் வேடமும்உடையர், வடமுலையயலன கருங்

* ‘திருவடிஆலம்’ என வழங்கப்பெறும். [1] இனமயில்ஆல என்றும் பாடம். [2] ஏற்றை என்றது குரங்கினுள் ஆணை. [3] கனமழு என்றும் பாடம். [4] நிலைமையும் என்றும் பாடம்.

குருந்தே[5] றி வாழையின் தீங்கனி வார்ந்துதேன் அட்டும், இடமுலை யரிவையர் எழில்திகழ்சாரல் இடைச்சுரம்மேவிய இவர்வண மென்னே. 4

கார்கொண்டகடிகமழ் விரிமலர்க்கொன்றைக் கண்ணியர் வளர்மதி கதிர்விடக்கங்கை, நீர்கொண்டசடையினர் விடையுயர் கொடியர் நிழல்திகழ்மழுவினர் அழல்திகழ்நிறத்தர், சீர்கொண்ட மென்சிறை வண்டுபண்செய்யும் செழும்புனலனையன செங்குலை வாழை, ஏர்கொண்ட பலவினொ டெழில்திகழ்சாரல் இடைச்சுரம் மேவிய இவர்வணமென்னே. 5

தோடணிகுழையினர் சுண்ணவெண்ணீற்றர் சுடலையின் ஆடு வர் தோலுடையாகப், பீடுயர்செய்ததோர் பெருமையையுடையர் பேயுடன்ஆடுவர் பெரியவர்பெருமான், கோடல்கள்ஒழுகுவ முழு குவதும்பி குரவமும் அரவமும் மன்னியபாங்கர், ஏடவிழ்புதுமலர் கடிகமழ்சாரல் இடைச்சுரம்மேவிய இவர்வணமென்னே. 6

கழல்மல்குகாலினர் வேலினர்நூலர் கவர்தலையரவொடு கண்டி[6]யும் பூண்பர், அழல்மல்கும்எரியொடும் அணிமழுவேந்தி ஆடுவர்பாடுவர் ஆரணங்குடையர், பொழில்மல்குநீடிய அரவமு மரவம் மன்னியகவட்டிடைப் புணர்குயிலாலும், எழில்மல்கு சோலையில் வண்டிசைபாடும் இடைச்சுரம்மேவிய இவர்வண மென்னே. 7

தேங்கமழ்கொன்றையந் திருமலர்புனைவார் திகழ்தருசடை மிசைத் திங்களுஞ்சூடி, வீந்தவர்சுடலைவெண் ணீறுமெய்பூசி வேறுமோர்சரிதையர் வேடமும்உடையர், சாந்தமும் அகிலொடு முகில்பொதிந்தலம்பித் தவழ்கனமணியொடு மிகுபளிங்கிடறி, ஏந்துவெள்ளருவிகள் எழில்திகழ்சாரல் இடைச்சுரம்மேவிய இவர்வணமென்னே. 8

பலஇலம்[7] இடுபலி கையிலொன்றேற்பர் பலபுகழல்லது பழி யிலர்தாமும், தலையிலங்கவிரொளி நெடுமுடியரக்கன் தடக்கை கள் அடர்த்ததோர் தன்மையையுடையர், மலையிலங்கருவிகள் மணமுழவதிர மழைதவழ்இளமஞ்ஞை மல்கியசாரல், இலைஇல

[5] குருந்து - நாரத்தைமரம். [6] கண்டி - உருத்திராட்சம். [7] பல இலம் - தாருக வனத்து இருடி பத்தினிகளின் வீடுகள்.

வங்கமும் ஏலமுங்கமழும் இடைச்சுரம்மேவிய இவர்வண மென்னே. 9

பெருமைகள்தருக்கியோர் பேதுறுகின்ற பெருங்கடல் வண்ணனும் பிரமனும்ஓரா, அருமையரடிநிழல் பரவிநின்றேத் தும் அன்புடையடியவர்க் கணியருமாவர், கருமைகொள்வடி வொடு சுனைவளர்குவளைக் கயலினம்வயல்இள வாளைகள்இரிய, எருமைகள்படிதர இளஅனம்ஆலும் இடைச்சுரம்மேவிய இவர் வணமென்னே. 10

மடைச்சுரமறிவன வாளையுங்கயலும் மருவியவயல்தனில் வரு புனற்காழிச், சடைச்சுரத்[8] துறைவதோர் பிறையுடையண்ணல் சரிதைகள்பரவிநின் றுருகுசம்பந்தன், புடைச்சுரத்தருவரைப் பூக்கமழ்சாரற் புணர்மடநடையவர் புடையிடையார்ந்த, இடைச் சுரம்ஏத்திய இசையொடுபாடல் இவைசொலவல்லவர் பிணியிலர் தாமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—இடைச்சுரநாதர்; தேவி—இமயமடக்கொடி.

---

## 21. திருக்கழுக்குன்றம்*

**பண் - குறிஞ்சி**** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தோடுடையானொரு காதில்தூய குழைதாழ
ஏடுடையான் தலைகலனாக இரந்துண்ணும்
நாடுடையான் நள்ளிருள்ஏம நடமாடும்
காடுடையான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 1

---

[8] சடைச்சுரம் - சடைக்காடு. * கழுகுகள் பூசிக்கும் மலை என்பது பொருள்; வடநூலார் இத்தலத்தைப் பட்சிதீர்த்தம் என்பர்; வேதங்கள் மலையுருவெடுத்து இறைவனைத் தாங்குவதால் இக் குன்றம் வேதகிரி எனப்படும். இதனால் மலையின் அடிவாரம் வேத புரி என வழங்கப்பெறும். இங்குள்ள சுவாமிக்குப் பக்தவத்சலர் என வும், தேவிக்கு திரிபுரசுந்தரி எனவும் பெயர் வழங்குவர். ** இப் பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்து போயிற்று.

கேணவல்லான் கேழல்வெண்கொம்பு குறளாமை
பூணவல்லான் புரிசடைமேலோர் புனல்கொன்றை
பேணவல்லான் பெண்மகள்தன்னை யொருபாகம்
காணவல்லான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 2

தேனகத்தார் வண்டதுவுண்ட திகழ்கொன்றை
தானகத்தார் தண்மதிசூடித் தலைமேலோர்
வானகத்தார் வையகத்தார்கள் தொழுதேத்தும்
கானகத்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 3

துணையல்செய்தான் தூயவண்டியாழ்செய் சுடர்க்கொன்றை
பிணையல்செய்தான் பெண்ணின்நல்லாளை யொருபாகம்
இணையல்செய்யா இலங்கெயின்மூன்றும் எரியுண்ணக்
கணையல்செய்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 4

பையுடைய பாம்பொடுநீறு பயில்கின்ற
மெய்யுடையான் வெண்பிறைசூடி விரிகொன்றை
மையுடைய மாமிடற்றண்ணல் மறி[1] சேர்ந்த
கையுடையான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 5

வெள்ளமெல்லாம் விரிசடைமேலோர் விரிகொன்றை
கொள்ளவல்லான் குரைகழலேத்துஞ் சிறுத்தொண்டர்[2]
உள்ளமெல்லாம் உள்கிநின்றாங்கே உடன்றும்
கள்ளம்வல்லான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 6 - 7

ஆதல்செய்தான் அரக்கர்தங்கோனை யருவரையின்
நோதல்செய்தான் நொடிவரையின்[3] கண் விரலூன்றிப்
பேர்தல்செய்தான் பெண்மகள்தன்னோ டொருபாகம்
காதல்செய்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 8

இடந்தபெம்மான் ஏனமதாயும் அனமாயும்
தொடர்ந்தபெம்மான் தூமதிசூடி வரையார்தம்
மடந்தைபெம்மான் வார்கழலோச்சிக் காலனைக்
கடந்தபெம்மான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 9

தேய[4] நின்றான் திரிபுரங்கங்கை சடைமேலே
பாயநின்றான் பலர்புகழ்ந்தேத்த வுலகெல்லாம்

---

[1] மறி - கலைமான். [2] சிறுதொண்டர் என்றும் பாடம். [3] நொடி யளவின் என்றும் பாடம். [4] தேய - அழிய.

சாயநின்ருன் வன்சமண்குண்டர் சாக்கியர்
காயநின்ருன் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 10

கண்ணுதலான் காதல்செய்கோயில் கழுக்குன்றை
நண்ணியசீர் ஞானசம்பந்தன் தமிழ்மாலை
பண்ணியல்பாற் பாடியபத்தும் இவைவல்லார்
புண்ணியராய் விண்ணவரோடும் புகுவாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—வேதகிரீசுவரர்; தேவி—பெண்ணினல்லாளம்மை.

---

## 22. திருஅச்சிறுபாக்கம்*

பண் - குறிஞ்சி [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொன்றிரண்டன்ன புரிசடைபுரளப் பொருகடற்பவளமொடழல்நிறம்புரையக், குன்றிரண்டன்ன தோளுடையகலங் குலாயவெண்ணூலொடு கொழும்பொடியணிவர், மின்திரண்டன்ன நுண்ணிடைஅரிவை மெல்லியலாவளையோர் பாகமாப்பேணி, அன்றிரண்டுருவம்[1] ஆயஎம்அடிகள் அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 1

தேனினும்இனியர் பாலனநீற்றர் தீங்கரும்பனையர்தந் திருவடிதொழுவார், ஊன்நயந்துருக உவகைகள்தருவார்[2] உச்சிமேலுறைபவர் ஒன்றலாதூரார், வானகமிறந்து வையகம்வணங்க வயங்கொளநிற்பதோர் வடிவினையுடையார், ஆனையின்உரிவை போர்த்தஎம் அடிகள் அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 2

காரிருளுருவம் மால்வரைபுரையக் களிற்றினதுரிவைகொண்[3]டரிவைமேலோடி, நீருருமகளை நிமிர்சடைத்தாங்கி நீறணிந்தேறு

---

* தேவர்களாகிய திருத்தேரில் இறைவன் திரிபுரத்தை அழிக்கச் சென்றபோது, தேவர்களின் அகந்தையை உணர்ந்து அத்தேரின் அச்சு ஒடியும்படி செய்தமையால் இப்பெயர் பெற்றது.
[1] அன்றிரண்டுருவம் - ஒன்றோடொன்று மாறுபட்ட ஆண் பெண்ணாகிய இரண்டு வடிவம். அன்று - சிருட்டியாரம்பகாலமுமாம்.
[2] இவ்வடிகள் கடவுள் இனியர்; இனிமை தருபவர் என்பதை அறிவிக்கும். [3] துருவுகொண் என்றும் பாடம்.

கந் தேறியநிமலர், பேரருளாளர் பிறவியிற்சேரார் பிணியிலர்கேடிலர் பேய்க்கணஞ்சூழ, ஆரிருண்மாலை யாடும்எம்அடிகள் அச்சிறு பாக்கம தாட்சிகொண்டாரே. 3

மைம்மலர்க்கோதை மார்பினரெனவும் மலைமகளவளொடு மருவினரெனவும், செம்மலர்ப்பிறையுஞ் சிறையணிபுனலுஞ் சென்னிமேலுடையரெஞ் சென்னிமேலுறைவார், தம்மலரடி யொன்றடியவர்பரவத்[4] தமிழ்ச்சொலும்வடசொலுந் தாள்நிழற்சேர, அம்மலர்க்கொன்றை யணிந்தஎம்அடிகள் அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 4

விண்ணுலாமதியஞ் சூடினரெனவும் விரிசடையுள்ளது வெள்ளநீரெனவும், பண்ணுலாம்மறைகள் பாடினரெனவும் பல புகழல்லது பழியிலரெனவும், எண்ணலாகாத இமையவர்நாளும் ஏத்தரவங்களோ டெழில்பெறநின்ற, அண்ணலான்ஊர்தி ஏறும் எம்அடிகள் அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 5

நீடிருஞ்சடைமேல் இளம்பிறைதுளங்க நிழல்திகழ்மழுவொடு நீறுமெய்பூசித், தோடொருகாதினிற் பெய்துவெய்தாய சுடலையி லாடுவர் தோலுடையாகக், காடரங்காகக் கங்குலும்பகலுங் கழு தொடுபாரிடங் கைதொழுதேத்த, ஆடரவாட ஆடும்எம்அடிகள் அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 6

ஏறுமொன்றேறி நீறுமெய்பூசி இளங்கிளை அரிவையொ டொருங்குடனாகிக், கூறுமொன்றருளிக் கொன்றையந்தாருங் குளிரிளமதியமுங் கூவிளமலரும், நாறு[5]மல்லிகையும் எருக்கொடு முருக்கும் மகிழிளவன்னியும் இவைநலம்பகர, ஆறுமோர்சடை மேல் அணிந்தஎம் அடிகள் அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 7

கச்சும்ஒள்வாளுங் கட்டியவுடையர் கதிர்முடிசுடர்விடக் கவ ரியுங்குடையும், பிச்சமும்பிறவும் பெண்அணங்காய பிறைநுத லவர்தமைப் பெரியவர்பேணப், பச்சமும்வலியுங் கருதிய அரக் கன் பருவரையெடுத்ததிண் தோள்களையடர்வித், தச்சமும் அரு ளு[6]ங் கொடுத்தஎம் அடிகள் அச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே. 8

---

[4] ஏடியன்றடியவர் பரவத் என்றும் பாடம். [5] நாறுதல் - மணத் தல். [6] பிச்சம் - பீலிக்குஞ்சம்; அருள் - இங்கு வாழ்நாளும் வாளும் அளித்ததைக் குறிப்பது.

நோற்றலாரேனும் வேட்டலாரேனும் நுகர்புகர்சாந்தமோ டேந்தியமாலைக், கூற்றலாரேனும் இன்னவாறென்றும் எய்தலா காததொ ரியல்பினையுடையார், தோற்றலார்மாலும் நான்முக முடைய தோன்றலும்அடியொடு முடியுறத்தங்கள், ஆற்றலாற் காணு ராயஎம்அடிகள் அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 9

வாதுசெய்சமணுஞ் சாக்கியப்பேய்கள் நல்வினைநீக்கிய வல் வினையாளர், ஓதியுங்கேட்டும் உணர்வினையிலாதார் உள்கலா காததோ ரியல்பினையுடையார், வேதமும்வேத நெறிகளுமாகி விமலவேடத்தொடு கமலமாமதிபோல், ஆதியும்ஈறும் ஆயஎம்அடி கள் அச்சிறுபாக்கம தாட்சிகொண்டாரே. 10

மைச்செறிகுவளை தவளைவாய்நிறைய மதுமலர்ப்பொய்கை யிற் புதுமலர்கிழியப், பச்சிறவெறிவயல் வெறிகமழ்காழிப் பதி யவர் அதிபதி கவுணியர்பெருமான், கைச்சிறுமறியவன் கழலலாற் பேணுக் கருத்துடைஞானசம் பந்தனதமிழ்கொண், டச்சிறுபாக்கத் தடிகளையேத்தும் அன்புடையடியவர் அருவினையிலரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பாக்கபுரேசுவரர் ; தேவி—சுந்தரநாயகி.

---

## 23. திருவக்கரை *

பண் - பஞ்சமம் [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

கறையணி மாமிடற்றான் கரி காடரங் காவுடையான்
பிறையணி கொன்றையினான் ஒரு பாகமும் பெண்ணமர்ந்தான்
மறையவன் தன்றலையிற் பலி கொள்பவன் வக்கரையில்
உறைபவன் எங்கள்பிரான் ஒலி யார்கழல் உள்குதுமே. 1

பாய்ந்தவன் காலனைமுன் பணைத் தோளியொர் பாகமதா
வேய்ந்தவன் எண்ணிறந்த[1] விமை யோர்கள்தொ ழுதிறைஞ்ச
வாய்ந்தவன் முப்புரங்கள் எரி செய்தவன் வக்கரையில்
தேய்ந்திள வெண்பிறைசேர் சடை யானடி செப்புதுமே. 2

* வக்கிராசுரன் பூசித்துப் பேறுபெற்றமையால் இப்பெயர் பெற்றது. [1] எண்ணிறைந்த என்றும் பாடம்.

சந்திர சேகரனே[2] யரு ளாயென்று தண்விசும்பில்
இந்திர னும்[3] முதலா இமை யோர்கள் தொழுதிறைஞ்ச
அந்தர மூவெயிலும் அன லாய்விழ ஓரம்பினால்
மந்தர மேரு[4] வில்லா வளைத் தானிடம் வக்கரையே. 3

நெய்யணி சூலமொடு பிறை வெண்மழு வும்அரவும்
கையணி கொள்கையினன் கனல் மேவிய ஆடலினன்
மெய்யணி வெண்பொடியான் விரி கோவண ஆடையின்மேல்
மையணி மாமிடற்றன் உறை யும்மிடம் வக்கரையே. 4

ஏனவெண் கொம்பினொடும்இள ஆமையும் பூண்டுகந்து
கூனிள வெண்பிறையுங் குளிர் மத்தமுஞ் சூடிநல்ல
மானன மென்விழியா ளொடும் வக்கரை மேவியவன்
தானவர் முப்புரங்கள் எரி செய்த தலைமகனே. 5

கார்மலி கொன்றையொடுங் கதிர் மத்தமும் வாளரவும்
நீர்மலி யுஞ்சடை[5] மேல் நிரம் பாமதி சூடிநல்ல
வார்மலி மென்முலையா ளொடும் வக்கரை மேவியவன்
பார்மலி வெண்டலையிற் பலி கொண்டுழல் பான்மையனே. 6

கானண வும்மறிமான் ஒரு கையதொர் கைமழுவாள்
தேனண வுங்குழலாள் உமை சேர்திரு மேனியினன்
வானண வும்பொழில்சூழ் திரு வக்கரை மேவியவன்
ஊனண வுந்தலையிற் பலி கொண்டுழல் உத்தமனே. 7

இலங்கையர் மன்னனாகி யெழில் பெற்றஇ ராவணனைக்
கலங்கவோர் கால்விரலாற் கதிர் பொன்[6] முடி பத்தலற
நலங்கெழு சிந்தையனாய் அருள் பெற்றலு நன்களித்த
வலங்கெழு மூவிலைவேல் உடை யானிடம் வக்கரையே. 8

காயனை யீடழித்திட் டவன் காதலி சென்றிரப்பச்
சேமமே யுன்றனக்கென் றருள் செய்தவன் தேவர்பிரான்
சாமவெண் டாமரைமேல் அய னுந்தர ணியளந்த
வாமன னும்அறியா வகை யானிடம் வக்கரையே. 9

---

[2] சந்திரசேகரன் - இத்தலத்துச் சுவாமியின் பெயர். [3] இந்திரனும்; உம்: இசைநிறை. [4] மந்தரமேரு-மேருமலை; இங்கு மந்தரமலை முதலியவற்றை மேருவுடன் ஒற்றுமை கருதிக் கூறியதாகும். [5] நீர்மலி புன்சடை என்றும் பாடம். [6] கதிர்போன் என்றும் பாடம்.

மூடிய சீவரத்தர் முதிர் பிண்டிய ரென்றிவர்கள்
தேடிய தேவர்தம்மா லிறைஞ் சப்படுந் தேவர்பிரான்
பாடிய நான்மறையன் பலிக் கென்றுபல் வீதிதோறும்
வாடிய வெண்டலைகொண் டுழல் வானிடம் வக்கரையே. 10

தண்புன லும்அரவுஞ் சடை மேலுடை யான்பிறைதோய்
வண்பொழில் சூழ்ந்தழகார் இறை வன்னுறை வக்கரையைச்
சண்பையர் தந்தலைவன் தமிழ் ஞானசம் பந்தன்சொன்ன
பண்புனை பாடல்வல்லா ரவர் தம்வினை பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—சந்திரசேகரர் ; தேவி—வடிவாம்பிகை.

---

## 24. திருஅரசிலி*

பண் - பியந்தைக்காந்தாரம்** [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பாடல் வண்டறை கொன்றை பால்மதி பாய்புனற் கங்கை
கோடல் கூவிள மாலை மத்தமுஞ் செஞ்சடைக் குலாவி
வாடல் வெண்டலை மாலை மருவிட வல்லியம் தோள்மேல் [1]
ஆடல் மாசுணம் அசைத்த அடிகளுக் கிடம்அர சிலியே. 1

ஏறு பேணிய தேறி யிளமதக் களிற்றினை யெற்றி
வேறு செய்ததன் உரிவை வெண்புலால் [2] கலக்கமெய் போர்த்த
ஊறு தேனவன் உம்பர்க் கோருவன்நல் லொளிகொளொண் சுடராம்
ஆறு சேர்தரு சென்னி யடிகளுக் கிடம்அர சிலியே. 2

கங்கை நீர்சடை மேலே கதம் [3] மிகக் கதிரிள வனமென்
கொங்கை யாளொரு பாகம் மருவிய கொல்லைவெள் ளேற்றன்
சங்கை யாய்த்திரி யாமே தன்னடியார்க் கருள் செய்து
அங்கை யாலன லேந்தும் அடிகளுக் கிடம் அரசிலியே. 3

மிக்க காலனை வீட்டி மெய்கெடக் காமனை விழித்துப்
புக்க வூரிடு பிச்சை யுண்பது பொன்றிகழ் கொன்றை

---

* 'ஒழுந்தியாப்பட்டு' என வழங்கப்பெறும். ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் சிதைந்துபோயிற்று. 1 தோல்மேல் என்றும் பாடம். 2 வெம்புலால் என்றும் பாடம். 3 கதம் - கோபம்.

தக்க நூல்திகழ் மார்பில் தவளவெண் ணீறணிந் தாமை
அக்கின் ஆரமும் பூண்ட அடிகளுக் கிடம்அர சிலியே. 4

மானஞ் சும்மட நோக்கி மலைமகள் பாகமும் மருவித்
தானஞ் சாவரண் மூன்றுந் தழலெழச் சரமது துரந்து
வானஞ் சும்பெரு விடத்தை யுண்டவன் மாமறை யோதி
ஆனஞ் சாடிய சென்னி யடிகளுக் கிடம்அர சிலியே. 5

பரிய மாசுணங் கயிறாப் பருப்பத ம[4] தற்குமத் தாகப்
பெரிய வேலை[5] யைக் கலங்கப் பேணிய வானவர் கடையக்
கரிய நஞ்சது தோன்றக் கலங்கிய அவர்தமைக் கண்டு
அரியு ஆரமு தாக்கும் அடிகளுக் கிடம்அர சிலியே.[6] 6 - 7

வண்ண மால்வரை தன்னை மறித்திட லுற்றவல் அரக்கன்
கண்ணுந் தோளும்நல் வாயும் நெரிதரக் கால்விர லூன்றிப்
பண்ணின் பாடல்கைந் நரம்பாற் பாடிய பாடலைக் கேட்டு
அண்ண லாயருள் செய்த அடிகளுக் கிடம்அர சிலியே. 8

குறிய மாணுரு வாகிக் குவலயம் அளந்தவன் தானும்
வெறிகொள் தாமரை மேலே விரும்பிய மெய்த்தவத் தோனும்
செறிவொ ணாவகை யெங்குந் தேடியுந் திருவடி காண
அறிவொ ணாவுரு வத்தெம் அடிகளுக் கிடம்அர சிலியே. 9

குருளை யெய்திய மடவார் நிற்பவே குஞ்சியைப் பறித்துத்
திரளை கையிலுண் பவருந் தேரருஞ் சொல்லிய தேறேல்
பொருளைப் பொய்யிலி[7] மெய்யெம் நாதனைப்[8] பொன்னடி வணங்கும்
அருளை ஆர்தர நல்கும் அடிகளுக் கிடம்அர சிலியே. 10

அல்லி நீள்வயல் சூழ்ந்த அரசிலி யடிகளைக் காழி
நல்ல ஞானசம் பந்தன் நற்றமிழ் பத்திவை நாளும்
சொல்ல வல்லவர் தம்மைச் சூழ்ந்தம ரர்தொழு தேத்த
வல்ல வானுல கெய்தி வைகலும் மகிழ்ந்திருப் பாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அரசிலிநாதர்; தேவி—பெரியநாயகி.

---

[4] பருப்பதம் - மந்தரமலை. [5] வேலை - கடல். [6] இச்செய்யுள் பாற்கடல் கடைந்த முறையைக் கூறுவது. [7] பொய்யிலி - பூந்தருத்தி இறைவன் பெயர். [8] மேயநாதனைப் என்றும் பாடம்.

## 25. திருஇரும்பைமாகாளம்*

பண் - செவ்வழி [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

மண்டுகங்கை சடையிற் கரந்தும் மதிசூடிமான்
கொண்டகையாற் புரம்மூன் றெரித்த குழகன்னிடம்
எண்டிசையும் புகழ்போய் விளங்கும் இரும்பைதனுள்
வண்டுகீதம் முரல்பொழில் சூலாய்நின்ற[1] மாகாளமே. 1

வேதவித்தாய் வெள்ளைநீறு பூசி வினையாயின
கோதுவித்தாய நீறெழக் கொடிமா மதிலாயின
ஏதவித்தா யினதீர்க் குமிடம் இரும்பைதனுள்
மாதவத்தோர் மறையோர் தொழநின்ற மாகாளமே. 2

வெந்தநீறும் எலும்பும் அணிந்த விடையூர்தியான்
எந்தைபெம்மா னிடம்எழில் கொள்சோலை யிரும்பைதனுள்
கந்தமா[2]ய பலவின் கனிகள் கமழும்பொழில்
மந்தியேறிக் கொணர்ந்துண் டுகள்கின்ற மாகாளமே. 3

நஞ்சுகண்டத் தடக்கி நடுங்கும் மலையான்மகள்
அஞ்சவேழம் உரித்த பெருமான் அமரும் இடம்
எஞ்சலில்லாப் புகழ்போய்[3] விளங்கும் இரும்பைதனுள்
மஞ்சிலோங்கும் பொழில்சூழ்ந் தழகாய மாகாளமே. 4

பூசுமாசில் பொடியான் விடையான் பொருப்பன்மகள்
கூசஆனை யுரித்தபெரு மான்குறை வெண்மதி
ஈசனெங்கள் இறைவன் இடம்போல் இரும்பைதனுள்
மாசிலோர்கண் மலர்[4] கொண் டணிகின்ற மாகாளமே. 5

குறைவதாய குளிர்திங்கள் சூடிக் குனித்தான்வினை
பறைவதாக்கும் பரமன் பகவன் பரந்தசடை
இறைவன்எங்கள் பெருமான் இடம்போல் இரும்பைதனுள்
மறைகள் வல்லார் வணங்கித் தொழுகின்ற மாகாளமே. 6

---

* அரியரபுத்திரரின் சேனைத் தலைவராகிய மாகாளர் பூசித்துப் பேறுபெற்றமையால் இப்பெயர் பெற்றது; இரும்பை - ஊரின் பெயர்; மாகாளம் - ஆலயத்தின் பெயர். [1] சூலா நின்ற என்றும் பாடம். [2] கந்தம் - வாசனை. [3] புகழ்போல் என்றும் பாடம். [4] தண்மலர் என்றும் பாடம்.

பொங்குசெங்கண் அரவும் மதியும் புரிபுன்சடைத்
தங்கவைத்த பெருமானென நின்றவர் தாழ்விடம்
எங்குமிச்சை யமர்ந்தான் இடம்போல் இரும்பைதனுள்
மங்குல்தோயும் பொழில்சூழ்ந் தழகாய மாகாளமே. 7

நட்டத்தோடு நரியாடு கானத்தெரி யாடுவான்
அட்டமூர்த்தி யழல்போ லுருவன்[5] அழகாகவே
இட்டமாக இருக்கும் இடம்போல் இரும்பைதனுள்
வட்டஞ்சூழ்ந்து[6] பணிவார் பிணிதீர்க்கும் மாகாளமே. 8

அட்டகாலன் றனைவவ் வினான்அவ் வரக்கன்முடி
எட்டுமற்றும் இருபத்திரண் டும்[7] இற வூன்றினான்
இட்டமாக விருப்பா னவன்போ லிரும்பைதனுள்
மட்டுவார்ந்த பொழில்சூழ்ந் தெழிலாரு மாகாளமே.[8] 9

அரவமார்த்தன் றனலங்கை யேந்தி யடியும்முடி
பிரமன்மாலும் மறியாமை நின்ற பெரியோனிடம்
குரவமாரும் பொழிற் குயில்கள் சேரும் மிரும்பைதனுள்
மருவிவானோர் மறையோர் தொழுகின்ற மாகாளமே. 10

எந்தைபெம்மா னி[9]டமெழில் கொள்சோலை யிரும்பைதனுள்
மந்தமாய பொழில்சூழ்ந் தழகாரு[10] மாகாளத்தில்
அந்தமில்லா அனலாடு வானையணி ஞானசம்
பந்தன்சொன்ன தமிழ்பாட வல்லார்பழி போகுமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மாகாளேசுவரர் ; தேவி—குயில்மொழியம்மை.

---

[5] அட்டமூர்த்தி-மண், நீர், நெருப்பு, காற்று, வெளி, சூரியன், சந்திரன், உயிர் என்னும் எட்டும் கூடிய மூர்த்தி; அழல்போல் உருவன் - செம்மேனியம்மான். [6] வட்டம் சூழ்ந்து-வலமாக வந்து; வலம் வருதல் போக மோட்சங்களை அளிப்பது; பிணிதீர்க்கும் - பிறவிப் பிணியைப் போக்கும். [7] முடி எட்டு மற்றும் - இது பத்து முடிகளைக் குறிப்பது; இருபத்திரண்டும்-கைகள் இருபதும் கால்கள் இரண்டுமாக இருபத்திரண்டும்; இங்கு உடல்முழுமையும் என்றபடி. [8] சூழ்ந்தழகாரு மாகாளமே என்றும் பாடம். [9] எந்தையெம்மான் என்றும் பாடம். [10] மந்தமாரும் பொழில்சூழ்ந்தழகாய என்றும் பாடம்.

## துளுவநாட்டில் உள்ள தலம்

°°°°°°°○○ ✱ ○○°°°°°°°

# 1. திருக்கோகரணம்*

திருவிராகம். பண் சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

என்றுமரி யானயல வர்க்கியலி சைப்பொருள்க ளாகியெனது ள், நன்றுமொளி யானொளிசி றந்தபொன்மு டிக்கடவுள் நண்ணுமிடமாம், ஒன்றியம னத்தடியர் கூடியிமை யோர்பரவு நீடரவமார், குன்றுகள் நெருங்கிவிரி தண்டலைமி டைந்து[1] வளர் கோகரணமே. 1

பேதைமட மங்கையொரு பங்கிடமி குத்திடப மேறியமரர், வாதை[2] பட வண்கடலெ ழுந்தவிட முண்டசிவன் வாழுமிடமாம், மாதரொடும் ஆடவர்கள் வந்தடியி றைஞ்சிநிறை மாமலர்கள் தூய்க், கோதைவரி வண்டிசைகொள் கீதம்முரல் கின்றவளர் கோகரணமே. 2

முறைத்திறம் உறப்பொருள் தெரிந்துமுனி வர்[3]க்கருளி யாலநிழல்வாய், மறைத்திறம றத்தொகுதி கண்டுசம யங்சவவ குத்தவனிடம், துறைத்துறைமி குத்தருவி தூமலர்சு மந்துவரை யுந்திமதகைக், குறைத்தறையி டக்கரிபு ரிந்திடறு சாரல்மலி கோகரணமே. 3

இலைத்தலைமி குத்தபடை யெண்கரம்வி ளங்கஎரி வீசிமுடிமேல், அலைத்தலைதொ குத்தபுனல் செஞ்சடையில் வைத்தஅழகன்தனிடமாம், மலைத்தலைவ குத்தமுழை தோறும்உழை வாளரிகள் கேழல்களிறு, கொலைத்தலைம டப்பிடிகள் கூடிவிளை யாடிநிகழ் கோகரணமே. 4

தொடைத்தலைம லைத்திதழி துன்னியஎ ருக்கலரி வன்னிமுடியின், சடைத்தலைமி லைச்சியத போதனன் எம்ஆதிபயில் கின்ற

* இராவணன் இத்தலத்துச் சிவலிங்கத்தைப் பேர்த்து எடுக்க முயன்றபோது அச்சிவலிங்கம் வாராது பசுவின் காதுபோற் குழைந்து நீண்டபடியால் இப்பெயர் பெற்றது; கோ - பசு; கர்ணம் - காது. [1] மிடைந்து - நெருங்கி. [2] வாதை - துன்பம். [3] முனிவர் - சனகாதி முனிவர்.

பதியாம், படைத்தலைபி டித்துமற வாளரொடு வேடர்கள் பயின்றுகுழுமிக், குடைத்தலைந் திப்படிய நின்றுபழி தீரநல்கு கோகரணமே. 5

நீறுதிரு மேனிமிசை யாடிநிறை வார்கழல்சி லம்பொலிசெய, ஏறுவிளை யாடவிசை[4] கொண்டிடுப லிக்குவரும் ஈசனிடமாம், ஆறுசம யங்களும்[5]வி ரும்பியடி பேணியரன் ஆகமமிகக், கூறுமனம் வேறிரதி[6] வந்தடியர் கம்பம்வரு கோகரணமே. 6

கல்லவடம் மொந்தைகுழல் தாளமலி கொக்கரைய ரக்கரைமிசை, பல்லபட நாகம்விரி கோவணவர் ஆளுநக ரென்பரயலே, நல்லமட மாதர்அர னைமரும்ந விற்றியதி ருத்தமுழுகக், கொல்லவிட நோ[7]யகல்த ரப்புகல்கொ டுத்தருளு கோகரணமே. 7

வரைத்தலம்நெ ருக்கியமு ருட்டிருள்நி றத்தவன வாய்கள் அலற, விரல்தலையு கிர்ச்சிறிது வைத்தபெரு மான்இனிது மேவுமிடமாம், புரைத்தலைகெ டுத்தமுனி வாணர்பொலி வாகிவினை தீர அதன்மேல், குரைத்தலைக ழற்பணிய ஓமம்வில கும்புகைசெய் கோகரணமே. 8

வில்லிமையி னல்விறல் அரக்கனுயிர் செற்றவனும் வேதமுதலோன், இல்லையுள தென்றிகலி நேடஎரி யாகியுயர் கின்றபரனூர், எல்லையில் வரைத்தகடல் வட்டமும் இறைஞ்சிநிறை வாசமுருவக், கொல்லைபி லிளங்குறவர் தம்மயிர் புலர்த்திவளர் கோகரணமே. 9

நேசமில் மனச்சமணர் தேரர்கள் நிரந்தமொழி பொய்கள் அகல்வித், தாசைகொள் மனத்தையடி யாரவர்த மக்கருளும் அங்கணனிடம், பாசம தறுத்தவனி யிற்பெயர்கள்[8] பத்துடைய மன்னன்அவனைக், கூசவகை கண்டுபின் அவற்கருள்கள் நல்கவல கோகரணமே. 10

கோடலர வீனும்விரி சாரல்முன் நெருங்கிவளர் கோகரணமே, ஈடமி[9]னி தாகவுறை வானடிகள் பேணியணி காழிநக

[4] யாடலிசை என்றும் பாடம். [5] ஆறு சமயங்கள்-பாடாணவாத சைவம் முதலிய அகச்சமயம் ஆறு. [6] கூறும் வனமேறி ரதி என்றும் பாடம். [7] விடர்நோ என்றும பாடம். [8] தவனியற் பெயர்கள் என்றும் பாடம். [9] இடம் என்பது ஈடம் என நீண்டது.

ரான், நாடிய தமிழ்க்கிளவி யின்னிசைசெய் ஞானசம் பந்தன் மொழிகள், பாடவல பத்தரவர் எத்திசையும் ஆள்வர்பர லோக மெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—மகாபலநாதர்; தேவி—கோகரணநாயகி.

---

## வடநாட்டில் உள்ள தலங்கள்

∘∘O ★ O∘∘

### 1. திருப்பருப்பதம்*

**பண் - வியாழக்குறிஞ்சி** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

சுடுமணி யுமிழ்நாகஞ் சூழ்தர அரைக்கசைத்தான்
இடுமணி யெழிலானை யேறலன் எருதேறி
விடமணி மிடறுடையான் மேவிய நெடுங்கோட்டுப்
படுமணி விடுசுடரார் பருப்பதம் பரவுதுமே. 1

நோய்புல்கு தோல்திரைய நரைவரு நுகருடம்பில்
நீபுல்கு தோற்றமெல்லாம் நினையுள்கு மடநெஞ்சே
வாய்புல்கு தோத்திரத்தால் வலஞ்செய்து தலைவணங்கிப்
பாய்புலித் தோலுடையான் பருப்பதம் பரவுதுமே. 2

துனியுறு துயர்தீரத் தோன்றியோர் நல்வினையால்
இனியுறு பயனாதல் இரண்டுற மனம்வையேல்
கனியுறு மரமேறிக் கருமுசுக் கழையுகளும்
பனியுறு கதிர்மதியான் பருப்பதம் பரவுதுமே. 3

கொங்கணி நறுங்கொன்றைத் தொங்கலன் குளிர்சடையான்
எங்கள்நோய் அகலநின்றான் எனஅருள் ஈசனிடம்

---

* சீபர்ப்பதமலை என்றும பாடம்; நந்திதேவர் மலை வடிவாகிச் சிவபெருமானைத் தாங்கிக்கொண்டிருத்தலால் 'இம்மலை பருப்பதம்' எனப் பெயர் பெற்றது. இது வடமொழியில் ஸ்ரீசைலம், ஸ்ரீபர்வதம், மல்லிகார்ச்சுனம் என்று வழங்கப்படும்; (அருச்சுனம்-மருது.) இத்தலம் முதல் மருது; இடை மருது சோழநாட்டிலும், புடைமருது பாண்டிய நாட்டிலும் உள்ளன. சிலாதர் என்ற முனிவர் தவஞ் செய்தமையால் இது சைலம் என வழங்கப்பெறும்.

ஐங்கணை வரிசிலையான் அநங்கனை அழகழித்த
பைங்கண்வெள் ளேறுடையான் பருப்பதம் பரவுதுமே. 4

துறைபல சுனைமூழ்கித் தூமலர் சுமந்தோடி
மறையொலி வாய்மொழியால் வானவர் மகிழ்ந்தேத்தச்
சிறையொலி கிளிபயிலுந் தேன் இனம் ஒலியோவாப்
பறைபடு[1] விளங்கருவிப் பருப்பதம் பரவுதுமே. 5

சீர்கெழு சிறப்போவாச் செய்தவ நெறிவேண்டில்
ஏர்கெழு மடநெஞ்சே யிரண்டுற மனம்வையேல்
கார்கெழு நறுங்கொன்றைக் கடவுள திடம்வகையால்[2]
பார்கெழு புகழோவாப் பருப்பதம் பரவுதுமே. 6

புடைபுல்கு படர்கமலம் புகையொடு விரைகமழத்
தொடைபுல்கு நறுமாலை திருமுடி மிசையேற
விடைபுல்கு கொடியேந்தி வெந்தவெண் ணீறணிவான்
படைபுல்கு மழுவாளன் பருப்பதம் பரவுதுமே. 7

நினைப்பெனும் நெடுங்கிணற்றை நின்றுநின் றயராதே
மனத்தினை வலித்தொழிந்தேன் அவலம்வந் தடையாமைக்[3]
கனைத்தெழு[4] திரள்கங்கை கமழ்சடைக் கரந்தான்றன்
பனைத்திரள் பாயருவிப் பருப்பதம் பரவுதுமே. 8

மருவிய வல்வினைநோய் அவலம்வந் தடையாமல்
திருவுரு அமர்ந்தானுந்[5] திசைமுகம் உடையானும்
இருவரும் அறியாமை யெழுந்த[6] தோர் எரிநடுவே
பருவரை யுறநிமிர்ந்தான் பருப்பதம் பரவுதுமே. 9

சடங்கொண்ட சாத்திரத்தார் சாக்கியர் சமண்குண்டர்
மடங்கொண்ட விரும்பியராய்[7] மயங்கியோர் பேய்த்தேர்ப்பின்
குடங்கொண்டு நீர்க்குச்செல்வார்[8] போதுமின் குஞ்சரத்தின்
படங்கொண்ட போர்வையினான் பருப்பதம் பரவுதுமே. 10

---

[1] பறைபடு - பறைபோல ஒலிக்கின்ற; படுதல் - ஒலித்தல். [2] திடவகையால் என்றும் பாடம். [3] தடையாமற் என்றும் பாடம். [4] கனத்தெழு என்றும் பாடம். [5] திரு உரு அமர்ந்தான் - இலக்குமியை மார்பில் விரும்பிவைத்த திருமால். [6] அறியாமலெழுந்த என்றும் பாடம். [7] விருப்பியராய் என்றும் பாடம். [8] இவ்வடி பயனற்ற செயலைக் குறிக்கும்: பேய்த்தேர் - கானல்.

வெண்செநெல் விளைகழனி விழவொலி கழுமலத்தான்
பண்செலப் பலபாடல் இசைமுரல் பருப்பதத்தை
நன்சொலி னாற்பரவும் ஞானசம் பந்தன்நல்ல[9]
ஒண்சொலின் இவைமாலை யுருவெணத் தவமாமே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி - பருப்பதநாதர் ;
தேவி - பருப்பதநாயகி, பிரமராம்பாள்.

## 2. திருஇந்திரநீலப்பருப்பதம்*

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

குலவு பாரிடம் போற்ற வீற்றிருந்
திலகும் மான்மழு[1] வேந்தும் அங்கையன்
நிலவும் இந்திர நீலப் பர்ப்பதத்
துலவி னான்அடி யுள்க நல்குமே. 1

குறைவி லார்மதி சூடி யாடல்வண்
டறையு மாமலர்க் கொன்றை சென்னிசேர்
இறைவன் இந்திர நீலப் பர்ப்பதத்
துறைவி னான்றனை யோதி யுய்ம்மினே. 2

என்பொன் என்மணி யென்ன ஏத்துவார்
நம்பன் நான்மறை பாடும் நாவினான்
இன்பன் இந்திர நீலப் பர்ப்பதத்
தன்பன் பாதமே யடைந்து[2] வாழ்மினே. 3

நாச மாம்வினை நன்மை தான்வரும்
தேச மார்புக ழாய செம்மையெம்
ஈசன் இந்திர நீலப் பர்ப்பதம்
கூசி வாழ்த்துதுங் குணம தாகவே. 4

மருவு மான்மட மாதொர் பாகமாய்ப்[3]
பரவு வார்வினை தீர்த்த பண்பினன்

---

[9] சொன்ன என்றும் பாடம். * தேவேந்திரனால் பூசிக்கப்பட்டமையால் இப்பெயர் பெற்றது. [1] மாமழு என்றும் பாடம். [2] பாதமடைந்து என்றும் பாடம். [3] மாதொர் பங்கனார் என்றும் பாடம்.

இரவன் இந்திர நீலப் பர்ப்பதத்
தருவி சூடிடும் அடிகள் வண்ணமே. 5

வெண்ணி லாமதி சூடும் வேணியன்
எண்ணி லார்மதி லெய்த வில்லினன்
அண்ணல் இந்திர நீலப் பர்ப்பதத்
துண்ணி லாவுறும் ஒருவன் நல்லனே. 6

கொடிகொள் ஏற்றினர்[5] கூற்று தைத்தவர்
பொடிகொள் மேனியிற் பூண்ட பாம்பினர்
அடிகள் இந்திர நீலப் பர்ப்பதம்
உடைய வாண ருகந்த கொள்கையே. 7

எடுத்த வல்லரக் கன்க ரம்புயம்
அடர்த்த தோர்விர லான வனையாட்
படுத்தன் இந்திர நீலப் பர்ப்பதம்
முடித்த லம்முற முயலும் இன்பமே. 8

பூவி னானொடு மாலும் போற்றுறும்
தேவன் இந்திர நீலப் பர்ப்பதம்
பாவி யாதெழு[6] வாரைத் தம்வினை
கோவி யாவருங்[7] கொல்லுங் கூற்றமே. 9

கட்டர் குண்டமண் தேரர் சீரிலர்
விட்டர் இந்திர நீலப் பர்ப்பதம்
எட்ட னைநினை யாத தென்கொலோ
சிட்ட தாயுறை யாதி சீர்களே. 10

கந்த மார்பொழில் சூழ்ந்த காழியான்
இந்தி ரன்தொழு நீலப் பர்ப்பதத்[8]
தந்த மில்லியை யேத்தும் ஞானசம்
பந்தன் பாடல்கொண் டோதி வாழ்மினே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி—நீலாசலநாதர்; தேவி—நீலாம்பிகை.

---

5 கொடிய வேற்றினர் என்றும் பாடம். 6 பாவியாவெழு என்றும் பாடம். 7 கோவியா தொழுங் என்றும் பாடம். 8 இவ்வடி இந்திரன் பூசித்தமையைக் குறிக்கும்.

# 3. திருஅனேகதங்காவதம் *

பண் - இந்தளம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

நீடல் மேவுகிமிர் புன்சடை மேலோர் நிலாமுளை
சூடல் மேவுமறை யின்முறை யாலோர் சுலாவழல்
ஆடல் மேவுமவர் மேய அனேகதங் காவதம்
பாடல் மேவுமனத் தார்வினை பற்றறுப் பார்களே. 1

சூல முண்டுமழு வுண்டவர் தொல்படை சூழ்கடல்
ஆல முண்டபெரு மான்றன் அனேகதங் காவதம்
நீல முண்டதடங் கண்ணுமை பாகம் நிலாயதோர்
கோல முண்டள வில்லை குலாவிய கொள்கையே. 2

செம்பி னுருமதில் மூன்றெரி யச்சின வாயதோர்
அம்பி னுலெய்தருள் வில்லி யனேகதங் காவதம்
கொம்பின் நேரிடை யாளொடுங் கூடிக்கொல் லேறுடை
நம்பன் நாமநவி லாதன நாவென லாகுமே. 3

தந்தத் திந்தத்தட [1] மென்றரு வித்திரள் பாய்ந்துபோய்ச்
சிந்த வெந்த [2] கதி ரோனொடு மாசறு திங்களார்
அந்த மில்லவள வில்ல அனேகதங் காவதம்
எந்தை வெந்தபொடி நீறணி வார்க்கிட மாவதே. 4

பிறையு மாசில்கதி ரோன்அறி யாமைப் பெயர்ந்துபோய்
உறையுங் கோயில் பசும்பொன் அணியார் அசும்பா [3] ர்புனல்
அறையும் ஓசை பறைபோலும் அனேகதங் காவதம்
இறையெம் மீச னெம்மா னிடமாக வுகந்ததே. 5

தேனை யேறுநறு மாமலர் கொண்டடி சேர்த்துவீர்
ஆனை யேறுமணி சாரல் அனேகதங் காவதம்
வானை யேறுநெறி சென்றுண ருந்தனை வல்லிரேல்
ஆனை யேறுமுடி யானருள் செய்வதும் வானையே. 6

வெருவி வேழம்இரி யக்கதிர் முத்தொடு வெண்பளிங்
குருவி வீழவயி ரங்கொழி யாவகி லுந்திவெள்

---

* அனேக தங்காபதம் என்றும் பாடம்; செய்யுளும் அவ்வாறே. [1] தந்ததிந்ததட என்றும் பாடம். [2] சிந்தைவெந்த என்றும் பாடம். [3] அசும்பு - நீர்ஊற்று; ஒழுக்கு நிலமுமாம்.

அருவி பாயுமணி சாரல் அனேகதங் காவதம்
மருவி வாழும்பெரு மான்கழல் சேர்வது வாய்மையே. 7

ஈர மேதுமில னாகி யெழுந்த இராவணன்
வீர மேதுமில னாக விளைத்த விலங்கலான்
ஆரம் பாம்ப தணிவான்றன் அனேகதங் காவதம்
வாரமா[6] கிநினை வார்வினை யாயின மாயுமே. 8

கண்ணன் வண்ணமல ராநொடுங் கூடியோர்க் கையமாய்
எண்ணும் வண்ணமறி யாமையெ ழுந்ததோ ராரழல்
அண்ணல் நண்ணுமணி சாரல்[7] அனேகதங் காவதம்
நண்ணும் வண்ணமுடை யார்வினை யாயின நாசமே. 9

மாப தம்மறி யாதவர் சாவகர் சாக்கியர்
ஏப தம்பட நின்றிறு மாந்துழல் வார்கள்தாம்
ஆப தம்மறி வீருளி ராகில் அனேகதங்
காப தம்மமர்ந் தான்கழல் சேர்தல் கருமமே. 10

தொல்லை யூழிப்பெயர் தோன்றிய தோணிபு ரத்திறை[8]
நல்ல கேள்வித்தமிழ் ஞானசம் பந்தன்நல் லார்கள்முன்
அல்லல் தீரவுரை செய்த அனேகதங் காவதம்
சொல்ல நல்லஅடை யும்அடை யாசுடு துன்பமே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—அனேகதங்காவதநாதர், அருண்மன்னேசுவரர்;
தேவி—மனோன்மணியம்மை.

---

## 4. திருக்கேதாரம்

பண் - செவ்வழி* [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

தொண்டரஞ்சு களிறு[1] மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டை[2] கட்டி வழிபாடு செய்யு மிடமென்பரால்

---

[5] ஈரம்-அன்பு; கருணை [6] வாரம்-அன்பு. [7] மணிச்சாரல் என்றும் பாடம். [8] புரத்துறை என்றும் பாடம். * இப்பதிகத்தில் ஒவ்வொரு பாட்டின் பின்னிரண்டடிகள் இயற்கை வருணனைகள் ஆகும். [1] அஞ்சுகளிறு - ஐம்புலமாகிய யானை. [2] இண்டை - சிரமாலை.

வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலருங் கேதாரமே. 1

பாதம்விண்ணோர் பலரும் பரவிப் பணிந்தேத்தவே
வேதநான்கும் பதினெட்டொ டாறும்[3] விரித்தார்க்கிடம்
தாதுவிண்ட மதுவுண்டு மிண்டிவரு வண்டினம்[4]
கீதம்பாட மடமந்தி கேட்டுகளுங் கேதாரமே. 2

முந்திவந்து புரோதாய[5] மூழ்கி முனிகள்பலர்
எந்தைபெம்மா னெனநின் றிறைஞ்சும் இடமென்பரால்
மந்திபாயச் சரேலச் சொரிந்தும் முரிந்துக்கபூக்
கெந்தம்நாறக் கிளருஞ் சடையெந்தை கேதாரமே. 3

உள்ளமிக்கார் குதிரைம் முகத்தார்[6] ஒருகாலர்கள்
எள்கவில்லா இமையோர்கள் சேரும் இடமென்பரால்
பிள்ளைதுள்ளிக் கிளைபயில்வ கேட்டுப் பிரியாதுபோய்க்
கிள்ளையேனற் கதிர்கொணர்ந்து வாய்ப்பெய்யுங் கேதாரமே. 4

ஊழியூழி யுணர்வார்கள் வேதத்தினொண் பொருள்களால்
வாழியெந்தை யெனவந்தி றைஞ்சும் இடமென்பரால்
மேழிதாங்கி யுழுவார்கள் போலவ்விரை தேரிய
கேழல்பூழ்தி[7] கிளைக்க மணிசிந்துங் கேதாரமே. 5

நீறுபூசி நிலத்துண்டு நீர்மூழ்கி நீள்வரைதன்மேல்
தேறுசிந்தை யுடையார்கள் சேரும் இடமென்பரால்
ஏறிமாவின் கனியும்பலா வின்இருஞ் சுளைகளும்
கீறிநாளும் முசுக்கிளையொ டுண்டுகளுங் கேதாரமே. 6

மடந்தைபாகத் தடக்கிம் மறையோதி வானோர்தொழத்
தொடர்ந்தநம்மேல் வினைதீர்க்க நின்றார்க் கிடமென்பரால்
உடைந்தகாற்றுக் குயர்வேங்கை பூத்துதிரக்கல் லறைகள்மேல்
கிடந்தவேங்கை சினமாமுகஞ் செய்யுங்[8] கேதாரமே. 7

---

[3] பதினெட்டொடுஆறும் - பதினெண்புராணங்களும் ஆறு சாத்திரங்களும். [4] வரிவண்டினம் என்றும் பாடம். [5] புரோதாயம்- நீராடலின் ஒரு விசேடம்; தீர்த்த விசேடமுமாம். [6] குதிரைம் முகத்தார்-கிம்புருடர். [7] பூழ்தி - புழுதி. [8] கிடந்தவேங்கை, வேங்கை பூத்துதிர்ந்த கல்லரைகள் புலியைஒத்தலின் அவற்றின்மேற் சினங் கொண்டு பார்த்தது என்க; முகஞ்செய்தல் - பார்த்தல்.

அரவமுந்நீர்[9] அணியிலங்கைக் கோனை யரு வரைதனால்
வெருவவூன்றி விரலா லடர்த்தார்க் கிடமென்பரால்
குரவங்கோங்கங் குளிர்பிண்டி ஞாழல்சுர புன்னைமேல்
கிரமமாக வரிவண்டு பண்செய்யுங் கேதாரமே. 8

ஆழ்ந்துகாணா ருயர்ந்தெய்த கில்லா ரலமந்தவர்
தாழ்ந்துதந்தம் முடிசாய நின்றார்க் கிடமென்பரால்
வீழ்ந்துசெற்று நிழற்கிறங்கும் வேழத்தின்வெண் மருப்பினைக்
கீழ்ந்துசிங்கங் குருகுண்ண முத்துதிருங் கேதாரமே. 9

கடுக்கள்தின்று கழிமீன் கவர்வார்கள் மாசுடம்பினர்
இடுக்கணுய்ப்பா ரவரெய்த வொண்ணா இடமென்பரால்
அடுக்கநின்றவ் வறவுரைகள் கேட்டாங் கவர்வினைகளைக்
கெடுக்கின்ற பெருமான் உறைகின்ற கேதாரமே. 10

வாய்ந்தசெந்நெல் விளைகழனி மல்கும்வயற் காழியான்
ஏய்ந்தநீர்க்கோட் டிமையோ ருறைகின்ற கேதாரத்தை
ஆய்ந்துசொன்ன அருந்தமிழ்கள் பத்தும்மிசை வல்லவர்
வேந்தராகி யுலகாண்டு வீடுகதி பெறுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—கேதாரநாதர்; தேவி—கேதாரகௌரியம்மை.

---

## 5. திருக்கயிலாயம் *

பண் - தக்கேசி ** [1-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

பொடிகொளுருவர் புலியினதளர் புரிநூல்திகழ்மார்பில்
கடிகொள்கொன்றை கலந்தநீற்றர் கறைசேர்கண்டத்தர்
இடியகுரலால் இரியும்மடங்கல் தொடங்குமுனைச்சாரல்
கடியவிடைமேற் கொடியொன்றுடையார் கயிலைமலையாரே. 1

---

[9] அரவமுந்நீர் - ஒலியையுடையகடல். * திருநொடித்தான் மலை என்றும் பாடம். இது சங்காரகருத்தாவாகிய உருத்திரர் வீற்றிருக்கும்மலை ஆதலால் நொடித்தான்மலை எனப்பட்டது; நொடிததல் - அழித்தல். இஃது இமயமலைச்சிகரத்தில் உள்ளது.
** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் மறைந்துபோயிற்று.

புரிகொள்சடையார் அடியர்க்கெளியார் கிளிசேர்மொழிமங்கை
தெரியவுருவில் வைத்துகந்த தேவர்பெருமானார்
பரியகளிற்றை யரவுவிழுங்கி மழுங்கஇருள்[1] கூர்ந்த
கரியமிடற்றர் செய்யமேனிக் கயிலைமலையாரே. 2

மாவினுரிவை மங்கைவெருவ மூடிமுடிதன்மேல்
மேவுமதியும் நதியும்வைத்த இறைவர்[2] கழலுன்னும்
தேவர்தேவர் திரிசூலத்தர் திரங்கல்[3] முகவன்சேர்
காவும்பொழிலுங் கடுங்கற்சுனைசூழ் கயிலைமலையாரே. 3

முந்நீர்சூழ்ந்த நஞ்சமுண்ட முதல்வர்மதனன்றன்
தென்னீர்உருவம்[4] அழியத்திருக்கண் சிவந்தநுதலினார்
மன்னீர்மடுவும் படுகல்லறையி னுழுவைசினங்கொண்டு
கன்னீர்வரைமே லிரைமுன்தேடுங் கயிலைமலையாரே. 4

ஒன்றும்பலவு மாயவேடத் தொருவர்கழல் சேர்வார்
நன்றுநினைந்து நாடற்குரியார் கூடித்திரண்டெங்கும்
தென்றியிருளில் திகைத்தகரிதண் சாரல்நெறியோடிக்
கன்றும்பிடியும் அடிவாரஞ்சேர் கயிலைமலையாரே. 5

தாதார்கொன்றை தயங்குமுடியர் முயங்குமடவாளைப்
போதார்பாக மாகவைத்த புனிதர்பனிமல்கும்
மூதாருலகின் முனிவரு[5] டனாய் அறநான்கருள்செய்த
காதார்குழையர் வேதத்திரளர் கயிலைமலையாரே. 6 - 7

தொடுத்தார்புரமூன் றெரியச்சிலைமே லெரி[6] யொண்பகழியார்
எடுத்தான்திரள்தோள் முடிகள்பத்தும் இடியவிரல்வைத்தார்
கொடுத்தார்படைகள் கொண்டாராளாக் குறுகிவருங்கூற்றைக்
கடுத்தாங்கவனைக் கழலாலுதைத்தார் கயிலைமலையாரே. 8

ஊனைப்பலிகொண் டுலகிலேற்றார் இலகுமணிநாகம்
பூணாரமாகப் பூண்டார் புகழுமிருவர்தாம்
பேணவோடி நேட[7] எங்கும் பிறங்குமெரியாகிக்
காணவண்ணம் உயர்ந்தார்போலுங் கயிலைமலையாரே. 9

---

[1] மழுங்கியிருள் என்றும் பாடம். [2] விளைவர் என்றும் பாடம். [3] திரங்கல்-திரைதல். [4] தென்னீருருவம்-சிறந்த நீர்மையையுடைய வடிவம். [5] மடவாளை-உமாதேவியை; முனிவர் - சனகாதிமுனிவர். [6] மேலரி என்றும் பாடம். [7] நேட - தேட.

விருதுபகரும் வெஞ்சொற்சமணர் வஞ்சச்சாக்கியர்
பொருதுபகரும் மொழியைக்கொள்ளார் புகழ்வார்க்கணியராய்
எருதொன்றுகைத்திங் கிடுவார்தம்பால் இரந்துண்டிகழ்வார்கள்
கருதும்வண்ணம் உடையார்போலுங் கயிலைமலையாரே. 10

போரார்கடலிற் புனல்சூழ்காழிப் புகழார்சம்பந்தன்
காரார்மேகங் குடிகொள்சாரற் கயிலைமலையார்மேல்
தேராவுரைத்த செஞ்சொன்மாலை செப்பும்அடியார்மேல்
வாராபிணிகள் [8] வானோருலகில் மருவுமனத்தாரே. 11

திருச்சிற்றம்பலம்

---

திருவிராகம். பண் - சாதாரி [3-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

**வா**ளவரி கோளபுலி கீளதுரி தானின்மிசை நாளும்மகிழ்வர், ஆளுமவர் வேளநகர் போளயில கோளகளி றூளிவரவில், தோளமரர் தாளமதர் கூளியெழ மீளிமிளிர் தூளிவளர்பொன், காளமுகில் மூளுமிருள் கீளவிரி தாளகயி லாயமலையே. 1

புற்றரவு பற்றியகை நெற்றியது மற்றொருகண் ஒற்றைவிடையன், செற்றதெயில் உற்றதுமை யற்றவர்கள் நற்றுணைவன் உற்றநகர்தான், சுற்றுமணி பெற்றதொளி செற்றமொடு குற்றமில தெற்றெனவினைக், [1] கற்றவர்கள் சொற்றொகையின் முற்றுமொளி பெற்றகயி லாயமலையே. 2

சிங்கவரை மங்கையர்கள் தங்களன செங்கைநிறை கொங்குமலர்தூய், எங்கள்வினை சங்கையவை இங்ககல வங்கமொழி யெங்குமுளவாய்த், திங்களிருள் நொங்கவொளி விங்கி [2] மிளிர் [3] தொங்கலொடு தங்கவயலே, கங்கையொடு பொங்குசடை யெங்களிறை தங்குகயி லாயமலையே. 3

முடியசடை பிடியதொரு வடியமழு வுடையர்செடி யுடையதலையில், வெடியவினை கொடியர்கெட விடுசில்பலி கொடியமகிழ் அடிகளிடமாம், கொடியகுர லுடையவிடை கடியதுடி யடியினொடு

---

[8] பிணிகள் - உடற்பிணிகள். [1] தெற்றெனவு - தெளிவு; தெற்றனவினால் என்றும் பாடம். [2] வொளி விங்க என்றும், வொளி விங்க என்றும் பாடம்; வீங்கி என்பது வீங்க எனவும், விங்கி என்பது விங்க எனவும் ஆயின. [3] மிகு என்றும் பாடம்.

மிடியினதிரக், கடியகுரல் நெடியமுகில் மடியவத ரடிகொள்கயி லாயமலையே. 4

குடங்கையி னுடங்கெரி தொடர்ந்தெழ விடங்கிளர் படங் கொளரவம், மடங்கொளி படர்ந்திட நடந்தரு விடங்கன திடந் தண் முகில்போய்த், தடங்கடல் தொடர்ந்துட னுடங்குவ விடங் கொளமி டைந்தகுரலால், கடுங்கலின் முடங்கலை நுடங்கர வொடுங்குகயி லாயமலையே. 5

ஏதமில பூதமொடு கோதைதுணை யாதிமுதல் வேதவிகிர்தன், கீதமொடு நீதிபல வோதிமற வாதுபயில் நாதன்நகர்தான், தாது பொதி போதுவிட வூதுசிறை மீதுதுளி கூதல்நலியக், காதல்மிகு சோதிகிளர் மாதுபயில் கோதுகயி லாயமலையே. 6

சென்றுபல வென்றுலவு புன்றலையர் துன்றலொடும் ஒன்றி யுடனே, நின்றமரர் என்றுமிறை வன்றனடி சென்றுபணி கின்ற நகர்தான், துன்றுமலர் பொன்திகழ்செய் கொன்றைவிரை தென்றலொடு சென்றுகமழக், கன்றுபிடி துன்றுகளிறென்றிவை முன் நின்றகயி லாயமலையே.

மருப்பிடை நெருப்பெழ தருக்கொடு செருச்செய்த பருத்த களிறின், பொருப்பிடை விருப்புற[4] விருக்கையை யொருக்குடன் அரக்கனுணரா, தொருத்தியை வெருக்குற வெருட்டலும் நெருக் கென நிருத்தவிரலால், கருத்தில வொருத்தனை யெருத்திற நெரித்தகயி லாயமலையே. 8

பரியதிரை பெரியபுனல் வரியபுலி[5] யுரியதுடை பரிசையுடை யான், வரியவளை யரியகணி யுருவினொடு புரிவினவர் பிரிவில்நகர் தான், பெரியஎரி யுருவமது தெரியவுரு பரிவுதரும் அருமையத னல், கரியவனும் அரியமறை புரியவனும் மருவுகயி லாய மலையே. 9

அண்டர்தொழு சண்டிபணி கண்டடிமை கொண்டவிறை துண்டமதியோ, டிண்டைபுனை வுண்டசடை முண்டத்ர சண்ட இருள் கண்டரிடமாம், குண்டமண வண்டரவர் மண்டைகையில் உண்டுளறி மிண்டுசமயம், கண்டவர்கள் கொண்டவர்கள் பண்டு மறி யாதகயி லாயமலையே. 10

---

[4] யிருப்புறு என்றும் பாடம். [5] வலியபுலி என்றும் பாடம்.

அந்தண்வரை வந்தபுனல் தந்ததிரை சந்தனமொ டுந்தியகி
லும், கந்தமலர் கொந்தினொடு மந்திபல சிந்துகயி லாயமலைமேல்,
எந்தையடி வந்தணுகு சந்தமொடு செந்தமிழ் இசைந்தபுகலிப்,
பந்தனுரை சிந்தைசெய வந்தவினை நைந்துபர லோகமெளிதே. 11

திருச்சிற்றம்பலம்

---

சுவாமி—பரமசிவன் ; தேவி—பார்வதியம்மை.

---

## பொது

---

### திருநீலகண்டம்*

பண் - வியாழக்குறிஞ்சி** [1 ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்.

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லும் அஃதறிவீர்[1]
உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனமன்றே
கைவினை[2] செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 1

கா[3] வினை யிட்டுங் குளம்பல தொட்டும் கனிமனத்தால்
ஏவினை யால்எயில் மூன்றெரித் தீரென் றிருபொழுதும்
பூவினைக் கொய்து மலரடி போற்றுதும் நாமடியோம்
தீவினை வந்தெமைத் தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 2

முலைத்தடம் மூழ்கிய போகங் களும்மற் றெவையும்எல்லாம்
விலைத்தலை யாவணங் கொண்டெமை யாண்ட விரிசடையீர்[4]
இலைத்தலைச் சூலமுந் தண்டும் மழுவும் இவையுடையீர்
சிலைத்தெ[5]மைத் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 3

விண்ணுல காள்கின்ற விச்சா தரர்களும் வேதியரும்
புண்ணிய ரென்றிரு போதுந் தொழப்படும் புண்ணியரே

---

* இது திருநீலகண்டத்தைச் சுட்டித் திருச்செங்கோட்டில் அடியார்களுக்கு நேர்ந்த நளிர்சுரம் நீங்கப் பாடியருளியதாகும். ** இப்பதிகத்தில் 7-ம் செய்யுள் மறைந்துபோயிற்று. 1 சொல்லுமதுவறிவீர் என்றும் பாடம். 2 கைவினை - கையினால் செய்யும் தொண்டு ; சரியை முதலாயின. 3 கா - சோலை. 4 இவ்வடிகள் ஞானசம்பந்தர் சிற்றின்பத்தை வெறுத்தலைக் கூறும். 5 சிலைத்து - சினந்து.

கண்ணிமை யாதன மூன்றுடை யீருங் கழலடைந்தோம்
திண்ணிய தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 4

மற்றிணை யில்லா மலைதிரண் டன்னதிண் டோளுடையீர்
கிற்றெமை [6] யாட்கொண்டு கேளா தொழிவதுந் தன்மைகொல்லோ
சொற்றுணை வாழ்க்கை துறந்துந் திருவடி [7] யேயடைந்தோம்
செற்றெமைத் தீவினை தீண்டெப்பெ றாதிரு நீலகண்டம். 5

மறக்கும் மனத்தினை மாற்றியெம் ஆவியை வற்புறுத்திப்
பிறப்பில் பெருமான் திருந்தடிக் கீழ்ப்பிழை யாதவண்ணம்
பறித்த மலர்கொடு வந்துமை யேத்தும் பணியடியோம்
சிறப்பிலித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 6 - 7

கரு [8] வைக் கழித்திட்டு வாழ்க்கை கடிந்துங் கழலடிக்கே
உருகி மலர்கொடு வந்துமை யேத்துதும் நாமடியோம்
செருவில் அரக்கனைச் சீரி லடர்த்தருள் செய்தவரே
திருவிலித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 8

நாற்ற மலர்மிசை நான்முகன் நாரணன் வாதுசெய்து
தோற்ற முடைய அடியும் முடியுந் தொடர்வரியீர்
தோற்றினுந் தோற்றுந் தொழுதுவணங்குதும் நாமடியோம்
சீற்றம தாம்வினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 9

சாக்கியப் பட்டுஞ் சமணுரு வாகி யுடையொழிந்தும்
பாக்கிய மின்றி யிருதலைப் போகமும் [9] பற்றும்விட்டார்
பூக்கமழ் கொன்றைப் புரிசடை யீரடி போற்றுகின்றோம்
தீக்குழித் தீவினை தீண்டப்பெ றாதிரு நீலகண்டம். 10

பிறந்த பிறவியிற் பேணியெஞ் செல்வன் கழலடைவான்
இறந்த பிறவி [10] யுண் டாகில் இமையவர் கோன் அடிக்கண்
திறம்பயில் ஞானசம் பந்தன செந்தமிழ் பத்தும்வல்லார்
நிறைந்த வுலகினில் வானவர் கோனொடுங் கூடுவரே. 11

திருச்சிற்றம்பலம்

---

[6] கிற்றெமை - வலிமையால் எம்மை. [7] துறந்தன் திருவடி என்றும் பாடம். [8] கரு - இனிப் பிறவிக்கு வித்தாகும் வினைகள். [9] இருதலைப் போகம் - இம்மை மறுமை இன்பங்கள். [10] இறந்த பிறவி - துறந்தார்; 'செத்தாரைப் போலே திரி'.

## திருக்ஷேத்திரக்கோவை
### பண் - இந்தளம்* [2-ம் திருமுறை]
திருச்சிற்றம்பலம்

**ஆ**ரூர் தில்லையம் பலம்வல் லந்நல்லம் வடகச் சியுமச் சிறு பாக்கம் நல்ல, கூரூர் குடவாயில் குடந்தை வெண்ணி கடல்சூழ் கழிப்பாலை தென்கோடி பீடார், நீரூர் வயல்நின் றியூர் குன்றி யூருங் குருகா வையூர் நாரையூர் நீடுகானப், பேரூர் நன்னீள் வயல் நெய்த் தானமும் பிதற்றாய் பிறை சூடிதன் பேரிடமே. 1

அண்ணாமலை யீங்கோயும் அத்தி முத்தா றகலா முதுகுன் றங்கொடுங் குன்றமுங், கண்ணார் கழுக்குன் றங் கயிலை கோணம்[1] பயில்கற்குடி காளத்தி வாட்போக்கியும், பண்ணார் மொழி மங் கையோர் பங்குடையான் பரங்குன் றம் பருப்பதம் பேணி நின்றே, எண்ணாய் இரவும்பகலும் இடும்பைக் கடல்[2] நீந்தலாங் காரணமே. 2

அட்டா னமென் றோதிய நாலிரண்டும்[3] அழகன் னுறை காவனைத்துந் துறைகள், எட்டாந் திருமூர்த் தியின்கா டொன் பதுங் குளம்மூன்றுங் களமஞ்சும் பாடி நான்கும், மட்டார் குழ லாள் மலைமங்கை பங்கன் மதிக்கும் இடமா கியபாழி மூன்றும்,[4] சிட்டா னவன்பா சூரென்றே விரும்பாய் அரும்பா வங்களா யினதேய்ந் தறவே. 3

---

* இப்பதிகத்தில் 5, 7, 8-ம் செய்யுட்களில் சில அடிகளும் சீர்களும் சிதைந்துபோயின. [1] கோணம்-திருக்கோணமலை. [2] இடும் பைக் கடல் - பிறவிக்கடல். [3] அட்டானம் ... நாலிரண்டும் - அட்ட வீரட்டம். [4] இவ்வடிகளில் துறை-8, காடு—9, குளம்—3, களம்—5, பாடி—4, பாழி—3 ஆகிய இவைகள் கூறப்பட்டுள்ளன ; பாடல் பெற் றுள்ள தலங்களாக இப்போது உள்ளவை. துறை—13 (அன்பிலா லந்துறை, ஆவடுதுறை, கடம்பந்துறை, தென் குரங்காடுதுறை, வடகுரங்காடுதுறை, சோற்றுத்துறை, பராய்த்துறை, பாலைத்துறை, பாற்றுறை, பேணுபெருந்துறை, மயிலாடுதுறை, மாந்துறை, வெண்டுறை) ; காடு — 10 (ஆலங்காடு, கச்சிநெறிக்காரைக்காடு, கொள்ளிக்காடு, சாய்க்காடு, தலைச்சங்காடு, தலையாலங்காடு, பனங் காடு, மறைக்காடு, வெண்காடு, வேற்காடு) ; குளம்—1 (கடிக்குளம்) ; களம்—3 (அஞ்சைக்களம், நெடுங்களம், வேட்களம்) ; பாடி—3 (ஆப் பாடி, எதிர்கொள்பாடி, மழபாடி) ; பாழி—1 (அரதைப்பெரும்பாழி).

அறப்பள்ளி அகத்தியான் பள்ளி வெள்ளைப் பொடிப்பூசி யாறணி வானமர் காட்டுப்பள்ளி, சிறப்பள்ளி சிராப்பள்ளி செம்பொன் பள்ளி திருநனி பள்ளி[5] சீர்மகேந் திரத்துப், பிறப் பில் லவன்பள்ளி வெள்ளச் சடையான் விரும்பும் மிடைப்பள்ளி வண்சக் கரமால், உறைப்பா லடிபோற்றக் கொடுத்த பள்ளி உணராய் மட நெஞ்சமே உன்னிநின்றே. 4

ஆறை வடமா கறல்அம்பர் ஐயாறணியார் பெருவேளூர் விளமர் தெங்கூர் சேறை துலைபுக லூரக லாதிவை காதலித் தானவன் சேர்பதியே * * * 5

மனவஞ்சர் மற்றோட முன்மாத ராரும் மதிகூர் திருக்கூட லில் ஆலவாயும், இனவஞ் சொலிலா இடைமா மருதும் இரும் பைப் பதிமாகாளம் வெற்றியூரும், கனமஞ் சினமால் விடையான் விரும்புங் கருகாவூர் நல்லூர்பெரும் புலியூர், தனமென் சொலிற் றஞ்ச மென்றே நினைமின் தவமாம் மலமா யினதா னறுமே. 6

மாட்டூர் மடப் பாச்சி லாச்சிராமம் முண் டீச் சரம்வாத வூர் வாரணசி,[6] காட்டூர் கடம்பூர் படம்பக்கங் கொட்டுங் கடலொற்றி யூர்மற்றுறையூ ரவையும், கோட்டூர் திருவாமாத் தூர்கோ ழம்ப முங் கொடுங்கோவலூர் திருக்குண வாயில் * * 7

* * குலாவுதிங்கட் சடையான் குளிரும் பரிதிநியமம், போற்றூ ரடியார் வழிபா டொழியாத்தென் புறம்பயம் பூவணம் பூழியூரும், காற்றூர் வரையன் றெடுத்தான் முடிதோள் நெரித்தா னுறை கோயிலென் றென்று நீகருதே. 8

நெற்குன்றம் ஓத்தூர் நிறைநீர் மருகல் நெடுவாயில் குறும் பலா நீடுதிரு, நற்குன்றம் வலம்புரம் நாகேச்சுரம் நளிர்சோலை உஞ்சேனை மாகாளம் வாய்மூர், கற்குன்ற மொன்றேந்தி மழை தடுத்த கடல்வண்ணனும் மாமலரோனுங் காணச், சொற்கென் றுந் தொலைவிலா தானுறையுங் குடமூக் கென்றுசொல்லிக் குலாவுமினே. 9

---

5 நனிப்பள்ளி என்றும் பாடம். 6 மயிண்டீச்சரம் என்றும் பாடம் வாதவூர் - மணிவாசகர் பிறந்த தலம். வாரணசி - காசி; வரணை - அசி என்ற இரு நதிகள் இத்தலத்தைத் தெற்கும் வடக்குமாகச் சூழ்ந்து இருத்தலால் இப்பெயர் பெற்றது.

குத்தங் குடி வேதிகுடி புனல்சூழ் குருந்தங் குடி தேவன்குடி மருவும், அத்தங் குடிதண்டிரு வண்குடியும் அலம்புஞ் சலந்தன் சடைவைத்துகந்த, நித்தன் நிமலன் உமையோ டுங்கூட நெடுங்கா லம் உறைவிடமென்று சொல்லாப், புத்தர் புறங் கூறிய புன்சம ணர் நெடும்பொய்களை விட்டு நினைந் துய்ம்மினே. 10

அம்மானை யருந்தவ மாகிநின்ற அமரர் பெருமான்பதியான வுன்னிக், கொய்ம்மா மலர்ச்சோலை குலாவு கொச்சைக் கிறைவன் சிவஞான சம்பந்தன் சொன்ன, இம்மாலை யீரைந்தும் இரு நிலத் தில் இரவும் பகலும் நினைந்தேத்தி நின்று, விம்மா வெருவா விரும் பும் அடியார் விதியார் பிரியார் சிவன்சே வடிக்கே. 11

திருச்சிற்றம்பலம்

---

## கோளறு திருப்பதிகம் *

### பண் - பியந்தைக்காந்தாரம் [2-ம் திருமுறை]

திருச்சிற்றம்பலம்

வேயுறு[1] தோளிபங்கன் விடமுண்ட கண்டன் மிகநல்ல வீணை தடவி, மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தென் உளமே புகுந்த அதனல், ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனி பாம்பிரண்டு[2] முடனே, ஆசறு நல்லநல்ல அவை நல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே. 1

என்பொடு கொம்பொடாமை யிவைமார் பிலங்க எருதேறி யேழை[3] யுடனே, பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தென் உளமே புகுந்த அதனல், ஒன்பதொ[4] டொன்றொ[5]டேழு[6] பதி னெட்டொ[7]டாறும்[8] உடனாய நாள்க ள[9] வைதாம், அன்பொடு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியா ரவர்க்கு மிகவே.[10] 2

---

* இப்பதிகம் சிவனடியார்களுக்கு நாளும் கோளும் நல்லவை என்று கூறுகிறது. [1] வேய்உறு - மூங்கில் போலும். [2] பாம்பு இரண்டு - இராகு கேது; கோள். [3] ஒன்பது - ஆயிலியம். [4] ஒன்ப தோடு ஒன்று - பத்து - மகம். [5] ஒன்பதோடு ஏழு - பதினாறும் நாள்; விசாகம். [6] பதினெட்டு - கேட்டை. [7] ஆறு-திருவாதிரை. [8] உடனாயநாள் - மற்ற ஏழு நாட்கள்; பரணி, கார்த்திகை, பூரம், சித்திரை, சுவாதி, பூராடம், பூரட்டாதி. [9] இச்செய்யுள் வழி நடைக்கு ஆகா நாட்கள் இவை என்று குறிப்பது.

